ஆ கி :


| | |
|---|---|
| Anav rat v' y P'll ' | San kr't El m nt i th Voc bul r' of th Dr v'di L n u g |
| B ll rd, P. B. | Thou ht nd L ngu |
| B schi, Con t ntiu Jo ph | A Gr mm r of th Com o Di l ct of th Tamil L ngu |
| Bhand rk r, S'r. R. G. | Coll ct d Work |
| Br y, D ny D . S. | Th Br hui Langua |
| Br al M'ch l | S m ntic |
| Brown, C. P. | A Grammar of th T lu u L ngu |
| Caldw ll, Dr. | A Comparativ Gr mmar of th Drᵃvidian L n ua |
| Ch tt rj S. K. | Th Ori in nd D v lopm nt of th B ng li L n u g |
| Grierson | Linguistic Surv y |
| Gu d rt, Dr. | Malayalam Diction ry |
| Hahn, F. | Kurukh Grammar |
| Hav loqu Ab l | Th Sc' nc of L n u |
| J p r n Ott | Growth nd Structur of th En li h L n u |
| | L n u It N tur D v l p m nt nd Ori i |
| , | Ma k' d N t' n and Indiv'du l |
| , | Pro r in L u |
| , | Th Philo ophy of Gramm r |
| „ | Th Sy t m f Gr nmar |
| Jon , D n' l | An Outl' fEn l' h Pho tic |
| K'tt l Dr. F. | A Gramm r of th K n da Lan ua |
| Max Mull r | Th Sci nc f L n u |

# மொழி நூல்

## க. மொழியின் தோற்றம்

ஒருவர் தம் உணர்ச்சியையோ கருத்தையோ மற்றவருக்கு வெளிப்படுத்துதற்குக் கருவியாய் இருப்பது யாதாயினும் அதனை மொழியென்று கூறல் தகும். காட்டு விலங்குகளின் ஒலிகளை இக்காரணம் பற்றியே விலங்குமொழி (*Animal Language*) என்ற பெயரால் மொழி நூலார் குறிப்பர் பறவை ஒலிகளும் அங்ஙனமே பறவை மொழி என்று குறிக்கப்படும். சைகைகள் (*Gestures*) தொன்று தொட்டே மொழியாகக் கருதப்பட்டு வந்திருக்கின்றன முகக்குறிப்பு (*Grimace*) மெய்ந்நிலை (*Po ture*) இசை அல்லது போலி ஒலி (*Imitative utterance*) என்பனவும் மொழியாகக் கருதப்பட்டவையே. சைகையாய் குறிப்பாய் போலியாய் இருந்த நிலை படிப்படியே வளர்ந்து சிறந்து பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகு மக்களிடத்தில் உயர்நிலை அடைந்திருக்கின்றது. வரிவடிவாகவும் ஒலிவடிவாகவும் இன்று நாகரிக மக்களிடையே உள்ள மொழி இந்த வளர்ச்சியாகிய கூர்தல் அறத்தின் (*evolution*) பயனே ஆகும். மொழிப்பிறப்பைப்பற்றி முன்னோர் பல்வேறு கருத்துக்கள் கொண்டிருந்தனர்[1] சைகை முதலான

1. மொழியின் தோற்றத்தைப் பற்றிய ஆராய்ச்சி பல்வேறு காலத்துப் பல்வேறு வகையாக நடைபெற்றது. பயனோ அவ்வப்போது முரண்பட்ட வாதங்களும் குழப்பங்களுமே யாயின.

எளிய நிலையிலே உள்ள மொழிக்கும் பேச்சும் எழுத்தும் ஆகிய உயர்நிலையிலே உள்ளமொழிக்கும் அமைந்துள்ள தொடர்பை அவர்கள் உணரவில்லை. அதனால் உயர்நிலையில் உள்ள பேச்சும் எழுத்தும் ஆகிய மொழி எதிலிருந்து தோன்றி வளர்ந்தது என்பதை அவர்கள் விளக்கவில்லை. இந்த மொழி திடீரென்று ஏற்பட்டு இருக்கலாம் என்று அவர் கருதினர். அது பற்றியே மொழி கடவுளால் படைக்கப்பட்டது என்ற கொள்கை உடையராயினர்.

பகுதிகளையும் முழுச் சொற்களையும் கடவுளே அவருடைய வியத்தகு ஆற்றலால் படைத்து முதலில் தோன்றிய மக்களுக்கு வழங்கினார் என்பது சிலர் கொள்கை. தென்மொழியும் வடமொழியும் சிவபெருமான் தமருக ஒலியிலிருந்து பிறந்தன என்பது புராணக் கூற்று. சிவபெருமான் வடமொழியைப் பாணினிக்கும் தென்மொழியை அகத்தியர்க்கும் வகுத்தருளினார் என்னும் கருத்தும் உள்ளது.[2]

பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களும் பிறவும் அமைந்த மொழியைக் கடவுள் மக்களுக்குக் கற்பித்து மாநிலத்தில் வாழச் செய்தார் என்று எண்ணுதல் பொருந்துமோ? முதற்காலத்து மக்கள் நாம் அணி

---

ஆதலின் பிரெஞ்சு நாட்டுக் கழகம் சென்ற நூற்றாண்டின் இறுதியில் இத்தகைய ஆராய்ச்சிக்கு இடந்தரவும் மறுத்துவிட்டது.

(W. B. Pill bury nd C. L. Meader--The Psychology of Language, p. 112)

2. பாணினியும் அகத்தியரும் முறையே வடமொழிக்கும் தென்மொழிக்கும் சிறந்த இலக்கண நூல்கள் எழுதினமை பற்றி இவ்வாறு போற்றப் பெற்றனர்.

வன போன்ற ஆடை அணிகளும் நாம வாழவன போன்ற வீடுகளும் பெற்றே மாநிலத்தில் பிறந்தார்கள் என்று எண்ணுவது தகுமோ? மொழியின் தோற்றம் பற்றிய இக்கருத்தும் அத்தகையதே யாகும்.

பேச்சுமொழி உலகெங்கும் மக்கள் பலரிடத்திலும் காணப்படுகின்றது. நாகரிகம் அற்றவர்களும் விலங்கோடு ஒபப வாழ்கின்றவர்களும் ஆகிய மக்கள் கூட்டத்தாரும் பேச அறிந்தே இருக்கின்றனர். ஆனால் விலங்குகளுக்குள்ளே எவ்வளவு உயர்நிலை அடைந்தனவும் பேசும் ஆற்றல் அற்றனவாகவே உள்ளன. இதனால் ஓர் உண்மை விளங்குகின்றது. அஃதாவது உண்பதும் உறங்குவதும் உயிர்ப்பதும் உழைப்பதும் மக்களுக்கு எவ்வளவு இயற்கையோ பேசுவதும் அவ்வளவு இயற்கையாக அவர்களுக்குப படைப்பவன் படைத்திருக்கின்றான். ஆனால் அறியத்தக்கது ஒன்று. உயிர்த்தல் முதலியவற்றில் மக்ளின் எண்ணமும் முயற்சியும் குறைவு. அவை தாமே இயற்கையாய் நடைபெறுவன என்று கூறத்தக்கன. மொழி அவ்வாறு தானே அமைந்து நடைபெறும் ஒன்று என்று கூறிவிடல் இயலாது. இயற்கையாய் அமைந்த சில தேவைகளின் பொருட்டு இயற்கையாய் அமைந்த ஆற்றலைக்கொண்டு உடையும் உறைவிடமும் மக்கள் தேடிக்கொள்வதுபோல மொழியும் அவர்களால் கற்றுக் கொள்ளப்பெற்றது.

எனவே மக்களின் இயற்கையாக அமைந்த பலவகை ஆற்றல் போலவே பேசுதலும் இயல்பான ஓர் ஆற்றலே. இந்த ஆற்றல் இயற்கையாதலின் மொழி

கடவுளின் படைப்பு என்பது உண்மையாகின்றது[3]. அந்த இயற்கை ஆற்றலை மக்கள் பயன்படுத்தி வளர்த்த முறைகளை நோக்குங்கால் அது மக்களின் முயற்சியால் அமைந்தது என்பதும் பொருந்துவதே ஆகின்றது.

எங்ஙனமாயினும் நூற்றுக்கணக்கான தலைமுறைகளாகப் பல்லாயிரக் கணக்கான மக்கள் பாடுபட்ட முயற்சியின் பயனாகவே மொழி இன்று உள்ள நிலைமையை அடைந்திருக்கிறது என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

அ ர்கள் மொழியை எவ்வாறு வளர்த்தார்கள்? இயற்கை உணர்ச்சியாக (*in tinctive*) இருந்த மொழி விரும்பிச் செய்வதொன்றாக (*intentional*) மாறியது எங்ஙனம்? தம் கருத்தைப் பிறர்க்கு உணர்த்தவும் பிறர் கருத்தைத் தாம் உணரவும் விழைந்த விழைவே காரணம் என்னலாம்.

விலங்குகள் சிலவற்றினிடையே இவ்வாறு கருத்தை வெளிப்படுத்தும் விழைவு இல்லாமற் போகவில்லை ஆயினும் அவை கருத்தை உணர்த்தும் வாயில்

3. We would a k...whether the hand of the creator ' a ıy th clearly to be een, and need be any the le s d voutly acknowledged, 'n it production, if w regard man h'm elf a having been c eated with the ıecessa y 'mpul e nd the neces ary capacit'e for forming l nguage, d the ı a havi ıg po e ed him elf of it through their natur l and con c'ou work'ng . The power wh'ch or'g'-nates ' not to b eparated from that wh'ch mai ıtains and d v lop ; both re on , one in their e ential ıature, one i ı th 'r general mod of action. (Wl itney, Language and the Study of Langu ge p. 3 9)

மக்கள் பேசும் மொழியிலிருந்து முற்றிலும் வேறுபட்டதேயாகும். விலங்குகளினிடையே காணப்படும் வாயில் இயற்கையாகத் தானாகவே அமைந்த ஒன்று; மக்கள்மொழி விரும்பி வளர்த்து அமைத்துக் கொண்ட ஒன்றாகும். விலங்குமொழி வேறுபாடில்லாமல், பெருகாமல் வளர்ச்சி பெறாமல் தோன்றிய நாள் போலவே இன்றும் இருக்கக் காண்கிறோம். மக்கள் மொழி பலவாறு வேறுபட்டுப் பெருகி வளர்ந்து உயரக் காண்கின்றோம்[4]. இதற்குக் காரணங்கள் மேற்கூறியவையே ஆகும். மக்கள்மொழி ஒருவரிடமிருந்து மற்றவர் கற்று வளர்வது. விலங்குமொழியோ எல்லா விலங்குகளுக்கும் தனித்தனியே இயற்கையாக அமைந்தது.

---

4. ஔவையார் பாடியதாக உள்ள வெண்பா ஒன்று மற்ற உயிர்களுக்கு இயற்கையாக அமைந்துள்ள ஆற்றலை விளக்குகின்றது:

வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்கும் செய்யரிதால் யாம்பெரிதும்
வல்லோமே என்று வலிமைசொல வேண்டாகாண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது.

குருவி குளவி, சிலந்தி தேனீ, சிதல் முதலிய உயிர்களின் ஆற்றல் படைப்புக்காலந் தொடங்கி ஒரே தன்மையாய் மாறுதலின்றி இருத்தல் கருதத்தக்கது. குருவியின் கூடுபோலவும் குளவியின் அரக்குப் போலவும், தேன்கூடு போலவும், சிலந்தியின் கூடுபோலவும், சிதலின் புற்றுப்போலவும் மனிதனால் செய்ய இயலாமற் போயினும், மனிதனின் ஆற்றலில் வளர்ச்சியும் முற்போக்கும் காணப்படுகின்றன. இந்த வேற்றுமை மொழித் துறையிலும் காணப்படுவதாகும்.

Man differs from b ute animal not in degree or in th addition of new powers, but in a totally different direction and development of all power . Man's inferio ity to animals in strength and urene of in tinct i compen ated by his wider pace of attention. (Otto Je per en Language It Natur , Development nd Origin. p. 27)

மொழியின தோற்றம் பற்றிச் சென்ற நூற்றுண்டில் ஆராய்ந்த அறிஞர்கள் சிலர் குழந்தை எவ்வாறு பேசக்கற்கின்றது என்பதையே ஆராய்ச்சிக் கருவியாகக் கொண்டார்கள். அதனுல் அவர்கள் உண்மை கா ண இயலாமற் போயிற்று. ஒரு குழந்தை முன்னமே வளர்ந்து அமைந்த மொழியைக் கற்கின்றது. அது கற்கும் முறையி ் மொழித்தோற்றத்தை ஆராய இடமில்லை. அதன் பச்சிளங்குழந்தைப் பருவத்தில் அது பேசும் முறையை ஆராய்ந்தால் ஒரு சிறிது பயன் உண்டு. அப்பரு ்த்தில் அந்த இளங்குழந்தை பிறர் பேச்சைக் கவனிக்கவும் அதன் பயனை உணரவும் அறியாத நிலையில் இருக்கின்றத. அதன் செங்கீரைப் பருவத்தில் அதன சிறிய செவ்வாயிலிருந்து பிறக்கும் இனிய ஒலிகள் காரணமின்றி எழுபவை. அந்த மழலை ஒலிகள் வேறு; அது சிறிது வளர்ந்து பேசும் மழலை மொழியும் வேறு. மழலை ஒலிகளிலே நாம் இயற்கை ஒலிகளைக் கேட்கிறோம். ஆகையால் அந்த ஒலிகளிலே முதற்காலத்து மக்கள் பேசிய இயற்கை மொழியின் கூறுகள் ஒருவாறு அமைந்திருக்கக் காணலாம்.

மொழியின் தோற்றத்தை அறிவதற்கு மற்றொரு வழி நம் காலந்தொடங்கிப் பின்நோக்கிச் சென்று மொழியின் வளர்ச்சியை ஆராய்ந்து கொண்டு செல்வதாகும். சில நூற்றுண்டுகள்வரை இவ்வாறு பின்நோக்கிச் சென்று ஆராய முடிகின்றது. அதற்கும் முன்னே செல்ல முடியவில்லை. எடுத்துக்காட்டாக சில மொழிகளின் வரலாறு எழுநூறு எண்ணூறு ஆண்டு ளுக்கு முற்பட்டுச் செல்ல இடந்தரவில்லை சில மொழிகளி ் வரலாறு ஈராயிரம் ஆண்டுகள்வரை

ஆராய இடந்தருகின்றது. மிகப்பழைய மொழிகளுள் சிறந்ததொன்றாகிய தமிழ் மொழியும் கி மு 3000 வரைக்குமே செல்ல இடந்தருகின்றது. பண்டைக் காலத்தில் தமிழில் இயற்றப்பெற்ற பாடல்கள் நாகரிக மக்களின் மொழி நிலையினையே தெரிவிக்கின்றன. அக் காலத்திற்குப் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னே வழங்கிய மொழியின் நிலைமையை அவற்றைக் கொண்டு அறிய முடியவில்லை கல்வெட்டுக்கள் செப்பேடுகள் புதைந்த பொருள்கள் என்பவற்றால் மொழித் தோற்றத்தைப் பற்றி அறிவது போதுமான தாகவில்லை.

காட்டுமிராண்டிகள் பல நாடுகளில் பலவகை யான மொழிகளைப பேசுகின்றார்கள் அவற்றை ஆராய்ந்து அறிஞர்கள் குறித்திருக்கின்றார்கள். முதற் காலத்து மக்களுக்கும் இவர்களுக்கும் ஓரளவு வேறு பாடு உண்டு. அது காலப்போக்கால் ஏற்பட்டது. அது போலவே முதற்காலத்து மொழிக்கும் இவர்கள் மொழிக்கும் வேறுபாடு உண்டு. காட்டுமிராண்டி கள் சிலர் பேச்சில் எத்துணையோ வேறு வேறு அமைப்புக்கள் உள்ளன. தவிர நாகரிக மக்கள் மொழி யில் காண்பதைவிடப் பன்மடங்கு மாறுதல் காட்டு மிராண்டிகள் மொழியிலே சில ஆண்டுகளில் நிகழ்கின் றது. நாகரிக மொழிக்கும் அநாகரிக மொழிக்கும் கருத்துக்களின் வேறுபாடே பெரிது மொழிவடிவின் வேறுபாடு பெரிதன்று[5]. ஆதலால் மொழித்தோற்றத்

5. நாகரிகமற்ற மக்களின் மொழியில் பொருள்களுக்குப் பெயர்கள் மலிந்து கிடக்கின்றன; ஆனால் கருத்துக்களுக்குச் சொற் கள் இல்லை· பொதுமையாகவும் நுட்பமாகவும் உணரும் ஆற்றல் அந்த மக்களுக்கு இல்லை· ஆதலால் அவர்கள் மொழியில்

யைப் பற்றிக் காட்டுமிராண்டிகளின் பேச்சுக்களும் அறிவிக்க வல்லன அல்ல

எனவே இவற்றையெல்லாம் விடுத்து, மக்களின் தோற்றத்தையும், சமூக அமைப்பின் தோற்றத்தையும் ஆராய்வதால் மொழியின் தோற்றத்தைப் பற்றிய உண்மை உணரலாம். காரணம் என்னவெனில் மொழி தோன்றி வளர்ந்த வரலாறு மக்களின் மனப பண்பாட்டை யும் சமூக அமைப்பையும் ஒட்டிய

பொதுப் பெயர்களும் வினைகளும் இல்லை. எடுத்துக்காட்டாக, நடு பிராசில் (Central Braz'l) நாட்டுப் பகைரி (Baka'r') மொழியில், ஒவ்வொரு வகைக் கிளிக்கும் ஒவ்வொரு பெயர் உண்டு; ஆனால் கிளி என்ற பொதுப் பெயர் இல்லை. லிதுவேனியர் (Th Lithuan'an ) மொழியில், குதிரையின் வெண்ணிறத்திற்கு ஒரு பெயரும் கால்நடையின் வெண்ணிறத்திற்கு வேறொரு பெயரும், மற்ற விலங்குகளின் வெண்ணிறத்திற்கு மற்றொரு பெயரும் வழங்க பொதுவாக வெண்ணிறத்தை உணர்த்த ஒரு சொல் இல்லை. சில மொழிகளில் கை கழுவலை உணர்த்த ஒரு சொல்லும், தட்டு முதலியன கழுவலை உணர்த்த வேறு சொல்லும் இருக்க கழுவுதல் என்னும் பொது வினைக்கு ஒரு சொல் இல்லை. க்ளாமத் இந்திய மொழியில் ஒவ்வொரு விலங்கின் ஓட்டமும் ஒவ்வொரு சொல்லால் குறிக்கப்படுகின்றது; ஆனால் ஓடுதல் என்ற பொதுவினை இல்லை. (Pill bury and Meade', The P ychology of languag , p. 175). தென் அமெரிக்காவில் சில மொழிகளில் என் தலை, உன் தலை என் கண், உன் கண் முதலியவற்றிற்குச் சொற்கள் உள்ளன; ஆனால் தலை, கண் என்னும் சொற்கள் இல்லை. டாஸ்மானியர் மொழியில் மரவகைக்கெல்லாம் தனித்தனிப் பெயர் இருக்க, மரம் என்னும் பொதுப் பெயர் இல்லை. (Jesperʌen, Progres ir Language, pp, 26, 350) சில மொழிகளில் அண்ணன் தம்பி என்பவரை உணர்த்தச் சொற்கள் உளவாயினும் சகோதரன்' என்ற பொதுச் சொல் இல்லை. தமிழில் 'உடன்பிறந்தார்' என்ற சொல் இருந்தல் நாகரிகச் சான்றேயாகும். சிறப்புப் பெயர்கள் உள்ள இடத்திலெல்லாம் இவ்வாறே பொதுப் பெயரும் தமிழில் காணப்படுகின்றது. களிறு, பிடி என்பன ஆண் பெண் யானைகளை உணர்த்த, யானை என்பது பொதுத்தன்மை உணர்த்தியது காண்க. இத்தகைய அமைப்பு அநாகரிக மக்கள் மொழியில் இல்லாததாகும்.

தாகவே இருக்கின்றது. மனத்தில் தோனறிய கருத்தைச் சமூகத்தில் பிறர்க்கு உணர்த்தி பிறர் கருத்தைத் தானும் உணர்ந்து பேசிய காரணத்தாலன்றோ மொழி வளர்ச்சிபெற்றது? எனவே, உள நூலும் சமூக நூலும் (psychology & ocialogy) மொழி நூலுக்குப் பெருந்துணை செய்வனவாகும்.

சைகைகளிலிருந்தே மொழி தோன்றியதாகச் சிலர் கூறுகின்றனர். சைகைகள் அறிவை அடிப்படையாகக் கொண்டவை. சைகைகள் மக்களிடமே காணப் படுகின்றன சுட்டிக்காட்டுதல் போன்ற எளிய சைகையும் எந்த விலங்கினிடமும் காணமுடியாது. ஆனல் எல்லா இனத்து மக்களும் அந்தச் சைகைகள் செய்ய வல்லவராய் இருக்கின்றனர். ஆகையால் மக்கள் மக்களாய் இருப்பது மொழிக்கு அடிப்படையான சைகைகள் செய்யவல்லவராய் இருத்தல் பற்றியே என்றும் சிலர் கருதுகின்றனர்.

ஆயினும் கருத்தை உணர்த்தச் சைகைகள் மிகச் சிறிதே பயன்படுகின்றன. உள்ளத்தில் உணர்ந்ததை உள்ளவாறு முழுவதுமாகப் பிறர்க்கு உணர்த்தச் சைகைகள் போதா. தவிர சைகைகளால் உணர்த்துவதில் சில இடையூறுகளும் உள்ளன எடுத்துக்காட்டாக, கண் காணுவிடத்திலும் ஒளி இல்லா இராக் காலத்திலும் சைகைகளைப் பிறர் அறியமுடியாது[6].

6. தென் ஆப்பிரிக்காவில் உள்ள புதர்மக்கள் இரவில் பேச விரும்பினால், தீ வளர்ப்பார்களாம். தீயின் ஒளியால் சைகைகள் தெரியாவிட்டால், அவர்களின் பேச்சு விளங்காமற் போகுமாம். ஆதலின் அவர்கள் பேசும் மொழியில் சைகைகளே உயிராய் இருத்தல் அறியலாம். (G. W. Wade Elementary chapters in Comparative Philology, p. 2).

மற்றொன்று, கைகளால் வேலை செய்துகொண்டிருக்கும் ஒருவன் அந்த வேலையை விட்டபிறகே சைகைகளைச் செய்யமுடியும் பேச்சுமொழி வல்ல ஒருவன் பேசிக் கொண்டே தொழில் செய்வதுபோல, தொழிலும் சைகையும் ஒருங்கே செய்வதற்கு அவனால் முடியாது. கைகள் தொழில் செய்யத் தேவையில்லாமல் இருந்திருப்பின் பழங்காலத்து மக்கள் சைகை மொழியோடு நின்றுவிட்டிருப்பார்கள். பேச்சு மொழி தேவையென்பதை உணர்ந்து அதை வளர்த்திருக்க மாட்டார்கள். சைகைகளுக்குப் பயன்பட்ட கைகள் வேறு தொழிலுக்கும் வேண்டியிருந்தன ஆனால் வேறு தொழிலுக்குப் பயன்படாமல் பேச்சுக்கென வே அமைந்திருக்கின்ற ஓர் உறுப்பு உடலில் இருக்கின்றது. அதுதான் குரல்வளை. ஆதலின் கைகள் வேறு வேலைக்குத் தேவையாயிருந்தபோது மக்கள் குரலைப் பயன்படுத்திக் கொண்டனர். குரல்வளையில் அமைந்த தசைநார்கள் மிகமெல்லியவை நுண்ணியவை, பல் வேறு வகையாக அமைந்து தொழிலாற்ற வல்லவை; பெருமுயற்சியும் வேண்டாமல் சிறு காற்றாலேயே அசைந்து தொழில் செய்பவை. இக்காரணங்களால் சைகைக்கு உரிய கைகள் தோற்றன. குரல் மொழிக்கு உரியதாய் வென்றது. மொழி என்றால் பேச்சு மொழியே என்னும் நிலைமையும் வந்தது.

இவ்வாறு வெற்றிபெற்ற குரலை மக்கள் எவ்வாறு பயன்படுத்தினர்? இதுபற்றிய ஆராய்ச்சிகள் பலதிறத்தன. அவற்றுள் குறிக்கத்தக்கன ஐந்து:

பறவை, விலங்கு முதலியவற்றின் ஒலியைக் கேட்டு அவற்றைப்போல் ஒலித்தலால் மொழி பிறந்

தது என்பது ஒரு கொள்கை. அவ்வாறு பிறந்த மொழியே இசைமொழி அல்லது போலிமொழி (*The onomatopoetic theory or the bow wow theory*) என்பது. இப்படிப் பிறந்த ஒலிகளைச் சொற்களாகக் கொண்டு பல பொருள்களுக்கும் செயல்களுக்கும் பெயராகவும் வினையாகவும் இட்டு வழங்கினர் என்றும் அந்தச் சொற்களிலிருந்தே மற்றச் சொற்களும் அமைந்து மொழி வளர்ந்தது என்றும் கூறுவர்[7]. எடுத்துக்காட்டாக, காக்கை குயில் கிலுகிலுபை முதலிய தமிழ்ச் சொற்களைக் குறிப்பிடலாம்[8]. எகிப்து நாட்டு மக்கள் பூனையை மியா என்பார். பாப்டன் மக்கள் (*Papuan* ) கோடரியை டின்டின் (*dindin*) என்பர். உணவை நம்நம் (*num num*) என்பர். நாயை பவ்வவ் என்பர்[9]. இங்ஙனமே பல மொழியிலும் பல சொற்கள் உள்ளன. ஆயினும் ஒரு மொழியில் உள்ள எல்லாச் சொற்களும் இவ்வாறே பிறந்தன என்று கூறுதல் பொருந்தாது. மாக்ஸ்முல்லர் கூறுவது போல இத்தகைய போலி ஒலிகள் ஒரு மொழிக்கு

7. இந்தக் கொள்கையைப் பல சான்றுகள் தந்து நிறுவியவர் ஹெர்டர் என்னும் அறிஞர். பெர்லின் கழகம் (Berlin Ac demy) மொழித் தோற்றத்தைப் பற்றிய சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைக்குப் பரிசு வழங்க முன் வந்தது. அந்தப் பரிசை அறிஞர் ஹெர்டரே பெற்றார். ஆயின், அவருடைய இறுதிக் காலத்தில் அந்தக் கொள்கை மதிப்பிழந்துவிட்டது. பரிசு வழங்கிய கழகமும் அவரைக் கைவிட்டது. (M x ulle·, The Sci nc of Languag . P. 409).

8. வங்காளி மொழியில் இத்தகைய சொற்களை எண்ணிநூற்றைம்பது உள்ளன என்பர். (The Origin and D velopm ıt of the Bengali La uage p. 890).

9. Sayc , Introduction to the Scinc of Languag . Ch. II.

இன்றியமையாத கருவிகளல்ல. விளையாட்டுப் பொருள்கள் என்னலாம்.

வெறுப்பு வெகுளி, மகிழ்ச்சி அழுகை முதலிய உணர்ச்சி வயமாக இருக்கும்போது பிறக்கும் ஒலிகள் மொழிக்குக் காரணம் என்பர் ஒருசாரர். இதனை உணர்ச்சி மொழி அல்லது குறிப்பு மொழி பற்றிய கொள்கை (*the interjectional theory or the pooh pooh theory*) என்பர் ஆ ஓ, அன்னே அந்தோ சீ முதலிய சொற்கள் அவ்வாறு பிறந்தன என்னலாம். இந்தக் கொள்கையும் குறையுடையதே. உணர்ச்சி பற்றிப் பிறக்கும் ஒலிகள் மிகச் சில சொற்களுக்கே காரணமாக இருக்கின்றன. தவிர அச்சொற்கள் உணர்ச்சியை அறிவிக்குமே ஒழியக் கருத்தை அறிவிப்பதில்லை சொற்கள் உணர்ச்சிக்குக் கருவியாய் இருக்கும் நிலை குன்றி அறிவுக்குப பயன்படும் நிலை வந்தால்தான் மொழி வளர்கின்றது. சுருங்கக் கூறினுல் உண்மையான பேச்சு மொழி உணர்ச்சியால் பிறக்கும் ஒலிகளைக் கடந்ததாகவே உள்ளது[10].

மணியின்கண் ஒலி அமைந்திருத்தல் போல ஒவ்வொரு பொருளுக்கும் இயல்பாகவே ஒவ்வொரு வகையாக ஒலிக்குந்தன்மை உள்ளது. மக்களுக்கும் அத்தன்மை உண்டு. அறிவால் உணரும் பொருள்களைக் குறிக்கச் சொற்களை ஆக்கி அமைத்துக்கொள்ளும் ஆற்றலும் மக்களுக்கு இயல்பாக அமைந்ததொன்று. இவ்வாறு கூறுவர் மாக்ஸ்முல்லர் என்னும் அறிஞர்.

---

10. These interjection are only the outskirts of real language. Language begins where interjections end. (Max Muller The Science of language p. 420).

இக்கொள்கையைப் ரண்பு ெ ழி ெ ரள் (the ding dong theory) என்பர். மக்களுக்கு முதலில் இயல்பாக அமைந்த ஆற்றல் பிற்காலத்தே எவ்வாறு மறைந்து விட்டதோ தெரியவில்லை அன்றியும் இந்தக் கொள்கை எல்லாவற்றையும் பற்றித் தெளிவற்றுக் கிடப்பதால் ஒன்றையும் விளக்காது பயனற்றுப் போகின்றது.

நான்காவது கொள்கை ஏலேலோ மொழி பற்றியது (yo-he ho theory). முயன்று உடல் வருந்தித் தொழில் செய்யும் தொழிலாளர் மூச்சுவிட்டு வாங்கும் துன்பம் குறைதற் பொருட்டுக் குரல்வளையைப் பலவாறு இயக்கப் பிறக்கும் ஒலிகளே இத்தகையன. தொழிலாளர் பாட்டுக்களில் இத்தகைய சொற்கள் பல உள்ளன. ஆனால் ஒரு மொழியில் உள்ள எல்லாச் சொற்களையும் நோக்குங்கால் இக்காரணம் பற்றிப் பிறப்பன மிகமிகச் சிலவேயாகும்.

இக்கொள்கைகள் அனைத்தும் மொழியின் சிற்சில பகுதிகளை விளக்குகின்றனவே யன்றி முழுமையும் விளக்கவில்லை. முக்கியமான பகுதிகளையும் விளக்கவில்லை. ஆதலின் இவை மொழியின் தோற்றத்தை விளக்குவன அல்ல என்பர் அறிஞர் ஆட்டோ ஜெஸ்பெர்ஸன். அவர் கூறும் காரணம் பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. உடலில் எந்த உறுப்பும் பயன்படாமல் இருந்து திடீரென முழுவளர்ச்சி பெறுவதில்லை; படிப்படியாகவே வளர்ந்து பயன்படுகின்றது. அவ்வாறே மக்களின் குரலும் வாளா இருந்து திடீரென்று சொற்களை ஒலிக்கப் பயன்பட்டதாகக்

கொள்ளுதல் பொருந்தாது. மேற்குறித்த நான்கு கொள்கைகளும் ஒலிகள் பிறக்கும் வரைக்கும் மக்கள் ஊமையராக இருந்தார்கள் என்று கொள்ளுவதால் பொருந்தாமல் போகின்றன

ஜெஸ்பெர்ஸன் கொள்கைப்படி முதற்காலத்து மக்கள் ஒரு காரணமும் இல்லாமல் மழலை ஒலிகளை ஒலிக்கும் இளங்குழந்தைபோல் பேசிவந்தார்கள். அவர்களின் பேச்சு ஒலிகள் அப்போது கருத்தை உணர்த்துவதற்காகப் பயன்படவில்லை. வெறும் பொழுது போக்கான இன்ப விளையாட்டாக இருந்தன. ஒரு தாய் தன் இளங்குழந்தையுடன் பொருளற்ற ஒலிகளைப் பேசி மகிழ்வித்துத் தானும் மகிழ்வது போல இருந்தது அந்த நிலைமை. குழந்தையின் செங்கீரைப் பருவத்தில் அதன் நாக்கு அதற்குச் சிறந்த விளையாட்டுக் கருவியாக இருப்பதுபோல் முதற்காலத்து மக்களுக்குப் பேச்சுமொழி பொழுதுபோக்கான இன்பப் பாட்டாக இருந்தது[11]

11. இக்காலத்திலும், நாகரிகம் மிக்க மக்களின் பேச்சுக்கும் நாகரிகம் குறைந்த மக்களின் பேச்சுக்கும் இடையே ஒலி வகையில் வேறுபாடு உள்ளது. நாகரிகம் மிக்க மக்களின் பேச்சில் அறிவு மேம்பட்டுள்ளது; மற்றவர்கள் பேச்சில் உணர்வே தலைகாட்டுகின்றது. அதனால் முன்னவர் பேச்சில் ஆற்றொழுக்குப் போன்ற ஒலியமைப்பு உள்ளது; பின்னவர் பேச்சு எடுத்தலும் படுத்தலும் விரவி, ஒருவகை இசையாய்க் கேட்கின்றது. நகர மக்கள் சொற்களை ஒலியளவு கடவாமல் பேச, நாட்டுப்புற மக்கள் சொற்களை நீட்டி நீட்டிப் பேசி இசையோடு முடித்தல் இன்றும் உள்ளதே ஆகும்.

Men sang out of their feelings long before they were able to speak their thoughts. But of course we must not

அவர்கள் பேச்சைப் பாட்டு என்று குறிப்பிடுதல் முற்றிலும்பொருந்தும். ஏனெனின் மொழியி 'ர தோற்றம் இன்பமான விளையாட்டுப் பகுதியில் காணத்தக்கதே யன்றிக் கவலையான வாழ்வுப் பகுதியில் காணத் தக்கதன்று. அறிவு கொண்டு அறிந்து ஆழ்ந்திருந்த நிலையில் மொழி பிறக்கவில்லை. ஆனல் உணர்வு கொண்டு உணர்ந்து இன்பமாய் விளையாடிய நிலையி லேயே மொழி பிறந்தது இன்ப ஆட ல்களில் சிறந்தது காதல் விளையாா' டு. ஆற்றல் மிக்க இளமை பாட் டாகப் பொங்கி வழிதல் இயற்கை. கவலையற்ற உள் ளத்தில் பாட்டுப் பிறத்தல் இயற்கை நாகரிக மற்ற காட்டு மிராண்டிகளிடம் இந்த உண்மையை இன் றும் அறியலாம். அவர்கள் ஆடும்போதெல்லாம் பாடு கிறார்கள். அவ்வப்போது புதியனவாகப் புனைந்த பாட்டுக்களே பாடுகிறார்கள். முதற்காலத்து மக்கள் இவ்வாறு ஆடுகின்ற நிலையிலே மொழியைத் தோற்று வித்தார்கள். அவர்கள் பாட்டெல்லாம் பொருளற்ற வெற்றொலிகளாக இருந்தன. படிப்படியே அவை பொருளுணர்த்தத் தொடங்கின. பிறந்த காலமும் இட மும் காரணமும் பற்றி ஒவ்வோரொலியும் ஒவ் வொரு பொருளேயோ தொழிலேயோ சுட்டத் தொடங் கின. இவ்வாறுதான் பொருளற்ற வெற்றுரைகள்

---

imagine that " inging" means exactly the ame thing her a i1a modern concert hall. When we ay th t peech originated in song, what we mean i merely that our comparatively monotonou poken language and our h'ghly developed vocal mu ic are d'ffer ntiat'on of pr'mit'v utterance which had more 'n them of th latter th n of the former. (Jespersen, Language, It N tur tc. p. 436).

கருத்துணர்த்தும் சொற்களாயின[12]. எனவே எல்லா நாடுகளிலும் பாட்டு உரைநடையை விடப் பழமையாய் இருப்பது போலவே, பாட்டு மொழி, பேச்சு மொழியினும் முற்பட்டதாகும். ஒலியம் முந்தியது அதிலிருந்து தோன்றிய எழுத்துப் பிந்தியது. அது போலவே முதற்காலத்து மக்கள் பாடிய பாட்டுக்களே பிற்பட்ட பேச்சுமொழியின் தோற்றத்திற்குக் காரணமானவை. இந்தக்கொள்கையே தானனன கொள்கை அல்லது பாட்டு மொழிக் கொள்கை (*the lyric theory or the beynonino theory*) என்பது.

12. பெட்டைக் கோழி கிக் கிக் என்று ஒலித்துக்கொண்டிருக்கின்றது. வானத்தில் பருந்து பறந்து வருவதைக் கண்ட போது தன் குஞ்சுகளுக்கு எச்சரிக்கை செய்யத் தொடங்கி கிக் கிக் என்னும் ஒலியையே ஒருவகை மாறுதலுடன் ஒலிக்கின்றது. அந்த ஒலிவேறுபாட்டைக் குஞ்சுகள் தெரிந்துகொண்டு தாயின் சிறகை அரணாக அடைகின்றன. பொருளற்ற கிக் கிக்' என்னும் ஒலி இவ்வாறு எச்சரிக்கைப் பொருள் பெற்றது போலவே, பண்டைக் காலத்தில் ஒவ்வொருவகை ஒலியும் சொல்லாய்ப் பொருள் பெற்றது என்பது ஜெஸ்பெர்சன் கொள்கை. (Jesper-n Language. It N ture, etc. p. 437).

# உ. குழந்தை மொழி.

மொழியின் தோற்றத்தை அறிவதற்குக் குழந்தை மொழி பற்றிய ஆராய்ச்சி பெரிதும் பயன்படாமை மேலே கண்டோம். மொழி முதலில் தோன்றி வளர்ந்த நிலை வேறு; ஒரு குழந்தை மொழியைக் கற்று வளரும் நிலை வேறு. பல்வகை அமைப்பும் நிறைந்து பண்பட்ட மொழியையே குழந்தை கற்கத் தொடங்குகின்றது. ஆதலின் குழந்தை மொழியை ஆராய்வது மொழி கற்கப்படும் முறையை உணர்வதற்கே பெரிதும் பயன்படும்.

மனிதன் தன் வாழ்நாளில் பெறுதற்கு அரிதாய்ப் பெற்ற பெருஞ்சிறப்பு மொழி பேசக் கற்ற நிலையே. குழந்தைப் பருவத்தில் முதல் மூன்று ஆண்டுகளில் கற்கும் அவ்வளவு கல்வியை வேறு எந்த மூன்று ஆண்டுகளிலும் மனிதன் கற்பதில்லை. இத்துணை முயற்சியும் முயற்சிக்கு ஏற்ற பயனும் உள்ள வாழ்வின் பகுதி ஆராய்ச்சிக்கு உரிய பகுதியாகும்

குழந்தைப் பருவத்தில் மொழியைக் கற்கும் போது செய்யப்படும் முயற்சியோ மிகப் பெரிது. ஆனால் அது துன்பமாகவே உணரப்படுவதில்லை. எல்லாம் இயல்பாக நடைபெறுவதால் எள்ளளவும் துன்பமில்லை. அதற்குமாறாக நாள்தோறும் புதுமையே காணப்படுவதால் அக் கல்வி இன்பம் நிறைந்ததாக உள்ளது. கற்கும் குழந்தையும் இன்புறுகின்றது. ற்றலைக் காணும் பெற்றோரும் இன்புறுகின்றனர்

குழந்தை கற்கும்போது நேரும் வழுக்களுக்குக் கணக்கில்லை. ஆனால், அவ்வாறு வழு நிறைந்த மழலையே இன்பத்திற்குக் காரணமாக விளங்குகின்றது. வழுக் குறையக் குறைய பிழையின்றிப் பேசுதல் பெருகப் பெருக, குழந்தையின் பேச்சில் இன்பம் குறைகின்றதுபோலும்! இரண்டாம் ஆண்டில் குழந்தை பேசும் பேச்சில் பிறக்கும் அவ்வளவு இன்பம் ஐந்தாம் ஆண்டில் பேசும் பேச்சில் இல்லையன்றோ?

சிறந்த இனிமை பயப்பனவாகத் தமிழர் கருதியவை யாழும் குழலும். திருவள்ளுவர் அவற்றின் இனிமையைக் குறை கூறவில்லை. ஆயினும் குழந்தையின் மழலைச் சொல் பயக்கும் இனிமையோடு ஒப்பிடும்போது

குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்[1].

என்று போற்றுவாராயினர்.

மொழிக்கு இனிமை நிரம்புதல் இருவகையாலாகும். ஒன்று சொல்லும் சொற்களாலேயே அமையும் ஒலியின்பம்; மற்றொன்று சொல்லும் பொருளால் அமையும் கருத்தின்பம். குழந்தையின் மழலையில் யாழிசைபோன்ற ஒலியின்பமும் காணும்; அதற்குக் குழந்தையின் கருத்தைப் புலப்படுத்தும் ஆற்றலும் இல்லை; பெற்றோரும் அதன் பொருளை அறிய முடியாமலிருந்தும் இன்புறுகின்றனர் இதனை உணர்ந்து வியந்தார் ஔவையார் என்னும் புலவரும்[2]

1 திருக்குறள் 66.

2. புறநானூறு 92. ஔவையார் இங்கு மழலை மொழியைப் பொருளற்ற சொற்கள் என்று சொல்லத் துணியாமையும் அவை

குழந்தை மொழி கற்கும் நிலை மூவகைப்படும். அவை அழு நிலை செங்கீரை நிலை பேச்சு நிலை எனப் படும். அழத் தெரியாத குழந்தையைப் பற்றிப் பெற்றோர் ஐயமும் கவலையும் கொள்வர். அந்தக் குழந்தை ஊமையாகுமோ பிழைத்து வாழுமோ என்று ஐயுறுவர்; கவல்வர். குழந்தை பிறந்ததும் அழுகின்றதா என்று கேட்பதும் அழுகுரல் கேட்டு அகமகிழ்வதும் வழக்கம். அழு நிலையில், ஒரு கருத்தை உணர்த்தும் நோக்கம் குழந்தைக்கு முதலில் எழுவதில்லை. இயல்பாகப் பெற்ற அந்த ஆற்றலை நாளடைவில் ஒரு நோக்கத்திற்குப் பயன்படுத்திக் கொள்கின்றது பசித்துன்பத்தையோ வேறொன்றையோ அழுகுரலால் அறிவிக்கும் நிலைக்கு வருகின்றது. அன்றியும் இவ்வாறு அழுதலால் குரலுக்கும் அதனை அடுத்துள்ள உறுப்புக்களுக்கும் தன்னை அறியாமல் பயிற்சி கொடுத்துக் காத்துக் கொள்கின்றது· எதிர்காலத்தில் இசைக் கலைஞனாகவோ சொற்பொழிவாளனாகவோ விளங்கத் தக்கவாறு குழந்தை பெறும் முதல் பயிற்சி இதுவே யாகும்

இந் நிலை கடந்து செங்கீரைப் பருவம் அடைந்ததும் குழந்தையின் வாயில் பிறக்கும் ஒலிகள் செவிக்கு இன்பம் பயக்கும் ஒலிகளாகும் இந்த ஒலிகளே அடுத்த நிலையில் சொல்வடிவு பெறுவன. சொல் வடிவு பெறாத இவ்வொலிகளைச் செங்கீரைப் பருவத்

குழந்தையின் கருத்திற்கு வடிவந் தந்து வெளிவருவனவே என உணர்ந்தமையும், குழந்தை கருதிய பொருளைப் பெற்றோர் அறிய முடியவில்லை எனக்கூற முன் வந்தமையும் காண்க. பொருளில்லாதன' என்னமல் 'பொருளறி வாரா' என்ற கருத்து உள நூலாராய்ச்சியாளருக்கு உவகை யூட்டுவதாகும்.

தில் குழந்தை ஒலிக்கக் காரணம் என்ன? குழந்தை விளையாட விரும்பும் விருப்பமே காரணமாகும். இந்த முதல் விளையாட்டில் குழந்தைக்கு விளையாட்டுக் கருவியாய்க் கிடைப்பது அதன் நாக்கே. நாக்கு முதலில் அசைந்த அசைவுகள் தன்னையறியாமல் நடைபெற்றன. குழந்தை அந்த நாக்கை இப்போது கருவியாய்ப் பெற்று அதனைக் கொண்டு விளையாடத் தொடங்குகின்றது.

இப்போது நாக்கின் அசைவால் பிறக்கும் ஒலிகள் ஆ ஊ, லா ரா மா பா போன்றவை; (தனியுயிர், அல்லது ஒரு மெய்யோடு கூடிய உயிர்) இவற்றை எந்த மொழியின் எழுத்து வடிவாலும் எழுதிக் காட்ட இயலாது. குழந்தையின் இரண்டாந் திங்களிலேயே இவ்வொலிகள் தோன்றலாம்; மூன்றாந் திங்களில் இவை வளரத் தொடங்கும்.

தன் ஒலிகளைத் தானே கேட்டு அறியும் நிலை அடுத்து வரும் அப்போது அது ஒரு தூண்டுகோலாக அமைந்து, குழந்தை தன் ஒலிகளைப் பலவடிவாய்ப் பயிலச் செய்யும். பெற்ற தாயோ மற்றவரோ குழந்தை முன் இருந்து அத்தகைய ஒலிகளை ஒலித்து மகிழ்ந்து கொண்டிருந்தால் அது மற்றொரு தூண்டுகோலாகும். தமிழ் நாட்டார் குழந்தையைத் தொட்டிலில் இட்டு ஆராரோ ஆரிரிரோ ஆரிவரோ' என்று பாடுவது விழுமிய தொண்டாகும். தாலப் பருவம் என்பது நாக்கின் பயிற்சியைக் குறித்தலும் தாலேலோ என்று முடியும் பாடல்கள் அதனைப் போற்றலும் அறிந்து மகிழ்தற்கு உரியன. பெற்றோர்கள் இப்பருவத்தில் குழந்தைக்குச் செய்யும் பேருதவி

குழந்தையோடு ஒலித்து மகிழ்வதே ஆகும். அதன் பயன் அப்போது காணப்படாவிடினும் குழந்தையின் பிற்கால மொழிப் பயிற்சிக்குச் சிறந்த அடிப்படையாக அமையும்.

படிப்படியே குழந்தை பெற்றோர் போல் ஒலிக்க முயலும். அப்போது புதிய பல ஒலிகளும் அதன் வாய் மலரில் மணக்கும். பால் குடிப்பதோடு வேறு தின்பண்டங்களும் பழங்களும் உண்ணத் தொடங்கி நாக்கும் வாயும் இதழும் பயிற்சி பெறப் பெற இம் முயற்சியில் வெற்றி பெற்றுக் கொண்டே வளரும். பெற்றோர் பேச்சில் கேட்ட பல ஒலிகளைத் தானும் ஒலிக்க முயலும்[3]. இதுவே அடுத்த நிலையாகும்.

முதலில் ஓரசையாகவே சொற்கள் ஒலிக்கப்படும் அவ்வாறு ஒலிக்கும் ஒலிகளும் பல திரிபுகளுக்கு உட்படும். நெய் ந ஆகும்· காய் சா ஆகும்; மேலே மே ஆகும்.

ஈரசைச் சொற்களானால் முதலில் உள்ள மெய்யையாவது ஈற்றொலியையாவது விட்டு ஒலிக்கும். மூவசை நாலசைச் சொற்களை எவ்வாறேனும் ஈரசையாக்கிவிடும். ஆனால் அந்தக் குழந்தையிடம் அறியாமை இல்லை. எது திருத்தமான ஒலி என்பது

---

3. குழந்தை முதல் முதலில் வரையும் ஓவியங்களை இங்கே கருதவேண்டும். வெள்ளைத் தாளில் கருங்கோடு கிழித்து 'இது மாடு' என்னும். மற்றொரு கோணல் எழுதி 'இது குருவி' என்னும். அந்தக் குழந்தை கருதிய உருவங்களுக்கும் வரைந்த கீற்றுக்கும் எவ்வளவு பொருத்தம் உண்டோ அவ்வளவு பொருத்தமே பெற்றோரின் பேச்சில் கேட்ட ஒலிக்கும் அதுபோல் தான் ஒலித்த ஒலிக்கும் உண்டு.

அதற்குத் தெரியும். ஒலிக்க முடியாத குறையால் அவ்வாறு திரிபு நேர்கின்றது மற்றவர்கள் திரித்து ஒலித்தால் குழந்தை கேட்டுக்கொண்டு தலையசைப பதில்லை. தோசை என்று நன்றாகச் சொல்லமுடியா மல் ஒசை என்னும் குழந்தையே, அதன் தாய் ஓசை என்று ஒலித்தால், ஒத்துக்கொள்ளாமல் மறுக்கின்றது. யாரா து வேண்டுமென்றே அவ் வாறு அதன் எதிரே பலமுறை தவருக ஒலித்தால் வருந்துகின்றது ; அழவும் அழுகின்றது. ஆதலால் குழந்தைக்கு அந்தச் சொல்லின் முழு வடிவம் தெரி யும். ஆயினும் அதனுல் அவ்வாறு ஒலிக்க முடிய வில்லை. இந்தக் குறையைப் பெற்றோர் உணர்ந்து நடக்கவே ண்டும். குழந்தையின் பிழையை எடுத்துக் காட்டலாகாது. அவர்கள் அப்போது செய்ய வேண்டும் கடமை ஒன்றே. அஃதாவது பரபரப்பாகப் பலவற்றை விரைந்து பேசிக் குழந்தையைத் திகைக்கச் செய்யாமல், சில சொற்களே சொல்லவேண்டும்; அவற்றையும் நிறுத்தி ஒலிக்கவேண்டும்.

பெற்றோர் குழந்தைக்குக் கருத்துக்களைக் கற்பித் தால் அமையும்; ஒலிகளைக் கற்பிக்கத் தொடங்கிச் சோர்வுறச் செய்தல் வேண்டா. ஒலிகளைக் கற்றுப் பேசவேண்டும் என்பதில் குழந்தைக்கு ஊக்கமும் ஆர்வமும் இயற்கையாகவே உள்ளன. அவற்றைக் கெடுக்காமலும் குறைக்காமலும் இருந்தால் போதும். அதுவே பெற்றோரின் கடமையாகும், குழந்தையின் மூளை இடை விடாமல் ஒலியாராய்ச்சி நடத்திக் கொண் டிருக்கின்றது அதற்கு இடையூறு செய்யாமல் விட்டுவிட்டால் வளர்ச்சி காண்பது திண்ணம்

பூனை'யை நன்றாக ஒலிக்க இயலாத குழந்தை 'மியா' என்ற ஒலியால் அதனை எளிதில் உணர்த்திவிடுகின்றது. இந்த இயல்பு வளர்ந்த மக்களிடத்தும் காணப்படுகின்றது. காக்கை என்றும், கிலுகிலுப்பை என்றும் பெயர் வைத்த காரணம் இதுதானே!

பக்கத்து வீட்டில் ஒரு பொருளுக்கு ஒரு பெயர் வைத்துப் பேசக் கேட்ட குழந்தை அதனை நினைவில் வைத்துக் கொண்டு தன் தாயிடம் சென்று இது என்ன? என்று விடாப்பிடியாய்க் கேட்டு அழுதலும் உண்டு. அப்போது தாய் சொன்ன பெயர் தனக்குட பொருத்தமாகத் தோன்றாமையாலும் தன்னால் நன்றாக ஒலிக்க முடியாமையாலும் குழந்தை ஏமாற்றம் அடைகின்றது. ஒலிகளைக் கற்பதில் இதுபோன்ற போராட்டம் எத்தனையோ குழந்தைக்கு நேர்கின்றன. ஆங்கிலம் தெரியாத ஒருவர் தெரிந்த ஒரு மாணவனைப் பார்த்து தம்பி! உன் பெயர் ஆங்கிலத்தில் என்ன? என்று கேட்டுத் திகைப்பது உண்டன்றோ? வளர்ந்த பிறகும் மொழிப் போராட்டம் விட்டபாடில்லை.

ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு பொருளையே குறிக்கும் என்று நெடுநாள் வரையில் குழந்தை எண்ணி வளர்ந்து பிறகு ஒரு நாள் ஏமாந்து போகின்றது. அப்பா என்றால் தன் தந்தை ஒருவரையே குறிக்கும் என்று முதலில் உணர்ந்த குழந்தை வீடு தோறும் அப்பா என்று ஒருவர் இருத்தலை உணர நாளாகும். முதலில் கண்ட தென்னை ஒன்றையே 'மரம்' என்ற சொல்லால் உணர்ந்த குழந்தை முருங்கை மரத்தைப் பக்கத்து வீட்டார் மரம் என்று சொல்லும்போது மறுக்க முனைகின்றது.

திணை பால் முதலியவற்றைப் பற்றி முதலில் குழந்தை எள்ளளவும் கவலை கொள்வதில்லை தன்னை நல்ல பையன் என்று பாராட்டிய தாயைத் தானும் அந்தத் தொடரால் நல்ல பையன் நீ என்று பாராட்டுகின்றது. தன் எதிரே வாலாட்டும் நாயையும் நல்ல 'பையன்' என்று பாராட்டுகிறது.

மொழிநூலறிஞர் ஜெஸ்பெர்ஸன் தம் குழந்தை எவ்வாறு எண்களைக் கற்றது என்று ஆராய்ந்து சில குறிப்புக்களை விளக்கியுள்ளார். வேனிற்காலத்தில் வெளியே சென்று விளையாடவும் பலவற்றைப் பார்த்து அறியவும் வாய்ப்பு நேர்வதால் மற்றக் காலத்தில் வீட்டினுள் இருந்து கற்றவற்றை அக் குழந்தை மறந்துவிடக் கண்டாராம். முதலில் கற்ற எண்களை மறந்துவிட்டு மறுபடியும் அவற்றையும் அவற்றிற்கு மேற்பட்டவற்றையும் ற்றதாம்.[4] பத்து வரையில் குழந்தை தவறில்லாமல் எண்ணுவதே பெரிய வெற்றிச் செயலாகும்.

ஒன்று அறிந்து இரண்டு என்னும் எண்ணைக் கற்கும்போது ஒன்றுக்கு மேற்பட்ட எல்லாவற்றையுமே இரண்டு என்று குறிப்பது குழந்தையின் இயற்கை மூன்று கற்றபோது, ஐந்து பழத்தைப் பார்த்தாலும் மூன்று என்றே சொல்லும்; பத்துப் பழத்தைப் பார்த்தாலும் மூன்று என்று சொல்லும். இப்படியே மற்ற எண்களையும் படிப்படியே கற்று வளர்கின்றது.

குழந்தையிடம் காணப்படும் இந்த இயல்பு மக்கள் பேசும் பல மொழிகளிலும் காணப்படுகின்றது.

4. Je p r n, La guag , It Natur tc., p. 119.

தென் ஆப்பிரிக்காவில் 'தம்மரா' பேசும் மொழியில் எண்களே இல்லை என்று கூறலாம். அம்மக்கள் ஒன்றுமுதல் மூன்று வரையிலுமே எண்ணக் கற்றிருக்கின்றார்கள். ஓர் எருது காணுமற் போனதென்றால், அதனை அவர்கள் எண்ணித் தெரிந்துகொள்வதில்லையாம்; காணுமற் போன எருதின் முகத்தை நினைந்தே தெரிந்துகொள்கின்றார்களாம்.[5] ஆஸ்டிரேலியாவின் பழங்குடி மக்களுக்கு நான்கு வரையில் எண்ணத் தெரியுமாம். அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையைக் குறிக்கப் பல என்பது போன்ற ஒரு சொல்லை வழங்குகின்றார்களாம்[6].

எண்களையும் பொருள்களையும் பிரித்து நுட்பமாக உணரும் அறிவு குழந்தைக்கு ஏற்படச் சில ஆண்டுகளாகும் அதனால் 'இரண்டு கண்ணும் ஒரு மூக்கும் எவ்வளவு?' என்று குழந்தையைக் கேட்டால் 'மூன்று' என்று விடை சொல்லிவிடும்.

குழந்தை வளர வளர அது கற்கும் சொற்களின் தொகையும் பெருகுகின்றது. அதனால் முதலில் சொற்பொருள் பற்றிக் குழந்தையிடம் இருந்த தெளிவு வர வரக் குறைகின்றது. ஆனல், குழந்தையின் மூளைவன்மைக்கேற்ப இது வேறுபடும். ஒரு திங்களில் நூற்றுக்கணக்கான சொற்களைக் கற்கும் குழந்தையும் உண்டு; சில சொற்களையே அரிதில் கற்கும் குழந்தையும் உண்டு. பெரும் புலவர்களிடையிலும் இத்தகைய வேறுபாடு உண்டு. ஆங்கிலப்புலவர்

5. Sayce, Introduction to the Science of Language p. 11
6. Abe Haveloque, The Scienc of Language, p. 68.

ஷேக்ஸ்பியர் இருபதினாயிரம் சொற்களை எடுத்தாண்டுள்ளவர் என்றும் மில்டன் ஆண்ட சொற்கள் எண்ணாயிரம் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர்.

சொற்களைக் கற்பதைவிட, சொல்லிலக்கணம் கற்பதே அரிய கல்வியாகும் குழந்தையின் மொழியில் எவ்வாறோ இலக்கணமும் அமைந்து படிப்படியே திருத்தமும் பெற்று வருகின்றது. எவ்வாறோ என்று கூறவேண்டுவதில்லை. ஒற்றுமைநயம் (An logy) என்னும் விதிபற்றிப் பல வாக்கியங்கள் குழந்தையின் மூளையில் பதிந்து ஒழுங்கு பெறுகின்றன, அந்த ஒழுங்கைத்தான் இலக்கணம் என்ற பெயரால் நாம் வழங்குகின்றோம். அண்ணன் வந்தான் என்றும் அது வந்தது என்றும் இப்படிப் பல வாக்கியங்கள் பலநாள் கூறக்கேட்டுப் பயின்று ஆண்பால் வினைமுற்றும் ஒன்றன்பால் வினைமுற்றும் குழந்தைக்குப் பழக்கமாகின்றன. பல ஆண்டுகள் கழிந்த பின்னர், தனக்கு முன்னமே தெரிந்த இதனையே, இலக்கணம் என்னும் பெயரால் ஆண்பால் விகுதி ஆன் எனவும், ஒன்றன்பால் விகுதி து எனவும் முயன்று இடர்ப்பட்டுக் கற்கின்றது.

கால வேறுபாடு அறிந்து சொற்களை ஆள்வதிலும் குழந்தைக்கு இடர்ப்பாடு உண்டு. முதலில் நாளைக்கு என்ற எதிர்காலச் சொல்லைக் கற்ற குழந்தை, அந்தச் சொல்லையே இறந்த காலத்திற்கும் வழங்கும். ‘எப்போது வந்தாய்? என்ற கேள்விக்கு விடையாக நாளைக்கு வந்தேன்’ என்றே சொல்லி விடும். நேற்று என்பது வேறு, நாளை என்பது வேறு எனப் பகுத்துணரும் ஆற்றல் அப்போது குழந்தைக்கு இல்லை.

எதை எடுத்தாலும் ஏன்? ஏன்?' என்று விடாமல் கேட்டுத் தொல்லை உண்டாக்குவதற்குக் குழந்தை பின்வாங்குவதே இல்லை[7]. இவ்வாறு ஏன் என்று கேட்கும் வேட்கை பெரும்பாலும் மூன்றாம் ஆண்டின் இறுதியில் தொடங்கும். அதனோடு சேர்ந் தாற்போல் எங்கே எப்போது முதலான இடவினு கால வினுக்களும் குழந்தை அறிவுக்கு எட்டும் ஆனல் முதலில் குழந்தையின் வினுப் பலவும் ஒரு சொல் அளவிலேயே தொடங்கும் அப்பா? என்று தாயைக் குழந்தை கேட்கும்போது இடமும் காலமும் நோக்கியே தாய் அந்த வினுவின் பொருளைத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்பா வந்தாரா? அப்பா போனுரா?' அப்பா எங்கே? அப்பா கொடுத் தாரா?' முதலான பல பொருள்களை மனத்தில் இருத் திக்கொண்டு 'அப்பா? என்று ஒரு சொல்லை வினுவாக ஆளும். சில திங்கள் கழித்து அப்பா கொடுத்து?' அப்பா கொடுத்தாங்க?' முதலான வாக்கியங்களை வினுவாக ஆளும். அப்பா கொடுத்து ஊ?' என்பது போன்ற வாக்கிய முடிவை நோக்கியே அந்த வாக்கியம் வினு என்று உணரவேண்டும். குழந்தையோடு பழகுவோர் இவற்றை யெல்லாம் முயற்சியின்றி அறிந்துகொள்வர். நான்காம் ஆண்டில் ஏன் எங்கே முதலான வினுக்கள் பயின்ற பிறகே, கொடுத்

7. இத்தகைய வினுக்கள் மிக மிக இன்றியமையாதன என்றும், இவற்றின் வாயிலாகவே உலகத்தையும் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் குழந்தை அறிய முடிகின்றது என்றும், தொடர்ந் தாற்போல் வினுக்கள் எழும்போது தொல்லையாகத் தெரிந்தாலும் குழந்தையின் நன்மையைக் கருதிச் 'சும்மா இரு' எனச் சொல்லித் தடை செய்யவே கூடாது என்றும் ஜெஸ்பர்ஸன் கூறுகிருர். (Language It Nature etc., p. 137.)

தாரா?' வந்தானா? போன்ற ஈற்று வினாக்களைக் கற்கத் தொடங்கும்.

குழந்தை இரண்டு ஆண்டு நிரம்பும் வரையில் மூவிடப் பெயர் கற்பதில்லை; நான் என்றும், நீ என்றும் பேச அறியா நிலையில் குழந்தை இருக்கின்றது. அவற்றைப் பேசத் தொடங்கும்போது முதலில் தன்மை ஒருமை நான், பிறகு முன்னிலை ஒருமை நீ' இவை தோன்றுகின்றன[8]. அப்போதும் எனக்கு உனக்கு முதலான சொற்களைக் குழந்தை பேசுவதில்லை. ஐ கு முதலிய வேற்றுமை உருபுகளைச் சேர்த்துப் பேச இன்னும் நாளாகும். நானு மியா பிடிச்சு நானு அண்ணா குடுத்து என்பன போன்றவை குழந்தை அப்போது பேசுவன. சில திங்கள் கழித்து வேற்றுமை யுருபுகளைச் சேர்க்கும்போது முதலில் எளிதில் பயில்வது கு' உருபே யாகும் 'அம்மாக்கு அப்பாக்கு என்று நான்காம் வேற்றுமை கற்கும்போது எனக்கு உனக்கு என்ற சொற்கள் எளிதில் வருவதில்லை. நானுக்கு என்றும் நக்கு என்றும் குழந்தை பேசிப் பெற்றோர் செவிக்கு அமிழ்தம் ஊட்டும்.

குழந்தை 'நானுக்கு என்று சொல்லும்போது த று செய்வதாக எண்ணுவது அறியாமை. குழந்தை செய்யும் தவறுகளும் உண்டு; ஒரு மொழியில் இயல்பாக அமைந்துவிட்ட தவறுகளும் உண்டு. ஆதலின் குழந்தையின் தவறு என்று துணிந்து கூறிவிடலாகாது. குழந்தையின் மூளை ஒழு கை விரும்புவது. 'அப்பாக்கு அக்காக்கு அண்ணாக்கு' என்று கு ஒ ரு

8. P. B. B l ard, Thought ı d L nguage, p. 127.

யைச் சேர்க்கும் முறையை 'நானுக்கு' என்பதிலும் கையாள்வது தவறு? இது மொழிக்கும் மொழி கற்போருக்கும் உள்ள போராட்டமாகும். இந்தப் போராட்டத்தில் சிலவேளைகளில் மொழியே வெற்றி பெறுகின்றது; சில வேளைகளில் மொழி கற்போர் வெற்றி பெறுகின்றனர். குழந்தையின் கல்வியில் காணும் பல உண்மைகளும் மொழிநூலின் அடிப்படையாக அமைந்த உண்மைகளாகும்.

சில திங்கள் நானுக்கு நீக்கு என்றே பேசி வரும் குழந்தை, பிறகு படிபபடியே பெற்றோரும் மற்றோரும் பேசுவதைக் கேட்டுக் கேட்டு 'எனக்கு உனக்கு' என்று பேசத் தொடங்குகின்றது. இங்கு மொழியே வெற்றி பெற்றுவிட்டது.

'நான் மாட்டைப் பார்த்தேன்' என்று ஐ உருபு சேர்த்துச் சொல்லாமல் 'நான் மாடு பார்த்தேன்' என்றே குழந்தை பேசுகின்றது. இப்படி எத்தனையோ வாக்கியங்களில் குழந்தை உருபு இல்லாமல் பேசிப் பேசி வளர்ந்த பிறகும் அந்த வாக்கியங்களையே போற்றுகின்றது. மொழியும் அதற்கு உடன்பட்டு பொருள் புலப்பாட்டில் ஐயமும் இடர்ப்பாடும் இல்லாத போது வேற்றுமைத் தொகைக்கு இடந்தந்துள்ளது. இது மொழி கற்போர் பெற்ற வெற்றியாகும்[9].

---

9. ஆங்கிலத்தில் 'peak' என்னும் வினைச் சொல்லின் இறந்த காலமாக 'pak' இருந்தது. பெரும்பாலோர் 'poke' என்று பேசி வந்தனர். முதலில் எதிர்ப்பு இருந்தது; வர வர எதிர்ப்புக் குன்றியது. இப்போது 'pok' என்பதே இலக்கணமாகிவிட்டது. (Whitn y, Language and the Study of L u ge , p. ?9.)

இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் குழந்தையின் மொழிக் கல்வியை நோக்குவோர், அதன் ஒழுங்கு வேட்கையினை உணர்வர்[10].

குழந்தையின் வாழ்வில் எண்ணுவதெல்லாம் பேச்சாகும்; பேசுவதெல்லாம் செயலாகும். குழந்தையுலகமே செயல் உலகம் எனலாம். காக்கை நரி முதலியவற்றின் கதைகளைக் குழந்தை சொல்லும்போது கைகட்டியிருக்க முடியாது. கதையில் வரும் உணர்வெல்லாம் குழந்தையின் கை காலில் செயலாய் விளங்கும்' உடலில் அசைவுகள் பலவாகும். அதனால் குழந்தை எண்ணுகின்றது பேசுகின்றது என்பதைவிட நடிக்கின்றது என்பது பொருந்தும். இதனால் குழந்தை கற்கும் மொழியில் வினைச்சொற்கள் செல்வாக்குப் பெறும். ஒவ்வொரு வினையும் முற்றாகவே இருக்கும். எச்சம் முற்று என்னும் வேறுபாடு முதலில் இடம் பெறுவதே இல்லை. 'மாடு வந்தது போனது என்று பேசத் தெரியுமே தவிர 'மாடு வந்து போயிற்று என்பது தெரியாது. 'அண்ணன் எடுத்தான், பொம்மை உடைந்தது என்பது குழந்தை வாக்கியம். அண்ணன் எடுத்ததனால் பொம்மை உடைந்தது' என்பது மாணவன் வாக்கியமே

பிறர் சொன்னதைச் சொல்லும்போது 'என்று' என்னும் எச்சத்தை ஆளவும் முடியாது. 'பழம்

10. The language of children 's more regular t ian our own. I h ve h ard children ay badder and badde t, 'n t ad of wor and wor t...Children ay, I goed, I comed, I catch d; nd 't ' th' n e of grammatical 'u t'ce, th' gen rou f el'ng of wh t ought to b which i the cour e of centu 'e ha lim'nat d many o-c lled 'rregular form . M x Mull Th Sci n of L ngu ge p 73.)

கொடுப்பேன் அப்பா சொல்லி ' என்றே குழந்தை பேசும். 'பழம் கொடுப்பேன் என்று அப்பா சொன்னார்' என்பது பிற்காலத்தே அது கற்கும் வாக்கியம்[11].

குழந்தையின் பெற்றோர் மொழியும் சுற்றுப்புற மொழியும் ஒன்றாகவே இருந்தால் குழந்தை அந்த மொழியை எளிதில் கற்றுக் கொள்ளும் அதனால் தமிழ் நாட்டில் தமிழ்க் குடும்பத்தில் உள்ள குழந்தை தமிழை எளிதில் கற்றுக் கொள்ளக் காண்கின்றோம். ஆனால் பம்பாயில் உள்ள ஒரு தமிழ்க்குடும்பத்தின் குழந்தை வீட்டில் தாய் பேசும் தமிழ் மொழியைக் கற்றுவருதல் எளிதன்று· சுற்றுப்புறத்தில் பேசப்படும் இந்தி மொழி அதனைக் கவரும். இருமொழியும் கற்பதால் குழந்தையின் இடர்ப்பாடுகளும் பெருகும். குடும்பத்தில் கற்கும் தாய் மொழியைப் போலவே சுற்றுப்புறத்தில் பேசப்படும் பிறமொழியும் எளிதில் பயிலப்படும் என்பது சிலர் கருத்து[12].

ஆனால் இது குழந்தையின் ஆற்றலையும் அதன் வயதையும் பொறுத்திருக்கின்றது முதல் மூன்று ஆண்டுகளில் குழந்தையிடம் புதியனவற்றைக்கற்கும் ஆற்றல் மிகுதியாக உள்ளது. வளர வளர அவ்

11. Father aid: "I will give you fruit" என்று ஆங்கிலத்தில் th t என்னும் சொல்லின்றி வழங்கும் நேர்ப் பேச்சு (d rect p ch) வழக்கு நோக்குக.

12. விட்னே என்னும் அறிஞர் இதனை விளக்கக் கிறிஸ்துவப் பாதிரிமார்களின் குழந்தைகளைக் குறித்துக் கூறுகின்றார். உலகத்தில் எந்தப் பகுதியிலிருந்தாலும் தாய்மொழியோடு உறவற்ற எந்த மொழி சுற்றுப்புறத்தாரால் பேசப்பட்டாலும், அந்த நாட்டு மொழியைத் தாய்மொழி போல் இயற்கையாகவே அக்குழந்தைகள் கற்றுக்கொண்டு பேசுகின்றன என்பர் (Th Lif nd Growth of Language p. 89.)

வாற்றல் குறைந்து வருகின்றது. ஆதலின் அது தாய் மொழியை எப்போது கற்கின்றது பிறமொழியை எப்போது கற்கின்றது எதற்கு மிகுதியான காலம் செலவாகின்றது என்பன போன்ற ஆராய்ச்சியின்றித் துணிய முடியாது.

ஆனல் குழந்தை இருமொழி கற்பதால் அம் மொழிகளுக்கு நேரும் தீங்கைவி க் கற்கும் குழந்தைக்கு நேரும் இடர்ப்பாடே மிகுதி. இயற்கையாகச் சொல்லும் பொருளும் கற்று உணர்வைப் பெருக்கி அறிவை வளர்க்க வேண்டுவதான வாழ்வு அகராதி வாழ்வாக மாறுதல் அந்த வயதிற்குத் தீமையே பயக்கும். குழந்தைப் பருவத்தில் இருமொழி கற்ற எந்தக் குழந்தையேனும் வளர்ந்தபின் சொற்பொழிவாளனகவோ புலவனகவோ சிறப்புற்றது உண்டோ என்று ஜெர்பர்ஸன் வினவுகின்றார்[13].

---

13. It i of cour e, an advantage for a ch'ld to be famil'ar with two language : but without doubt the ad. vantage may be and gene'al y is, purcha ed too dea'. F'r t of al the child 'n que tion hardly learns either of the two language a perfectly a he would have do e if he had limited himself to one. It may eem, on the surface, as if he talked ju t like a native, but he doe not real y comma d the fine po'nt of the language. Ha any bil' gual chi d v r developed into a great arti t in p ach, a poet or o'ator ?

Secondly, the bra'n ffort required to ma te' two l guage in tead of one ce'tainly d'm'nishes the ch i d's power of learning other th'ng which m'ght and ought to be l arnt. Th wor t of the y tem i that 'n tead of earr i g other thing n c ary to u w must spend or r t' ne a d nergy 'n learn'ng to expr s the ame thought in two or thr langu gr t th a t'me. (Language, It Nature tc. p. 48.)

## ௩ மொழி வகை

' ஞ' ெ ரழியு' :

நூற்றுக்கணக்கான மொழிகள் உலகில் பேசப் படுகின்றன. ஒரு நாட்டு மக்கள் பல மொழிகளைப் பேசுதலும் உண்டு; பல நாட்டு மக்கள் ஒரு மொழியைப் பேசுதலும் உண்டு. மக்களை இனம் கருதிப் பிரிப்பவர் மொழியாராய்ச்சி நடத்தி முடிவுகாண முயல்வதும் உண்டு. அத்தகைய ஆராய்ச்சிக்குத் தெளிவாகாமல் தடைப்படும் ஒன்று மக்களும் மொழிகளும் கலக்கும் கலப்புமுறையேயாகும். இருவகை மக்கள் ஒரு நாட்டில் பழகிக் கலந்துவாழும் வாழ்வில் ஒற்றுமை மிகுதியாக உள்ளது. ஆயின், அவர்கள் பேசும் இருவகை மொழிகளும் அவ்வளவு நெருங்கிக் கலத்தல் அருமையாகவே உள்ளது. மக்கள் கலப்பில் இரண்டு இனம் உரிமையுடன் கலந்து ஒன்றாகக் காண்கின்றோம். ஆனால் மொழிக் கலப்பில் ஒரு மொழி செல்வாக்குப் பெற்று ஓங்க மற்றொரு மொழி உரிமை யிழந்து அழிதலே காண்கின்றோம். ஆதலின் மக்களின் ஆராய்ச்சி வேறு மொழிவகை ஆராய்ச்சி வேறு எனப் பிரித்தறிதல் நலம்

மொழிவகை ஆராய்ச்சியில் ஒலியைக் கருவியாகக் கொண்டு வகுத்தல் பயனற்றுப் போகின்றது. பல ஒலிகள் மொழிகளுக்கெல்லாம் பொதுவாக உள்ளன. ஒலித்துறையில் ஒற்றுமை மிகுதி · வேற்றுமை குறைவு. தவிர காலப்போக்கில் ஒலிவகையில் ாணும் மாறுதல்களும் பற்பல.

மக்கள் பேசும் பலவகைச் சொற்களையும் ஆராய்ந்து அவற்றால் மொழிகளை வகைபபடுத்துவதும் ஒரு சாரார் முயற்சியாகும். அவர்கள் முயற்சியும் தெளிவு பயப்பதில்லை. உறவல்லாத இரண்டு மொழிகளுக்குள் ஒரு சில சொற்கள் ஒத்திருத்தலும் உண்டு எடுத்துக் கா டாக, ஆங்கிலத்தில் எய்ட் (*Eight*), பிரைஸ் (*Prize*) மம்மா (*Mamma*) முதலிய சொற்களை எட்டு பரிசு அம்மா என்னும் தமிழ்ச் சொற்களோடு ஒ பிட்டுக் காண லாம். நெருங்கிய உறவுடைய இரு மொழியுள் பல சொற்கள் வேறுபடுதலும் உண்டு. அவன், உள் எழுபது என்னும் தமிழ்ச் சொற்களும் வாடு லோ டெப்பை என்னும் தெலுங்குச் சொற்களும் உறவு அற்றவைபோல் தோன்றுகின்றன அல்லவா? தமிழ், தெலுங்கு கன்னடம், மலையாளம் இவற்றின் அகராதிகளை ஒப்பிட்டால் இந்த உன மையை அறியலாம். தவிர சொற்கள் அடிக்கடி உருவம் மாறுவன கெடுவன. ஒரு சொல் அழிந்த பின் தொடர்பில்லாத வேறு சொல் அதன் இடத்தைக் கொள்ளுவ தும் உ டு.

ஆதலி ா ஒலியி லையும் (*Phonetics*) சொற்பிறப்பையும் (*Etymology*) விடுத்து சொல்லமைப்பை (*Morphology*) ஆரா தல் நலம். சொல்லமைப்பினைக் ெ ாண்டு மொழிநிலையைப் பொதுவாக மூன்று வகைப் படுத்தலாம்.

**தனி நி :**

சொற்கள் ஒன்றோடொன்று ஒட்டாமல் தனித் தனியே நின்று வாக்கியமாக அ மைந்து ெ பாருள உணர்த்தும் நிலை ஒன்று இது தனி நிலை (*I olation*)

எனப்படும். இந்நிலையில் உள்ள மொழியில் பெயர் வினைகளாகிய சொற்களைப் பெரும்பாலும் ஓரசைச் சொற்களாகவே (*Mono yllabic word*) இருத்தல் இயல்பு.

இத்தகை மொழியில் சொற்கள் எல்லாம் அடிச் சொற்கள் (*Roots*) ஆகும். அதாவது அம்மொழியில் சொற்களுக்கும் பகுதிகளுக்கும் வேறுபாடு இல்லை. சொற்களெல்லாம் பகுதிகளே· பகுதிகளே சொற்கள். விகுதி இடைநிலை முதலியன இல்லை. இலக்கணம் என்பது இம்மொழியில் வாக்கிய அமைப்பைப் பற்றியதே யாகும்.[1] அதற்கு அடுத்தபடி சொற்களை எடுத்தும் படுத்தும் நலிந்தும் ஒலித்துப் பொருள் வேறுபாடு புலப்படுத்தும் முறை இன்றியமையாதது. சீன மொழி சயாம் மொழி (*Siame e*) பர்மிய மொழி, திபெத்துமொழி எல்லாம் இவ்வகையைச் சார்ந்தவை.

சீனமொழியில் இலக்கணத்தை விளக்கும் முறை வியப்பூட்டு ;தாகும். சொற்கள் இருவகைய அவை பொருளுணர்த்தும் சொற்கள் வெறுஞ் சொற்கள் என்பன. பொருட் சொற்களுக்கும் வெறுஞ் சொற்களுக்கும் வேற்றுமை புலப்படுத்தும் கலையே இலக்கணம் எனப்படும்' என்பது அந்த விளக்கம்.[2] இதிலி

---

1. Th grammar of all mono yllabic or i olativ idiom nece sarily and entirely a que tion of yntax. (Abel Haveloque, The Scienc of Language p. 34.)

2. The Chine e divided the root into two d' tinct cla e · the full and th mpty word (chi-t en and lin-t en) By the fir t, they under tood tho root that reta'ned the'r full and indep ndent mean'ng·They called emptyword thos root who e proper valu wa beco 'ng graduai y ob cuted

ருந்தே அம்மொழியில் இலக்கணம் அமைந்த முறை யினை எண்ணி வியக்கலாம் கையால் எடு என்ற தமிழ் ராக்கியத்தில் சீன இலக்கணப்படி கை என் னும் பெயரும் எடு' என்னும் வினையும் பொருட் சொற்கள். ஆல்' என்னும் வேற்றுமையுருபு வெறுஞ் சொல்லாகும்.

தா என்னும் சீன மொழிச் சொல் ஒன்று இடத் திற்கேற்பப் பல பொருள் தரும். பெயராக நிற்கும் போது 'பெருமை என்னும் பொருளும் பெயரடை யாக நிற்கும்போது பெரிய என்னும் பொருளும். வினையாகும்போது பெரிதாக்கு பெருகு' என்னும் பொருளும் வினையடையாகும்போது 'பெரிதும், பெரிதாக என்னும் பொருளும் உணர்த்தும்.[3] கல் என்னும் தமிழ்ச் சொல் கல் எடு கல் வீடு அதைக் கல் என்னும் வாக்கியங்களில் பெயராகவும், பெயரடையாகவும் வினையாகவும் வேறுபடுமாறு போலக் கொள்க. ஆகையால் அம்மொழியில் சொல் நிற்கும் இடம் (*Word order*) அறிந்து பொருளுணர வேண்டும்; வாக்கிய இலக்கணம் இன்றியமையாத தாகின்றது.

தமிழிலும் ஓரசைச் சொற்கள் பலவாக உள்ளன. நீ போ, மண் பார் பூ தா முதலான வாக்கியங்

---

and wh.ch, little by little, acqu'red the functio of fixing precisely the extreme y vague idea of the full wo d , whose primitive en wa till ful y pre erved. "What ' grammar?" the Chine e te cher a k h' pupil. "It i a very u eful art" replie the pup'l; "an art that teache u to distingui h between the full and empty ord ." (ibid p. 37.)

3. Wh'tney L nguage and th Study of Language, p. 330.

களும் உள்ளன. சங்க இலக்கியத்தில் பெரும்பாலும் ஓரசைச் சொற்களும் ஈரசைச் சொற்களுமே இருத்தல் கருதத்தக்கது.

ஒட்டு நிலை:

அடிச்சொல் (Roots) இரண்டு சேருங்காலத்தில் அவற்றுள் ஒன்று சிதையாமல் நிற்க மற்றொன்று சிதைதல் உண்டு. இவ்வாறு அடிச்சொல் இரண்டும் பலவும் ஒட்டி நிற்கும் நிலை ஒட்டு நிலை (Agglutination) என்பது. கண்ணன் பார்த்தான் என்னும் தமிழ் வாக்கியத்தில் கண்ணன் என்ற சொல் ஒட்டு நிலையாக அமைந்ததே. கண் என்ற சொல்லும் ஆன் (அ ) என்ற சொல்லும் ஒட்டி முன்னது சிதையாமல் நிற்க பின்னது குறுகிக் கண்ணன் என்று ஆயிற்று. பார்த்தான் என்பதிலும் பார் என்பதோடு வேறு சில சேர்ந்து நின்றன.

இச்சொற்களில் முதலில் நிற்கும் கண் பார் என்பவற்றை இலக்கண நூலார் பகுதி என்பர். மொழி நூலார் அடிச்சொல் (Root) என்பர். அவற்றோடு சேர்ந்த விகுதி இடைநிலை முதலியவை இடைச்சொல் எனப்படும். இடைச்சொல தமக்கென்று பொருளில்லாதவை. தாம் சாரும் பெயர் வினைகளின் பொருளைத் தெளிவாக்குவன.[4] முதலில் இடைச்சொல் என்று ஒருவகைச் சொல் இல்லை என்பதும் பெயர்

4. இடையெனப் படுவ பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே.
(தொல். சொல். உசக)

"பெயரும் வினையும் உணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றை வெளிப்படுப்பதல்லது, தமக்கெனப் பொருளுடைய அல்ல" என்று சேனாவரையர் தரும் விளக்கம் காண்க.

வினைகளே நாளடைவில் சிதைந்து அவ்வாறு பயன் பட்டன என்பதும் மொழி நூலார் கொள்கை முழுச் சொற்களாக இருந்த இவை சிதைந்து இடைச்சொற் களாய்ப் பெயர் வினைகளோடு ஒட்டி நிற்றலே ஒட்டு நிலை என்பது.

உலகில் உள்ள மொழிகளில் பெரும்பாலன இந் நிலையில் உள்ளன. சித்திய மொழி என வகுக்கப் பெற்றமொழிகளும் இவ்வகையினவே. அவற்றின் உட் பிரிவாகவோ வேருகவோ கருதப்படும் திராவிட மொழிகளும் இவ்வகையினவே. தமிழ் மொழியின் பகுதிகள் பலவும் ஓரசையாக இருத்தலும் அவை இடைச்சொற்களோடு ஒட்டி நிற்றலும் காண்க.

தென் ஆப்பிரிக்காவின் பழங்குடி மக்களின் பண்டு (*Bantu*) மொழி ஆஸ்டிரேலியாவின் பழங் குடி மக்களின் மொழி மலேயா பாலினேஷியன் மொழி ஜப்பானிய மொழி, கொரிய மொழி பின்னிஷ் (*Finnish*) மொழி பாஸ்க் (*Ba que*) மொழி முத லான பல மொழிகளும் ஒட்டுநிலையினவே.

**உட்பிணைப்பு நிலை :**

அடிச்சொல் இரண்டு சேருங்காலத்து இரண்டும் சிதைந்து ஒன்றுபட்டு நிற்றல் உண்டு. இந்நிலையே உட்பிணைப்பு நிலை (*Inflection*) என்பது. இவ்வகை மொழியில் அடிச்சொல் தெளிவாய் நிற்றல் இல்லை.[5] பகுதி விகுதி முதலியவற்றை எளிதில் பிரித்தறிய

5. தமிழில் 'கொணு' என்னும் சொல் அவ்வாறு உட் பிணைப்பாய் நிற்கும் சொல்லாகும். செத்தான், சென்றது முதலான சொற்களிலும் அடிச்சொல் திரிந்து நிற்றல் காண்க. இந்நிலைக்கு எடுத்துக்காட்டாகத் தமிழில் சொற்கள் கிடைத்தல் அரிது. காரணம் தமிழ்ச் சொற்கள் ஒட்டு நிலையின. ஐரோப்பிய மொழிகளில் பல

இய ாது. ஐரோப்பிய மொழிகள் பலவும் வடமொழியும் இவ்வகையைச் சார்ந்தவை.

இத்தகைய மொழியின் வாக்கியங்களில் சொற்களின் இடம் (*Word ord r*) பற்றிக் கவலையில்லை. எந்தச் சொல்லும் எங்கு வேண்டுமாயினும் இருக்லாம்.[6] ஏதோ ஒரு மரபு பற்றி மாற்றியமைத்து (அந்வயப்படுத்திப்) பொருள் செய்து கொள்ளலாம். எழுவாய் பயனிலை முதலியவை வாக்கியத்தில் கண்ட இடமெல்லாம் அமைந்து லத்தின் ஜெர்மன் முதலான மொழிகளில் காணப்படும் முறையினை ஜெஸ்பர்ஸன் சொற்களின் ஒளிப்பாட்டம் (*Hide and seek*) என்கின்றார்.[7]

செமிடிக் மொழிகளில் உள்ள சொல்லமைப்பு முறை ஒருவகை உட்பிணைப்பாகும். அவ்வகை மொழியில் மூவகைச் சொல்லின் உயிரெழுத்துக்களின் மாறுதலால் பொருள் வேறுபாடு உணர்த்தபடும். அவற்றில் அடிச்சொல் இரண்டு பிணைந்தன என்றோ சிதைந்தன என்றோ கூறுதற்கில்லை[8]

---

சொற்களும் உட்பிணைப்பாய் அமைந்துள்ளன. Such, which என்னும் ஆங்கிலச் சொற்கள் o-like who like என்பவற்றின் பிணைப்பாம்.

6. The more highly 'nflected languag i , the greater the liberty which it may take 'n po itional arrangement. The presenc or b nc of inflectional d vice and the degree of their u age, modifie the cop of yntactical arrangement. (G. K. Zipf The P ycho-Biology of Languag p. 246.)

7. Growth and Structure of the English Languag p. 11.

8. Whitney Lang age a d the Study of La guag p. 301.

எடுத்துக்காட்டாக அரபிய மொழியில் க் ட் ல் (Q T L) என்னும் மூன்று மெய்யும் அடங்கிய அடிச்சொல் கொல்லுதல் என்னும் பொருளைத் தரும். அம் மெய்யெழுத்துக்களுடன் உயிரெழுத்துக்கள் பல வகையாகச் சேர்ந்து பல பொருள் தரும்.

| | | |
|---|---|---|
| காடாலா | *Qatala* | அவன் கொன்றான். |
| குடில | *Qutila* | அவன் கொல்லப்பட்டான். |
| குடிலு | *Qutilu* | அவர்கள் கொல்லப்பட்டனர். |
| உக்டுல் | *Uqtul* | கொல் |
| காடில் | *Qatil* | கொலை |
| கிட்ல் | *Qtil* | பகைவன் |

அமெரிக்காவின் பழங்குடி மக்கள் பேசும் மொழிகள் முற்றிலும் வேறுபட்ட மற்றொரு நிலையில் உள்ளன. அவற்றில் சொற்கள் பல ஒன்றாய்ச் சேர்ந்து ஒரு தொகுதியாய் நீண்டு கிடக்கின்றன. அம்மொழிகளில் சொல்லுக்கும் வாக்கியத்திற்கும் வேறுபாடு இல்லை என்னலாம். எவ்வளவு பெரிய வாக்கியமும் பிரிக்கமுடியாமல் ஒரு சொல்லாகவே இருக்கின்றது. இந்நிலை சொற்கோவை நிலை (*Incorporative or Polysynthetic tage*) என்பது.

---

9. It t nd to the exclu 've and abnormal agglomeration of di tinct significant elements in its words. The M xic n nam for goat ' 'kwa-kwanch tentsone' literal y 'head-tr (horn) lip-hair (beard)' or the horned and b rd d on ...'I it-h'm-giv -th bre d-my on' for 'I give y on th br d. (Ib'd p. 348.)

ெ ரழிநிலையில் நா :

சென்ற நூற்றாண்டில் மாக்ஸ் முல்லர் மொழிப் பாகுபாட்டினை ஆராயத் தலைப்பட்டு உலக வரலாற்றிலிருந்து சான்றுகள் தேடினார். அவர் முயற்சி பயனற்றுப் போனது; அவர் கண்ட முடிபுகளும் அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அவர் மக்கள் இனத்தை மூவகையாக்கினார். குடும்ப வாழ்க்கை அளவில் நாகரிகம் நின்றுவிட்ட மக்கள் பேசும் மொழி தனிநிலை என்றார். ஒட்டுநிலை மொழி ஊர் ஊராக நாடு தோறும் அலைந்து திரியும் நாடோடிக் கூட்டத்தினர் பேசும் மொழி என்றார். ஒரு நாடு அமைத்து ஆளும் நாகரிகம் பெற்று உயர்ந்த மக்கள் பேசும் மொழியே உட்பிணைபு மொழி என்றார். இவ்வாறு அவர் செய்த முயற்சியெல்லாம் ஐரோப்பிய மொழிகளுக்குச் சிறப்புத் தேடுவதற்கே பயன்பட்டது. அவர் கருத்தின்படி திராவிட மொழி பேசிய மக்கள் நாடோடிகளாய்த் திரிந்தவர்கள் என்றும் அரசியல் நாகரிகம் அடையாதவர்கள் என்றும் கொள்ள வரும். ஆனால் அறிஞருலகம் கண் மூடியிருந்து அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. தமிழ் தெலுங்கு முதலான மொழிகளில் ஒரு சில உட்பிணைப்புகள் காணப்படுவதால் அவற்றைப் பேசிய மக்கள் ஒரு சிறிது அரசியல் நாகரிகத்தை எட்டினவர் என்றும் அவர் கூறியுள்ளார்.[10]

10. Where nomad'c tribe approach to a political organi ation, their language, though Turanian, may approach to the y tem of political or traditional language uch a San krit or Hebrew. Th' i 'ndeed the ca e with the mo t advanced me ber of the Turanian family, the Hungarian, the Finn' h the Tamil, Telugu tc. (Max Muller, The Sc'ence of Language p. 340.)

ஆனால், ஜெஸ்பர்ஸன் முதலிய சிறந்த அறிஞர் ஆராய்ச்சியால் அது மறுக்கப்படுகின்றது. உட்பிணைப்பு மொழிகள் கருத்துக்களை எளிதில் புலப்படுத்தாமையால் அவை தனிநிலை மொழிகளைவிடத் தாழ்ந்தவை என்பது ஜெஸ்பெர்ஸன் கொள்கை. சாய்ஸ் என்னும் அறிஞரும் உட்பிணைப்பு மொழிக்குச் சிறப்புத்தர மறுக்கின்றார்; அவர் ஒட்டுநிலை மொழியைப் போற்றி அம்மொழி அமைப்பிலுள்ள அறிமாற்றலை எடுத்து விளக்கியுள்ளார்.[1]

தென் ஆப்பிரிக்காவில் பண்டு (Bantu) முதலிய மொழிகளில் மிகச் செறிந்த உட்பிணைப்புநிலை காணப்படுகின்றது. அவற்றை நோக்க, சமஸ்கிருதம் கிரீக், லத்தின் முதலிய மொழிகளில் உட்பிணைப்பு இல்லை என்றும் கூறிவிடலாம். ஆனால் மாக்ஸ் முல்லர் கருத்துப்படி பண்டு (Bantu) முதலிய மொழிகளைப் பேசுவோர் நாகரிகம் மிகுந்தவர்கள் என்று கூறுதல்

1. In fact when w examine clo ely the pr'ncipl upon which fl ct'on re t we hall find that it implie an 'nferiorlogical faculty to that 'mpli d by agglut'nation. In flectional language the relation of the sentenc are d not d by particular uffixe or internal vowel change , which group th m elve , a it w re, round the pri ic'pal thought contained in the entence...In other word every ubordinate thought hould b d not d by a flection....In fact, the principle of flection cannot be log'cally carr'ed out beyond th narrow circl of tho e impl entence which ufficed for the n ed and intelligence of primitiv man, and progre of thought 'n mod rn Enope ha been mark d by a corre pond'ng r volt from th tr mm l of fl ct'on. Engli h h fitt d 't lf to b com un'v al l guage by truggl 'ng to a 'milate 't cond'tion to that of Chine e. (Sayce, Introduct'on to th Sci nc of L nguag p. 75.)

பொருந்துமோ? அல்லது தனிநிலையாக வழங்கும் சீன மொழியைக் கண்டு, சீன மக்கள் நாகரிகமற்ற காட்டு மிராண்டிகள் என்று கூறுதல் தகுமோ? பண்டைக் காலத்துச் சிறப்பெய்திய ஒரு சில நாகரிக நாடுகளுள் சைனாவும் ஒன்றாக ஓங்கியிருந்ததன்றோ? ஆதலின், மாக்ஸ் முல்லர் கொள்கை தவறாகும்.

**ெ ாழியின் ா ட்:**

மற்றும் இந்த மூவகை நிலையும் (தனிநிலையும் ஒட்டு நிலையும் உட்பிணைப்பு நிலையும்) ஒவ்வொரு மொழியிலும் உள்ளன. இந்த நிலை இன்னமொழிக்கே உரியது என்று வரையறுத்து ஒதுக்குவதற்கில்லை.[12] எடுத்துக்காட்டாக தமிழைக் காணலாம். தமிழ் ஒட்டுநிலையில் உள்ளது என்று கூறப்படுகின்றது. நாட்டார் மனைவி காண்பார், வரும் முதலான ஒட்டு நிலைச் சொற்கள் பெரும்பாலனவாக இருத்தல் உண்மையே. ஆனால், கல் மண் நான் நீ போ வா முதலான சொற்கள் தனிநிலையில் வழங்குதலும் சிறுபான்மை உண்டு. கொனு சென்றது சிவந்தன முதலான சில சொற்கள் உட்பிணைப்பு என்று சொ லக்கூடியவாறும் உள்ளன. ஆங்கில மொழியில் பெரும்பான்மையும் தனிநிலையே காணபடினும், ஒட்டு நிலையும் உட்பிணைப்பு நிலையும் இன்னும் உள்ளன. ஆகையால் இன்ன மொழி இன்ன நிலையில் உள்ளது என்று ஆராய்தலைவிட இன்ன மொழியில் இன்ன நிலை பெருகியுள்ளது என்று ஆராய்தல் தக்கது.

12. Vendrye Language p. 349.

தனிநிலை மொழியில் உள்ள சொற்கள் நாளடை வில் சேர்ந்து ஒன்றுபட்டு ஒட்டுநிலையாதல் உண்டு

மக + அன் மகன்
மக + அள் மகள்

ஒட்டுநிலை உட்பிணைப்பாதலும் உண்டு தந்தை தவ்வை களிறு முதலிய சொற்கள் அவ்வாறு அமைந் தன எனலாம். உட்பிணைப்பாய் அமைந்த சொற்கள் மீண்டும் தனிநிலையாய் வழங்கலும் உண்டு. கொணு கொடு முதலிய சொற்கள் இன்று சிறு சிறு அடிச் சொற்கள் போல் வழங்குகின்றன. கொண்டுவா கொள்ளச் செய் முதலான கருத்துக்கள் அச்சொற்க ளில் அடங்கியிருத்தலின் அவை நீண்ட உட்பிணைப் புச் சொற்களாக இருந்தே குறுகியிருத்தல் வேண்டும் என்பது தெளிவாகின்றதன்றோ? கொணர்ந்தான் கொடுத்தான் என்னும் போது, தனி நிலையாய் வழங் கின கொணு கொடு என்பன ஒட்டுநிலையாகின்றன. இவ்வாறு ஒருநிலை மற்றொரு நிலையாய், அது மீண்டும் வேறொன்றாய் மாறி மாறி வரக்காண்கின்றோம். வட்ட வடிவமான கோளத்தைச் சுற்றி வந்து புறப்பட்ட இடத்தை அடைதல் போல் உள்ளது இது. மொழி வரலாற்றில் இம்மாறுதலை ஒரு மாவட்டம் என பர்.[13] தனிநிலையாகவே எல்லா மொழிகளும் தொடங் கியிருக்க வேண்டும் என்றும் அவை படிப்படியே வளர்ந்து மாறி மாறி மீண்டும் தனிநிலை அடையும் என்றும் மொழிநூலறிஞர் சிலர் கருதுகின்றனர். ஆங் கிலம் அவ்வாறு சுற்றிவந்து இன்று தனிநிலையாய் ஓங்கிநிற்கக் காண்கின்றோம். தமிழிலும் அதற்குரிய அறிகுறிகள் சில காணப்படுகின்றன.

13 G. K. Z'pf Th P ycho Biology of Language.

ா கிய அ ப்பு :

பழங்காலத்து மக்களுக்கு நினைவில் நின்ற கருத்துக்களும் பொருள்களும் சிலவே. இக்காலத்து மக்கள் அறிந்து நினைவில் வைத்துக் காக்க வேண்டும் கருத்துக்களும் பொருள்களும் பற்பல. அன்றியும் நாகரிக வாழ்வில் நினைவாற்றல் வேறு பல துறைக்கு வேண்டுவதாக உள்ளது. ஆதலின் நாகரிகம் வளர வளர நினைவாற்றல் குறைவதாகக் காணப்படும். நினைவாற்றல் குறைந்த மக்கள் ஒவ்வொரு சொல்லிலும் இலக்கண வேறுபாடுகளை அமைத்து அவற்றை மறவாமல் போற்றிப் பேசுதல் அரிதாகும். அதனால் காலப் போக்கில் இலக்கண வேறுபாடுகளைச் சொல்லின் இடைநிலை விகுதி, உருபு முதலியவற்றால் உணர்த்தும் முயற்சி குறைந்து போகும்; அதற்கு ஈடாக இன்ன சொல் இன்ன இடத்தில் அமைந்து இன்ன பொருள் பயக்கும் என்ற வாக்கிய இலக்கணமே தலையெடுத்து வாழும். இதுவே ஆங்கில முதலிய மொழிகளின் வளர்ச்சியில் காணபடுவதாகும் இதனைத் தனிநிலை மொழி பலவற்றுள்ளும் காணலாம். தமிழ் தனிநிலைமொழி அன்று. ஆயின் தமிழிலும் பலவாக்கியங்கள் இம்முறையில் அமைந்து வருகின்றன.

உண்டிலன் என்னும் சொல்லில் உண்ணுதல் என்னும் வினையும் இறந்த காலத்தை உணர்த்தும் இடைநிலையும் (ட்) எதிர்மறைப்பொருள் பயக்கும் இடைநிலையும் (இல்) உயர்திணை ஆண்பாலை உணர்த்தும் விகுதியும் (அன்) ஒ ்டி நின்று இலக்கண வேறுபாடுகளை உணர்த்தல் கா ண்க. ஆனால் இச்சொல் இன்று பேச்சு வழக்கில் இல்லை. அதற்கு ஈடாக

அவன் உண்ணவில்லை என்ற ாக்கியம் வழங்குகின்றது. ஆண்பாலை ஒன்று உணர்த்த வினையை மற்றொன்று தெரிவிக்க எதிர்மறையை இன்னொன்று அறிவிக்க காலத்தைப் பேசுவோன் குறிப்புப் புலப படுத்த ஒரு வாக்கியத்தில் சொற்கள் தனித்தனியே அமைந்து கருதிய பொருளைத் தருகின்றன[14] முன்னையது தொகுநிலை (*Synthetic tage*) எனறும் பின்னையது பிரிநிலை (*Analytic tage*) ன்றும் குறிக்கப் பெறும். ஆங்கிலத்தில் இத்தகைய மாறுதல் மிகுதி சீனம் முதலிய தனிநிலை மொழிகளில் இது இயல்பாகவே அமைந்துள்ளது. சீனத்தில் இலக்கணம் எளிதாக உள்ள காரணமும் இதுவே. ஆங்கிலத்தை இக் காரணம்பற்றி இலக்கணம் இழந்தமொழி' என்று கடிதலும் உண்டு.[15]

**தனி நிலையி் சிறப்பு :**

இவ்வாறு அமைந்த தனிநிலை மொழிகளே மிகச் சிறந்தவை என்பது அறிஞர் ஜெஸ்பெர்ஸன் கொள்கை. அவர் அதற்குத் தக்க காரணங்கள் காட்டி நிறுவியுள்ளார். இவ் ாறு சொற்கள் அமையும் முறை பேசுவதற்கு எளியதாகவும் கேட்டு உணர்வதற்குத் தெளிவாகவும் உள்ளது. திணை பால் இடம் வேற்றுமை காலம் முதலியவற்றிற்கு ஏற்ப விகுதி

---

14. Th logical ideal of grammar would be to have n xpr 'on for each function and a ingle function for ch xpr ion (V ndry Language p. 154.)

15. Ancient language hav more cop'ou grammar than modern one . Th compar' on of the two extreme Gr ek and En li h ha often prompted the remark that Engl' h ha 'no grammar. (Sw et Th Practical Study of Langu ge p. 73.)

முதலியவை ஒட்டி நண்ட சொற்களைக் காக்கும் முயற்சியின்றி ஓரசை ஈரசைச் சொற்கள் சிலவற்றால் வாக்கியங்களைத் தெளிவாக அமைத்துக்கொள்ள முடிகின்றது. சொற்களில் திணை பால் காலம் முதலியவற்றை எவ்வாறு செறிக்கலாம் என்று முயல்வதைவிட வாக்கியத்தில் எவ்வெச் சொற்களை எவ்வெவ்விடத்தில் அமைத்திடல் சிறந்தது என்ற ஆராய்ச்சியும் பயிற்சியும் முற்போக்கானவை. இவ்வாறு விளக்கும் ஜெஸ்பெர்ஸன் மொழி ஒரு கருவி என்று கூறி ஆட்சிக்கு எளிதாய் ஆக்கம் பெரிதாய்ப் பயக்கும் கருவியே சிறந்த கருவி என்று குறித்து, சிறு சொற்கள் சிலவற்றைக்கொண்டு பற்பல அரிய கருத்துக்களையும் எளிய முறையில் தெளிவுற உணர்த்துதலே மொழியின் வெற்றி என விளக்குகின்றார். எதிர்காலத்தில் மொழியின் முற்போக்கு என்பது இவ்வாறு அமைந்து பயன்படுவதேயாகும் என்பது அவர் நம்பிக்கை.[16]

---

16. Language tend on the whole mor and mor to util' e word po 'tion for grammat'cal purpo e ; and thi ' r ally a progre iv tendency directly progre ive, becau e it i 'n it elf the ea ie t and nicest lingu' tic xped'ent , r nder'ng the ta k of peak'ng a 'er and involving les ffort on th part of th peak r; indirectly, becau e it fac'litate the great work of imp 'ficat'on in language by making the unwieldy form u ed of old to indicate concord et ., more and mor up rfluou . Th ub t'tution of word ord r for flection m an a victory of p'ritual over at i l ag ncie . J per n, Progre in Language, p. 1 0.'

What i to be taken into account i of cour e the 'nt - t of the peaking commun'ty and if we con i tent y con 'd r langu g a a et of human action with a definite nd 'n view, nam ly the communication of thought and feel'ng then it become ea y to find te t by wh'ch to

ரஷிய மொழியில் உட்பிணைப்பே மிகுதியாக இருந்தது இன்றும் எழுத்து மொழியில் உட்பிணைப்பே பெருகிக் கிடக்கின்றது. ஆனால் பேச்சு மொழியில் தனிநிலை தலையெடுத்து வருகின்றது. சொற்களைச் சிதைத்துப் பிணைக்கும் பழைய முறை மெல்ல மறைந்துவர சொற்களைத் தனித்தனியே அமைத்து வாக்கிய அமைப்பால் தெளிவுபடுத்தும் முறை செல்வாக்குப் பெற்று வருகின்றது பழைய கிரேக்க மொழியையும் இன்று வழங்கும் மொழியையும் ஒப்பிட்டாலும் இவ்வுண்மை புலனாகின்றது. இவற்றை யெல்லாம் ஆராய்ந்த மீடர்' என்னும் பேராசிரியர் பேசும் மக்களின் அறிவு வளர்ச்சிக்கும் பேசப்படும் மொழியின் வளர்ச்சிக்கும் தொடர்பு கண்டு மொழிகள் தனிநிலையாகும் காரணத்தை விளக்குகின்றார்.[17] மக்களின் அறிவு வளர்ச்சியில் தேக்கம் காணப்படுமாயின் அறிவு மேன்மேலும் வளராது நின்று தடைப்படுமாயின் அவர்கள் பேசும் சொற்கள் ஒன்றோடொன்று பிணைந்து சிதைந்து பிரிக்கப்படமுடியாதவாறு மாறும் என்கின்றார். இஃது உட்பிணைப்பு நிலைக்குக் காரணம். மக்களின் அறிவு வளர்ச்சியில் தடையின்றி முற்போக்குக் காணப்படுமாயின் அவர்பேசும் சொற்கள் பிரிக்கப்பட்டுத் தனித்

mea ure lingui tic value., for from that po'nt of view 't ' evide t that language rank h'ghe t which goe farthest in the art of accompli hing much witt litt e mea , or, in other word , which is able to expre s the greatest amount of m aning w'th the imple t mecha ism. (Jesper en. Languag It Nature, etc. p. 3?4.

17. W B. P'llsbury and C. L. Mead r Th P ycho-logy of L guag pp. 289, 290.

தானே பொருளும் அமைப்பும் பெற்றுத் தெளிவு பெறும் என்பது அவர் கருத்து. இது தனிநிலைக்குக் காரணம். அடுத்தது காட்டும் பளிங்குபோல் மக்கள் மனப்பண்பை மொழி காட்டும் என்கின்றார். மனத்தில் கருத்துக்கள் புதியனவாய்த் தோன்றத் தோன்ற, கருத்துக்களில் மாறுதல்கள் விரைந்து நிகழ நிகழ மொழியின் அமைப்பும் அவற்றிற்கு ஏற்ப மாறும் என்றும், கருத்துக்கள் தேக்கமுறின் மொழிவளர்ச்சியும் தடைப்படும் என்றும் எடுத்துரைக்கின்றார்.

## ௪. எழுத்தின் வரலாறு

**எழுத்தின் தோற்றம் :**

பேச்சு மொழி இல்லையானால் மனிதனுக்கும் விலங்கிற்கும் வேறுபாடு இல்லை எனலாம். எழுத்து மொழி இல்லையானால் காட்டுமிராண்டிக்கும் நாகரிக மனிதனுக்கும் வேறுபாடு இல்லை எனலாம். விலங்கினிடமிருந்து மனிதனைப் பிரித்து உயர்த்தியது பேச்சு மொழி. உண்பதும் உறங்குவதுமாகவே வாழ்ந்த பழங்காலக் காட்டு மனிதனை வளர்த்துப் பண்படுத்தி நாகரிகம் பெறச் செய்தது எழுத்து மொழி. பேச்சு மொழி, அதனை அறிந்து பழகும் ஒரு கூட்டத்தாருக்கு மட்டுமே நன்மை செய்ய வல்லது ; அவர்கள் அளவில் ஒற்றுமை வளர்க்க வல்லது. ஆனால் எழுத்து மொழி, ஒரு கூட்டத்தாருக்கும் மற்றொரு கூட்டத்தாருக்கும் பழகும் வாய்ப்பைத் தந்து ஒற்றுமை வளர்க்கச் செய்வது ; பழகாத பல இனத்தாருக்கும் நன்மை செய்து உலகத்தை ஒரு குடும்பமாக ஆக்கவல்லது. இவ்வளவு சிறப்புடைய எழுத்துமொழி தொடக்கத்தில் பல இடர்ப்பாடுகளிடையே வளர்ந்து வந்தது. எழுதும் முறையிலும் குறை பல இருந்தன. எழுதுதற்குரிய கருவிகளிலும் குறை பல இருந்தன. எழுதிய எழுத்துக்கள் பரவும் வகையிலும் குறை பல இருந்தன. ஆதலின் அக்காலத்தில் கற்றல் குறைவாகவும் கேட்டல் மிகுதியாகவும் இருந்தன. கற்றிலனாயினும் கேட்க" என்று அறிவுறுத்தவேண்டிய நிலையே அக்

கால நிலை. ஆனால், எழுத்துக்கள் திருத்தமும் ஒழுங்கும் பெற்ற பின்னர் காகிதமும் அச்சுப் பொறிகளும் பெருகிய பின்னர், நூல்கள் பரவுமாறு போக்குவரவுக்குரிய புகைவண்டி, கப்பல் வானவூர்தி முதலியவை பெருகிய பின்னர் எல்லாரும் கற்றல் வேண்டும் என்னும் உயரிய வாழ்வு வாய்த்துள்ளது ; எழுத்தறிவில்லாதவர் நாகரிகம் அற்றவராக இழிக்கப்படும் நிலை வந்துள்ளது. ஆதலின், இக்காலத்தில் கேட்டல் குறைவு ; கற்றலே மிகுதி எனலாம்.

பேசக் கற்ற மொழியை எழுதக் கற்குமாறு மனிதனைத் தூண்டியது எது? தன் எதிரிலோ அண்மையிலோ இல்லாத ஒருவனுக்குத் தன் கருத்தைத் தெரிவிக்க வேண்டும் என்னும் முயற்சியே ஆகும். இஃது இடத்தின் சேய்மையைக் கருதியது. நாளடைவில் காலத்தின் சேய்மையைக் கருதியும் இம் முயற்சி எழுந்தது. தன் காலத்தில் இல்லாத மக்களுக்கு பிற்காலத்தில் வாழப்போகும் மக்களுக்குத் தன் கருத்தைத் தெரிவிக்கவேண்டும் என்ற முயற்சியால் கல்லிலும் செம்பிலும் கருத்தைப் பொறித்து வைக்கத் தலைப்பட்டான் மனிதன்.

இவ்வாறு சேய்மையில் உள்ளவர்க்குத் தன் கருத்தை அறிவிக்க விரும்பிய மனிதன் முதலில் எழுதிய எழுத்துக்கள் எவை? அவற்றை அவன் எவ்வாறு கற்றான்? பேச்சு மொழியின் வரலாற்றை அறிவதற்குக் குழந்தை மொழியும் காட்டுமிராண்டிகள் மொழியும் ஓரளவு பயன்பட்டன அல்லவோ? அதுபோலவே எழுத்து மொழியின் வரலாற்றை அறிவதற்கும்

குழந்தையின் எழுத்துக்களும் காட்டு மிராண்டிகளின் எழுத்துக்களும் ஓரளவு உதவுகின்றன.

குழந்தையின் கையில் ஒரு சாக்கு (சுண்ணும்பு)த் துண்டைக் கொடுத்து 'காக்கையை எழுது' என்று வேண்டினுல் ஒன்று அல்லது இரண்டு கோணல் கீற்றுக்களைக் கிழித்து 'இதுதான் காக்கை'' என்னும். இவ்வாறே எந்தப் பொருளை எழுதச் சொன்னுலும் தன் மெல்லிய பூங்கையாற் கிறுக்கி இதுதான் அது என்னும். பார்ப்பவர்க்கு அந்தக் கிறுக்கலில் காக்கையும் இராது; குருவியும் இராது. ஆனுல் ஓவியப் புலவனுகிய அந்தக் குழந்தையின் கண்ணுக்கோ அங்கே காக்கையும் காணப்படும்; குருவியும் காணப்படும். அந்தக் கீற்றுக்களில் அந்தந்த உருவங்களையே குழந்தை காண்கின்றது. ஆதலால் குழந்தையின் மனத்திற்கு எழுத்துக்கள் என்பன பொருள்களின் உருவங்களே அன்றி வேறு குறிகள் அல்ல.

காட்டு வாழ்க்கையராக அமெரிக்காவிலும் ஆஸ்டிரேலியாவிலும் உள்ள பழங்குடி மக்களுக்கும் எழுத்து என்பது இத்தகையதுதான்.[2] ஆனுல் குழந்தையின் எழுத்திற்கும் இவர்கள் எழுதும் எழுத்திற்கும் வேற்றுமை உண்டு. குழந்தை கற்பனைக் களஞ்சியம். அது தன் மனம்போல் கற்பனையுலகில் பறந்து வாழும் ஆற்றல் பெற்றது. ஆதலால் ஒன்றை எழுதி மற்றென்றைக் காணும் ஆற்றல் அதற்கு இயற்கை.

---

2. Th fir t endeavour at th c)mmun'cation of thought to th ey would aturally tak the hape of k tches or dr win , such a thos executed by the Am rican Indian or th Au tra ian abor'g'nal . (Tucker. Int oduction to the Natural Hi tory of Langı age p. 44.)

விளையாட்டையே வாழ்வாக உடைய குழந்தைக்கு எழுத்தும் ஓர் விளையாட்டே. ஆனால், காட்டுமிராண்டி வாழ்க்கையின் கவலையைக் கண்டவன் கற்பனையும் விளையாட்டும் அவனுக்கு என்றோ ஒருநாள் ஒருவேளை வந்து போவன. அவன் கண்ணால் காண்பன காதால் கேட்பன இவற்றை நம்புகின்றான்; குழந்தைபோல் உலகம் பொய் என்று தள்ளி விளையாட்டை மெய் என்று கொள்ளல் அவனால் இயலாது. அதனால் அவனை நோக்கி 'காக்கையை எழுது' என்று கேட்டால், காக்கையின் உருவத்தைத் தனக்குத் தெரிந்த அளவில் எழுதிவிடுவான்.

அமெரிக்காவிலும் ஆஸ்டிரேலியாவிலும் உள்ள பழங்குடி மக்களின் எழுத்தெல்லாம் இவ்வாறு உருவங்களை வரையும் நிலையிலேயே இருக்கின்றன.

நாகரிக மொழிகளுள் சீன மொழி மட்டும் எழுத்துக்கள் தோன்றிய வரலாற்றை விளக்க வல்லதாய்ப் பழைய நிலையில் உள்ளது. சீன மொழியில் மலை என்னும் பொருளைக் குறிக்க மலையின் உருவமே எழுத்தாக எழுதப்படுகின்றது. மனிதனைக் குறிப்பதற்கும் இவ்வாறே ஓர் எழுத்து அமைந்துள்ளது.[3] நர் வேட்கையைக் குறிக்க நாக்குப்போல் வளைந்த கோடும் அதன்மேல் நீரைக் குறிப்பிட இரண்டு புள்ளியும் எழுதப்படுகின்றன. 'கேள்' என்ற வினையைக் குறிக்க ஒரு கதவின் அருகே அமைந்த காது எழுதப்படுகின்றது. நட்பைக் குறிக்க இரண்டு ை கள் இணைத்து எழுதப்படுகின்றன. கண்ணீரைக் குறிக்கக் கண்ணும் நீரும் சேர்த்து எழுதப்படுகின்

றன. ஞாயிறும் திங்களும் எழுதப்பட்ட உருவம் ஒளியைக் குறிக்கும். வாயும் பறவையும் எழுதப்பட்ட உருவம் பாட்டைக் குறிக்கும். இவ்வாறு ஏறக் குறைய நாற்பதினாயிரம் அடையாள உருவங்கள் எழுத்துக்களாக உள்ளன. சீன மொழியில் பேசப் படும் சொற்களின் தொகை மற்ற மொழிகளைவிடக் குறைவு ; ஆனால் எழுதப்படும் எழுத்துக்களின் தொகை மற்ற மொழிகளைவிட மிகுதி.[4] சீன எழுத் துக்களைப் படிக்கக் கற்றல் அவ்வளவு அருமை அன்று ; எழுதக் கற்றல் அருமையாம் ; எழுத்துக்களை நன்கு பயின்று எழுதுவதற்கு எட்டாண்டுகள் வேண்டுமாம்.[5]

முதலில் எழுத்துக்கள் இவ்வாறு பொருள்களின் உருவங்களோடு பிணைக்கப்பட்டிருந்தமை கண் டோம். இவ்வாறு கட்டுப்பட்டிருந்த எழுத்துக்கள் படிப்படியே விடுதலை பெற்றுத் தனித்தனி ஒலிகளைக் குறிக்கும் குறியீடுகளாயின. சீன மொழியின் எழுத் துக்கள் இவ்வாறு வளர்ந்து வந்துள்ளன. எகிப்து மொழியின் எழுத்து வளர்ச்சியும் இத்தகையதே. அம்மொழியில் லாபோ (labo) என்பது சிங்கத்தைக் குறிக்கும் சொல்லாகும். லாபோ என்பது அம்மொழி யில் ஓர் எழுத்து. அவ்வெழுத்து சிங்கம் போன்ற உருவமாக எழுதப்படுவது. இன்று அது சிங்கத்தைக் குறிக்காமல் (லாபோ) என்பதன் முதல் எழுத்தாகிய லகரத்தைக் குறிக்கின்றது. அவ்வாறே அகர உயி ரெழுத்து, கழுகின் உருவம் உடையது. கழுகின் உருவ

4. Wh'tney, Langua e nd the tudy of Language, pp. 4 5-459.

5. Sw t Th P actic Study of L ngu g p. 30.

மாக எழுதிய எழுத்து முதலில் கழுகை உணர்த்தும் எகிப்திய சொல்லாகிய அஹோம் (ahom) என்று கூறப்பட்டு, இன்று அச்சொல்லின் முதலொலியாகிய அகர உயிரைக் குறிக்கின்றது.[6] மற்ற மொழிகளின் எழுத்து வரலாறும் இவ்வாறுதான் கொள்ளவேண்டும். தமிழிலும் இவ்வாறே முதலில் பொருள்களின் உருவம் குறித்த எழுத்துக்கள் காலம் செல்லச் செல்ல ஒலிகளைக் குறிக்கும் குறியீடுகளாக மாறியிருக்க வேண்டும். முதலில் பாட்டாய் எழுந்த மொழி பிறகு நாளடைவில் பேச்சாய் மாறி வளர்ந்தது என்பதை விளக்கும் அறிஞர் ஜெஸ்பெர்ஸன் முதலில் ஓவியமாய் எழுந்த ஒரு கலையே பின்னர் எழுத்தாய் வளர்ந்தமைந்துள்ளது என்ற கருத்தைப் புலப்படுத்துகின்றார்.[7]

திரவிட மொழிகளின் எழுத்துக்கள்:

திராவிட மொழிகளுள் தமிழுக்கும் மலையாளத்துக்கும் தனித்தனியே எழுத்துக்கள் உள்ளன.

---

6. Whitney, Language and th Study of Language p. 454.

7. As i the art of writing to p 'mitiv painting o 's the art of peak'ng to prim'tiv ing'ng Je p r en Progre in Language p. 360).

A cert in poet, pra' ing paint'ng, called it the art by which we pa'nt word , nd peak to the eye thi he aid poetically rather than truly; for a p'cture expre e indeed our idea , but not our word . Nor would I ay that painting diff r much from wr't'ng xc pt th t it i book which ' read ven by th ignorant and i d'ain d at one glanc and devour d, a it w by th y . (R v. Be ch' A Gra mar of th Com o D' ct of th T il La guag ' p. 11.)

தெலுங்கு கன்னடம் ஆகிய இரு மொழிகளுக்கும உள்ள எழுத்துக்கள் பெரும்பான்மையும் ஒத்திருப் பதால் அவ்விரு மொழிகளுக்கும் ஒருவகை எழுத்து இருப்பதாகக் கொள்ளலாம். தெலுங்கு கன்னட எழுத்துக்களுள் உள்ள வேறுபாடு மிகச் சிலவே; முக்கியமான வேறுபாடு ஒன்றும் இல்லை.

துளு மொழி மலையாள எழுத்துக்களில் எழுதப் பட்டு வந்தது. இப்போது கிறித்தவப் பாதிரிகள் கன்னட எழுத்துக்களில் நூல்களை அச்சிடுகின்றார்கள். எவ்வாறாயினும் துளு மொழிக்கென ஓர் எழுத்து வகை இல்லை.

கூ மொழியை ஒரியா எழுத்தால் எழுதுகின்றார் கள். இலக்கிய வளமற்ற மற்ற மொழிகளை ஆங்கில (ரோமன்) எழுத்துக்களால் எழுதுகின்றார்கள்.

எனவே திராவிட மொழிகளுக்கே உரிய எழுத்து வகைகள் மூன்று எனலாம். ஹள கன்னடம் என்னும் பழைய கன்னடத்திற்கு இப்போதுள்ள தெலுங் கெழுத்து இல்லாமல் வேறு எழுத்துவகை இருந்து வந்திருக்கின்றது. தமிழ் மொழியில் உள்ள பழைய கல்வெட்டுக்களை ஆராயும்போது தமிழ் மொழியிலும் இவ்வாறே பண்டைக்காலத்தில் வேறுவகை எழுத்து இருந்துவந்தமை அறிகின்றோம்.

இப்போதுள்ள தமிழ் எழுத்துக்களைப் பற்றிய ஆராய்ச்சியிலும் பண்டைத் தமிழ் எழுத்துக்களைப் பற்றிய ஆராய்ச்சியிலும் கருத்து வேறுபாடுகள் பல உள்ளன. ஆனால் இன்றுள்ள மலையாள எழுத்துக் கள் தமிழ்க் கிரந்த எழுத்துக்களை ஒட்டி அமை ப்

பட்டவை என்பதில் அறிஞர்கள் ஒன்றுபட்ட கருத்து உடையவர்களே. தெலுங்கு கன்னட எழுத்துக்கள் தேவநாகரி எழுத்துக்களை ஒட்டி அமைந்தவை. தேவ நாகரி முறைக்கும் தெலுங்கு கன்னட எழுத்து முறைக்கும் வேறுபாடு மிகச் சிறிதே. தேவநாகரியில் இல்லாத குறில் எ குறில் ஒ றகரமெய் ளகரமெய் இவை தெலுங்கு கன்னட எழுத்துக்களில் உள்ளன. வேறுபாடு இவ்வளவே. தமிழ் எழுத்துக்களோ தேவ நாகரியை ஒட்டி அமைந்தவை என்றோ கிரந்த எழுத்துக்களை ஒட்டி அமைந்தவை என்றோ கூறமுடியாது.

பழங் கன்னடத்தில் ழகர எழுத்து இருந்தது புதுக் கன்னடத்தில் இல்லாமற் போயிற்று. அந்த எழுத்து, தமிழில் உள்ளது போலவே இன்றுவரை மலையாளத்திலும் உள்ளது. மலையாள எழுத்துக்களுக்கும் தெலுங்கு கன்னட எழுத்துக்களுக்கும் இந்த ழகரம் இருத்தல் ஒரு வேறுபாடாக இருந்து வருகிறது. மலையாள எழுத்து முறைக்கும் தேவநாகரி எழுத்து முறைக்கும் வேறுபாடு சிறிதே எனலாம். எனினும் எழுத்து வடிவங்கள் தமிழ் எழுத்து வடிவங்களை ஒட்டியவைகளேயாகும்.

### தமிழ் எழுத்துக்கள்: வேறுபாடுகள்

தமிழ் மொழியோ எழுத்து முறையில் ஏனைய மொழிகளினின்றும் பெரிதும் வேறுபட்டு விளங்குகின்றது.

(1) எகர ஒகரக் குறிலுக்கும் அவ்வந் நெடிலுக்கும் தமிழில் தனித்தனி எழுத்துக்கள் உள்ளன. தெலுங்கு கன்னடத்திலும் அவை உள்ளன. ஆனால்

தேவநாகரியில் அவை இல்லை. நெடிலுக்கு மட்டுமே எழுத்துக்கள் அம்மொழிகளில் உண்டு

(2) தேவநாகரியில் உயிரினத்தோடு ஒருசேர வைக்கப்பட்டுள்ள ரு லு என்பவை தமிழில் இல்லை.

(3) தமிழில் அநுஸ்வார எழுத்து இல்லை.

(4) தெலுங்கிலுள்ள அர்த்தாநுஸ்வாரம் தமிழில் இல்லை.

(5) தமிழில் ஹ (*aspirate*) இல்லை. வல்லினங்களோடு கூடி ஒலிக்கும் ஹகர ஒலியும் (*aspirated consonant* ) அவற்றிற்குரிய எழுத்துக்களும் தமிழில் இல்லை. அவற்றிற்கு ஈடாகத் தமிழில் ஆய்தம் என்னும் நுண்ணொலி உள்ளது.

(6) தமிழில் வல்லினமாகிய க ச ட த ப என்பவற்றிற்கு இனமான (கடல் அம், அச்சு அஞ்சு தட்டு தடு, பத்து பந்து, அப்பர் அம்பல்) மெல்லொலி அமைந்த சொற்கள் உள்ளன. ஆனால் அவற்றைக் குறிக்கும் எழுத்துக்கள் இல்லை. ஏனை மொழிகளில் உள்ளன. வல்லினத்தில் வல்லொலி மெல்லொலி இரண்டையும் குறிக்க ஓரெழுத்தே பயன்பட்டு வருகின்றது.

(7) தேவநாகரியில் இல்லாத ழ, ள ற ன என்னும் நான்கெழுத்துக்களும் தமிழுக்கு இன்றியமையாதனவாய் உள்ளன. அவை தமிழுக்குச் சிறப்பெழுத்துக்கள் எனப்படும். அதுபற்றியே அவை எழுத்துக்களின் இறுதியில் இடம்பெற்று விளங்குகின்றன என்பர்.

(8) தேவநாகரியிலும் மலையாளம் முதலியவற்றிலும் உள்ள ஶ ஸ ஷ (sibilants) என்பவை தமிழில் இல்லை.

**தமிழ் எழுத்து வரலாறு:**

தமிழில் எழுத்துக்களை நெடுங்கணக்கு என்ற பெயரால் குறித்தல் மரபு. அவற்றைக் கற்பிக்கும் ஆசிரியரைக் கணக்காயர் என்பது வழக்கு. அன்றியும் எழுதப்படுதலின் எழுத்து என்ற தனிப்பெயரும் உண்டு. எழுதப்பட்ட நூலுக்குச் சுவடி என்ற பெயரும் உள்ளது. இத் தூய தமிழ்ப் பெயர்கள் அனைத்தும் தமிழ் மொழியின் எழுத்து முறையின் தொன்மையும் தனிமையும் விளக்கும் சான்றுகளாகக் கொள்ளத் தக்கவை.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் இலக்கணம் எழுதப்புகுந்த பவணந்தியார் எழுத்துக்களைப் பன்னிரண்டு வகையான் ஆராய்ந்தார். அவற்றுள் உருவம் என்பதும் ஒன்று.[8] எழுத்துக்களின் உருவத்தை இலக்கண நூலாரும் போற்றும் அத்துணைத் தனிச்சிறப்பு தமிழ் எழுத்துக்களுக்கு இருந்தமை இதனால் தெளிவாகின்றது.

ஆயினும் இன்று வழங்கும் தமிழ் எழுத்துக்களே தொன்றுதொட்டு இருந்துவந்தன என்று கூறல் பொருந்தாது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே முற்றிலும் வேறுபட்ட எழுத்தே இருந்துவந்தது. அந்த

---

8. எண்பெயர் முறைபிறப்(பு) உருவம் மாத்திரை
முதலீ றிடைநிலை போலி என்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.
(நன்னூல் 57.)

எழுத்தை டடெழுத்து என்பர். அதுவே மிகப் பழைய தமிழ் எழுத்தாகும். பிறகு வடமொழியாரால் பரப்பப்பெற்ற கிரந்த எழுத்து படிப்படியே தமிழ் நாட்டில் இடம் பெற்றது. முதலில் சிறுபான்மையாராலேயே அது கையாளப்பட்டு வந்தது. சிறிது சிறிதாகச் செல்வாக்குப் பெற்றுப் பதினொன்காம் நூற்றாண்டில் அது வட்டெழுத்துக்களைப் பெரிதும் மாற்றி இப்போது வழங்கும் எழுத்துக்களை அமைத்து விட்டது.

தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்களையும் திருவாங்கூர் கொச்சி சமத்தானங்களில் உள்ள கல்வெட்டுக்களையும் ஆராயும்போது சில வட்டெழுத்துக்களிலும் சில கிரந்த எழுத்துக்களிலும் அமைந்திருக்கக் காண்கின்றோம். மதுரை திருநெல்வேலி வட்டாரங்களில் அசோக மன்னரின் பிராமி எழுத்துக்களும் கல்வெட்டுக்களில் இருப்பதைக் காண்கிறோம். எனவே, தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்கள் மூவகை எழுத்துக்களைத் தெரிவிக்கின்றன :

(1) மிகப் பழைய கல்வெட்டுக்களில் உள்ள வட்டெழுத்து தமிழரின் பழைய எழுத்து.

(2) வடமொழியாளர் பரப்பிய கிரந்த எழுத்து.

(3) பௌத்தர் புகுத்திய பிராமி எழுத்து.

வட்டெழுத்து வாழ்விழந்த காலம் இதுவென்றும் ஏனை எழுத்துக்கள் புகுந்த காலங்கள் இவை என்றும் வரையறுத்துக் கூறமுடியவில்லை. கல்வெட்டுக்களே ஒருவாறு துணைசெய்யும் கருவிகளாக உதவுகின்றன. தொண்டைமண்டலத்தில் பல்லவராட்சிக்

தொன்மைத் தமிழ்நூலில் கூறப்பட்ட எழுத்து வடிவங்கள் வட்டெழுத்துக்களைக் குறிப்பனவே ஆகும்.

இவ்வட்டெழுத்தினையே கோலெழுத்து எனவும் கண்ணெழுத்து எனவும் பழந்தமிழ் நூல்கள் குறிக்கும்.[10] சித்திரம்போல் எழுதப்பெற்றவை யாதல்பற்றியே இப்பெயர்கள் அமைந்தன. சீனம் முதலிய மொழிகளிலும் முதன் முதலில் எழுத்துக்கள் ஓவியமாக எழுதப்பெற்று வந்தமையும் இன்றும் ஓரளவு அவைபோல் இருத்தலும் ஈண்டுக் கருதத்தக்கன.

**வட்டெழுத்துக்கள் வேறு; வட இந்திய எழுத்துக்கள் வேறு.**

வட்டெழுத்துக்களின் தொன்மையும் சிறப்பும் இத்தன்மையவாக, அவையும் கிரந்த எழுத்துக்களின் திரிபு என்றும், பிராமி எழுத்துக்களினின்றும் பிறந்தவை என்றும் கூறும் கொள்கைகள் பொருந்தாதன ஆகும். ஆராய்ச்சியின் முடிபும் அவ்வாறே தெளிவிக்கின்றது. டாக்டர் கால்டுவெல் பிற எழுத்துக்களுக்கும் தமிழ் எழுத்துக்களுக்கும் உள்ள வேறுபாடுகளையும், அவற்றின் காரணங்களையும் தெளிவாக விளக்கிய போதிலும், இறுதியில் எல்லாம் கிரந்த எழுத்துக்களின் திரிபே என்று கூற முன்வந்ததும் பொருந்தாமலே நிற்கின்றது.[11]

---

அவர் பாணினி என்னும் வட மொழியிலக்கண ஆசிரியரைக் குறிப்பிடவில்லை. பாணினியின் காலம் கி. மு. 350 என்று ஆராய்ச்சியாளர் கூறுதலால், தொல்காப்பியனார் அதற்கு முற்பட்டவர் எனலாம்.

10. சிலப்பதிகாரம், 5—112; 26—136.

11. There can be little doubt of the derivation of the Tamil character in ordinary use from the Grantha; for some characters are identical with Grantha letters which

வட்டெழுத்துக்கள் வடமொழியிலிருந்து கடன் வாங்கினவை என்ற கொள்கையும் பிராமியிலிருந்து அமைக்கப்பட்டவை என்ற கருத்தும் பொருந்தாமைக்குக் காரணங்கள் :—

(1) திராவிடர்கள் மிகப் பழைய குடிமக்கள்; தங்களுக்கே உரிய தொன்மையான நாகரிகம் வாய்ந்தவர்கள். கி. மு. பத்தாம் நூற்றாண்டுக்கு முன்னரும் எகிப்தியர் முதலான நாகரிக நாட்டினரோடு வாணிகம் முதலான தொடர்பு கொண்டிருந்தவர்கள். பிறமொழிகளில் புகுந்த தோகை, அரிசி முதலிய தமிழ்ச் சொற்கள் இதற்குச் சான்றுகளாம். எனவே, பிற்காலத்தே இந்நாட்டில் அமைந்த தேவநாகரி பிராமி என்பவற்றைப் பார்த்து எழுதக் கற்றனர் என்பது பொருந்தாது.

(2) வடமொழியின் இலக்கண நூல்கள், தமிழ் இலக்கண நூல்கள் சிலவற்றை எழுதக் காரணமாக இருந்திருப்பினும், இலக்கண நூல்களுக்கு மிக முற்பட்ட எழுத்து முறைக்கு அவை காரணமாகா. தவிர, எழுத்து, சுவடி, நெடுங்கணக்கு என்ற தனித் தமிழ்ப் பெயர்கள் தமிழ் எழுத்து முறை இருந்த உண்மையைத் தெரிவிக்கின்றன.

---

are still in use, and others with more ancient forms of the Grantha; but the other part of the hypothesis, viz., the existence of a Pre-Sanskrit Tamil character, out of which the Grantha itself was developed, is more doubtful. (Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 125.)

The materials of that alphabet appear to be wholly, or in the main, Sanskrit; but the use which is made of those materials is Tamilian. (Ibid. p. 30).

(3) வடமொழியைப் போல் தமிழிலும் எ, ஒ என்பவற்றிற்குத் தனி எழுத்துக்கள் இல்லையாதலின், வடமொழியை ஒட்டியே தமிழ் எழுத்துக்கள் ஏற்பட்டன என்பர் கால்டுவெல். இதுவும் பொருந்தாக் கூற்றே. மெய்யெழுத்துக்களுக்கு இருப்பதுபோல் எகர ஒகரக் குற்றெழுத்துக்களுக்கும் புள்ளியிருந்தது. இவற்றின் வரி வடிவங்களைப்பற்றித் தொல்காப்பியர் கூறுவதால், அவர் காலத்திற்கு மிக முன்னரே எ, ஒ இவற்றிற்குத் தனி எழுத்து வடிவம் இருந்தமை புலனாகும்.[12] குறிலில் புள்ளியை நீக்கி, நெட்டெழுத்துக்களில் ஏ, ஓ என்ற உருவ வேறுபாடு செய்தவர் வீரமாமுனிவர். அதனாலேயே அவர்க்குமுன் ஒரு வேறுபாடும் இல்லை என்று கருதுதல் தவறு.

(4) க (7) ப (2) ர (7) ல (υ)

என்னும் வட்டெழுத்துக்கள் அசோகர் காலத்துப் பிராமி எழுத்துக்களைப் போலுள்ளன என்பர். இத்தகைய ஒற்றுமை நான்கு அல்லது ஐந்து எழுத்துக்களில் இருத்தலைக் கொண்டு, எல்லா எழுத்துக்களும் அப்படியே என்று துணிதல் கூடாது.

(5) வடமொழியிலிருந்தோ, பிராமியிலிருந்தோ தமிழ் எழுத்துக்கள் அமைந்திருந்தால், தெலுங்கு

12. 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' (எழுத்ததிகாரம், கரு) என்றும், 'எகர ஒகரத்து இயற்கையும் அற்றே' (எழுத்ததிகாரம், கசு) என்றும் தொல்காப்பியனார் கூறியுள்ளார். இவற்றால் குறிலெழுத்துக்களாய எகர ஒகரங்களின் வரிவடிவ வேறுபாடு தெளிவாக்கியுள்ளார். இக்காலத்து எ ஏ என்றும் ஒ ஓ என்றும் எழுதப்படும் குறில் நெடில்கள் அக்காலத்தில் எ் எ என்றும் ஒ் ஒ என்றும் எழுதப்பட்டன. குறில்களாகிய எகர ஒகரம் புள்ளியோடு நிற்கும் என்பதே அவர் விளக்கம்.

மலையாளம் முதலியவற்றில் உள்ளவாறுபோல், தமிழிலும் எல்லா எழுத்துக்களும் இருக்கவேண்டும். ஆனால் தமிழில் எழுத்துக்கள் உயிரும் மெய்யுமாக முப்பதே. அவற்றிலோ ஐம்பத்தாறு. எனவே, தொடக்கத்திலேயே பெரிய வேறுபாடு இருந்ததெனக் கொள்ளல் வேண்டும்.

(6) மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியிடும் வழக்கம், பிராமியிலும் அதைச் சார்ந்தவற்றிலும் இல்லை. ஆனால் தமிழிலும் மேற்கு ஆசியாவில் வழங்கும் செமிட்டிக் மொழியிலும் இம்முறை உண்டு.

(7) அசோக மன்னர் பௌத்த சமயத் துறவிகளைத் தமிழகத்திற்கு அனுப்பிப் பிராமியைப் பரப்பிய காலம் கி. மு. 250. அதற்கு முன்னமே தமிழில் இலக்கணமும், இலக்கியமும், எழுத்தும் இருந்தமை மறுக்க முடியாத உண்மையாகும். தொல்காப்பியர் கூறும் எழுத்து வடிவங்கள் பிராமி எழுத்துக்களைப் பற்றியன அல்ல.

(8) வடமொழிப் பகுதியைக் கிரந்த எழுத்துக்களாலும் தமிழ்ப் பகுதியை வட்டெழுத்துக்களாலும் விரவி எழுதிய முறையைப் பல கல்வெட்டுக்களில் காண்கின்றோம். இதனால் கிரந்த எழுத்துக்கள் தமிழ் நாட்டில் புகுந்த காரணம் வடமொழிப் பகுதிகளை எழுதவே என்றும், நாளடைவில் வட்டெழுத்து வழக்கொழிய, கிரந்தம் இடம் பெற்றது என்றும் அறிகிறோம்.[13] கிரந்தமும் பிராமியிலிருந்து பிறந்தது என்று

13. கி. பி. 770-ல் ஏற்பட்ட ஆனைமலை சாசனத்தில் வட்டெழுத்தும் கிரந்த எழுத்தும் கலந்துவிட்டமை காண்கின்றோம். ஆதலால், அக்காலத்திலிருந்தே வட்டெழுத்துக்கள் படிப்படியே மாறி வரத் தொடங்கின எனலாம்.

அறிஞர்கள் கருதுவதால், பிராமி தமிழ் நாட்டில் வந்த காரணமும் அதுவே ஆகும். ஆகவே, தமிழை எழுத வட்டெழுத்தே முதலில் பயன்பட்டு வந்தது.

(9) உயிர் ஏறிய மெய் என்பதை அறிவிக்கும் விலங்கு, கோடு, கால் முதலியன வட்டெழுத்துக்களில் ஒழுங்காக உள்ளன. ஆனால் இன்றுள்ள தமிழில் அந்த ஒழுங்கு இல்லை. இது, கிரந்த எழுத்துக்கள் இடைக்காலத்தில் கலந்து செய்த மாறுதல்களின் பயனாகும். (கா, ணா, ரு; கு, சு, நு; கை, லை முதலியவற்றில் ஒழுங்கு இல்லை.)

ஆகவே, கிரந்தமும் பிராமியும் அல்லாமல் தமிழுக்குத் தனி எழுத்துக்கள் இருந்துவந்தமை அறிகின்றோம். அந்த எழுத்துக்கள், கி. மு. பத்தாம் நூற்றாண்டுக்கு முன்னரே இருந்தவை என்பது அறிஞர் கருத்து.

**தொல்காப்பியத்தில் விளக்கப்படும் எழுத்து வடிவம் சில :**

1. மெய்யெழுத்துக்கள் புள்ளி பெறல்.[14]
2. எகர ஒகரக் குறில் புள்ளி பெறல்.[15]
3. குற்றியலுகரமும் குற்றியலிகரமும் புள்ளி பெறல்.[16]

14. தொல். எழுத்து. கரு.
15. ஷை கசு.
16. தொல். பொருள். செய்யுளியல் நஉ0-ம் சூத்திரமாகிய "ஒற்றெழுத் தியற்றே குற்றிய லுகரம்" என்பதற்குப் பேராசிரியர் பின்வருமாறு எழுதும் உரை இதற்குச் சான்றாகும் :—

"'மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்' (தொல். எழுத்து. க0ச) எனக் கூறி,

"'குற்றிய லுகரமும் அற்றென மொழிப' (ஷை. க0ரு) எனக் குற்றுகரத்திற்குப் புள்ளி பெறுதலும் கூறினன். அதுபோலக் குற்றிகரமும் புள்ளிபெற்று நிற்றல் உடைத்தெனவும் . . . . ஆயிற்று. . . . . இவற்றையெல்லாம் 'ஒற்றெழுத்தியற்றே' என்பதனாற் புள்ளியிட்டெழுதுக."

4. ம—ப என்ற வடிவாக, பகரத்தினுள் புள்ளி யிட்டு எழுதப்படல்[17].

**பிற்கால மாறுதல்கள் :**

1. எகர ஒகரக் குறில் புள்ளி பெருமை.
2. ஏ ஓ என்பவை காலும் சுழியும் பெறல்.[18]
3. குற்றியலுகரமும் குற்றியலிகரமும் புள்ளி பெருமல் மற்ற உகர இகரங்களைப்போலவே எழுதப்படல்.
4. ப என எழுதாமல், புள்ளியை வளைத்து ம என எழுதல்.
5. கா ஙா முதலியவற்றில் கால் சேர்க்கப்படல். முற்காலத்தில் இவை க. ங. என எழுதப்பட்டன.[19]

தமிழில் உயிர்மெய் யெழுத்துக்கள் எப்படி ஒலிக்கும் என்பதை இலக்கண ஆசிரியர் பவணந்தி

---

17. உட்பெறு புள்ளி உருவா குமமே (தொல். எழுத்து. கச.)

18. இவை வீரமாமுனிவர் (Rev. Beschi) செய்த மாறுதல்கள். "I also state I have devised another and easier way of distinguishing e and o long from e and o short." (Rev. Beschi, A Grammar of the Common Dialect of the Tamil Language, p. 7).

19. "உருவு திரிந்து உயிர்த்தலாவது மேலும் கீழும் விலங்கு பெற்றும் கோடு பெற்றும் புள்ளி பெற்றும் புள்ளியும் கோடும் உடன் பெற்றும் உயிர்த்தலாம். கி கீ முதலியன மேல் விலங்கு பெற்றன. கு கூ முதலியன கீழ் விலங்கு பெற்றன. கெ கே முதலியன கோடு பெற்றன. கா ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர். மகரம் உட்பெறு புள்ளியை வளைத்தெழுதினர். கொ கோ நொ நோ முதலியன புள்ளியும் கோடும் உடன் பெற்றன" என நச்சினார்க்கினியர் எழுதிய உரை காண்க.

—தொல். எழுத்து. கஎ.

யார் விளக்கிச் சென்றுள்ளார். மெய் முன்னும் உயிர் பின்னுமாக ஒலிக்கும் என்பதே அவர் செய்த விளக்கம்.[20] இஃது ஒலி வடிவிற்கு ஆகும். ஆனால் வரி வடிவில் பல எழுத்துக்கள் அவ்வாறு (மெய் முன்னும் உயிர் பின்னுமாக) அமையவில்லை. 'கி' என்பதை எழுதும்போது 'க' என்று மெய் முன்னெழுதி இகர உயிரின் வடிவைப் பின்னெழுதுகிறோம். 'கெ' என்பதை எழுதும்போது, 'ெ' என்பதை முன் எழுதுவது தவறன்றோ? 'தை' என்று எழுதின் தகர மெய்யும் ஐகார உயிரும் கூடிய உயிர்மெய் என்பது தெளிவாகும். 'ஐ' என்ற ஒலியை—அதன் குறியை—'தை' என்று மெய்க்குமுன் எழுதுவது பொருந்துமாறு எங்ஙனம்? கொ, கோ, கௌ முதலான எழுத்துக்களில் மெய்யை இடையில் வைத்து, உயிரின் வடிவை முன்னும் பின்னுமாகப் பிரித்து எழுதல் பெருங்குறையாகும்.

மேற்சொன்ன குறை தமிழிலும் மலையாளத்திலுமே உண்டு. தெலுங்கிலும் கன்னடத்திலும் இல்லை. தெலுங்கிலும் கன்னடத்திலும் மெய்யின் வடிவு எழுதின பிறகே, உயிரின் வடிவை எழுதல் இன்றும் உள்ள வழக்கம்.

---

20. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை உயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடும் ஒற்றுமுன் னாய்வரும் உயிர்மெய்.
—நன்னூல், எழுத்து. 89.

## ரு. உயிரெழுத்துக்கள்.

**குறியீடுகள் :**

தமிழிலக்கண நூல்களில் உயிரெழுத்து என்றும் மெய்யெழுத்து என்றும் குறியீடுகள் வழங்குகின்றன. உயிர், மெய் என்னும் பெயர்கள் சிறந்த காரணம் பற்றி அமைந்துள்ளன. தனித்தியங்கும் ஆற்றலை உயிர் என்ற பெயரும், உயிருடன் கூடியே இயங்கும் இயல்பை மெய் (உடம்பு) என்ற பெயரும் தெரிவிக்கின்றன. உடலும் உயிரும்போல இரண்டும் கூடி இயங்குதலின் உயிர்மெய் என்ற பெயரும் பொருத்தமாக அமைந்துள்ளது. தனித்ததோர் தன்மையின்றிச் சார்ந்து வருதலே தமக்கு இயல்பாக உடைய எழுத்துக்கள் மூன்றனைச் சார்பெழுத்து என்பர் தொல்காப்பியனார்.[1] அவை குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பன.

**பிறப்பும் பாகுபாடும் :**

ஒலிநூல் (*Phonetics*) ஆராய்ச்சியின்படி, உள்ளிருந்தெழும் மூச்சு மிடற்றின் முயற்சியால் வாயின் வழியாகத் தடையின்றி வெளிப்படும்போது உயிரெழுத்துக்கள் பிறப்பனவாம். மிடற்றின் முயற்சியால் பிறக்கும் ஒலிகள் அ, வ் முதலியன (*voiced sounds*). மிடற்றின் முயற்சியின்றிப் பிறக்கும் ஒலி

1. அவைதாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன.

—தொல். எழுத்து. உ.

கள் ப், த் முதலியன (*voiceless or breathed sounds*).[2] அங்ஙனம் வெளிவரும் மூச்சு வாயில் தடைப்படின் மெய்யெழுத்துக்கள் பிறக்கும். சிறு தடையுமின்றி வெளிப்படின் உயிரெழுத்துக்களாம்.[3] இந்த உயிரெழுத்துக்கள் பிறக்கும் முயற்சிவகையால் பல்வேறு வகைப்படும். தொல்காப்பியனார் பிறப்பியலில் கூறுமாறு பிறப்பிடமும் முயற்சியும் பலவாகும்.

உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல.[4]

இவ்வகை உறுப்புக்களின் முயற்சியாலேயே ஒலி பல்வேறு வகையாகப் பகுத்தறியக் கிடக்கின்றது.

---

2. When the vocal chords are wide apart (i. e. when the glottis is open) and air passes between them, the sound produced is called *breath*; when they are drawn together and air is forced between them so that they vibrate, the sound produced is called *voice*... Every speech sound contains either breath or voice. Those which contain breath are called breathed or voiceless sounds; and those which contain voice are called voiced sounds. (D. Jones, An Outline of English Phonetics, pp. 9, 10).

3. A vowel (in normal speech) is defined as a voiced sound in which the air has a free passage through the mouth, and does not produce any audible friction. All other sounds (in normal speech) are called consonants (ibid. 11).

4. தொல். எழுத்து. அ௩.

திராவிட முதல் மொழியில் உயிரெழுத்துக்கள் மூன்றே இருந்தன என்பர். அம்மூன்று அ, இ, உ என்பன. இம்மூன்று உயிரொலிகளும் பிறக்கும் நாநிலைகளை ஆராய்ந்தால் ஓர் உண்மை புலனாகும். அஃதாவது நா அடியில் படிந்திருக்கும் நிலையில் அகரம் பிறத்தலும், முன் அண்ணம் நோக்கி மேலெழுங்கால் இகரம் பிறத்தலும், உண்ணாக்கை நோக்கி எழுங்கால் உகரம் பிறத்தலும் உணரப்படும். இப் பிறப்பிடங்களை ஒரு முக்கோணத்தின் மூலைகளுக்கு ஒப்பிடலாம்.




இதனை உயிர்முக்கோணம் (*vowel-triangle*) என்றும், இம்மூன்று ஒலிகளே உயிரெழுத்துக்களுக்கு அடிப்படை என்றும் கூறுவர். சிவஞான முனிவரும் உயிரெழுத்துக்களின் முறைவைப்பை விளக்கும்போது இவ்வுண்மையைப் புலப்படுத்துகின்றார்.[5]

உயிரெழுத்துக்களின் பிறப்பைக் கூறும்போது தொல்காப்பியனார் இகரத்தோடு எகரத்தையும், உக

---

5. இனி, உயிர்களுள், அ இ உ என்பன, முறையே அங்காந்து கூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு அண்பல்லடி நாவிளிம்புறக் கூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு இதழ் குவித்துக் கூறு முயற்சியானும் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.

—(நன்னூல், எழுத்து. 73 விருத்தியுரை.)

ரத்தோடு ஒகரத்தையும் சேர்த்துள்ளார்.[6] பிறப்பிடமும் முயற்சியும் பற்றி இகரத்தோடு எகரம் தொடர்புடையது; உகரத்தோடு ஒகரம் தொடர்புடையது. இத்தொடர்பு பற்றியே யாப்பிலக்கணக்காரர் இவற்றை இனவெழுத்தாகக் கொண்டு மோனைத் தொடை கொள்வர்.[7]

இகரத்திற்கும் எகரத்திற்கும் உள்ள உறவைப் பின்வரும் சொற்கள் விளக்கும் :—

| | | | |
|---|---|---|---|
| எழுத்து மொழியில் | — இலை ; | பேச்சு மொழியில் | — எலை |
| ,, | — இணை ; | ,, | — எணை |
| ,, | — இழை ; | ,, | — எழை |
| கன்னடத்தில் | — இலி ; | தமிழில் | — எலி |
| தமிழில் | — சிதல் ; | கன்னடத்தில் | — செதலு |

உகரத்திற்கும் ஒகரத்திற்கும் உள்ள உறவை விளக்கும் சொற்கள் :—

| | | | |
|---|---|---|---|
| எழுத்து மொழியில் | — உலகம் ; | பேச்சு மொழியில் | — ஒலகம் |
| ,, | — உரல் ; | ,, | — ஒரல் |
| ,, | — உடம்பு ; | ,, | — ஒடம்பு |
| ,, | — உயரம் ; | ,, | — ஒயரம் |

6. இ ஈ எ ஏ ஐ என இசைக்கும்
அப்பா லைந்தும் அவற்றோ ரன்ன
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புற லுடைய.

—(தொல். எழுத்து. அகூ.)

உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும்.

—(ஷை அஎ.)

7. இகரம ஈகாரம எகரம ஏகாரம இவை தம்முள் இனமாம்.
உகர ஊகார ஒகர ஓகாரங்கள் தம்மு ளினமாம்.

| | | | |
|---|---|---|---|
| எழுத்து மொழியில் — உயர்த்தி ; | ,, | | — ஒசத்தி |
| ,, — உவகை ; | சில இடத்தில் | | — ஓகை |
| தமிழில் — உடல் ; | தெலுங்கில் | | — ஒள்ளு |

அகர இகரங்களுக்கு இடையே எகரம் பிறத்தலும், அகர உகரங்களுக்கு இடையே ஒகரம் பிறத்தலும் ஒலிநூல் (*Phonetics*) கூறும். இவ்வுண்மை இலக்கண நூலார்க்கும் உடன்பாடே[8]. அவர் இவற்றைக் கலப்பொலிகள் என்பர். அந்த முக்கோணத்தில், எகர ஒகரங்கள் பிறக்குமிடங்களை முறையே அகர இகரங்களுக்கும், அகர உகரங்களுக்கும் இடையே சுட்டுவர்.

இக்கோணத்தில் உள்ளவாறு, நாவின் முன்னேக்கிய எழுச்சியால் இ, எ இரண்டும் பிறத்தலால் அவற்றை முன்னண்ண உயிர் (*front vowels*) என வகுப்பர். அவ்வாறே உ, ஒ இரண்டும் நாவின் பின்னேக்கிய எழுச்சியால் பிறத்தல்பற்றி அவற்றைப் பின்னண்ண உயிர் (*back vowels*) என வகுப்பர்.

உகர ஒகரங்களை ஒலிக்கும்போது இதழ் குவிதல் பற்றி அவற்றை இதழ்குவியுயிர் (*rounded vowels*) என்றும், ஏனையவற்றை இதழ்குவியாவுயிர் (*unrounded vowels*) என்றும் வகுக்கலாம்.

---

8. எகரமாவது அகரக்கூறும் இகரக்கூறும் தம்முளொத்திசைத்து நரமடங்கல் போல் நிற்பதொன்ருகலானும், ஒகரமாவது அகரக்கூறும் உகரக்கூறும் தம்முளொத் திசைத்து அவ்வாறு நிற்ப தொன்ருகலானும்

இந்த ஐந்து உயிரொலியும் குறுகியொலிக்கும் போது குறில் எனவும், நீண்டு ஒலிக்கும்போது நெடில் எனவும் பெயர்பெறும். குற்றெழுத்தை ஒலித்தல் அருமையாகவும் நெட்டெழுத்தை ஒலித்தல் எளிமை யாகவும் இருத்தல்பற்றி, அவற்றை அரியன என்றும் எளியன என்றும் (*tense vowels, lax vowels*) குறிப்பர்.

இப் பாகுபாடுகளுள், குறில், நெடில் என்பன அளவு (மாத்திரை) பற்றிப் பகுக்கப்பட்டவை. ஏனையவை அவற்றின் பிறப்பிடம் பற்றியும் முயற்சி பற்றியும் பகுக்கப்பட்டவை.

இவ்வாறு முதல் மொழியில் மூன்றாக இருந்த உயிர்கள் ஐந்தாய் வளர்ந்து, பிறகு குறுகியும் நீண்டும் ஒலித்தல்பற்றிப் பத்தாய்ப் பெருகின என்று கண்டோம்.[9] தமிழில் இவையே அல்லாமல், ஐ, ஔ என இரண்டு உயிரெழுத்துக்கள் உள்ளன. அவற்றை இலக்கண நூலார் சந்தியக்கரம் (*diphthong*) என்பர். அவைபற்றிப் பின்னர் ஆராய்வோம்.

ஒலிநூலார் கொள்கைப்படி யகரமும், வகரமும் அரையுயிர் (*semi-vowels*) எனப்படும்; உயிரோ டொத்தன என்பது கருத்து. உயிரொலிகள் பிறக்

---

9. ஆங்கிலத்தில் உயிரெழுத்துக்கள் *a, e, i, o, u* என்னும் ஐந்தே உள்ளன. ஆயின் பதினைந்து உயிரொலிகள் இன்றியமை யாதனவாக உள்ளன. இவ்வாறே எல்லா மொழியிலும் கேட்கும் உயிரொலிகள் பலவாக இருந்தும், எழுதும் உயிர் வடிவங்கள் சிலவாக உள்ளன. நுணுகி ஆராய்வார்க்கு ஐம்பதுக்கு மேற்பட்ட உயிரொலிகள் புலனாகும் என்று ஒலிநூலறிஞர் ஜோன்ஸ் கருது கின்றார். (**Daniel Jones, An Outline of English Phonetics, p. 15.**)

கும்போது மூச்சு வாயின் வழியாகத் தடையின்றி வெளிவரும் என அறிந்தோம். அப்போது மிகச் சிறு தடை நிகழுமேல் யகரமோ வகரமோ பிறக்கும். இவை பிறக்கும்போது க ங முதலிய மெய்யெழுத்துப் பிறப்பில் உள்ள அவ்வளவு பெருந்தடை யில்லாமை காணலாம். ஆதலால், இவற்றை உயிரெழுத்துக் களுக்கும் மெய்யெழுத்துக்களுக்கும் இடைப்பட்ட எழுத்துக்கள் என்பது பொருந்தும். இடையினம் என்று முன்னோர் வகுத்த காரணம் இதுவாகவே இருத்தல் வேண்டும். வல்லினம் மெல்லினம் என் றற்கு இடைப்பட்டவை என்று கூறுவது பொருந் தமையும் ஈண்டுக் கருதலாம்.

யாப்பிலக்கணக்காரர் ய ர ல ழ என்னும் நான் கெழுத்துக்களும் ஆசெழுத்துக்கள் எனக் குறித்து, அவை எதுகைக்குரிய எழுத்துக்களுக்கு இடையே வரினும் எதுகையாகத் தடையில்லை என விதித்ததும் ஈண்டுக் கருதத்தக்கதே.[10]

இவற்றில் ய, வ என்னும் இரண்டையுமே ஒலி நூலார் உயிரோடொப்புமை கருதி அரையுயிர் (*semi-vowels*) எனக் கொள்வர். நாவின் முன்னேக் கிய எழுச்சியில் தடை சிறிது ஏற்படின், யகரம் பிறத் தலால், இகரத்திற்கும் யகரத்திற்கும் உறவு உண்டு. இன்னும் தமிழ் மக்கள் உயிரெழுத்தாகிய இகரத்தை உயிர்மெய்யாகிய 'யி' போல் தவருக ஒலித்தலும்,

10. இனி ஆசிடை யெதுகைக்குச் சொல்லுமாறு :
"யரலழ என்னும் ஈரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பின்
ஆசிடை யெதுகை என் றறிந்தனர் கொளலே."
—யாப்பருங்கல விருத்தி. 37.

சிலர் அவ்வாறே தவருக எழுதுதலும் காண்க. நாவின் பின்னேக்கிய எழுச்சியில் தடை சிறிது ஏற்படின் வகரம் பிறத்தலால் உகரத்திற்கும் வகரத்திற்கும் உறவு உண்டு. உயிரொலிகள் சேர்ந்தொலிக்கும் போது பிறக்கும் உடம்படு மெய்கள் என முன்னேர் கொண்ட எழுத்துக்கள் யகரம் வகரம் ஆகிய இரண்டு இடையின எழுத்துக்களே. இவை உடம்படு மெய்யாக வரும் முறையும் இவற்றின் இயல்பை விளக்குகின்றது.

## மூக்கின உயிர் (*Nasalisation or Euphonic Nunnation*)

இதுவரை ஆராய்ந்த உயிரொலிகள் எல்லாம் வாயின் வழியாக மூச்சு வெளிப்படுதலால் பிறந்தவையே. இவை பிறக்கும்போது உண்ணக்கு மூக்கு வழியைத் தடுத்து நிற்கும். ஆதலால் மூச்சு மூக்கின் வழியாகச் செல்வதில்லை. சில சமயங்களில் உண்ணக்கு அவ்வாறு தடுக்காமல் இயற்கை நிலையில் நிற்கும். அப்போது மூச்சின் ஒரு பகுதி வாய் வழியாகவும், மற்ருெரு பகுதி மூக்கு வழியாகவும் செல்லும். அப்போது பிறக்கும் உயிரொலிகளை மூக்கின உயிர் (*Nasalised vowels*) என்பர்.

| | |
|---|---|
| தமிழிலக்கியத்தில் | 'தொடு' |
| கன்னடத்தில் | 'தோடு' |
| இக்காலத் தமிழில் | 'தோண்டு' |
| பூடு > | பூண்டு |
| மோதிரம் > | மோந்திரம் |

திராவிட முதல் மொழியில் மர என்பதே சொல் என்றும், இறுதியுயிர் மூக்கினமாக மாறித் தமிழில் மரன் என்றும் மரம் என்றும் ஆயிற்று என்றும், தெலுங்கில்

மரானு > ம்ரானு > மானு என ஆயிற்று என்றும் கூற லாம்.

| கன்னடம் | தமிழ் |
| --- | --- |
| இரடு | இரண்டு |
| இருவை | எறும்பு |
| கறு | கன்று |
| மூனு | மூன்று |

**உயிரின் சிறப்பியல்புகள், மாறுதல்கள் :**

அ, ஆ :

அ—குறில் ஆ—நெடில்

இரண்டு குறில் சேர்ந்ததே நெடில் என்பர் கால்டுவெல்.[11] ஆனால் அது தொல்காப்பியனார் முதலானோர் கருத்துக்கும் இக்காலத்து மொழிநூலறிஞர் கருத்துக்கும் மாறாக உள்ளது. நெடிலை ஒலிக்கும் முயற்சி வேறு; குறிலுக்குரிய முயற்சி வேறு. அவற்றின் ஒலிப்பிறப்பே வேறுபாட்டை நன்கு தெரிவிக்கின்றது. அ-அ எனக் குறிலை இருமடங்கு நேரம் ஒலிப்பதால் நெடில் பிறக்காததால் கால்டுவெல் கருத்துப் பொருந்தவில்லை.

உயிரெழுத்துக்களில் அகரம் அடிக்கடி மாறுகின்றது; காரணம் அதனை ஒலித்தல் அருமையாக இருத்தலேயாகும். பல இடங்களில் அஃது எகரமாக மாறுகின்றது.

---

11. Caldwell, A Comparative Grammar of Dravidian Languages, p. 133.

(வடமொழி) ஜப > செபம் (தமிழில்)
சா (பகுதி) > செத்தால் (சொல்லாகும்போது)

சகர மெய் அகரத்தோடுகூடி மொழிமுதல் ஆகாது என்பர் தொல்காப்பியனார். அஃது அவர் காலத்துத் தமிழியல்பு. மற்ற மொழிகளில் மொழிமுதலில் அகரம் மாறுவதில்லை. மொழியிறுதியில் நிற்கும் அகரம் மாறுகின்றது.

| தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|
| கடை | கட | கட | கடெ |
| கரை | கர | கர | கரெ |
| அவை | அவி | அவ | அவு |
| சில | | | கெலவு |
| தலை | தல | தல | தலெ |

நெடில் ஆ, ஓ என மாறுகின்றது. அது பெரும்பாலும் மகரத்தினை அடுத்து வரும்பொழுதே ஆகும். மகரம் இதழ் பற்றிப் பிறப்பதாகலால், ஆகாரம் இதழ் குவிந்து பிறக்கும் ஓகாரமாக மாறுகின்றது. இது போன்ற மாறுதல்களை இதழ்பற்றிய மாறுதல் (*Labialisation*) என்பர். மலையாளத்தில் குறில் அகரமும் இவ்வாறு மாறும் (கும்பம்>கும்பொம்). 'ஆ ஓ ஆகலும் செய்யுளுள் உரித்தே' எனத் தமிழிலக்கணம் குறிப்பதும் இதனையே. (வந்தாம்>வந்தோம். வருவாம்>வருவோம்.)

**இ, ஈ:** இவை ஓரினம்.

(இகரம் எகரமாதல் முன்னர்க் கண்டோம்.)

**குற்றியலிகரம்;**

ரம் எனப்படும். அதன் ஒலி அளவு அரை மாத்திரை. குற்றியலுகரம் யகர முதன்மொழியோடு புணரும் போது, குற்றியலிகரமாக ஒலிக்கும். நாகியாது வரகியாது முதலிய தொடர்களில் குற்றியலிகரம் காண்க. இவற்றைப் பண்டைக் காலத்தில் புள்ளியிட்டு வேறுபடுத்தினர்.[12]

உ, ஊ : இவை ஓரினம்.

(உகரம் ஒகரமாதல் முன்னர்க் கண்டோம்.)

**குற்றியலுகரம் :**

உயிர்க்குற்றெழுத்தாகிய உகரம் வேறு; சார்பெழுத்தாகிய குற்றியலுகரம் வேறு. இதுவே தொல்காப்பியனுர் கருத்து. கால்டுவெல் அவ்வாறு கருதவில்லை. குறிலாகிய உகரம் உயிரெழுத்துக்களுள் மிக எளியது என்றும், நிலைபேறில்லாதது என்றும் கூறி, இதுபற்றியே அஃது ஒலிநயத்திற்காகப் பல சொற்களின் இறுதியில் சேர்க்கப்படுகின்றது என்றும் அவர் கருதுகின்றுர்.[13]

---

12. குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யா என் சினைமிசை உரையசைக் கிளவிக்(கு)
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே.

புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.

யகரம் வருவழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது.

—தொல். எழுத்து ௩, ௨, ௪௧0.

13. Short u is of vowels the weakest and lighest, and is largely used, especially at the end of words, for euphonic purposes, or as a help to enunciation. (Caldwell, A Comparative Grammar of Dravidian Languages, p. 134).

தெலுங்கு மொழியில் ஒவ்வொரு சொல்லும் உயிரீருகவே இருக்கவேண்டும் என்பது இலக்கணம். இயல்பாக உயிரீறு பெருத சொற்களின் இறுதியில் உகரம் சேர்க்கப்படுகின்றது. (கண்—கன்னு, மண—மன்னு). புதுக்கன்னடத்தில் இவ்விதி உள்ளது. அம் மொழியில் அகரவீருக உள்ள சொற்களுக்கும் உகரம் சேர்க்கப்படுகின்றது. (சில > கெல > கெலவு. பல > பலவு).

தமிழில் வல்லின மெய்கள் ஈருக வரும்போதே குற்றியலுகரம் ஒலிக்கப்படும். வல்லின மெய்யினை மொழியிறுதியில் ஒலித்தல் அருமையாதலால், இவ் விதி முற்றிலும் பொருத்தமானதே.

> "நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
> குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே"[14]

என்பது தொல்காப்பியம். இக்காலத்துப் பேச்சு மொழியிலோ வல்லின ஈறே அல்லாமல், மெல்லின இடையின ஈருக வரும் சொற்களுக்கும் குற்றியலுகரம் வருகின்றது எனலாம். (மண்ணு, பொன்னு, கொள்ளு).

இலக்கியத்தில் 'சொல்லு' முதலிய சொற்கள் உள்ளன. இந்த இறுதியுகரம் ஐரோப்பிய மொழிகளில் இல்லாத ஒன்று. இது வடமொழி ஒலியமைப்பிலும் காணப்படாதது. 'வாக்' முதலான வடசொற்களும் தமிழில் புகும்போது இக்குற்றியலுகரம் பெறுகின்றன. (வாக் > வாக்கு)

கால்டுவெல் கூறுமாறு இக்குற்றியலுகரம் ஒலிநயம் காரணமாக (*Euphonic purpose*) வருவது என்

பதைவிட, முயற்சி எளிமை (*Economy of effort*) காரணமாக வருவது என்பது மிகப் பொருத்தம். காட், நாட், பாக் என்பவற்றைவிடக் காடு, நாடு, பாக்கு என்பவை ஒலிக்கும் முயற்சிக்கு எளியனவாக உள்ளன.

இக் குற்றியலுகரத்தின் ஒலியளவு (மாத்திரை) மிகக் குறுகியது என்றும், அரை மாத்திரை என்றும் இலக்கண நூலார் கூறுவர். நச்சினார்க்கினியர் என்னும் உரையாசிரியர் மற்றுமொரு வேறுபாடும் கூறுவர். உகரத்திற்கு உள்ள இதழ் குவிக்கும் முயற்சி குற்றியலுகரத்திற்கு இல்லை என்பர்.[13]

மலையாளத்தில் குற்றியலுகரம் நிற்றற்குரிய இடத்தில் அகரக் குறில் நிற்பதுண்டு. குற்றியலுகரம் மலையாளத்திலும் உண்டு. அது சில சொற்களில் அரை மாத்திரையும் பெறாமல் வரும்போலும். அதனால் அதனை உகர வடிவிற்றாக எழுதாமல் அதற்குரிய மெய்யெழுத்தின்மேல் ஒரு புள்ளியோ சிறு வட்டமோ வரையப்படும். பண்டைத் தமிழிலும் குற்றியலுகரம் இக்காலத்தில் எழுதுமாறு எழுதப்படாமல், புள்ளியிட்டு எழுதப்பட்டு வந்தது என்பது முன்னர்க் கண்டோம்.

**எ, ஏ; ஒ, ஓ.**

குற்றெழுத்துக்களாகிய எகரமும் ஒகரமும் வடமொழியில் இல்லை. ஆனால் அதன் இனமாகிய ஐரோப்பிய மொழிகளில் இருந்திருக்கின்றன. திராவிட மொழிகளில் அவை பெருவழக்கின; திராவிட மொழிகளுக்கு மிக மிக இன்றியமையாதன.

---

13. தொல். எழுத்து. கூஅ நச்சினார்க்கினியர் உரை.

திராவிட மொழிகளில் எகர ஒகரக் குறில்களுக்கும் அவற்றின் நெடில்களுக்கும் உள்ள வேறுபாடு ஒலிநயம் பற்றியோ, புணர்ச்சி வேறுபாடு பற்றியோ அமைந்ததன்று. அடிச்சொற்கள் எனப்படும் பகுதிகளைப் பிரித்துணர்தற்கு இவ்வேறுபாடு வேண்டும். ஆதலின் இவ்வேறுபாடு மொழிக்கு அடிப்படையாக நிற்கின்றது :

தெள் — தெளிவு
தேள் — நச்சுப்பூச்சி
தொல் — பழமை
தோல் — உடல்மேலுள்ள தோல்
கொல் வேறு; கோல் வேறு.
மென்மை வேறு; மேன்மை வேறு.

**ஐ - சந்தியக்கரம்**

ஓர் உயிரொலித்த பிறகு மற்றோர் உயிரினை ஒலிக்கும்பொருட்டு நா முதலிய உறுப்புக்கள் மாறும் இடைக்காலத்து மிடற்றுமுயற்சி (*voice*) சந்தியக்கரம் (*dipthong*) ஆக அமையும். எனவே, சந்தியக்கரம் என்பது இரண்டுயிர்களின் கூட்டொலி யன்று; இரண்டுமல்லாத தனியொலியாகும்.[14]

வடமொழியிலுள்ள ஐ சந்தியக்கரமாகும். தமிழிலுள்ள ஐ சந்தியக்கரமா என்பது ஐயுறக் கிடக்கின்றது. அஃது அகரவுயிரும் யகரமெய்யுமாக யாண்டும்

14. The term dipthong is applied to the emission of two vowel sounds in one and the same syllable with one and the same breath impulse, giving to the untrained ear the impression of a single sound. (G. Noel-Armfield, General Phonetics, p. 35).

கொள்ளத்தக்கதாக இருக்கின்றது.[15] உரைநடை, செய்யுள், பேச்சு எங்கும் இதைக் காணலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| உரைநடை | — | ஐயர் | — | அய்யர் |
| செய்யுள் | — | கைவேல் | — | கய்வேல் |
| பேச்சு | — | தை | — | தய் |

பனங்காடு (பனை + காடு, பனய் + காடு, பனங் காடு) முதலிய சொற்களின் புணர்ச்சியும், நாரை (நாரய் > நாராய்) முதலிய சொற்களின் விளிவேற்றுமையின் மாறுதல்களும், இக்கருத்தை வலியுறுத்துகின்றன.[16]

'இகர யகரம் இறுதி விரவும்' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்கு நாய் — நாஇ எனச் சான்று

15. ஐய்வனம் அய்வனம் என வரும் என உரையாசிரியர்கள் சான்று காட்டி,

அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்

—தொல். எழுத்து. ருசு

என்னும் சூத்திரத்தினை விளக்குதல் காண்க.

16. ஐகார வீற்றுப் பெயர்கள் விளியேற்கும் முறைமையை நோக்கினும், ஐ (முன்னிலை ஒருமை விகுதி) என்பது அய் என்பதன் திரிபே என்பது போதரும். அன்னை—அன்னாய்; கிள்ளை—கிள்ளாய் என்னுமிடங்களில் ஐகாரம் ஆய் எனத் திரிந்துளது என்பது அமைதியன்று. தோன்றல்—தோன்றால்; மக்கள்—மக்காள் என்பவற்றில், லகர ளகர வீற்றுப் பெயர்களின் ஈற்றயல் அகரம் ஆகாரமாயிற்று என்பதுபோல, அன்னாய், கிள்ளாய் என்பவற்றிலும் யகர வீற்றுப் பெயரின் ஈற்றயல் அகரம் ஆகாரம் ஆயிற்று என்றலே முறைமையாகும். என்னெனின், யலளக்கள் ஓரினங்களாகலின், அவ்வீற்று மொழிகளெல்லாம் விளிக்கண் ஒரே விதி பெறுதலே முறைமை என்க. இவ்வாறாயின், அன்னை என்பது அன்னய் என யகர வீறாகும். அதன் ஈற்று அய், ஆய் என நீண்டு விளிக்கண் வருதல் இயல்பே. இக்கூறியவற்றால், ஐ என்பது அய் என்பதன் திரிபே என்பது நன்கு விளங்கும்.

—வே. வேங்கடராஜுலு ரெட்டியார், திராவிட மொழியின் மூவிடப் பெயர், ப. 52, 53.

காட்டினர் இளம்பூரணர்.[17] எனவே, தலய், தலஇ என்பன தலை என்னும் சொல்லின் வடிவங்களாகக் கருதப்பட்டன. அதன் காரணம் 'அகர இகரம் ஐகாரமாகும்' என்று சந்தியக்கரமும் உடன் கருதப் பட்டமையே ஆகும்.[18]

டாக்டர் கால்டுவெல், அ இ என்னும் இரண்டும் ஐகாரமாயின எனக் கொள்ளாமல், எகர இகரம் இரண்டும் ஐகாரமாயின என்பர். தலை என்னும் சொல், தமிழில் தலெ என்று ஒலிக்கப்படும். மலை யாளத்தில் தல என்று உள்ளது. கன்னடத்தில் தலெ என்று உள்ளது. எனவே, எ இ இரண்டும் சேர ஐகாரம் பிறந்தது எனக் கால்டுவெல் கூறுவர். வரி வடிவில் கிரந்தத்திலும் மலையாளத்திலும் இரண்டு எகரங்களால் ஐகாரத்தைக் குறித்தலும், தெலுங்கு கன்னடத்தில் எகர இகரங்கள் சேர்ந்த வடிவால் எழுதுதலும் அவர் சான்ருகக் காட்டுவர்.[19] வரிவடிவு ஒலியின் உண்மையைப் புலப்படுத்தாது. ஆதலின் இச்சான்று கொள்ளத்தக்கது அன்று.

ஔ - சந்தியக்கரம்

இது தமிழுக்கும் ஏனைய திராவிட மொழிகளுக் கும் உரியதோர் எழுத்து அன்று என்றும், வடமொழி யைப் பின்பற்றி நுழைக்கப்பெற்றதே என்றும் கால்டுவெல் கருதுகின்ருர்.[20] வடசொற்களில் இது

17. தொல். எழுத்து. ருச

18. தொல். எழுத்து. ருஅ

19. A Comparative Grammar of the Dravidian Languages, p. 133.

20. ibid. p. 136.

மிகுதியாக வழங்குகின்றது. ஔகாரம் வரும் தமிழ்ச் சொற்கள் மிகச் சிலவே; அவையும் அகரஉயிரும் வகரமெய்யுமாக எழுத இடந்தருகின்றன.[21] ஔவை என்னும் சொல் அவ்வை என்றும் எழுதப்பட்டு வருகின்றது. அவ்வை, அம்மை என்பதன் திரிபாதலால், ஔவை என்று எழுதும் முறை காலத்தால் பிந்தியது எனலாம். 'சௌக்கியம்' முதலிய வடசொற்களையும் 'சவுக்கியம்' முதலான வடிவுகளில் எழுதும் வழக்கும் காண்க.

**ஆய்தம் ஃ**

வடமொழியிலுள்ள 'ஹ' தமிழ்மொழியில் இல்லை. ஆயினும் அதுபோன்ற நுண்ணொலியைத் தமிழில் ஆய்தம் தரவல்லது. ஆய்தம் எனினும் நுண்ணிது எனினும் ஒக்கும். ஆய்தம் மிகுந்த வண்ணத்தைத் தொல்காப்பியனார் நலிபுவண்ணம் என்றதன் கருத்தும் இதுவே.[22] இது வடமொழி விஸர்க்கத்தோடொத்தது என்றும், இலக்கணக்காரர் படைப்பெனச் சிலர் கூறுவர் என்றும் கால்டுவெல் எழுதியுள்ளார்.[23] தொல்காப்பியனார் இதனைச் சார்பெழுத்தாகக் கூறுவதனாலும் புள்ளிவடிவிற்று என்பதனாலும் இலக்கிய இலக்கணங்களுள் யாண்டும் காணப்படுவதாலும் இது தமிழ்க்கே சிறப்பாக உரிய ஒலியாகும்.

21. "அகரத்தின் பின்னர் உகரமேயன்றி வகரப் புள்ளியும் ஔகாரம் போல வருமென்று கொள்க" என்று நச்சினார்க்கினியர் எழுதி, "ஔவை அவ்வை என வரும்" என உதாரணமும் காட்டுகின்றார். (தொல். எழுத்து. ருகூ.)

22. நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்.

—தொல். பொருள். ருநந

23. A Comparative Grammar of the Dravidian Languages, p. 130.

**அளபெடை**

செய்யுளில் இசைநீட்டம் வேண்டும்போது உயிரெழுத்து நீண்டொலிக்கும். அப்போது அதன் அறிகுறியாக உயிர்க்குறில் அதனை அடுத்து எழுதப் பெறும். (ஆஅ, கோஒ என). இதனை அளபெடை (ஒலியளவின் நீட்டம்) என்பர்.

> "நீட்டம் வேண்டின் அவ்வள புடைய
> கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்
> "குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
> நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே"[24]

என்பன தொல்காப்பிய விதிகள்.

இவ்வாறு குற்றெழுத்து அடுத்து வரும்போது அவ்வுயிர்களுக்கிடையே உடம்படுமெய் யகரமோ வகரமோ வாராது. காரணம், அது தனியொலியாக நில்லாது, முன் நின்ற நெட்டெழுத்தின் நீட்சியாகவே நிற்றலாம். ஆதலின்,

> தெய்வந் தொழாஅள்[25]

என நிற்கும்.

**மாற்றும் உயிராற்றல்** (*Harmonic sequence of vowels*)

தானி + கு = தானிகி

ஆவு + னி = ஆவுனு

இவை இரண்டும் தெலுங்கு மொழியின் சொற்கள். **(i)** 'கு' என்னும் நான்கனுருபு 'கி' என்று திரிந்தது. காரணம் 'தானி' என்னும் சொல்லில் உள்ள இகரவுயிரின் ஆற்றலே. **(ii)** 'னி' என்னும்

---

24. தொல். எழுத்து. சூ, சக.
25. திருக்குறள். 55.

சாரியை 'னு' என்று மாறிற்று. காரணம் 'ஆவு' என்னும் சொல்லில் உள்ள உகரவுயிரின் ஆற்றலே. கத்திக்குப் பிடி இல்லை, பெட்டிக்குச் சாவி இல்லை என்ற வாக்கியங்களைப் பேசும்போது, கத்திக்கி, பெட்டிக்கி என ஒலித்தல் இத்தகைய மாறுதலே யாகும்.

இவ்வாறு இகரம் உகரம் என்னும் இரண்டு உயிர்களுக்கும் ஏனைய உயிரெழுத்துக்களைத் தம்போல் மாற்றும் ஆற்றல் உள்ளது. இது தெலுங்கில் உள்ள வாறு துளுமொழியிலும் ஓரளவு காணப்படுகின்றது ஏனைய திராவிட மொழிகளில் இல்லை என்று கூறிவிட முடியாது. ஆயினும் தெலுங்கில்தான் பெருவழக்கிற் றாக உள்ளது.

இது துருக்கி, மங்கோலியம், பின்னிஷ் (*Turkish, Mangolian, Finnish*) முதலான சித்திய மொழிகளி லும் காணப்படுகிறது. ஆனால் ஐரோப்பிய மொழி களில் இல்லை.

மேற்கண்ட இரு சொற்களிலும் உள்ள உயி ரொலிக்கு ஏற்ப, உருபும் சாரியையும் மாறி அமைந் தன. சொல்லில் உள்ள உயிர் அவ்வாறு மாற்றினமை கண்டோம். ஆனால், சேர்க்கப்படும் இடைச்சொல் லின் உயிர், சொல்லின் உயிரொலியை அவ்வாறு மாற்றியமைத்தலும் உண்டு.

கத்தி - சொல்

லு - தெலுங்கில் பன்மை உணர்த்தும் இடைச் சொல்; கத்தி + லு = கத்திலு என்றோ கத்திலி என்றோ ஆகாமல் கத்துலு என்றாகும்.

கத்தி + கு = கத்திகி என்றாகும்

ஆனால், கத்தி + லு + கு = கத்துலகு என்றாகும்.

**உயிர் இடம் பெயரல்:** (*Euphonic displacement of vowels*)

மூன்று உயிரொலிகளைக்கொண்ட உயிர் முதன் மொழியாக வரும் தெலுங்குச் சொற்களில் ஒரு புதுமையான முறையில் உயிரொலி இடம் பெயர்ந்து நிற்கக்காண்கின்றோம்.

(அவர் >) அவரு > அ + வ் + ரு > வ் + அ + ரு
> வ் + ஆ + ரு > வாரு
இவரு > இ + வ் + ரு > வ் + இ + ரு
> வ் + ஈ + ரு > வீரு

அதி, இதி முதலான சொற்களிலும் மற்றொ ரிடைச்சொல் சேர்ந்து உயிரொலி மூன்றாகும்போது இம்மாறுதல் காணப்படுகின்றது.

அதி + னி > அதினி > தானி
இதி + னி > இதினி > தீனி

இவற்றில் காணும் மாறுதல் என்ன? முதலில் உள்ள உயிர் இரண்டாமிடத்திற்குப் பெயர்ந்து சென்று, அங்குள்ள உயிரைக் கெடுத்து, அதற்கீடாக நீண்டு நிற்றலே இம் மாறுதலாகும்.

மேற்காட்டிய எடுத்துக்காட்டுக்கள் அனைத்தும் சுட்டுப்பெயர்களேயாம். கீழ்வருவன ஏனைப் பெயர் களாம்:

உரல் > உரலு > ஒரலு > ரோலு
உகிர் > உகிரு > ஒகிரு > கோரு

இத்தகைய மாறுதல் நிகழும் சொற்களை ஆராயுமிடத்து இடையிலுள்ள மெய் ர, ல, வ, என்ற இடையின மெய்களாகவே பெரும்பாலும் இருக்கக் காண்கின்றோம். அவற்றின் திட்பமின்மையே இம் மாறுதலுக்குக் காரணம் எனலாம்.

இவ்வொலி மாறும் விதியின் உண்மையை உணர்ந்தபின், பல தெலுங்குச் சொற்கள் இவ்வாறு உயிர் பெயர்ந்து திரிந்த திரிபுகளாக இருத்தல் புலனாகின்றது.

தமிழில் ஆகாது > காது - தெலுங்கில்
தமிழில் இலது > எலது > லேது - தெலுங்கில்
தமிழில் உள் > ஒல் > லோ - தெலுங்கில்
(அதனுள் > தானிலோ)

**உடம்படு மெய்** (*Prevention of hiatus*)

வடமொழியில் பெரும்பாலும் நிலைமொழிகளிலும் வருமொழிகளிலும் உள்ள இரண்டுயிரும் ஒன்று சேர்ந்து ஒருயிராக மாறி ஒலிக்கும். தமிழில் அது மிகச் சில சொற்களில் மட்டுமுள்ளது.

வடமொழியில் :— மட + அதிபதி > மடாதிபதி
தமிழில்
சிறுபான்மை :— பரு + அரை > பராரை
பெரும்பான்மை :— சில + அணி > சிலவணி

ஒலித்தல் முயற்சியை எளிதாக்க வேண்டியும், பகுதி இடைநிலை முதலியவற்றைத் தெளிவாகக் காக்கவேண்டியும், தமிழ் முதலாய திராவிட மொழிகளில் எல்லா உயிரொலியும் தனித்தனியே ஒலிக்குமாறு பாதுகாக்கப்பட்டுள்ளன. ஆயினும், விட்டிசை

ஒலித்தல் முயற்சியை அரிதாக்குமாதலின், அது நேராதவாறு, இரண்டுயிர்க்கும் இடையே உயிரோடொத்த இடையினமாகிய யகரத்தையோ வகரத்தையோ சேர்த்து ஒலித்தல் மரபு. அந்த யகரம் அல்லது வகரத்திற்கு உடம்படுமெய் என்பது பெயர்.

பல + அரசர் மணி + அழகு

இஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன் இவ் இருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்[26]

என்ற விதியால் எங்கெங்கு யகரம், எங்கெங்கு வகரம் என்பது அறியப்படும். சிறுபான்மை மாறாக வரும் இடமும் உண்டு (ஆயிடை, கோயில் முதலியன). யகர வகரமாகிய இவ்விரு மெய்களையும் ஆங்கில ஒலி நூலார் அரையுயிர் (*semi-vowels*) என்பர். அவை உயிரிடையே வரும் மெய்யாதற்குற்ற தகுதியை அது புலப்படுத்துகின்றது.

தெலுங்கில் 'ன்' உடம்படுமெய்யாக உள்ளது என்றும், தமிழிலும் பொருளன, காட்டின முதலிய சொற்கள் பொருளவ, காட்டிய என்பவற்றோடொத்

---

26. நன்னூல். எழுத்து. 162.

தொல்காப்பியனார் இவ்வாறு வரையறை செய்யாது பொதுவாக விதித்தார் :

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்.

—தொல். எழுத்து. கசo

இவ்வுடம்படு மெய் இன்றியமையாதது எனக் கொள்வதற்கில்லை. "வரையார் என்றதனான் உடம்படுமெய் கோடல் ஒருதலையன்று" என நச்சினார்க்கினியர் குறித்தல் காண்க.

தவை என்றும் கூறுவர் கால்டுவெல்.[27] அந்த னகரம் அன், இன் என்னும் சாரியைகளில் உள்ள மெய்யே யாகும்; உடம்படுமெய் அன்று.

தெலுங்கில் மகரமும் உடம்படுமெய் என்பர். அது வகரத்தின் திரிபே. வகரம் மகரமாதல் ஒலி நூலார்க்கு உடன்பாடே. தமிழிலும் 'என்னவோ' என்பதை 'என்னமோ' என்று ஒலித்தல் காண்க.

கால்டுவெல், 'காரும்' என்ற சொல்லில் ரகரம் உடம்படு மெய் என்பர். (கா + உம் > காரும்.) தெலுங்கில்,

பொத + இல்லு > பொதரில்லு (இலைவீடு)

என்ருகும். தெலுங்கில் சில இடங்களில் ககரம் உடம் படுமெய்யாம்:

பத + ஒண்டு > பதகொண்டு (பதினென்று)
அறுவர் (தமிழ்) > ஆறுகுரு
அவர் (தமிழ்) > வாரு > காரு.

கூ' முதலான கலைவளமற்ற மொழிகளிலும், உடம்படுமெய் புணரும் இம்முறை அமைந்துள்ளது. விட்டிசையைத் (*hiatus*) தடுப்பதில் திராவிட மொழிக்குள்ள ஆற்றலையும் ஒலிநய உணர்வையும் இதனால் அறியலாம்.

---

27. A Comparative Grammar of the Dravidian Languages, p. 177.

# மெய்யெழுத்துக்கள்

பாகுபாடு

தமிழிலக்கண நூலார் மெய்யெழுத்துக்களை வல்லினம் மெல்லினம் இடையினம் என வகுப்பர்.

வல்லினம்—க ச ட த ப ற (Suras)
மெல்லினம்—ங ஞ ண ந ம ன (Nasals)
இடையினம்—ய ர ல வ ழ ள (Liquids)

வல்லினம் மார்பையும் மெல்லினம் மூக்கையும் இடையினம் மிடற்றையும் இடமாகக் கொண்டு பிறப்பன என்பது அவர்களின் கருத்து.[1]

ஒலி நூலார் மெய்களைப் பாகுபாடு செய்யும் போது, ஒலிக்கும் கருவிகளாகிய இதழ் பல் அண்ணம் முதலியவற்றைக்கொண்டு பகுப்பர். அம்முறைப்படி தமிழ் மெய்யெழுத்துக்களின் பாகுபாடு வருமாறு :—

1. இதழினம்—ப, வ, ம (labials)
2. பல்லினம்—த, ந (dentals)
3. முன்னண்ணவினம்—ச, ஞ, ய (palatals)
4. பின்னண்ணவினம்—க, ங (velar sounds)
5. உண்ணாக்கினம்—ர, ழ (uvular sounds) Retroflex

---

1. அவ்வழி,
ஆவி இடைமை இடம்மிட றாகும்
மேவும் மென்மை மூக்(கு) உரம்பெறும் வன்மை.
(நன்னூல். எழுத்து. 75).

6. வளைநாவினம்—ட, ண, ள (*cacuminals*)[2]. தொல்காப்பியனார் இவற்றின் பிறப்புப் பற்றிக் கூறுவது இப்பாகுபாட்டுக்கு இயைந்ததாக உள்ளது. அவர் கூறுமாறு :-

| | |
|---|---|
| க ங — | அடிநாவும் அடி அண்ணமும் உறுதல் |
| ச ஞ — | இடைநாவும் இடையண்ணமும் உறுதல் |
| ட ண — | நுனிநாவும் நுனியண்ணமும் உறுதல் |
| த ந — | நாநுனி பல்லினடியை ஒற்றல் |
| ற ன — | நாநுனி அண்ணம் ஒற்றல் |
| ர ழ — | நாநுனி அண்ணம் வருடல் |
| ல — | நாவிளிம்பு வீங்கி அண்பல்லடியை ஒற்றல் |
| ள — | நாவிளிம்பு வீங்கி அண்பல்லடியை வருடல் |
| ப ம — | மேலிதழும் கீழிதழும் இயைதல் |

2. Apart from the division into the two groups "breathed" and "voiced," consonants may be classified (i) according to the organs which articulate them, (ii) according to the manner in which the organs articulate them.

If we classify them according to the organs which articulate them, we distinguish six main classes.

I. Labial or lip sounds

II. Dental sounds, viz., sounds articulated by the tip or blade of the tongue against the upper teeth or teeth ridge.

III. Palatal sounds, viz., sounds articulated by the front of the tongue against the hard palate.

IV. Velar sounds, viz., sounds articulated by the back of the tongue against the soft palate.

V. Uvular sounds, viz., sounds articulated by the back of the tongue and the extremity of the soft palate of the uvula.

VI. Glottal or laryngal sounds, viz., sounds articulated in the glottis. (D. Jones, An Outline of English Phonetics, pp. 13, 14.)

வ — மேற்பல்லும் கீழிதழும் இயைதல்.
ய — மிடற்றுவளி அண்ணம் கண்ணுறல்.[3]

மெய்யெழுத்துக்களின் பிறப்பு முயற்சியை நோக்கியும் ஒலிநூலார் அவற்றைப் பாகுபாடு செய்வர். அம் முறை வருமாறு:-

1. வெடியினம்—க, ச, ட, த, ப (*Plosives*) (மூச்சுத் தடைப்பட்டு வெடிபோல் வெளியாதல்).
2. மூக்கினம்—ங, ஞ, ண, ந, ம, ன (*Nasals*) (மூச்சு மூக்கின் வழியாக வெளியாதல்).
3. பிரிவளியினம்—ல, ள (*Lateral*) (மூச்சு வெளிப்படுங்கால் வாயிடையே நாக்குத் தடுத்து நின்று அம்மூச்சைப் பிரித்து வெளிப்படுத்தல்).

---

3. ககார ஙகாரம் முதல்நா அண்ணம் (தொல். எழுத்து அகூ).
சகார ஞகாரம் இடைநா அண்ணம் (ஷை—கூ0)
டகார ணகாரம் நுனிநா அண்ணம் (ஷை—கூக)
அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத்
தாமினிது பிறக்கும் தகார நகாரம். (ஷை—கூஉ)
அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும். (ஷை—கூச)
நுனிநா அணரி அண்ணம் வருட
ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும். (ஷை—கூரு)
நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும். (ஷை—கூசா)
இதழியைந்து பிறக்கும் பகார மகாரம். (ஷை—கூஎ)
பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும். (ஷை—கூஅ)
அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகரம் பிறக்கும். (ஷை—கூகூ)

4. உரப்பினம்—ற (*trilled or rolled consonants*)
(ட்ர் என்பது போல் நாவில் ஒருவகை அசைவுடன் மூச்சு வெளியாதல்)

5. உயிர்ப்பினம்—தமிழில் இல்லை (*Fricative*)
(உஸ்-போலாகும், ஸ — இவ்வகையைச் சாரும்).

6. அரையுயிர்—ய, வ (*semi-vowels*)
(உயிருமாகாது, மெய்யுமாகாது இடையின மாக வருவன). [4]

---

4. If we classify consonants according to the manner in which the organs articulate them, we distinguish six main classes.

I. Plosive consonants, formed by completely closing the air passage and suddenly removing the obstacle, so that the air escapes making an explosive sound...

II. Nasal consonants, formed by completely closing the mouth at some point, the soft palate remaining lowered so that the air is free to pass out through the nose...

III. Lateral consonants, formed by an obstacle placed in the middle of the mouth, the air being free to escape at the sides...

IV. Rolled consonants, formed by a rapid succession of taps of some elastic organ...

V. Fricative consonants, formed by narrowing the air passage at some point so that the air escapes making a kind of hissing sound (f, z).

VI. Semi vowels, or vowels used in the capacity of consonants. (D. Jones, An Outline of English Phonetics, p. 14.)

க ச ட த ப ற என்பவற்றைத் தொல்காப்பிய ஞர் வல்லினம் என வகுத்தது பொருந்தியதாகும்.[5] ஆயின், ங ஞ ண ந ம ன என்பவற்றை மெல்லினம் என்பதைவிட மூக்கினம் என வழங்குதல் ஒலிநூலுக் கு இயைவதாகும். மெல்லினம் என்ற பெயரின் காரணத்தை விளக்கிய நச்சினார்க்கினியர், "மெல்லென்றிசைத்தலானும் மெல்லென்று மூக்கின் வளியாற் பிறத்தலானும் மெல்லெழுத்தாயிற்று" என்று எழுதியுள்ளார்.[6] அக்கடல் என்னுமிடத்தில் ககரம் வல்லொலியே; அதன் மெல்லொலி அங்கவை என்பதன் ககரத்தில் உள்ளது. ஆதலின், ககரம் முதலியவற்றை வெடியினம் எனக் கொள்ளும் ஒலிநூல், அவற்றையே இரண்டிரண்டாகப் பிரித்து வல்லொலியும் மெல்லொலியும் (*surds and sonants*) ஆகக் கொள்ளும். ங ஞ ண ந ம ன என்பவற்றை மூக்கினம் (*nasals*) எனக் கொள்ளும்.

ய ர ல வ ழ ள என்னும் ஆறனையும் இடையெழுத்தெனக் கொண்டார் தொல்காப்பியனார்.[7] அவை, உயிர்க்கும் மெய்க்கும் இடைப்பட்ட இனமாதலின் இடையெழுத்தெனப் பட்டனவாகக் கொள்ளல் வேண்டும். அவை வல்லினத்திற்கும் மெல்லினத் திற்கும் இடைப்பட்ட ஒலிகளாகா. இவ்வாறனுள்ளும் ய வ என்னும் இரண்டே உயிரெழுத்துக்கள் போல் தடைப்படா இயல்புடையனவாய் மெய்யெழுத்துக்கள் போல் உயிர்க்கு உடம்பாய் ஒலிப்பனவாயுள்ளன.

---

5. வல்லெழுத் தென்ப கசட தபற. (தொல். எழுத்து. சங)
6. மெல்லெழுத் தென்ப ஙஞண நமன. (ஷை—சச)
7. இடையெழுத் தென்ப யரல வழள. (ஷை—சரு)

**வல்லின மெல்லின மாறுதல்** (*convertibility of surds and sonants*)

க ச ட த ப என்னும் வெடியின ஒலி ஐந்தனுக்கும் இன்றுள்ள தமிழில் தனித்தனியே ஈரொலி உள்ளன.

| **வல்லொலி** (*surds*) | | **மெல்லொலி** (*sonants*) |
|---|---|---|
| கடன் | — | பகல் |
| அச்சம் | — | பஞ்சம் |
| பட்டம் | — | படம் |
| தலை | — | அதனை |
| படம் | — | கொம்பர் |

இவற்றில் க ச ட த ப என்பவற்றிற்கு ஈரொலி இருத்தல் காணலாம்.

இதனைக் கால்டுவெல் **வல்லொலி மெல்லொலி மாற்றம்** (*convertibility of surds and sonants*) என்று தனியாக ஆராய்கின்றார்.[8] அவர் கொள்கைப்படி, இவ்வியல்பு தமிழிற்குப் பண்டுதொட்டே இருந்து வந்த தொன்றும். அது அஃது என்பவை ஒலிக்கும் இடங்களையும் பந்து, பத்து என்னும் மென்றொடர் வன்றொடர்க் குற்றுகர வேறுபாடுகளையும் விளக்கிய தொல்காப்பியனார் இந்த இயல்பை விளக்காதது வியப்பாகவே உள்ளது. நகரத்திற்கும் ன கரத்திற்கும் உள்ள மிக நுண்ணிய வேறுபாட்டைத் தெளிவாக்கும் ஆசிரியர் இப்பெரிய வேறுபாட்டைப் புறக்கணித்திருக்க முடியாது. ஆனால், ஒரு மொழியில் சொற்களும், சொற்பொருள்களும் வளர்ந்து பெருகுதல்போல் ஒலிகளும் வளர்ந்து பெருகியிருத்தல் கூடும்;

---

8. A Comparative Grammar of the Dravidian Languages, p. 138.

அவ்வாறு நாளடைவில் தமிழிடையே புகுந்த ஒலிகளே மெல்லொலிகள் என்று சிலர் கருதுவர். இவ்வாறு கொள்வது மொழிநூலார்க்கு உடன்பாடான கொள்கையே. வல்லொலி மிடற்றில் தடையின்றிப் பிறத்தலையும் மெல்லொலி தடைப்பட்டுப் பிறத்தலையும் ஆராய்ந்துகண்டு, எளிதில் பிறக்கும் வல்லொலிகளையே பழங்காலத்துத் திராவிட மக்கள் கற்றிருந்தனர் என்றும், காலஞ் செல்லச் செல்ல நுட்ப முயற்சிகளில் வல்லுநரான பிற்காலத்து மக்களே அரிதில் பிறக்கும் மெல்லொலிகளையும் கற்றனர் என்றும் அவர் கொள்வர்.

க, ச, ட, த, ப என்னும் ஐந்து எழுத்துக்களும் **மொழிமுதலிலும் மொழியிடையில் இரட்டிக்குமிடத்திலும் வன்மையாக ஒலிக்குமென்றும், ஏனையிடங்களில் மென்மையாக ஒலிக்குமென்றும் கால்டுவெல் கூறுகிறார்.** மொழியிடையே தனித்து வருங்காலத்திலும், மூக்கினமாகிய ங ஞ ண ந ம என்பவற்றை அடுத்து வரும் போதும் அவை வன்மையாக ஒலிப்பதில்லை என்று வற்புறுத்துகிறார். பிற மொழிச் சொற்களைக் கடன் வாங்கும் போதும் இவ்விதி போற்றப்படுகின்றது என்று கூறி, தந்தம் மண்டபம், (*danta in Sanskrit>tandam in Tamil, mantapa in Sanskrit>mandabam in Tamil*) முதலிய சொற்களை உதாரணமாகக் காட்டுகிறார்.

ஆனால் தொல்காப்பியனார் காலத்தும் அதனை ஒட்டிய காலத்தும் இவ்வெழுத்துக்களுக்கு ஈரொலி இல்லாமையால், இவை சொற்களில் எவ்விடத்தும் ஒரேவகையாக — வன்மையாகவே — ஒலிக்கப்பட்டு

வந்தன என்றும், 'இன்பம்' என்பதை இன்று *inbam* என்று ஒலித்தபோதிலும் பழங்காலத்து மக்கள் அதனை *inpam* என்றே ஒலித்திருப்பர் என்றும், இன்றும் மற்றத் திராவிட மொழிகளில் வல்லினத்தை மொழியிடையே மெல்லினம் அடுத்து வரும்போதும் வன்மையாக ஒலித்தல் உண்டு என்றும் சிலர் கூறுவர். கன்னடத்தில் இம்பு (இனிமை என்னும் பொருளது) *impu* என்றே ஒலிக்கப்படுகின்றது. **எந்த** (*enta*), **ஆட** (*ata*) முதலிய **தெலுங்குச்** சொற்களிலும் அவ்வொலிமுறை காணலாம்.

ஆயினும், தொடக்கத்தில் இடத்திற்கேற்ப வன்மை மென்மையாக ஒலிக்கும் முறையே இருந்தது என்றும், நாளடைவில் **பிறமொழிக்கலப்பாலும் நாகரிக வளர்ச்சியாலும்** அம்முறை திரிந்தது என்றும் கொள்ளுதல் பொருந்தும்.

## மெய்யெழுத்துத் திரிபுகள்

### க், ங்

(i) வடமொழி ஹகரத்திற்குக் ககரம் வரல்: மஹா > மகா

(ii) க > வ: ஆகு > ஆவு
நோக > நோவ

(iii) க மறைதல்: பகுதி > பாதி; பகல் > பால்

(iv) க > ச:

| | | | | |
|---|---|---|---|---|
| கன்னடம்: | கேரி | > | சேரி | (தமிழ், தெலுங்கு) |
| ,, | கின்ன | > | சின்ன | ( ,, ) |
| ,, | கிவி | > | செவி | ( ,, ) |
| ,, | கெய்(gey) | > | செய் | ( ,, ) |
| ,, | கெத்தல் | > | சிதல் (தமிழ்), செதலு (தெலுங்கு) | |

கன்னடம், தமிழ் : கெடு > செடு (தெலுங்கு)
தமிழ் : கீரை > சேர (மலேயாளம்)
தமிழ் : வைக்க > வைச்ச (தெலுங்கு)
நீங்கிய > நீச்சிய

**ச், ஞ்**

தமிழகத்தில் பெரும்பாலான பகுதிகளில் இப்பொது சகரம், வடமொழி 'ஸ' ஒலிப்பது போல் ஒலிக்கப்படுகின்றது. இரட்டிக்கும் இடத்தில் மட்டுமே அதன் பழைய ஒலி உள்ளது. (அச்சம், தச்சர்.) தெலுங்கு பழைய ஒலியைக் காத்து வருகின்றது.

தமிழில் ஞகரமாகிய மூக்கின ஒலியை அடுத்து வரும் சகரம் வடமொழி 'ஜ' ஒலிப்பதுபோல் ஒலிக்கின்றது ( அஞ்சு, பஞ்சம் ).

ஞகரம் ஐரோப்பிய மொழிகளில் பிரெஞ்சு மொழி ஒன்றில்தான் உள்ளது.

(i) கன்னடத்தில் 'ச' உள்ள இடத்தில் தமிழில் 'ய' உள்ளது. பெசர் > பெயர். தமிழிலும் பசும் > பயும் > பய்ம் > பைம் ஆகியிருக்கலாம் என்கின்றார் கால்டுவெல்.[9]

(ii) ஞகரம் நகரமாகவும் யகரமாகவும் மாறுகின்றது.

மலேயாளம் ஞான் > தமிழில் நான், யான்
,, ஞண்டு > ,, நண்டு, கன்னடத்தில் யண்டீ

**ட், ண்**

டகரம் ணகரம் போலவே மொழிமுதல் வாரா எழுத்து. பிறமொழிச் சொற்களில் அது மொழி

முதலாயிருப்பின், தமிழில் வழங்குங் காலத்து, இகரமோ அகரமோ முதலிற்பெற்று வழங்கும் (டம்பம் > இடம்பம்).

**(i)** தமிழ்ச் சொற்களில் உள்ள ணகரம் தெலுங்கில் னகரமாகக் காணப்படுகின்றது. தமிழ்முறையே திராவிட முதல் மொழியின் முறை எனக்கோடல் தகும். கண் > கன்னு, விண் > வின்னு, மண் > மன்னு.

**(ii)** மலையாளத்தில் னகரத்தின் இடத்தில் ணகரம் காணப்படுகின்றது. நினக்கு > நிணக்கு (மலையாளம்).

**(iii)** தெலுங்கைப்போல் மலையாளத்திலும் ணகரத்திற்குப் பதில் னகரம் உள்ளது. துணிய > துனிய (மலையாளம்).

**(iv)** ணகரம் மகரம் ஆதல்: எண்பது (தமிழ்) > எம்பது (மலையாளம்).

**த், ந்**

(i) த > ர: விதை > விரை

(ii) த > ச: வைத்த > வைச்ச (தமிழில் போலி என்பர்)
பெரிது > பெரிசு ,,
சிரித்த > சிரிச்ச (மலையாளம்)

(iii) ந்த > ஞ்ச

ஞ, ச என்பவை முன்னண்ண மெய்கள்; இ, ஈ, ஐ என்னும் முன்னண்ண உயிர்களை அடுத்து வரும்போதே இம்மாறுதல் ஆகும். ஐந்து > அஞ்சு போன்று திரிந்த சொற்களே மலையாளத்தில் பெருவழக்கின.

## ப், ம்

தூதமொழியில் ஆங்கிலத்திலுள்ள *f* ஒலியும் உள்ளது. ஏனைத் திராவிட மொழிகளில் இல்லை.

(i) ப > ஹ : கன்னடத்தில் மொழிமுதலிலெல்லாம் இம் மாறுதல் உள்ளது. பத்து > ஹத்து. (வடமொழி) பண > ஹண இம்மாறுதல் புதுக் கன்னடத்தில்தான் உள்ளது. பழங்கன்னடத்தில் பகரமே காணலாம். சீன மொழியின் பகரம் ஜப்பானிய மொழியில் f பகரமாகவும், ஹகரமாகவும் மாறுகின்ற தன்மை இங்கு ஒப்பிட்டு வியத்தற்குரியது.

(ii) ப > ம : பதி (தெலுங்கு) > மிதி (தொம்மிது—ஒன்பது)
உண்பான் (தமிழ்) > உண்மான் (மலையாளம்)
பாம்பு (தமிழ்) > பாமு (தெலுங்கு), ஹாவு (பழங் கன்னடம்)

(iii) ப > வ : உண்பான் > உண்ணுவான்
பகு > வகு

(iv) ம > ங, ஞ, ந :
பழம் + கண்டார் > பழங்கண்டார்
பழம் + சிறந்தது > பழஞ்சிறந்தது
பழம் + தந்தார் > பழந்தந்தார்

(v) ம > ன : தமிழில் போலி என விதிப்பர்.
மரம் > மரன்; குளம் > குளன், கொளனு (தெலுங்கு)

(vi) ம > வ : மாமன் > மாவு (குடகு)
மாமி > மாவி ( ,, )
நாம் > நாவு (கன்னடம்); நீம் (நீர்) > நீவு (கன்னடம்)

## ய ர ல வ ழ ள ற ன

ய வ ஒழிந்த ஏனைய மொழிமுதல் வாரா. பிற மொழிச்சொற்கள், ர ல முதலாகக்கொண்டு வரின் தமிழில் அ, இ, உ என்பவற்றில் ஒன்று முன்னிற்கும் (அரங்கம், இராமன், உலோகம்).

ழ, ள, ற, ன என்பவை தமிழ்க்கே சிறப்பானவை; திராவிட மொழிகளுக்கே உரிய எழுத்துக்கள்.

## ழ

ழகரம் தமிழில்தான் பெரிதும் வழங்குகின்றது. எனினும் பேச்சில் மிகத் தவறாகவும் பல்வேறு வகையாகவும் ஒலிக்கப்படும் தமிழ் எழுத்து அதுவே. ழகரத்தைச் சில பகுதிகளிலுள்ளவர் ளகரமாகவும், சிலர் யகரமாகவும், சிலர் சகரமாகவும் ஒலிப்பர். ழகரத்தை நன்கு ஒலிப்பவர் சிலரே. இலக்கியத்தில் அது கெடுமிடம் உளது (போழ்து >போது). பதினொன்றாம் நூற்றாண்டில் எழுந்த வீரசோழியம் என்னும் நூல் ழகரம் ளகரமாக மாறுதற்கு விரிவாக இலக்கணமும் வகுத்துவிட்டது. தெலுங்கில் அது டகரமாகவும் கன்னடத்தில் ளகரமாகவும் மாறும்:

எழு > எடு > எளு
கோழி > கோடி > கோளி

ழகரம் கெடுதலும் உண்டு:

| | | | |
|---|---|---|---|
| | கீழ் | > கிந்த | (தெலுங்கு) |
| | விழுங்கு | > மிங்கு | (கன்னடம்) |
| ழ > ண : | முழுகு | > முணுகு | (தெலுங்கு) |
| | குழி | > குணி | (கன்னடம்) |

ழ > ய, ச, ள எனத் தவறாக ஒலிக்கப்பட்டு மாறும்.

ழகரம் மலையாளத்தில் இன்றும் வழங்குகின்றது. தெலுங்கிலும் கன்னடத்திலும் மறைந்தது.

## ய

| | | | |
|---|---|---|---|
| ய > ச : | வயிறு | > வசறு, வசிறு | (கொச்சை) |
| | பையன்கள் | > பசங்கள் | ( ,, ) |

ய > ஞ, ந : யான் > ஞான், நான்

இவற்றில் யகரமே முந்தியது ; ஏனையவை பிந்தியவை என்பதை வடசொற்கள் தமிழில் அடையும் மாறுதல்கள் தெரிவிக்கின்றன.

யமன் > ஞமன், நமன்
யுக > நுகம்

**ர**

ர > ல : தெரி (தமிழ்) > தெலியு (தெலுங்கு)
பரிசை ( ,, ) > பலிச (மலையாளம்)

இதனால் சிறு—சில, பரு—பல முதலான சொற்களின் பகுதிகள் ஒத்தனவாக இருக்கலாம் என்று கால்டுவெல் ஐயுறுகிறார்.[10]

**ல**

ல > ர, ற: வில் (தமிழ்) > பிர் (துளு), பில்லா (பிராஹுயி)
நில் > நிறுத்து, பல்பல > பற்பல

**வ**

வ > ப (b): கன்னடத்தில் காணும் மாறுதல்
வாழ் > பாள் (bal)
வ > க (g): தெலுங்கில் காணும் மாறுதல்
வாரு > காரு, அறுவர் > ஆறுகுரு
செய்வேன் > செய்கேன் (தமிழில்)

**ள**

ள > ண : துளு மொழியில் காணும் மாறுதல்
கேள் > கேண் (துளு)
கொள் > கொண் ( ,, ), கொணு (தெலுங்கு)

**ற**

இது வடமொழியில் இல்லை. தெலுங்கு இலக்கியத்தில் காணப்படுகின்றது ; இலக்கண நூலாரும் அதனை வற்புறுத்துகின்றனர். இன்று வழக்கில் அது

மறைந்து வருகின்றது. கன்னடத்தில் செய்யுளில் மட்டும் ஆளப்படுகின்றது. ஆகையால் எல்லா மொழிக்கும் உரிய பொது எழுத்தேயாகும் என்றும், திராவிட முதல்மொழியில் இருந்திருக்கும் என்றும் துணியலாம்.

*ற்ற > ட்ட :*

மாற்றம் > மாட (mata) (தெலுங்கு)
மாற்றம் > மாடு (matu) (கன்னடம்)
பற்று > பட்டு (தெலுங்கு)
பட்டு, பத்து, ஹத்து (கன்னடம்)
பதற்றம் > பதட்டம் (பேச்சில்)

*ற்ற > த்த :* பற்று > பத்து (பேச்சில்)

**ஸ, ஶ, ஷ, ஹ**

இவை தமிழில் இல்லை. திராவிட முதல்மொழியிலும் இவை இருந்ததில்லை. வடமொழிக் கலப்பால், தெலுங்கு முதலியவற்றில் இவை வழங்குகின்றன. தமிழிலோ,

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா குமமே[11]

என்ற தொல்காப்பிய விதியே இலக்கியநடையில் இன்றுவரையில் கொள்ளப்பட்டுவருகின்றது. கல்லாதவர்க்கு இவை இன்றும் புதிய ஒலிகளே. பிற மொழி கற்றோரே இவற்றை ஒலிக்க அறிவர்.

ஷ என்பதற்கு ஈடாக ட, ச இவற்றில் ஒன்றை எழுதுவர்.

ஸ் என்பதற்கு ஈடாகத் தகரத்தையாவது சகரத்தையாவது கொள்வர்.[12] சில சொற்களில் அது கெடுதலும் உண்டு.

ஹ புதுக்கன்னடத்தில் மிகுதியாக வழங்குகின்றது. பழங்கன்னடத்தில் 'ஹ' ஒலி இல்லாமல் இருந்தது.[13]

ஹகர ஒலியோடு கூடிய வல்லினம் (*aspirated consonants*) இல்லை. தமிழில் அவை ஒலித்தற்கு எளியவை அல்ல; அவை கலப்பொலிகளே அன்றித் தனியொலிகள் அல்ல. வடசொற்களை எழுதும் பொருட்டு, தெலுங்கு முதலிய மொழிகளின் நெடுங்கணக்கில் அவை உள்ளன. திராவிட மொழிகளுக்கும் அவ்வெழுத்துகளுக்கும் தொடர்பு இல்லை.

உலகமொழியின் பலவற்றுள்ளும் ஹகர ஒலி வழக்கிழந்து வருகின்றது.[14]

---

12. ஏழாமுயிர் இய்யும் இருவும்ஐ வருக்கத்(து)
இடையின் மூன்றும் அவ்வம் முதலும்,
எட்டே யவ்வும் முப்பது சயவும்
மேலொன்று சடவும் இரண்டு சதவும்
மூன்றே அகவும் ஐந்திரு கவ்வும்
ஆவீ றையும் ஈயீ றிகரமும் (நன்னூல், எழுத்து. 147)
எனப் பவணந்தியார் விரிவாக வடமொழியாக்கம் கூறியுள்ளார்.

13. ஆங்கிலத்தில் honour, hour முதலான சொற்கள் ஹகரத்தோடு சேர்த்து எழுதப்படினும், ஹகரத்தை ஒலித்தல் பிழையாகவும் ஒலிக்காது விடுதல் விதியாகவும் கொள்ளப்படுகின்றன.

14. Doubtless some appreciable muscular effort is required to utter the aspirate h. Its omission is distinctly easier and therefore nearly all languages in which it has existed have shown a tendency to drop it, and many such as Greek and the Neo-Latin tongues have dropped it

## ட, ண, ள: வளைநா ஒலிகள் (*cacuminals*)

இவை வாயின் உட்புறத்தே நாமுனையை வளைத்து வன்மையாக ஒலிக்கப்படும் மெய்களாகும்.[15] இவை இந்தியாவிலுள்ள எல்லா மொழிகளிலும் உள்ளன; திராவிட மொழிகளிலும் உள்ளன; ஏனைய மொழிகளிலும் உள்ளன. ஆனால் எல்லா மொழிக்கும் பொதுவாக உரிய ஒலிகள் என்று கூறமுடியாது. ஹிந்தி முதலிய மொழிகள் வடமொழியிலிருந்து இவற்றைப் பெற்றிருத்தல் கூடும். ஆனால் தமிழ்

---

altogether. (Tucker, Introduction to the Natural History of Language, p. 329.)

Speakers of French and other Romance languages usually have considerable difficulty in pronouncing h. They generally leave it altogether. (D. Jones, An Outline of English Phonetics, p. 62.)

15. இவற்றைக் கால்டுவெல் linguals, cerebrals என்ற பெயரால் குறிப்பர். இக் குறியீடும் தவறே. (A Comparative Grammar of Dr. Ll. p. 147). மூளையின் அடிப்பகுதியில் (cerebrum) பிறக்கும் ஒலிகள் என்று கொண்ட கொள்கையும் தவறே. ஒலிநூலார் இவற்றைக் குறிக்கும் பெயர் cacuminals என்பது. "A class of tongue-tip consonants, which are as a rule very difficult for the average European who is not a native of Ireland, western England, some parts of Scotland and certain districts of Sweden, is that which is produced with the tip of the tongue somewhat curled back, so as to come in contact with that part of the roof of the mouth which lies between the teeth-ridge and the point where the hard and soft palates meet. It is a class of sound very common in the majority of the Indian tongues...They are frequently significant, and mispronunciation may lead to serious misunderstanding. Indian grammarians class these consonants as cerebrals. The name for them in the terminology of phonetics is retroflex or cacuminal. (G. Noel-Armfield, General Phonetics, pp. 113, 114.)

முதலிய மொழிகளும் அவ்வாறு வடமொழியிலிருந்து பெற்றிருக்கும் என்று கூறுவதற்கில்லை. அதற்கு மாறாக, வடமொழி இவ்வொலிகளைத் திராவிடமொழி களிலிருந்து கொண்டிருக்கும் என்பதற்குப் பின்வரும் சான்றுகள் காட்டுவர் கால்டுவெல்.

(1) பழைய திராவிடமொழிச் சொற்களில் அடிச்சொற்களாக உள்ள பலவற்றிற்கும்—சிறப்பாகத் தமிழ் அடிச்சொற்களுக்கு—இவை இன்றியமையாதவை. ஆனால், இவை வடமொழியில் ஒலிநயத்திற்காகக் கொள்ளப்படுகின்றவையே. (மங்கலம்—மங்களம்.

(2) வடமொழியோடு ஓரினமாக உள்ள கிரீக், லத்தீன் முதலான ஐரோப்பிய மொழிகளில் இவ்வொலிகள் காணப்படவில்லை. ஆனால் திராவிட மொழிகள் பலவற்றுள்ளும்—பிராஹுய் மொழியினுள்ளும்—இவை என்றும் இருந்து வந்திருக்கின்றன. வடமொழியைவிடப் பிராகிருத மொழிகள் இவற்றை மிகுதியாக ஆண்டிருத்தலும் இங்குக் கருதத்தக்கதே.

(3) வடமொழியிலிருந்து பெறப்பட்ட எல்லா ஒலிகளும் தமிழ்க்குப் புதியவையாக இருக்குமேல் தமிழ் ஒலிமுறைக்கேற்ப மாற்றியே கொள்ளப்பட்டிருக்கின்றன. உரப்பியும் கனைத்தும் ஒலிக்கும் எல்லா ஒலிகளும் தமிழ்முறைக்கேற்ப மாற்றப்பட்டுள்ளன. ஆனால் ட, ண, ள என்னும் அத்தகைய ஒலிகள் தமிழ்க்குப் புதியவையானால், மாற்றப்படாமல் கொள்ளப்பட்டிருக்குமோ? அன்றியும் வடசொற்களிலே அல்லாமல் பழைய திராவிடச் சொற்களிலும் அவை அங்ஙிலையில் போற்றப்பட்டிருத்தல் முடியாதன்றே?

(4) திராவிடமொழிகளில் தமிழினும் மிகுதியாக வடமொழிக்கலப்பைப் பெற்றது தெலுங்கே. ஆனால் தமிழில் உள்ள அவ்வளவு மிகுதியாக ட, ண, ள ஒலிகள் தெலுங்கில் இல்லை. எனவே வடமொழியிலிருந்து வந்தனவாகக் கொள்ளல் பொருந்தாது.

(5) மற்ற மெய்களுக்கு முற்றிலும் வேறுபட்டவை வளைநா ஒலிகள். அன்றியும் இவ்வேறுபாட்டைப் புறக்கணித்தால், அடிப்படையான பல சொற்கள் பொருள் வேறுபாடின்றிப் பயனற்றுப்போக, மொழியும் ஆற்றல் இழந்துவிடும்.

| மற்ற மெய் | வளைநா மெய் |
| --- | --- |
| குதி | குடி |
| புதை | புடை |
| கத்து | கட்டு |
| கொத்து | கொட்டு |
| என் | எண் |
| மனை | மணை |
| கொல் | கொள் |
| மால் | மாள் |

எனவே ட, ண, ள என்னும் ஒலிகள் திராவிட ஒலிகளே என்றும், ஒலிநயம் கருதிக்கொள்ளப்பட்டன ஆகாமல் மொழிக்கு அடிப்படையாக இன்றியமையாதவையாகும் என்றும் துணியலாம்.

ஆட்டோ ஜெஸ்பர்ஸன் என்னும் மொழிநூலாசிரியர் இவை திராவிட மொழியிலிருந்து வடமொழி கொண்டவை என்று கருதாமல் நாளடைவில் மக்கள்

இத்தகைய ஒலிகளை ஒலிக்கக் கற்றல் இயல்பு என்றும், பல்வின ஒலிகள் சில வரவர இவ்வாறு மாறிவிடுதல் உண்டு என்றும், அமெரிக்க மொழிகளிலும் இவை காணப்படுகின்றன என்றும் கூறுவர்.[16]

**க, ச, ட, த, ப: வெடிபின ஒலிகள் (*Plosive consonants*)**

இவற்றை ஒலிக்க இருவகை முயற்சி இன்றியமையாதன: **(i)** ஒலிக்கும் கருவிகள் ஒன்றோடொன்று பொருந்தல் வேண்டும். **(ii)** உடனே அவை பிரிதல் வேண்டும். அப்போது வெளிப்படும் மூச்சு வெடியொலிபோல் வெளிப்பட நேரும். எடுத்துக்காட்டாக பகரத்தை ஒலிப்பதானல், இதழ்களை முன்னர்க் குவித்துப் பொருத்தி உடனே பிரித்தல் வேண்டும், எனவே, பிரித்தபின் வெளிப்படும் மூச்சு, சிறிது வேறுபட்ட மற்றோர் ஒலியையும் விளைத்தல் காணலாம். அவ்வொலி ஒருவகை உயிராக இருத்தலையும் உணரலாம்.

‘வரப்’ என்று நிறுத்தினல் பகரம் நன்கு ஒலிக்காமையும், இதழைப் பிரித்து ‘வரப்பு’ என மூச்சு விட்ட பிறகே பகரம் ஒலித்தலும், அவ்வாறு மூச்சு விடுதற்குத் துணையாக உகரம் போன்ற உயிரொலி

16. It is easy to admit that natives accustomed to one place of articulation of their *d*, *t*, *n* will unconsciously produce the *d*, *t*, *n* of a new language they are learning in the same place; but then they will do it everywhere. This may have happened in India quite independently of the occurrence of the same sounds in other vernaculars. (Jespersen, Language, Its Nature, etc, p. 196).

உதவுதலும் காணலாம். அவ்வுயிரொலியையே தமிழர் குற்றியலுகரம் என்பர். அக் குற்றியலுகரம் வல்லினத்தை ஊர்ந்து வரும் என்றதன் உண்மையும், அஃது உயிரெழுத்தாகிய உகரத்தின் வேறு பட்ட சார்பெழுத்து என்றதன் உண்மையும் இதனால் விளங்குகின்றன.[17]

## அண்ணமெய் ஆதல் (*Palatalisation*)

இ, ஈ, ஐ என்னும் உயிரொலிகளை அடுத்துவரும் தகரம், பல்லைப் பொருந்தி நாநிற்கும் நிலையிலிருந்து, அவ்வுயிரொலிகளுக்குரிய அண்ணத்தை நோக்கிப் பெயர்தலால் சகரமாகத் திரியும். அண்ணத்தை நோக்கிப் பெயர்தற்குக் காரணம், அவ்வுயிர்கள் அங்குப் பிறத்தலே ஆகும். பல்லினத்தைச் சார்ந்த நகரமும் இவ்வாறே முன்னண்ண இனமாகிய ஞகரமாகத் திரியும். இவற்றைத் தமிழில் போலி என்பர்.[18]

*சிரித்த > சிரிச்ச, வைத்த > வைச்ச*
*கிழிந்த > கிழிஞ்ச, ஐந்நூறு > ஐஞ்நூறு*

## பல்லினமெய் ஆதல் (*Dentalisation*)

*பற்று > பத்து, விற்றான் > வித்தான்*
*மண்ணு > மந்நு (தெலுங்கில்), கண்ணு > கந்நு(தெலுங்கில்)*

---

17. நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே. (தொல். எழுத்து. ௩)

18. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும் என்மரும் உளரே. (நன். எழு. 124)

எனப் பவணந்தியார் நகரம் ஞகரமாவதற்கு மட்டும் விதி வகுத்துள்ளார்.

ற, ண இவற்றை ஒலித்தல் அருமையாதலின், நாவைப் பின்னண்ணத்திற்குக் கொண்டு செல்லாமல், பல்லோடு பொருத்தியே ஒலித்தலினுல், இவ்வாறு த, ந ஆகின்றன. சோர்வும் சோம்பலும் இதற்குக் காரணம் என்பர். ஆயின், முயற்சிச் சுருக்கமே காரணம் எனல் சிலர் கருத்து.

### ஒற்றளபெடை

மெய்யெழுத்துக்கள் தனித்து (உயிருடன் கூடாது) நிற்கும்போது மாத்திரை பெறும். அப்போது அரைமாத்திரை அளவு ஒலிக்கும். உயிருடன் கூடின், அவ்வுயிரின் அளவாகவே ஒலிக்கும்.

செய்யுளில் இசைநீட்டம் வேண்டிஞல், அந்த மெய் ஒரு மாத்திரையளவாகவும் மிகுதியாகவும் நீண்டு ஒலிக்கும். அதன் அறிகுறியாக அதனையடுத்து அந்த மெய் வரையப்படும்.[19]

" பிடியூட்டிப் பின்னுண்ணுங்ங் களிறெனவும் உரைத்தனரே. "[20]

### அநுஸ்வாரம்

இது வடமொழியில் உள்ள மூக்கொலியாகும். தமிழில் மூக்கொலியாகிய மெய்கள் பல (ங ஞ ண ந ம ன) இருக்கின்றன. ஆயின், வடமொழியில் உள்ள அநுஸ்வாரம் இல்லை.

---

19. அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர். (தொல். எழுத். ௩௩)

20. கலித்தொகை. 11

தெலுங்கிற்கே சிறப்பாக உரியதும் மிக நுண்ணியதும் ஆகிய மூக்கொலி அர்த்தாநுஸ்வாரம் எனப்படுவது. அதுவும் தமிழில் இல்லை. வாடு–வாண்டு என்னும் இரண்டிற்கும் இடைப்பட வாoடு என்று ஒலிக்க அர்த்தாநுஸ்வாரம் தெலுங்கில் பயன்படுகின்றது.

ஓரினமாதல் (*Assimilation*)

வேறுபட்ட மெய்கள் இரண்டு அடுத்து வரும் போது, அவற்றுள் ஒன்று மற்றொன்றாகவோ அதன் இனமாகவோ திரிதல் உண்டு. இஃது ஓரினமாதல் எனப்படும்.

மரம்+கொம்பு >மரக்கொம்பு —மகரம் ககரமாதல்
மரம்+தெரிந்தது >மரந்தெரிந்தது —மகரம் நகரமாதல்

இம்மாறுதலின் காரணம் என்னை? ஒலிக்கும் முயற்சியில் எளிமையே காரணம் ஆகும். ஒலிக்கும் மக்கள் அரிய முயற்சியை எளிதாக்கல் இயல்பு. (ஆங்கிலத்தில் *economy of effort*, முயற்சிச் சிக்கனம், என்பர்).

இம்மாறுதலில் சில எங்கும் விதியாக வருவன (*established*). சில ஒரோவழி வருவன (*accidential*).

எங்கும் வருவன —உருள்+து>உருட்டு
ஒரோவழி வருவன —சோழ+நாடு>சோணாடு

நிலைமொழி ஈறே மாறுதலும், வருமொழி முதலே மாறுதலும் இரண்டும் மாறுதலும் என மூவகை உண்டு.

(i) முள்+செடி>முட்செடி—regressive
(ii) என்+தம்பி>என்றம்பி—progressive
(iii) கல்+தூண்>கற்றூண்—reciprocal

நிலைமொழி யிறுதியில் மெய் நிற்காது, உயிர் நிற்பின், வரும் வல்லின மெய் இரட்டித்தலும் உண்டு :—

அ + கடல் > அக்கடல்
பசி + துன்பம் > பசித்துன்பம்
புலி + தோல் > புலித்தோல்

இவை, க ச த ப மிகும் இடம், மிகா இடம என்னும் இலக்கணப் பகுதியில் விரிவாக ஆராயப்படும். பொருள்நோக்கி மிகுதலும் மிகாமையும் உண்டு ஆதலால் தொகைச் சொற்கள் வேற்றுமைப் பொருளவா, அல்வழிப் பொருளவா எனப் பகுத்துணர்தல்வேண்டும்.

கன்னடத்தில் இவ்வாறு வருமொழி முதலில் வந்த வல்லினம் மிகாமல் மெல்லினமாக ஒலித்து நிற்றல் உண்டு.

(புலி + தோல்) ஹுலி + தொகலு (**huli+togalu**)<br>> ஹுலிதொகலு (**hulidogalu**)

தமிழிலும் அத்தகைய தொகைகள் உள்ளன.

காய் + கொம்பு > காய்கொம்பு (காய்க்கின்ற கொம்பு)

காய்கொம்பு என்ற இத்தொகை வினைத்தொகை. வல்லினம் மிகின் காய்க்கொம்பு என வேற்றுமைத் தொகையாய், காயினையுடைய கொம்பு எனப் பொருள் வேறுபடும்.

**மெய் இடம் பெயர்தல்** (*Metathesis, Euphonic displacement of consonants*)

ஒலிநயம் காரணமாகவோ, விரைவு காரணமாகவோ மெய்யெழுத்துக்கள் ஒரு சொல்லில் இடம்

பெயர்தல் உண்டு. பெரும்பான்மை பேச்சிலும் சிறுபான்மை இலக்கியத்திலும் காணப்படும்.

தசை > சதை விசிறி + சிவிறி
வைசாகி > வைகாசி
குதிரை > குருதை > குர்ரம் (தெலுங்கு)
கொப்பூழ் (தமிழ்) > பொக்கிலி (தெலுங்கு)
> பொக்குழ் (மலையாளம்)
பொக்கிழ் ( ,, )
படர் (தமிழ்) > பரடு (கன்னடம்)

**அடிச்சொற்களில் மெய் கெடல்** *(Rejection of Radical consonants)*

தெலுங்கிலும் கன்னடத்திலும் அடிச்சொற்களின் இடையில் உள்ள ர, ல, ழ முதலிய மெய் கெடுதல் உண்டு. துளுவிலும் தமிழிலும் சில உண்டு. கெடுவன வல்லொலிகளும் அல்ல; மூக்கொலிகளும் அல்ல; இடையின ஒலிகளே ஆகும்.

தெலுங்கு :

நெருப்பு > நிப்பு
பொழுது > பொத்து (தமிழ்-போது)
எருது > எத்து (eddu) மருந்து > மந்து
கொழுப்பு, கொழுமை > கொவ்வு, கொப்பெ (kobbe)

(உடல் > ஒள்ளு என்ற தெலுங்குமொழித் திரிபில் வல்லின மெல்லொலியாகிய டகரமும் அவ்வாறு ஆயிற்று).

கன்னடம் :

மருந்து > மத்து (பழங்கன்னடம்—மர்து)
எருமை > எம்மெ

று :

கொழுமை > கொம்மெ

## அசை கெடல் (*Haplology*)

ஒரே ஒலியுடைய அசைகள் இரண்டு ஒரு சொல்லிலோ தொடரிலோ வரின், ஓரசை கெடுதல் உண்டு.

அருமருந்தன்ன > அருமந்த
ஆதன் தந்தை > ஆந்தை
பூதன் தந்தை > பூந்தை

இவற்றை இலக்கணநூலார் மரூஉ என்பர்.[21]

## உயிர் தோன்றல் (*Anaptyxis*)

ஒலித்தற்கரிய மெய்களிடையே ஒலித்துணையாக உயிர் தோன்றும்.

சொல் + கிறு + ஆன் > சொல்லுகிறான்
வெல் + வ் + ஆன் > வெல்லுவான்

வடசொற்கள் சில இணைந்தியலும் மெய் பெற்றிருப்பன தமிழில் புகுங்கால், இகரம், உகரம் என்பன வற்றுள் ஒன்று பெறும்.[22]

| | | |
|---|---|---|
| வாக்யம் > வாக்கியம் | } | ய ர ல முன் இகரம் பெற்றன |
| வச்ரம் > வச்சிரம் | | |
| சுக்லம் > சுக்கிலம் | | |
| பத்மம் > பதுமம் | } | ம வ முன் உகரம் பெற்றன |
| பக்வம் > பக்குவம் | | |

21. தொல். எழுத்து. ௪௮௩
22. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமும் நகரக் ககரமும்
மிசைவரும் ; ரவ்வழி உவ்வு மாம்பிற. (நன். எழு. 149)

## உயிர் கெடல் (*Syncope*)

இது மேலே கூறிய உயிர்தோன்றல் என்னும் முறைக்கு மாறானது; இடையே உள்ள உயிர் கெடுவதாகும்.

போகும் > போம்
போலும் > போல்ம் > போன்ம்
கலுழும் > கலுழ்ம்[23].

## மொழிமுதல் துணை (*Prothesis*)

ர ல முதலிய மெய்களை மொழிமுதலாக உடைய பிறமொழிச் சொற்கள் தமிழில் புகுங்காலத்து, அ, இ, உ என்னும் உயிர்களில் ஒன்று முன் நிற்கப் பெறும்.[24] ர ல முதலிய மெய்களை மொழிமுதலாக ஒலித்தல் அருமையாதலின், முயற்சியினை எளிதாக்கும்பொருட்டே இவை வரும்.

ரங்கம் > அரங்கம்
லாபம் > இலாபம்
லோகம் > உலோகம்

---

23. செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே ஈற்றுமிசை உகரம்
அவ்விடன் அறிதல் என்மனார் புலவர். (தொ. சொ. உரு அ)

24. ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்(கு)
இய்யும் மொழிமுதல் ஆகிமுன் வருமே. (நன். எழு. 148)

## எ. ஒலியளவு முதலியன

### ஒலியளவு

ஓர் எழுத்துப் பிறந்து நின்று முடியும் கால அளவே அதன் ஒலியளவாகும். அதனைத் தமிழிலக் கண நூலார் மாத்திரை என்னும் பெயரால் ஓர் அளவு கொண்டு அளந்துள்ளனர். கண் இமைத்தல் அல்லது கைநொடித்தல் என்னும் தொழிற்கு உரிய கால அளவே ஒரு மாத்திரை எனப்படுவது.[1] "இயற்கை மகன் தன் குறிப்பின்றி இரண்டிமையும் ஒருகாற் கூடி நீங்கின காலக்கழிவும் அ எனப்பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும்" எனவும், "அது போலவே, நொடித்தற்றொழிலிற் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக் கழிவும் ஒக்கும்" எனவும் நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளார். கண்ணிமை இயற்கையாக நிகழ்வதாலும், நொடித்தல் "உள்ளத்தான் நினைத்து நிகழ்"வதாலும், முன்னதே சிறப்புடையது என்பது அவர் கருத்து.

இவ்வாறு அளக்கப்படும் ஒலிகளைப் பொதுவாக நான்கு வகைப் படுத்தலாம்.

1. ஒரு மாத்திரை ஒலிகள்
2. இரு மாத்திரை ஒலிகள்
3. ஒரு மாத்திரைக்குக் குறைந்த ஒலிகள்
4. இரு மாத்திரைக்கு மிக்க ஒலிகள்

குற்றெழுத்துக்கள் முதல் வகையைச் சாரும்.[2] நெட்டெழுத்துக்கள் இரண்டாம் வகையைச் சாரும்.[3] குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் முதலியன மூன்றும் வகையைச் சாரும்.[4] உயிரளபெடை நான்காம் வகையைச் சாரும்.

மெய்யெழுத்துக்களின் ஒலியளவு அரை மாத்திரை ஆகும்.[5] அவ்வாறு அரை மாத்திரை பெறுவது உயிருடன் கூடாது தனி மெய்யாய் நிற்கும் போதே யாகும். உயிருடன் கூடி உயிர்மெய்யாய் நிற்கும்போது, அம்மெய்க்கு ஒலியளவில்லை; உயிரின் அளவே உயிர்மெய்யின் அளவாகும்.[6] தனித்து நிற்கும் மெய் அரை மாத்திரையில் குறுகுதலும் உண்டு. மகரம் அவ்வாறு குறுகும்போது மகரக் குறுக்கம் எனப் பெயர் பெறும்.[7] அரை மாத்திரைக்கு மேற்பட்டு ஒலிக்கும் மெய் ஒற்றளபெடை எனப்படும்.

---

2. அவற்றுள், அஇஉ
எஒ என்னும் அப்பால் ஐந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப. (தொல். எழு—ங)

3. ஆஈஊ, ஏஐ
ஓஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப. (ஷை—ச)

4. அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே. (ஷை—கஉ)

5. மெய்யின் அளவே அரையென மொழிப. (ஷை—கக)

6. மெய்யோ டியையினும் உயிரியல் திரியா. (ஷை—க0)

7. அரையளவு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகும் தெரியுங் காலை. (ஷை—கங)

சந்தியக்கரம் எனப்படும் ஐ ஔ இரண்டும் நெட்டெழுத்தின் அளவு பெறுவன.[8] இஃது ஆங்கில ஒலி நூலார்க்கும் உடன்பாடே. ஆயின், தமிழில் உள்ள ஐ ஔ என்பன சந்தியக்கரம் எனக் கொள்ளத்தக்கன அல்லவாதலின், அய், அவ் என்னும் ஒலிகளின் அளவே பெரும்பாலும் பெறுகின்றன. அவ்வாறு ஒலியளவு குறைதல் உணர்ந்தே இலக்கண நூலார் ஐகாரக் குறுக்கம் ஔகாரக் குறுக்கம் எனக் கொண்டுள்ளனர்.[9]

ஆங்கில முதலிய மொழிகளில் குற்றுயிர்க்கும் நெட்டுயிர்க்கும் தனித்தனி எழுத்துக்கள் இல்லை. ஆதலின் அவற்றில், உயிரெழுத்துக்கள் ஓரிடத்தில் நெடிலாகவும் மற்றோரிடத்தில் குறிலாகவும் மாறி ஒலிக்கும்.[10] தமிழில் வெவ்வேறு எழுத்துக்கள் இருத்தலால், தெளிவான பொருள் வேறுபாடும் இருக்கக்

---

8. The dipthongs are of the same length as the "long" vowels. (D. Jones, An Outline of English Phonetics, p. 104).

9. தற்சுட் டளபெழி ஐம்மூ வழியும்
நையும் ; ஔவும் முதலற் றாகும். (நன்னூல். எழு. 95)

அளபெடை தனியிரண் டல்வழி ஐஔ
உளதாம் ஒன்றரை தனிமையு மாகும்.

(அவிநயனார், யாப்பருங்கலவிருத்தி, 2)

10. The custom of regarding certain vowels as long and certain others as short is, to say the least of it, unsatisfactory. The length of the long vowel is very variable, and depends on a variety of circumstances; the so-called short vowels on the other hand are sometimes quite long, and no definite rules can be laid down for the use of the long forms. (D. Jones, An Outline of English Phonetics, p. 109).

காண்கின்றோம். பல், பால், கல், கால் முதலான சொற்களில் உயிரின் ஒலியளவு மாறுதலும் பொருள் வேறுதலும் காண்க.

## ஒலியழுத்தம் (*Accent or Stress*)

ஆங்கிலம் போன்ற மொழிகளில் ஒரு சொல்லில் பல அசைகள் இருந்தால் அவற்றுள் ஒன்றை எடுத்தும், மற்றவற்றைப் படுத்தும் நலிந்தும் ஒலிப்பர். தமிழில் அத்தகைய வேறுபாடின்றி எல்லா அசைகளையும் ஒரேவகையாக ஒலிக்கின்றனர் என்பது சிலர் கருத்து. எடுத்தொலிக்க வேண்டிய இடங்களில் ஏகாரம் முதலிய இடைச்சொற்களைச் சேர்த்து வழங்குவதாகவும் அவர் கூறுவர். உண்மையை ஆராய்ந்தால், அவர் கருத்துப் பொருந்தாமை தெரியவரும்.

ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு அவ்வளவு மிகுதியாக ஒலியழுத்தம் (*stress*) திராவிட மொழிகளில் இல்லை என்று கூறலாம். ஆனால் திராவிட மொழிகளிலும் அஃது ஓரளவு அமைந்திருக்கின்றது. தமிழ் மொழியில் அஃது அமைந்திருத்தலை இலக்கண நூலாரும் உரையாசிரியரும் குறித்திருக்கின்றார்கள்.[11]

---

11. எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பின்
திரிபும் தத்தமில் சிறிதுள வாகும். (நன்னூல். எழு. 88)

'வந்தனன்' எனத் தெரிநிலை, தொழின்மை மேற்படத் தொழிலுடைப் பொருள் கீழ்ப்பட முற்றாய் நின்றுணர்த்தியவாறுபோல, 'உடையன்' எனக் குறிப்பு வினையும் உடைமை மேற்பட உடையான் கீழ்ப்பட முற்றாய் நின்றுணர்த்துதலுங் கொள்க. 'வந்தான்' 'உடையான்' எனப் பெயராய வழித் தொழிலுடைப் பொருளும் உடையானும் மேற்பட்டுத் தோன்றுமா றறிக. (சேனாவரையர், தொல். சொல். உகரு)

எடுத்தல், படுத்தல், நலிதல் என்னும் வேறுபாடுகள்[12] மிக நுண்ணியமுறையில் இருத்தலால், அவற்றைப் பிறமொழியினர் உணர்தல் எளிதன்று. ஆயினும் கால்டுவெல் உணர்ந்து அதன் உண்மையை உடன்பட்டிருக்கின்றார். அவர் கருத்துப்படி, ஒரு சொல்லின் முதலசையை எடுத்தும், பிற அசைகளைப் படுத்தும் ஒலிக்கின்ற முறை தமிழ்முறையாகும். தொகைச்சொற்களில் நிலைமொழியின் முதலசையை மிக எடுத்தும், வருமொழியின் முதலசையை ஓரளவாக எடுத்தும் ஒலித்தல் மரபு. 'அடங்குகிறது' என்ற சொல்லில் 'அட' என்ற முதலசையில் எடுத்தலோசை அமைந்தமை காண்க. ஆனால் 'ஓடுவான்' என்ற சொல் வினைமுற்றாயிருக்கும்போது முதலசையில் எடுத்தலோசையும், அதுவே வினையாலணையும் பெயராக நிற்கும்போது ஈற்றசை பாலுணர்த்தும் சிறப்பால், அதன்கண் எடுத்தலோசையும் அமைந்திருத்தல் காண்க.

தமிழில் முதனிலைத் தொழிற்பெயரென்றும், முதனிலை திரிந்த தொழிற்பெயரென்றும் ஒரு வேறுபாடு காணப்படுகின்றது. பிடி, அடி முதலியன முதனிலைத் தொழிற்பெயர்களாம். ஊண், கேடு முதலியன முதனிலை திரிந்த தொழிற்பெயர்களாம். உண், கெடு என்னும் அடிச்சொற்களை எடுத்தொலித்த காரணத்தால் நாளடைவில் அவற்றின் உயிர் நீண்டு ஊண்,

12. There are many degrees of stress, but for practical purposes it is sufficient to recognize three at most, which we may call primary, secondary and weak. Weakly stressed syllables may be termed unstressed. (G. Noel-Armfield, General Phonetics, p. 54).

கேடு எனத் திரிந்தன எனலாம். பிடி, அடி முதலிய வற்றில் அவ்வாறு எடுத்தலோசை சிறவாமையால், அவை திரியாமல் நின்றன எனலாம். இவ்வாறு எடுத்தல் முதலிய வேறுபாடுகளால் சொற்களின் உருவமும் திரியக் காண்கின்றோம்.[13]

'போகிறான்' என்ற சொல்லைப் 'போறா°' என ஒலிக்கின்றனர். இங்கும் ஓசை வேறுபாட்டால் சொல்லுருவம் மாறுதலைக் காணலாம். 'போ' என்னும் பகுதியில் எடுத்தலோசை இருத்தலால் அது மாற வில்லை. 'கிறான்' என்ற மற்ற அசைகளில் எடுத்த லோசையின்றிப் படுத்தலோசையும் ஈற்றில் நலித லோசையும் அமைந்தமையால் 'றா' தெளிவாகக் கேட்க, இறுதி மெல்லின னகரம் மறைந்தது; ஆயி னும் அதன் அறிகுறியாக 'றா' என்பதில் உள்ள ஆகார உயிர் மூக்கின் உயிராக ஒலிக்கப்படுகின்றது. இவ்வாறே வினைமுற்றுக்கள் பலவற்றில் பகுதி யொழிந்த அசைகள் திரிந்தும் கெட்டும் இருத்தலைக் காணலாம். வினைமுற்றுக்களின் பகுதிமட்டும் திரி யாதும் கெடாதும் நிற்கும் காரணம், முற்கூறியவாறு எடுத்தலோசை அதனிடத்து நிற்றலேயாகும்.

செய்யுளில் மோனை எதுகை என்னும் தொடை யமைந்த சொற்களின் முதலசை மற்ற அசைகளை விட எடுத்தொலிக்கப்படுகின்றது. ஒவ்வோரடியி லும் பெரும்பான்மையும் முதற்சீரும் மூன்றும் சீரும்

---

13. ஆங்கிலத்தில் கன்டக்ட் (conduct) என்னும் வினை, தொழிற்பெயராகும்போது ஒலியழுத்தம் பெறுவதால் கான்டக்ட் (conduct) எனத் திரிதல் காண்க. இதுபோன்ற சொற்கள் பல ஆங்கிலத்தில் உள்ளன.

மோனையாக அமைதலின் அவற்றின் முதலசைகள் எடுத்தொலிக்கப்பெறும். ஒவ்வொரு செய்யுளிலும் அடிதோறும் முதலசையில் எதுகை அமைதலின் அம் முதலசைகளும் எடுத்தலோசை பெற்றவையாகும்.

ஒரு சொல்லின் ஒலியழுத்தத்தில், சொல்லின் முதனிலை இறுதிநிலைகளை எடுத்தும் படுத்தும் ஒலித்தல் உண்டெனக் கண்டோம். ஒரு வாக்கியத்திலும் இவ்வாறே ஒலியழுத்தம் உண்டு.[14] வாக்கியத்தை ஒலிக்கும்போது, ஒரு சொல்லை எடுத்தும் ஒரு சொல்லைப் படுத்தும் ஒலித்துப் பொருள் வேறுபாடு உணர்த்தும் முறை தமிழில் உள்ளது. நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரை செய்யும்போது இவ்வாறு சொற்களை எடுத்தும் படுத்தும் ஒலித்துப் பொருள் காண்கின்றார்.[15] பேச்சுவழக்கில் இம்முறை இயல்பாக அமைந்துள்ளது. "நான் பூனையைப் பார்த்தேன்" என்னும் வாக்கியத்தில் உள்ள மூன்று சொற்களில் ஒன்றை எடுத்தும் ஏனையவற்றைப் படுத்தும் ஒலித்து மூன்று வேறு வேறு பொருள்களை உணர்த்தலாம்.

---

14. We do not utter all the words of a sentence, nor all the syllables of a word, nor indeed, all the sounds of a syllable at the same musical level or pitch. This rise and fall in musical pitch is called, in the language of phonetics, intonation. Intonation very often seems to modify the meaning of a word or of a sentence. (G. Noel-Armfield, General Phonetics, pp. 66, 69.)

15. முற்படக் கிளந்த என எடுத்தல் ஓசையாற் கூறவே, பிற் படக் கிளந்த எழுதிணை உளவாயிற்று.

(நச்சினார்க்கினியர், தொல். பொருள். க)

(1) 'நான்' என்னும் எழுவாயை எடுத்தொலித்தால், "நான்தான் பார்த்தேன்; வேறு யாரும் பார்க்கவில்லை" என்று பொருள்படும்.

(2) 'பூனையை' என்னும் செயப்படு பொருளை எடுத்தொலித்தால், "நான் வேறொன்றையும் பார்க்கவில்லை; பூனையைமட்டும் பார்த்தேன்" என்று பொருள்படும்.

(3) பார்த்தேன் என்ற சொல்லை மட்டும் எடுத்தொலித்தால், "நான் வேறொன்றும் செய்யவில்லை; பூனையைப் பிடிக்கவில்லை; வாளா பார்த்தேன்" என்று பொருள்படும்.

இது வாக்கிய ஒலியழுத்தம் எனலாம்.

வாக்கியம் முழுவதனையும் ஒலித்திடும்போது எடுத்தல் படுத்தல் இல்லாமலும் ஒருவகை வேறுபாட்டை உண்டாக்கலாம். இதுவும் பேச்சுவழக்கில் இயல்பாக அமைந்தது. "நீ சொன்னது மெய்" என்னும் வாக்கியத்தை ஒலிக்கும் வகையால் (1) நீ சொன்னது உண்மைதான் என்ற எளிய பொருளையும் (2) நீ சொன்னது பொய் என்ற எதிர்மறைப் பொருளையும் உணர்த்தலாம். இவ்வாறே ஒவ்வொரு வாக்கியத்திற்கும் எதிர்மறைப் பொருளை உணர்த்தும் ஒலிவகை உள்ளது. இந்த எதிர்மறைப் பொருளை எள்ளுங் குறிப்போடு கலந்து உணர்த்துதலும் உள்ளது. "நீ எவ்வளவு பெரியவன்!" என்னும் வாக்கியத்தை அவ்வாறு ஒலித்துக் காணலாம்.

"அவன் இங்கே வந்தான்" என்னும் வாக்கியம் செப்பாக வழங்குவதே பெரும்பான்மை. ஆயின்,

அந்த வாக்கியத்தை ஒலிக்கும் வேறுபாட்டால், "அவன் இங்கே வந்தானு?" என்ற வினுவாகப் பொருள் பயக்கச் செய்யலாம். இவ்வாறே, ஆ ஓ என்ற வினு இடைச்சொல் இல்லாமல், "நீ வந்தாய்" முதலான வாக்கியங்களை வேறுபட ஒலித்து "நீ வந்தாயா" முதலான வினுப்பொருளை உணர்த்தலாம்.

இவ்வாக்கியங்களில் எதிர்மறைப் பொருளும், எள்ளல் பொருளும், வினுப் பொருளும் உணர்த்தும் இடைச் சொற்கள் இன்றியே அவ்வப்பொருள் உணர்த்தப்படல் காணலாம். இவ்வாறு அவ்வப் பொருளை உணர்த்துவது ஒலிவகையே (*intonation*) ஆகும்.

## ஒலியசை முறை (*Principles of Syllabation*)

எழுத்துக்கள் சில சேர்ந்து சொற்களாக அமைகின்றன. அவ்வாறு சொற்கள் அமையும் முறையில் எளிமையும் உண்டு, அருமையும் உண்டு. திராவிட மொழிகளில் எளிமையே காணப்படுகின்றது. ஒலித்தற்கரிய கூட்டொலிகளையும் ஒலியமைப்பிற்குக் கூடா ஒலிகளையும் திராவிட மொழிகள் ஒதுக்கி வந்திருக்கின்றன. உயிரும் மெய்யும் சேர்ந்து ஒலித்தற்கு எளியனவாக உள்ள அசைகளே சொற்களாக அமைந்துள்ளன. 'க்ஞ' முதலான கூட்டொலிகள் அக்ஞானம் முதலிய சொற்களில் உள்ளன. அத்தகைய வட சொற்கள் தெலுங்கு கன்னட மலையாள மொழிகளில் காணப்பட்டாலும், அவற்றை அந்த மொழிகளின் இயற்கையான ஒலிகளாகக் கருதலாகாது. பிறமொழியின் சொற்களை அவ்வாறே ஏற்றுக்

கொள்ளுவதால், அக்கூட்டொலிகள் அம்மொழிகளில் காணப்படுகின்றன. பிறமொழிச் சொற்களை அவ் வாறே ஏற்றுக்கொள்ளாமல், திராவிட ஒலிமுறைக் கேற்ப அமைத்துக் கொள்ளும் மொழி தமிழே. தமிழ் மொழியில் பழைய திராவிட மொழியின் ஒலி யமைப்பு இன்னும் இருந்துவரக் காரணம் அதுவே. அதனால் அக்ஞானம் என்னும் வடசொல் தமிழில் அஞ்ஞானம் ஆகும்.

சொல்லின் முதலில் உயிரேனும் மெய்யேனும் வருதல் உண்டு. தமிழ் மொழியில் உள்ள பன் னிரண்டு உயிரும் மொழி முதலாக வரும்.[16] மெய் யெழுத்துக்களில் க ச த ந ப ம வ ய ஞ என்பவை முதலில் வருவன.[17] ஏனைய மொழிமுதலில் வாராக் காரணம், அவை முதலில் ஒலித்தற்கு அரிய ஒலிகளாக இருத்தலே யாகும்.

இந்த மெய்யெழுத்துக்களும் மொழி முதலாக வரும்போது உயிருடன் கூடியே வருமெனத் தொல் காப்பியனார் கூறியுள்ளார்.[18] மற்றொரு மெய்யுடன்

---

16. பன்னீருயிரும் மொழிமுதலாகும். (தொல்.எழுத்து.௫௯)

17. மொழிமுதல் எழுத்துக்களில் ஙகரம் ஒன்றெனத் தொல் காப்பியனார் விதிக்கவில்லை. ஆயின், பவணந்தியார்,

சுட்டியா எகர வினாவழி அவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே (நன்னூல். எழுத்து. 106)

என விதித்துள்ளார். ஙனம் என்பது ஒரு சொல் எனத் தவறுகக் கொண்டமையால், அங்ஙனம் இங்ஙனம் முதலிய சொற்களைக் கருதி இவ்வாறு விதிக்கலானார். ஆங்கனம் ஈங்கனம் முதலிய சொற்களின் திரிபே அவை என்னும் உண்மை உணர்ந்திருப்பின் இவ்விதி பிறந்திருக்காது.

18. உயிர்மெய் அல்லன மொழிதல் ஆகா. (தொ. எழு. ௬௰)

கூடி முதலில் நிற்றல் இல்லை. ஆங்கிலம் முதலான மொழிகளில் இரண்டு மெய்யும் மூன்று மெய்யும் மொழி முதலில் நிற்கக் காண்கின்றோம்.

state — இருமெய்
strong — மூன்றுமெய்

தமிழில் இவ்வாறு இருமெய் வாராமை கண்ட தொல்காப்பியனார், மெய் மொழிமுதலாகும் போது உயிருடன் கூடியே வருமென்று விதித்துள்ளனர். மெய்யெழுத்துக்கள் இரண்டனைச் சேர்த்து ஒலிக்குங் கால் மூச்சுத்தடை மிகுவதால், முயற்சி அரிதாகின்றது.[19] மொழி ஒரு கருவியே ஆதலின், அதனை எளிதாக்கிச் சிறந்த வகையில் பயன்படுத்த விரும்பும் மக்கள் இத்தகைய சீர்திருத்தம் செய்து கொள்ளுதல் இயற்கை. அதனால், ஒலித்தற்கரிய கூட்டொலிகளை ஆங்கில மொழியினர் ஒலிக்காமல் விட்டு வருகின்றனர். *knife, know, gnow* முதலான சொற்களில் உள்ள முதல் மெய் ஒலிக்கப்படாமைக்கு இதுவே காரணமாகும்.[20]

---

19. The difficulty is increased when we have to pronounce two or more consonants together.... Accurate pronunciation therefore requires great effort, and since, according to an observation of Locke, labour for labour's sake is against nature, the tendency always exists of making as little effort as is consistent with the necessity of making oneself understood. (R. G. Bhandarkar, Collected works, Vol. IV, p. 251.)

20. We know that it is not because, by any force inherent in the word itself, the fuller form grew into the simpler, but because the combination kn, as initial, was somewhat difficult for men's organs to utter...the corruption went on gaining in popularity, until it became the rule of

சொல்லின் முடிவிலும் இரண்டு மூன்று மெய் யெழுத்துக்கள் நிற்றல் இல்லை.[21] போன்ம் என்னும் சொல்லின் இறுதியில் னகரமும் மகரமும் ஈரொற் றாய் நிற்கும் என்றும், அவ்விடத்தும் மகரம் முற்றி லும் ஒலிக்காமல் குறுகி ஒலிக்கும் என்றும் தொல்காப்பியனார் கூறியுள்ளார்.

செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் றுகும்.
னகாரை முன்னர் மகாரம் குறுகும்.[22]

தனி மெய்யாக நிற்குமிடத்தும், எல்லா மெய் களும் வரத்தக்கன அல்லன. இடையினமாகிய எல்லா மெய்களும் மொழியிறுதியில் நிற்பன. மூக்கினத்துள் ஙகரம் நிற்றல் இல்லை. அதனை ஈற்றில் ஒலித்தல் அருமையாகும். ஏனைய ஞ ண ந ம ன என்னும் ஐந்து மெய்களும் ஒலிக்கும்போது மூக்கின் வழியாக மூச்சு வெளிப்படுதலின் தடையைப் போக்கும் முயற்சி இல்லை. ஆயின், வல்லினமாகிய க ச ட த ப ற என்னும்

---

our speech to silence the mute before the nasal in all such words (as in knife, knit, gnat, gnaw, etc.) (W. D. Whitney, Language and the Study of Language, p. 42.)

21. வடமொழியிலும் இரண்டு மெய்யெழுத்துக்கள் இறுதி யில் நிற்றல் இல்லை. கிரேக்க மொழியில் ந,ச,ர என்னும் மெய் யெழுத்துக்கள் மட்டுமே ஈற்றெழுத்தாவன. சீனமொழியில் மூக்கின மெய் மட்டுமே ஈற்றில் நிற்கும். இதாலிய மொழியிலும் பாலினேஷிய மொழியிலும் உயிரெழுத்தே இறுதியில் வரும். ஆங்கில மொழியில் மட்டுமே ஓர் உயிர் எழுத்தைச் சூழ்ந்து ஆறு ஏழு மெய்யெழுத்துக்கள் நின்று சொல்லமையும் முறை உளது. splints, strands, twelfths போல. (Whitney, Language and the Study of the Language, p. 95).

22. தொல். எழுத்து. ருக, ருஉ

ஆறு மெய்யும் ஈற்றில் நின்று ஒலித்தல் பெரு முயற்சி யாகும். வெடியினம் (*plosives*) என்று ஒலிநூலார் பெயரிட்டதற்கேற்ப, நா மற்றோர் உறுப்போடு உறப் பொருந்தித் திடீரெனப் பிரிந்தால் அவை பிறக்கும். இத்தகைய முயற்சி சொல்லின் முடிவில் இருத்தல் நன்றன்று. ஆதலின், இந்த மெய்கள் ஆறும் குற்றிய லுகரத்தின் துணை கொண்டு சொல்லின் இறுதியில் நிற்றல் உண்டென்று தொல்காப்பியனார் ஓதியுள் ளார்.[23]

ஆதலின், தமிழில் சொல்லின் இறுதியில் நிற்கும் மெய்யெழுத்துக்கள் ஞ ண ந ம ன ய ர லவ ழ ள என்னும் பதினொன்றே யாகும்.[24] உயிரெழுத் துக்கள் பன்னிரண்டும் இறுதியில் வரும். தெலுங்கு கன்னடம் துளு என்னும் திராவிட மொழிகளில் ஒவ் வொரு சொல்லும் உயரீருகவே முடியும். மலையாளம் தமிழ் முறையைப் பின்பற்றிய போதிலும், எல்லாச் சொற்களையும் உயிரீருக முடிக்கவே பெரும்பாலும் முயல்கின்றது. ஒலியெளிமை கருதியே இப்போக்கு இம்மொழிகளில் காணப்படுகின்றது. மண், பொன், நெல் என்னும் மெய்யீற்றுச் சொற்களும் ஒலித்தற்குச் சிறிதளவு அருமையாக இருத்தல் பற்றி, தமிழ் மக்களின் பேச்சில், அவை மண்ணு, பொன்னு, நெல்லு என்று குற்றியலுகர ஈருக ஒலிக்கப் படுகின்றன.

---

23. நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே. (தொல். எழுத்து. ௩௬)

24. ஞணநமன யரல வழள என்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி. (ஷை—எ அ)

சொற்களின் இடையே உயிரெழுத்துக்கள் இரண்டு சேர்ந்து வருவதில்லை. அவை இரண்டு வரின், அவற்றை உடன்படுத்த வகரம் அல்லது யகரம் உடம்படு மெய்யாக வரும். மெய்யெழுத்துக்கள் பல வாறு மயங்கி வரும். தொல்காப்பியனார் கூறியுள்ள வாறு:

| | |
|---|---|
| கட்க, கட்சி, பெட்பு<br>விற்க, முயற்சி, கற்பு<br>வெல்க, வல்சி, வள்பு | ட ற ல ள முன்<br>க ச ப |
| கொல்யானை<br>நல் வழி<br>வெள் யாறு<br>கள்வர் | ல ள முன்<br>ய வ |
| எண்கு, பண்பு, வெண்மை<br>நன்கு, அன்பு, மென்மை | ண ன முன்<br>க ச ஞ ப ம ய வ |
| ஆய்க, ஆர்க, ஆழ்க<br>பாய்ச்சு, பார்த்தல், கீழ்மை<br>சாய்வு, சார்பு, வாழ்வு | ய ர ழ முன்<br>மொழி முதல் மெய்கள் |

தொல்காப்பியனார் காலத்து வழங்கிய சில அரிய ஒலிகள் இக்காலத்து இல்லாமற் போயின. காலஞ் செல்லச் செல்ல, இவ்வாறு சில ஒலிகள் குறைதல் இயல்பே. எடுத்துக்காட்டாக ஞ ந ம வ என்னும்

---

25. டறலள என்னும் புள்ளி முன்னர்க்
கசப என்னும் மூவெழுத் துரிய. (தொல். எழுத்து. உங)

26. அவற்றுள்,
லளஃகான் முன்னர் யவவும் தோன்றும். (ஷை—உச)

27. அவற்றுள், ணனஃகான் முன்னர்க்
கசஞப மயவவ் வேழும் உரிய. (ஷை—உரு)

28. யரழ என்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும். (ஷை—உகூ)

மெய்யெழுததுககளை அடுத்து யகரம் நிற்றல் உண்டு எனத் தொல்காப்பியனார் கூறியுள்ளார். ஆயின், அவ்வாறு நிற்றலை விளக்கும் சொற்கள் இல்லாமை கண்ட நச்சினார்க்கினியர், "இங்ஙனம் ஆசிரியர் சூத்திரம் செய்தலின் அக்காலத்து ஒருமொழியாக வழங்கிய சொற்கள் உள என்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன" என்றார்.[29] மகரத்தின் முன் வகரம் நிற்கும் என்று தொல்காப்பியனார் கூறியதற்கும் இவ்வாறே, "இதற்கும் உதாரணம் இக்காலத்து இறந்தன" என்றார்.[30] ஆதலின் காலப்போக்கில் ஒலியசை முறையில் மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டே வருகின்றன என அறியலாம்.

ங ஞ ண ந ம ன என்னும் மூக்கின மெய்களை அடுத்து அவற்றின் இனமாகிய கசடதபற நிற்றல் பெருவழக்காகும்.[31]

அங்கு, அஞ்சு, அண்டு, பந்து, கம்பு, கன்று.

இவையெல்லாம் ஒரு மெய்யின் முன் வேறு மெய் மயங்கும் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாகும். இவ்வாறு மயங்காத மெய் நான்கு க ச த ப என்பன. இவற்றின் முன் வேறு மெய் வருவதில்லை; அவ்வம் மெய்யே வரும்.

---

29. தொல். எழுத்து உஎ
30. ஷை—உஅ
31. ஙஞண நமன எனும் புள்ளி முன்னர்த்
    தத்தம் இசைகள் ஒத்தன நிலையே (தொல். எழுத்து உரு)
32. கசதப ஒழித்த ஈரேழன் கூட்டம்
    மெய்ம்மயக் குடனிலை ரழஒழித் தீரெட்
    டாகுமிவ் விருபால் மயக்கும் மொழியிடை
    மேவும்; உயர்மெய் மயக்கள வின்றே. (நன். எழு. 110)

*விக்கல், அச்சம், அத்தன், செப்பம்*

இவ்வாறு ஒரு மெய்யின் முன் அம்மெய்யே வந்து மயங்கும் மயக்கம் உடனிலை மெய்ம்மயக்கம் எனப்படும்.[32] அவ்வாறு மயங்காத மெய் இரண்டே: அவை ர ழ என்பன.[33]

இம்முறைக்கு வேறான ஒலியசைமுறை வடமொழி முதலான பிறமொழிகளில் அமைந்துள்ளது. ஆதலின், பிறமொழிச் சொற்கள் தமிழில் புகும் போது, மெய்களுக்கிடையே உயிர் புகுத்தியோ, மெய்களில் ஒன்றை மற்றொன்றாகத் திரித்தோ (*anaptyxis or assimilation*) ஒலித்தற்கு எளியன ஆக்குவர். ஏனைத் திராவிட மொழிகளில் வடசொற்கள் பல கலந்து அந்த ஒலிமுறை பழகிவிட்டமையால், இவ்விதிகள் போற்றப்படுவதில்லை.

*தத்வ > தத்துவ — உயிர் புகுதல்*
*க்ருஷ்ண > கிருட்ண*
*> கிருட்டின — ,,*
*அக்ஞானம் > அஞ்ஞானம் — மெய் திரிதல்*[34]
*பக்தி > பத்தி ,,*

---

33. *மெய்ந்நிலை சுட்டின் எல்லா எழுத்தும்*
*தம்முன்தாம் வரூஉம் ரழஅலங் கடையே.*
(தொல். எழுத்து. ௩0)

34. *ஆங்கிலத்திலும் பின்வரும் சொற்களில் இத்தகைய மாறுதல் காணலாம் :*

dis - fuse > diffuse
in - possible > impossible
ad - pend > append
ad - firm > affirm
ad - sign > assign

ஆங்கிலச் சொற்கள் தமிழில் புகும்போதும் இவ்வாறு மாறுதலடைந்து தமிழின் ஒலி முறையைப் பெறுகின்றன.

இங்க்லாந்த் > இங்கிலாந்து — உயிர் புகல்
க்றைஸ்ட் > கிறிஸ்து
> கிறித்து — திரிதல்

தமிழில் இவ்விதிகள் போற்றப்படுமளவு ஏனைய திராவிட மொழிகளில் போற்றப்படவில்லை. ஆதலின், தெலுங்கு முதலியவற்றில் இவை திராவிட மொழிச் சொற்கள் என்றும், இவை பிறமொழிச் சொற்கள் என்றும் ஒலியமைப்பை நோக்கிப் பிரித்துவிடலாம். தமிழில் புகும் பிறமொழிச் சொற்கள் திரிந்தே புகுவதால், தமிழ்ச் சொற்கள் போன்றே அமைந்துள்ளன. தமிழ் மொழியின் ஒலியமைப்பு எவ்வாறு போற்றப்பட்டு வருகின்றதென்பது இதனால் அறியப்படும்.

ஆயினும், வடமொழியின் கலப்பால் நாளடைவில் மேற்கண்ட விதிகள் மெல்ல மெல்ல மாறத் தொடங்கியுள்ளன. இன்று பக்தி, யுக்தி, தத்வம் என்று பேசவும் எழுதவும் காண்கின்றோம். நெடுங் காலத்திற்கு முன்னரே பவணந்தி முனிவர் மொழி முதல் வரும் எழுத்துக்களைப்பற்றிய விதிகளை மாற்றத் தொடங்கினார். எடுத்துக்காட்டாக,

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔஎனும் மூன்றலங் கடையே[35]

எனத் தொல்காப்பியனார் கூறியிருக்க, இரண்டாயிரம் ஆண்டுகள் கழித்து வந்த பவணந்தியார் சகரம் எல்லா

35. தொல். எழுத்து. கூ௨-

உயிருடனும் மொழிமுதலில் வரும் எனக்கொண்டு, அவ்விதியை மாற்றத் தொடங்கினர். காரணம் என்னவெனில், தொல்காப்பியனார் காலத்தில் வழங்காத சங்கம், சகடம் முதலான வடசொற்கள் நன்னூலார் காலத்தில் பயின்று வந்தமையே ஆகும்.[36]

யகரமெய் இன்னவுயிரோடுகூடி மொழிமுதலில் வரும் என விதிக்கும் தொல்காப்பியனார்,

'ஆவோ டல்லது யகர முதலாது'[37]

என விதித்திருக்க, நன்னூலாரோ,

'அஆ உஊ ஓஔ யம்முதல்'[38]

என்றார். யவனர், யானை, யுகம், யூகி, யோகம், யௌவனம் என்பன உரையாசிரியர் காட்டும் உதாரணங்கள். யானை என்பதொன்று தவிர ஏனைய வடசொற்களே.

ஞகாரம் ஆஎஒ என்னும் மூன்றுயிரோடு மட்டும் மொழிமுதலாம் எனத் தொல்காப்பியனார்,

"ஆஎஒ
என்னும் மூவுயிர் ஞகாரத் துரிய"[39]

---

36. இனி முதலா மென்ற பத்துயிர் மெய்யுள் வகர முதலிய நான்கினையும் விதந்து கூறவே, ஒழிந்த ஆறு மெய்யும் பன்னிரண்டுயிரோடு முதலாமென்பது அருத்தாபத்தியாற் பெறும்.

இனி, "சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே—அஐ ஔ எனும் மூன்றலங் கடையே" என்பது முதலாக இன்னோரன்ன சில எழுத்துக்களை மொழிக்கு முதலாகா என ஆசிரியர் தொல்காப்பியர் விலக்கினராலோ எனின், இவ் வடமொழிகளும் திசைச்சொற்களும் அக்காலத்து இவ்வாறு தமிழின்கட் பயின்று வாராமைபற்றி யென்க. (நன்னூல், எழுத்து. 106—விருத்தியுரை.)

37. தொல். எழுத்து. ௬௫

38. நன்னூல், எழுத்து. 104

என விதித்தார். ஆயின், ஞமலி முதலிய சொற்களின் வழக்காற்றைக் கண்ட பவணந்தியார்,

"அஆஎ ஒவ்வொ டாகும ஞம்முதல்"[40]

என அகரமும் சேர்த்து விதித்தார். இவையெல்லாம் கால வழக்கினுனே, பிறமொழிச் சொற்கள் புகப்புக, ஒலிமுறைகளும் மாறும் என்னும் உண்மையைத் தெரிவிக்கின்றன.

தமிழில் இவ்வாறு கூட்டொலிகள் குறைவாக இருத்தலாலும், பொருந்தா ஒலிகள் கூடாமல் இருத்தலாலும், இவற்றிடையே ஒலியெளிமை கருதி உயிர்புக்கு நிற்றலாலும், சொற்கள் தம்மளவில் நீண்டு அமைந்து காணப்படுகின்றன. தமிழ் மொழி நீண்ட சொற்களாலாகியது என்று பிறர் கருதத்தக்கவாறு உள்ளது. வடமொழி முதலான இந்தோ–ஐரோப்பிய மொழிகளில் இத்தகைய நெடுஞ்சொற்கள் (பெருகுகின்றது, இருக்கின்றன முதலியன போல) இல்லை என்பர். ஆயினும், அம்மொழிகளில் இத்தகைய எளிய முறையில் அமைந்த ஒலியசைகள் இல்லை என்பது எவரும் மறுக்கமுடியாத உண்மையாகும். அவற்றின் சொற்கள் சுருக்கியும் குறுக்கியும் அமைக்கப்பெற்று அரிதின் ஒலிக்கவேண்டியிருக்கின்றன. தமிழ் மொழியின் சொற்கள் நீண்டு பெருகியிருப்பினும் எளிதின் ஒலிக்கப்படுவனவாக உள்ளன. இது தமிழொலி முறையின் சிறப்பியல்பாகும்.

---

39. தொல். எழுத்து. கூச

40. நன்னூல், எழுத்து. 105

## அ. அடிச்சொற்கள் (Roots)

திராவிட மொழிகளில் அடிச்சொற்கள் தெளிவாய்ப் பிரித்தறியும் நிலையில் உள்ளன; சொற்களின் அடிப்படையான கருத்துக்களை உணர்த்தி நிற்கின்றன. அவை பெரும்பாலும் ஓரசைச் சொற்களாகவே இருக்கின்றன.

சொல்லுகின்றான் — சொல் : அடிச்சொல்

வருகின்றான் — வர் : அடிச்சொல்

பழுத்தது — பழு : அடிச்சொல்

(உகரம் — ஒலிநயம் பற்றி வந்தது)

திராவிட மொழியில் முதன் முதலில் ஓரசைச் சொற்களே இருந்துவந்தன என்பது கால்டுவெல் கருத்து.[1] எல்லா மொழிகளிலும் தொடக்கத்தில் பல வசைச் சொற்கள் இருந்தன என்றும், படிப்படியே அவை மருவியும் திரிந்தும் ஓரசைச் சொற்களாக மாறுவதே மொழிகளின் இயல்பு என்றும், ஜெஸ்பெர்ஸன் கருதுகின்றார்.[2] இஃது இன்றும் மொழி வளர்ச்சியில் காணத்தக்க உண்மையாகும். ஆதலின்,

---

1. Caldwell, A Comparative Grammar of the Dr. Languages, p. 196.

2. Language proceeds from original polysyllabism towards monosyllabism, just as the history of religion does not pass from the belief in one god to the belief in many gods, but universally from polytheism towards monotheism. We have to imagine primitive language as consisting of very long words, full of difficult sounds, and sung rather than spoken. (Jespersen, Progress in Language, p. 18.)

பழைய திராவிடத் தாய்மொழியில் நீண்ட சொற்கள் இருந்துவந்தன என்றும், அவையே இன்று சிறு சிறு சொற்களாகக் கல் மண் முதலியனவாக நின்றுள்ளன என்றும் எண்ணவேண்டுவதாக உள்ளது.[3] இவ்வாறு பலவசைச் சொற்கள் ஓரசைச் சொற்களாக மாறுதற்குக் காரணமான மொழி வளர்ச்சியை அளந்து கூறல் இயலாது. அதற்கு நெடுங்காலம் சென்றிருக்கும். இடையிடையே ஒலித்திரிபுகளும் எத்தனை வகையாகவோ நிகழ்ந்திருக்கும். இறுதியில் பேசுவதற்கு எளியனவாகவும் தக்கனவாகவும் இப்போது வழங்கும் வடிவங்களைப் பெற்று நிற்கின்றன. கல், மண் முதலிய சொல் வடிவங்கள் பழந்தமிழ்ச் செய்யுட்களிலும் காணப்படுகின்றன. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பழைய செய்யுட்களிலும் காணப்படுதலால், இந்தச் சொற்களின் பழமை தெளிவாகின்றது; இவற்றின் பழமையால், மொழியின் தொன்மையும் விளங்குகின்றது. ஆயின், வடமொழி முதலான இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் அடிச்சொற்கள் பேச்சு மொழியில் என்றும் வழங்காதன என்று ஜெஸ்பெர்ஸன் கருதுகின்றார்.[4]

---

3. 'had' என்ற மூன்றெழுத்துடைய ஆங்கிலச் சொல் habaidedeime என்ற பன்னிரண்டு எழுத்துடைய சொல்லின் திரிபு என்பர். இது சொற்கள் நீண்டிருந்து பின்னர்க் குறுகியமைதலை விளக்கும் சான்றாகும். (Jespersen, Progress in Language, pp. 18)

4. We cannot imagine people expressing themselves by means of a language consisting exclusively of roots such as those given by Sanskrit scholars; the highly abstract significations assigned to them would in themselves be sufficient to preclude the idea of such a language existing as a practically useful means of communication—especially

இந்த அடிச்சொற்களுக்கும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் அடிச்சொற்களுக்கும் வேறுபாடு பெரிது. இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் அடிச் சொற்கள் என்று கூறப்படுகின்றவை இலக்கண நூலார் படைப்பே அல்லாமல், வழக்கில் உள்ள சொற் கள் அல்ல. ஆனால் திராவிட மொழியின் அடிச்சொற் கள் இலக்கண நூலார் படைப்பல்ல; நாள்தோறும் வழங்கும் சொற்கள்;[5] இலக்கியத்திலும் பண்டைக் கால முதல் இடம் பெற்று வாழும் சொற்கள்.

நடந்தான் என்னும் வினைமுற்றின் அடிச்சொல் லாக உள்ள நட என்பது இன்றும் பேச்சு வழக்கில் உள்ளதே. நட என்பது ஏவலொருமையாக வழங்கு கின்றது. இவ்வாறே வினைச்சொற்களின் அடிச்சொல் லெல்லாம் ஏவலொருமையாக வழங்கக் காணலாம். பவணந்தி முனிவர் வினையடிகளை "ஏவல் வினைப் பகாப்பதம்" என்று குறித்தது பொருத்தமானதேயா கும்.[6] திராவிட மொழிகளின் பொது இயல்பாகிய இது, நெடுங்காலத்திற்கு முன்பே தனித்துப் பிரிந்து

---

between savage or worse than savage beings. No; of a certainty, roots never were spoken words. (Jespersen, Progress in Language, p. 113.)

5. In the Indo-European group, the root-words do not at all function in a sentence as in the Dravidian languages to this day. (K. Ramakrishnayya, Studies in Dravidian Philology, p. 106.)

6. நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வெளஉரிஞ் உண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கேள் அஃகென்
றெய்திய இருபான் மூன்றும் ஈற்றவும்
செய்யென் ஏவல் வினைப்பகாப் பதமே.

(நன்னூல். எழுத்து. 137)

பெலுஜிஸ்தானத்தில் வழங்கும் பிராஹூய் மொழியிலும் இன்றும் காணப்படுகின்றது.[7] இவ்வுண்மை உணராத வீரசோழிய ஆசிரியர் வடமொழியைப் பின்பற்றித் தமிழ் வினைச்சொற்களுக்குப் பகுதிகளைப் படைத்துக் கூறலானார்.[8]

அடிச்சொற்கள் தனித்தனியே நின்று சொற்றொடராகிப் பொருள் தருதல் உண்டு. 'நீ வா' 'கல் பார்' முதலான வாக்கியங்கள் அத்தகையன. சீன மொழியில் தொடர்கள் இவ்வாறு அமைந்தனவே. அம்மொழியில் அடிச்சொற்களே சொற்கள். அவற்றைவிட வேறு சொற்கள் இல்லை.[9]

'கல்லைப் பார்த்தான்' என்ற தொடரில் கல், பார் என்னும் அடிச்சொற்கள் தனித்தனியே நிற்காமல் ஐ முதலான இடைச் சொற்கள் சேர்ந்து சொற்களாய் நின்று பொருள் தருகின்றன. இந்த முறையே திராவிட மொழிகளில் பெரும்பாலும் உள்ளது.

பொருள் வேறுபாடு புலப்படுத்த அடிச்சொல்லோடு சேர்க்கப்படும் பிற சொற்களை இடைச்சொற்கள் எனத் தமிழ் இலக்கணம் கூறும். அந்த இடைச்

---

7. Denys De. S. Bray, The Brahui Language, Part I, p. 117.

8. 'தமிழுக்கும் பண்ணிய தாதுக்களைப் படைத்துக் கொள்க' (வீரசோழியம், தாதுப்படலம்—1, கிரியாபதப் படலம்—9.)

தமிழ்ச் சொல்லிற்கு எல்லாம் வடநூலே தாயாகி நிகழ்கின்றமையின், அங்குள்ள வழக்கெல்லாம் தமிழுக்கும் பெறும்.

(ஷை—உரை)

9. Abel Hoveloque, The Science of Language, p. 125.

சொற்கள் பலவகைப்படுவன. அவைகளும் தொடக்கத்தில் தனித்தனிப் பொருள் உணர்த்தி அடிச்சொற்களாக இருந்தவையே. படிப்படியே அவை தமக்குரிய பொருள் இழந்து துணை உறுப்புகளாக நிற்கின்றன.

| அடிச்சொல் | | சொல் | | சேர்ந்த உறுப்பு |
|---|---|---|---|---|
| ஆ | — | ஆகு | } | கு |
| விழு | — | விழுங்கு | } | கு |
| பன் | — | பஞ்சு | — | சு |
| நீர் | — | நீந்து | — | து |
| கால் | — | காம்பு | — | பு |

இந்தோ-ஐரோப்பிய மொழிகளிலும் இவ்வாறு அடிச்சொல்லோடு பிற சொல் சேர்ந்து சொல்லாய் வழங்குதல் உண்டு. ஆனால் அம்மொழிகளில் அடிச்சொல்லும் சேர்ந்த சொல்லும் இவை எனத் தனித் தனியே பிரித்தறிதல் அரிது. அவை சிதைந்து கலந்து பிரிக்க முடியாதனவாக மாறியுள்ளன. திராவிட மொழிகளில் அவற்றைப் பிரித்தல் எளிது. இது பற்றியே இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் நிலையை உட்பிணைப்புநிலை (*Inflexional Stage*) என்றும், திராவிட மொழிகளின் நிலையை ஒட்டுநிலை (*Agglutinative Stage*) என்றும் குறிப்பர்.

திராவிட மொழிகள் ஒட்டுநிலையில் இருத்தலால், இருவகை இயல்பு அவற்றிடைக் காண்கின்றோம். ஒன்று, அடிச்சொல் தெளிவாக அறிய நிற்றல். மற்றொன்று, அடிச்சொல் சிதையாவாறு நிற்கவேண்டி, அதனுடன் சேரும் உறுப்புகள் தெளிவாக ஒட்டி நிற்றலால் பலவகைச் சொல்லாய் நீளல். கற்பிக்கின்றன்

என்ற சொல்லில், கல் என்னும் அடிச்சொல் தெளிவாக நிற்றல் காண்க. சேர்ந்த உறுப்புக்கள் சிதைந்து ஒன்றாகாமல் ஒட்டி வளர்ந்து நாலசைச் சொல்லாய் நீளலும் காண்க. திராவிட மொழிகளில் பலவசைச் சொற்கள் பெருகியிருத்தற்குக் காரணம் இதுவே. ஆசியாவிலும், ஐரோப்பாவிலும் உள்ள மொழிகளின் சொற்களைவிடத் திராவிட மொழிச் சொற்கள் நீண்டவை என்றும், அமெரிக்க மொழியின் பலவசைச் சொற்களுக்கு அடுத்தபடியாகக் கருதத்தக்கவை என்றும் கால்டுவெல் கூறுகின்றார்.[10]

மண் என்னும் அடிச்சொல்லோடு 'கு' என்னும் உருபைச் சேர்க்கும்போது மட்கு என்று ஒட்டுதல் பொருந்தும். ஆயின், அவ்வாறு ஒட்டுதல் அருகிய வழக்காகும். இந்தோ-ஐரோப்பிய மொழியாயின், அவை மட்கு என்றோ, மக்கு என்றோ, மணு என்றோ சேர்ந்து ம்ணு (*mnu*) என்று சிதைந்து ஓரசையாய்த் திரிந்திருக்கும். ஆனால், தமிழில் மண்ணுக்கு என்று உகரச் சாரியை பெற்றோ, மண்ணிற்கு என்று இன் சாரியை பெற்றோ, மண்ணினுக்கு என்று இரு சாரியையும் பெற்றோ, பலவசைச் சொல்லாக வளர்ந்து நிற்கக் காண்கின்றோம்.

அனுப்பு, எழும்பு, நிரம்பு முதலான தமிழ் முதனிலைகளை ஆராய்ந்தால் பலவசைச் சொற்களாகக் காணப்படினும், அன், எழ், நிர் (அனு, எழு, நிர)

---

10. The majority of the words in every Dravidian sentence are longer than those of (perhaps) any other language in Asia or Europe, though inferior in length to the words of the polysynthetic languages of America.—Caldwell, A Comparative Grammar of the Dr. Languages, p. 196.

என்பவையே அடிச்சொல்லாகக் கருதத்தக்கவை. ஒலிநயம் பற்றி உகரமும் பொருள் வேறுபாடு கருதி 'பு' என்னும் துணைச்சொல்லும் பெற்று இவை நீண்ட முதனிலைகளாக அமைந்தன.

அடிச்சொற்கள் பொருளை உணர்த்தும் பெயர்களாக அமையும்போது, திணை பால் முதலியவற்றை உணர்த்தும் விகுதிகள் சேரும்; அவற்றோடு வேற்றுமை உணர்த்தும் உருபுகள் சேரும்.

| | | |
|---|---|---|
| ஊர் | ஊரான் | ஊரானை |
| கால் | காலன் | காலனுக்கு |

அடிச்சொற்கள் தொழிலை உணர்த்தும் வினைகளாக அமையும்போது, காலத்தை உணர்த்தும் இடைநிலை சேரும்; பிறவினை விகுதி முதலியன சேரும்; திணை பால் உணர்த்தும் விகுதிகளும் சேரும்.

| | | | |
|---|---|---|---|
| பார் | பார்த்து | பார்த்தான் | |
| செய் | செய்வி | செய்வித்து | செய்வித்தான். |

இவ்வாறு எத்தகைய நீண்ட வினைச்சொல்லையும் பெயர்ச்சொல்லையும் ஆராய்ந்து ஓரசையாக உள்ள அடிச்சொல் இன்னதெனக் காணலாம்.

இந்த அடிச்சொற்களுள் பெயர்க்கு உரியவை என்றும், வினைக்கு உரியவை என்றும் தொடக்கத்தில் வேறுபாடு இருந்திருக்க முடியாது.[11] பேசிய மக்க

11. மொழிநூலார் சிலர் கருத்துப்படி, முதன்முதலில் வினைச்சொற்கள் இன்றியமையாதனவாக இருந்தன. பொருள்களைச் சுட்டியோ வேறு குறிப்பால் குறித்தோ உணர்த்த முடிந்திருக்கும் ஆதலின், பொருள்களை உணர்த்தும் பெயர்ச் சொற்கள் முதலில் தோன்றியன அல்ல என்பர். ஆனால் மாக்ஸ் முல்லர் முதலானோர் மாறுபடக் கருதுகின்றனர். அவர்தம் கருத்துப்படி,

ளின் கருத்தில் பெயர் வினை என்ற பாகுபாடு சிறிதும் இல்லாதிருந்த ஒரு நிலையே மொழியின் தொடக்க நிலையாகும். பல அடிச்சொற்களை ஆராய்ந்து காணின் இவ்வுண்மை புலனாகும்.

| | |
|---|---|
| பூ, பூக்கள், பூவை, பூவிற்கு | —பெயர் |
| பூ, பூத்து, பூத்தது | —வினை |
| காய், காய்கள், காய்களை | —பெயர் |
| காய், காய்த்து, காய்க்க, காய்த்தது | —வினை |
| சொல், சொற்கள், சொல்லன் | —பெயர் |
| சொல், சொல்லி, சொல்ல, சொல்லினை. | —வினை |

ஓரசையாகவுள்ள அடிச்சொற்கள் பல இவ்வாறு இருக்கக் காணலாம்.[12] ஈரசையாக உள்ளவற்றில் சில இவ்வாறு உள்ளன; பல, பெயர் வினை என்னும் வேறுபாடு உணர்த்தி நிற்கின்றன.

பெயர் வினை வேறுபாடு அற்றவை :—

| | |
|---|---|
| மலர், மலரால், மலரை | —பெயர் |
| மலர், மலர்ந்து, மலர்த்த, மலர்ந்தது | —வினை |
| அடி, அடியால், அடிகள் | —பெயர் |
| அடி, அடித்து, அடிக்க, அடித்தான் | —வினை |

வினையுணர்த்தும் செயல்களைச் சைகைகளால் உணர்த்த முடியுமாதலின், ஓநாய் முதலியவற்றைக் கண்டு அஞ்சிய மக்கள், "வருகிறது, வருகிறது" என்று, கத்தாமல் "ஓநாய், ஓநாய்" என்றே கூவியிருப்பராம். (F. Max Muller, The Science of Lauguage, p. 33.) ஆனல் உண்மை அதுவுமன்று; இதுவுமன்று.

12. பெருஞ்செய் ஆடவர் (புறநானூறு—199.5), அறிகொன்று (குறள்—638), கெடுவாக வையாது (குறள்—117) என்பவற்றில், செய், அறி, கெடு என்னும் அடிச்சொற்களே தொழிற் பெயராய் நிற்றல் காண்க.

பெயர் வினை வேறுபாடு பெற்றவை :—

கடல்; கடல்கள், கடலை, கடலுக்கு —பெயர்
மரம், மரங்கள், மரத்தை; மரத்தால் —பெயர்
நட, நடத்து, நடந்து, நடந்தான் —வினை
திற, திறந்து, திறக்க, திறந்தான் —வினை

இந்த அடிச்சொற்களும் இவ்வடிவங்களை அடைதற்கு முன் பொதுவான ஓரசைச் சொற்களாக இருந்திருக்கும் எனக் கருதின், திராவிட மொழியின் அடிச்சொற்கள் பெயர் வினை இரண்டற்கும் பொதுவானவை என்று கொள்ள இடம் உண்டு.[13]

ஓரசையாக உள்ள அடிச்சொற்களை இரண்டு வகைப்படுத்தலாம் :—

(1) உயிரீறாக உள்ள அடிச்சொற்கள். உயிர் பெரும்பாலும் நெடிலாக இருக்கும். வா, போ, தா, ஈ முதலியன.

(2) மெய்யீறாக உள்ள அடிச்சொற்கள். இவற்றில் உயிர் பெரும்பாலும் குறிலாக இருக்கும். நில், சொல், கொள், எண், உண் முதலியன.

---

13. It would appear that originally there was no difference in any instance between the verbal and the nominal form of the root in any Dravidian dialect. Gradually, however, as the dialects become more cultivated, and as logical distinctness was felt to be desirable, a separation commenced to take place. The separation was effected by modifying the root by some formative addition when it was desired to restrict it to one purpose alone.—Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 193.

எஸ்கிமோக்கள் பேசும் மொழியில் இன்றும் பெயர்வினை வேறுபாடு இல்லாதிருத்தல் இங்குக் கருதத்தக்கது. (William Thalbitzer, in "The Absolutive and The Relative in Eskimo," Grammatical Miscellany to Otto Jespersen, p. 328.)

ஒலித்தற்கு அரிய மெய்கள் ஈற்றில் நிற்றல் திராவிட மொழிகளின் ஒலியியலுக்கு மாறுகலின், அவை உகரத்தைத் துணையாகக் கொண்டு நிற்கும். அவையும் இரண்டாம் வகையைச் சாரும். அவை நகு, எடு, அறு முதலியன.

வாழ், கேள், சாய், பார் முதலியன சிறுபான்மை நெடிலடுத்து மெய்யீருக வரும் அடிச்சொற்கள்.

வடமொழியில் ஒரு சில சொற்கள் தவிர, மற்றெல்லாச் சொற்களும் 'தாது' என்னும் வினையடியாகப் (*Verbal root*) பிறப்பவை என்றே கொள்ளப்படுகின்றன. ஆனல், திராவிட மொழிகளில் வினையடியாகப் பிறக்காத பெயர்ச் சொற்கள் பல உள்ளன. தலை, கால், வாய், செவி, நான், நீ, நீர், ஒளி, இருள் முதலியன அத்தகையன. ஆயினும், பெரும்பாலான பெயர்ச் சொற்களுக்கு வினையடி காணமுடியும்.

| பெயர் | | வினையடி | |
|---|---|---|---|
| விரல் | — | விரி | (விரிதல்) |
| கடல் | — | கட | (கடத்தல்) |
| பகல் | — | பகு | (பகுத்தல்) |
| குடல் | — | குடை | (குடைதல்) |
| மரம் | — | மர | (மரத்துப்போதல், உணர்ச்சியறுதல்) |

சில வினையடிகள் (*Verbal roots*) பெயராகும் போது அடையும் மாறுதல் மிகச் சிறிதே யாகும்.

| வினையடி | பெயர் | மாறுதல் |
|---|---|---|
| காண் | — கண் | உயிர் குறுகுதல் |
| நக்கு | — நாக்கு | உயிர் நீளல் |
| மின் | — மீன் | உயிர் நீளல் |

| | | | |
|---|---|---|---|
| செய் | — | கை | (ச> க. தெலுங்கில் செய் என்றால் கை என்றும் பொருள் தரும்.)[14] |
| முகர் | — | மூக்கு | உயிர் நீளலும் பிறவும் |
| நில் | — | நிலம் | அம் சேர்தல் |
| குதி | — | குதிரை | ர்+ஐ சேர்தல் |

**அடிச்சொல்லோடு சேர்வன :**

அடிச்சொல் சிதையாவாறு ஒலித்துணையாகச் சேர்வன சில. அடிச்சொல்லின் பொதுவான பொருளைச் சிறப்பாக ஒன்றனுக்கு உரியதாக்கச் சேர்வன சில. திணை பால் இடம் வேற்றுமை காலம் முதலான வேறுபாடுகளை உணர்த்தச் சேர்வன சில. இவ்வாறு அடிச்சொல்லோடு சேரும் உறுப்புக்களை மூவகைப் படுத்தலாம்.[15]

1, ஒலித்துணையாவன : (*Enunciative Additions*)

2. பொருட் சிறப்புப் பயப்பன : (*Formative Additions or Paritcles of Specialisation*)

3. இலக்கண வேறுபாடு உணர்த்துவன (*Grammatical additions*)

---

14. கன்னடத்தில் கெய் (gey) என்பது செய் என்னும் வினைச்சொல்லின் பொருள் தருவது.

கையற்று (மணிமேகலை—3. 89) என்னும் தமிழ்த் தொடரில் கை என்னும் சொல் செயல் என்று பொருள்படல் காண்க. (கையற்று—செயலற்று.)

15. குயி மொழியில் எந்த அடிச்சொல்லும் தனியே நின்று சொல்லாவது இல்லையாம். அது பெயராகவோ வினையாகவோ அமையுமுன் ஓர் உறுப்புச் சேர்க்கப்படவேண்டுமாம். அவ்வாறு சேர்க்கப்படும் உறுப்புக்களை இந்த மூவகையாகவே பகுப்பர். (W. W. Winfield, A Grammar of the Kui Language, p. 8)

பவணந்தியார் பகுபத இலக்கணம் வகுத்தோதி உறுப்புக்களைப் பகுதி விகுதி இடைநிலை சாரியை சந்தி விகாரம் எனக் குறித்துள்ளார்.[16] பகுதி என்பது பெரும்பாலும் அடிச்சொல்லோடு ஒத்து வரும். சிறு பான்மை வேறுபடும். பெருகிற்று என்பதில் பெருகு பகுதி என்பர். ஆனால் பெர் அல்லது பெரு என்பதே அடிச்சொல்லாகும். உண்டான் என்பதில் உண் என்பதே பகுதியும் அடிச்சொல்லும் ஆகும். பகுதியை முதனிலை என்பர்.

விகுதி என்று இலக்கணம் கூறுவது திணை பால் முதலியன உணர்த்தும் இறுதியுறுப்பாகும். இதனை இறுதிநிலை என்பர்.

இடைநிலை என்பது பெயர்ச்சொல்லில் காலம் உணர்த்தாமல் நிற்கும் உறுப்பாகும். இது வினைச் சொல்லில் காலம் உணர்த்துவதாகும். காலம் உணர்த் தாத பெயரிடைநிலையைப் பொருட்சிறப்புப்பயப் பது எனலாம். காலம் உணர்த்தும் வினையிடை நிலையை இலக்கணவேறுபாடு உணர்த்துவது என லாம்.

வலைஞன் —ஞ்—பெயரிடைநிலை
செய்தான்—த் —வினையிடைநிலை

சாரியை சந்தி விகாரம் என்பவற்றை ஒலித்துணை யாய் அமைவன எனலாம்.

---

16. பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.
(நன்னூல்; எழுத்து. 133)

1. ஒலித்துணையாவன: (*Enunciative additions*)

இவை அடிச்சொற்களோடு சேர்ந்து அவற்றை ஒலித்தற்கு எளியனவாக மாற்றும். பொருளைச் சிறப்பித்தலோ வேறுபடுத்தலோ இவற்றால் இயலாது. பெரும்பாலும் உயிர்கள் இவ்வாறு ஒலித்துணையாகும். அவற்றுள்ளும் உகரமே பயின்று வருவது. மற்ற உறுப்புக்கள் வந்து சேரும்போது இது கெடுதலும் உண்டு.

ஆடு — உகரம் ஒலித்துணையானது.

ஆடு + ஐ — ஆட்டை — } உகரம் கெட்டது.
ஆடு + இன் + ஆன் — ஆடினன் }

எடு — உகரம் ஒலித்துணையானது

எடுத்தான் — உகரம் கெடவில்லை

எடு + ஐ — எடை — உகரம் கெட்டது

கன்னடத்திலும் தெலுங்கிலும் உகரம் ஒலித்துணையாக வருதல் மிகுதி. மெய்யீற்றுத் தமிழ்ச் சொற்கள் பல இம்மொழிகளில் உகரம் பெற்று ஒலிக்கும். தமிழில் கண், மண் என்பன இம்மொழிகளில் கண்ணு மண்ணு எனப்படும். தமிழில் அகர ஈருக உள்ள 'சில' என்னும் சொல் கன்னடத்தில் உகரம் பெற்று 'கெலவு' என நிற்கின்றது.

அ, அன், இன் முதலியன இவ்வாறு ஒலித்துணையாதல் பின்வரும் சொற்களில் காணலாம்.

நாம் + கு — நமக்கு — அ

அது + ஐ — அதனை — அன்

வீடு + கு — வீட்டிற்கு — இன்

### 2: பொருட் சிறப்புப் பயப்பன: (*Particles of Specialisation*)

சில அடிச்சொற்கள் பொதுவான கருத்தை உணர்த்தி நிற்க, அவற்றோடு சேரும் கு, பு முதலான உறுப்புக்கள் பொதுக்கருத்தை வெவ்வேறாக மாற்றிப் பல்வேறு பொருளுணர்த்தச் செய்கின்றன

| | | |
|---|---|---|
| படு > படகு | | |
| கீழ் > கிழங்கு | | |
| கரு > கருக்கு | } கு | |
| கொடு > கொடுக்கு | | |
| கால் > காம்பு | | |
| நிர > நிரம்பு, நிரப்பு | | |
| இரு > இரும்பு | } பு | |
| பாய் > பாம்பு | | |

இவற்றுள் படு முதலியன பொதுக்கருத்து உணர்த்தும் அடிச்சொற்கள். கு முதலியன பொருட் சிறப்பு உணர்த்தச் சேர்ந்தவை.

இவ்வாறு சேர்க்கப்பெறும் கு பு முதலானவை இப்போது பொருளற்றுப் போயினும், தொடக்கத்தில் பொருளுணர்த்தும் தனிச் சொற்களாகவே இருந்திருக்கும். அவைகளும் அடிச்சொற்களாகவே இருந்தன என உணரலாம். படிப்படியே அவை பொருளிழந்து, இடைச்சொற்கள் போல் நின்றன. இன்று, முதனிலைகளாக உள்ள அடிச்சொற்களின் பொருளை ஒருவாறு வேறுபடுத்திச் சிறப்பிக்கும் ஆற்றலைமட்டும் பெற்றுள்ளன. ஆகு, நிரம்பு முதலான சொற்களில் முதனிலைகளோடு ஒன்றுபட்டுப் பிரிக்கமுடியாதன போல நிற்கின்றன.

'அட் (அடு)' என்பது ஓர் அடிச்சொல். அதன் பொதுக்கருத்து, சேர்தல், நெருங்குதல் என்பன போன்றது எனலாம். அச்சொல்லை வெவ்வேறான சிறப்புப் பொருளுக்குப் பயன்படுத்தப் பல்வகை உறுப்புக்கள் சேர்ந்துள்ளமை காண்க.

அட் (அடு) — பொதுவான அடிச்சொல்
அடங்கு — அ+கு — மூக்கொலி பெற்றுச் சேர்ந்தது
அடக்கு — அ+கு — வல்லொலியாய் இரட்டித்தது
அடை — ஐ சேர்ந்தது
அடர் — அர் ,,
அடுக்கு — கு ,,
அண்டு — இடையே மூக்கொலி சேர்ந்தது.

இவ்வாறே அண் என்னும் அடிச்சொல் வேறுபடுமாறு :—

அண் — பொதுச் சொல்
அணு — உ
அணுகு — உ+கு
அணி — இ

நட என்னும் பொதுக்கருத்து உணர்த்தும் அடிச்சொல் வேறுபடுமாறு :—

நட — பொது
நடை — ஐ
நடத்தல் — த்+அல்
நடத்தை — த்+ஐ

உடு என்னும் பொதுக்கருத்துடைய அடிச்சொல் வேறுபடுமாறு :—

உடு — பொது
உடை — ஐ
உடுத்தல் — த்+அல்

உடுப்பு — பு
உடுக்கை — க்+ஐ
உடல் — அல்
உடம்பு — அம்+பு

எல்லாத் திராவிட மொழிகளிலும் இத்தகைய அடிச்சொற்களும் அவற்றின் பல்வேறு வடிவங்களும் காணப்படினும், இலக்கிய வளமும் பண்பாடும் மிக்க தமிழ்மொழியில்தான், அவை இன்றும் கணக்கற்றவையாய்ப் பெருகி வழங்குகின்றன.

### 3. இலக்கண வேறுபாடு உணர்த்துவன :

பெயர்ச்சொற்களில் அன் ஆன் முதலியவை திணை பால் முதலியன உணர்த்தச் சேர்வன ஆகும். வினைச்சொற்களில் பிறவினை முதலிய வேறுபாடுகளும் காலமும் உணர்த்தச் சேர்வன. வினை முற்றுக்களில் திணை பால் உணர்த்தும் விகுதிகளும் சேரும்.

நல் — நல்லை—ஐ முன்னிலை ஒருமை உணர்த்திற்று
நல்லன் — அன் படர்க்கை உயர்திணை - ஆண்பால் உணர்த்திற்று
எழுப்பு — பு பிறவினை உணர்த்திற்று.

இவ்வாறு இலக்கண வேறுபாடு உணர்த்தும் உறுப்புக்கள் சேரும்போது அடிச்சொல் சிதையாமல் வேறுபடாமல் இருத்தலே திராவிட மொழியியல்பு ஆகும். ஆயின், சில சொற்களில் சிறிதளவு வேறுபடுதலும் உண்டு. அவ்வேறுபாடு உயிர் நீளல், அல்லது, குறுகல் என்னும் அவ்வளவே நிகழும்.

நாம் — நமன்
வே — வெந்து

நோ — நொந்து

காண் — கண்டு

இவ்வியல்புக்கு மாறாகப் பெரிதும் வேறுபடும் அடிச்சொற்களும் சில உள. அவை ஏனைய மொழிகளில் உள்ளவற்றை நோக்க மிகமிகச் சிலவேயாகும்.

யான் — என்; யாம் — எம்
யகரமும் எகரமும் பிறப்பால் உறவுடையன.

நீ — நின், உன்

நீர் — நும், உம்

சா — செத்து - சகரம் மொழிமுதலாகா எழுத்து. ஒலித்தற்கு எளிமையாக்கவேண்டி அகரத்தை எகரமாக்கினர் எனலாம்.

வார், வர் - வந்து, வா என்னும் சொற்களில் ரகரம் கெடினும், வருக, வருவார், வருகின்றது, வருதல் என்னும் மற்ற இடங்களில் ரகரம் கெடவில்லை. தெலுங்கில் 'ரா' என்பதே ஏவல் ஒருமை. அது 'வ்ரா' என்று திரிந்த திரிபைக் காட்டுவது. கன்னடத்தில் 'பார்' என்பதே ஏவலொருமை. அது 'வார்' என்பதன் பழமையைக் காக்கின்றது.

தார், தர் — தந்து, தா முதலான சொற்களில் ரகரம் கெடினும், தரல், தருதல், தருக, தருவார், தரவு முதலான சொற்களில் கெடவில்லை.

**சொல்வகை.**

முதலில் திராவிட மொழியில் பெயர்ச்சொல் வினைச்சொல் என இருவகைச் சொல்லே இருந்தன. இஃது எல்லா மொழிகளிலும் இருந்த நிலையே யாகும்.[1] நாளடைவில், பொருள் வேறுபாடுகளைத் தெரிவிக்கவல்ல ஐ, ஆல், கு, இன், ஏ, ஓ, உம் முதலான சொற்களை யெல்லாம் தனியே வகுக்கவேண்டிய காரணத்தைத் தமிழிலக்கண நூலார் உணர்ந்தனர்; அவற்றை இடைசொல் எனத் தனியே வகுத்தனர்.[2] உரிச்சொல் என்ற நான்காம் வகையும் உண்டு. அது சொற்களின் முதனிலைகளைக் கூறுவதென்றும், பண்பு குறிப்பு இசை என்பவற்றைக் குறித்தது என்றும், செய்யுட்குரிய சொற்களைக் குறிப்பது என்றும் வேறு வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. பண்பு குறிப்பு இசை குறிக்கும் சொற்களே உரிச்சொல் எனும் கருத்துப் பொருந்துவது.[3] இவ்வாறு சொல் நான்கு;

1. Nouns and verbs represent the living elements of language in contradistinction to the grammatical devices—prepositions, conjunctions, articles, or pronouns. (J. Vendryes, Language, p. 133.

2. சில மொழியினர் பெயர் வினையோடு இடைச்சொற்களையும் கொண்டு வகைப்படுத்துவர். அரபி மொழியின் இலக்கணத்தைப் பின்பற்றி உருது மொழியின் இலக்கண நூலார் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல் என மூவகையாக்குவர். (John T. Platts, A Grammar of the Hindustani or Urdu Language, p. 21)

3. தொல். சொல். உகூ௭

பெயர் வினை இடை உரி என்பர், இது பிற்கால வழக்கு. தொல்காப்பியனார்,

> "சொல்லெனப் படுப பெயரே வினையென்(று)
> ஆயிரண்(டு) என்ப அறிந்திசி னோரே"[4]

எனப் பெயரும் வினையுமே கூறிய பின்னர்,

> "இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
> அவற்றுவழி மருங்கின் தோன்றும் என்ப"[5]

என இடைச்சொல்லும் உரிச்சொல்லும் கூறினார்.

எனவே, எந்த மொழிக்கும் அடிப்படையாக உள்ள பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களுமே தமிழிலும் இருவகைச் சொற்களாகத் தொன்று தொட்டுப் போற்றப்பட்டு வருகின்றன என்பது உண்மை.

**பெயர்ச்சொல்.**

பெயர்ச்சொல், திராவிட மொழிகளில் திணை பால் எண் இடம் என்னும் இவற்றை உணர்த்தும். சொல்லின் பின் சேர்க்கப்படும் உருபு வேற்றுமையை உணர்த்தும். உருபு தொக்கு நின்றும் அவ்வேற்று மையை உணர்த்தும்.

**திணை, பால் (*gender*)**

இந்தோ - ஐரோப்பிய மொழிகளில் ஆண்பால் பெண்பால் அலிப்பால் என முப்பால் உண்டு. அவ் வாறு பகுத்ததற்குக் காரணம் இன்னதென அறிதற் கில்லை; முன்னோர் வழங்கிய முறையே காரணமின்றிக்

கடைப்பிடிக்கப்படுகின்றது. திராவிடமொழிகளில் பொருள்களின் இயற்கையான தன்மை கண்டே பால் வகுக்கப்படுகின்றது. ஆனால் வடமொழி முதலான வற்றில், உயிரில் பொருள்களும் நுண் கருத்துக்களும் ஆண்பால் எனவும் பெண்பால் எனவும் பகுக்கப் படுகின்றன. ஆண் எனவும் பெண் எனவும் கூற முடியாத பொருள்களை உணர்த்தும் சொற்கள் ஆண்பாற் சொல் எனவும் பெண்பாற் சொல் எனவும் வழங்கப்பட்டு, ஆண்பால் உருபும் பெண்பால் உருபும் சேர்க்கப்படுதலும், அவன் அவள் எனச் சுட்ட இயைதலும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் காண்பன.[6] பழைய ஆங்கிலத்தில் 'பல்' ஆண்பாலாக வும், 'பாவம்' பெண் பாலாகவும், 'மனைவி' 'மங்கை' முதலியன அலிப்பாலெனவும் கருதப்பட்டு வந்தமை வியப்பாகவே உள்ளது.[7] ஆனால் இன்றுள்ள ஆங்கிலத் தில் அம்முறை அழிந்து இயற்கைத் திணைமுறை ஏற்பட்டுள்ளது. பிரெஞ்சு, ஜெர்மன் முதலியமொழிக ளில் பழைய முறைப்படியே காரணமற்ற பால்பாகு பாடு உள்ளது.[8] வடமொழியிலும் அஃது உள்ளது. இம் மொழிகளைக் கற்போர், காரணமற்ற பால்பாகுபாட்டு

6. பழைய ஆங்கிலத்தில், கொம்பு, முடிவு, நாள் முதலிய ஆண்பால் அல்லாத பலவற்றை அவன் என்ற ஆண்பாற் சுட் டால் சுட்டி வந்தனர்; இவ்வாறே துயரம் முதலியவற்றை அவள் என்ற பெண்பாற் சுட்டால் சுட்டி வந்தனர். (Jespersen, Growth and Structure of the English Language, p. 203)

7. Whitney, Language and the Study of Languages, p. 78.

8. இந்த மொழிகளில் திணைபால் பகுத்த முறைக்கு எந்தக் காரணமும் பொருந்துவதாக இல்லை. ஜெர்மன் மொழியில் சந்தி ரன் ஆண்பால் எனவும் சூரியன் பெண்பால் எனவும் வழங்கப் படுகின்றன. அரபி மொழியிலும் அவ்வாறே உள்ளன. (C. P

முறைப்படி சொற்களை நெட்டுருச்செய்து இடர்ப் படுதல் உண்டு.[9]

உயிரற்ற பொருள்களை உயிருள்ளன போலவும் பால்பாகுபாடற்றவைகளை ஆண்பால் பெண்பால் எனவும் கற்பிக்கும் கற்பனை இந்தோ - ஐரோப்பிய மொழிகளை முதலில் பேசிவந்த மக்களின் கற்பனை யாற்றலைக் காட்டுகின்றதென அறிஞர் சிலர் கூறுவர். எவ்வாறாயினும், இவற்றில் உள்ள பால்பாகுபாடு, இயற்கையில் காணப்படும் பால்வகுப்பிற்கு மாறானது என்பதுமட்டும் தெளிவு.[10] இத்தகைய செயற்கை

---

Brown, A Grammar of the Telugu Language, p. 49). மேசை, எண்ணம், பழம், இடி முதலியன ஒரு மொழியில் ஆண்பாலாக வும், மற்றொரு மொழியில் பெண்பாலாகவும் வழங்குகின்றன. (Jespersen, The Philosophy of Grammar, XVII)

ஜெர்மன் மொழியில் இளம் பெண்ணை உணர்த்தும்போது பால்பாகுபாடு இல்லை; ஆனால் ஒருவகைக் கிழங்கு பெண்பாலாக வழங்கும். அம்மொழியில் ஒருவரை நோக்கி 'அந்தக் கிழங்கு எங்கே?' என்று கேட்டால், 'அவள் சமையலறைக்குச் சென்றி ருக்கிறாள்' என்ற விடை வரும். அவரையே, 'அந்த இளம் பெண் எங்கே?' என்று வினவின், 'அது இசையரங்கிற்குப் போயிருக்கிறது' என்ற விடை வரும். (Breal's Semantics, Preface, p. 9)

9. We think it very inconvenient, and even hardly fair, that, in learning French and German, we are called upon to burden ourselves with arbitrary and unpractical distinctions of grammatical gender—Jespersen, The Philosophy of Grammar, XVII.

10. The ascription of gender to inanimate objects is worthy only of a savage and unreasoning age, and where the signs of gender have lost all reference to their original import, they become merely a relic and survival of barbarism. (Sayce, Introduction to the Science of Language, p. 375.)

முறையால் வளர்ந்த இலக்கண வேறுபாடுகள் காரணம் கூறமுடியாதவாறு நிற்கின்றன; ஆதலின் கற்பதற்கு இடரான பகுதிகளாகவும் நிற்கின்றன. செமிடிக் மொழிகளிலும் இதுபோன்ற செயற்கை முறையே காணப்படுகின்றது.[11]

ஆனால், மஞ்சு (*Manchu*) மங்கோலியன் (*Mangolian*), துருக்கி (*Turkish*) பின்னிஷ் (*Finnish*) முதலான மொழிகளில் மேற்கூறியவற்றிலிருந்து வேறுபட்ட பால்பாகுபாடே காணப்படுகின்றது. இவற்றில் எல்லாச் சொற்களும் அலிப்பாலெனக் கொள்ளப்படுகின்றன. கடவுள், மனிதன், மங்கை, மனைவி முதலிய சில சொற்களில் மட்டுமே ஆண்பால் பெண்பால் என்ற பகுப்பு உள்ளது. பொருளுக்கே பால் உண்டு, சொல்லுக்கு இல்லை என்ற கொள்கை அங்கு நிலவுகின்றதுபோலும்.

இவற்றையெல்லாம் நோக்கிப் பின்னர் திராவிட மொழியின் பால்பாகுபாட்டை ஆராய்ந்தால் திராவிட மொழிகளின் தனிச்சிறப்பும், அம்மொழிகளைப் பேசிய மக்களின் உளப்பண்பாட்டின் உயர்வும் புலனாகும். திராவிட மொழியில் திணை இருவகை. தமிழில் உயர்

---

The primitive Aryan had not yet distinguished the object thought of from the subject that thought of it; he was still in the stage of childhood, and just as he transferred the actions and attributes of inanimate objects to himself, so too he transferred to them the actions and attributes of himself and endowed them with a life similar to his own. (Ibid. 406.)

11. Jespersen, The Philosophy of Grammar, XVII.

திணை அஃறிணை எனக்குறிப்பர். தெலுங்கில் மஹாத், அமஹாத் எனக்குறிப்பர்.[12]

" மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை;[13]

என்பர் பவணந்தியார். அவரினும் நெடுங்காலம் முற்பட்ட தொல்காப்பியனார் கூறியதே உண்மையை விளக்கவல்லது.

" உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே "[14]

பகுத்தறிவே காரணமாக மக்களெனச் சுட்டப்படுவோர் உயர்திணை என்பது தொல்காப்பியனார் கருத்து, எனவே மக்கட் பிறப்பின் உயர்வுக்குக் காரணமான பகுத்தறிவின் உண்மையும் இன்மையுமே திராவிட மொழிகளின் பால்பாகுபாட்டிற்கு அடிப்படை. ஏனைய மொழிகளில் உள்ளவாறு காரணமற்ற முறை இங்கு இல்லை. எளியதொரு காரணத்தால் அமைந்த

12. காகஸஸ் (Caucasus) நாட்டு துஷ் (Tush) மொழியில் உயர்திணை ஆண்பால், உயர்திணைப் பெண்பால், அஃறிணை (rational being of the male sex, rational being of the female sex, irrational being) என்ற மூன்று பிரிவுகள் உள்ளன. அந்தமான் (Andaman) மொழியில் உயிருடையன, உயிரில்லன (animate, inanimate) எனப் பகுத்தல் உள்ளது. மக்கள், மக்களல்லாதன என உயிருடையவற்றை இருவகைப்படுத்துவர். (Jespersen, The Philosophy of Grammar, XVII). புலு (Fulu) மொழியில் ஆண்பால், பெண்பால் என்ற வேறுபாடு இல்லை. ஆயின், மக்கள் ஒருவகை என்றும், மக்களல்லாத விலங்குகளும் பொருள்களும் இரண்டாம் வகை என்றும் கொள்ளப்படுகின்றது. (Abel Haveloque, The Science of Language, p. 64)

13. நன்னூல்—261

14. தொல். சொல். க

பாகுபாடும் இல்லை; உயர்ந்ததொரு காரணம் கொண்டே திணைபால் பகுக்கப்பட்டுள்ளன. உண்மையாக நோக்கின், இத்தகைய பாகுபாடே ஒரு மொழியை வழங்குவோர்க்கு வேண்டுவது என்பது விளங்கும். திராவிடமொழி பேசிய மக்கள் இலக்கணப் பாகுபாட்டிலும் அறிவுத் துறையிலும் எவ்வளவு முன்னேற்றம் உற்றிருந்தனர் என்பது உணர்ந்து வியத்தற்குரியதே.[15]

ஆயினும், அந்நிலைக்கு முன்னர், மிகப் பழங் காலத்தில் திராவிட மொழியிலும், சித்திய மொழியில் இருப்பதுபோல், எல்லாச் சொற்களும் ஒரே வகையாக—அஃறிணையாகக்—கருதப்பட்டுவந்த நிலை இருந்தது என்று கூறலாம்.

இறை, அரசு, வேந்து, இல் முதலான சொற்கள் மிகப் பழையவை, செய்யுள் வழக்கிற்கு உகந்தவை. அவை அஃறிணை வினைமுற்றுக்கொண்டே முடிந்துள்ளன. இறைவன், அரசன், வேந்தன், இல்லாள் முதலான சொற்கள் பிற்காலத்தில் அமைந்து, உரை நடையில் போற்றப்படலாயின.

குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி..........
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்
அஃறிணை மருங்கின் கிளந்தாங் கியலும்.[16]

என்று தொல்காப்பியனார் விதித்துள்ளார்.

15. Caldwell; A Comparative Grammar of the Dravidian Languages, p. 220.
16. தொல். சொல். ருகூ

மலையாளத்தில் பையன் என்பதற்குப் பதிலாக பால்காட்டும் அன் விகுதியின்றிப் பைதல் என்றே (தமிழில் பையல், பயல் போல) இன்றும் வழங்குகின்றனர். ஆண், பெண் என வேறுபடுத்தல் வேண்டின் ஆண்பைதல் எனவும் பெண்பைதல் எனவும் கூறுவர்.

உயர்திணையில் ஒருவரை நோக்கி ஆண்பாலெனவும் பெண்பாலெனவும் பகுக்கும் பாகுபாடு இருக்கின்றது. ஆனால் பலரைநோக்கி அவ்வாறு பகுத்தல் இல்லை. ஆண்பன்மை (*masculine plural*) பெண் பன்மை (*feminine plural*) என்பன இல்லை. பலராக இருப்பின் ஆண் பெண் என்ற வேறுபாடின்றிப் பலர் பால் என வழங்குதல் உளது. மற்றொன்று: அஃறிணைப் பொருள்களுள் உயிருள்ள பொருள்களையும் ஆண்பால் பெண்பால் எனப் பகுத்தல் இல்லை. அவற்றை உயிரில்லாப் பொருள்களைப் போலவே ஒன்றன்பால், பலவின்பால் என வகுப்பர்.

தெலுங்கிலும் கோந்த் மொழியிலும் ஒரு வேறு பாடு காணப்படுகின்றது. அவற்றில் உயர்திணையில் பெண்பால் என்ற பகுப்பு இல்லை. பெண்கள் பலரைச் சுட்டும்போது பலர்பாலில் அடக்குதல் உண்டு; ஆனால் ஒருத்தியைக் குறிக்கும்போது உயர்திணையாகக் கொள்ளாமல் அஃறிணை ஒன்றன்பாலாகக் கூறுவர். 'அவள் வந்தாள்' என்ற தமிழ் வழக்கு, தெலுங்கில் 'அதி வச்சினதி' என்றாகும். அரசி ஆயினும் அணங்கே ஆயினும் ஒருத்தியாயின் அஃறிணையாக அடக்குதலே இம்மொழிகளில் உள்ள முறை.[17] 'அவன்' என்ற

17. குருக் மொழியில் இங்நிலையே உள்ளது. பெண்பால் ஒருமை இல்லை. பன்மையோ, ஆண்பால் பன்மையோடு ஒன்று

ஆண்பால்பெயர்க்கு ஈடாக 'அவள்' என்ற பெண் பால்பெயர் தமிழ் கன்னடம் மலையாளம் என்னும் மொழிகளில் உள்ளதுபோல், தெலுங்கிலும் கோந்தி லும் இல்லை. 'ஆமெ' என்ற பழைய தெலுங்குச் சொல் ஒரு பெண்ணைக் குறிப்பினும் அது வாடு என்னும் ஆண்பாலுக்கு ஈடான சொல் அன்று.

நீலகிரி மலையில் தூதர் கோடர் மொழிகளில் மிகப் பழையதொரு திராவிட முறை காணப்படுகின் றது. அஃதாவது, படர்க்கை இடப்பெயராக (*third person pronoun*) உள்ள சொல் அம்மொழிகளில் திணை பால் எண் என்னும் வேறுபாடற்றது. அதம், இதம் (*atham, itham*) என்னும் சொற்கள் அவன், அவள், அவர், அது, அவை என்றும், இவன், இவள், இவர், இது, இவை என்றும் தமிழில் வழங்குவன யாவற்றை யும் குறிப்பவை. ஆனால், அண்மையில், தமிழ், கன் னடம் ஆகிய மொழிகளின் கலப்பால், தூதர் பேச்சி லும் கோடர் பேச்சிலும் 'அவன்' 'அவள்' என்னும் பாலுணர்த்தும் இடப்பெயர்களும் புகுந்துள்ளனவாம்.

எனவே, திராவிட மொழியில் திணைப் பாகு பாடற்ற நிலையிலிருந்து இருதிணைப் பகுப்பும் ஐம்பால்

---

பட்டதாக உள்ளது. Thus, strictly speaking, there would be only two genders in Kurukh, viz , masculine and neuter, because each women taken singly is treated grammatically as a thing or a chattel, and only when in the plurality the Kurukh treats his woman like men. Yet, for this latter reason, and because there are in the pronoun special feminine forms and in the verb distinctly feminine inflectional forms, we deem it more appropriately to divide the Kurukh gender into masculine, feminine and neuter. (F. Hahn, Kurukh Grammar, p. 11.)

பகுப்பும் படிப்படியே வளர்ந்து அமைந்துள்ளன எனக் கோடல் பொருந்தும்.

## எண் (*Number*)

திராவிட மொழிகளில் ஒருமை பன்மை என எண் இரண்டே. இருமை (*dual*) என்ற ஒன்று இல்லை. அது வடமொழியிலும் வட மொழியைச் சார்ந்த ஐரோப்பிய மொழிகளிலும் பெரு வழக்கினது.[18] வடமொழி இலக்கியமும் இலக்கணமும் திராவிட மொழிகளில் எவ்வளவோ கலந்தும் இருமை என்ற எண் நிலைபெற்ற இடம்பெற முடியவில்லை.

இம்மொழிகளில் திணைபால் பாகுபாடும் எண் பாகுபாடும் தனிப்பட்டு வேறு நிற்பன அல்ல. திணை பால் பாகுபாட்டிலேயே எண்ணும் கலந்து அமைகின்றது,

| திணை | பால் | எண் |
|---|---|---|
| 1. உயர்திணை[19] :— | ஆண்பால் | ஒருமை |
| | பெண்பால் | ஒருமை |
| | பலர்பால் | பன்மை |
| 2. அஃறிணை[20] :— | ஒன்றன்பால் | ஒருமை |
| | பலவின்பால் | பன்மை |

18. பாலினேஷிய மொழியில் ஒருமை இருமை மும்மை பன்மை என நான்கு வகை எண் முறை உள்ளது. (Whitney, Language and the Study of Language, p. 338)

19. ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோர் அறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.

(தொல். சொல். ௨)

20. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்(று)
ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே. (ஷை—௩)

உயர்திணையில் உள்ள பாகுபாட்டிற்கும் அஃறிணையில் உள்ள பாகுபாட்டிற்கும் வேறுபாடு உண்டு. உயர்திணை ஒருமையை ஆண் பெண் எனப் பிரித்தலும் அஃறிணை ஒருமையை அவ்வாறு பிரிக்காமையும் காண்க. பன்மையைப் பொறுத்தவரையிலும் அவ் வேறுபாடு இல்லை. ஆயினும் பால்காட்டும் விகுதிகளை நோக்கின், இருதிணைக்கும் அவை வேறு வேறாக இருப்பதை உணரலாம். பால்காட்டும் விகுதிகளைத் தொல்காப்பியனார் பாலறிகிளவி என்பர்.[21]

### (1) உயர்திணை ஆண்பால் (ஒருமை) விகுதிகள்

அன், ஆன், ஓன்

இம்மூன்றும் ஒன்றன் வடிவங்களே; ஒலி நயத்திற் கேற்பத் திரிபவையே. இவற்றிற்கும் படர்க்கை ஆண்பாற் சுட்டுப்பெயராகிய 'அவன்' என்பதற்கும் ஓர் ஒற்றுமை இருத்தல் எளிதில் புலனாகின்றது.

கன்னடத்தில் — அனு
பழங்கன்னடத்தில் — அம்
மலையாளத்தில் — தமிழில் உள்ளவையே
தெலுங்கில் — டு, உடு, அடு, ண்டு, உண்டு, அண்டு

தெலுங்கில் ண்டு, உண்டு, அண்டு என்னும் விகுதிகள் அன் என்பதன் திரிபுகளே. அன் > அன்ற் > அன்று > அண்டு > அடு என மாறுதல் இயற்கை. தெலுங்கில் றகரம் டகரமாதல் பல சொற்களில் காணப்படுவது (மாற்றம் > மாட). தமிழில் உள்ள '**மகன்**' தெலுங்கில் '**மகண்டு**' '**மகடு**' (கணவன்) என்றாதலும் ஒப்பிடத்தக்கது. தமிழிலும் '**பெண்**'

---

21. தொல். சொல். கக

என்னும் சொல் **பெண்டு, பேடு** என ஆதல் உண்டு. இவற்றில் உள்ள மெல்லினம் (மூக்கொலி 'ண') இன்னும் அடியோடு மறையவில்லை. 'வாடு' (அவன்) என்பதை அர்த்தாநுஸ்வார ஒலியுடன் சேர்த்து 'வாண்டு' என்பதைப்போல் இன்றும் பலர் ஒலிக்கின்றனர்.

### (2) உயர்திணைப் பெண்பால் (ஒருமை) விகுதிகள்

அள், ஆள், இ

தெலுங்கிலும் கோந்த் மொழியிலும் இவற்றிற்கு ஈடாக அஃறிணை ஒன்றன்பால் விகுதியே வழங்குகின்றது. தெலுங்கில் சில இடங்களில் ஆலு என்ற சொல் (செய்யுளிலும் கொச்சை மொழியிலும்) வழங்குகின்றது.

மனமராலு — பேர்த்தி
[மனமா(ண்)டு — பேரன்]
கோடலு — மருமகள்

இகர விகுதி தமிழில் தலைவி, மனைவி, முதலிய சொற்களில் உள்ளது. வினைமுற்றுச் சொற்களில் அதற்கு இடமில்லை.

கன்னடம் — அரசிதி (அரசி)
தெலுங்கு — மாலதி (பறைச்சி), சின்னதி (சிறுமி)

### (3) அஃறிணை ஒன்றன்பால் விகுதி

து

திராவிட மொழியில் பெயர்ச்சொல் ஒவ்வொன்றும் அஃறிணையாகவோ திணையற்றதாகவோ முதலில் இருந்து வந்துள்ளது. காலப்போக்கில் ஆண்பால் அல்லது பெண்பால் உணர்த்தும் விகுதி சேர்ந்த பின்னர் அஃது உயர்திணை உணர்த்துவதாயிற்று.

மக — மகவு — அஃறிணை ஒருமை
மக + அன் > மகன் — ஆண்பால்
மக + அள் > மகள் — பெண்பால்
தலை — அஃறிணை ஒருமை
தலை + அன் > தலைவன் — ஆண்பால்
தலை + இ > தலைவி — பெண்பால்

குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி..........
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்[22]
அஃறிணை மருங்கின் கிளந்தாங் கியலும்

என்னும் தொல்காப்பியமும் இப்பண்டைய நிலைக்குச் சான்று பகர்வதே ஆகும்.

அஃறிணை உயிர்களாகிய பறவை, விலங்கு முதலியவற்றிற்குப் பால்பகுப்பு இருந்தும் இலக்கணத்தில் அவற்றை ஆண்பால் எனவோ பெண்பால் எனவோ குறிக்க இடமில்லை. எப்பாலாயினும் அவற்றை வேறுபாடின்றி ஒருமையாயின் ஒன்றன்பாலென்றும் பன்மையாயின் பலவின்பால் என்றும் குறித்தல் மரபு. ஆயினும், மொழி மக்கள் கருத்தை விளக்குதற்கே ஏற்பட்டது ஆகையால், பால்வேறுபாடு பற்றிய கருத்துக்களை அச்சொற்கள் விளக்கி நிற்கின்றன. விளக்கு முறை இருவகை எனலாம்:—

**(1)** விலங்கிற்கும் பறவைக்கும் ஆண்பாற்குத் தனிப்பெயரும் அவ்வாறே பெண்பாற்குத் தனிப் பெயரும் உண்டு.

களிறு — ஆண்பால்
பிடி — பெண்பால்

(2) பால் விளக்காத பொதுச்சொல்லாயின், அச்சொல்லின் முன்னர் ஆண், பெண் முதலான பால் விளக்கும் சொற்களைச் சேர்த்தல் உண்டு.

யானை — பொதுச்சொல்
ஆண் யானை } பால் விளக்க வந்தவை
பெண்யானை }

இவ்வாறு பால்காட்டும் சொற்களை முன் சேர்க்கும் முறை பிற்காலத்து வழக்கேயாகும். முற்கூறிய முறையே பண்டைக்காலத்து இருந்தது.

ஆண்யானை பெண்யானை எனப் பிற்காலத்துப் பால் தெரிய வழங்கியபோதும், வினைமுற்றுச் சொற்கள் திரியாமல் நிற்கின்றன.

ஆண்யானை வந்தது
பெண்யானை வந்தது

முதன்முதலில் எல்லாப் பெயர்ச் சொற்களும் அஃறிணை ஒன்றன்பாலாகவே வழங்கிவந்தமையால், அப்பாலுக்கெனத் தனி விகுதிகள் வரையறுக்கப்படவில்லை.

யானை, களிறு, மகவு, கிளி, அரசு, கல், மரம்

எனினும் அப்பாலுக்கென வினைமுற்றுக்களில் வழங்கிய விகுதி 'து' என்பதாம். அஃது ஆக்கச்சொற்களாகிய பெயர்களில் இடம்பெறலாயிற்று.

நெடுங்கோட்டது, பருத்தது, நல்லது

**பன்மை உணர்த்தும் முறை**

இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் சொற்களில் ஒருமையும் பன்மையும் தெளிவாய் விளங்கிநிற்கின்றன. இப்போது ஆங்கிலத்தில் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாக உள்ள *sheep* போன்ற சொற்கள் பண்டைக் காலத்தில் இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் இல்லை. சித்திய இனமொழிகளில் இத்தகைய தெளிவு இல்லை. பெரும்பாலும் ஒருமை பன்மை என்ற வேறுபாடு சொற்களில் காணப்படுவதில்லை.[23] முன்னும் பின்னும் அடுத்துவரும் சொற்களாலோ அல்லது சொல்வோன் கருத்துவகையாலோ ஒருமை அல்லது பன்மை என்பது உணரப்படும்.

திராவிட மொழிகளின் அமைப்பு, சொற்களின் ஒருமை பன்மையைப் பொறுத்தவரையில் இந்தோ-ஐரோப்பிய மொழியமைப்புக்கு மாருகவும் சித்திய மொழி யமைப்புக்கு ஒப்பாகவும் உள்ளது. அஃறிணைச் சொற்களைமட்டும் ஆராய்ந்தால் திராவிடமொழிகளுக்கும் சித்திய மொழிகளுக்கும் ஒரு வேறுபாடும் இல்லை எனலாம். எடுத்துக்காட்டாக, தமிழில் உள்ள அஃறிணைப் பெயர்ச் சொற்கள் எல்லாம் பன்மை உணர்த்தும் 'கள்' விகுதி இல்லாமல் வழங்குகின்றன.[24] 'கள்' விகுதி சேர்த்துக்கொள்ளும் இட

23. நாகரிகமற்ற மக்கள் பேசும் பல மொழிகளில் ஒருமை பன்மை வேறுபாடே காணப்படுவதில்லை. ஹிதாட்சா (Hidatsa) மொழியிலும் சொனேரியன் (Sonorian) மொழியிலும் ஒருமை பன்மை என்ற வேறுபாடு பெயர்ச்சொற்களில் இல்லை. ((Sayce, Introduction to the Science of Language, p. 410.)

24. குருக் மொழியில் அஃறிணைப் பன்மை இல்லை என்று கூறும் நிலை உள்ளது. (F. Hahn, Kurukh Grammar, p. 73)

மும் உண்டு என்று தொல்காப்பியனார் விதித்தலால், பண்டைய முறை இன்னதெனத் தெளிவாகின்றதன்றோ?

கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி உடைய பலவறி சொற்கே.[25]

இன்னும் நாட்டுப்புற மக்கள் 'கள்' விகுதி இல்லாமலே அஃறிணைச் சொற்களை வழங்குவதாலும் இவ்வுண்மை புலனாகும். செய்யுட்களில் புலவர்களும் 'கள்'விகுதியைப் புறக்கணித்தே வந்துள்ளனர். நாட்டுப்புற மக்களும் புலவர்களுமே ஒரு மொழியின் உண்மை நிலையை விளக்க வல்லவர்கள் என்பது மொழி நூலார் கண்ட உண்மையாகும். அத்தகைய அஃறிணைச் சொற்களைப் பால்பகா அஃறிணைப் பெயர் என்பர் இலக்கண நூலார். ஏனைய திராவிடமொழிகளைவிடத் தமிழிலேயே இந்நிலை இன்றும் மாறாமல் விளங்குகின்றது. திராவிட முதல் மொழியின் இயல்பை விளக்கவல்லது தமிழ்மொழியே என்னும் கொள்கையை வலியுறுத்தும் சான்றுகளில் இதுவும் ஒன்றாகும்.

எருது வந்தது (ஒருமை)
எருது வந்தன (பன்மை)

பன்மையைத் தெளிவாக்கும் இரண்டு முதலிய எண்களை முன்னர்ச் சேர்த்துக் கூறும்போதும் அப்பெயர்ச்சொல் திரியாமல் நிற்றல் காண்க.

ஓர் எருது (ஒருமை)
பத்து எருது (பன்மை)

பத்து எருது' என வழங்குதலே மொழிவழக்கிற்கு உகந்ததாக அறிஞர் கருதுகின்றனர்.

பலவற்றில் வேறுபட்டு நிற்பதுபோலவே பன்மை யுணர்த்தும் இவ்வகையிலும் தெலுங்கு வேறுபடு கின்றது. தெலுங்குமொழியில் அஃறிணைச் சொற் களெல்லாம் பன்மையுணர்த்தும்போது திரிகின்றன.

பேச்சுத்தமிழில் அஃறிணைப் பெயர்ச்சொற்களைப் போலவே, அஃறிணை வினைச்சொற்களும் ஒருமை பன்மை உணர்த்தாமல் நிற்கின்றன. ஒருமை வினை முற்றே பன்மை உணர்த்தற்கும் பயன்படுகின்றது.

ஓர் எருது வந்தது, பத்து எருது வந்தது.

எதிர்கால வினைமுற்றுக்களைப் பொறுத்த வரை யில், இலக்கியத்திலும் வழங்குகிறது.

ஓர் எருது வரும், பத்து எருது வரும்.

எதிர்கால வினைமுற்றுக்களில் ஒருமை பன்மை உணர்த்தும் விகுதி இன்மையே இதற்குக் காரண மாகும்.

திராவிட மொழிகளின் மற்றொரு சிறப்பியல் பாவது:—உயர்திணைப் பன்மை உணர்த்தும் விகுதியும் அஃறிணைப் பன்மை உணர்த்தும் விகுதியும் வேறுபடு தலே ஆகும். ஒன்றற்குரியது, மற்றொன்றற்கு வழங் குவது இல்லை. சில இடங்களில் மாறி வழங்குவது உண்டு. அது வழாநிலையன்று; சிறுபான்மை வழு வமைதியாயும், பெரும்பான்மை வழூவாயும் கொள்ளப் படும்.

நரியார் — அஃறிணை (உயர்திணைப் பன்மை விகுதி யாகிய ஆர் பெற்றது.)

மக்கள் — உயர்திணை (அஃறிணைப் பன்மை விகுதி யாகிய கள் பெற்றது.)

இதன் காரணம் என்னை எனின், பன்மை உணர்த்தும் 'ஆர்', 'கள்' முதலிய விகுதிகள் திணை பால்களையும் உடன் உணர்த்தும் ஆற்றலே யாகும். 'கள்' விகுதி முதலில் அஃறிணையில் இடம்பெற்று, நாளடைவில் பெருவழக்காகி, இன்று உயர்திணையி லும் இடம்பெற்றுநிற்கின்றது. ஆதலின், மக்கள் அரசர்கள் முதலிய சொற்கள் வழாநிலைபோல வழங்க லாயின.

தமிழில் உள்ள 'மக்கள்' என்பதற்கு நேரான தெலுங்குமொழிப் பலர்பாற்சொல் மகரு (கணவன் மார்) என்பதாகும். அச்சொல்லில் அஃறிணைப் பன்மை விகுதி (தெலுங்கு 'லு') இடம்பெறவில்லை. உயர்திணைப் பலர்பால் விகுதி அர் (ரு) இடம்பெற் றுள்ளது. அதுவே திராவிட மொழியியல்பிற்கு ஒத்த தாகும்.

'அவர்' முதலான சொற்கள் தமிழில் உயர்திணை ஒருமையை உயர்சொற் கிளவியாக (*honorific singu-lar*) உணர்த்தும் வழக்கு உளது.[26]

அவர் ஓர் அமைச்சர்
அமைச்சர் வந்தார்......

இவற்றினின்றும் பன்மையை வேறுபடுத்தும்பொருட் டுப் பிற்காலத்தில் 'அர்' விகுதியோடு 'கள்' விகுதி

---

26. மரியாதைப் பன்மை என்னும் இந்த உயர்சொற்கிளவி திராவிட மொழிகளில் தொடக்கத்தில் இருந்திருக்காது எனலாம். இதற்குப் பிராஹுய் (Brahui) மொழி சான்றாகும். அம் மொழி யில் இதற்கு இடமேயில்லை. பிற மொழியாளரே அம் மொழியில் பேசும்போது இதனைக் கையாளுகின்றனர். (D. S. Bray, The Brahui Language, p. 77.)

யும் சேர்த்து வழங்கலாயினர். 'அவர்கள்' 'அரசர்கள்' முதலான சொற்கள் எழுந்ததன் காரணம் இதுவே ஆகும். எனவே, தமிழ்மொழியில் உயர்திணைப் பன்மைச் சொற்கள் இருவகை ஆயின :—

(i) பலர்பால் விகுதி 'அர்' என்பதுமட்டும் பெற்று நிற்பவை—பல இடங்களில் உயர்சொற்கிளவியாக வழங்குபவை.

அவர் தலைவர்

(ii) பலர்பால் விகுதி 'அர்' என்பதோடு அஃறிணைப் பலவின்பால் விகுதி 'கள்' என்பதும் சேர்ந்து பன்மையை உணர்த்துபவை—இவை சில இடங்களில் உயர்திணை ஒருமையை உயர்சொற்கிளவியாக உணர்த்துதல் உண்டு.

தலைவர் அவர்கள்

தற்காலத் தெலுங்கிலும் இவ்வாறு இருவகைப் பலர்பால்சொல் உள்ளன.

(i) வாரு
(ii) வாருலு

மலையாளத்தில், அவர் என்பது உயர்திணைப் பலர்பாலையும், அவர்கள் என்பது உயர்சொற்கிளவியாக உயர்திணை ஒருமையையும் உணர்த்துகின்றன,[27]

27. உயர்சொற்கிளவிகளை வேறு வகையாகப் பெருக்கி வழங்குவது ஜப்பானிய மொழி. அம்மொழியில் நீ, நீர், நீங்கள் என்பவற்றிற்கு நேராக முன்னிலைச் சொற்கள் தனித்தனியே உயர்வு குறித்து வழங்குவன உள்ளன. அவற்றோடு அமையாமல் தன்மையிலும் இவ்வாறு உயர்வு தாழ்வு உணர்த்தும் சொற்கள் உள்ளன. தமிழில் அரசர் முதலானோர் தம் உயர்வு தோன்ற 'நாம்' எனத் தம்மைச் சுட்டிக்கொள்ளல் உண்டு. ஜப்பானியக் குழந்தைகள் உடன் விளையாடும் குழந்தைகளைச் சுட்ட, போக்கு, கிமி முதலான சொற்களை வழங்கும். இவற்றிற்கு அடிமை, தலை

தமிழிலும் மலையாளத்திலும் தன்மை முன்னிலை இடப்பெயர்களிலும் 'கள்' விகுதி சேர்ந்து வழங்குகின்றது.

நாங்கள், நீங்கள்

நீங்கள்' என்பது இம்மொழிகளில பன்மையையும் உயர்சொற் கிளவியான ஒருமையையும் உணர்த்துவது. இதற்கு நேரான கன்னடச் சொல் 'நீவு தெலுங்குச் சொல் 'மீரு'.

இவ்வாறு 'கள்' விகுதியின் வழக்குப் பெருகிவரினும், வழாநிலை என்று கொள்ளக்கூடியதன்று; திராவிட மொழிகளின் இயல்புக்குப் புறமானதேயாகும்; வழுவமைதி எனவே அமையும். இருவேறு திணைக்கு இருவேறு பன்மை விகுதிகள் இருத்தலே மொழியியல்பாகும்.

**(4) உயர்திணை பலர்பால்** விகுதி

| | |
|---|---|
| தமிழ்<br>மலையாளம் | அர், ஆர், இர், ஈர், அ, மார் |
| கன்னடம்<br>தெலுங்கு | அரு, ஆரெ, எரு, ரி, ரு |

---

வன் என்பனவே பழைய பொருள். பாஸ்க் மொழி, பர்மிய மொழி முதலியவற்றில் வினைச்சொற்களிலும் இவ்வேறுபாடு வளர்ந்துள்ளது. ஜாவாவின் பழங்குடி மக்கள் பேச்சை ஆராய்ந்தால், ஒருவகைக் கருத்தையே பலவகையாகப் புலப்படுத்தல் காணலாம். வேலையாட்களிடம் பேசும்போது மொழி ஒருவகையாகவும், உயர்ந்தோரிடம் மற்றொரு வகையாகவும் ஒத்தவரிடம் இன்னொரு வகையாகவும் மாறி விளங்கும். (Jespersen, Mankind Nation and Individual, p. 144.)

'மார்' விகுதி 'ஆர்' என்பதினின்றும் வேறானதன்று. 'அர்' விகுதியின் ஈறு கெட்டதே 'அ' விகுதி.

(5) **அஃறிணைப் பன்மை விகுதி** (*Neuter pluralising particle*)

(i) கள், கள் (*gal*), லு (தெலுங்கில்), க் (கோந்த்) க, க் (*ga*) (கூ மொழியில்)

(ii) பல, சில, வந்தன முதலியவற்றின் ஈற்றில் உள்ள அகரம் (அவை என்பதில் அகரமே ஐகாரமாகத் திரிந்தது.)

## கo. வேற்றுமை

தமிழ் மொழியில் வேற்றுமை உணர்த்துவன உருபுகள் என்று கூறப்படும். முதன் முதலில் வேற்றுமைப் பொருளை உணர்த்த முழுச்சொற்கள் வழங்கி யிருக்கவேண்டும். நாளடைவில் அச்சொற் கள் மருவித் திரிந்து உருபுகள் என வழங்கும் நிலை எய்தியிருக்கின்றன. இப்போதும் சில வேற்றுமைப் பொருளில் முழுச்சொற்கள் பயன்படுதலைக் காண லாம்.

கல்லால் எறிந்தான்—கல் கொண்டு எறிந்தான்
அவனது பசு—அவனுடைய பசு

கொண்டு, உடைய என்பன வினைச்சொற்கள். அவை மூன்றும் வேற்றுமைப் பொருளிலும் ஆறும் வேற்றுமைப் பொருளிலும் முறையே வருகின்றன. இவ்வாறு உருபுக்கு ஈடாக வருதலால், அவற்றைச் சொல்லுருபுகள் என்பர். அவைபோலவே, ஐ ஆல் கு என்னும் உருபுகளும் ஒரு காலத்தில் பெயர்ச்சொல் லாகவோ வினைச்சொல்லாகவோ இருந்திருக்கும் எனக் கொள்ளலாம். எனவே, முழுச்சொற்கள் திரிந்தே உருபுகளாயின எனல் வேண்டும்.

### 1. எழுவாய் வேற்றுமை

தமிழில் வேற்றுமை எட்டு. அவற்றுள் முதல் வேற்றுமை எழுவாய் வேற்றுமை எனப்படும்.

சித்திய மொழிகளில் உள்ளதுபோலவே, திரா விட மொழிகளிலும் எழுவாய் வேற்றுமை திரிபு

இல்லாத பெயர்ச்சொல்லாகும்.[1] அதற்கென உருபு இல்லை. 'ஆனவன்' முதலியவற்றை உருபு என்பது பொருத்தமற்றதே.

வடமொழியில் பெயர்ச்சொல்லின் வடிவம்வேறு; அதன் எழுவாய் வேற்றுமை வடிவம் வேறு. அதனை ஒட்டித் திராவிடமொழிகளை ஆராய்ந்த சிலர், இம் மொழிகளிலும் முதல் வேற்றுமைக்கு உருபு உண்டு என்றனர். அவர் கருத்துப்படி, மரம் என்ற சொல்லில் உள்ள 'அம்' முதல் வேற்றுமை உருபு ஆகும். ஐ முதலிய உருபுகளை ஏற்கும்போது 'அம்' கெடுவதால் அந்த 'அம்' என்பதே எழுவாய் வேற்றுமை உருபு என அவர்கள் கருதலாயினர்.

மரம்—மரத்தை

மர+அம்—மர+த்+ஐ

ஆனால் இவர்கள் மற்றோர் உண்மையை மறந்துவிட்டனர்போலும்! ஒருமையில் இதனைக்கண்டு மகிழ்ந்த இவர்கள் பன்மையை ஆராய்ந்திருப்பரேல், தம் கொள்கை பொருந்தாதெனை அறிந்திருப்பர்.

மரங்கள் — முதல் வேற்றுமை

மரங்களை<br>மரங்களால்... } மற்ற வேற்றுமைகள்

பன்மைச் சொல்லாக நின்று உருபேற்கும்போது அந்த 'அம்' என்ற உறுப்பு எங்கும் நீங்காது நிற்றல் அறியத்தக்கது.

---

1. எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே.

(தொல். சொல். சுரு)

எழுவா யுருபு திரிபில் பெயரே. (நன்னூல்—295)

மற்றுமொன்று; தெலுங்கில் 'அம்' என்பது ஒருமைச்சொல்லிலும் எல்லா வேற்றுமைகளிலும் நீங்காது நிற்பதாகும்.

ஆதலின், வடமொழியமைப்பு வேறு, திராவிட மொழி யமைப்பு வேறு; வடமொழியில் பெயர்ச்சொல்லிற்கும் அதன் முதல் வேற்றுமைக்கும் வேறு வேறு வடிவங்கள் உண்டு;[2] திராவிடமொழியில் அவ்வாறு இல்லாமல், பெயர்ச் சொல்லெல்லாம் முதல் வேற்றுமையாய் வரும் எனத் துணிதலே பொருந்துவதாகும்.

கன்னடத்தில் தன்மையிடப் பெயராக 'நானு' என்பதும் படர்க்கையிடப் பெயராகத் 'தானு' என்பதும் வழங்குகின்றன. ஆனால் முதல் வேற்றுமையில் அவை 'நா', 'தா' என்றாகின்றன. ஆயினும், 'னு' அல்லது 'ன்' என்பதை முதல் வேற்றுமை உருபாகக் கொள்ளலாகாது. ஏனெனில், 'னு' அல்லது 'ன்' என்பது கன்னடத்தில் மற்ற வேற்றுமைகளில் காணப்படுவதால் என்க. 'என்னே' 'தன்னே' என்பன அச்சொற்களின் இரண்டாம் வேற்றுமை வடிவங்களாதலும் கருதத்தக்கது.

திராவிடமொழிகளின் மூவிடப்பெயர்கள் வேற்றுமை ஏற்கும்போது காணும் திரிபு ஒன்று உள்ளது. அஃதாவது, எழுவாய் வேற்றுமையில் உயிர் நீண்டும், ஏனை வேற்றுமையில் உயிர் குறுகியும் காணப்படும்.

2. ஆங்கிலம், பிரெஞ்சு முதலான மொழிகளிலும் முதல் வேற்றுமைக்கு உருபுகள் இருந்துவந்தன. இப்போது அவை கெட்டு, பெயரளவாய் நிற்கின்றன. (Max Muller, The Science of Language, p. 129)

தமிழ் { நான், யான், நாம் — என்னை, நம்மை
நீ, நீர் — நின்னை, உன்னை, நும்மை, உம்மை
தான், தாம் — தன்னை, தம்மை

கன்னடம் { நானு — நன்ன
நீனு — நின்ன
தானு — தன்ன

தெலுங்கு மொழியில் இரண்டாம் வேற்றுமையில் மட்டுமே உயிர் குறுகியொலித்தல் உண்டு.

நெட்டெழுத்து முந்தியதா, குற்றெழுத்து முந்தியதா, வேர்ச்சொல்லிற்கு உரியது எது என்பது பற்றித் துணிந்து கூறுவதற்கில்லை.

**வேற்றுமை ஏற்கும் பெயர்ச்சொல் திரிதல்**

பெரும்பான்மையும் பெயர்ச் சொல் திரியாது நின்று வேற்றுமைப் பொருள் உணர்த்தும். வேற்றுமை உருபு ஏற்கும்போதும் பெயரும் உருபும் இயல்பாகப் புணர்ந்து நிற்கும்.

கடல் + ஐ = கடலை

ஆனால், மூவிடப்பெயர்களில் அவ்வாறு இன்றித் திரிபு உண்டு என்பதை முன்னர்க் கண்டோம். எழுவாய் வேற்றுமையில் உயிர்நெடிலாயும் ஏனை வேற்றுமையில் குறிலாயும் நிற்றல் கண்டோம்.

சில பெயர்ச்சொற்களில் வேறு வகையான திரிப உண்டு.

காடு
காடு + ஐ = காட்டு + ஐ = காட்டை

தமிழிலக்கண நூலார் இத்தகைய திரிபையும் உருபு என உடன்படுவதில்லை. ஆனால் இவ்வாறு திரிந்தா

லன்றி இச்சொற்கள் உருபு ஏற்பதில்லை; உருபு இன்றி வரும் வேற்றுமைத் தொகைகளிலும் இவ்வாறு திரிந்தாலன்றி வேற்றுமைப்பொருள் உணர்த்துவதில்லை. எனவே, வேற்றுமைப் பொருளைத் தொகா நிலையாகவோ, தொகை நிலையாகவோ உணர்த்துவதற்கு இத்திரிபு இன்றியமையாததாக உள்ளது.

## உருபேற்கும்போது வரும் சாரியைகள்

(1) இன் கையினால் — தமிழ்
னி தானிகி (அதற்கு) — தெலுங்கு
ன குருவனகு (குருவுக்கு) — ஷை

(2) அத்து மரம் > மரத்தை — தமிழ்
தி நுதல் (நெற்றி) > நுததி — தெலுங்கு
வாயு (வாய்) > வாதி — ஷை
சே (கை) > சேதி — ஷை
அது (adu) பொன் > பொன்னதை — தமிழ்
அத் (ad) மர (மரம்) > மரத (மரத்தின்) — கன்னடம்

(3) அன் அது > அதனை — தமிழ்
அற்று பல > பலவற்றை — தமிழ்
அர் இது > இதரல்லி (இதில்) — கன்னடம்

(4) இ - வாரு (அவர்) > வாரி (அவர்களின்) — தெலுங்கு

(5) அ - யான் > எனக்கு — தமிழ்

(6) உ - அவன் > அவனுக்கு — தமிழ்

## இரண்டாம் வேற்றுமை அல்லது செயப்படுபொருள் வேற்றுமை

உருபு: ஐ (எ, அ, அம். அன்னு, னு, னி)

தமிழிலும் மலையாளத்திலும் பெரும்பாலும் இரண்டாம் வேற்றுமை உருபின்றித் தொகையாகவே வழங்குகின்றது. பேச்சு வழக்கில் இதுவே மிகுதியாகக் காணப்படுகின்றது.

மரம் வெட்டினான்

பழைய இலக்கியங்களிலும் தொகையே மிகுதி. தொகையாக எழுதுதல் உயர்ந்த நடையாகவும் உருபு விரிய எழுதுதல் அத்துணை உயர்வு இல்லாத நடையாகவும் கருதப்படுகின்றது. சில இடங்களில் உருபு விரிதல் தவறாகவும் தோன்றுகின்றது.[3]

நான் கடிதம் எழுதினேன்
நான் கடிதத்தை எழுதினேன்

ஆனால், பொருள் தெளிவில்லாத இடத்தில், தெளிவு தரும் பொருட்டு உருபு வேண்டப்படும்.

புலி கொன்ற யானை
புலியைக் கொன்ற யானை

பழங்கன்னடத்தில் 'அம்' என்பது இரண்டாம் வேற்றுமை உருபாகும். அவள்—அவளம் (அவளை) புதுக் கன்னடத்தில் அவள்—அவளன்னு என்றாகும்.

தமிழில் உள்ள ஐ உருபு மலையாளத்தில் எகரமாக உள்ளது. டாக்டர் குண்டர்ட் மலையாளத்தில்

---

3. பின்னிஷ் (Finnish) மொழியில் பதினைந்து வேற்றுமைகள் இருந்தும், இரண்டாம் வேற்றுமையாகிய செயப்படுபொருளுக்குரிய உருபு இல்லை. ஆங்கிலத்திலும் பிரெஞ்சு மொழியிலும் எழுவாயும் செயப்படுபொருளும் தமக்குரிய உருபுகளை இழந்து நிற்கின்றன. சொற்கள் அடுத்து நிற்கும் முறையால் இஃது எழுவாய் என்றும், இது செயப்படுபொருள் என்றும் உணர்தல் வேண்டும். சீனமொழியில் இதுவே இயற்கையாகும். (Max Muller, The Science of Language, pp. 129, 130.)

முதலில் அகரமே உருபாக இருந்ததாகக் கூறுகிறார். கன்னடத்தில் அகரம் அல்லது அன்னு என்பது உருபாகும். [கால்டுவெல் கருத்துப்படி 'அம்' என்பது 'அன்னு' எனத்திரியும்; பழங்கன்னடத்தின் 'அவம்' (அவன்) என்பது புதுக் கன்னடத்தில் 'அவனு' எனத் திரிவது போன்றது இது.] [4]

தெலுங்கில் னு அல்லது னி உருபாகும். இகர வுயிரை அடுத்து வருங்கால் 'னி' என்னும் வடிவு வரும்.

இண்டினி (வீட்டை)

ஏனையுயிர்களை அடுத்து வருங்கால் 'னு' வரும்.

பிட்டனு (குழந்தையை)

இந்த னு, னி என்பவை தமிழில் 'இன்' போலச் சாரியையாகவும் வருகின்றன. னு, னி, அன்னு என்பன எல்லாம் அஃறிணைப் பெயர்களின் (மரம் முதலியவற்றின்) ஈற்றில் உள்ள 'அம்' என்பதன் திரிபே என்று கால்டுவெல் கருதுகிறார்.[5] ஆனால் இம் மூன்றனையும் சாரியை என்றலே பொருந்துவதாகத் தெரிகிறது.

## மூன்றும் வேற்றுமை

கருவிப் பொருள்

உருபுகள்:- ஆன், ஆல், (அ, சேத), கொண்டு

(கல் >) கல்லான், கல்லால், கல்கொண்டு — தமிழ்
(ராயி >) ராத, ராயிசேத — தெலுங்கு

4. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 273.
5. ibid.

ஆன் உருபு பழைய தமிழிலக்கியங்களில் உள்ளது. அதன் பிற்காலத் திரிபே ஆல் என்பது. தொல்காப்பியர் ஆன் உருபே கூறினர்.[6]

ஐந்தாம் வேற்றுமை உருபாகிய 'இன்' என்பதும் இக்கருவிப்பொருளில் வழங்கும்.[7] ஆனால் இது பேச்சு மொழியில் இல்லை.

கல்லின் எறிந்தான்

என்னுமிடத்தில் இன் கருவிப் பொருளில் வந்தது.

தெலுங்கில் பயின்று வழங்கும் உருபு சேத அல்லது சே. இவை செயி (கை) என்பதினின்றும் வந்தவை.

நிப்பு சேத (நெருப்பால்)

பழங்கன்னடத்தில் மூன்றனுருபு 'இம்' என்பது. இது தமிழில் ஐந்தனுருபாக உள்ள 'இன்' என்பதைச் சார்ந்தது. புதுக்கன்னடத்தில் 'இந்த' என்பது உள்ளது. இதுவும் 'இன்' என்பதன் திரிபே போலும்!

தமிழில் உள்ள 'ஆல்' என்பது 'கால்'(வாய்க்கால்) என்பதன் திரிபு என்பது கால்டுவெல் கருத்து.[8] அது பொருந்தாது. அதன் பழைய வடிவமாகிய 'ஆன்' என்பதன் தொடர்பான ஒரு சொல்லே முதன்முதல் இருந்ததொரு சொல்லாகும். 'கொண்டு' என்னும் சொல்லுருபு 'கொள்' என்னும் வினைப் பகுதியினின்

---

6. தொல். சொல்—எச, சுoஅ.

7. இப்பொருள் ஆனுருபிற்கும் இன்னுருபிற்கும் உரித்தென்பது விளக்கிய ஏது என்றது இன்னனேது என்றார்.

தொல், சொல் (சேனாவரையர்,) எச.

8. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 276.

றும் பிறந்தது. இச் சொல்லுருபு மலையாளத்திலும் உள்ளது.

உடனிகழ்ச்சிப் பொருள்

உருபுகள்: ஒடு, ஓடு, உடன் (ஒடெ, ஓடனே). இந்தோ—ஐரோப்பிய மொழிகளில் இவ் வேற்றுமை இல்லை. ஆனால் சித்திய மொழிகளில உள்ளது.

ஒடு, ஓடு, ஒடெ என்பன 'ஒட்டு' என்னும் வினைப்பகுதியினின்றும் பிறந்தன என்பர் கால்டுவெல்.[9] அவர் மேலும், உடன், ஒடெ, ஓடனே என்பன 'ஒடு' என்பதினின்றும் திரிந்தன என்றும் கருதுகிறார். ஒடு என்பது, தொடு, தொடர் முதலான சொற்களோடு இயைபு உடையது என விளக்குகிறார்.

தெலுங்கில் உள்ள உருபு தோடு என்பது. அதன் திரிபாகிய 'தோ' என்பதும் உருபாக வரும். கன்னடத்தில் ஒடனே என்பது உருபு. தோடு, ஓடு, ஒடனே உடனே எல்லாம் ஒரு சொல்லினின்றும் பிறந்தனவே. ஆனால், தோடு என்பது தோழமை என்பதன் பகுதியாகக் கருதக்கூடிய தொழு (தொழுதி) என்பதினின்றும் பிறந்ததெனக் கால்டுவெல் கருதுகிறார்.

## நான்காம் வேற்றுமை

உருபுகள்:- கு, (கி, கெ, கெ [ge])

வட இந்திய மொழிகளில் இரண்டாம் வேற்றுமைக்கும் நான்காம் வேற்றுமைக்கும் வேறுவேறு உருபுகள் இல்லை, ஆனால் திராவிட மொழிகளில் தனித்தனி உருபுகள் உள்ளன.

9. ibid. p. 278.

திராவிடமொழி ஒவ்வொன்றுக்கும் நான்கனுருபுஒவ்வொன்றே இருத்தல் வெளிப்படை. இவையும் ஆராய்ந்து பார்த்தால், ஓர் உருபின் திரிபுகளே என்பது விளங்கும். சித்திய மொழியியலை விளக்கும் பெஹிஸ்தன் பட்டயங்களிலும் இவற்ருெடொத்த உருபே நான்கனுருபாக உள்ளது.

மலையாளத்தில் இன்னு, னு, உ என்பவை நான்காம் வேற்றுமையில் வழங்குகின்றன. இன் சாரியையும் கு உருபும் சேர்ந்த இன்கு என்பதே 'இன்னு' எனத் திரிந்திருக்க வேண்டும். அந்த 'இன்னு' என்பது ன்னு, னு, உ எனப் பிறகு திரிந்திருக்கவேண்டும்.

அவனுக்கு — தமிழ்
அவன்னு — மலையாளம்

வடக்கு, தெற்கு என்னும் சொற்களின் ஈருகிய 'கு' என்பதற்கும் இவ்வுருபிற்கும் தொடர்பு இருத்தல் கூடும் என்றும், பெயர்த்தல் அல்லது மாறுதல் அதன் பொருளாதல் கூடுமென்றும் கால்டுவெல் கூறுகிருர்.[10]

**ஐந்தாம் வேற்றுமை**

உருபு—இன், இல் (இம்).

வேற்றுமைப் பொருள் வேறு; அப்பொருளை உணர்த்தவரும் உருபு வேறு. இந்த வேறுபாட்டை உணர்தல் இன்றியமையாதது. திராவிடமொழிகளில் கருவிப்பொருளை மூன்ரும்வேற்றுமை என்றும் இடப் பொருளை ஏழாம் வேற்றுமை என்றும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. இடத்திலிருந்தலையே ஏழாம்

வேற்றுமை குறிக்கின்றது. இடத்திலிருந்து நீங்குதலை (நீங்கற் பொருளை) ஐந்தாம் வேற்றுமை குறிக்கின்றது; இதுவே இலக்கணநூலார் ஐந்தாம் வேற்றுமைக்கும் ஏழாம் வேற்றுமைக்கும் கூறும் வேறுபாடாகும். ஆனால், ஏழாம் வேற்றுமைக்குரிய 'இல்' உருபே இங்கும் வருகின்றது என்பதையும், நீங்கற் பொருளைக் குறிக்க வேறு வினைச் சொற்கள் வேண்டியிருக்கின்றன என்பதையும் மறுப்பார் இல்லை. எனவே, ஐந்தாம் வேற்றுமையில் நீக்கப் பொருளுக்கென ஓர் உருபு இல்லை என்பது வெளிப்படை. 'இல்' உருபேயன்றி மற்ற ஏழாம் வேற்றுமை உருபுகளையும் இவ்வாறு நீக்கப் பொருள்தரும் வினைச் சொற்களைச் சேர்த்து ஐந்தாம் வேற்றுமையாக்கலாம். எனவே இவ்விரு வேற்றுமைகளும் வேறுவேறு எனக்கொள்வது பயனற்றுப் போகின்றது.

மரத்தில் உள்ளது, மரத்தின்கண் உள்ளது
மரத்திலிருந்து வீழ்ந்தது, மரத்தின்கணின்று வீழ்ந்தது

இவற்றில் வினைச்சொற்களே நீக்கப் பொருள் தரவல்லன. இடப்பொருளை ஏழனுருபே தருகின்றது என்பது இவற்றால் விளங்கும்.

பழங்கன்னடத்தில் 'இம்' என்பது உருபு. இஃது 'இன்' என்பதின் வேறானதன்று.[11] தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் இன் உருபின் பழமையைத் தெளிவாக்கும்.

ஒப்புப்பொருளும், எல்லைப்பொருளும் இடப் பொருளோடு தொடர்பானவை.

இம்மூன்று பொருளல்லாத கருவிப்பொருள் மூன்றும் வேற்றுமையாதலின், ஐந்தாம் வேற்றுமை என உருபு வேறுபாடுபற்றித் தனியே வகுத்தலும் பயனற்றது. இவற்றை ஆராய்வார்க்கு ஓர் உண்மை விளங்கும்.

அஃதாவது திராவிட மொழியில் வேற்றுமைகளை எட்டாகப் பாகுபாடு செய்தது, திராவிட மொழியியலுக்கு ஒத்ததன்று என்பதாகும். எனவே, வடமொழியில் வேற்றுமை எட்டாதல் கண்ட இலக்கணப் புலவர் தமிழிற்கும் அம்முறையை வகுத்துவிட்டனர் என்பர் கால்டுவெல்.[12]

**ஆறும் வேற்றுமை**

உருபு: அது, ஆது, அ, (தி, டி, அதி, அத, அர, தெ, ரெ). உடைய (சொல்லுருபு).

உயிர் குறுகிய மூவிடப் பெயர்கள் தமிழில் உருபின்றியே ஆறும் வேற்றுமையின் கிழமைப்பொருளை உணர்த்தவல்லன.

என் வீடு
உன் மகன்
தன் கை

அது' என்னும் உருபு ஒன்றன்பால் குறிப்பு வினைமுற்றுக்களிலும், குறிப்பு வினையாலணையும் பெயர்களிலும் ஈறுதல் காணின், அதன் உண்மை ஒருவாறு விளங்கும். 'து' என்பது ஒன்றன்பால் விகுதியே. அதனாலன்றோ, 'அது' என்னும் உருபு ஆறும் வேற்றுமையில் அஃறிணை ஒருமைப் பெயர்களின்

கிழமையைக் குறிக்கவே வரும் என இலக்கண நூலாரும் வரையறுக்கப் புகுந்தனர்.[13]

எனது கைகள்
எனது மகன்

எனவருதல இலக்கண வழக்கன்று; பேச்சு வழக்கு மன்று. அஃறிணைப் பன்மைப் பெயர்களின் கிழமையை உணர்த்தப் பலவின்பால் விகுதியாகிய அகரம் உருபாக வரும்.[14]

என கைகள்

பொருள் உயர்திணையாயின் இவ்வுருபுகள் வருதல் இல்லை; தொகையாக வழங்கும் (என் மகன்)[15] அல்லது சொல்லுருபுவரும் (என்னுடைய மகன்.)

'இன்' சாரியை சேர்த்து உருபின்றி ஆறும் வேற்றுமையை உணர்த்தும் இடங்கள் பல.

மரத்தின் கொம்பு, பசுவின் கால்

இன்' சாரியையுமின்றி வேற்றுமை உணர்த்தும் தொகையும் உண்டு.

மரக் கொம்பு, அவன் கால்

இன்' சாரியைக்குப் பின் உருபு நிற்றலும் உண்டு.

---

13. ஆறன் ஒருமைக் கதுவும் ஆதுவும்
பன்மைக் கவ்வும் உருபாம். (நன்னூல், 300)

14. பிராஹுய் மொழியிலும் ஆறும் வேற்றுமையில் ஒருமைக்கும் பன்மைக்கும் வெவ்வேறு உருபுகள் உள்ளன. ஆறும் வேற்றுமை ஒருமைக்கு ஞ உருபாகும். பன்மைக்கு ஆ உருபாகும். (D. S. Bray, The Brahui Language, Introduction, p.10)

15. G. W. Wade, Elementary Chapters in Comparative Philology, p. 84.

மரத்தினது கொம்பு, பசுவினது கால்

தெலுங்கில் 'இன்' சாரியை ன், னி என்னும் வடிவங்களில் வரும்.

அகர வுருபு தமிழில் பெருவழக்கிற்றன்று. பேச்சு மொழியில் வழங்குதல் சிறிதுமில்லை. ஆயினும், பிற மொழிகளில் 'அ' என்னும் உருபே பெரும்பாலும் வழங்குகின்றது. கன்னடத்தில் அஃது ஒன்றே ஆறனுருபாகும். அது சில இடங்களில் 'ஆ' என நீளலும் உண்டு. 'அது' உருபின் நீண்ட வடிவம் தமிழிலக்கியங்களில் உண்டு (தனாது தலை).

நன்ன (எனது) — கன்னடம்
நம்ம (நமது) — ஷை

கன்னடத்தில் இவ்வுருபு ஒருமை பன்மை என்ற வேறுபாடின்றி வருகின்றது. துளு மொழியிலும் இஃது ஒன்றே ஆறனுருபு.

தெலுங்கில் அகரம் ஆறனுருபாகவும் பெயரெச்ச விகுதியாகவும் உள்ளது.

ஊர கவி

மலையாளத்தில் தெ, றெ, இந்தெ, இன்றெ என்பன உருபாகும். பின்னைய இரண்டும் இன் சாரியை சேர்ந்தமைந்தவையாகும். தகரம் றகரமாதல் திராவிட மொழியில் காண்பதே.

எந்து — கன்னடம்
என்று — தமிழ் (என்று சொல்லி)

எனவே மலையாளத்தில் தெ என்பதே ஆறனுருபு என்றும், அதன் திரிபே றெ என்றும் கொள்ளலாம். இந்த உருபும் தமிழில் உள்ள 'அது' என்பதுபோல, ஒரு

மையில் மட்டுமே வழங்குவது. பன்மையில் 'உடெ' என்பது உருபாக வழங்குகின்றது. அது தமிழில் உள்ள சொல்லுருபாகிய உடைய என்பதன் திரிபு என்று கொள்ளவேண்டும்.

தெலுங்கில் யொக்க அல்லது யோக என்பதும் உருபினிடமாக வருகின்றது.

நாயொக்க — எனது

இது மிக அருகியே வருகின்றது. இதுபோன்றதொரு சொல் வடிவம் பிற மொழிகளில் இப்பொருளில் இல்லை. ஆதலின், இது திராவிடமொழிக்குரியதன்று எனத் தோன்றுகின்றது.

## ஏழாம் வேற்றுமை

இடப்பொருள் உணர்த்தும் எல்லாச் சொற்களும் ஏழனுருபே என்பர் இலக்கண நூலார். ஆயினும், சில இடப்பெயர்ச் சொற்கள் ஏழனுருபாகப் பயின்று வழங்கியிருத்தலின், அவற்றைமட்டும் உருபுகள் எனக் கொள்ளல் அமையும்.

கண், கால், இடம், இல், உள் என்பன உருபுகள். பழங்கன்னடத்தில் உள்ள 'ஒள்' என்பது 'உள்' என்பதன் திரிபே. தெலுங்கில் அது 'லோ' என்ற வடிவில் உள்ளது. புதுக்கன்னடத்தில் 'அல்லி', 'இல்லி' என்பவை உள்ளன. அவை தமிழில் உள்ள 'இல்' என்பதன் வடிவங்கள். தெலுங்கில் 'லோ' பெரு வழக்கிற்று; அஃதன்றி, 'அந்து' என்பதொன்றும் உருபாக உள்ளது.

**எட்டாம் வேற்றுமை**

இது படர்க்கையாரை முன்னிலைப்படுத்தி விளிக்கும் பொருளில் வருவதாகும்.

(1) ஏ என்னும் இடைச்சொல்லைச் சேர்த்தல் (அரசனே)

(2) ஈற்றயல் உயிரை நீட்டல் (மக்காள், அடிகாள்)

(3) ஈற்றயல் உயிர் திரிதல் (புலவீர்)

இவ்வாறும் பிறவகையாகவும் வரும். எனவே இவ் வேற்றுமைக்கென உருபு இல்லை என்ப.

**உருபு பல வரல்**

வீட்டுக்குள்—கு+உள். நான்கனுருபும் ஏழனுருபும்.

**ஆறன் தொகை**

இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு போலவே, திராவிட மொழிகளில் ஆறன் தொகைகளில் மூவிடப்பெயர்கள் முன்னும் ஏனைப்பொருட் பெயர் பின்னுமாக வரும். (என் கை, உன் புகழ்) சித்திய மொழியில் இவ்வாறன்று; கை என், புகழ் உன் என்பனபோல வரும். இது சித்திய மொழிக்கும் திராவிட மொழிகட்கும் உள்ள பெரிய வேறுபாடாம்.

**வேற்றுமைப் பாகுபாடு**

வடமொழியில் வேற்றுமை எட்டு; லத்தீன் மொழியில் ஆறு, கிரேக்க மொழில் ஐந்து. சொல்லும் உருபும் சேர்ந்து வேற்றுமை உணர்த்தும் முறை பழையது என்றும், நாளடைவில் மொழிவளர்ச்சியில்

தனிச்சொற்களே வேற்றுமைப் பொருளைத் தோற்று விக்க வருகின்றன என்றும் ஜெஸ்பர்ஸன் கருதுகிறார். அவர் கொள்கைப்படி வேற்றுமை யுருபுகள் பலவா யிருத்தல் மொழியின் பழைய நிலை. மொழி வளர வளர, உருபுகளும் பிறமுறைகளும் குறைந்து எளிமை மிகும் என்பர் அவ்வாசிரியர்.

ஒருமொழியில் எத்தனை வேற்றுமைகள் உள்ளன என்பதை அந்த மொழியின் அக்கால நிலைமை உணர்ந்தே கூறவேண்டும். பிறமொழிகளை ஒத்திட்டுப் பார்த்து அவற்றில் உள்ள பாகுபாட்டைப் பின் பற்றல் தவறாகவே முடிகின்றது.[16]

தமிழ் வேற்றுமைகளை வடமொழி இலக்கணப் படி வகுத்தனர் என்று கால்டுவெல் கொண்ட கொள்கை ஆராய்தற்குரியதேயாகும். பொருள் நோக்கி வேற்றுமைகளை வகுத்தல், உருபுகள் நோக்கி வகுத்தல்—இவ்விரு வகையிலும் தமிழ் வேற் றுமைப் பாகுபாடு பொருந்தவில்லை. மூன்றும் வேற் றுமை என்பதில் கருவி, உடனிகழ்ச்சி என்று வேறு வேறு பொருள்கள் உள்ளன. ஆன், ஒடு என்னும்

---

16. The number of cases to be recognized in a language (at one particular stage of its development) must be decided by the forms found in that language ; case-distinctions are not national or logical, but exclusively grammatical categories. No purely logical analysis can lead to a distinction between nominative, accusative, dative, etc. Nor can a comparison with other languages and their case-distinctions be regarded as decisive, for that would lead to consequences which no grammarian would accept. (Jespersen, The System of Grammar, p. 25.)

வேறு உருபுகளும் உள்ளன. ஐந்தாம் வேற்றுமைக் குரிய இன் உருபு மூன்றும் வேற்றுமைக்குரிய கருவிப் பொருளில் வருகின்றது. இன்னும் ஆனும் ஏதுப் பொருளில் ஒத்து வருதல் கண்ட தொல்காப்பியனார் 'இன்னானேது' எனக் குறித்துள்ளதும் காண்க.[17]

மூன்றும் வேற்றுமையில் இரண்டு உருபுகளும் இரு வேறுபொருளும் கண்ட சேனாவரையர் நிகழ்த்தி யுள்ள ஆராய்ச்சியும் இங்குக் கருதத்தக்கது. "ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமை ஆகற்பால எனின்—அற்றன்று. வேற்றுமை மயக்கமாவது ஒருவேற்றுமை யது ஒரு பொருட் கண்ணாக, சில பொருட் கண்ணாக ஏனை வேற்றுமையுஞ் சேறலன்றே. அவ்வாறன்றிச் சிறிதொழித்து எல்லாப் பொருட்கண்ணும் இரண் டுருபும் சேறலானும், வடநூலுள் பொருள் வேற் றுமை யல்லது உருபு வேற்றுமையான் ஒரு வேற்று மையாக ஓதப்படாமையானும் ஈண்டெல்லா ஆசிரிய ரும் ஒரு வேற்றுமையாகவே ஓதினார் என்க. வட நூலொடு மாறுகொள்ளாமைக் கூறல் ஆசிரியர்க்கு மேற்கோளாயின், விளிவேற்றுமையை எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கற்பாலராவர், அவ்வாறு—அடக்கலிலர் எனின்—அற்றன்று, விளிவேற்றுமை யை எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கல் ஆண்டெல் லார்க்கும் ஒப்ப முடிந்ததன்று;

ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறெனை விளம்பான் பெயரது விகாரமென்
றோதிய புலவனும் உளனொரு வகையான்
இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன்.

என்பவாகலின், ஐந்திர நூலார் விளிவேற்றுமையை எட்டாம் வேற்றுமையாக நேர்ந்தார் என்பது பெறப்படும். ஆசிரியர் அவர் மதம் பற்றிக் கூறினாராகலின் அதனொடு மாறு கொள்ளதென்பது."[18] இவ்வாறு சேனாவரையர் விளக்குமிடத்து, வடமொழியில் உள்ள வேற்றுமைப் பாகுபாட்டைத் தமிழிலக்கண நூலார் மேற்கொண்டதாகக் கூறியுள்ளார். வேற்றுமைகள் மொழிக்கு மொழி வேறுபடும் அமைப்பு உடையன. ஆதலின், ஒரு மொழிக்கு உள்ள ஒரு வேற்றுமையைத் தனியாக எடுத்துக் கூறாமல் விடுதலும், இல்லாத மற்றொரு வேற்றுமையைப் புகுத்து வகுப்பதும் பொருந்தாதன ஆகும்.[19]

---

18. தொல். சொல்—௭௪

19. If we examine an English Grammar, whether it be as old as Ben Jonson's or as new a Sonnenschein's, we shall find the noun saddled with five cases. Not because English pronouns have five cases (they have only three); nor because the Old English nouns had five cases (which they had and more); but because Latin had six, and if human ingenuity could have found six in modern English they would have been found. But no trace of an ablative being discoverable, five was the utmost number to which the samples would stretch.

This cumbersome make-believe needs a deal of defending. One line of defence is that, we are concerned with "the soul of the sentence," not with its outward form—a line taken by a grammarian whose own definition of case runs like this. "A case of a noun or pronoun is a form of a word used in a particular way in the construction of a sentence." If it is the soul that really matters, and we should have regard to the number of cases which it would require to express itself adequately by this means, why stick at five? Sanskrit has eight cases, and the parent language of the Aryan family had nine. (P. B. Ballard. Thought and Language, pp. 112, 113.)

ஐந்தாம் வேற்றுமைக்குரிய இன் உருபு ஒரு பொருளை உணர்த்துவதன்று. "வடநூலுள் பொருள் வேற்றுமை அல்லது உருபு வேற்றுமையான் ஒரு வேற்றுமையாக ஓதப்படுதல் இல்லை" என்றார் சேனாவரையர்.[20] அவரே "ஐந்தாவது நான்கு பொருண்மை யுடைத்து; பொருவும் எல்லையும் நீக்கமும் ஏதுவும் என" என்று நால்வகைப் பொருளைக் கூறினார்.[21] அவற்றுள், நீக்கப் பொருள் ஏழாம் வேற்றுமைக் குரிய இடப்பொருளோடு இயைபு உடையது.

ஊரின் நீங்கினான், ஊரில் இருந்தான்
ஊரினின்று நீங்கினான், ஊர்க்கணின்று நீங்கினான்
மரத்தின் வீழ்ந்தது, மரத்தில் வீழ்ந்தது
மரத்தினின்று வீழ்ந்தது, மரத்தின்கணின்று வீழ்ந்தது

என்னும் வாக்கியங்களை ஒப்பிட்டு நோக்கின், இன் உருபு இடப்பொருளே தருவது என்பதும், ஏழனுரு பிற்கும் அதற்கும் வேறுபாடு இல்லை என்பதும், நீக்கப் பொருளை உணர்த்துவன நீங்கினான், வீழ்ந்தது முதலிய வினைகளே என்பதும் தெளிவாகும்.

ஒரு மொழிக்கு இலக்கணம் வகுப்பவர் பிற மொழியின் அமைப்பைக் கொண்டு அதனை நோக்கு தலால் இத்தகைய இடர்ப்பாடுகள் விளையும்.[22]

---

20. தொல். சொல். எச.

21. ஷை—எஎ

22. எஸ்தோனியன் (Esthonian) மொழியில் வேற்றுமை களை ஆராய்ந்த ஒருவர் அம்மொழியில் உள்ள வேற்றுமைகள் பன்னிரண்டு என்றார். மற்றொருவர் இருபது என்றார். அந்த மொழியின் இயல்பு நோக்காது தாம் பேசும் மொழியின் இலக் கணத்தைக் கொண்டு ஆராய்வதன் விளைவாகும் இது. (Abel Haveloque, The Science of Language, p. 93)

ஆங்கில மொழிக்கு இலக்கணம் எழுதியவர்கள் முதலில் இத்தகைய தவறு செய்துவிட்டனர். அவர்கள் லத்தீன் இலக்கணத்தைப் பின்பற்றிப் பொருந்தா வகையில் வேற்றுமைகளை வகுத்தனர் என்பர்.[23]

தமிழ் தெலுங்கு முதலான மொழிகளில் உள்ள வேற்றுமைகள் எட்டுக்கு மேற்பட்டன, கணக்கற்றன என்பது கால்டுவெல் கருத்து.[24]

அவர் கொள்கைப்படி, திராவிட மொழிகளில் வேற்றுமைகள் மிகப் பலவாய் விரியும். பேசுவோன் கருத்தை விளக்கும் முறைகளும் கருத்து வகைகளும்

---

23. Latin was a language with a wealth of flexional forms, and in describing other languages the same categories as were found in Latin were applied as a matter of course, even where there was nothing in these other languages which really corresponded to what was found in Latin. In English and Danish grammars paradigms of noun declension were given with such cases as accusative, dative and ablative, in spite of the fact that no separate forms for these cases had existed for centuries. All languages were indiscriminately saddled with the elaborate Latin system of tenses and moods in the verbs, and by means of such Procrustean methods, the actual facts of many languages were distorted and misrepresented. Discriminations which had no foundation in reality were nevertheless insisted on, while discriminations which happened to be non-existent in Latin were apt to be overlooked. The mischief consequent on this unfortunate method of measuring all grammar after the pattern of Latin grammar has not even yet completely disappeared, and it is even now difficult to find a single grammar of any language that is not here and there influenced by the Latin bias. (Jespersen, Language, Its Nature, etc. p. 23.)

24. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, pp. 254, 255.

மிகப்பல ஆதலின், அவ்வாறு வேற்றுமைப் பொருள்கள் பல ஆதல் இயல்பே. ஆதலின், இவ்வுண்மையை நோக்குங்காலும், வடமொழியைப் பின்பற்றிய பாகுபாடு பொருந்தாது போகின்றது.

அன்றியும், வடமொழி முறையைப் பின்பற்றி வேற்றுமைகளுக்கு முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை என்பது முதலாகப் பெயரிட்டதும் பொருந்தாது என்கிறார் கால்டுவெல்.[25] அவர், எழுவாய் வேற்றுமை என்றது ஒரு வேற்றுமை அன்று என்றும், அஃது இயல்பான பெயர்ச்சொல்லாகக் கொள்ளத்தக்கது என்றும் கருதுகிறார்.

**உருபு ஏற்கும் முறை :**

இந்தோ ஐரோப்பிய மொழிகளில் பெயர் உருபேற்கும் முறைகள் (*declensions*) மிகப் பல. அவ்வாறே தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளிலும் இருத்தல்வேண்டுமென்று இலக்கணம் எழுதினர் ஆசிரியர் சிலர்.[26] ஆயின், அவர் தவறே இழைத்தனர். வடமொழி முதலான மொழிகளில் உருபேற்கும் முறைகள் பலவாயிருத்தல் உண்மையே. அம்மொழிகளில், பெயர்ச்சொற்களின் ஈற்றெழுத்து முதலிய வேறுபாடுகளுக் கேற்ப, உருபுகள் வேறுபடுதலால், முறைகள் பல என்றல் பொருத்தமே. ஆனல், திரா

25. Ibid.

26. இவ்வாறே உருபேற்கும் முறைகள் பலவாக வகுத்துத் தெலுங்கு மொழிக்கு பிரௌன் (C. P. Brown) என்பவர் இலக்கணம் எழுதியுள்ளார். (A Grammar of the Telugu Language, p. 51)

விட மொழிகளில் பெயரீற்றிற்கேற்ப உருபு மாறுவதில்லை. எல்லா ஈறுகளுடனும் ஓர் உருபு சேர்ந்து நிற்கும். வேறுபாடெல்லாம் இடையே புகும் அத்து, இன் முதலான சாரியைகளால் ஆவனவே அன்றி, வேற்றுமை உருபுகளால் ஆவன அல்ல. எனவே, திராவிட மொழிகளில் பெயர்ச்சொற்கள் உருபேற்கும் முறை (*declension*) ஒன்றேயாகும். சித்திய மொழிகளிலும் அவ்வாறே உள்ளது.

திராவிட மொழிகளில் (சித்திய மொழிகளில் உள்ளவாறுபோல) உருபுகள் பெயர்ச் சொற்களினின்று பிரித்துக்கொள்ளக் கூடியவைகளாக உள்ளன. இலக்கண நூலார் அவற்றையும் சொற்களாக மதித்து இடைச்சொல்லுள் அடக்கினர்.[27] ஆனால் இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் உருபுகள் பெயர்ச்சொற்களோடு கலந்து ஒன்றாகிப் பிரிக்கமுடியாதனவாக நின்றன. நாளடைவில் அம்மொழிகளில் வேற்றுமை புணர்த்தும் உருபுகள் வடிவிழக்கவே, அவ்வுருபுகளைப் புறக்கணித்து, அவற்றிற்கு ஈடாகப் புதிய உருபுகள் பெயர்ச்சொற்களுக்கு முன்னே வழங்கலாயின. செமிடிக் மொழியிலும் வேற்றுமை யுருபுகள் பெயர்ச் சொற்களின் முன்வருவனவாக (*Prepositions*) உள்ளன. கிரேக்க மொழியிலும் லத்தீன் மொழியிலும் இன்றும் அவ்வாறு வருதல் காணப்படும். திராவிட மொழிகளிலும் சித்திய மொழிகளிலும் பெயர்ச் சொற்களின் பின்னரே உருபுகள் சேர்க்கப்படுகின்றன; அன்றியும் அவை தனியே பிரிக்கக்கூடியன

27. ''வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும்'' இடைச்சொல் என்றார் தொல்காப்பியனார்—தொல் சொல். உ௫௦

வாகவும் உள்ளன; சில உருபுகள் தனிப் பெயர்ச் சொற்களாகவும் வினைச்சொற்களாகவும் உள்ளன. (சொல்லுருபுகள்: கண், இடம், கொண்டு முதலி யன.) ஐ, கு முதலிய உருபுகளின் பிறப்பு இன்று இன்னதெனத் துணியமுடியாது; எனினும் அவையும் முதலில் பெயராகவும் வினையாகவும் வழங்கினவையே என்று கொள்ள இடமுண்டு.

திராவிட மொழிகளுக்கும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளுக்கும் உருபேற்கும் முறையில் மற்றொரு வேறுபாடும் உளது. இந்தோ-ஐரோப்பிய மொழி களில் ஒருமைக்கும் பன்மைக்கும் வேறு வேறு வேற் றுமை உருபுகள் உள்ளன; ஆதலால் வேற்றுமை யுருபுகளே ஒருமை பன்மையாகிய எண்வேறுபாடும் உணர்த்தவல்லனவாக உள்ளன; எனவே, பன்மை யுணர்த்தும் விகுதி சேர்க்கவேண்டுவதில்லை. ஆனால், திராவிட மொழிகளில் ஒருமைக்கும் பன்மைக்கும் ஒருவகை உருபே உண்டு; ஆதலின் அவ்வுருபு எண் வேறுபாட்டை உணர்த்துவதில்லை; பெயர்ச்சொல் லின் பன்மை யுணர்த்தவேண்டின், பெயர்ச்சொல் லோடு பன்மை விகுதி சேர்த்துப் பின்னரே வேற் றுமை யுருபைச் சேர்த்தல் மரபு.

கை+ஆல்—கையால்: ஒருமை
கை+கள்+ஆல்—கைகளால்: பன்மை

ஆறும் வேற்றுமை ஒன்றே இம்முறைக்கு விதி விலக்காக உள்ளது. ஆறும் வேற்றுமையில் தமிழில் அஃறிணை ஒருமைக்கு ‘அது’ என்பதும் பன்மைக்கு ‘அ’ என்பதும் உருபாவன. இவ்வமைப்புக்குக் கார

ணம், ‘ து ’ ஒன்றன்பால் விகுதியாகவும் ‘ அ ’ பலவின் பால் விகுதியாகவும் வழங்குவதே ஆகும்.

இவற்றால் திராவிட மொழிக்கும் இந்தோ-ஐரோப்பிய மொழிக்கும் வேற்றுமை யுருபேற்கும் முறையில் வேறுபாடு இருத்தலும், திராவிட மொழி சித்திய மொழியோடு இம்முறையில் ஒத்திருத்தலும் விளங்கும்.

## கக. எண்ணுப் பெயர்கள்

**அடிச் சொற்கள் :**

ஒன்று, இரண்டு, மூன்று முதலியவை எண்ணுப் பெயர்களாகும். ஒரு, ஓர், இரு, ஈர், மு, மூ என்பவை பெயரடைகளாக (*numerical adjectives*) வருவன. இரண்டாம், மூன்றும் என வரும் அடைகளும் உள்ளன. அவை பெயர்களோடு 'ஆம்' என்னும் பெயரெச்சம் சேர்ந்து அமைந்த அடைகளாகும்.

இரு, மூ முதலான பெயரடைகளுக்கும், இரண்டாம் மூன்றும் முதலான அடைகளுக்கும் பொருள் வேறுபாடு உண்டு.

இரு நாடு, மூ வகை
இரண்டாம் நாடு, மூன்றும் வகை

முன்வகையின எண்ணிக்கை அளவை உணர்த்துவன. மற்றவை எண்ணப்படும் முறையினை உணர்த்துவன. இப்பொருள் வேறுபாடு பிறமொழிகளிலும் உண்டு. ஆங்கிலத்தில் இவற்றை *Cardinals, Ordinals* எனக் குறிப்பர். தமிழில் எண்ணலளவை என்றும் எண்ணு முறை எனவும் குறிக்கப்படும்.

எண்ணுப்பெயர்களின் தோற்றத்தை அறிதற்குப் பெயர்கள் சிறந்தனவா, பெயரடைகள் சிறந்தனவா என்று ஆராய்தல் வேண்டும். திராவிடமொழிகள் எல்லாவற்றிலும் பெயர்களும் பெயரடைகளும் பயின்று வழங்குகின்றன. ஒன்று இரண்டு முதலான பெயர்களுக்கும் ஒரு, இரு முதலான பெயரடைகளுக்கும்

வேறுபாடு உள்ளது. பேச்சு மொழியில் பெயரடைகளை விடுத்துப் பெயர்களையே வழங்குதலும் உண்டு. எடுத்துக்காட்டாக, இரு பசு என்பதற்கு ஈடாக இரண்டு பசு என்பர். பெயர்களே பெயரடைகளாக வழங்குவது திராவிட மொழியியல்பு. ஆதலால் இவ் வழக்கும் பொருத்தமானதே.

ஆயினும், பெயரடைகள் உருவத்தில் சிறியனவாகவும், எளியனவாகவும் இருத்தலைப் புறக்கணித்தல் கூடாது. அச்சிறிய எளிய முதனிலைகளோடு 'து' முதலிய விகுதிகளும் சாரியைகளும் புணர்ந்து பெயர் வடிவங்கள் அமைந்திருத்தல் இயற்கையாகத் தோன்றுகின்றது. [இரு+அ(ன்)+து > இரண்டு, இரடு; மூ+ன்+து > மூன்று, மூடு முதலானவை.] மூன்று, நான்கு முதலியவற்றில் மு, ந என்பன அடிச்சொல்லாக இருத்தல் கூடும். அடிச்சொல்லில் உயிர் குறிலாக இருந்து பின்னர் நீண்டிருத்தல் கூடும். எனவே அடிச்சொற்களை ஆராயும் வகையில், பெயரடைகளே பெரிதும் துணைபுரிகின்றன. சிறப்பாக, பதினொன்று முதலாகப் பத்தொன்பது வரையுள்ள உம்மைத் தொகைகளும், இருபது முப்பது நாற்பது முதலான பண்புத்தொகைகளும் ஆராய்ச்சிக்குரிய பல உண்மைகளைத் தெளிவாக்குகின்றன. இவற்றில் உள்ள அடைகளே மிகப் பழைய வடிவங்களைத் தெரிவிக்கவல்லன எனத் துணியலாம்.

அன்றியும், இருவர் மூவர் முதலான பெயர்களிலும் இரு, மூ என்பன காணப்படுகின்றனவே அல்லாமல், இரண்டு மூன்று என்பன இல்லை. இவற்றாலும் பெயரடைகளின் பழமையே புலனாகின்றது.

ஒன்று < ஒரு, ஒக:

ஓர் என்பதைவிட ஒரு என்பது பழையதாகும். அதன் இறுதி உகரம் ஒலித்துணையாகிய குற்றியலுகரமே என்பர் கால்டுவெல்.[1] உயிரெழுத்தின் முன்னர் அது கெடுங்கால், அதற்கு ஈடுசெய்ய உயிர் நீண்டு, ஓர் என்னும் வடிவம் அமைகின்றது.

தெலுங்கில் 'ஒகட்டி' என்பது பெருவழக்கிற்றாயினும் ஒண்டு என்னும் சொல்லும் பெயராக உள்ளது.

ஒரு என்பதில் உள்ள மெய் வல்லினமா இடையினமா என்பதும் ஆராய்ச்சிக்கிடமாகின்றது. கன்னடத்தில் மூறு என்பது தமிழில் மூன்று எனக் காணப்படுகின்றது. இவ்வாறு மூக்கொலி புணர்தல் (*nasalisation*) திராவிட மொழிகளின் இயல்பேயாகும். கன்னடத்தில் கறு என்பது தமிழில் கன்று என உள்ளது. குறு என்னும் அடிச்சொல்லின் திரிபாகவே குன்று என்பது அமைந்திருத்தல் கூடும். அவ்வாறு கொள்ளின், ஒன்று என்னும் பெயரின் மற்றொரு வடிவம் ஒறு என ஆகும். அதில் வல்லின றகரமே அமைகின்றது.

இவ்வாறு வல்லின றகரம் இடையின ரகரம் இரண்டும் மயங்கும் சொற்கள் சில உள்ளன. கறுத்தான், கருத்தான் என்னும் இருசொற்களும் பொருளால் சிறிது வேறுபடினும் அடிச்சொல் ஒன்றாகவே இருத்தல் கூடும்.

---

1. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 322

ஒற்றை என்னும் பெயரடையிலும் வல்லினமே காணப்படுகின்றது. இலக்கண நூலார் ஒன்று+ஐ எனப் பிரிப்பர்.[2] ஒறு என்பதையே பெயரடையாகக் கொண்டு, அங்குள்ள றகரம் இரட்டித்ததாகக் கொள்வதில் இழுக்கொன்றும் இல்லையென்பர் கால்டுவெல்.[3]

எனவே, ஒன்று என்னும் பெயர் ஒறு என்பதினின்றும் அமைந்ததாகும். அச்சொல் ஒன்றுதல், ஒன்றினர் எனத் தன்வினையாகவும் ஒற்று எனப் பிறவினையாகவும் வழங்குகின்றது.

மலையாளத்தில் ஒன்னு என்பது பெயராக உள்ளது. எனினும் 'னகரம்' பழமையுடையது அன்று. தமிழில் கன்று எனவும், கன்னடத்தில் கறு எனவும் உள்ள சொல் மலையாளத்தில் கன்னு என வழங்குவது போன்ற திரிபு இது. னகரம் மூக்கொலியாகத் தோன்றியதே ஆகும்.

எனவே ஒறு என்பதே பழைய வடிவு என்றும் அடிச்சொல் என்றும் கொள்ளல் அமையும்.

தெலுங்கில் ஒண்டு என்னும் பெயரும் ஒண்டி என்னும் பெயரடையும் உள்ளன. ஒகட்டி என்னும் மற்றொரு பெயரும் உண்டு. வடமொழியில் ஏக என்றும் பிரதம என்றும் இரு வேறு சொல் அமைந்திருத்

---

2. "ஐயீற்றுடைக்குற் றுகரமு முளவே" என்னும் சூத்திரத்திற்கு (நன்னூல் 185) "வருமொழிப் புணர்ச்சியானன்றி ஒற்றை இரட்டை வேட்டை என ஒருமொழியாய் நின்று ஐகாரம் பெறுதலும்......கொள்க" எனச் சங்கர நமச்சிவாயர் உரை எழுதல் காண்க.

3. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 324

தல்போல உள்ளது இது. ஒகடி என்பதன் ஒக என்பது ஏக என்பதன் திரிபோ என்று ஐயுறுவர் கால்டுவெல்.[4] ஒ(=ஒத்திரு) என்னும் வினைப்பகுதியிலிருந்து பிறந்ததாகக் கொள்ளலே பொருந்தும்.

ஒ என்பதைப் பகுதியாகக் கொண்டால் ஒன்று, ஒண்டு, ஒகட்டி என்னும் எல்லாச் சொற்களுக்கும் அதுவே அடிப்படையாக இருக்கும் எனலாம். முதல் எண்ணின் பெயர் எல்லா மொழியிலும் பெயரடியாகப் பிறந்ததெனவே துணியப்படுகின்றது; வினையடியாகப் பிறந்ததெனக் கொள்வதில்லை; ஆகவே, ஒ என்பது முதலில் பெயராகவே இருந்திருத்தல் வேண்டும் என்பர்.

ஆங்கிலத்தில் *a*, *an* என்னும் சொற்கள் (*indefinite articles*) வழங்குவதுபோல ஒரு ஒக என்பன ஒருமையைக் குறிக்க வழங்குதல் உண்டு.

இரண்டு : இரு

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | எரடு |
| தெலுங்கு | : | ரெண்டு (இரவு, இரா > ரே போல) |
| மலையாளம் | : | ரெண்டு |

உயிர் முதன்மொழி வருமிடத்து இரு என்னும் பெயரடையின் ஈற்றுயிர் கெட்டு முதலுயிர் நீளும். எனவே ஈர் என்பது அதன் மற்றொரு வடிவமாகும்.

இரு என்பதன் ரகரமெய் கெட்டு அடுத்துவரும் மெய் இரட்டித்தல் கன்னடத்திலும் தெலுங்கிலும் காணப்படுகின்றது.

இருவர் > இப்பரு — கன்னடம்
இத்தரு — தெலுங்கு
இருநூறு > இந்நூறு — கன்னடம், தெலுங்கு
இருபது> இப்பத்து — கன்னடம்

கன்னடத்தில் எரடு என்பது பெயராக நிற்பினும், எகரம் இகரத்தின் திரிபு எனவே கொள்ளல் வேண்டும். தொகைகளில் எகரம் மறைந்து இகரமே நிற்கின்றது (இந்நூறு, இப்பத்து என).

தெலுங்கில் இகர உயிர் இல்லை. ரகரமே பெயரின் முதலாக உள்ளது. எனினும் எல்லாத் திராவிட மொழிகளிலும் பெயரடையில் இகரவுயிர் நிற்றலால், இகரம் ஒலிநயம்பற்றித் தோன்றியது அன்று; அடிச் சொல்லின் இன்றியமையாத உறுப்பேயாகும்.

கன்னடத்தில் எரடு என்பது இரடு என்பதன் திரிபு. தமிழில் இரண்டு என்பது மூக்கொலி புணர்ந்த இரடு என்னும் சொல்லேயாகும். பிறவினையாக வரும் இரட்டு என்பது இதனோடு மிக்க உறவுடையதாகும்.

அடிச்சொல் இர் என்பதாகலாம். ஈர்தல் என்பது பிளத்தல், அறுத்தல், துண்டித்தல் என்னும் பொருளில் வழங்கியிருந்து, பிறகு ஒன்று இரண்டாக அறுபடுதல்பற்றி, இரண்டு பொருள்களைக் குறிக்க வழங்கியிருக்கலாம். இரண்டு என்பதற்குமேல் எண்ணத் தெரியாத மொழிகள் இன்றும் சில உள்ளன.[5]

---

5. விக்டோரியாவில் வாழும் பழங்குடி மக்களின் மொழியில் ஒன்று இரண்டு என்னும் எண்களே உள்ளன. அவற்றிற்கு மேல் எண்ணுதலை அம்மக்கள் அறியார். தென் அமெரிக்காவில் பூரிகள் எனப்படும் மக்கள் மூன்று என்பதைப் பல என்று

மூன்று : முறு

கன்னடம் : மூறு
தெலுங்கு : மூடு
மலையாளம் : மூன்னு (பெயரடை : மூ, மு)

கன்னடத்தில் உள்ளதே பழைய பெயர். மூறு என்பது மூக்கொலி புணர்ந்து மூன்று என்று தமிழில் வழங்கியது. ஏனைய அதன் திரிபுகளே.

தெலுங்கில் மூவரைக் குறிக்கும் சொல் முக்கரு. முப்பது என்பதற்கு நேரான சொல் முப்பை. ஆகவே மு என்பதே பழைய பெயரடை. அஃது உயிர்முதன் மொழி வரின் நீளும்.

மூறு என்பது தெலுங்கில் மூடு என உள்ளது. தமிழ் றகரம் தெலுங்கில் டகரமாதல் இயற்கை. (மாற்றம்>மாட்ட என்பது போல).

முறு என்பதே மிகப் பழைய வடிவாகும். அடிச் சொல்லிலே றகரம் சேர்ந்ததாகக் கொள்ளவேண்டும். இரு என்பதில் (இந்நூறு இப்பத்து முதலியவற்றில்) ரகரமெய் கெட்டதுபோல, முந்நூறு என்பதில் முறு என்பதன் றகரமெய் கெட்டிருக்கும்.

முறுக்கு, முறை என்பவற்றிலுள்ள அடிச்சொல்லாகிய முறு என்பதே இது. அடுத்த (இரண்டிற்கடுத்த) மாறுதலைக் குறிக்க முதலில் வழங்கியிருக்கும்.

---

உணர்த்துகின்றனர். நியூ ஹாலந்து மக்களும் இரண்டனுக்கு மேல் எண்ணும் எண்ணுப்பெயர் அறியார். (Sayce, Introduction to the Science of Language, p. 410)

**நான்கு : நல்**

கன்னடம் : நால்கு. தெலுங்கு : நாலுகு
மலையாளம் : நால், நாங்கு
பெயரடை — நால், தெலுங்கில் நல் (நலுவை, நன்னூறு)

லகரம் னகரமாதல் ஒலியியலுக்கு ஏற்றதே. கு என்னும் ஈறு ஒருவகை விகுதியாகவே கொள்ளல் வேண்டும் (கிழக்கு மேற்கு முதலியவற்றில் உள்ளது போல).

பல்குனி என்னும் வடசொல்லில் லகரம் ஙகரமாகப் (பங்குனி எனத்) திரிந்தது போன்றதே நால்கு என்பது நான்கு என்றாகி மலையாளத்தில் நாங்கு என நிற்பது. எனவே, நாங்கு என்பதைவிட நான்கு பழையது; அதனினும் பழமையானது நால்கு என்பது. இது சங்க இலக்கியத்துள் காணப்படுகின்றது.[6]

நல் என்ற ஒன்றே அடிச்சொல்லாதல் கூடும். அது நீளாமல் தெலுங்கில் வழங்கும்; ஏனையவற்றில் நால் என நீளும்.

நல் என்பது மிகுதி, பன்மை, வண்மை என்னும் பொருளைத் தருவதே. (நல்ல பணம் திரட்டினன், நல்குவான் என்பன காண்க). ஆதலின், மூன்றினும் மிகுந்த ஒன்றைக் குறிக்க வழங்கியிருக்கும்.

---

6. நல்நால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர் (அகநானூறு, 104)
வளைகண் டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி.
(பெரும்பாணாற்றுப்படை, 488—9)

ஐந்து : ஐ

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | ஐது, அய்து |
| தெலுங்கு | : | ஐது |
| தமிழ் | : | ஐந்து, அஞ்சு |
| மலையாளம் | : | அஞ்சு |

தெலுங்கு மொழியில் தொகைச்சொல்லில் ஐது என்பது ஏனு என வருகின்றது. பதிஹேனு என்பது பதினைந்தைக் குறிக்கும் சொல்லாகும். பெயரடையாக வரும்போது ஐ என்பதன்றி ஏ என்பது தெலுங்கில் உள்ளது.

தமிழ் : ஐம்பது, கன்னடம் : ஐவத்து } தெலுங்கில் : ஏபை (ebhai)

தமிழ், கன்னடம் : ஐந்நூறு. தெலுங்கில் : ஏனூறு

உயிர் முதன்மொழி வரும்போது, ஐம், ஐந், ஏன் என்றெல்லாம் வராமல் ஐ, ஏ என உயிர்மட்டும் வருவதால், மகரமோ னகரமோ அடிச்சொல்லிற்கு உரியதன்று; புணர்மொழியில் வந்து சேர்வதாகும்.

அஞ்சு என்பது ஐந்து என்பதன் திரிபே. வடமொழியில் உள்ள பஞ்சம் என்பதற்கும் அஞ்சு என்னும் சொல்லுக்கும் தொடர்பில்லை. தகர நகரங்கள் சகர ஞகரங்களாக மாறுதல் ஒலிநூலுக்கு இயைந்த ஒன்றே ஆதலின், ஐந்து என்பது அஞ்சு என்பதன் திரிபே ஆகும். ஐந்து என்பதே ஐன்னு ஏனு எனவும் திரிந்திருக்க வேண்டும் (தமிழ் : நடந்து > மலையாளம்: நடன்னுபோல).

ஐந்து என்பதன் மூக்கொலியைப் பிற்காலத்தது எனலாம். எனவே ஐது என்பதன் பகுதியான ஐ என்பதே அடிச்சொல்லாகும்.

ஐ என்பதன் பழம்பொருளென்ன? அது கை என்னும் சொல்லின் மற்றொரு வடிவமா? முதலில் உள்ள மெய் நாளடைவில் மறைந்ததோ? இங்ஙனம் கொள்ளின், தோற்றத்தைப்பற்றிய சிறந்த உண்மை புலனாகின்றது. 'ஒரு கை போடு' என்னும் மக்கள் வழக்கில் கை என்பது ஐந்து என்று எண்ணைக் குறித்தல் இன்றும் காணப்படுகின்றது. எனவே, கையில் உள்ள விரல்களின் தொகையே ஐந்து என்பதன் பொருளாக அமைந்தது. நாம் பத்து என்பதை ஓர் எல்லையாகக் கொண்டு பதினொன்று, பதினான்கு என வழங்கல்போல், சில மொழியினர் ஐந்தை ஓர் எல்லையாகக் கொண்டு, ஐந்தொன்று, ஐந்திரண்டு என வழங்குவர்.[7]

ஆறு : அறு

இவ் வெண்ணைப் பொறுத்தவரையில், எல்லாத் திராவிட மொழிகளிலும் பெயர்க்கும் பெயரடைக்கும் உள்ள வேற்றுமை மிகக் குறைவாகவே உள்ளது. எல்லா மொழிகளிலும் ஆறு என்பதே பெயர். பெயரடை, உயிருக்குமுன் ஆறு எனவும் மெய்க்குமுன் அறு எனவும் நிற்கின்றது. து டு என்னும் விகுதிகள் இவ்வெண்ணிற்கு இல்லை.

அறு என்பது புதுவழியறுத்தல், தனிப்பகுதி காணல் என்னும் கருத்துடன், ஒரு கையில் உள்ள

7. அமெரிக்காவின் பழங்குடி மக்கள் பேசும் அல்கோன்கின் (Algonquin) மொழியில் முதல் ஐந்து எண்களே அடிச் சொற்களாக இயல்பானவையாக அமைந்துள்ளன. பத்து என்பதை அவர்கள் "ஐந்து மிகுதி" என்று வழங்குவர். இதனை ஆராய்ந்தால், ஒரு கையின் விரல் தொகை கொண்டு, ஐந்தை எல்லையாகக் கொண்டமை தெரிகின்றது. (Abel Haveloque, The Science of Language, p. 134)

ஐந்து விரலையும் எண்ணி முடிந்தபின், மற்றொரு கையின் விரலை எண்ணும் வகையில் வழங்கியிருக்கலாம்.

ஏழு : எழு

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | ஏளு |
| தெலுங்கு | : | ஏடு |
| தமிழ், மலையாளம் | : | ஏழு |

இவ் வேறுபாடு இம்மொழிகளிடையே ழகரம் ளகரமாகவும் டகரமாகவும் மாறும் முறையோடு இயைந்ததே. (கோழி > கன்னடத்தில் கோளி, தெலுங்கில் கோடி).

பெயர்க்கும் பெயரடைக்கும் வேற்றுமை குறைவு. பெயரில் து, டு என்னும் விகுதிகளும் இல்லை.

எழுமை என்பது தமிழில் மிகுதியும் வழங்கும் சொல். எழு என்பதன் ழகரம் அடிச்சொல்லைச் சார்ந்ததே. ஆனல் அஃது இடையினத்துள் மிக நுண்ணியதாதலின், வருமெய்க்கு ஏற்பத் திரிதல் உண்டு, எப்பத்து என்பது கன்னடத்தில் எழுபதைக் குறிக்கும் சொல். அதில் ழகரம் இல்லை. தெலுங்கில் அத்தொகை டெப்பை என்பதாம். தெலுங்கில் உயிரொலி இடம் பெயர்தல் ஏனைச்சொற்களில் (வாரு, வீடு, தானி) காணப்படல்போலவே ஈண்டும் உள்ளது.

ஏடு என்னும் தெலுங்குப் பெயர்ச்சொல்லில் டகரம் இருப்பினும் ஏள்நூறு என்னும் தொகையில் ளகரமே காணப்படுகின்றது. எனவே ழகரமே ளகரமாகவும் டகரமாகவும் திரிந்தது என்பதில் ஐயமில்லை.

ஏழு என்பது புதியதொன்று புறப்படல், எழுதல் என்னும் பொருளில் இரண்டாம் கைவிரல் வரிசையில் புதிய எண்ணினைக் குறிக்க வழங்கியிருக்கலாம்.

எட்டு : எண்

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | எண்டு (entu) |
| தெலுங்கு | : | எனிமிதி, எம்மிதி (பெயரடை என) |
| தமிழ், மலையாளம் | : | எட்டு |

வடமொழியில் உள்ள அஷ்ட என்பதற்கும் இதற்கும் தொடர்பு இல்லை. அது வேறு; இது வேறு.

கன்னடத்தில் உள்ள வடிவம் ஆராய்ச்சிக்குப் பெருந்துணை செய்வதாகும். எண் என்பதனோடு 'டு' விகுதி சேர்ந்தே எண்டு என்றும், எட்டு என்றும் பெயர்கள் அமைந்தன. அந்த 'எண்' என்பதே பெயரடையாக எல்லா மொழிகளிலும் வழங்குகின்றது. கன்னடத்தில் எண்வரு என்னும் சொல் எண்மர் என்னும் தமிழ்ச் சொல்லுக்கு நேரானது. அதில் 'எண்' என்னும் அடிச்சொல் காணப்படுகின்றது. எனினும், எம்பத்து (எண்பது) என்பதில் ணகரமெய் இல்லை. அங்கு ணகரமெய் மகரமாகத் திரிந்ததெனக் கொள்ளல்வேண்டும்.

எண்ணூறு என்பது தமிழில் உள்ள தொகைச் சொல். கன்னடத்தில் அதற்கு நேரானது எண்டு நூறு என்பது. அதில் பெயரடையின்றிப் பெயரே அடையாக அமைந்துள்ளது.

தெலுங்கில் உள்ள எனிமிதி என்பதில் மிதி என்பது பதி என்பதன் திரிபாகும் (பதி=பத்து). அம்

மொழியில் எண்பதைக் குறிக்கும் தொகைச்சொல் எனபை, எனபது (*enabadi*) என்பன. அங்கெல்லாம் 'என' என்பது அடிச்சொல்லாக உள்ளது.

ஆயினும் தெலுங்கில் பெயர்ச்சொல்லில் டுவ் விகுதி சேராமல், மிதி என்னும் சொல் சேர்ந்ததேன்? ஒருகால் பத்தில் இரண்டு குறைவு என்பதை உணர்த்துதற்குப் போலும்! ஒன்பது என்னும் எண்ணைக் குறிக்கும் சொற்கள் திராவிட மொழிகளில் இவ்வாறு பத்தை நோக்கி எண்ணியனவாக அமைந்துள்ளன.

எட்டு, ஒன்பது என்னும் எண்களை உணர்த்த, பத்தில் இரண்டு ஒன்று குறைவு என்று உணர்த்தும் பெயர்கள் சித்திய மொழிகளிலும் காணப்படுவனவாம். திராவிட மொழிகளில் ஒன்பது இவ்வாறு அமைந்திருப்பது உண்மையே. ஆனால் தெலுங்கில் எட்டு என்பதும் அவ்வாறு அமைந்துள்ளது. அஃது, ஒன்பது என்னும் எண்ணை நோக்கி அமைந்ததாகும்.

ஏழுவரையில் எண்ணக்கற்ற பழந்திராவிடர்கள் அதனைவிட ஒன்று மிகுந்ததைக் குறிப்பதே எல்லையாகக் கொண்டு, 'எண்' என்ற சொல்லையே வழங்கினர் போலும்! அப்போது அதனையே உயர்ந்த எண்ணிக்கையாகக் கருதினர் போலும்!

ஒன்பது

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | ஒம்பத்து |
| தெலுங்கு | : | தொம்மிதி |
| மலையாளம் | : | ஒம்பது |
| தமிழ் | : | ஒன்பது, ஒன்பான், தொண்டு |

எல்லாத் திராவிட மொழிகளிலும் ஒன்பது என்னும் எண்ணுப் பெயரும் பெயரடையும் தொகைச் சொல்லாகவே உள்ளன. அவற்றின் பின்மொழி பத்து என்னும் எண்ணின் திரிபே என்பதும் தெளிவாக உள்ளது. ஆனால், தமிழில் மட்டும் தொண்டு என்னும் வேறொரு தனிச்சொல்லும் வழங்குகின்றது.

தமிழில் பத்து என்பதே பான் எனத் திரிந்து நிற்றல் உண்டு. கன்னடத்தில் ஹத்து எனத் திரிதல் உண்டு. ஆனல் மிகுதியான திரிபு தெலுங்கில் காணப்படுகின்றது. அம்மொழியில் அது பதி, மிதி, பை, வை என்றெல்லாம் திரியும்.

நிலைமொழியாய் உள்ள ஒம் என்பது, ஒன் என்பதன் திரிபே. தமிழில் ஒன் என்பதே நிலைமொழி. அஃது ஒன்று என்னும் எண்ணைக் குறிப்பதே. துளு மொழியில் ஒர்ம்பா எனவும், கோடா மொழியில் ஒர்ம்பது எனவும் வழங்குவனவற்றில் ஒர் என்னும் முதனிலையே காணப்படுகின்றது.

எனவே, ஒன்பது என்பதன் பொருள், பத்தில் லொன்று குறைவு; ஒன்று குறைந்த பத்து என்பதே யாகும். (பதினொன்று என்பதன் பொருள் இதற்கு மாறானது; பத்தும் ஒன்றும் என்னும் உம்மைத் தொகையாம் அது.)

ஆனல், ஆராய்ச்சியில் இடர்ப்பாடுகள் சில உள்ளன. ஒர் என்று நிற்காமல் ஒன் என்று நிற்பானேன்? அன்றியும், தொகைகளில் ஒர் என்பது மறைந்து தொள், தொண், தொம் என்பன வருவானேன்?

(தொண்ணூறு, தொளாயிரம், தொம்பை, தொம்பதி, தொம்மநூறு, தொம்பத்து, ஒம்பையிநூறு என்பன காண்க.)

இவற்றை ஆராயுங்கால் ஒன்று என்பதை முதனிலையாகக் கொள்வது பொருத்தமாகத் தெரியவில்லை. தொன்மை, தொல்லோர், தொன்று என்பவற்றின் பகுதியாகவும் பழமையை (அல்லது காலத்தால் முதன்மையைக்) குறிப்பதாகவும் உள்ள தொல் என்பதே நிலைமொழி எனக்கொள்ள இடந்தருகின்றது. லகரம் ளகரமாகத் திரிந்து தொளாயிரம் என்பதில் காணப்படுகின்றது. (ஆயிரத்திற்கு முந்தியது என்பது பொருளாம்.) லகரம் ணகரமாகத் திரிதல் ஒலியியலுக்கு இயைந்ததே. அந்த னகரம் ணகரமாகவும் மகரமாகவும் திரிந்து தொண்ணூறு, தொம்மநூறு என்பவற்றில் காணப்படுகின்றது. தொல் என்பதில் லகரம் னகரமாகத் திரிந்து, முதலில் உள்ள மெய் கெட்டு, ஒன் எனவும் ஒம் எனவும் நிற்றலை ஒன்பது, ஒம்பது என்னும் பெயர்ச்சொற்கள் தெரிவிக்கின்றன. அவ்வாறாயின் ஒம்பது என்பது பத்திற்கு முந்தியது என்னும் பொருள் தருவதாகும்.

தொல் என்பதற்கு இப்பொருள் உண்டு என்பதைத் தமிழினும் தெளிவாகத் தெரிவிக்கவல்லது தெலுங்கே. தொலி வாரமு=வாரத்தில் முதல் நாள். தொலி நாடு=முந்திய நாள். எனவே பத்திற்கு முந்தியது ஒன்பது; நூற்றுக்கு முந்தியது தொண்ணூறு; ஆயிரத்திற்கு முந்தியது தொளாயிரம். இவ்வாறு தமிழில் உள்ள முறை மிகப் பொருத்தமாக உள்ளது

ஆனால், தெலுங்கு முதலிய மொழிகளிலுள்ள சொற்கள் இம்முறை பிறழ்ந்துள்ளன.

கன்னடம்— 90 : தொம்பத்து
900 : ஒம்பையிநூறு
தெலுங்கு— 90 : தொம்பை
900 : தொம்மநூறு

இத்தொகைகளில் உள்ள தொம் என்பது ஒன்பது என்னும் பொருளைக் குறித்தால் இடர்ப்பாடு இல்லை. ஆனால் அதற்கு அப்பொருள் இல்லை. கன்னடத்தில் உள்ள ஒம்பையிநூறு என்பது அப்பொருத்தம் பெற்றது.

தொல் என்பதனோடு பத்து என்பது தொக்க தொகையே ஒன்பது எனக் கொள்வது இவ்வளவு எளிதாயிருக்க, இலக்கண நூலார் இயைபின்றி எதிலிருந்தோ, எதனையோ திரித்து, எவ்வாறோ காரணங்காட்டி இடர்ப்படுகின்றனர். தொல்காப்பியரும் பவணந்தியாரும் கூறும் விதிகள் வியப்பை விளைவிக்கின்றன.[8]

பத்து

கன்னடம் : பத்து, ஹத்து
தெலுங்கு : பதி (மிதி, பை, வை)
தமிழ் : பத்து, பது, பான்

பதினொன்று முதலான தொகைச் சொற்களின் முன்மொழி பத்து என்பதன் திரிபு ஆதலால், அவை இச்சொல்லின் உண்மையைத் தெரிவிக்க வல்லன.

---

8. தொல். எழுத்து. சசரு, சகூஙட.
நன்னூல், 194.

பன்னிரண்டு என்பதில் பன் என்பதும் பத்தின் ஒரு வடிவமே. அது பதின் என்பதன் மரூஉவோ? பான் என்பதன் குறுக்கமோ? மலையாளத்தில் பண்டி ரெண்டு, பண்ட்ரெண்டு என்பன வழங்குகின்றன. அவற்றில் பண்ட், பண்டு என்ற திரிபு உள்ளது.

தெலுங்கில் ஈறு இகரமாக உள்ளது (பதி). அது முதலான சுட்டுப்பெயர்களும் அம்மொழியில் இகர ஈறு பெற்று அதி முதலியனவாக நிற்றல் இயல்பு.

பன்னெண்டு (பன்னிரண்டு)
பன்னித்தரு (பன்னிருவர்)
பந்தொம்மிதி (பத்தொன்பது)

இவற்றில் பன் எனத் திரிதல் காணப்படினும் ஏனைய வற்றில் பதி, பத, பத், பை, வை என்ற திரிபுகள் உள்ளன.

கன்னடத்தில் பன்னெண்டு, பன்னெரடு என்பவற்றில் பன் என்பதும், பயினாயிரம் என்பதில் பயின் என்பதும், ஏனையவற்றில் பதின், வத்து என்பனவும் உள்ளன.

வடசொல்லாகிய பந்தி (*pankti*=விருந்தினர் வரிசை) என்னும் சொல்லிலிருந்து, பந்து, பது, பதி என்பன பிறந்திருக்கக்கூடும் என்று கருதுவார் உளர். நூறு, வை (ஆயிரம்) என்பவற்றை எண்ணத்தெரிந்த மக்களுக்குப் பத்து என்னும் எண் தெரியாது எனக் கொள்ளல் பொருந்தாது. தவிர வடசொல்லைக் கொள்வதாயின், அவ்வெண்ணைக் குறிக்கப் பெருவழக் காயுள்ள தசம் என்ற சொல்லையே கடன் வாங்கி

யிருக்க வேண்டும். அவ்வாறு கொள்ளாமையின் அது வடசொல்லன்று.

பன், பது என்னும் இரண்டிலொன்று அடிச் சொல்லாதல் வேண்டும். மலையாளத்தில் உள்ள பண்டிரெண்டு, தெலுங்கிலுள்ள பந்தொம்மிதி என்னும் சொற்களை ஆராய்ந்தால், பன், பத்து எனத் திரிந்திருக்கும் என அறியலாம்.

பன் என்பதன் வேறுவடிவமாகப் பல் என்னும் சொல்லைக் கொள்ளின், பத்தின் பழம் பொருள் விளங்குகின்றது. எட்டு வரையில் எண்ணக்கற்ற மக்கள் மிகுதியானவற்றைப் பல என்றும் பன்மை என்றும் கருதியிருக்கலாம். பன் என்பது அப்பொருளது ஆகலாம். பல்+து, பஃது, பத்து என ஆகியிருக்கலாம்.

அன்றி, பத்து என்பதே பன் எனத் திரிந்தது எனக் கொள்ளின், வேறு சொல் அதன் பழம் பொருளைத் தெரிவிப்பதாகல் வேண்டும். பகுதி என்பது பஃதி, பஃது எனத் திரிதல் இயல்பு. பஃது என்பது தமிழிலக்கியத்துள் பயின்றது. பகு என்னும் முதனிலை, வகையை—வகுத்தலை—பாகுபாட்டை உணர்த்துவதாகும். இரண்டு கையளவு தொகையை ஒரு பகுதியாக முன்னோர் வழங்கியிருக்கலாம்.[9] பகுதி

9. பாஸ்க் (Basque) மொழியில் இருபது இருபதாக எண்ணும் முறையே (Vigesimal system) உள்ளது. முப்பத்தொன்பதை நாம் மூன்று பத்தும் ஒன்பதும் (முப்பது+ஒன்பது) என்று வழங்குகின்றோம். அம்முறைப்படி அதனை இருபதும் பத்தொன்பதும் என்பர். அவ்வாறே அறுவதைப் பத்தால் அளந்து ஆறு பத்து அல்லது அறுபது என்கிறோம். பாஸ்க் மொழியில் இருபதால் அளந்து மூன்று இருபது என்பர்.
(Abel Haveloque, The Science of Language, p. 118)

என்பது பாதி எனத் திரிந்து வழங்குவதால், பஃது என்பது பான் எனத் திரிந்திருக்கலாம். அன்றி, பகு >பகல்>பால் எனத் திரிந்து, பால்>பான் என லகர ஈறு னகர ஈருகியிருக்கலாம். பால் எனினும் பகுதி எனினும் ஒக்கும்.

நூறு

தெலுங்கில் இச்சொல்லும் உள்ளது. வந்த (*vanda*) என்னும் வேறு பெயர்ச்சொல்லும் உள்ளது.

நூறு எனினும், நீறு எனினும் பொடி, துகள் என்பவற்றைக் குறித்தல் மரபு. மலையாளத்திலும் தெலுங்கிலும் அப்பொருளில் நூறு என்பது வழங்கும்; தமிழில் நீறு என்பதும் அப்பொருளில் வழங்கும். (புல், பில் எனப் பேச்சில் உகரம் இகரமாய்த் திரிதல் காண்க). தொடக்கத்தில் எண்ணிக்கையுள் அடங்காத பெருந்தொகையைக் குறிக்கப் 'பொடி போல் பல' எனக் குறித்திருத்தல் இயற்கையாகவே தோன்றுகின்றது. "வாழிய.....மணலினும் பலவே" என்று பல ஆண்டுகளைக் குறிக்கையில் மணலைக் கூறுதல் தமிழ் மரபு என்பதும் ஈண்டுக் கருதத் தக்கது.

ஆயிரம்

கன்னடம் : சாவுர, சவர
தெலுங்கு : வேலு, வேயி
தமிழ், மலையாளம் : ஆயிரம்

வடசொல்லாகிய 'ஸஹஸ்ர' என்பது ஸஹஸ்ரம்>ஸஹஸிரம்>அஅஇரம்>ஆயிரம் எனத் திரிந்

தது.[10] தெலுங்கில் உள்ள ‘வேயி’ தூய திராவிடச் சொல்லே. வெயி, வெய்யி, வே என்பவற்றின் பன்மையே வேலு என்பதாகும். வெப்பமான நிலை, மிகுதியான நிலை, சூரியன் கிரணங்கள் போன்ற பொருளை உணர்த்தும் சொல் படிப்படியே இப்பொருளில் வழங்கி இப்பெருந் தொகையைக் குறித்திருக்கலாம்.

**எண்முறைப் பெயர்** (*Ordinal numbers*)

ஆம் என்னும் பெயரெச்சம் சேர்த்து எண்ணுப் பெயர்களை முறை குறிக்க வழங்குவர்; இரண்டாம் ஆண்டு, மூன்றும் வகுப்பு எனல் காண்க.

ஆனல் ஒன்று என்னும் பெயரை இவ்வாறு பயன்படுத்துதல் இல்லை. முதல் என்னும் வேறு சொல்லை வழங்குவர். (முதல் ஆண்டு, முதல் வகுப்பு என). முன், முந்து என்னும் சொற்களில் உள்ள மு என்னும் அடிச்சொல தல் விகுதியோடு சேர்ந்து அமைந்ததாகும் இது.

தெலுங்கில் மொதட்டி என்பது வழங்குகின்றது. ஆம் என்பதற்கு நேராக அவ என்பது எணைப் பெயர்களோடு வழங்குகின்றது. (மூடவ = மூன்றும்). கன்னடத்தில் (மூறனே என) அனே வழங்குகின்றது.

ஆம் என்பதற்குப் பதிலாகத் தமிழில் ஆவது என்பதும் சேர்த்து வழங்கப்படும்.

---

10. இந்தோ - ஐரோப்பிய இனம் பிரிந்து வேறு வேறு வாழ்க்கை தொடங்குவதற்கு முன்பு ஆயிரம் என்ற எண்ணிக்கை அறியாமல் அதற்குரிய சொல் இல்லாமல் இருந்தது என்பர் விட்னே.
(Language and the Study of Language, p. 419)

## கஉ. மூவிடப் பெயர் (Pronouns)

மொழிகளின் உறவையும் மொழியினங்களின் தொடர்பையும் விளக்கும் வகையில் மூவிடப்பெயர்கள் சிறந்து நிற்கின்றன. மொழிகளில் பொதுவாகச் சொற்களும் சொற்றொடர்களும் மாறும் இயல்பின. ஆனால் மூவிடப்பெயர்கள் அத்தகையன அல்ல. அவற்றுள் தன்மைப் பெயர்களும் முன்னிலைப் பெயர்களும் என்றும் மாறா இயல்பினபோல விளங்குகின்றன; ஏனைய சொற்களோடு ஒப்பிட்டு நோக்குங்கால் இவ்வுண்மை புலனாகின்றது; ஆனால் காலப்போக்கில் இவையும் ஒரு சிறிது மாறுகின்றன எனலாம். ஆனால், அம்மாறுதலோ மிக மிகச் சிறிதே; அதற்கும் நெடுங்காலம் வேண்டியுள்ளது. எண்ணுப் பெயர்கள், வேற்றுமை யுருபுகள், வினை விகுதிகள் இவையும் எளிதில் மாறாத மொழிக்கூறுகளே. ஆயினும், அவற்றினும் நிலைபேறானவை மூவிடப்பெயர்கள் என்று கூறல் பொருந்தும். மூவிடப்பெயர்கள் காலப்போக்கில் மாறுதலுக்கு இடந்தரினும், அடியோடு மாறுவது என்றும் இல்லை. ஆதலால் பழைய சொல்லுக்கும் புதிய சொல்லுக்கும் உள்ள தொடர்பு ஒரு சிறிதும் மங்காமல் தெளிவாய் அறியக் கிடக்கின்றது. சில மொழிகள் எல்லாத் துறையிலும் முற்றிலும் வேறுபட்டனவாக மாறிப்போவதும் உண்டன்றோ? அத்தகைய மொழிகளிலும், மூவிடப்பெயர்கள் தொடர்புடையனவாய் நின்று, மொழிகளின் உறவை விளக்கும் ஒரு தனிக்கருவியாய் அமைகின்றன. மூன்

னிலைப் பெயர்களைவிட, இவ்வகையில் தன்மைப் பெயர்களுக்கு நிலைபேறு மிகுதி எனக் கூறலாம்.

சப்பானிய மொழியில் மூவிடப்பெயர்களே இல்லை. எவ்விடம் குறிக்கப்பெற்றுள்ளது என்பதை வழக்கு நோக்கியே உணர்தல் வேண்டும். தமிழ் முதலான திராவிட மொழிகளில் படர்க்கையிடப் பெயர் இல்லை என்று கருதவேண்டியுள்ளது. தான், தாம் என்பவை படர்க்கையிடப் பெயர்களல்ல; ஆயினும் அப்பொருளில் வழங்குவன (*reflexive pronouns*). அவன், இவன், அவள், இவள் முதலியன படர்க்கைச் சுட்டுப் பெயர்கள். அவற்றில் உள்ள அன் விகுதி அல்லது ஆன் விகுதி முதலியவை பண்டைக் காலத்தில் இருந்து மறைந்த படர்க்கையிடப் பெயரைக் குறிப்பன எனலாம்.

### தன்மை ஒருமை இடப்பெயர்

திராவிட முதல்மொழியில் இதன் வடிவம் யாதாக இருந்திருத்தல்கூடும் என ஆராய்தல் வேண்டும். தமிழ் முதலான பல மொழிகளிலும் உள்ள சொற்களை ஒப்பிட்டுப் பார்ப்பதால் உண்மை ஒருவாறு விளங்கக்கூடும். அவ்வாறு ஒப்பிடும்போது, உருபேலாத பெயர்ச்சொற்களை மட்டுமே அல்லாமல், உருபேற்குமுன் திரிந்த வடிவங்களையும் ஒப்பிடல் வேண்டும். ஏனெனில், பழைய சொல்லின் உண்மை வடிவம் யாது என இப்போது அறுதியிட்டுக் கூறமுடியாதன்றோ? தொல்காப்பியனார் முன்னிலைப் பன்மையில் நும் என்பது பழைய வடிவமென்றும் நீர் என்பது அதன் திரிபு என்றும் கருதுகின்றார். ('நும்மின்

திரிபெயர்'). அதுபோலவே, 'யான்' என்பது பழைய வடிவமோ, வேற்றுமைப் பொருளில் திரிந்த 'என்' என்பது பழைய வடிவமோ என்பதும் ஐயுறத்தக் கதே. ஆதலின் யாவற்றையும் ஒப்பிடுதல் வேண்டும். அன்றியும், ஒருமைப் பெயரை ஆராயுங்கால், பன்மைப் பெயரையும் உடன்வைத்து ஆராய்தலும் வேண்டும். வினைமுற்று விகுதிகளையும் ஆராய்தல் இன்றியமையாதது.

தமிழ் :

| | |
|---|---|
| யான், நான் | உருபேலாப் பெயர் |
| என் | உருபேற்கத் திரிந்த பெயர் |
| ஏன் | பால் காட்டும் விகுதி (பேச்சில்) |
| ஏன், என், அன் | ஷை (இலக்கியத்தில்) |
| நாம், நாங்கள், யாம் | பன்மைப் பெயர் |
| நம், எங்கள், எம் | ஷை - திரிந்த வடிவம் |
| ஓம், எம், ஏம், அம், ஆம் | ஷை - விகுதிகள் |

மலையாளம் :

ஞான், யான் (பழைய மலையாளம்) பெயர்
என் திரிபு
பால் காட்டும் விகுதி இன்று இல்லை
செய்யுளில் 'என்' விகுதி ஒருமையில்
ஷை 'ஓம்' விகுதி பன்மையில்
பெயர்ச் சொற்களில் அன், ஏன், விகுதிகள்
பன்மை—நாம்; சில இடங்களில் 'நோம்'
(ஓம் என்பதோடு தொடர்பு)

கன்னடம் :

நானு—பெயர் (நா என்பதும் உண்டு)
பழைய இலக்கியத்தில் 'ஆன்'
நன்—திரிபு

எனு, ஏனு, ஏனெ, என் — விகுதிகள்
நாவு, ஆம், ஆவு — பன்மை
நம், எம் — பன்மைத் திரிபு

தெலுங்கு :

நேனு நே — பெயர்
பழைய இலக்கியத்தில் ஏனு
நா — திரிபு
நு, நி, வு, வி, ண்டு — விகுதிகள்
மேமு, மனமு — பன்மை
ஏ, மு — பழைய இலக்கியத்தில்
(விகுதிகளில் பெயர்ச் சொல்லின் சிறந்த முற்பகுதியை விட்டுச் சிறவாத பிற்பகுதியைக் கொள்ளல் காண்க).

ஆராய்ச்சி :

(1) உயிரெழுத்து அகரமாகவும் எகரமாகவும் ஊசலாடுதல் காணப்படுகின்றது. (யாவர் > எவர் போல).

(2) யகரம் நிலைபெறாமல் நீங்குகின்றது. இது திராவிட மொழிகளில் இயல்பே.

யான் > ஆன் (யார், ஆர், யாண்டு > ஆண்டு, யாறு > ஆறு) யான் பழைய வடிவாதல் வேண்டும்.

(3) நகரம் யகரம் இரண்டும் ஒன்று மற்றொன்றாய் மாறி வரலும் திராவிட மொழியியல்பே. இது தமிழிலும் மலையாளத்திலும் மிகுதியும் காணப்படுகின்றது.

(4) நகரம், ஞகரம், யகரம் மூன்றும் தொடர்புடையன ; மெய் நீங்குதலும் உண்டு.

நண்டு > ஞண்டு (மலையாளத்திலும் ஞண்டு; தெலுங்கு கன்னடத்தில் எண்ட்ரி)
நீந்து > தெலுங்கில் ஈது, கன்னடத்தில் ஈஜு
நீங்கு > தெலுங்கு கன்னடத்தில், ஈகு
நமன் > யமன் > எமன் (யகரம் எகரமாதலும் காண்க.)

(5) யகரமே பழையது; அது நகரம் அல்லது ஞகரமாக மாறுதலும், நில்லாது கெடுதலும் உண்டு என்பது விளங்குகின்றது. அதனை வலியுறுத்தும் சான்று:— 'என்' என்பதே தெலுங்கிலும் கன்னடத்திலும் பெயர்த்திரிபாக உள்ளது. அது யான் என்பதன் திரிபாகுமேயன்றி நான் என்பதன் திரிபாகாது. தொல்காப்பியனார் யான் என்னும் ஒன்றனையே கூறியுள்ளார். நன்னூலார் நான் யான் இரண்டினையும் கூறினர். ஆதலின் யகரமே பழையது.[1]

யாங்கு > எங்கு    யந்திரம் > எந்திரம்
யஜமான > எஜமானன்—வடசொல் தமிழாகுங்கால் யகரம் எகரமாதல்
தெலுங்கில் நேனு என எகரவுயிர் பெயரில் இருத்தல் காண்க.

(6) ஞகரமோ நகரமோ விகுதிகளில் இல்லை; ஆதலின் பழைய வடிவத்தில் இவை இருந்திருத்தல் இயலாது.

(7) நகரம் மிகப்புதியது என்று கூறவொண்ணாது. பெயர்த் திரிபுகளில் பண்டு தொட்டே இலக்

1. யான் யாம் நாமென வரூஉம் பெயரும் (தொல். சொல். ௧௬௨)
தன்மை யான் நான் யாம் நாம்...(நன்னூல், 285)

கியங்களில் 'நம்' என்பது வழங்கி வருகின்றது. நம்பி எம்பி என்ற சொற்களும் உள்ளன. ஒருமையில் 'நான்' என்பது கூறாத தொல்காப்பியனார் பன்மையில் 'நாம்' என்பது கூறியுள்ளார்.[2] ஒருமையிலும் தெலுங்கில் 'என்' என்பதற்கீடான பெயர்த்திரிபு நா, நன் என நகரம் பெற்றுள்ளது. ஆயினும் யகரத்திற்குப் பிந்தியது எனக் கூறலாம்.

(8) உயிர் ஆகாரமா? ஏகாரமா? (ஓ என்பதன்று; ஆகாரம் அவ்வாறு திரிதல் இயல்பு.) மலையாளத்தில் உள்ள இகரம், எகரத்தின் வேறன்று. என் என்பது எல்லா மொழிகளிலும் பெயர்த்திரிபாகவும் விகுதியாகவும் பெரும்பாலும் வருகின்றது. தெலுங்கு இலக்கியத்திலும் 'ஏனு' என்பது பெயராக வழங்கியுள்ளது. ஆதலின், ஏகாரமே பழையது எனத் துணியலாம். (அகரமும் எகரமும் ஒன்று மற்றொன்றாகத் திரிதல் இம்மொழிகளின் இயல்பாக உள்ளது. தமிழில் ஆண்டு, ஆறு என்பவை தெலுங்கில் ஏண்டு, ஏறு என்று உள்ளன. வடமொழியில் ஜபம் என்பது தமிழில் செபம் என்றாகின்றது. பலம் > பெலம், சா > செத்தான் என்பனவும் காண்க.)[3]

(9) ஈற்றுமெய் னகரம், அது வேர்ச்சொல்லைச் சார்ந்ததா? பன்மையில் அஃது இல்லை; அதன்

---

2. தொல். சொல். கூஉ

3. தன்மை ஒருமைப் பெயரில் உள்ள உயிர் ஆகாரமும் அன்று, ஏகாரமும் அன்று; ஆகார ஏகாரங்களுக்கு இடைப்பட்ட ஒலியாகும் என்று கே. வி. சுப்பையா எழுதியுள்ளார். (Dravidic Studies, No. II, p. 15).

இடத்தில் மகரம் வருகின்றது. ஆதலின் னகரம் ஒருமையையும் மகரம் பன்மையையும் குறிப்பன எனக் கொள்ளின், ஏ என்பதே தன்மையைக் குறிப்பது ஆகும்.

இந்த னகரம் அவன் என்பதில் உள்ளது போல் பால் குறிக்காது; எண் மட்டும் குறிப்பது.

(10) தன்மையில் நா, யா, ஆ, என்பனவும் முன்னிலையில் நீ, யீ, ஈ, என்பனவும் உள்ளன.

உயிரால்தான் வேறுபாடு உள்ளது. முதன் மெய் யாதாயினும் வேறுபாடில்லை. இவ்வாறு ஏகாரம் அல்லது ஆகாரம் தன்மையிலும்,[4] ஈகாரம் முன்னிலையிலும் உறுதியாய் நிற்றலின் அடிப்படையாகச் சிறந்ததொரு காரணம் இருத்தல் வேண்டும். இவற்றை அகர இகரச் சுட்டுக்களோடு தொடர்பு படுத்தின் சேய்மை அண்மை என்ற முறைக்கு மாறுபாடாக உள்ளது. அகர ஒலி முதன்மையானது, இயற்கையானது; அதனைத் தன்மையைக் குறிக்கவும், அதற்கடுத்த இகர ஒலியை அடுத்த முன்னிலை

4. இதன் கண் உள்ள உயிர் ஏகாரமே என்பது திரு. வே. வேங்கடராஜலு ரெட்டியார் அவர்கள் கருத்து. "தன்மை யொருமைப் பெயர், தெலுங்கு மொழியில் பழைய செய்யுட்களில் ஏன் என்று வழங்குதலானும் உருபேற்ற வழித் தமிழ் பழங்கன்னடம் மலையாளம் துளு துத கோத இம்மொழிகளில் என் என்று காண்டலானும், இம்மொழிகளில் வினை விகுதிகளாய் என் அல்லது ஏன் என்பதுவே இருத்தலானும், குயி மொழியில் இன் என்றும் தெலுங்கு மொழியில் நின் என்றும் காணப்படும் விகுதியும் என் என்பதன் திரிபாகும் எனல் அமையுமாகலானும், ஏன் என்பதுவே பெயராதல் அறியப்படும்" என்று அவர் எழுதியது காண்க. (திராவிட மொழியின் மூவிடப் பெயர், பக்கம் 19).

யைக் குறிக்கவும் முன்னோர் வழங்கினர் என்பர் கால்டுவெல்.[5] முதலெழுத்து முதலிடத்தையும் (தன்மையையும்), இரண்டாம் எழுத்து இரண்டாமிடமாகிய (*second person*) முன்னிலையையும் குறித்தது என்பர். சரித்திர ஆராய்ச்சிக்கு எட்டாத பழங்காலத்தில் மக்கள் பேச்சின் இயல்பு இன்னதாயிருக்கலாம் என்று இது சுட்டுகின்றது. சீன மொழி இதற்குச் சான்றாக உள்ளது. அம்மொழியில் தன்மையிடப் பெயரின் பழைய சொல் அகரவுயிரும், முன்னிலையிடப் பெயரின் பழைய சொல் இகரவுயிருமாம்.

கால்டுவெல் இவ்வாறு விளக்குவதெல்லாம் தன்மைப் பெயரின் உயிர் ஆகாரம் என்று கொண்டதன் விளைவே யாகும். அவ்வாறு கொண்டதால், சேய்மையைக் குறிக்கும் அகரம் தன்மையைக் குறிக்க வழங்குதல் இயல்பாகாமையும் புறக்கணிக்கப்பட்டது. அவ்வுயிர் ஆகாரமன்று, ஏகாரமென்று எனக் கொண்ட திரு. வேங்கடராஜலு ரெட்டியார் அவர்கள் அதன் தோற்றத்தைக் குறித்து விளக்குவது பொருந்துவதாக உள்ளது: “அகரம் சேய்மை யிடத்தையும், இகரம் அண்மையிடத்தையும் உகரம் இவ்விரண்டற்கும் இடைப்பட்ட நடுவிடத்தையும் குறிப்பனவாகலின், முதன் முதலில் அகரத்தைப் படர்க்கைப்பொருட்கும், இகரத்தை முன்னிலைப் பொருட்கும் உகரத்தை அவ்விடைப்பட்ட விடத்துப் பொருட்கும் வழங்கி, தன்மைப்பொருட்கு (நான்கா முயிராகிய) எகரத்தை

5. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 373

வழங்கியிருப்பர். நாளடைவில், சேய்மை யண்மைகட்கு இடைப்பட்ட இடத்தின் வழக்கு ஒழிந்து போதல் கூடும். சுட்டுப் பெயர்களுள் உகரச் சுட்டுப் பெயர் நெடுங்காலத்திற்கு முன்னரே திராவிட மொழிகள் எல்லாவற்றிலும் வழக்காறற்றுப் போயினமை ஈண்டு எண்ணத்தகும். இவற்றால், ஆகாரத்தினையுடைய தான் தாம் என்னும் படர்க்கைப் பெயர்களும், ஈகாரத்தினையுடைய நீன் நீம் என்னும் முன்னிலைப் பெயர்களும், ஏகாரத்தினையுடைய ஏன் ஏம் என்னும் தன்மைப் பெயர்களும் நிலைத்திருப்ப, ஊகாரத்தினையுடைய பெயர்கள் பண்டே வழக்காறற்றிருக்கும் என்று கொள்ளுதல் கூடும்."[6]

## முன்னிலை ஒருமை இடப்பெயர்

**தமிழ் :**

நீ (நீய், நீன்)
நின், நுன், உன் (னகர ஈறு இன்றியமையாதது)
ஆய், அய் (ஐ), இ
நீர், நீயிர், நீவிர், நீங்கள் (நீம்)[7]
நும், உம், நுங்கள், உங்கள்
உம், ஈர், இர், மின்

**மலையாளம் :**

நீ
நின்
நிங்ஙள், நீம்
நிங்ஙள், நிம்

---

6. திராவிட மொழியின் மூவிடப் பெயர், ப. 20.
7. சீவகசிந்தாமணி, விமலை. 44.

கன்னடம் :

நீன்
நின்
ஈயெ, எ, அய்
நீவு, நீம்
நிம் ; இரி, ஈரி, இர்

தெலுங்கு :

நீவு
நின், நீ
வு, வி
மீரு, மீரலு
மீ
ரு, ரி

ஆராய்ச்சி :

(1) நீன் என்று தமிழில் ஒரு காலத்தில் வழங்கியிருக்கலாம். வேற்றுமையில் னகர ஈறாகவே வருதல் காண்க.[8]

(2) யான் நான் என்பவற்றிற்கு நேரான முன்னிலைப் பெயராக நீன் என்பதனைக் கொள்ளவேண்டும்.

(3) விகுதிகள் யகரமும் இகரமும் ஈறாகக் கொண்டிருத்தலின் நீய் என்றும் பெயரிருந்திருக்கலாம்.

(4) நின், உன் என்பவற்றில் உள்ள இகரமோ உகரமோ உயிராதல் வேண்டும். விகுதிகளையும் பெயர்களையும் நோக்கின், இகரமே முதலில் இருந்திருக்கும் எனலாம். உகரம் இகரமாதல் (புலி>பிலி, புல்>பில்

---

8. நீ என்பதே நின் என்றாயிற்று என்பர் தொல்காப்பியனார்.
நீஎன் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயின் னகரம் ஒற்றா கும்மே (தொல். எழு. கஎகூ)

முன் > மின்) வழக்கில் உண்டு எனினும் இங்கு உகரத்தினும் முந்தியது இகரமே. நுன், நும், உன், உம் என்பவை பின்னர்த் தோன்றியவை.[9]

(5) நீன் என்பதன் முதலில் உள்ள நகரம் இன்றியமையாததோ? தன்மைப் பெயரான யான் என்பதற்கு நேரான யீன் இங்கில்லை. மூக்கொலியான ஈறு பற்றி முதலிலும் ஒரு நகரம் தோன்றியிருக்கலாம். ஈற்று னகரம் ஒருமை யுணர்த்தலின் இன்றியமையாதது. எனவே ஈன் என்பதே பழைய வடிவம்.

விகுதிகளில் னகர ஈறு இன்மையால் ஈ என்பதே அதனினும் பழைய வடிவம்.

சீன மொழியில் நி என்பதே முன்னிலை ஒருமை. பன்மை நிமென் என்பது.

**படர்க்கையிடப் பெயர் : தான், தாம்**

படர்க்கையிடப்பெயர்கள் இம்மொழியில் இல்லை. அவற்றிற்கு ஈடாகச் சுட்டுப் பெயர்களே[10] உள்

---

9. தொல்காப்பியனார் நீயிர் என்பது நும்மின் திரிபெயர் (தொல். சொல். கசஙு) எனக் கொண்டுள்ளார்.

அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
உக்கெட நின்ற மெய்வயின் ஈவர
இஇடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே.

(தொல். எழுத்து. ௩உ௬)

10. இந்துஸ்தானி அல்லது உருது மொழியிலும் இவ்வாறே உள்ளது. தன்மையில் மைன் என்றும் முன்னிலையில் து, தைன் என்றும் வழங்குவனபோல் படர்க்கையில் இடப்பெயர் இல்லை. அதற்கு ஈடாக வழங்குவது சுட்டுப்பெயரே ஆகும். (John T. Platts, A Grammar of the Hindustani or Urdu Language p. 113)

ளன. தான் தாம் என்பன அப்பொருளில் வழங்கு கின்றன; இவை எழுவாயாக வரும் வாக்கியங்களில் படர்க்கை வினைமுற்றுக்களே பயனிலையாக வரு கின்றன.

தமிழ்:

தான்
தன்
தாம், தாங்கள்
தம், தங்கள்

மலையாளம்:

தான்
தன்
தாம், தாங்ஙள்
தம், தங்ஙள்

கன்னடம்:

தான்
தன்
தாம், தாவு, தாங்கள்
தம், தங்கள்

தெலுங்கு:

தானு
தன்
தாமு, தாரு

இவற்றிலும் னகர ஈறு ஒருமையினையும் மகர ஈறு பன்மையினையும் குறிக்கின்றன.

இவை படர்க்கையிலே அன்றி மற்ற இடங்களி லும் தேற்றப் பொருளில் மற்றப் பெயர்களோடு

சேர்த்து வழங்கப்படும். ஒருமைக்குத் 'தான்' என்பதும் பன்மைக்குத் 'தாம்' என்பதும் சேரும். தத்தம் என்பது அவரவர் என்று நிரலே குறிக்கும்போது வருவது.

தாம், தாங்கள் என்பன முன்னிலையில் நீ, நீர், நீங்கள் என்பவற்றிற்கு ஈடாக உயர்சொற் கிளவியாக வழங்கும். அப்போது பிற பெயர்களோடு சேராது தனித்து நிற்கும். 'தாங்கள் சொன்னீர்கள்' என வரும்.

முறைப்பெயர்கள் பலவற்றில் தம் அல்லது தன் என்பது சேர்க்கப்பட்டுள்ள உண்மையைத் தமிழ்ச் சொற்கள் பல காட்டும். அவ்வாறே தன்மை முன்னிலைப்பெயர்களும் சேர்ந்துள்ளன.

*எம்பி, நம்பி, நும்பி, உம்பி, தம்பி, எந்தை, உந்தை, தந்தை எம்பிரான், தம்பிரான், என்னை, தன்னை, தமையன்*

பண்புப் பெயராக வழங்கும் தன்மை என்பதிலும் தன் என்பது இப்பெயரே எனலாம்.

### இடப்பெயர்களின் பன்மை

பன்மைச் சொற்களைப் பொதுவாக நோக்குங்கால், மகரஈறு பெற்றுப் பன்மை உணர்த்தல் விளங்கும். வேறு வகையாக உள்ள நீர் முதலியன சிறுபான்மையவே.

பேச்சுத் தமிழில் மகர ஈற்றின் பின்னர் கள் விகுதி சேர்ந்து வழங்கும் பெயர்கள் உள்ளன. தொல்காப்பியனார் கள் விகுதி அஃறிணைக்கே என வரை

யறுத்துக் கூறியிருப்பினும், இக்காலத்தில் அவ்விகுதி உயர்திணையிலும் வழங்குகின்றது.[11]

இவ்வாறு கள் விகுதியில்லாத பன்மையும், கள் விகுதி சேர்ந்த பன்மையும் ஆக இருவகைப் பன்மைச் சொற்கள் மொழியில் இருக்கவே, மக்கள் முன்னதை உயர்சொற் கிளவியான ஒருமையாக வழங்கத் தலைப் பட்டனர். நாளடைவில் பின்னதையும் அவ்வாறு வழங்கலாயினர்.[12] தெலுங்கிலும் இவ்வாறு உள்ளது. மீரு - மீரலு (நீர் - நீங்கள்); வாரு - வாரலு (அவர் - அவர்கள்) என இருவகைப் பன்மை காண்க. மலையாளத்திலும் இவ்வாறு உள்ளது.

கன்னடத்தில் பன்மையுணர்த்தும் மகரத்திற்குப் பதிலாக 'வு' வருகின்றது. மகரம் வகரமாதல் ஒலி நூலார்க்கு உடன்பாடே.

---

11. தொல். சொல். கசுக

12. ஆங்கில மொழியில் முன்னிலையைக் குறிக்க ஒரு சொல்லே உள்ளது. அது **you** என்பது. அஃது ஒருமைக்கும் பன்மைக்கும் பொது. முதலில் அது பன்மையை உணர்த்த **thou** என்பது ஒருமையை உணர்த்திவந்தது. மக்களினத்தில் இருந்துவந்த உயர்வு தாழ்வு வேறுபாடே மரியாதைப் பன்மை தோன்றக் காரணமாக இருந்தது. ரோமன் மன்னர்கள் மற்ற மக்களைவிடத் தங்களை உயர்வாகக் கருதினர்; அவ்வாறே சுட்டப் படவேண்டும் என் விரும்பினர்; ஒரு மனிதனைவிட ஒரு மன்னன் உயர்ந்தவன் என்று 'நீர்' 'நீங்கள்' என்னும் பொருளில் **'you'** என்று அவனை மக்கள் வழங்கினர். குவேக்கர்கள் சமத்துவ நாட்டம் உடையவர்களாதலின், அந்த வழக்கத்தைக் கடிந்து 'நீ' என்றே வழங்கினர். அவர்கள் நோக்கம் எதிர்பாராத வேறு வகையில் நிறைவேறிற்று எனலாம். மன்னனைக் குறிக்க 'நீர்' என்று வழங்கிய சொல்லே தாழ்ந்த மனிதனைக் குறித்தும் வழங்க லாயிற்று. இழிவாகக் கருதப்பட்ட 'நீ' **thou** என்ற ஒருமைச் சொல் அழிந்தது. **(Jespersen, Growth and Structure of the English Language, p. 236)**

முன்னிலைப் பன்மையில் மட்டும் மகர ஈறு சிறுபான்மையதே; ரகர ஈறே பெரும்பான்மையதாக உள்ளது. விகுதிகளிலும் அவ்வாறே உள்ளது. (தமிழில் நீம் என்பது வழங்காமல், நீர் என்பதே வழங்குகின்றது).

தெலுங்கில் பன்மை உணர்த்தும் மகர ஈறு (மீரு என்பதில்) மொழி முதலிற் செல்ல, ஈற்றில் ரகரம் நிற்கின்றது. ஆயினும் நகரமே மொழிமுதல் எழுத்து என்பதில் ஐயமில்லை. ஒருமையில் 'நீ' என நிற்றல் காண்க. எனவே, மீரு, மேமு என வருவன தெலுங்கிற்கு இயல்பாகவுள்ள ஒலிநயம்பற்றிய மாறுதல்களேயாம்.

எனவே, திராவிட முதல் மொழியில் மகரமே பன்மையுணர்த்தும் ஈறாக இருந்து வந்ததெனத் துணியலாம்.

ரகரத்தின் தோற்றத்தைப்பற்றி ஆராயும் கால்டுவெல், (இரண்டு என்னும் பொருளில்) இருமை உணர்த்தும் இர் என்பது சேர்ந்து நாளடைவில் இகரவுயிர் கெட்டு, ரகர மெய் மட்டும் நின்றிருக்கும் என்கிறார்.[13]

நீம் + இர் > நீமிர் > நீவிர் > நீயிர் > நீர்

அவ்வாறே அவர் மகர ஈற்றின் தோற்றத்தை ஆராய்ந்து, சேர்த்தெண்ணும் உம்மைப் பொருளை உணர்த்த முதலில் 'உம்' சேர்ந்து உயிர்கெட்டு மெய் நின்றிருக்கும் என்கிறார்.[14]

---

13. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 407
14. ibid.

## உளப்பாட்டுத் தன்மைப் பன்மை

தன்மைப் பன்மையில் இருவகைச் சொற்கள் உள்ளன. இது திராவிட மொழிகளின் சிறப்பியல்பு. ஒருவகைச் சொல், கேட்போரை நீக்கித் தன்னைச் சார்ந்தோரை மட்டும் உணர்த்துவது; மற்றொரு வகைச் சொல், கேட்போரை உளப்படுத்திக் கூறுவது; இரண்டாம் வகைப் பன்மைக்கு உளப்பாட்டுத் தன்மைப் பன்மை என்பது பெயர்.[15]

ஐரோப்பிய மொழிகளில் இவ்வகை இல்லை; சித்திய மொழிகளில் உண்டு.

| உளப்படுத்தாதது (Exclusive) | உளப்படுத்துவது (Inclusive) |
|---|---|
| யாம், நாங்கள் | நாம் - தமிழ்[16] |
| மேமு | மனமு - தெலுங்கு |

15. பாலினேஷிய மொழிகளிலும் தன்மைப் பன்மை உணர்த்தும் சொற்கள் இரண்டு உள்ளன. அவற்றுள் ஒன்று முன்னிலையாரை உளப்படுத்தும்; மற்றொன்று உளப்படுத்தாது. (Whitney, Language and the Study of the Language p. 338)

16. தன்மைப் பன்மை வினைமுற்று விகுதிகளிலும் இத்தகைய வேறுபாடு கண்டார் பவணந்தி முனிவர்.

அம்ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம்ஏம் ஓம்இவை படர்க்கை யாரையும்
உம்ஊர் கடதற இருபா லாரையும்
தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை. (நன்னூல், 333)

இவ்வாறு பவணந்தியார் வரையறுத்தபோதிலும், இலக்கியத்தில் இவை மயங்கியே வருகின்றன. பேச்சு வழக்கில் இவ்வேறுபாட்டிற்கு இடமே இல்லை. பேச்சில், ஓம் என்னும் விகுதியே தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள் பலவற்றிற்கும் பொதுவாக வழங்குகின்றது.

**இணைப்பு இடப்பெயர்** (*Relative pronoun*)

ஆங்கிலம் முதலிய பல ஐரோப்பிய மொழிகளில் உள்ள (*who, which, where* முதலான) இணைப்பு இடப்பெயர்கள் தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் இல்லை. ஆயின், அவற்றிற்கு ஈடாகத் திராவிட மொழிகள் வினையாலணையும் பெயர்களை யாவது பெயரெச்சங்களையாவது வழங்குகின்றன. இஃது இம்மொழிகளின் சிறப்பியல்பாகும்.

I saw the man **who** came
வந்த மனிதனைப் பார்த்தேன் (பெயரெச்சம்)
I saw him **who** came
வந்தவனைப் பார்த்தேன் (வினையாலணையும் பெயர்)

# கஅ. வினைச்சொல்

மொழிக்கு இன்றியமையாத உறுப்பு வினைச் சொல்லாகும். வினைச்சொல்லே ஒரு வாக்கியத்தை அமைக்கும் ஆற்றல் வாய்ந்ததாக உள்ளது.[1] வா, போ என்னும் ஏவலொருமை வினைகள் முற்றுக்களாய் நின்று தனித்தனியே வாக்கியங்களாக அமைய வல்லன வாகவும் உள்ளன. அன்றியும், வாக்கியத்தில் எழு வாய், செயப்படுபொருள் முதலிய பலவும் வாக்கியத் தின் வினைச்சொல்லைச் சார்ந்து அதற்குத் துணையாக வருவனவாகவே உள்ளன.

> செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
> செய்பொருள் ஆறும் தருவது வினையே[2]

என்னும் வினையிலக்கணம் வினைச்சொல்லின் சிறப் பினை உணர்த்துவதாக உள்ளது. திராவிட மொழி களிலே அல்லாமல், மற்ற மொழிகளிலும் வினைச் சொல்லே பெரிதும் ஆராயப்பட்டுப் போற்றப்படுகின் றது.[3] தமிழ் முதலிய மொழிகளை ஆராய்வோர் வினைச்

---

1. Jespersen, A Modern English Grammar, p. 67
2. நன்னூல், 320
3. The verb is the grammarian's idol. It is to him the light and life of the sentence. It ushers in the predicate, which is the only intresting and informative part of the sentence. Indeed it is the predicate. All the rest is mere appendage. If the rest includes an object, it is an object of the verb; if the rest includes other things besides the object, they are complements of the predicate (that is of the verb) or extensions of the predicate. (P. B. Ballard, Thought and Language, p. 86)

சொற்களின் பல்வேறு அமைப்புக்களையும் பொருள் வேறுபாடுகளையும் கற்கும் அளவிற்குத் தேர்ச்சி பெறுவர். ஆதலின், வினைச்சொற்கள் எவ்வெவ்வாறு அமைந்து திணை பால் காலம் முதலியவற்றை உணர்த்துகின்றன என்பதை நன்கு தெளிதல்வேண்டும்.

**வினைச்சொல் அமைப்பு.**

(1) திராவிட மொழிகளில் அடிச்சொற்கள் பல பெயராகவும் வினையாகவும் வழங்குகின்றன (ஆடி, பூ). வேற்றுமை யுருபு ஏற்பதால் பெயரெனவும், கால இடைநிலை ஏற்பதால் வினையெனவும் பகுத்தறியக் கிடக்கின்றன.

(2) அடிச்சொல்லோடு கு, து, வு முதலான உறுப்புக்கள் சேர்வதால் வினைச்சொற்கள் அமைகின்றன (பெரு-பெருகு). அவ்வாறு அமைந்த வினைச்சொற்கள் பகுதியாய் நிற்க, அவற்றோடு கால இடை நிலை முதலியன சேர்கின்றன.

(3) திராவிட வினைச்சொற்கள் ஒட்டு நிலை (*agglutinative*) ஆக அமைந்தவை. காலம், இடம் முதலியவற்றை உணர்த்தும் உறுப்புக்கள் அடிச்சொல்லோடு ஒழுங்கான முறையில் புணர்க்கப் பெற்றுள்ளன. அவ்வாறு அவை புணரும்போது, ஏற்படும் திரிபோ மிகச் சிறிதே. பெரும்பாலும் திரிபின்றியே அமைதல் உண்டு.

(4) முன்னிலை ஒருமை ஏவல் வினையோடு காலம் இடம் உணர்த்தும் உறுப்புக்கள் சேர்தல் இல்லை. அடிச்சொல்லே பெரும்பாலும் ஏவலொருமையாக வழங்குகின்றது (நட, வா....). ஆதலின், இலக்கண நூலார் ஏவலொருமை வடிவே வினைப்பகுதியின் வடிவெனக் கூறுவர்.

(5) பெயர்ச்சொற்கள் வேற்றுமை ஏற்கும் முறை (*declension*) ஒன்றுயிருத்தல் போலவே, வினைச்சொற்கள் திணைபால் முதலியன உணர்த்தும் முறையும் (*conjugation*) ஒன்றுகவே உள்ளது. சிற்சில வேறுபாடுகள் சில சொற்களில் காணப்படினும் முறை வேறுபட்டதன்று. ஐரோப்பிய மொழியிலிருப்பதுபோலப் பலவகை முறை இங்கு இல்லை.

(6) திராவிட வினைச்சொற்களின் அமைப்பின் எளிமை போற்றத்தக்கதாக உள்ளது. முற்று, எச்சம் என இருவகைப் பகுப்பும், இறப்பு நிகழ்வு எதிர்வு என மூவகைக் காலமும், ஏனைக்காலங்களை உணர்த்தத் துணைவினைகளைப் (*auxiliary verbs*) பயன் படுத்தும் முறையும், வியங்கோள் முதலியவற்றின் ஒழுங்கும் இம் மொழிகளுக்கே சிறப்பாக உரியவை. இவற்றிலெல்லாம் இம்மொழிகள் சித்திய மொழிகளைப் போன்ற அமைப்பினவாய் உள்ளன.

மலையாள மொழி தவிர ஏனைய மொழிகளில் வினைமுற்றுக்கள் காலத்தோடு திணைபாலிடமும் உணர்த்துகின்றன. திணைபாலிடம் உணர்த்தும் விகுதிகள் பாலறிகிளவிகள் எனப்படும். மலையாளத்தில் மட்டும்

அவை இல்லை; பழைய மலையாளச் செய்யுள்களில் காணப்படுகின்றன. வரவர அவை வீழ்ந்தன போலும்!

கோந்த் முதலான மொழிகளில் பாலறிகிளவிகள் சேர்வதில் ஒழுங்கின்மையும் சிக்கலும் காணப்பட, தமிழில் ஒரு வகை ஒழுங்கும் தெளிவும் காணப்படுதலால், இலக்கியப் பண்பாட்டால் வினைச்சொற்கள் திருந்திய அமைப்புப்பெற்றன என்றும், இவ்வமைப்பு மிக்க தொன்மை வாய்ந்தது என்றும் கருதலாம். மிகப் பழங் காலத்திலேயே தமிழ்மக்கள் வினைச் சொற்களின் வடிவத்தைத் தெளிவாக்கி அமைத்து எழுதி நிலைபெறுத்தி விட்டதால், திரிபுகள் பெருக இடமில்லாமற் போயிற்று. ஆனால் கோந்த் முதலான திருந்தா மொழிகளில் இத்தகைய வாய்ப்பு இன்மையால், சொற்கள் திரிந்து திரிந்து உருவிழந்து பல்வகையாயின; வடமொழி முதலான மொழிகளிற் போல் வினைத்திரிபு முறை (*conjugation*) பலவோ என ஐயுறக் கிடக்கின்றன. இன்று அவ்வாறு திரிந்த சொற்களின் பகுதி விகுதி முதலியன பிரித்துணரவும் இயலவில்லை. தமிழ் முதலான திருந்திய மொழிகளில் ஒட்டு நிலை (*agglutination*) தெளிவைத் தருகின்றது,

(7) ஐரோப்பிய மொழிகளில் வழங்குமாறு போல், திராவிட மொழிகளிலும் பெயர்ச்சொல்லோடு வினைச் சொல்லைச் சேர்த்து ஒரு சொல் போல வழங்குதல் உண்டு (பண்படு-பண்பட்டது, கண்ணுறு-கண்ணுற்றான்). ஆனால் இடைச்சொல்லோடு வினைச்சொல்லைச் சேர்த்து ஒரு சொல் போல வழங்குதல் இல்லை. (*overtake, overrule*) என்பன ஆங்கிலத்தில் இருத்

தல் காண்க. மேற்கொள், கீழ்ப்படி என்பன தமிழில் வழங்குவனவற்றுள்ளும், மேல் கீழ் என்பன பெயராகக் கொள்ளப்படும்).

(8) முற்சேர்க்கையால (*prepositions*) வினைச சொற்களின் பொருளைச் சிறப்பித்தல் திராவிட மொழிகளில் இல்லை. அம்முறை ஐரோப்பிய மொழிகளில் உள்ளது. ஆனால் துணைவினைகளாலும் (*auxiliary verbs*) எச்சமாக அடுக்கும் வினைகளாலும் (*participles and infinitives*) பொருளைச் சிறப்பித்தல் திராவிட வினைகளின் இயல்பு.

**திணைபால் காலம் உணர்த்தும் முறை:**

(1) பால்காட்டும் விகுதிகள் வினைமுற்றுக்களின் பின் சேர்க்கப்படுவன. மலையாள வினைமுற்றுக்களில் இவ்விகுதிகள் இல்லை; ஆனால் காலங்காட்டும் இடைநிலைகள்மட்டும் சேர்க்கப்படுகின்றன. பழைய மலையாளச்செய்யுளில் பால்காட்டும் விகுதிகளும் உள்ளன. அடித்தேன், அடித்தாய், அடித்தான் என்ற வினைமுற்றுக்கள் இன்று மலையாளத்தில் இல்லை.

என்ற வழக்கே அவற்றிற்கு நேராக இன்று காணப்படுவது. அடிச்சு என்பதில் பால்காட்டும் விகுதிகள் இல்லை. இறந்தகால இடைநிலை மட்டும் உள்ளது. தமிழில் அடித்து என்னும் வினையெச்சத்திற்கு நேரான சொல்லாகும் அது.

(2) ஐரோப்பிய மொழிகளில் பால் காட்டும் விகுதிகள் நேரே வினைப்பகுதியோடு சேர்கின்றன. ஆனால் திராவிட மொழிகளில் அவை கால இடைநிலைக்குப் பின் சேர்கின்றன. ஐரோப்பிய மொழிகளில் விகுதியே பாலையும் காலத்தையும் ஒருங்கே உணர்த்தும். எடுத்துக் காட்டாக வடமொழியிலக்கணமும், அதை ஒட்டித் தமிழிற்கு இலக்கணம் எழுதிய வீரசோழியமும் காணலாம்.

செய்தான் என்பதைச் செய்+த்+ஆன் எனப் பிரித்தல் முறை. வீரசோழியம் செய்+தான் எனப் பிரிக்கும்.[4]

(3) தமிழிலும் கன்னடத்திலும் சில பழைய வினைமுற்றுக்களின் உருவங்கள் காணப்படுகின்றன. அவற்றில் பால்காட்டும் விகுதிகள் இல்லை. செய்து, செய்கு, செய்தும், செய்கும் என்பன தன்மையில் வழங்கினும் அதற்குரிய விகுதி இல்லை.[5] கன்னடத்தில் கும் விகுதி தன்மையிலே அன்றி ஏனையிடங்களிலும் பால்களிலும் வழங்கும் (அவர் மாடுகும்—அவர் செய்வார்). திராவிட மொழிகளின் வினைமுற்றுக்களில் மிகப் பழங் காலத்தில் பால்காட்டும் விகுதிகள் இல்லை என்று எண்ண இஃது இடந்தருகின்றது.

(4) திராவிட வினைமுற்றுக்களுள் படர்க்கை வினைமுற்றுக்களே திணைபால் உணர்த்துவன. தன்மை

முன்னிலை முற்றுக்கள் ஒருமை பன்மை மட்டுமே உணர்த்தும்.[6] படர்க்கை வினைமுற்று எல்லாவற்றையும் ஒருங்கே தெளிவாக உணர்த்தும் சிறப்புடையது. ஆதலின், வருகின்றான் என்பதில் வருதல் தொழிலும், நிகழ்காலமும், படர்க்கையிடமும், உயர்திணையும், ஆண்பாலும் (ஒருமையும்) தெளிவாகப் பெறப் பட்டன,

**காலங்காட்டும் முறை :**

வினைமுற்றுக்களே அல்லாமல் எச்சங்களும் காலம் உணர்த்துவன. வினையெச்சங்களே பலவகைப் பாகுபாடும் வேறுபாடும் உடையன. பெயரெச்சங் கள் சில; அவையும் வினையெச்சங்களின் அடியாகப் பிறந்தன. ஆதலின், வினைச்சொற்கள் காலங்காட் டும் முறையை உணர்தற்கு வினையெச்ச வகைகளை உணர்தல் இன்றியமையாதது.

> செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
> செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
> அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி[7]

என்பது தொல்காப்பியனார் பாகுபாடு.

**நிகழ் காலம் :**

நிகழ்கால வினையெச்சச் சொல்லோடு பாலு ணர்த்தும் விகுதி சேர்ந்தால் நிகழ்கால வினைமுற்று

6. படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படும் திணைபால் அனைத்தும்; ஏனை
இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே. (நன்னூல், 265)
7. தொல். சொல். உஉஅ

ஆகும். தெலுங்கிலும் கன்னடத்திலுமே நிகழ்கால வினையெச்சங்கள் உண்டு. அம்மொழிகளில் இம்முறைப்படி வினைமுற்றுக்கள் அமையும். (தமிழில் உள்ள செய என்பது நிகழ்காலத்தை உணர்த்தும் இடைநிலையோடு கூடிய வினையெச்சம் அன்று; மலையாளத்திலும் அப்படியே. இம்மொழிகளில் நிகழ்கால வினையெச்சம் இருந்து இறந்திருக்கவேண்டும் என்பது அறிஞர் கால்டுவெல் கருத்து.[8] (செய்யா நின்று முதலியவற்றைத் தமிழில் நிகழ்கால வினையெச்சம் எனக் கொள்வது பொருந்தாது; ஏனெனில், அவை இருசொல் தொடர்ந்த வினைகளே; தனி வினையெச்சம் ஆகா; அன்றியும் அவை அருகிய வழக்கின.)

தமிழிலும் மலையாளத்திலும் நிகழ்கால வினையெச்சம் இல்லை எனினும், நிகழ்கால இடைநிலை உண்டு. அவற்றால் நிகழ்கால வினைமுற்றுக்கள் அமைகின்றன. காலம் உணர்த்தும் இடைநிலைகளைக் 'காலக்கிளவி' என்றார் தொல்காப்பியனார்.[9]

**நிகழ்கால இடைநிலை:**

கன்னடம்: உத்

மாடுத்த (செய்தல்)

உது (utu)—உகரம் ஒலிநயம் குறிப்பது. (இது உது என்னும் சுட்டுப்போலும்; நிகழ்காலம் குறித்த இடை நிலையாக அமைந்தது).

---

8. Caldwell, A Comparative Grammar, p. 489
9. தொல். சொல். ௨0௭

கன்னட இலக்கியத்தில் பழங்கன்னடத்தில் 'உது' இல்லை. 'தப்' என்பது உள்ளது.

பாளுத்தேனு (baluttenu) (வாழ்கிறேன்) - புதுக்கன்னடம்
பாள்தபென் - baldapen - பழங் கன்னடம்

தப = த் + அப (ஆப - ஆக)
த் — இறந்தகாலம்
ஆப, ப — எதிர்காலம்

இரண்டு காலமும் கூடி நிகழ்காலம் அமைதலும் இயல்பே.

தெலுங்கு :

சு (chu - ஒலித்தல் : tsu)
து - பேச்சுத் தெலுங்கில் உண்டு.
சுன்னு, துன்னு - < சு + உன்னு, து + உன்னு
உன்னு < உண்டு - துணைவினை

தமிழ் :

கின்று (கு + இன்று)
கின்று < கிறு
ஆநின்று : ஆ < ஆகு - நின்று < நில் + த் + உ

கின்று, கிறு இவற்றின் ககரம் இரட்டிக்கும் இடத்தில் வல்லொலி ; ஏனையிடத்து மெல்லொலி.

மலையாளம் :

உன்னு, க்குன்னு - இவை 'இன்று' என்பதன் திரிபே.
இன்னு - பழைய மலையாளத்தில்; அதுவும் அத்திரிபே.
(மூன்று > மூன்னு, ஒன்று > ஒன்னு போல)
கின்று > இன்னு: ககர ஒலி கெடுதல்
(போகிறேன் > போறேன் போல)
கு + இன்று > கின்று > கின்று > இன்னு > உன்னு

கு - எதிர்காலம்; இன்று - நிகழ்வு குறிக்கும்; கு எதிர்காலத்தில் வழங்குதலை இலக்கியம் தெரிவிக்கின்றது செய்கு.

கின்று என்னும் நிகழ்கால இடைநிலை பழந்தமிழில் (எட்டுத் தொகை, பத்துப் பாட்டில்) இல்லை. பேச்சுத் தமிழிலும் தெளிவாக முழுமையாக ஒலிக்கப் படுவதில்லை. வேகுகிறது என்பதனை வேகுது என்பது பேச்சுத் தமிழ்.

**இறந்த காலம்:**

செய்து என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சத்தோடு பாலுணர்த்தும் விகுதிகள் சேர்வதால் இறந்தகால வினைமுற்றுக்கள் அமைகின்றன.

செய்து என்னும் வாய்பாட்டு எச்சமோ பின் வருமாறு அமையும் :—

வினைப் பகுதியோடு த் (ட் அல்லது ற்) அல்லது இன் என்னும் இடைநிலை சேர்ந்து அமைதல்.

தமிழிலக்கண நூலார் இவற்றைப் பகுதி இரட்டித்தன என்பர்.[10] கால்டுவெலும் அவரை ஒட்டியே கூறுவர்.[11] ஆனால் கன்னட இலக்கண

10. தொட்டான், விட்டான், உற்றான், பெற்றான், மிக்கான், புக்கான் என்பவற்றுள், இடைநிலையின்றி முதனிலை விகாரமாய் இறந்தகாலம் காட்டின. (சங்கரநமச்சிவாயர், நன்னூல், 337)

11. Caldwell, A Comparative Grammar, p. 497

நூலாரும் மலையாள இலக்கண நூலாரும் அங்ஙனம் கூறுவதில்லை. இவையும் இடைநிலையோடு புணர்ந்தன என்பர். அவர் கொள்கைப்படி

புக் + த் (+ உ) > புக்கு
விட் + த் (+ உ) > விட்டு
அற் + த் (+ உ) > அற்று

என்றாகும். இக்கொள்கையே பொருந்துவதாகும்.

ஒரே வினைப்பகுதி இருவகையாகவும் அமைதல் உண்டு.

விடு - விடுத்தேன், விட்டேன்
புகு - புகுந்தேன், புக்கேன்
நகு - நகைத்தான், நக்கனன்
கொடு - கொடுத்தான், கொட்டனு (கன்னடம்)

**இறந்தகால இடைநிலை :**

**கன்னடம் :**

த்
இளிது (இழிந்து, இறங்கி)

(**d, t, tt** என மென்மையும் வன்மையும் வன்மையிரட்டித்தலுமாய் ஒலித்தல் திராவிட மொழியியல்பே).

இ
மாடி (மாடு பகுதி ; மாடி = செய்து)

**தெலுங்கு :**

இ

ஏனைமொழிகளில் தகர இடைநிலை பெறும் பகுதிகளும் தெலுங்கில் இகரமே பெறும்.

கொள் + த் + உ > கொண்டு — தமிழ்
கொள் + இ > கொனி — தெலுங்கு
காண் + த் + உ > கண்டு — தமிழ்
காண் + இ > கனி — தெலுங்கு

ஆனால் உயர்வழக்கில் உள்ள சில சொற்களில் தகர மெய்யும் இகரத்துடன் சேர்ந்து ஒலிக்கின்றது.

ஆடிதினி
சேஸிதினி

செய்தால் என்னும் தமிழ்ச் சொல்லுக்கு நேரான தெலுங்குச் சொல் (சேஸ்தே) தகர இடைநிலையே பெற்றுள்ளது.

மலையாளம் :

மலையாளத்து வினைமுற்றுக்களில் உள்ள இடைநிலை தமிழில் உள்ளனவே. சில மாறுதல்கள் காணப்படினும் அவை ஒலியமைப்பிற்கேற்பத் திரிந்தவையே.

நடந்து - தமிழ் நடக்நு - மலையாளம்

தமிழ் :

த் அல்லது இ

ட், ற் என்பவை இலக்கண நூல்களில் வேறு கூறப்படினும் அவையிரண்டும் தகரத்தின் திரிபு என்பதில் சிறிதும் ஐயமின்று.[12] இன் இடைநிலை என்பர் இலக்கணநூலார். ஏனைமொழிகளில் இகரமே

12. தடறஒற் றின்னே ஐம்பால் மூவிடத்து
இறந்த காலம் தருந்தொழில் இடைநிலை. (நன்னூல், 17.)
வீரசோழியத்தில் டற கூறப்படவில்லை.
தாதுவின் பின்பு தனய இறப்பின் (தாதுப்படலம், 24.)

இடைநிலையாகக் கூறப்படுகின்றது. அன்றியும், தமிழிலும் ஆடி, பாடி, கூறி, பேசி முதலான வினையெச்சங்களில் 'இன்' இல்லை. இகரமே இடைநிலையாக உள்ளது. ஆதலின் னகரமெய் ஒலிநயம் பற்றிய சாரியை என்னும் கால்டுவெல் கொள்கை பொருந்துவதே.[13]

## துளு

துளு முதலான திராவிட மொழிகளை ஆராய்ந்தாலும் த் அல்லது இ என்னும் இடை நிலையே இறந்த காலம் உணர்த்த வருதல் காணப்படுகின்றது.

## இகரம்

இதன் தோற்றம் அறிதற்கரியது. கால்டுவெல் கருதுவதாவது: தகர இடைநிலை வினைப்பகுதியோடு சேரும்போது இடையே இகரவுயிர் வந்து சேர்ந்திருக்கும். நாளடைவில் ஒலித்தற்கு எளிதாகிய இகரவுயிர் நிற்க, அரிய ஒலியாகிய தகரமெய் மறைந்திருக்கும். அவ்வாறு தகரமெய் கெட்ட சொற்களில் இகரவுயிரே இடைநிலை எனக் கொள்ளப்பட்டிருக்கலாம் என்பர்.[14] அவர் அதற்கு எடுத்துக்காட்டாக, தெலுங்கில் 'வு' என்பது முன்னிலை ஒருமை விகுதியாக வழங்குவதைக் குறிப்பர். 'வு' என்பது 'நீ என்னும் முன்னிலைப் பெயரைச் சார்ந்து வந்ததாகும் (நீவு). நாளடைவில் முன்னிலை ஒருமை விகுதியில் பெயர் கெட அதனைச் சார்ந்த ஒலிமட்டுமே நின்று விகுதி

---

13. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 503

14. ibid. 508

யாகக் கொள்ளப்பட்டது. அதுபோல இகரம் தோன்றி வளர்ந்திருக்கலாம் என்பர்.

ஆயினும் மற்றோர் எளிய வழி உளது. அஃதாவது பிறவினைப் பொருளில் வழங்கும் இகரம் போலவே, இதுவும் கொடுத்தற் பொருளில் (ஈ=கொடு) வழங்கியிருக்கலாம்.[15] பிறவினையில் ஓரிடத்திருந்து பிறவிடத்திற்கு வினை மாறுகின்றது. இங்கே இகரம் குறிக்கும் மாறுதல் இடம் பற்றியது அன்று; அஃது இங்குக் காலம் பற்றியது. அஃதாவது கொடுத்தாய்விட்ட—கழிந்த—இறந்த காலத்தை உணர்த்துவது எனலாம்.

**தகரம்:**

கால்டுவெல் கருத்து:—அது என்னும் சுட்டுச் சேர்ந்து இக்காலத்தை உணர்த்தியிருக்கலாம். உது (இது) என்னும் அண்மைப் பொருள் தரும் சுட்டுச் சொல் கன்னடத்தில் நிகழ்காலம் குறித்தலும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. 'அது' என்னும் சேய்மைச் சுட்டு இறந்த காலம் உணர்த்தல் பொருத்தமேயன்றோ? உது நிகழ்காலமும் அது இறந்தகாலமும் குறிக்க, நாளடைவில் அது என்பதன் அகரம் கெட்டிருக்கலாம்.[16]

கால்டுவெல் இவ்வாறு கருதிய போதினும் வேறு நல்ல காரணமும் காணக்கிடக்கின்றது. தா என்பதும் ஈதல் பொருள் உணர்த்துவதே. ஈதலையுணர்த்தும்

15. K. Ramakrishnayya, Studies in Dravidian Phiology, p. 66

16. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 511

இகரவுயிர் இறந்தகாலம் உணர்த்திற்போல, தா என்பதன் மெய்யும் அக்காலம் உணர்த்தியது எனக் கொள்ளலாம்.

எதிர்கால வினையெச்சத்திலிருந்து வினைமுற்று அமைவதில்லை. வினைப் பகுதியோடு எதிர்கால இடைநிலை சேர்ந்து வினைமுற்றுக்கள் அமைகின்றன. பொதுவாகத் திராவிட மொழிகளில் எதிர்கால வினையெச்சம் என்பது இல்லையென்றே கூறிவிடலாம். இலக்கியத் தமிழிலும் மலையாளத்திலுமே உண்டு.

திராவிட மொழிகளில் எதிர்காலம் ஒன்றுதான் தெளிவற்றதாகக் காணப்படுகின்றது. நிகழ்காலத்தை எதிர்காலமாக வழங்குதல் பேச்சு வழக்கில் காணப்படுகின்றது (நான் மாலையில் வருவேன் என்னுமல் நான் மாலையில் வருகிறேன் எனல்). முக்காலத்திற்கும் பொதுவாக நிகழும் செயல்களையும் இருவகையாகவும் கூறுவர். ஆதலால், இடம் நோக்கியே எதிர்காலம் துணியப்படுவதாக உள்ளது.

செய்கு, செய்கும் என்பன எதிர்காலத்தில் வழங்கியதை ஆராய்ந்து, கு என்பது தொழிற் பெயர் விகுதியாக வருதலை உணர்ந்து, செய்கு முதலியவை தொழிற்பெயர் என்பர் கால்டுவெல்.[17] தொழிற் பெயராக இருந்தவை காலமுணர்த்தாத சொல்லாக இருந்து பின்னர் முக்காலத்திற்கும் பொதுவினையாக

மாறி, நாளடைவில் எதிர்கால வினையாக அமைந்திருக்கும் என்பது அவர் கொள்கை.

கு என்பது போலவே, வு, பு என்பனவும் தொழிற் பெயர் விகுதிகள்; ஆதலின் அவையும் அவ்வாறே எதிர்காலம் உணர்த்தத் தொடங்கின என்பர் (பாடுவேன், படிப்பேன்).

எதிர்கால இடைநிலையாக உள்ள பகரம் சில இடங்களில் மகரமாகத் திரியும் என்பர் (என்பர்—என்மர்).

கடுகு, அறிவு, சார்பு என்பவற்றில் முறையே கு, வு, பு என்பன தொழிற் பெயர் விகுதிகள் ஆகும்.

இவைகளே அல்லாமல், எதிர்காலத்தில் உம் என்பதும் இடைநிலையாக வருகின்றது. அவ்வாறு வரும் வினைமுற்றுக்களில் பாலுணர்த்தும் ஈறு சேர்வதில்லை.

அது செய்யும்
அவை செய்யும்

இவை மலையாளத்தில் ஞான் எழுதும், நீ எழுதும் முதலான தொடர்களைப்போல் அமைந்துள்ளன. தொல்காப்பியர் காலத்தில் செய்யும் என்பது, அவன் செய்யும், அவள் செய்யும் என உயர்திணை ஒருமையிலும் வழங்கி வந்திருக்கின்றது.

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா.[18]

18. தொல். சொல். உஉஎ

இந்தச் செய்யும் என்னும் வினைமுற்று பாலுணர்த்தும் ஈறு பெறாது; எனினும் வினையெச்சமாக வழங்குவதில்லை. பெயரெச்சமாகப் பெரு வழக்குப் பெற்றுள்ளது.

செய்யும் வேலை, செய்யும் மக்கள்

இந்த 'உம்' விகுதியைப் பற்றிக் கால்டுவெல் கருத்து வருமாறு[19] :—உம் என்னும் எண்ணிடைச் சொல்லினின்றும் வேறுபடாதது இவ்விகுதி. தெலுங்கில் 'னு' என்பது வழங்குகின்றது. தெலுங்கில் படர்க்கையில் இருதிணையிலும் ஒருமை பன்மைக்கு உரியதாக வழங்குகின்றது. அந்த 'னு' என்பதில் னகரம் சாரியை. உகரம்தான் விகுதி. அவ்வுகரமே தமிழில் 'உம்' என்று வருவது. எண்ணிடைச் சொல் பல பெயர்களை ஒன்று சேர்ப்பதுபோல், இங்கு 'உம்' என்பது இறந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் தொடரும் எதிர்காலத்தைக் குறித்தது என்பர். டாக்டர் குண்டர்ட் கூறுமாறு[20], உ என்பது (உம்பர், உம்மை என்ற சொற்களில் உள்ளவாறு) உயர்வு, மேல், இனிமேல் என்னும் பொருளைக் குறித்தலால், எதிர்காலம் உணர்த்தலாயிற்று என்பது பொருந்தும்.

தொல்காப்பியனார் இதனை "நிகழுங்காலத்துச் செய்யுமென் கிளவி" என நிகழ்காலத்திற்கு உரித்தாக்கிக் கூறினார்;[21] எனினும் அந் நிகழ்வுடன்

தொடர்ந்த எதிர் காலத்தையே இது குறிக்கின்றது.[22]

**எதிர்கால வினையெச்சம்:**

இலக்கியத் தமிழிலும் மலையாளத்திலும் வான் பான் ஈற்று வினையெச்சங்கள் உள்ளன. தமிழில் பாக்கு என்பதோர் ஈறும் உள்ளது. இவற்றின் முதல் மெய் பகரம் அல்லது வகரம். இம்மெய்களே எதிர் காலம் உணர்த்துவன என்பதை மேலே கண்டோம். இவற்றோடு கூடிய ஆன் ஈறு, உயர்திணை ஆண்பால் விகுதியாகிய ஆன் (வந்தான், சென்றான்) என்பதினின்று வேறுபட்டதன்று என்பர் சிலர். ஆனால் அஃது உண்மையன்று. இருபது, இருபான் என்பவற்றில் அது என்னும் ஈறு ஆன் என்று திரிந்தாற்போன்று, தொழிற் பெயர் விகுதி (அ)து என்பது ஆன் என்றாயிற்று என்பர் கால்டுவெல்.[23]

கன்னடத்தில் எதிர்கால இடைநிலையாகப் பெரிதும் வழங்குவது வகரமெய். அது பகரமாகத் திரிதல் அரிது. தமிழில் உம் ஈறு வருமிடங்களிலும் கன்னடத்தில் வகர இடைநிலை வருகிறது.

இருக்கும்—தமிழ். இருவது—கன்னடம்.

**கால வேறுபாடுகள்:**

இறப்பு, நிகழ்வு, எதிர்வு என முக்காலமே பொதுவாக உள்ளவை. அவற்றிலிருந்து பல வேறுபாடு

களுடன் தோன்றிய காலங்களை உணர்த்துவதிலும் திராவிட மொழிகள் முன்னேறியுள்ளன.[24] அவ்வகைப் பட்ட காலங்களை உணர்த்தும்போது திராவிட மொழிகள் இடை நிலைகளைப் பெருக்கவில்லை; ஆனால் துணை வினைகளைச் (*Auxiliary verbs*) சேர்த்துப் பயன் படுத்திக்கொண்டன. அத்தகைத் துணைவினைகளாவன கொள், இரு, இடு, நில் முதலியன.

| | |
|---|---|
| செய்தான் | — இறப்பு |
| செய்திட்டான் | — இறப்பில் இறப்பு |
| செய்திருக்கின்றான் | — இறப்பில் நிகழ்வு |
| செய்திருப்பான் | — இறப்பில் எதிர்வு |
| செய்கிறான் | — நிகழ்வு |
| செய்துகொண்டிருந்தான்<br>செய்யாநின்றான் | நிகழ்வில் இறப்பு |
| செய்துகொண்டிருக்கிறான்<br>செய்யாநிற்கிறான் | நிகழ்வில் நிகழ்வு |
| செய்துகொண்டிருப்பான்<br>செய்யாநிற்பான் | நிகழ்வில் எதிர்வு |
| செய்வான் | — எதிர்வு |

**பெயரெச்சம்** (*Relative participle or adjectival participle*):

இணைப்புப் பெயராக (*Relative pronouns*) ஐரோப்பிய மொழிகளில் வழங்கிவருவன (*who*

24. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் இறந்தகாலத்தையும் நிகழ்காலத்தையும் மும்மூன்றாகப் பகுப்பர்:—

இறந்தகாலம்— i இறப்பிலிறப்பு—செய்திருந்தான்
ii இறப்பில் நிகழ்வு—செய்திருக்கிறான்
iii இறப்பிலெதிர்வு—செய்திருப்பான்

நிகழ்காலம் — i நிகழ்விலிறப்பு—செய்யாநின்றான்
ii நிகழ்வில் நிகழ்வு—செய்யாநிற்கிறான்
iii நிகழ்விலெதிர்வு—செய்யாநிற்பான்

(தமிழ் மொழியின் வரலாறு, ப. 62)

**which, what, where)** போன்றவை திராவிட மொழிகளில் இல்லை.

**I saw the man who came**
வந்த மனிதனைக் கண்டேன்

இந்த வாக்கியங்களில் ஐரோப்பிய மொழியின் இயல்பும் திராவிட மொழியின் இயல்பும் தெளிவாகும். இணைப்புப் பெயர்க்கு ஈடாகத் திராவிட மொழிகளில் பெயரெச்சமே வழங்குகின்றது. பெயரெச்சம் என்ற பெயரே, அந்த வினைச்சொல் பெயரைக் கொண்டு முடிவது என்பதைத் தெரிவிக்கின்றது. (பெயர் + எச்சம், பெயரெஞ்சு கிளவி என்பர் தொல்காப்பியனார்).[25]

இறந்தகால வினையெச்சத்தோடு அகர விகுதி சேர்ந்து இறந்தகாலப் பெயரெச்சம் அமைகின்றது. செய்து + அ > செய்த.

நிகழ்காலத்தில், வினைப்பகுதியோடு நிகழ்கால இடைநிலையும் அகர விகுதியும் சேர்ந்து பெயரெச்சம் அமைகின்றது. (செய் + கின்று + அ > செய்கின்ற).

எதிர்காலத்தில் பகர வகர இடைநிலைகள் வராமல், வினைப்பகுதியோடு உம் என்பது சேர்ந்து பெயரெச்சம் அமைகின்றது (செய்யும் வேலை). இந்த உம் என்பதே செய்யும் என்னும் வினைமுற்றிலும் ஈறாக வருவது. மலையாளமும் தமிழைப்போலவே

உள்ளது. ஆனால் எதிர்காலத்திலும் எதிர்மறை வாய்பாட்டால் கூறும்போது, அகர விகுதியே வருகின்றது (செய்யாத).

எனவே, பெயரெச்ச விகுதி என்று கூறத்தகும் சிறப்புடையது அகரமே எனலாம்.

பெயரடைகளாக வரும் நல்ல, தய, பழைய, புதிய, பெரிய முதலான சொற்களிலும் அகரவிகுதியே உள்ளது. இச்சொற்களை இலக்கண நூலார் குறிப்புப் பெயரெச்சம் என்பர்.

நன்மை, தீமை, பழமை, பெருமை என்னும் பண்புப் பெயர்கள் அகரவிகுதி பெற்று நல்ல, தீய, பழைய, பெரிய என்னும் குறிப்புப் பெயரெச்சங்களாயின. பண்புப் பெயர்களே அல்லாமல் வினைப் பெயர்களும் அகரவிகுதி பெற்று இவ்வாறுதல் உண்டு. இலக்கியங்களில் இவ்வழக்கு மிகுதி; பேச்சுத் தமிழில் இல்லை.

பாலைய சுரன்                    கால குருகு

குறிப்புப் பெயரெச்சங்களின் வழக்கு மிகுதியால், வினைச்சொற்களாகிய (தெரிநிலைப்) பெயரெச்சங்களுள் சில நாளடைவில் பெயரடையாகப் பண்பு மாத்திரம் உணர்த்தும் நிலையுற்றன. உயர்ந்த வேலை, தாழ்ந்த நிலை என்னும் தொடர்களில் உயர்ந்த, தாழ்ந்த என்னும் பெயரெச்சங்களில் கால இடைநிலை இருந்தும் அவை காலம் உணர்த்தாமை காண்க.

செய்யும் என்னும் பெயரெச்சத்தின் செல்வாக்கால், ஒற்றுமைப்போலியாக (*analogy*) உம் ஈறு பெற்று, 'பெரும்' 'வெறும்' என்னும் சொற்கள் தோன்றி இன்று பேச்சுத் தமிழில் பெயரடைகளாக வழங்குகின்றன.

அவ்வாறே, அகர விகுதியை அகரச் சுட்டோடு தொடர்பு படுத்தல் பொருந்தும். (கால்டுவெல், சுட்டோடன்றி, ஆறனுருபோடும் தொடர்புபடுத்தி டெர்ப்படுவர்).[26]

## கச. வினை வகை

### தன்வினை, பிறவினை (*causals*)

இவை திராவிட மொழிகளில் சிறப்பாக வழங்கும் வகையாகும். வினைச்சொல்லால் உணர்த்தப்படும் வினையைத் தான் செய்தலும் பிறரைச் செய்வித்தலுமே இவற்றின் வேறுபாடுகள்.

தன்வினைகள் எல்லாம் பிறவினைகள் ஆகும். திணைபாலிடங்களையும் காலத்தையும் உணர்த்தும் உறுப்புக்களைச் சேர்ப்பதில் இவை வேறுபடுவதில்லை.

தன்வினை பிறவினையாகும் முறை :—

(i) தமிழில் இ, தெலுங்கில் இசு அல்லது இஞ்சு (*ichu or inchu*)[1], கன்னடத்தில் இசு (*isu*)[2] என்னும் விகுதிகள் வினைப்பகுதியோடு சேர்வதால் பிறவினை ஆகும். தமிழில் வி, பி என்பவற்றைப் பவணந்தியார் பிறவினை விகுதிகள் என்பர்.[3] ஆனால் வகர பகர மெய்யெழுத்துக்கள் ஒலித்துணையாக வந்து தோன்றினவே யன்றிப் பிறவினைப் பொருள அல்ல; இகர உயிர் ஒன்றே பிறவினைப் பொருளைத் தருவதாகும்.

---

1. C. P. Brown, A Grammar of the Telugu Language, p. 155.
2. Kittel, A Grammar of the Kannada Language.
3. செய்யென் வினைவழி விப்பி தனிவரின், செய்வியென் ஏவல் இணையின் ஈரேவல். (நன்னூல், 138)

சேயிஞ்ச (cheyincha) - தெலுங்கு - செய்விக்க
பிலிபிஞ்ச (pilipincha) - ,, - அழைப்பிக்க
மறச (maracha) - ,, - மறக்க
மாடிசு (madisu) - கன்னடம் - செய்வி
ஓடிசு (odisu) - ,, - ஓட்டு

போ - போக்கு - தமிழ்
போ - போனீ - தெலுங்கு

நெட்டெழுத்தாகிய ' ஈ ' என்பதும் பிறவினைப் பொருளில் வழங்குகின்றது.

கன்னடம் :— மாடு - செய், மாடுகொடு - செய்வி
தமிழ் :— கல், கற்றுக்கொடு - கற்பி

கொடு என்னும் சொல் இப் பொருளில் வழங்குதல் காண்க.

(ii) செய், பண்ணு என்னும் சொற்கள் வினையுடன் சேர்ந்து பிறவினைப் பொருள் தருகின்ற வழக்கு இக் காலத்தில் பெருகி வருகின்றது.

உண்பி - உண்ணச்செய்
உறங்கு - உறங்கப்பண்ணு

(iii) பகுதியின் ஈற்றில் உள்ள வல்லினம் இரட்டித்துப் பிறவினை அமைகின்றது.

பெருகு - பெருக்கு வாடு - வாட்டு
ஆகு - ஆக்கு ஆறு - ஆற்று

(iv) பகுதியில் உள்ள மென்றொடர் வன்றொடராக மாறிப் பிறவினை அமையும்.

திருந்து - திருத்து
அடங்கு - அடக்கு

**(v)** கு சு டு து பு று என்னும் ஆறனுள் ஒன்று பகுதியுடன் சேர்வதால் பிறவினை அமையும்.

போ - போக்கு - கு
பாய் - பாய்ச்சு - சு
உருள் - உருட்டு - டு
நட - நடத்து - து
பயில் - பயிற்று - று
எழு - எழுப்பு - பு

**(vi)** பகுதியில் ஒரு மாறுதலும் இன்றி, பகுதியும் இடை நிலையும் புணருமிடத்து, வல்லினம் மிகுந்தால் பிறவினையாகும் சொற்கள் உள்ளன. வல்லினம் மிகா வழி அவை தன் வினையாகவே நிற்கும். மூக்கினமாகிய ந முதலியன வல்லினம் ஆதலும் உண்டு. அவை வல்லினமாயின் பிறவினை ; அல்லாதபோது தன்வினை.

சேர்கிறேன் - சேர்க்கிறேன்
அடைவேன் - அடைப்பேன்
சேர்வேன் - சேர்ப்பேன்
சேர்ந்தேன் - சேர்த்தேன்

**பிறவினை விகுதிகள் :**

மேற்கூறிய பலவகையினையும் ஆராய்ந்து நோக்கின், தகரம் இகரம் என்னும் இரண்டே பிறவினையாக வருதல் காணப்படும். இசு, இஞ்சு, சு, வி, பி என்பவற்றிலெல்லாம் இகரமே காணப்படுகின்றது.[4] பிராஹுய் மொழியிலும் இகரமே பிறவினை விகுதியாக உள்ளது. (இப் *if* என்பது அம் மொழியின் விகுதியாகக் கொள்ளப்படுவது). நச்சினார்க்கினியர்

வி, பி எனக் கொள்ளாமல் இகர உயிரே கொள்கின்றார்.[5] வல்லினம் இரட்டித்தலிலும் மென்றொடர் வன்றொடராக மாறுவதிலும் தகரமே பிறவினை விகுதி என்பதை ஆராய்ந்து காணலாம்.

பெருக் (உ) + த் (உ) > பெருக்கு
வாட் (உ) + த் (உ) > வாட்டு
திருந்த் (உ) + த் (உ) > திருத்து
அடங்க் (உ) + த் (உ) > அடக்கு

வருமொழி முதல் மெய்யாகிய தகரத்தின் செல்வாக்கால் இவ்வாறு ஒலித்திரிபுகள் ஆயின.

கு சு டு து பு று என்று ஆறாகக் கொண்ட விகுதிகளும் ஒலிநூல் துணைகொண்டு நோக்குவார்க்கு து என்னும் ஒரு விகுதியாகவே விளங்கும். இங்கும் தகரமாகிய வருமொழி முதல்மெய்யின் செல்வாக்கே காரணமாகத் திரிந்த திரிபுகள் காணப்படும்,

போகு = போக் + (உ)
போக் (உ) + த் (உ) > போக்கு
பாய் (உ) + த் (உ) > பாய்த்து
> பாய்ச்சு

(பல்லினம் இவ்வாறு திரிதல் இயல்பு, உயர்த்தி உயர்ச்சி என்றாதல் போல).

உருள் + த் (உ) > உருட்டு
நட + த் (உ) > நடத்து
பயில் + த் (உ) > பயிற்று
எழும்ப் (உ) + த் > எழுப்பு

ஆதலின் பிறவினைப் பொருள் தருவன இகரமும் தகரமுமாகிய இரண்டுமே என்பது தெளியப்படும். இவ் விரண்டும் இறந்தகாலப் பொருள் தருதல் போலவே பிறவினைப் பொருளும் தரலாயின. இறந்த காலம் உணர்த்தும்போது, காலம் கழிந்துவிட்டது, ஈதல் - தருதல் காலத்தளவில் நிகழ்ந்தது என உணர்த்தின. இங்கு, ஒருவன் தான் செய்யும் தொழிலைப் பிற னுக்கு ஈந்தான் - தந்தான் என உணர்த்தி நின்றன;[6] ஒரு வினை மற்றொருவனுக்கு உரியதானதை ஈதல் - தருதல் உணர்த்துதல் இயல்பே. இவ்வாறு இகரமும் தகரமும் பிறவினை உறுப்புக்களாய் அமைந்தன. கற்றுக்கொடு என்னும் இக்காலப் பேச்சு மொழியில் கொடு என்பதும் ஈதற்பொருள் உணர்த்தும் இகரம் போல் பிறவினைப் பொருள் உணர்த்துகின்றது.

பிறவினை சித்திய மொழிகளில் உள்ளது என்பர் கால்டுவெல். ஐரோப்பிய மொழிகளில் பிற வினைப் பொருளை உணர்த்த வேண்டின், இரண்டும் பலவுமான சொற்கள் தொடர்ந்து நின்றே உணர்த் தும். திராவிட மொழிகளிலோ, சொல்லினுள் சிறு மாற்றத்தாலேயே பிறவினைப் பொருளை உணர்த்த முடிகின்றது. இஃது ஒரு சிறப்பியல்பாகும்.

**இரட்டைக் கிளவி வினை** (*Iterative or Frequentative Verbs*) :

திராவிட மொழிகளில் இவ்வகை வினைகள் பல உள்ளன. (மினு மினுத்தது, கல கலத்தது.) கால

இடைநிலைகளும் பாலுணர்த்தும் விகுதிகளும் சேர்வதில் யாதொரு வேறுபாடும் இல்லை. ஏனைய வினைகளிற் போலவே ஒழுங்கான முறை உண்டு.

இவற்றில் இரு முறை வரும் சொற்களைப் பிரித்தால் பொருள் கெடும். இரட்டிப்பாலேயே பொருள் சிறந்து நிற்கின்றது.

**வினைக்குறிப்பு** (*Appellative verbs or conjugated nouns*):

திராவிட மொழிகளில் எந்தப் பெயர்ச்சொல்லையும் வினைக்குறிப்பாக மாற்றலாம். இது பழைய இலக்கியங்களில் பயின்ற வழக்காக இருப்பினும், இக்காலத்துப் பேச்சு மொழிகளிலும் அருகிக் காணப்படுகின்றது. எல்லாத் திணைபாலிடங்களுக்கும் அவ்வவற்றின் விகுதிகளைப் புணர்த்தலால் இத்தகைய வினைக்குறிப்புகள் அமையும்.

அவன் நாடன், அது கரியது, நீ நல்லை, யான் அடியேன் - இவற்றில் காலமுணர்த்தும் இடைநிலைகள் இல்லை. ஆதலின் இவை காலத்தினைக் குறிப்பால் உணர்த்துமென்பர் இலக்கண நூலார்.[7] உண்மையாக நோக்கின், இவை காலம் உணர்த்துவதில்லை என்றும், நிகழ்காலத்திற்கு உரியவாகக் கொள்ளலமையும் என்றும் கூறுவர் கால்டுவெல்.[8]

---

7. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்று
அம்முக் காலமும் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை உடைய தோன்றலாறே.

(தொல்.சொல்.௨௦௦)

8. Caldwell, A Comparative grammar of the Dravidian Languages, p. 478.

தெலுங்கு - கவி : பெயர்ச்சொல்

கவினி (நான் கவி)
கவினி (நீ கவிவி) } வினைக்குறிப்பு

தன்மை முன்னிலைகளில் தவிர, படர்க்கையில் பெயர்ச்சொல்லுக்கும் வினைக்குறிப்பிற்கும் பெரும் பான்மையும் வேறுபாடே இல்லை. 'பொன்னன்,' 'நல்லது' முதலான சொற்கள் இருவகையாகவும் வரும்.

பண்புப் பெயர்கள் வினைக்குறிப்பாக வரும் போது, அடிச்சொல்லுடன் மட்டுமே விகுதிகள் இயையும்.

பண்புப் பெயர் - கொடுமை, தீமை, வலிமை
பண்பு அடிச்சொல் - கொடு, தீ, வலி
வினைக்குறிப்பு - கொடியன், தீயன், வலியன்
கொடியது, கொடிது
தீது, தீயது
வலியது, வலிது

வினைக்குறிப்பாக இருந்து பின்னர்ப் பெயராக வருவனவற்றைக் குறிப்பு வினையாலணையும் பெயர் என்பர் இலக்கண நூலார். மொழியியலின்படி அவற்றிற்கும் பெயர்ச்சொல்லிற்கும் வேறுபாடு இல்லை.

பெரியது, பெரிது, வலியது, வலிது என அகரச் சாரியை பெறுதலும் உண்டு; பெறாமையும் உண்டு.

**செயப்பாட்டு வினை** (*The passive voice*) :

திராவிட மொழிகளில் செயப்பாட்டு வினை இல்லை ; மிகப் பழங்காலத்திலும் இருந்ததில்லை ;[9] அன்றியும் ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு செயப்பாட்டு வினைக்குரிய பொருட் சிறப்பும் இல்லை. ஆயினும் செயப்பாட்டு வினைப் பொருளை உணர்த்தும் முறைகள் பல உள்ளன.

(i) 'நான் அதை உடைத்தேன்' என்னும் செய்வினையைச் செயப்பாட்டு வினைப்பொருளில் கூறும்போது 'அது என்னால் உடைந்தது' என்பர். அது என்னால் உடைக்கப்பட்டது என்று வழங்கும் ஐரோப்பிய மொழிமரபு இங்கு இல்லை. செய்வினைப் பொருளில் வரும் எழுவாயை மட்டும் மாற்றுவதால் செயப்பாட்டு வினைப்பொருள் பயக்கும்.

---

9. It (passive) has been used also in the modern written dialect...but it is rare in modern literature, and in colloquial language it is avoided, and if used, is generally not understood by the populace. (Kittel, A Grammar of the Kannada Language p. 325).

All modes of expressing, somehow, the force of the passive go to show that the Kannada language is destitute of a passive which as to form and idea, corresponds to the Samskrita and English one. (ibid. 330).

Tamil has no passive voice, but a compound verb may be formed, which in many respects supplies its place. This form, which is foreign to the idiom of the language, must be very sparingly used. It is made by adding படு, suffer, in all its inflexions to the infinitive mood of the verb. (G. U. Pope, A Handbook of the Ordinary Dialect of the Tamil Language, p. 74).

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே[10]

என்பர் தொல்காப்பியனார். இவ்வாறு வினைச்சொல் மாறாமல் நிற்றலால், செய்யப்பட்டது செய்தது என்ற வேறுபாடு தெளிவாகாமல் கிடப்பினும், ஓர் இடர்ப்பாடும் இன்றிப் பொருள் விளங்குகின்றது. இது மொழியின் ஆற்றலாகும்.

(ii) மேற்கூறிய பொருள் தெளிவுபடாமல் கிடக்கும்போதோ, சிறப்பிக்க வேண்டும்போதோ (ஆ, போ முதலான வினைகளாகிய) ஆயிற்று, போயிற்று முதலான சொற்களைச் செய்வினைகளோடு சேர்ப்பர்.

அது உடைந்து போயிற்று
அது உடைந்தாயிற்று

(iii) வினையாலணையும் பெயர்களில் செய்வினையே செயப்பாட்டு வினைப்பொருளில் வழங்கப்படும். வழக்கின் ஆற்றலால் பொருள் இடர்ப்பாடு இல்லை.

சொன்னது போதும் (சொல்லப்பட்டது போதும்)
நக்கீரர் என்பவர் (நக்கீரர் எனப்பட்டவர்)

(iv) படு என்னும் துணைவினையைச் சேர்த்துச் செயப்பாட்டு வினைப்பொருள் உணர்த்தப்படும்.

10. தொல். சொல். உசகூ

உடைந்தது - உடைக்கப்பட்டது, உடைபட்டது
கொன்றது - கொல்லப்பட்டது

ஆயினும், கொல்லப்பட்டது முதலானவற்றைச் செயப்பாட்டு வினைகளாகக் கொள்ளல் தவறு. படுதல் என்பது இங்கு அனுபவித்தல் என்னும் பொருளது. (ஆங்கிலத்திலும் செயப்பாட்டு வினையின் எழுவாயை *the suffer* எனக் குறிப்பர்.)[11] எனவே, இங்குக் கொல்லப்பட்டது என்பதற்குக் கொலையை அனுபவித்தது என்பதே பொருளாகும். ஆதலின் இரு சொல்லாகக்கொண்டே முதலில் இப் பொருள் உணர்த்தப்பட்டது. முதல்சொல் எச்சமாகவோ தொழிற்பெயராகவோ நிற்க, பின்னர், படு என்னும் வினை காலமும் பாலும் உணர்த்திப் புணர்ந்து நிற்றல் காண்க. நாளடைவில் 'படு' என்பது அப் பொருளை இழந்தது; இரு சொல்லும் ஒரு தொடராய் ஒரு சொல்போல வழங்கலாயின.

(v) 'படு' என்பதைப்போலவே 'உண்' முதலான சொற்களையும் சேர்த்தல் உண்டு. ஆயினும் அது மிக அருகிய வழக்கே. எச்சத்துடன் 'உண்' முதலியவற்றைச் சேர்த்தல் இல்லை; தொழிற் பெயருடன் சேர்ப்பர்.

கொலையுண்டான், கொலையுண்டது

படு, உண் முதலானவற்றை உரை நடையிலும் சிறுபான்மை செய்யுளிலும் காணினும், நாட்டுப்புற மக்கள் பேச்சில் இன்னும் காண்பதரிதாக உள்ளது.

11. H. R. Stokoe, The Understanding of Syntax, p. 88.

ஆதலின், செயப்பாட்டு வினை திராவிடமொழிகளுக்கு இல்லை என்பதும் புதியதாய்ப் புகுந்த பின்னரும் செல்வாக்குப் பெறவில்லை என்பதும் தெளிவு.[12]

செயப்பாட்டு வினை வழங்கும் இடங்களை ஆராய்ந்து ஐந்து காரணங்களைக் குறிக்கின்றார் ஜெஸ்பர்ஸன்.[13]

1. செய்தவன் (கருத்தா) தெரியா நிலை.
2. செய்தவன் சொல்லாமலே தெரியும் நிலை.
3. செய்தவனைக் கூறாமல் விடுதல் நாகரிகமாகவோ நன்மையாகவோ விளங்கும் நிலை.
4. செயப்படுபொருளை எழுவாயாக்கிக் கூறுமாறு அதற்கு அமையும் சிறப்பு நிலை.
5. முன்னும் பின்னும் உள்ள வாக்கியங்களின் தொடர்பு நோக்கிச் செயப்படுபொருள் முன் நிற்கும் நிலை.

இந்த ஐந்து காரணங்களால் செயப்பாட்டு வினை மொழியில் இடம் பெறுகின்றது என்பது ஜெஸ்பர்ஸன் கொள்கை. இத்தகைய இடங்களிலும் தமிழில் செயப்படுபொருள் இடம் பெறாமல், 'நெய் விற்கிறது' முதலான வாக்கியங்களே வழங்குகின்றன,

12. Did the difference between 'I strike' and 'I am struck' lie only in the grammatical relations of the two persons involved, it would be unnecessary to pay further attention to it. (Vendryes, Language, p. 103.)
13. The System of Grammar, p. 21.

இதனால்தான் இதனை 'வழக்கியல் மரபு' என்று தொல்காப்பியனார்[14] எடுத்துரைக்கலானார்.

**எதிர்மறை வினை (*The Negative Voice*):**

எல்லா வினைச்சொற்களும் உடன்பாட்டு வினைகளே. ஆனால் எதிர்மறை யுணர்த்தும் இடைநிலைகளைப் பெறுவதால் அவை எதிர்மறை வினைகளாகின்றன.[15] இதுவே திராவிட மொழியியல்பு. ஆனால் எல்லா ஐரோப்பிய மொழிகளிலும் எதிர்மறை யுணர்த்தும் சொல் வினைச்சொல்லின் உறுப்பாகாமல் தனித்து நிற்கின்றது. திராவிட மொழிகளிலோ பகுதிக்கும் விகுதிக்கும் இடையே எதிர்மறை யிடைநிலை புணர்ந்து வினைச்சொல் அமைகின்றது.

எதிர்மறைவினை முக்காலத்திற்கும் பொது என்பா இலக்கண நூலார்.[16] கால இடை நிலை பெறாமல் எதிர்மறை யிடைநிலை பெற்ற வினைகளையே அவ்வாறு குறிப்பர்.

வார் + ஆ + ஆன் > வாரான்
செய் + ஆ + ஏன் > செய்யேன்

---

14. தொல். சொல். உசகூ.
15. புத்தமித்திரனார் இதனைத் தடைப்பொருள் என்பர். (வீரசோழியம், தாதுப் படலம், 11)
16. ஆகாரம் எதிர்மறை வினையாய் மூன்று காலத்திற்கும் உரித்தாயினும் எதிர்காலத்துப் பயின்று வரும். (சேனாவரையர், தொல். சொல். உகக)

மூன்று காலமும் அவை பற்றிப் புடைபெயரும் வினையும் இல்லனவற்றை எதிர்மறைவினை மூன்று காலமும் ஏற்கும் என்று கூறுதல் இலக்கணை (சங்கர நமச்சிவாயர், நன்னூல், 145).

கால இடைநிலை இல்லாக் காரணத்தால் முக் காலத்திற்கும் பொது எனக் குறிப்பினும், இவை எதிர்காலத்திற்கு உரியவாய் வழங்குகின்றன. ஏனைய இறந்தகால நிகழ்காலங்களுக்கு உரிய எதிர்மறை வினைகளில் கால இடைநிலைகளும் எதிர்மறை இடைநிலைகளும் ஒருங்கே உள்ளன.

செய் + த் + இல் + அன் > செய்திலன்

உண் + கின்று + இல் + அன் > உண்கின்றிலன்

எதிர்கால வினைச்சொற்களில் மட்டும் இவ்வாறு இருவகை இடைநிலையும் உடன் நிற்றல் இல்லை. எனவே, வாரான், செய்யேன் முதலியன எதிர் காலத்தைக் குறிக்க வழங்கலாயின. மலையாளத்தில் முக்காலத்திற்கும் உரிய எதிர்மறை வினைகள் உள்ளன.

இந்த எதிர்மறை வினைகளில் பகுதியும் விகுதியும் ஒரு சிறிதும் மாறாமல் உடன்பாட்டு வினைகளிற் போலவே இருத்தல் காணத்தக்கது. சில வினைச் சொற்களில், எதிர்மறையிடை நிலையாகிய ஆகாரமும் விகுதியின் உயிரும் ஒன்றி ஒருயிராய் நிற்றல் உண்டு. ஆண்டும் எதிர்மறை யிடைநிலை உண்டெனவே கொள்ளல் வேண்டும். இன்றேல் எதிர்மறைப் பொருள் தருமாறு இல்லை.

கொள் + ஆ + அன் / ஆன் > கொள்ளான்

கொள் + ஆ + இர் / ஈர் > கொள்ளீர்

கொள் + ஆ + எம்/ஏம் > கொள்ளேம்
வாழ் + ஆ + து > வாழாது
வாழ் + ஆ + து > வாழா

இவற்றில் அஃறிணை வினைகளை ஆராயின், அவற்றில் எதிர்மறை இடைநிலை இருத்தல் தெளிவாகும். அன்றியும், தெலுங்கு எதிர்மறை வினைகளில் எதிர் மறை இடைநிலை அகரம் இருத்தல் ஐயமறக் கிடக்கின்றது. ஏனெனின், தெலுங்கில் விகுதிகள் மெய் முதலாவன (னு, ரு, மு என்பன). ஆதலின், அம் மெய்க்கு முன்னுள்ள அகரத்தை எதிர்மறை இடைநிலை என்றே துணியவேண்டும்.

சேயனு (செய்யேன்)
சேயவு (செய்யாய்)
சேயமு (செய்யோம்)
சேயரு (செய்யீர்)

கன்னடத்திலும் அகரம் எதிர்மறை இடைநிலையாகும்.

பாளது (வாழாது)

தமிழில் ஆகாரம் மறை உணர்த்துவதாகும். தமிழ் வினைமுற்றுக்களிலன்றி, எச்சங்களில் எதிர்மறை வடிவங்களை ஆராயின் ஆகாரம் இடைநிலை என்பது ஐயமின்றிப் புலப்படும்.

வாழ் + ஆ + மல் > வாழாமல்
உண் + ஆ + த் + அ > உண்ணாத

இவற்றிலுள்ள ஆகாரமும் விகுதிகளும் தெளிவாக நிற்றல் காண்க.

அ, ஆ, என்பனவேயன்றி அல், இல் என்பனவும் எதிர்மறை இடைநிலைகளாம்.

வாழ்க - வாழற்க - அல்
உண்டான் - உண்டிலன் - இல்

இவையெல்லாம் இலக்கியத் தமிழைச் - செந்தமிழைச் சேர்ந்தன. இன்று பேச்சுத் தமிழில் எதிர்மறையை உணர்த்தும் முறை மாறியுள்ளது.[17]

வந்திலன் - வரவில்லை
வருகின்றிலன் - வரவில்லை
வாரான் - வரமாட்டான்

ஒரு சொல்லாக இருந்த வினை இரு சொல்லாகப் பிரிந்து அப் பொருளை உணர்த்தும் முறை இங்குக் காணப்படுவது. இதுபோன்றவற்றை மொழி நூலார் பிரிநிலை வளர்ச்சி (*analytic growth*) என்று குறிப்பர்.

**காரண வினை**

ஐரோப்பிய மொழிகளில், காரண வினை (*sujunctive or conditional mood*), செயவெனெச்சம் (*infinitive mood*), ஏவல் வினை (*imperative mood*) என்னும், வினை வகைகள் உண்டு. திராவிட மொழிகளில் உண்மையாக ஆராய்ந்தால் காரண வினை முதலிய சில பிரிவுக்கு இடமில்லை என்று

---

17. கன்னடத்திலும் இத்தகைய மாறுதல் நிகழ்ந்துள்ளது. அம்மொழியிலும் பழைய எதிர்மறை வினைகள் வழங்குதல் ஒழிந்து, புதிய முறையாக இத்தகைய தொடர்கள் பேச்சு வழக்கில் இடம் பெற்றுள்ளன. F. Kittel, A Grammar of the Kannada language p. 159.

கூறல் வேண்டும். வினைச்சொற்கள் இப்பொருள் வேறுபாட்டை உணர்த்துதல் ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு திராவிட மொழிகளிலும் உண்டு. ஆனால் சொல்லளவில் அவற்றிற்கான வேறுபாடுகள் இல்லை எனல் வேண்டும். எனினும் அப் பொருள்களைப் பல் வேறு வகையாகத் திராவிட வினைகள் உணர்த்த வல்லனவாக உள்ளன.

'ஆல்', 'இன்' முதலான விகுதிகளையோ, அன்றி, 'ஆனால்', 'என்றால்' முதலான சொற்களையோ, வினைச்சொல்லுடன் சேர்த்தால் காரணவினை அமையும்.

ஆல், இன், இல் - வந்தால், வரின், வரில்
எனின், ஆனால், என்றால், ஆகில், ஆயின் } வந்தாரெனின், வந்தாரானால், வந்தாரென்றால், வந்தாராகில், வந்தாராயின்

திராவிட மொழி ஒவ்வொன்றிலும் வேறுபட்ட விகுதிகளும் சொற்களும் இப் பொருளைத் தருகின்றன.

ஆல், இன், இல் என்னும் விகுதிகளை வேற்றுமை யுருபுகளென்று கருத இடம் உளது.[18] ஆல் மூன்றாம் வேற்றுமையில் காரணப் பொருளிலும், இன்னும் அதன் திரிபான இல்லும் ஐந்தாம் வேற்றுமையில் காரணப் பொருளிலும் வருதல் காண்க. ஆனால், என்றால், ஆயின், எனின், ஆகில் என்பனவும், 'ஆ' 'என்' என்னும் பகுதிகளோடு ஆல், இன், இல் என்னும் விகுதிகள் சேர்ந்த சொற்களே யாகும்.

18. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 529.

அவையே யல்லாமல், ஏழாம் வேற்றுமை இடப் பொருளில் வரும் கால், கடை முதலான உருபுகளைச் சேர்த்தும் காரண வினை அமையும்.

செய்தக்கால், செய்தக்கடை, (செய்தக்கால் என்பது பேச்சு வழக்கில் செய்தாக்க என இன்னும் வழங்குகின்றது)

'ஆல்' என்பது செய்து முதலான எச்சங்களோடு சேர்தல் காணப்படுகிறது. அன்றியும் செய்தார் முதலான முற்றுக்களோடு சேர்ந்து வழங்குதலும் உண்டு. அப்போது அஃது 'ஏல்' எனத் தெரியும்.

செய்து + ஆல் > செய்தால்
செய்தார் + ஏல் > செய்தாரேல்

இவ்வாறன்றி, ஏல் என்பது (ஆல் என்பதன் திரிபெனக் கொள்ளாமல்) எனில் என்பதன் திரிபெனக் கொள்ளினும் அமையும்.

தெலுங்கில் ஏல் என்பதன் ஈறுகெட்டு ஏ என்பது விகுதியாக வழங்குகின்றது. (சேஸ்தே—செய்தால்).

**செயவெனெச்சம் (*infinitive mood*)**

ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு செயவெனெச்சத்தைத் தனிவகையாகக் கொள்ளல் திராவிட மொழிகளில் இல்லை. இதனை வினையெச்சங்களுள் ஒன்றாகக் கூறுதலே மரபு.

வர வேண்டும்
புகழ விரும்பினான்
பாடத் தொடங்கினான்

இவற்றில் உள்ள வர, புகழ, பாட முதலிய எச்சங்கள் செய என்னும் வாய்பாடாக நிற்றல் காண்க. இவ் வெச்சங்கள் வரல், புகழல், பாடல் முதலிய தொழிற் பெயர்கள் ஈற்று மெய் கெட்டு நின்றவையே. பொருளால் வேறுபாடு இல்லாமை வழக்கு நோக்கி உணரப் படுகின்றது. (பிராஹூய் குருக் மொழிகளிலும் வேறுபாடின்றி வழங்குகின்றது.[19] ஐரோப்பிய மொழிகளிலும் இத்தகைய வளர்ச்சி உள்ளது).[20]

வரல் வேண்டும்
புகழல் விரும்பினான்
பாடல் தொடங்கினான்

பாடற்குத் தொடங்கினான் என்பது போலத் தொழிற் பெயரோடு நான்கனுருபு சேர்ந்தும் அப் பொருளில் வருதல் உண்டு.

செய என்னும் வாய்பாட்டுச் சொற்கள் வேறு பொருளிலும் வழங்குகின்றன.[21]

நீ, வாழ, ஓங்க

19. The infinitive is a verbal noun declinable throughout the singular (Bray, The Brahui Language, p. 184). The infinitive of the verb stands for the abstract noun (F. Hahn, Kurukh Grammar, p. 92). The infinitive in Bengali appears to be the verbal noun put in the locative (S. K. Chatterjee, The Origin and Development of the Bengali Language. p. 1014).

20. F.M. Purdie, Syntax in Six Languages, pp. 54-58.

21. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 346.

இவற்றின் ஈற்று லகரம் கெடாமல் நின்று அப் பொருள் தரலும் உண்டு.

நீ வாழல், ஓங்கல்,

ஆதலின், க, அ, அல் முதலியன வியங்கோள் விகுதிகள் என வகுத்தனர் இலக்கண நூலார்.[22]

தமிழில் எச்சங்களாக உள்ள வடிவங்கள் கன்னடம் முதலான ஏனைத் திராவிட மொழிகளில் தொழிற் பெயர்களாக இருத்தலும் ஈண்டு ஆராய்ந்துணரத் தக்கதாகும்.

| | |
|---|---|
| அலைதல்—அலெத (aleta) | கன்னடம் |
| முறிதல்—முறத (murata) | ,, |
| மேய்தல்—மேத (meta) | தெலுங்கு |
| நடத்தல்—நடத்த (nadata) | ,, |

செயவெனெச்சப் பொருள்கள் பின்வருமாறு பலவகைப் படும் :

(i) விழத் தள்ளினன் என்பதிற் போல காரியப் பொருளில் எதிர்கால வினையெச்சமாக வழங்கும்.

(ii) வரக் காண்கின்றேன் என்பதிற் போல உடனிகழ்ச்சிப் பொருளில் நிகழ்கால வினையெச்சமாக வரும்.

---

22. பிரெஞ்சு, ஸ்பானியம், இதாலி மொழிகளில் 'செய' என்பது (infinitive) திரியாமல் நின்று ஏவுதற்பொருளிலும் வழங்குகின்றது. F. M. Purdie, Syntax in Six Languages, pp. 60, 61). ஆயின், கிரேக்க மொழியில் தமிழில் உள்ளதுபோல், செய என்னும் எச்சத்திற்கும் ஏவலுக்கும் வேறுபாடு உள்ளது (A. F. Semenov, The Greek Language in its Evolution, p. 191).

**(iii)** மழை **பெய்ய** நெல் விளைந்தது என்பதிற் போல இறந்த கால வினையெச்சமாகக் காரணப்பொருளில் வரும்,

**(iv)** வினையடையாக (*adverbs*) வருமாறு பண்புப் பெயர்களுடன் 'ஆக' சேர்ந்து வழங்கும். (நன்றாகப் பேசினான்).

**(v)** இரட்டித்து நின்று மிகுதிப் பொருள் தரும் (மழை பெய்யப் பெய்யக் குளம் நிரம்பும்).

**(vi)** பல செயல்களை ஒரு காலத்தில் நிகழ்ந்தனவாகக் கூறும்போது பல வினைகள் இவ்வாய்பாட்டால் அடுக்கி வரும்.

முகில் எழ, வான் இருள, இடி இடிக்க.........

**ஏவல் வினை** (*Imperative mood*)

முன்னிலை ஒருமை ஏவலாக வரும் வினைச்சொல்லில் கால இடைநிலையும் விகுதியும் இல்லை. ஆதலின் வினைப்பகுதியே ஏவலொருமையாக வழங்குவது திராவிடமொழி யியல்பு.

வாழ் - நீ வாழ்; செய் - நீ செய்

முன்னிலை ஒருமை உணர்த்த ஆய் விகுதி புணர்தல் வேண்டும் என்றும், மேற்கூறியவற்றில் அவ் விகுதி புணர்ந்து கெட்டது என்றும் இலக்கண நூலார் கூறுவர்.[23] வினையடிச் சொல் தனித்து நின்று ஏவற்பொரு

23. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே.
(தொல் சொல். சஉ0).

ருணர்த்தல் மொழியியல்பு ஆதலின், அது பொருந் தாது.[24]

முன்னிலைப பனமை ஏவல் வினைகளில விகுதி இன்றியமையாதது. மின் என்பது இலக்கியங்களில் காணும் விகுதி. உம், உங்கள் என்பன பேச்சு வழக் கில் உள்ளன.

வாழ்மின், வாழும், வாழுங்கள்
செய்ம்மின், செய்யும், செய்யுங்கள்

உம் விகுதியை உம்மையிடைச் சொல்லாகக் கரு துவர் கால்டுவெல், ஆயின், முன்னிலையில் வழங்கும் நும் என்பதன் திரிபாகிய உம் என்பதே ஈண்டு விகுதி யாய் வருவதெனக் கொள்ளல் ஏற்புடைத்து.

மின் விகுதி, உம் என்பதும் இன் என்பதும் சேர்ந்து அமைந்ததாகும்.

செய் + என் — செய்யென் — ஒருமை ஏவல்
(பேச்சு வழக்கு)
செய்யும் + என் — செய்யுமென் — பன்மை ஏவல்
(பேச்சு வழக்கு)
செய்யும் + இன் — செய்யுமின் — ஏவற்பன்மை
(என் > இன் எனத் திரிதல் ஒலியியலுக்கு ஒத்ததே)
செய்யுமின் > செய்மின் — உகரம் கெடல்
(உண்ணும் > உண்ம்; போலும் > போன்ம் என்பன போல).

வா, போ என்னும் சொற்களில் உள்ள ஏவுங் கடுமை நீங்கி, வேண்டுகோளாக ஏவும் முறை அமைந்

24. இந்நூலில் 'அடிச் சொற்கள்' என்ற பகுதியில் காண்க.

தவற்றை வியங்கோள் என்பர். வருக, போக என்பன அவ்வகையின. வாழ்க, ஒழிக முதலாக வாழ்த்தல் வைதல் பொருளுடைய சொற்களும் வியங்கோள் எனப்படும். ஏவுதற்குக் குறுகிய வினைச் சொற்களும் வேண்டுதற்கு நீண்ட சொற்களும் அமைந்த மக்யார் (*Magyar*) மொழிகளை ஈண்டு ஒப்பிடலாம்.[25]

வியங்கோள் தன்மை முன்னிலை ஆகிய ஈரிடத்தும் வரலாகாதெனத் தொல்காப்பியனார் விலக்கினார்.[26] ஆயினும் இலக்கிய வழக்கு அவ்வாறு விலக்கவில்லை.[27] ஆதலின் பிற்காலத்தார் வியங்கோள் எல்லா இடங்களுக்கும் திணைபாலுக்கும் பொதுவானது என்று கொண்டனர்.[28] இதனால், திணைபாலிடம் உணர்த்தும் விகுதி வியங்கோளில் இல்லை என்பது தெளிவு. ஏவலில் ஒருமை பன்மை உளது. அதுவும் வியங்கோளில் இல்லை. ஏவற்பன்மையில் வரும் மின் உம் விகுதிகளில் முன்னிலைப் பன்மை யுணர்த்தும் இடப் பெயரின் திரிபு உள்ளது என மேலே கண்டோம். வியங்கோளில் உள்ள விகுதியோ திணைபாலிடங்களுக்குப் பொதுவான தொழிற்பெயர் விகுதியாகவே உள்ளது.

தொழிற்பெயர் விகுதியாகிய அல் என்பது மெய் கெட்டும் கெடாதும், கை விகுதி திரிந்தும் வியங்கோளில் அமைகின்றது.

25. Jespersen, Language, Its origin etc, p. 403.
26. முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி. (தொல். சொல். உ௨௬)
27. நான் இவளினும் பிரிக (புறம். 71-6).
நீ மன்னிய, மன்னுக (புறம். 6-29).
28. கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப. (நன்னூல், 338).

வாழல்—வாழ
ஓங்கல்—ஓங்க
செய்கை—செய்க
வருகை—வருக

திராவிட மொழிகளில் குருக் மொழியில் ஒரு வேறுபாடு காணப்படுகின்றது. பர (வர) என்பது ஏவலாகவும், பர்கே (வருக) என்பது வியங்கோளாக வும் வழங்குகின்றது. ஈரிடத்தும் தொழிற்பெயரே காணப்படுகின்றது.[29]

## தொழிற்பெயர் (*Verbal noun*)

தொழில் நிகழ்தலை உணர்த்தாது, தொழிலையே இன்னதென்று உணர்த்துவது தொழிற்பெயர்.[30] இஃது இருவகை :—1. காலம் உணர்த்தாத் தொழிற் பெயர்; 2. காலம் உணர்த்தும் தொழிற் பெயர்.

முன்னது, வினைப் பகுதியோடு தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, வு, சி, து, உள், மை, முதலான விகுதிகளில் ஒன்று சேர்ந்து அமைவது. நடத்தல், ஆடல், ஓட்டம், விடை, கிடக்கை முதலியன இவ் வகையைச் சாரும்.

---

29. The form ke is employed when a more familiar or milder sort of imperative is intended or when the fulfilment of the action commanded is not expected to be accomplished at once. Illustration: Bara, come! i.e. at once; bar ke, come (if you please). ke remains unaltered in all genders and both numbers. (F. Hahn, Kurukh Grammar, p. 43).

30. தொழில் மாத்திரம் உணர்த்துவன எல்லாம் தொழிற் பெயர் என்பது ஆசிரியர் கருத்து என்ப. (சேனாவரையர், தொல். சொல். சகரு).

பின்னது, கால இடைநிலையோடு கூடி, 'து' விகுதி பெற்று வருவது: நடந்தது, நடக்கிறது, நடப்பது, ஆடியது, ஆடுகிறது, ஆடுவது முதலாயின.

## வினையாலணையும் பெயர் (*Participial noun*)

வினைமுற்றுக்கள் திரிந்தும் திரியாமலும் வினையாலணையும் பெயராய் அமையும். இவை தொழிலை உணர்த்தாமல் தொழில் செய்வானை உணர்த்துவன.

செய்தானைக் கண்டேன்—திரிபில்லாதது
தாழ்ந்தார் இல்லை— ,,
செய்தவனைக் கண்டேன்—திரிபுடையது
தாழ்ந்தவர் இல்லை— ,,

படர்க்கை ஒன்றன்பால் வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயர்களாக நிற்றலே யன்றித் தொழிற் பெயர்களாகவும் நிற்கும். இவ்வாறு செய்தது முதலான சொற்கள் மூவகைப் பொருள் உணர்த்தல் காண்க.

(i) என் கை செய்தது (வினைமுற்று).
(ii) இதைச் செய்தது என் கை தான் (வினையாலணையும் பெயர்).
(iii) செய்தது நல்லதே (தொழிற்பெயர்).

## வினையடியாகப் பிறக்கும் பெயர்கள் (*Derivative nouns*)

வினைப் பகுதியோடு விகுதிகள் சேர்வதால் சில பெயர்கள் பிறக்கின்றன. சில பெயர்கள், விகுதிகள் அற்றவை. (அவற்றை இலக்கண நூலார் முதனிலைத் தொழிற்பெயர் என்பர்).

**பெயர்களாம் முறைகள்**

(1) விகுதிகள் பெறாமல் வினைப்பகுதியே பெயராக வருதல் (முதனிலைத் தொழிற் பெயர்):

கட்டு, அடி, பிடி

(2) வினைப்பகுதியின் ஈற்று வல்லினம் இரட்டித்துப் பெயராதல்:

எழுது > எழுத்து
பாடு > பாட்டு
ஆடு > ஆட்டு

இரட்டிக்காத நிலையில் மெல்லொலியுடைய ஈறு இரட்டித்து வல்லொலி பெறுதல் காண்க.

இவ்வாறு மெல்லொலி வல்லொலி பெறு மிடங்களில பொருள் மாறுதலும் ஏற்படுகின்றது. அத்தகைய மாறுதல்களாவன:—

(i) பெயர் பெயரடையாதல்:

காடு > காட்டு (ப் புலி)

(ii) தன்வினை பிறவினையாதல் (துவ்விகுதி சேர்ந்தால் திரிவது):

ஓடு > ஓட்டு
ஆகு > ஆக்கு

(iii) வினைப்பகுதி இறந்த காலம் உணர்த்தல் (த் இடைநிலை சேர்ந்ததால் திரிதல்):

அறு > அற்று
விடு > விட்டு

**(iv)** வினை பெயராதல்:

பாடு > பாட்டு

எழுது > எழுத்து

நான்காவது வகையே இங்குக் கொள்ளப் படுவது. [ஏனைய அவ்வவ்விடங்களில் விளக்கப் பட்டன].

*(3)* வினைப்பகுதியின் முதலுயிர் நீண்டு பெயரா யமைதல்:

படு > பாடு மின் > மீன்

நக்கு > நாக்கு

*(4)* வினைப்பகுதியின் முதலுயிர் குறுகிப் பெய ராதல் :

காண் > கண்

*(5)* மை விகுதி சேர்ந்து பெயராதல் (மை விகுதி பண்புப் பெயர்க்கே பெரும் பான்மையும் ஏற்கும்; சிறு பான்மை தொழிற்பெயர்க்குமாம்) :

ஆடினமை, வந்தமை

*(6)* அம் விகுதி சேர்ந்து பெயராதல் (அப்போது மென்றொடர் வன்றொடராதலும் உண்டு);

தூங்கு > தூக்கம் திருந்து > திருத்தம்

ஆடு > ஆட்டம் தோண்டு > தோட்டம்

உயர் > உயரம் ஆழ் > ஆழம்

(7) கை, தி, சி, பு, முதலான விகுதிகளில் ஒன்று சேர்தல் :

காய் > காங்கை
கெடு > கெடுதி
புகழ் > புகழ்ச்சி
தின் > தின்றி, திற்றி (தெலுங்கு : திண்டி)
வேய் > வேம்பு
பாய் > பாம்பு

(8) கண், பாடு, மானம் முதலான சில பெயர்களே விகுதிகள் போல் சேர்ந்து பெயராதல்:

இடுக்கண், உறுகண்
கட்டுப்பாடு, சேர்மானம், கட்டுமானம்

இவ்வாறே பிற சொற்களையும் ஆய்ந்தறிந்து கொள்ளல் வேண்டும்.

சேரி > சேர்
விழா > வீழ் (விரும்பு)[31]
பிறை > பிற (பிறத்தல்)
பாசி > பா (பரவு)
பொலிசை > பொலி (மிகு)

---

31. கால்டுவெல் விழி என்பதினின்று விழா என்பது அமைந்தது என்பர். (A Comparative Grammar of the Dr. Languages, p. 548). கண் விழித்தலால் அமைந்த பெயர் என்னும் காரணம் பொருந்துவதன்று. எல்லாரும் விரும்பிச் செய்வதால், வீழ்தல் - விரும்புதல் என்னும் காரணம் பற்றி அமைந்ததெனல் பொருந்தும்.

இழுதை (பொய்) > இழு (இழுக்கு
கடன், கடமை > கட (கடத்தல்)
குழாய் > குழி
சுடர் > சுடு
புகார் > புகு
உகிர் > உகு
குதிரை > குதி
உடல் > உடு (உடுத்தல்)
வயல் > வை (வைத்தல்)
தொட்டில் > தொடு
விட்டில் > வெட்டு
பருத்தி > பரு (பெருகு)
அருள் > அரு (அருமையாய் இருத்தல்)
பொருள் > பொரு (பொருந்து):

## வினை முதற் பெயர்கள் (*nouns of agency*)

தமிழில் உள்ள வினையாலணையும் பெயர்கள் வினை முதலை உணர்த்தும். இவையே அன்றித் தமிழில் மிகுதியாக வழங்கும் வேறு பெயர்களும் உண்டு. அவற்றில் காணப்படும் விகுதி இ. அவ்விகுதி வட மொழி இகர விகுதியினின்று வேறானது; காரணம்:—

(1) வட மொழி இகர விகுதி பாலுணர்த்துவது: இது பாலுணர்த்தாதது. (2) வடமொழி கலந்த தமிழ் இலக்கியப் பகுதியிலே அன்றிக் குடியானவர் பேச்சில் மிக்கு வழங்குகின்றது. பல செடி கொடிகளின் பெயர்களும் இகர விகுதி பெற்று அமைந்திருத்தலால் வடமொழி விகுதி என்று கொள்ளப்படாது. நகைக்குறிப்பு மொழிகளிலும், பழமொழிகளிலும், தொடர் மொழிகளிலும் உயர்

வழக்காயினும், இழி வழக்காயினும் வரையறை யின்றிப் பயில்கின்றது.

கொள்ளி, உண்ணி, கொல்லி, மீன்கொத்தி
தொட்டாற்சுருங்கி, திண்ணைத்தூங்கி

இவ்வாறு வினைச்சொல் திராவிட மொழிகளில் பல்வேறு வகையில் பயன் பட்டு வருதலை நோக்கு மிடத்து, அதன் சிறப்புப் புலனாகும். திராவிட மொழி களின் உயிர், வினைச்சொல்லில் உள்ளது எனலாம். வினைமுற்றாய், திணைபால் இடம் காலங்களால் வகைப் படுதலே அன்றி, வினைச்சொல், வினையடையாயும் (*adverbs*), பெயரடையாயும் (*adjectives*), பெயரே யாகியும் (*derivative nouns*), பல்வேறு பொருட்டாகி யும் (*moods, voice, etc.*) பல்கி வருதலால், திராவிட மொழிகளின் சொற்கோவை (*vocabulary*) பெரும்பாலும் வினைச்சொல்லே கொண்டிருத்தலை உணரலாம். வினைச் சொல்லை எடுத்தாளப் பயின்றவர் மொழி முழுதும் பயின்றவராக ஆகுமாறு திராவிட மொழிகள் அமைந்துள்ளன.

## கரு. சுட்டு முதலியன

### சுட்டு வினுப் பெயர்கள்

திராவிட மொழிகளில் படர்க்கையிடப் பெயர்கள் (*Third person pronouns*) இல்லை. அவற்றினிடத்தில் சுட்டுப் பெயர்களே வழங்குகின்றன.

அகரம் சேய்மையில் உள்ள பொருளைச் சுட்டும் இகரம் அண்மையில் உள்ளதைச் சுட்டும்; உகரம் நடுவணதையும் பின்னதையும் சுட்டும். உகரம் வழக்கிறந்தது. அகரமும் இகரமும் பலவாறு பயின்று வழங்குகின்றன. (உகரம் தமிழிலக்கியத்திலும் கன்னட இலக்கியத்திலும் அருகிக் காணப்படுகின்றது).

இச் சுட்டுப் பெயர்களைப் போலவே, இருதிணை ஐம்பால் விகுதிகளையுடைய வினுப்பெயர்கள் உண்டு. எகரவினு எல்லாத் திராவிட மொழிகளிலும் காணப்படுவது.

அ, இ, உ, எ, என்னும் இந்நான்கு உயிர்களும் இவ்வாறு திராவிட மொழிகளில் சுட்டு வினுப் பொருளில் தொன்று தொட்டு வழங்கி வருவது பெருஞ் சிறப்பினதாகும். உலகில் உள்ள வேறு எம் மொழிகளிலும் இத்தகைய பண்பட்ட ஒழுங்குமுறை இல்லை. அழகும், உண்மைப் பெருமையும் வாய்ந்த இத்தகைய

ஒழுங்கு திராவிட மொழிகளின் சிறப்பை விளக்க வல்லது.[1]

யா என்பதும் வினாப் பொருள் தருவது; ஐம்பால் விகுதிகளுடன் கூடி வருவது. இது கன்னடத்திலும் வழங்கி வருகின்றது. யா என்பதற்கும் எகரவுயிர்க் கும் தொடர்புண்டு. இரண்டனுள் யா பழையது எனக் கருத இடமுண்டு. யம > எமன் எனப் பல வட சொற் கள் தமிழாகும் முறை ஈண்டுக் கருதத் தக்கது. முதலில் யா என்பது ஏகாரமாக (நெடிலாக)த் திரிந்து வழங்கி யிருக்கும். இன்னும் மலையாளத்தில் ஏவன், எவள் என் னும் தமிழ்ச் சொற்களுக்கு நேராக ஏவன், ஏவள் என்பன உள்ளன. மலையாளம், தமிழ் இரண்டிலும் 'ஏது' என்னும் சொல்லும் உள்ளது. தெலுங்கில் 'ஏதி' என்றுள்ளது. ('யா' ஏகாரமாதலைத் தெலுங்கில் யாண்டு > ஏடு என ஆனமை தெரிவிக்கும்.)

1. I need not call attention to the beautiful and philosophical regularity of this quadruple set of remote, proximate, and intermediate demonstratives and interrogatives. In no other language or family or languages in the world shall we find its equal, or even its second. In addition to which, the circumstance that the demonstrative vowels are not only used in these languages with an invariable and exact discrimination of meaning which is not found in the Indo-European tongues (with the solitary and partial exception of the New Persian), but are also associated with a corresponding interrogative vowel of which the Indo-European tongues are totally ignorant- tends to confirm the supposition which I have already expressed, that the Dravidian family has retained some pre-Sanskrit elements of immense antiquity.—Caldwell, A Comparative Grammar of the Dr. Languages, p. 422.

யாவர் என்பதன் திரிபாகிய யார் என்பது ஒருமையிலும் வழங்குகின்றது. அஃது 'ஆர்' என்றும் மருவியுள்ளது. 'எவன்' என்னும் வினா இலக்கியத்தில் 'ஏன்' எனும் பொருளில் வந்துள்ளது.

தெலுங்கு மொழியில் வாடு, வீடு, வாரு, வீரு, தா, தீ என்பன அவன், இவன், அவர், இவர், அது, இது என்னும் தமிழ்ச் சொற்களுக்கு நேரானவையாகும். வாடு முதலியவற்றில் முதலில் வகரமெய் அல்லது தகரமெய் காணப்படினும், அவை சுட்டு அல்ல. மொழி முதலில் இருந்த அகரவுயிரும் இகரவுயிரும் இடம் பெயர்தலால் ஆகிய திரிபுகளே இவை.[2] ஆதலால் வாடு, வீடு, தா, தீ முதலிய தெலுங்குச் சொற்களிலும் அ, இ என்னும் சுட்டுக்களே உள்ளன.

தமிழில் அகரம் முதலான சுட்டு வினாக்களை அடியாகப் பிறந்த பண்புப் பெயர்கள் பல மிக ஒழுங்காக அமைந்து மொழிக்கு அழகு தருகின்றன. அம்மை, இம்மை, உம்மை, எம்மை, இம்பர், உம்பர் முதலியன பல உள்ளன.

திராவிட மொழிகள் ஒவ்வொன்றிலும் எ, அல்லது ஏ முதலிலும், ன் அல்லது ம் ஈற்றிலும் பெற்ற வினா காணப்படுகின்றது. அவை என், ஏன், எம் என்பனவாகும்.

என் > என்ன, என்னது—தமிழ்.
ஏன்—தமிழ், மலையாளம்
ஏனு—கன்னடம்
ஏமி—தெலுங்கு (ஏமோ என்பதுமாம்.)

---

2. இந்நூலில் 'உயிரெழுத்துக்கள்' என்னும் பகுதியைக் காண்க.

அந்த, இந்த, எந்த என்பனவும், அன்று இன்று என்று என்பனவும் இவை போல்வனவும் இவ்வாறே சுட்டு வினாக்களினின்றும் பிறந்தவை.

ஆம், இம், உம், அன், இன், அல், இல், என்னும் இவை முதலில் சுட்டுப் பெயராய் இடப் பொருளையே உணர்த்தி யிருக்கவேண்டும். பின்னர்ப் படிப்படியாக மாறித் தொழிற் பெயர் விகுதிகளாகவும் பிற விகுதிகளாகவும் அமைந்தன என்றுகொள்ளலாம்.

ஆ ஈ ஏ என்பவை சுட்டு வினாப் பொருளில் தமிழிலக்கியத்திலும் பிறமொழிப்பேச்சிலும் இலக்கியத்திலும் வழங்கி வருவதால், நெட்டெழுத்துக்களாகிய அவையே பழையன என்றும், குற்றெழுத்துக்களாகிய அ, இ, எ என்பன பின்னர் அமைந்தன என்றும் கூறுவர். இவற்றாலாகிய சொற்களிலும், ஆங்கு, அங்கு; ஈங்கு, இங்கு, யாங்கு, எங்கு என இருவடிவங்கள் இருத்தல் இதற்குச் சான்றாகும்.

## பெயரடையாக வரும் சுட்டு வினாக்கள். (*Demonstrative and Interrogative adjectives.*)

சுட்டு வினாக்களின் அடிச் சொற்களாகிய அ, இ, எ அல்லது ஆ, ஈ, ஏ என்பன பெயர்ச் சொற்களுக்கு முன் பெயரடைகளாக நிற்க வல்லன. அங்ஙனம் வருங்கால், சுட்டு வினாக்கள் குறிலாயின் வகர உடம்படு மெய் பெற்றும், வருமொழி முதல் இரட்டித்தும் வரும்.

அ + ஊர் > அவ்வூர் அ + யானை > அவ்யானை
அ + கடல் > அக்கடல் எ + மனை > எம்மனை

மலையாளத்திலும் கன்னடத்திலும் சுட்டு வினாக்கள் நெடிலாய் வருதலே பெரும்பான்மை. அவை நெடிலாய் வருங்கால், மேற்கண்ட விதியில்லை; மற்ற உயிரெழுத்துக்களைப் போல் புணர்ச்சி பெறும். இவற்றை உயிரீறாகக் கொள்ளாமல், அவ் இவ், எவ் என வகர மெய்யீற்றனவாகக் கொள்வதற்கும் இடம் உண்டு.[3]

இவையே அல்லாமல், தமிழில் அந்த, இந்த, எந்த என்னும் சுட்டு வினாக்கள் உள்ளன. இவை பிறமொழிகளில் இல்லை; மலையாளத்திலும் இல்லை; மலையாளம் தமிழிலிருந்து பிரிந்த பின்னரே இவை தமிழில் பயின்றிருக்க வேண்டும். தமிழ்ச் செய்யுட்களிலும் இவை தக்க இடம் பெறவில்லை.

இவை போன்ற சொற்கள் தெலுங்கிலும் கன்னடத்திலும் உள்ளன. ஆனால் அவை பொருளால் வேறுபடுகின்றன.

அந்த (anta), இந்த (inta) எந்த (enta)
(அது போன்ற அல்லது அவ்வளவான...)

இப் பொருளில் தமிழிலும் மலையாளத்திலும் உள்ள சொற்கள், அன்ன, இன்ன, என்ன என்பன. இவற்றின் ஈற்றில் உள்ள அகரம் பெயரெச்ச ஈறாகக் கொள்ளல் பொருந்துவதாம்.

---

3. Thus the loss of 'v' in the initial lengthening of the demonstrative base in poetry, the use of the forms in literature and in the rules and in the commentaries on grammar, and the surviva of 'v' in mixed sandhi strongly indicate that the old demonstrative bases were av, iv and uv. (C.P. Venkatarama Ayyar, Dravidic Studies No. 1, p. 9.)

தெலுங்கில் அட்டி, இட்டி, எட்டி (அதுபோல், இது போல், எது போல்) என்னும் சொற்களும் சுட்டு வினைச் சொற்களே. கன்னடத்தில் அனிது, இனிது, எனிது (anitu, initu, enitu) என்னும் சொற்கள், தமிழிலக்கியத்தில் வழங்கும் அனைத்து, இனைத்து, எனைத்து என்பவற்றிற்கு நேரானவையாம்.

தெலுங்கில் அந்தரு, இந்தரு, எந்தரு என்பன மக்கள் தொகையினையும், அன்னி, இன்னி, என்னி என்பன அஃறிணைப் பொருள்களின் தொகையினையும் சுட்டியும் வினவியும் வழங்குவன.

தமிழில் உள்ள அந்த இந்த எந்த என்பவை அது இது எது என்பவற்றிலிருந்து பிறந்திருக்கலாம். ஈறு, பெயரெச்ச விகுதியாகிய அகரம் எனலாம். அத, இத, எத என்பவை மூக்கொலி பெற்று அந்த, இந்த, எந்த எனத் திரிந்திருக்கலாம். அது பொழுது, அது போழ்து என்று இலக்கியத்திலும், அந்தப்பொழுது என்று பேச்சு மொழியிலும் வழங்குவதைக் காண்க.

## வினையடையாக வரும் சுட்டுவினுக்கள்: (*Demonstrative and Interrogative Adverbs*)

வினையடையாக வரும் சொற்களைத் (**adverbs**) தனியே சொல்வகையுள் (**parts of speech**) ஒரு வகையாகப் பிரித்தல் தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் இல்லை. ஆனால், பெயர்ச் சொற்களும் வினைச் சொற்களும் வினையடையாக வருகின்றன. தமிழில் உள்ள இடைச்சொற்களும் உரிச்சொற்களும் அவ்வாறு வருகின்றன. சில பெயர்ச் சொற்களுடன் ஆக

ஆகி, ஆய் முதலான சொற்கள் சேர்ந்து வினையடை யாகின்றன.

நன்றாக, நன்றாய்ப் பேசினான்...........

சுட்டு வினாக்கள் பற்றிய வினையடைகளும் அவ்வாறே தனியினமாக இலக்கண நூலுள் கூறப்படவில்லை. ஆயினும் அத்தகைய சொற்கள் பல உள்ளன.

(1) சுட்டு, வினா + கு, ங்கு—அங்கு, இங்கு, எங்கு
(2) ஷை + சு, ஞ்சு—துளு மொழியில் அஞ்சு
(3) ஷை + டு, ண்டு,—ஆண்டு, ஈண்டு, யாண்டு
(4) ஷை + று, ன்று—அன்று, இன்று, என்று
அற்றை, இற்றை
(5) ஷை + ம்பு + அர்—இம்பர், உம்பர் (தமிழ்ச் செய்யுளில்)
(6) ஷை + ல், ள்—கன்னடம் இல்லி, அல்லி, எல்லி
(இங்கு, அங்கு, எங்கு,)

தெலுங்கு இலு—இல்லு (வீடு) இவ்வாறு தோன்றியது போலும்.
ஏல (எவ்வாறு)

தமிழில் எல்லாம் என்பதும் எல் + ஆ + உம் என வினாவிலிருந்து பிறந்த தென்பர் கால்டுவெல்.[4]

**ஆ, ஓ—வினாக்கள் :**

இவை பெயர்ச் சொல்லின் முன் சேர்க்கப் பெறும் எ, ஏ, யா என்னும் வினாக்களின் வேறுபட்டன. (ஏ என்பது தமிழ்ச் செய்யுளில் பெயர் வினைகளின் பின் சேர்க்கப்பெற்றும் வழங்குகின்றது.)

ஆ, ஓ என்னும் வினாக்கள் பெயர் வினைகளின் பின் சேர்க்கப் பெறுவன.

உண்டே? உண்டா? உண்டோ?

செப்பாக உள்ள ஒரு வாக்கியத்தின் இறுதியில் ஆ அல்லது ஓ வினைவைச் சேர்ப்பின், அவ்வாக்கியம் வினா வாக்கியமாக மாறும். இவ்வாறு வினா வாக்கியங்கள் எளிதில் அமைதல் திராவிட மொழிகளின் சிறப்பியல் பாகும்.

அவன் வருவான்—செப்பு
அவன் வருவானா—வினா

ஓகாரம் மலையாளத்தில் பெரிதும் வழங்குகின்றது. இது தமிழில் ஐயப் பொருளில் வரும் போது பிற வினாச் சொற்களில் ஈற்றிலும் சேர்க்கப்படுகின்றது.

எவன்—எவனோ
எது —எதுவோ

**சுட்டுவினா அடிச்சொல் :**

சுட்டுப் பெயர்களின் அடிச் சொற்கள் அ, இ, உ என்னும் தனிக் குற்றெழுத்துக்களா, அல்லது, அவ் இவ் உவ் என்னும் வகர மெய்யை அடுத்த குற்றெழுத்துக்களா என்பது ஆராயத்தக்கது.

1, அ. இ. உ என்னும் தனிக்குற்றெழுத்துக்கள் அடிச் சொற்களாயின்,

இ + அன் — இயன்
இ + அள் — இயள்
இ + அர் — இயர்

என்பன சொற்களாக வழங்கியிருக்க வேண்டும். எங்கும் யகரம் உடம்படுமெய்யாகத் தோன்றாமல், வகரமே காணப்படுகின்றது. ஆதலின், இக்குற்றெழுத்துக்களை அடிச்சொற்கள் என்று கருதத் தடை நேர்கின்றது.

குற்றெழுத்தாய் நிற்குமிடத்து, 'இயன்' என யகர உடம்படுமெய் பெறாமல் முறை பிறழ்ந்து 'இவன்' என வகர மெய் பெற்று அமைந்தது போலவே, நெட்டெழுத்தாய் நிற்குமிடத்து, 'ஆவிடை' என வகர உடம்படுமெய் பெறாமல், முறை பிறழ்ந்து 'ஆயிடை' என யகரமெய் பெற்று நிற்றலும் வியப்பாகவே உள்ளது.

2. சுட்டுப் பெயர்களில் இவ்வாறு உடம்படு மெய் பிறழ்ந்து வருவதற்கு ஒற்றுமை நயம் (*analogy*) முதலாய காரணமும், கோவில் கோயில் முதலாய எடுத்துக்காட்டுக்களும் காட்டலாம். ஆயின், தொடர்களில் முறைபிறழ்வதற்குக் காரணம் காட்ட இயலவில்லை :—

இ + அணி—இய்யணி

இ + இடம் — இய்யிடம்

இ + உலகம் — இய்யுலகம்

இ + யானை — இய்யானை

எனத் தொடர்கள் புணராமல், இவ்வணி இவ்விடம் இவ்வுலகம் இவ்யானை என்றே புணர்ந்து அமைகின்றன. ஆதலின், அடிச்சொல் இகரவுயிராகக் கொள்ள இடமில்லாமல்,

இவ் + அணி — இவ்வணி

இவ் + இடம் — இவ்விடம்

இவ் + உலகம் — இவ்வுலகம்

இவ் + யானை — இவ்யானை

எனக் கொண்டு, இகரவுயிரும் வகர மெய்யும் சேர்ந்ததாகவே கொள்ள வேண்டியுள்ளது.

**3.** இவற்றிலும் வகரம் உடம்படு மெய்யே எனக் கூறி முறை பிறழ்ந்தமைக்குக் காரணம் காட்ட முயலலாம். ஆயினும், அந்த வகரம் உடம்படுமெய் ஆயின்,

இ + வ் + அணி — இவணி
இ + வ் + இடம் — இவிடம்
இ + வ் + உலகம் — இவுலகம்

எனப் புணர்ந்து நிற்கவேண்டுமே அன்றி, வகரம் இரட்டுதற்குக் காரணம் இல்லை.

நல் + அணி — நல்லணி
தம் + இடம் — தம்மிடம்
மண் + உலகம் — மண்ணுலகம

என்பன போல, தனிக்குறில் அடுத்த மெய்யாக நின்ற காரணத்தால்தான் வகரம் இரட்டித்து அமைகின்றது. ஆதலின், அவ் இவ் உவ் என்பவற்றை அடிச்சொற்க ளாகக் கொள்ளலே பொருந்துகின்றது.

4. அன்றியும், வகரம் உடம்படுமெய்யே ஆயின், தெலுங்கு மொழியில் உள்ள வாரு, வீரு, வாடு, வீடு முதலான சுட்டுப் பெயர்களில் (உயிர் இடம் பெயர்தல் என்ற விதிப்படி) முதலெழுத்தாய் நிற்கும் அளவிற்கு அதற்குச் சிறப்புத்தோன்ற இடமில்லை. வகரமெய் இத்தகைய சிறப்பிடம் பெற்று நிற்றலால் அஃது அடிச்சொல்லில் அமைந்ததே எனக் கருதவேண்டி யுள்ளது.

**5.** வகர மெய் அடிச்சொல்லில் அமைந்ததே என்ற கருத்தை மறுப்பவர், அது என்ற சுட்டுப் பெயரைக் காட்டி அச் சொல்லில் வகரம் இல்லையே

எனக் குறை கூறலாம். அவன், அவள், அவர், அவை, இவன், இவள், இவர், இவை என்னும் சொற்களில் வகரம் இருத்தலும், அது, இது என்னும் சொற்களில் வகரம் இல்லாமையும் வெளிப்படை. அதற்குக் காரணம் இன்னதெனை ஆராயும்போது, மற்றொரு சான்றும் உடன் கிடைக்கின்றது.

அடு, இடு, புது முதலான சொற்கள் எங்கும் அஃடு, இஃடு, புஃது முதலான வடிவங்களைப் பெறுதலே இல்லை. ஆயின், அது இது என்பவை வருமொழி முதலாக உயிர் வருமிடத்து அஃது இஃது என்று ஆகின்றன. இவற்றில் உள்ள ஆய்தம் மற்றொரு மெய்யின் திரிபாகக் கொள்ளல் பொருந்தும்.

பல்து — பஃது (பத்து)
கல் தீது — கஃறீது
முள் தீது — முஃடீது

என்பவற்றில் லகர ளகரமாகிய இடையின மெய்கள் ஆய்தமாகத் திரிந்தமை போலவே,

அவ் + து — அஃது

என ஆயிற்று என்று கொள்ள வேண்டும். பிற்காலத்தில் ஒலித்திரிபுகள் பல ஏற்பட ஏற்பட, நுண்ணிய ஆய்தம் மெய்ம் முதல் மொழி வருமிடத்து மறைவதாயிற்று. உயிர் முதல் மொழி வருமிடத்து மட்டும் மறையாமல் நிற்பதாயிற்று.

அது மரம்
அஃது ஆறு

என்னும் வழக்குக்களின் காரணம் இதுவே ஆகும். ஆகவே, அவன் அவள் அவர் அவை என்னும்

சொற்களில் வகர மெய் இருத்தல் போலவே, அஃறிணை ஒருமைச் சுட்டுப் பெயரிலும் 'அவ்து' என இருந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் 'அஃது' 'அது' என்ற திரிபுகள் ஏற்பட்டன எனக் கொள்ளலாம். இந்த உண்மையை விளக்கும் சான்று தமிழ்மொழியில் அமைந்திருக்கின்றது.

6. திராவிட மொழிகளில் பல ஆ ஈ என்னும் நெடில்களையே சுட்டுக்களாய் வழங்குகின்றன. தெலுங்கில் பெரும்பான்மை ஆ ஈ என்பனவும் சிறுபான்மை அவ் இவ் என்பனவும் உள்ளன. மலையாளமும் கன்னடமும் அவ்வாறு வழங்குகின்றன. தமிழில் ஆ ஈ என்பன அருகி வழங்கியிருக்க, அவ் இவ் என்பனவே பயின்று வழங்கியிருக்கின்றன.

இவற்றையெல்லாம் ஆராயின், ஆ ஈ என்பவை அவ் இவ் என்பவற்றின் வேறல்ல என்பது விளங்கும். குறிலும் மெய்யுமாய் நின்ற சொற்களே நீண்டு ஒலித்த போது, தனிநெடிலாய் நின்றிருக்கும். நீண்டு ஒலித்தபோது, மெய்யின் ஒலியளவு மிகையாதல் பற்றி அது கெட்டிருக்கும். ஆதலின், அவ் இவ் என்பன பழைய வடிவங்கள் எனவும், ஆ ஈ என்பன அவற்றின் திரிபுகள் எனவும் கொள்ளலாம். திராவிட மொழிகளுள் பழமைச் சிறப்பு உடையதாய், பழைய சொல் வடிவங்களையும் மொழிப் பண்புகளையும் காத்து வருவதாய் விளங்கும் தமிழ்மொழி சுட்டுக்களை விளக்குமிடத்திலும் பெருந்துணையாக உதவுகின்றது. தமிழ்மொழியில்தான், அவ் இவ் முதலாய சுட்டுக்கள் இன்னும் வாழ்ந்து வருகின்றன.

இந்த ஆராய்ச்சி வினா அடிச்சொல்லிற்கும் பொருந்துவதாகும். எவ் என்பதே வினாவின் அடிச் சொல்லாக இருந்து, ஏ என்றும் யா என்றும் நீண்டு வழங்கி யிருக்கவேண்டும், எவன் எவள் முதலான வினாப் பெயர்கள் அமைந்திருக்கவேண்டும்.

**பெயரடையும் வினையடையும்** (*adjectives and adverbs*)

பெயரடை என்றும் வினையடை என்றும் தனி யினங்களாகத் திராவிட மொழிகளில் வழங்குஞ் சொற்கள் மிகமிகச் சிலவே. பெயரும் வினையுமாகிய சொற்களே உருவம் திரிந்தும் திரியாமலும் இவ்வாறு வழங்குகின்றன.

**பெயரடைகள்** (*Adjectives*)

(1) பெயரடைகள் பெயருக்கு முன் *preceding* நிற்கும் சொல்நிலையால் அடையாகும் தன்மை பெறு கின்றன. அவ்வாறு வரும்போது அவை ஐரோப்பிய மொழிகளிற் போல் திணைபால் வேறுபாடு உணர்த்தும் திரிபு பெறுவதில்லை. எல்லாத் திணைபால்களுக்கும் பொதுவாகவே நிற்கின்றன.

நல்ல மரம், மரங்கள், பையன், மகள், மாந்தர்.

(2) சில பெயர்ச் சொற்கள் சிறிதும் திரியாது பெயரடையாக நிற்க வல்லன.

பொன் வளையல்

(3) வினைச் சொல் பெயரடையாக வரும்போது, அடிச் சொல் மட்டும் நிற்றலும் உண்டு.

கொல் யானை, உண் கலம்

(4) வினைப்பகுதி கால இடைநிலை ஏற்று அ (அல்லது உம்) விகுதி பெற்றுப் பெயரடையாதலே பெரும்பாலும் காணப்படுவது. அதனை இலக்கண நூலார் பெயரெஞ்சு கிளவி அல்லது பெயரெச்சம் (*relative participle or adjectival participle*) என்பர்.[5]

கொன்ற யானை, உண்ணும் கலம்

(5) எண்ணுப் பெயர்கள் பெயரடைகளாக வரும்போது திரிதல் இயல்பு.[6]

ஒன்று > ஒரு

**வினையடைகள் (*Adverbs*)**

(1) பெயர்ச் சொற்கள் வினைக்கு முன் நின்று வினையடையாதல் உண்டு.

நன்று கூறினாய், பெரிது புகழ்ந்தாய்
நன்கு செய்தாய்

(2) ஆக, ஆய், ஆகி முதலான வினைச்சொற்கள் பெயர்ச் சொற்களோடு சேர்ந்து வினையடையாம்.

செம்மையாக, பசுமையாய், நேராகி

இவை இரு சொல் தொடர்ந்த தொடரே யாகும் எனினும் ஒரு சொல்போல் வினையடையாய் நிற்கின்றன.

(3) வினைச்சொல் கால இடைநிலை ஏற்று, செய்து, செய்பு முதலான வாய்பாடுகளாய் நின்று வினையடையாம். இவற்றை வினையெஞ்சு கிளவி அல்லது வினையெச்சம் (*verbal participle or adverbial participle*) என்பர்.[7]

வந்து சென்றான்.

**உரிச் சொல்**

தமிழிலக்கண நூல்களுள் கூறப்படும் நால்வகைச் சொல்லுள் உரிச்சொல் என்பதொன்று. அது பெயரடையாகவும் வினையடையாகவும் வரும்; அவ்வவ் விடங்களுக் கேற்ற திரிபு பெறும், உரிச்சொற்களுள் பெரும்பாலன பண்பு உணர்த்துவன. ஏனைய இசையும் குறிப்பும் உணர்த்துவன.[8]

சாலப் புகழ்ந்தான்—வினையடை
உறு புகழ்—பெயரடை

**இடைச் சொல்**

தமிழிலக்கண நூலார் வகுத்த சொல்வகை நான்கனுள் மூன்றாவது இடைச்சொல். தனித் தியங்கும் ஆற்றலின்றிப் பெயரையும் வினையையும் சார்ந்து வருதலே இச்சொல்லியல்பு.[9]

இவை முதலில் பெயர்ச் சொல்லாகவோ வினைச் சொல்லாகவோ இருந்து, பொருள்வேறுபாடு உணர்த்தப் பயின்று, நாளடைவில் தம் இயல்பான பொருள் மறைந்து இலக்கண வேறுபாடு உணர்த்தும் துணைச் சொற்களாக நின்றவை. கால இடைநிலை, சாரியைகள், விகுதிகள், வேற்றுமை உருபுகள், உவம உருபு

---

8. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி......
(தொல். சொல். உகூகூ)

9. இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே. (ஷை உசகூ)

கள், அசை நிலை, இசை நிறை, உம், ஏ, ஓ, என, என்று; ஆக முதலியன இடைச் சொல் ஆகும்.

என, என்று, மன்ற முதலியவை வினையடைகள். போன்ற, மற்ற முதலானவை பெயரடைகள், இவ்வாறே எல்லாவற்றையும் வேறுபடுத்தி உணரல் வேண்டும்.

# சொற்றொகுதி (Vocabulary)

பாகுபாடு

தமிழ் மொழியில் இலக்கண முறைப்படி (*Morphological classification*) சொற்களைப் பெயர்ச் சொல், வினைச் சொல், இடைச் சொல், உரிச் சொல் என நான்கு வகையாகப் பிரித்தலே யன்றி, சொற் கோவையில் வேறுவகையாகவும் வகைப்படுத்தல் காணப்படுகின்றது (*Etymological classification*).

> "அவற்றுள்
> இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்று
> அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே[1]"

என்னும் தொல்காப்பியம் இதனை விளக்குவதாம்.

இயற்சொல் மக்கள் பேச்சு வழக்கிலுள்ள தமிழ்ச் சொற்கள் என்றும், திரிசொல் பேச்சு வழக்கிறந்து செய்யுளளவில் நின்ற தமிழ்ச் சொற்கள் என்றும், வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்தன வட சொல் என்றும், பிறமொழிச் சொற்கள் திசைச் சொற்கள் என்றும் வகைப்படுத்தலே ஈண்டு நோக்க மாகும்.[2]

1. தொல். சொல். ருகஎ

2. This classification would group all foreign words together, Arabic, Persian, Telugu, Malayalam, Tulu. Kanarese, etc. This classification was ofcourse unscientific, When a certain word that was not found in Tamil literature or used by the Tamil-speaking people, happened to be employed by an auothor perhaps owing to his contact with, say, the Telugu people, it was set down as a Telugu word and a ticaiccol. One cannot deny that there were people at various times conversant with more than one of the Dravidian languages. Still it was not before Dr. Gundert,

" இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே "[3]

என்பது தொல்காப்பியனார் இயற் சொல்லைப் பற்றிக் கொண்ட கருத்தைத் தெளிவாக்குகின்றது. ஆயினும் செந்தமிழ் நிலம் என்பதனை 'வடவேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்' என்று கொள்ளாமல், பாண்டிய நாடு என்று சிலரும் சேர்மு நாடு என்று வேறு சிலரும் மாறுபட்டு இடர்ப்படுவா ராயினர்.

திருவாசகத்தில் அச்சன்[4] அதெந்து[5] என வரும் சொற்கள் திசைச் சொற்களுக்கு எடுத்துக்காட்டுக ளாகும்.

திராவிட மொழிகள் பலவற்றிற்கும் தனித் தனியே நிகண்டு முதலியவை உள்ளன. தமிழ் தெலுங்கு முதலியவை ஓரின மொழிகளே ஆயினும், இவற்றிற்குப் பொதுவான ஒரு சொற்றொகுதி இன்று இருத்தல் முடியாது. பல சொற்களின் அடிச்சொற் கள் பொதுவாகவே அமைந்திருப்பினும் கால வேறு பாட்டாலும் மொழி வேறுபாட்டாலும் சொற்கள் உருவம் திரிந்துள்ளன.

---

Dr. Caldwell and other European scholars pointed it out that it was recognized that Tamil, Telugu, Kanarese and Malayalam were sister-languages and that they all belonged to the same stock that may be termed Dravidian. (Anavaratavinayakam Pillai, Sanskrit Elements in the Vocabularies of the Dravidian Languages, pp. 1, 2).

3. தொல். சொல். ௩௯௮
4. திருவாசகம், திருச்சதகம், 29.
5. திருவாசகம், அருட்பத்து, ஈற்றடி.

**சொற் பெருக்கம்**

இம் மொழிகளுள் தமிழ் மொழியே மிகப்பழங் காலம் முதற்கொண்டே பல நூறாயிரம் சொற்களை உடையதாக விளங்குகின்றது. தமிழ் மொழிக்கே சிறப்பாக உரிய சில சொற்களோடு, தெலுங்கு கன்னடம் முதலிய பிற மொழிகளில் பயிலும் சொற்களும் தமிழகராதிகளில் காணப்படுகின்றன. ஆதலின், திராவிட மூல மொழியிலிருந்த அத்துணைச் சொற்களும் ஏறக்குறையத் தமிழில் அமைந்துள்ளன எனலாம். (வீடு—தமிழ், இல்லு—தெலுங்கு, மனெ—கன்னடம்; வீடு, இல், மனை மூன்றும் தமிழில் உள்ளனவே).

இலக்கியத்தால் பரப்பும் சிறப்பும் பழமையும் உடைய மொழியும் தமிழே. ஆதலால், தொன்று தொட்டே திராவிடச் சொற்களை அழிந்து போகாமல் இலக்கியத்துள் வாழ வைத்து இன்று வரையில் காத்து வரும் பெருமையும் தமிழுக்கே உரியதாகும். சங்க இலக்கியம் எனப்படும் பத்துப் பாட்டிலும் எட்டுத் தொகையிலும் மிகப்பழைய வடிவங்களில் திராவிடச் சொற்கள் காணப்படுகின்றன. அவை பெரும்பாலும் ஓரசை ஈரசைச் சொற்களாகவே உள்ளன. ஒவ்வோர் அடிச் சொல்லும் பெயராகவோ வினையாகவோ திணை பால் எண் இடம் காலங்கட்கேற்பப் பல வடிவு உடையனவாய்ப் பலநூறு சொற்களாய்ப் பெருகுதல் திராவிட மொழியியல்பு. பழைய தமிழ் இலக்கியத்துள் காணப்படும் எல்லாச் சொற்களும் பல வடிவு உடையனவாய்ப் பெருகும் ஆற்றல் பெற்றவை. எனவே ஈராயிரம் ஆண்டுகளா

கவே தமிழ் மொழியின் சொற் கோவை மிக்க விரிவாக இருந்தது எனலாம்.

பிற்காலத்தே மெல்ல மெல்லத் துணைவினைகள் சேர்ந்து சொற்கள் பெருகத் தொடங்கின ; பிறவினை விகுதிகள் முதலியன புணர்ந்து வினைச் சொற்கள் பல அமைந்தன. அடிச்சொற்கள் சிறிது திரிந்து பொருள் வேறுபா டுணர்த்தி வேறு சொற்கள் போன்று சொற்றொகையை மிகுத்தன. அன்றியும் இவற்றோடு நூற்றுக்கு ஒன்றிரண்டாய்க் கலந்து வந்த வடமொழிச் சொற்கள் பலவாய்ப் புகுந்து நிகண்டுகளைப் பெருக்கத் தொடங்கின. தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்னும் மொழிகளில் இன்று நூற்றுக்கு முப்பது சொற்கள் வடசொற்க ளாகவே அமைந்துள்ளன. ஆதலின், அம்மொழிகளெல்லாம் வடமொழியினின்றே பிறந்தன என மயங்கிக் கருதற்கும் இடமுண்டாயிற்று.[6] தமிழ் மொழியில் அத்துணைக் கலப்பு இல்லை எனினும், காலப் போக்கில் கலப்புப் பெருகியே வந்தது எனலாம்.

## வட சொற் கலப்பு

சங்க காலத்தில் நூற்றுக்கு இரண்டு என்னும் அளவில் இருந்த வட சொற்கள், பதினெண் கீழ்க்

6. The Sanskritic element in the vocabularies of the Dravidian languages is so large that it has often been urged with much show of reason by orthodox pandits that, Dravidian languages can claim no originality independent of Sanskrit, that, in other words, Sanskrit is the mother of the South Indian languages. This is only the popular view shared by illiterate people along with the orthodox pandits whose learning knows no analysis nor comparison. (Anavaratavinayakam Pillai, Sanskrit Element in the Vocabularies of the Dravidian Languages, p. 1).

கணக்கிலும் சிலப்பதிகாரம் மணிமேகலையிலும் நூற்றுக்கு நான்கு ஐந்தாகப் பெருகி யுள்ளன. ஆழ்வார் நாயன்மார் காலத்தில் நூற்றுக்குப் பத்துப் பதினைந்தளவும் மிகுந்தன. பிறகு நெடுங்காலம் அந்நிலையே நீடித்தது. மணிப்பிரவாளம் செல்வாக்குப் பெற்ற காலத்திலேயே வடமொழிக் கலப்பு அளவின்றிப் பெருகியது. ஆயினும், நூலாசிரியர்களும் உரையாசிரியர்களும் தமிழிலக்கியம் என்ற நினைவுடன் எழுதப் புகுந்த போதெல்லாம் வடசொற் கலப்பு மிகக் குறைந்தே வந்தது. இன்றும் நாட்டுப் புறங்களில் பேச்சுத் தமிழில் வடசொல் குறைவு. நகரங்களில்தான் நூற்றுக்குப் பத்து அளவில் வடசொல் கலந்து பேசப் படுகின்றது. பத்திரிகைகளில் எழுதப் படும் தமிழிலும் பல சொல் கலப்பு உண்டு. எனினும் தெலுங்கு மலையாள மொழிகளில் உள்ளது போல் கலப்பு அளவின்றி மிகுதற்கு வழியில்லை.

இவ்வாறு கலந்த வட சொற்களைத் தற்சமம் என்றும் தற்பவம் என்றும் இருவகைப் படுத்துவர் பிற்காலத்து இலக்கண நூலார். தமிழ்க்கும் வடமொழிக்கும் பொதுவெழுத்துக்களால் ஆகிய வட சொற்கள் தமிழில் புகின், அவை தற்சமம் எனப்படும் (காரணம், அமலம் முதலியவை). தமிழில் இல்லாத வடமொழிக்கே உரிய எழுத்துக்களை யுடைய வட சொற்கள் தமிழில் வந்து வழங்குவன தற்பவம் எனப் படும் (இடபம், அத்திரம், பத்தி முதலியன). தொல்காப்பியனார் கூறிய விதிப்படி வட சொற்கள் தமிழொலிக் கேற்பத் திரிந்து தமிழில் வழங்குவனவாம்.

"வட சொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே." [7]
"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்." [8]

இங்ஙனம் புகுந்த வடசொற்கள் வேறு பல வகைப் படுவன. அவையாவன :—(i) பிராகிருதம் பேசும் வடநாட்டு மக்களுடன் நேரே பேசிப் பழகிய தமிழ் மக்கள் கடன் வாங்கின சொற்கள்; (ii) வட மொழி கற்ற வடநாட்டறிஞர்களால் தமிழ் நூல்களில் புகுந்த வடசொற்கள்; (iii) வட மொழி கற்ற தமிழறிஞர் தமிழ் நூல்களிற் புகுத்திய வட சொற்கள்; (iv) இரண்டு மொழிகளும் கலந்து புது மொழியாக — மணிப்பிரவாளம் என்னும் மொழியாக ஆதல்வேண்டு மென்னும் ஆர்வத்தால் வலிந்து புகுத்தின வட சொற்கள்.

**பிற மொழிச் சொற்கள்**

ஒரு மொழியில் பிற மொழியின் சொற்கள் புகு தற்குக் காரணம் என்ன? அவ் வம் மொழிக்குரிய மக்கள் கூட்டுறவே ஆகும். மக்கள் கலப்பு எங்கெங்கு எவ்வெத் துறையில் காணப்படுகின்றதோ அங்கங்கு அவ்வத் துறையில் மொழிக் கலப்பும் காணப்படும்.[9]

---

7. தொல். சொல். ௪௦௧
8. தொல். சொல். ௪௦௨
9. Loan-words have been called the milestones of philology, because in a great many instances they permit us to fix approximately the dates of linguistic changes. But they might with just as much right be termed some of the milestones of general history, because they show us the course of civilisation and the wanderings of inventions and institutions, and in many cases give us valuable information as to the inner life of nations when dry annals tell us nothing but the dates of the deaths of kings and bishops. (Jespersen, Growth and Structure of the English Language, p. 29).

வாணிகம் காரணமாகக் கலந்த மக்கள் பேசும் மொழிகளில் வாணிகத் தொடர்பான பொருட் பெயர், அளவுப் பெயர் முதலியன பிற மொழிச் சொற்களாய்க் கலக்கும். அவ்வாறே அரசியல் கலப்பால் அரசியல் சொற்களும், சமயத் துறையில் நேரும் கலப்பால் சமய நூற் சொற்களும் கலத்தல் இயல்பு. தமிழில் கலந்த வட சொற்களில் பெரும்பாலன சமய நூற் சொற்களே ஆகும். தமிழ் மக்கள் பிற நாட்டு மக்களுடனும் பல வேறு துறைகளில் பழகிய காரணத்தால், தமிழில் பிறமொழிச் சொற்களும் கலந்துள்ளன.

எடுத்துக்காட்டாக, முகம்மதியர் ஆட்சிக் காரணத்தாலும் ஆங்கிலேய ஆட்சிக் காரணத்தாலும் தமிழில் புகுந்த சொற்கள் பல. சலாம், சபாஷ் முதலிய சில சொற்கள் இலக்கியத்திலும் (திருப்புகழிலும் குமர குருபரர் பாட்டிலும்) புகுந்தன.

சன்னல், சாவி, கிராம்பு, அலமாரி, பாதிரி முதலியன
போர்த்துக் கீசியச் சொற்கள்.

ஜமீன், சிபாரிசு, சிப்பந்தி, சிபாய், சுமார், பக்கிரி, மேஜை
முதலியன] பாரசீகச் சொற்கள்.

ஆசாமி, இலாகா, கஜானா, நகல், நாசூக், மாமூல், முன்சீப்,
வசூல் முதலியன அரேபியச் சொற்கள்.

அசல், அந்தஸ்து, அபின், உஷார், கிச்சடி, குமஸ்தா,
குல்லா, சமக்காளம், ஜோடு, தபால், தர்பார்,
பஞ்சாயத்து, பங்களா, மாகாணம், தொப்பி,
மாசூல், மசாலே முதலியன இந்துஸ்தானி.

இவை யெல்லாம் பிற மொழியிலிருந்து தமிழில் வந்து வழங்கும் சொற்கள். மொழிகளின் கலப்பால்

இவ்வாறு பிற சொற்கள் புகுதல் இயல்பே. இரு மொழி கலத்தலால் இவை போன்றவைகளே அல்லாமல் வேறு வகைச் சொற்கள் அமைதலும் உண்டு. அவ்வகைச் சொற்களில் பகுதி ஒரு மொழியினதாகவும் மற்ற உறுப்பு மற்றொரு மொழியினதாகவும் இருக்கக் காணலாம். வீட்டுக்காரன் என்னும் சொல்லில் 'கிரு' என்னும் வட சொல்லின் திரிபு ஆன் விகுதி பெற்றுக் 'காரன்' என வருதல் காண்க. பெரும்பாலும் பெயர்ச் சொற்களே பிற மொழியினின்றும் கடன் வாங்கப்படுதல் இயல்பு. வினைச் சொற்களைக் கடன் வாங்கின், இடைநிலை, விகுதி முதலியன தமிழிற்கே உரியவாக விளங்கும்.[10] சபித்தான், துதித்தான் முதலான சொற்களைக் காண்க. தனவந்தர் என்னும் சொல்லின் ஒற்றுமைப்போலியால் (*analogy*) செல்வந்தர் என்ற சொல் தவறாக அமைந்ததும் இங்குக் கருதத் தக்கதே. இவைபோல்வன கலவையினம் (*hybrids*) எனப்படும்.

இங்ஙனம் சொற் கோவையிலும் சொல்லமைப்பிலும் பிற மொழிகளால் நேரும் மாறுதல்கள் பல

10. There are degrees of kind as well as of extent in the process of borrowing. What is most easily taken out of the stores of one language to be added to those of another is the names and epithets of things, nouns and adjectives; verbs, much less easily; particles, hardly at all; apparatus of derivation, prefixes and suffixes, very sparingly; and apparatus of inflexion, endings of declension and conjugation, least of all. Even English is nearly unmixed in its grammar; its articulating parts, the elements that bind ideas together and show their relations that make sentences, are almost exclusively of Anglo-Saxon origin. (Whitney, The Life and Growth of Language, p. 119.)

உண்டு. அவற்ருல் ஒரு மொழிக்கு ஆக்கமும் உண்டு; கேடும் உண்டு. கருத்து வளர்ச்சி ஒன்றையே நாடுவார் மொழிக் கலப்பால் ஆக்கமே உண்டென்பர். மொழித் தூய்மை ஒன்றையே நாடுவார் கேடே உண்டென்பர். ஒரு மொழிக்குக் கருத்து வளர்ச்சியும் தூய்மையும் — இரண்டும் இன்றியமையாதன. பிற மொழிச் சொற்களை அளவின்றிப் புகுத்தல் தவறு. இயற்கைக் காரணங்களால் வந்து இயல்பாகப் புகுவனவற்றை மட்டும் கொள்ளலாம். அளவின்றிப் புகுத்திஞல், மொழியின் உருவமே மாறிப் போம். பிற மொழி என்று கருதத் தக்கவாறு ஒரு மொழியை மாற்றி விடுதல் நாகரிகமாகாது. ஆதலின் இன்றியமையாச் சொற்களை மட்டும் ஏற்றுக்கொள்ளலாம்.

பிற மொழிச் சொற்கள் அளவின்றிப் புகின், ஒரு மொழியின் உருவம் திரியுமென்று மேலே கண்டோம். உருவம் திரியுமே அன்றி மொழியின் அடிப்படை மாற்றமுருது. ஒரு மொழியின் அடிப்படை — உயிர் — சொல்லமைப்பிலும் (*morphology*) தொடரமைப்பிலும் (*syntax*) உள்ளதே யன்றிச் சொற் கோவையில் இல்லை. சொற் கோவை ஒரு மொழியின் உடல் எனலாம். சொல்தொடர் அமைப்பே அதன் உயிர். ஒருவன் ஆடை மாற்றுதல் போல், ஒரு மொழி தன் சொற்களை மாற்றிக்கொண் டிருக்கலாம்.[11] ஆயினும்

11. நடு அமெரிக்காவில் ஒரு கூட்டத்தார் பேசும் சொற்களை ஆராய்ந்து குறித்துக் கொண்ட அறிஞர் பத்து ஆண்டுகள் கழித்துச் சென்றபோது அதே கூட்டத்தாரின் சொற்கள் உருவம் திரிந்து வேறு மொழிபோல் மாறியிருக்கக் கண்டாராம். (**Max Muller, The Science of Language, p. 59**). நாகரிகம் குறைந்த மக்கள் பேசும் மொழிகள் அடிக்கடி மாறுதற்குக் காரணம் சொற்கோவையின் திரிபே யாகும்; சொல்லமைப்பும் தொடரமைப்பும் திரியும் திரிபன்று.

அதன் அடிப்படை மாறுதல் அரிது. வட நாட்டில் வழங்கும் இந்துஸ்தானி மொழியில் சமஸ்கிருதச் சொற்களும் பாரசீகச் சொற்களுமே காணப்படினும், அதன் அமைப்பு இந்திய நாட்டு மொழியமைப்பே என்று வெண்ட்ரீஸ் (*Vendryes*) முதலான மொழி நூலார் கருதுவர். மலையாளம் இன்றுள்ளவாறு வட சொற்களையே மிகுதியாக ஏற்று மாறினும், திராவிட அமைப்பே உடையதாக விளங்குதல் இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

**வடமொழியில் திராவிடச் சொற்கள்.**

தமிழ்ச் சொற்களாக உள்ள சில சொற்களையும் வடசொற்கள் எனக் கூறுவதில் இந் நாட்டறிஞர்க்குப் பெரியதோர் ஆர்வம் இருந்து வந்தது. ஆயினும், அவர்களிடையே சிலர் அவ்வப்போது அவற்றைத் தமிழ்ச் சொற்கள் என்றே உறுதிப்படுத்தி வந்துள்ளனர். எடுத்துக்காட்டாகக் கூறத்தக்கவர் நச்சினார்க்கினியர். அவர், உலகம், காலம் என்னும் சொற்களைப் பிறர் வடசொல்லெனக் கூறினும், தொல்காப்பியனார் கூறியிருத்தலின் அவை தமிழ்ச் சொற்களே என விளக்கினர்.[12]

சென்ற நூற்றாண்டில் முதன் முதலாக டாக்டர் குண்டர்ட் என்பவர் "வட மொழியில் திராவிடக் கூறுகள்" (*Dravidian Elements in Sanskrit*) என்ற ஆராய்ச்சிக் கட்டுரையை கி. பி. 1869-ல் ஜெர்மன் கீழ்நாட்டுக் கலைக்கழகத்தின் பத்திரிகையில் (*The Journal of the German Oriental Society*) வெளியிட்

12. தொல். சொல். ருள

டார். பின்னர், டாக்டர் கிட்டல் கி. பி. 1872-ல் "வட மொழி அகராதிகளில் திராவிடச் சொற்கள்" என்ற கட்டுரை வரைந்தார். அவர் தாம் எழுதிய கன்னட அகராதியில் வடமொழி கடன் வாங்கின சொற்கள் என நானூற்றிருபது சொற்களை எடுத்து வெளியிட்டார்.[13] அவருக்குப் பின்னர், அவ்வாராய்ச்சியில் ஈடு பட்டவர், ஒப்பிலக்கணம் எழுதிய டாக்டர் கால்டு வெலே ஆவார்.[14]

கால்டுவெல் கருத்துப்படி, ஆங்கில மொழியில் எவ்வளவு பிரிட்டிஷ் சொற்கள் உள்ளனவோ, அவ்வளவு திராவிடச் சொற்கள் வடமொழியில் உள்ளன. ஆனால், திராவிட மொழிகட்கும் வடமொழிக்கும் பொதுவாகத் தோன்றும் எச்சொல்லையும் வட மொழிக்கே உரியது எனவும், பிறமொழிகள் கடன் வாங்கின எனவும் கருதுவது மரபாகி விட்டது. வட சொற்கள் பல திராவிட மொழிகளில் கலந்து பயின் றுள்ளன என்பது உண்மையே. அவற்றைத் தமிழ்ச் சொற்கள் என்று தமிழிலக்கண நூலாரோ நிகண்டு நூலாரோ கூறுவதில்லை; தெலுங்கு மொழியினரும் பிறரும் அவ்வாறு கூறுவது மில்லை. திராவிட மொழியினர் அவற்றை வடசொறகள் என்றே வகுத் துத் தற்சமம் தற்பவம் என்ற பாகுபாடும் செய்து விளக்குவர். சில சொற்கள் வட மொழிக்கு உரியனவா

13. கிரையர்சனும் திராவிட மொழிச் சொற்கள் பல வட மொழியில் புகுந்துள்ளன என்பர். (Grierson, Linguistic, Survey, Vol. IV, pp, 278, 279.)

14. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, pp. 565, 567,

தென்மொழிக்கு உரியனவா என்பதில் கருத்து வேறுபாடும் உண்டு. எனினும், வட மொழியிலிருந்து கடன் வாங்கின சொற்களை வட சொற்கள் என்றே இலக்கணம் வகுத்துக் கடன் வாங்கின உண்மையை உடன்பட்டுரைக்கும் வழக்கம் திராவிட மொழியினரிடம் காணப்படுகின்றது. இவ்வழக்கம் வடநூலாரிடம் இல்லை. எச் சொல்லையும் வட மொழி இலக்கிய இலக்கணங்களில் காணப்படுகின்ற ஒரு காரணமே கொண்டு வட மொழிக்கே உரியதென வற்புறுத்துதலே அவர்கள் கொள்கை. அக்கொள்கை பொருந்தாது. அதற்கு மாருக, திராவிட மொழிகளிட மிருந்து வடமொழி கடன் பெற்ற சொற்கள் பல உண்டு;[15] இக்கொள்கையை வலியுறுத்தக் கால்டுவெல் கூறும் காரணங்கள் வருமாறு:—

(1) வடமொழியில் ஒரு சொல் பகுதியுமின்றி, உடன் பிறந்த இனச் சொற்களு மின்றித் தனித்துக் காணப்படுவதாயின், அதே சொல் திராவிட மொழிகளில் பல வடிவங்களாகவும் இனச் சொற்களோடு கூடியதாகவும் தெளிந்த பகுதியுடையதாகவும் காணப்படின், அது வடமொழி கடன் வாங்கின சொல்லென்றே துணிதல் வேண்டும்.

(2) ஒரு சொல் வட மொழியில் அதே பொருளுணர்த்தும் பல சொற்களுக்கிடையே தானும் ஒன்ருய்க்

15. ஆரியர் இந்தியாவில் புகுவதன் முன்பே இரான் நாட்டில் திராவிடர்களைக் கண்ட காலத்திலேயே அவர்களுடன் பழகலாயினர். ஆதலின், ஆரிய மொழிகளில் திராவிடக் கூறுகள் மிகப் பழங்காலத்திலேயே புகுந்துள்ளன என்பர் (K. Ramakrishnayya, Studies in Dravidian Philology, p. 24.)

கிடக்க, திராவிட மொழிகளில் அப்பொருள் உணர்த்த வேறு சொல் இன்றித் தான் ஒன்றேயாய்க் காணப் படின், அதுவும் திராவிட மொழிக்குரிய சொல் லென்றே துணியத்தகும்.

(3) ஒரு சொல் திராவிட மொழிகளில் ஒவ் வொன்றிலும் காணப்பட்டு, இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் வட மொழி தவிர மற்ற மொழிகளில் இல்லாததாயின், அது வடமொழிக்குரிய சொல் லென்று கூறல் பொருந்தாது.

(4) ஒரு சொல்லின் பகுதிபற்றி வட மொழி யாளர் கூறும் பொருளும் இயல்பும் பொருந்தாமலும் வேடிக்கையாகவும் இருக்க, அதன் பிறப்பும் ஏனைச் சொற்களுடன் உள்ள தொடர்பும் விளக்கும் வகையில் தெளிந்த அடிச்சொல் திராவிட மொழிகளில் காணப் படின், அதுவும் வடமொழிக் குரியதென்று கொள்ளு தல் கூடாது.

(5) திராவிட மொழிகளில் ஒரு சொல் உணர்த் தும் பொருள் நேரிதாகவும் ஆகுபெய ரல்லாததாகவும் அணியில்லாததாகவும் நிற்க, வடமொழியில் அச் சொல் உருவகமாகவும் நேர்பொருளில்லாததாகவும் நின்றால், அதுவும் திராவிடச் சொல்லே எனக் கொள்ளல் வேண்டும்

(6) வடமொழியை மிகச் சிறப்பாகப் போற்றும் தமிழறிஞரும் தெலுங்கறிஞருமே ஒரு சொல்லைத் தமி ழென்றோ தெலுங்கென்றோ குறிப்பராயின், அதனை யும் திராவிடச் சொல்லென்றே கொள்ளல் வேண்டும் என்பர்.

இக்காரணங்களுள் ஒன்ருே பலவோ இருப்பின், எச்சொல்லாயினும் திராவிட மொழிகளிட மிருந்து வடமொழியிற் கலந்த சொல்லென்று துணிதல் தகும்.

**எடுத்துக்காட்டான சொற்கள்:**

**அடவி:** பொருள் ‘காடு’ என்பது. வடநூலார் ‘அட்’ என்பது பகுதி என்றும், அதன் பொருள் ‘திரி’ என்பது என்றும், மக்களும் விலங்குகளும் திரிதற் குரியதாகலின், அது காட்டை உணர்த்திற்று என்றும் கூறுவர். திராவிடமொழிகளில் ‘அடு’ என்னும் பகுதி நெருங்கு, சேர் என்னும் பொருள் தந்து அடர், அடர்த்தி முதலான சொற்களில் உள்ள பொருளோடு இயைந்து, மரங்கள் அடர்ந்த காட்டை ‘அடவி’ என்று உணர்த்தல் பொருந்துகின்றது. ‘வி’ என்னும் விகுதியும் திராவிட மொழிக்கு இயல்பானது என்பர் கால்டுவெல்.

**அணி, ஆணி**— இச்சொற்கள் வடமொழியில் வண்டியின் அச்சாணியைக் குறிக்கும். வடமொழியறிஞர்கள் அண் என்பதனைப் பகுதி என்பர். அப்பகுதிக்கு ஒலித்தல் என்பது பொருளாகும். திராவிட மொழிகளில் அண் என்பது, சேர், தொடு, கட்டு, அருகே, மேல், அணிந்துகொள் (அணை, அணி, அனுகு, அணவு) என்னும் பொருளில் வழங்குகின் றது. எனவே ஆணியைத் திராவிடச் சொல்லாகக் கொள்வர் கால்டுவெல்.

**கடு, கடுகு:**— வடமொழியில் காரத்தையும் கொடுமையையும் குறிப்பனவாம். அங்குக் ‘கட்’ என்னும் பகுதி ‘போ’ என்னும் பொருளது. தமிழில் கடு என் பது மிகுதி முதலான பலபொருள் உடையது. வட

மொழி அறிஞர் சிலர் 'கிரிட்' பகுதி என்றும் 'வெட்டு' என்பது பொருள் என்றும் கருதுவர். எனினும் அதுவும் பொருந்தாததே. திராவிடமொழிகளில் 'கடு' என்னும் பகுதியிலிருந்து பிறந்த சொற்கள் மிகப்பலவாகவும் நேரிய பொருளுடையன வாகவும் இருத்தலாலும், வடமொழியில் இதற்கு இனச்சொல் இன்மையாலும் இதனைத் திராவிடச் சொல்லென்றே கொள்ளலாம். (கடுகு, கடி, கடுகடுத்தல், கடம், கடறு என்னும் தமிழ்ச் சொற்களையும் நோக்குக).

குடி:— வடமொழியில் வீடு என்னும் பொருள் தருகின்றது. குடிர, குடீர, குடேர, குடும்ப என்பவை இனச் சொற்கள். 'குட்' என்பது கோணியிருத்தல் என்னும் பொருள் தரும் பகுதியாம். இப்பகுதியிலிருந்தே குடம் என்னும் வடசொல்லும் பிறந்ததாம். தமிழில் குடி என்பது ஒன்றாய்வாழ்தல், வீட்டில் வாழ்தல், ஒன்றாய் வாழும் மக்கள் என்னும் பொருள் தருகின்றது. கூடு என்பதன் அடிச்சொல் 'குடு' என்று கொள்ளின் இப்பொருள் இயல்பாகின்றது. குடில், குடிசை என்பன அதிலிருந்து பிறந்தவை. தெலுங்கிலும் கன்னடத்திலும் 'குடி' (*gudi*) கோயிலைக் குறிக்கும். கன்னடத்தில் 'குடசலு' குடிசையைக்குறிக்கும். பின்னிஷ் முதலான சித்திய மொழிகளிலும் இப்பகுதி இப்பொருளில் உள்ளது. ஆதலின் இது திராவிடச் சொல்லேயாம்.

நீர்:— வடமொழியில் நீரைக் குறிப்பது. வழிகாட்டு என்னும் பொருளுடைய 'நீ' என்பது பகுதியாம். நாரா என்பது பகுதி என்றும், அது 'ஸ்நா' (குளி) என்பதிலிருந்து எழுந்த தென்றும் கூறுவாரும்

உளர். இச்சொல் வடமொழியில் அருகி வழங்குவதே யாம். ஜல என்பதே பயின்று வழங்கும் சொல். அதுவும் வடமொழிக்கு முன் வட நாட்டில் வழங்கியிருந்த பழைய மொழியிலிருந்து புகுந்தது என்பர். ஆனால் நீர் என்பது தமிழ் முதலான திராவிட மொழிகளில் பயின்று வழங்கும் சொல்லாகும். அப்பொருளில் வேறு சொல் பயின்று வழங்குதல் இல்லை. (தெலுங்கு: நீரு > நீர்லு. கோண்டு: ஏர் > நீர். பிராகுவி: தீர் > நீர். மலையாளம்: வெள்ளம் - ஆகு பெயர்; மலையாளத்தில் 'நீர்' என்பதும் உண்டு, தமிழில் பேச்சு மொழியில் தண்ணி < தண் + நீர். 'தண்' பொருளிழந்தது. நீந்து என்பதும் நீர் என்னும் சொல்லினடியாகப் பிறந்ததே.) ஆதலின் இதுவும் திராவிடச் சொல்லே.

மீன்:— வடமொழியில் மீனைக் குறிப்பது. மீ (துன்புறுத்து) என்னும் அடிச்சொல் உடையது. திராவிட மொழிகளில் மீன் என்பது அப்பொருளில் வழங்கும் ஒரே சொல்லாகவும் தமிழ் முதலான எல்லா மொழிகளிலும் வழங்குவதாகவும் உள்ளது. ராஜமஹால் மொழியிலும் மீன் உள்ளது. கோந்து மொழியில் 'மீந்த்' என உள்ளது தவிர, வடமொழியில் கூறப்படும் அடிச்சொல் பொருந்தாததாய்த் தோன்ற, திராவிட அடிச்சொல்லோ மிக்க பொருத்தமுடையதாய் விளங்குகின்றது. 'மின்' என்னும் திராவிட அடிச்சொல் முதல் நீண்டு மீன் என்றாயிற்று. இதே அடிச்சொல் 'விண்மீன்' என்ற தொடரில் நட்சத்திரத்தைக் குறித்தலும் காணத்தகும். மின்மினி என்ற உயிர்வகையும் உள்ளது. நீர்நிலைகளில் அலைகளுக் கிடையிடையே மின்னி ஒளிரும் உயிர்களை இப்பெயரால் குறித்தலினும் இயற்கையானது வேறென்ன உளது?

## ௧௭. சொல்லும் பொருளும்

ஒரு சொல்லின் பொருள் தொடக்கத்தில் ஒன்றாக இருந்திருக்கும்; இன்று ஒரு வகையாக இருக்கும். ஒரு சொல்லுக்குத் தொடக்கத்தில் அமைந்த பொருளே இன்று வரை வழங்க வேண்டும் என்னும் நிலை எந்த மொழியிலும் இல்லை. 'பொன்' என்ற சொல் தொடக்கத்தில் உலோகம் என்னும் பொருளைக் குறிப்பதாக இருந்தது; இரும்பு, செம்பு, வெள்ளி முதலான எந்த உலோகத்தையும் பொன் என்று குறிக்கும் வழக்கம் இருந்தது, ஆனால் இன்று அந்தச் சொல் உலோகங்களுக்குள் உயர்ந்த ஒன்றை மட்டும் குறிக்கின்றது. 'நெய்' என்ற சொல்லும் இவ்வாறே தொடக்கத்தில் நீர்ப் பொருளு மல்லாமல் கடினப் பொருளு மல்லாமல் பசையானவற்றைக் குறிக்க வழங்கியது. இன்று அது பாலிலிருந்து எடுபடும் நெய்யை மட்டும் குறிக்க வழங்குகின்றது; ஆதலின், சொல் முதல் முதலில் உணர்த்திய பொருள் வேறாகவும் இன்று உணர்த்தும் பொருள் வேறாகவும் இருத்தல் இயல்பே.

ஒவ்வொரு சொல்லும் தொடக்கத்தில் என்ன பொருள் உணர்த்தியது என்பதை ஆராய்ந்து அறிதல் எளிதன்று; சில சொற்களின் தொடக்கப் பொருள் விளங்காமலே நிற்கும். இல், முன், வழி, தலை முதலிய சொற்களின் தொடக்கப் பொருள்கள் அறிய முடியாதனவாக உள்ளன. மற்றச் சொற்களின் தொடக்கப் பொருள்கள் இன்ன என்று ஒருவாறு அறியலாம். இதுதான் சொற்பிறப்பு ஆராய்ச்சி (*Etymology*) எனப்படுவது.

சொற்பிறப்புப் பற்றிய ஆராய்ச்சி எல்லா நாடுகளிலும் சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் இந் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பெருகியிருந்தது. வர வர அந்த ஆராய்ச்சியால் பயனில்லை என்பதை மொழிநூலார் உணர்ந்துவிட்டனர். இன்று இத் துறை அறிஞரால் போற்றப்படுவதில்லை. சொல் இன்று உணர்த்தும் பொருள் என்ன என்பதையும் அவ்வாறு உணர்த்தும் முறையில் ஏற்படும் மாறுதல்கள் என்ன என்பதையும் அறிஞருலகம் ஆராய்ந்து வருகின்றது. இது சொற் பொருள் ஆராய்ச்சி (*Semantics*) எனப்படுவதாகும்.

சொற்பிறப்பு ஆராய்ச்சி, பொருள்களைப் பற்றிய உண்மைகளையும் அறிவிப்பதில்லை; இன்று உணர்த்தும் பொருளையும் தெளிவாக்குவதில்லை; அது சொல்லின் இன்றைய உண்மை நிலையை விளக்குவதில்லை: சொல் தொடக்கத்தில் இவ்வாறு இருந்திருக்கக் கூடும் என்பதையே அறிவிக்கின்றது என அறிஞர் ஜெஸ்பெர்சன் குறைகூறுகின்றார்.[1] சில தலைப்புக்களைப் பற்றிக் கட்டுரை எழுதவோ சொற்பொழிவு ஆற்றவோ தொடங்குபவர், அந்தத் தலைப்புச் சொல்லைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டு மயங்குவதையும் அவர் கடிகின்றார்.[2]

1 What is the object of etymological science? "To determine the true signification of a word," answers one of the masters of etymological research...But surely in most cases that can be achieved without the help of etymology. Jespersen, Language, p. 316.

சொல்லைப் பற்றி அறிதலை விட அஃது உணர்த்தும் பொருளைப் பற்றி அறிதலே சிறந்தது; பயனுள்ளது. அவ்வறிவின் துணை இல்லாதபோது சொற்பிறப்பு ஆராய்ச்சி (*Etymology*) தவறான வழியில் செலுத்தும் என அறிஞர் பிரீல் அறிவுறுத்துகின்றார்.[3] இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டவர் ஊக்கமும் இன்பமும் பெறுவாராயினும், மொழியின் உண்மைப் பயனை அடைதற்கு உதவாது என்றும், இதன்கண் ஆழ்ந்துவிடின், அப்பயனை அடைதற்குத் தடையாய் முடியும் என்றும் விட்னே விளக்குகின்றார்.[4]

இவ்வாராய்ச்சி ஒருவகைத் தந்திரமான வித்தை என்றும், உண்மையான மொழியியல் ஆராய்ச்சி இதற்கு நேர் மாறானது என்றும், இது வெளித் தோற்றத்தைக் கண்டும் பொய்யாக உணர்ந்தும் தெளிவற்ற முறையில் எண்ணியும் கூறப்படுவது என்றும் அபெல் ஹாவெலக் என்னும் அறிஞர் கடிகின்றார்.[5]

சொற்பிறப்பை ஆராய்வதால், பொருள்களும் தொழில்களும் எவ்வெவ்வாறு சொற்களால் குறிக்கப்பட்டன என்ற தொடக்க நிலையை அறியலாம். ஆயின் அவ்வாறு சொற்களைக் குறியீடுகளாக வழங்கிய முறை எவ்வளவு குறைபாடு உடையது என்பதே அதனல்

---

3. Etymology might in such a case become the most misleading of guide, were not knowledge of things added to knowledge of words.—Breal, Semantics, p. 150.

4. Whitney, Language and the Study of Language, p 132.

5. Abel Hovelacque, The Science of Language, p.13.

விளக்கமாகும். ஒரு சொல் தொடக்கத்தில் உணர்த்திய பொருளுணர்ச்சிக்கும் உணர்த்தப் பட்ட பொருளுக்கும் இயைபு என்ன? 'நாய்' என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். அது 'நா' (நாக்கு) என்பதன் அடியாகப் பிறந்தது. நாக்குப் பெற்ற காரணத்தால் நாய் எனப் பெயர் பெற்றது எனல் வேண்டும். எனின் நாக்குப் பெற்றுள்ள மற்ற விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் அப்பெயர் வழங்கவில்லையே! ஓடி அலையும் போது நாக்கைத் தொங்கவிட்டிருத்தலின், அப்பெயர் பெற்றது எனலாம். அவ்வாறாயின், 'நாய் என்னும் சொல்லில் இந்த நிலை குறிக்கப் படவில்லை என்ற தடை உள்ளது. ஆதலின், முற்ற உணர்த்தாமை பொருந்த உணர்த்தாமை என்ற இருவகைக் குறைபாடுகள் இருக்கக் காண்கின்றோம்.[6] 'பாம்பு' என்ற சொல் "பா" என்பதன் அடியாகப் பிறந்தது என்பர். உடல் சுருங்கி யிருந்து பரத்தலை உடைய மற்றவற்றை உணர்த்தாமையும், பாம்பின் மற்றத் தன்மைகளை உணர்த்தாமையும் ஆகிய குறைபாடுகள் உள்ளன. ஆதலின், 'மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்று' என்றார் தொல்காப்பியனாரும்.[7]

சொல் தொடக்கத்தில் பொருளுணர்த்திய காரணத்தை இவ்வாறே ஆராய்ந்துகொண்டு செல்பவர் உணரக் கூடிய உண்மை ஒன்றே. அஃதாவது, சொல் ஓர் அறிகுறி; அது பொருளின் இயல்பை முற்றவும் உணர்த்தாது; பொருந்தவும் உணர்த்தாது; வழக்கு என்னும் ஒன்று நோக்கியே சொல் உணர்த்தும்

6. Breal, Semantics, p.171.
7. தொல். சொல். ௩௯௪

பொருள் வரையறுக்கப் படும்; ஆகவே பொருளுணர்ச்சியை ஆராய்வோர், சொல்லின் பிறப்பை நாட வேண்டுவதில்லை; சொல் வழங்கும் வழக்கையே நாடவேண்டும் என்பதாகும்.

இதனால் சொல் தொடக்கத்தில் தன் பொருளை உணர்த்தும் ஆற்றலின்றி இருந்தது என்று கொள்ளலாகாது. பொருளை முற்றவும் பொருந்தவும் உணர்த்தவில்லை என்பதே அன்றி, பொருளைச் சிறிதளவும் உணர்த்தவில்லை என்பது கருத்தன்று. முதல் முதலில் நாயைக் கண்ட ஒருவனது மனத்தை அதன் நாக்கு மட்டுமே கவர்ந்திருக்கும். அந்த நாக்கைத் தொங்கவிட்டு அலையும் நிலையே அதன் சிறப்பியல்பாக அவன் உணர்ந்து அதற்கு 'நாய்' என்று குறியிட்டிருப்பான். பாம்பைக் கண்டு குறியிட்டவன் மனத்திலும் அதன் சிறப்பியல்பாகப் பரத்தல்தன்மை பதிந்திருக்கும். ஆதலின், அந்தந்தச் சிறப்பியல்பு மட்டுமே நினைவில் கொண்டு பெயர் கொடுத்திருக்கக் கூடும். இவ்வாறு அந்தக் காரணங்களை ஒருவாறு அறிதலே சொற்பிறப்பு ஆராய்ச்சியின் பயன்.[8] அவற்றை அறிவதால், சொல்லை ஆளுந்திறனோ, மொழியின் உண்மை இயல்போ தெளிவாவதில்லை. அதுபற்றியே, இந்த ஆராய்ச்சி சிறப்புடையதன்று என்று அறிஞர் எடுத்துரைப்பாராயினர்.

அதற்கு மாறாக, சொல்லின் பிறப்பிற்கும் இன்றுள்ள பொருளுணர்ச்சிக்கும் தொடர்பு குறையக் குறைய, அச்சொல் மிக்க பயனுள்ளதாக மாறுகின்றது என்பர் அறிஞர் பிரீல். சொல் வடிவு திரிதலால்,

அதன் தொடக்கப் பொருள் மறக்கப்படுகின்றது என்றும், அதனால் மொழிவளர்ச்சிக்கு உள்ள தடை நீங்கி நன்மையே விளைகின்றது என்றும் அவர் கூறுகின்றார்.[9]

ஆதலின், சொற்பிறப்பு ஆராய்ச்சி (*Etymology*) மொழியியலுக்குத் துணைபுரியாது என்றும், சொற்பொருள் ஆராய்ச்சியே (*Semantics*) துணையாவது என்றும் அறியலாம். சொற்பொருளை ஆராயும் போது, சொல் உணர்த்தும் பொருள் எவ்வெவ்வாறு வேறுபட்டுச் செல்கின்றது என்று காணல் வேண்டும்.

சொற்கள் குறிக்கும் பொருளுணர்ச்சி என்றும் ஒரே நிலையாக இராமல், காலப்போக்கில் மாறுவதற்குக் காரணங்கள் என்ன? 'பொன்'னும் 'நெய்'யும் நாற்றமும் பிறசொற்களும் அன்று ஒரு பொருளும் இன்று ஒரு பொருளும் உணர்த்தக் காரணம் என்ன? பின்வரும் காரணங்களை டக்கர் என்னும் அறிஞர் தொகுத்துக் கூறுகின்றார்:—[10]

1. ஒரு சொல் உணர்த்தும் பொருள் விரிவானதாகவும் பலவற்றைத் தன்னுட் கொண்டதாகவும் இருத்தல்; அதனால் அது மெல்ல நெகிழ்ந்து பொருள் வேறுபட இடந்தரல்.

2. ஒரு சொல்லால் உணர்த்தப்படும் பொருளின் பல பண்புகளில், அல்லது, பல பகுதிகளில் ஒன்று சிறந்து விளங்குவதாக இருத்தல்; அதனால், அச்சொல் மெல்ல மெல்ல அந்தச் சிறப்புப் பண்பையோ பகுதியையோ உணர்த்தத் தொடங்கல்.

3. ஒரு சொல் உணர்த்தும் பொருளுக்கு அடுத்த நிலையில் மற்றொரு பொருளும் மறைந்திருத்தல்; அதனால் இரண்டாம் பொருளைச் சுட்டும் வகையிலோ அல்லது இரண்டு பொருளையும் தழுவும் வகையிலோ சொல் இடந்தரல்.

4. ஒரு பொருளை வற்புறுத்திக் கூறும் பொருட்டாவது தெளிவுறுத்திக் கூறும் பொருட்டாவது உருவகப்படுத்தி அதற்கேற்ற சொல்லை ஆளுதல்; அதனால் உருவகச் சொல்லின் பொருள் திரிதல்.

5. உணர்ச்சி மிகுதியாகக் கூறும்போது ஒரு சொல்லின் பொருளை வற்புறுத்தல்; அதனால் உண்மைப் பொருள் மறைந்து அதனினும் விரிவான அல்லது குறுகிய மற்றொரு பொருள் உணர்த்தப்படல்.

6. எள்ளல் முதலிய குறிப்புக்கள் காரணமாகவோ, இடக்கரடக்கல் மங்கலம் முதலிய வழக்குக் காரணமாகவோ ஒரு சொல்லின் இடத்தில் வேறு சொல் புகுதல்; அதனால் அச்சொல் தன் பொருளிழந்து மாறுதல்.

7. அறியாமை காரணமாகவோ தெளியாமை காரணமாகவோ ஒரு சொல்லைத் தவறான பொருளில் வழங்குதல்; அதனால் அச்சொல் தன் உண்மைப் பொருளை உணர்த்தத் தவறல்.

இவற்றோடு சேர்த்துத் தொகுக்கத் தக்க காரணம் வேறு ஒன்று உள்ளது. அஃதாவது:—

8. மக்களின் வாழ்க்கையில் புதியன புகுதலால் மாறுதல் ஏற்பட ஏற்பட, புதிய கருத்துக்கள் புகப்

புக, புதிய கருவிகள் பரவப்பரவ, அவற்றினைக் குறிக்கப் புதிய சொற்கள் அம்மொழியிலேயே ஏற்படுதல்; அதனால், பழைய சொல்லுலகத்தில் மாறுதல் ஏற்படல்.[11]

இவ்வாறு புதியனவாக அமைந்த சொற்கள் பிற மொழிச் சொற்களாயின், பழஞ் சொற்கள் மாறுதலடையாமல் நிற்கும். சைகில், மோட்டார் முதலான பிறமொழிச் சொற்களால் தமிழ்ச் சொற்கள் மாறாமை காண்க. ஆயின், புதிய பொருள்களுக்குத் தமிழிலேயே பெயரிடும்போது, மாறுதல் ஏற்படுகின்றது. 'மிளகு' என்பது பழைய பொருளைக் குறிக்க, 'மிளகாய்' என்பது வேறொரு புதிய பொருளைக் குறிக்கலாயிற்று. 'புகையிலை' 'புகைவண்டி' 'மண்ணெண்ணெய்' முதலான சொற்களும் இவ்வாறு புதியனவாய் அமைந்தனவே ஆகும்.

சொல் பொருளுணர்த்தும் முறையை (*Semantics*) ஆராய்வதால் விளங்கும் உண்மைகள் பல. அவை உலகிலுள்ள எல்லா மொழிகளுக்கும் பொதுவாக விளங்குகின்றன. பொருளுணரும் மக்கள் மனம் பொதுத்தன்மை பெற்றிருத்தலே இவ்வுண்மைகள் பொதுவாக இருத்தற்குக் காரணமாகும்.[12]

---

11. Whitney, Language and Study of Language, p. 121.

12. To pass now from the outer form of words to their inner meaning, there is again so much that it is common to all mankind in mental basis, in psychological structure, that we cannot be surprised to find a number of correspondencies between languages widely apart...There are universal laws of thought which are reflected in the laws of change of meaning (Semantic laws) even if the Science of Meaning

## 1. ஒரு சொல்லுக்கு ஒரு பொருள்

பேச்சுமொழியில் ஒரு சொல் ஒரு பொருளே உணர்த்தும். இருபொருளுணர்த்திவரின் அவற்றுள் ஒன்று நிற்க, மற்றொன்று அழியும்; இன்றேல் அச்சொல் திரிபுற்று, அல்லது, அடையடுத்து இரண்டாம் பொருளை உணர்த்தும்.

கவலை' என்ற சொல் இரண்டாகப் பிரியும் வழியிடத்தையும் மனக்கவலையையும் உணர்த்தி வந்தது. இன்று, மனக்கவலையை மட்டும் உணர்த்துகின்றது. மற்றொரு பொருள் அழிந்தது.

'போர்' என்ற சொல் வைக்கோல்போரையும் படைவகுத்து நிகழ்த்தும் போரையும் உணர்த்துவது. பண்டைக்காலத்தில் முன்னதை உணர்த்துவதின் 'போர்வு' என்று சிறிது வேறுபட்ட சொல் வழங்கியது. இக்காலத்தில், 'வைக்கோல்' என்ற அடையடுத்து அப்பொருள் உணர்த்தப்படுகின்றது.

## 2. ஒரு பொருளுக்கு ஒரு சொல்

ஒரு பொருளை உணர்த்த ஒரு சொல்லே வழங்கும். இருசொல் வழங்கின், ஒன்று நிற்க, மற்றொன்று அழியும்; அல்லது வேறு பொருளுணர்த்தத் தொடங்கும்.[13]

---

has not yet made much advance towards discovering them. —Jespersen, Mankind, Nation and Individual, p. 212.

13. Feeling strongly that language is intended to serve for the exchange of ideas, for the expression of feelings, for the discussion of interests, it refuses to believe in a synonymy that would be both useless and dangerous. Now as the people is at once the depository and author of language, the fact that it denies the existence of synonyms actually

'வீடு,' 'இல்,' 'மனை' என்பன ஒரு பொருளே உணர்த்தும் சொற்களாகும். இன்று பேச்சு வழக்கில் 'வீடு' என்ற சொல்லே அப்பொருள் உணர்த்துவதாக நின்றுள்ளது. 'இல்' என்பது இலக்கிய வழக்கோடு நின்றுவிட்டது; பேச்சுவழக்கில் அஃது அழிந்தது எனலாம். 'மனை' என்பதோ பேச்சு வழக்கிலும் வாழ்கின்றது; ஆனால் 'வீடு கட்டுதற்குரிய நிலப் பகுதி' என்று சிறிது வேறுபட்ட பொருளைக் குறிக்கின்றது.

'குணக்கு', 'கிழக்கு' என்னும் இருசொல்லும் ஒரே பொருளை உணர்த்துவன. அவற்றுள் 'குணக்கு' இன்று பேச்சு வழக்கில் இடமிழந்துள்ளது. அவ்வாறே 'குடக்கு', மேற்கு' என்பவற்றில் 'குடக்கு' மறைந்தது. ஆயின், ஒவ்வொரு சொல்லாகவே வழங்கிய 'வடக்கு' 'தெற்கு' என்பன இன்றும் வாழ்கின்றன.

நடை, நடத்தல், நடக்கை, நடப்பு என்பன முதலில் ஒரு பொருளனவாக வழங்கியிருக்கக் கூடும். இன்று இவை ஒவ்வொன்றும் வெவ்வேறு பொருளில் வழங்குகின்றன. அதனால் தான் எல்லாம் வாழ்கின்றன.

**3. உயர்பொருட் பேறு:**—முன்பு இழிந்த பொருளைக் குறித்து வந்த சொல் இப்போது உயர்ந்த பொருளில் வழங்குதல்.[14]

---

brings about their speedy disappearance. Either they are differentiated, or else one of the two terms ceases to exist. Breal, Semantics, p. 28.

14. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார், தமிழ்மொழி வரலாறு, ப. எச.

'களிப்பு', 'மகிழ்ச்சி' என்பன முன்பு கள்ளுண்டு மயங்குதலைக் குறித்தன. ஆயின் இப்போது மனம் உவந்திருத்தல் என்னும் உயர்ந்த பொருளைத் தருகின்றன.

**4. இழிபொருட் பேறு:**—முன்பு உயர்ந்த பொருளில் வழங்கிவந்த சொல் இப்போது இழிந்த பொருளைக் குறித்தல்.[15]

'நாற்றம்' என்ற சொல் முன்பு பொதுவாக மணம் என்னும் பொருளில் வழங்கியிருக்க, இன்று கெட்டதையே குறித்திடுதல் காண்க.

**5. சிறப்புப் பொருட் பேறு:**—முன்பு பலவற்றிற்கும் பொதுவாக இருந்த ஒரு சொல் இப்போது அவற்றுள் ஒன்றையே உணர்த்தல்.

'பொன்' என்பது முன்பு தங்கம், செம்பு, வெள்ளி, இரும்பு முதலான உலோகங்கள் பலவற்றிற்கும் பொதுவான பெயர்; இப்போது அஃது ஒருவகை உலோகத்தையே உணர்த்துகின்றது.

'நெய்' என்பதும் அவ்வாறே முன்பு பாலின் நெய், எள்ளின் நெய் முதலிய பலவற்றிற்கும் பொதுவாக இருந்தது; இப்போது அது பாலின் நெய் ஒன்றையே குறிக்கின்றது.

'பழையது' என்னும் சொல் பழமையுற்ற பலவற்றையும் குறிப்பது, இன்று தனியே நின்று பழஞ்சோற்றைக் குறித்தல் காண்க.

15. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார், தமிழ்மொழி வரலாறு, ப. எச.

**6. பொதுப் பொருட் பேறு:**—முன்பு ஒருவகைப் பொருளுக்கே உரியதாக வழங்கிய பெயர், பிறகு அதனோடு ஒத்த பலவற்றிற்கும் பொதுப் பெயராக வழங்குதல்.

'மரக்கால்' என்பது முன்பு மரத்தால் இயன்ற முகத்தலளவைக் கருவியையே உணர்த்தி வந்தது; இப்போது இரும்பு, பித்தளை முதலியவற்றாலாகிய கருவிகளையும் குறிக்கின்றது.

'குட்டி' என்பது மூங்கா, வெருகு, எலி, அணில், நாய், பன்றி, புலி, முயல், நரி, குரங்கு என்பவற்றின் இளமைப் பெயராக வழங்கி வந்தது.[16] இன்று விலங்குகள் பலவற்றிற்கும் இளமைப் பெயராக அது வழங்கிவருகின்றது.

'மரம்' என்ற சொல் முன்பு அகக்காழ் உடையவற்றிற்கே பெயராக வழங்கியது.[17] இன்று தென்னை பனை முதலிய புறக்காழ் உடையவற்றையும், குறித்துப் பொதுப் பெயராக வழங்குகின்றது.

**7. நுண் பொருட் பேறு:**—சொல் முதலில் பருப் பொருளை உணர்த்தி வந்து பிறகு அது போன்ற நுண் பொருளை உணர்த்துதலாகும்.

'சூழ்ச்சி' என்பது முதலில் சூழ்ந்து நிற்றலையும் சுழலுதலையும் உணர்த்தி, இப்போது, ஒரு கருத்திற்குச் சார்பான பல எண்ணங்கள் எழுதலை உணர்த்துகின்றது; 'பலவாறு நுட்பமாக எண்ணுதல்' என்ற பொருளைத் தருகின்றது.

16. தொல். பொருள். ருசகூ, ருருநு, ருருசா.
17. ஷை. சாநக.

'படு' 'உண்' என்னும் வினைகள் செயப்பாட்டு வினைப் பொருளில் அமையுமிடத்து (காணப் பட்டான், அடியுண்டான்) அவ்வாறு நுண்பொருள் தருதல் காண்க. வேற்றுமையுருபுகளும் மற்ற இடைச் சொற்கள் பலவும் இவ்வாறு அமைந்தனவே.

'செம்மை' என்னும் சொல் நிறத்தையும் வடிவத் தையும் உணர்த்தி, நடுவுநிலைமை என்னும் மனப் பண்பை உணர்த்தலும் காண்க.

'என் கருத்தைத் தழுவிப் பேசினான்' என்பதில் 'தழுவல்' என்பது, மெய்யுற அணைத்தலை உணர்த் தாது, நுண் பொருளை உணர்த்தலும் காண்க.

**8. பருப் பொருட் பேறு:**—முதலில் நுண்மையான பொருளை உணர்த்திவந்த சொல் பிறகு அது போன்ற பருப்பொருளை உணர்த்தல்.

'விருந்து' என்பது புதுமை என்னும் பண்பை உணர்த்தி வந்து, வீட்டிற்குப் புதியராக வந்தவரை உணர்த்தல் காண்க.

**9. மங்கல வழக்கு:**—மங்கலம் அல்லாதவற்றைக் கூற நேர்ந்தபோது, மங்கலமான வேறுசொற்களால் மறைத்துக் கூறல்; அதனால், அச்சொற்களின் பொருள் வேறுபடுதல்.

'துஞ்சினார்' 'மறைந்தார்' என்ற சொற்கள் இவ் வாறே 'செத்தார்' என்றபொருளுணர்த்துவன ஆயின.

**10. இடக்கரடக்கல்:**—நாகரிக மல்லாத சொற் களை மறைத்து அவற்றின் பொருளை நாகரிகமான பிற

சொற்களால் புலப்படுத்தல்; அதனால் அச்சொற்களின் பொருள் வேறுபடுதல்.[18]

'வாய்பூசல்' 'கால் கழுவல்' முதலாயின பல இவ்வாறு வழங்குவன.

**11. குழூஉக்குறி:**—நாகரிக மற்ற கூட்டத்தார், வியாபாரிகள் முதலானோர் தங்களுக்குள் ஒரு சொல்லை மறைத்து அதன் பொருளை வேறொரு சொல்லால் உணர்த்துதல். பிறர் அறியின் தீங்கு அல்லது தடை நேரும் என்ற அச்சமும் தந்திரமுமே இதற்குக் காரணமாகும்.[19]

குடிகாரர் 'கள்' முதலியவற்றைத் 'தண்ணீர்' என்ற சொல்லால் குறித்தல் இதன்பாற்படும்.

---

18. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல். (தொல். சொல். சசஉ.)

The so-called pejorative tendency is the result of a very human disposition which prompts us to veil, to attenuate, to disguise ideas which are disagreeable, wounding or repulsive. There is nothing in it all save a feeling of consideration, a precaution against unnecessary shocks, a precaution which whether sincere or feigned is not long efficient, since the hearer seeks out the thing behind the word, and at once identifies them.—Breal, Semantics, pp. 100, 101.

19. In both expressions one may assuredly see an outcome of the fear of the naked word, an after-echo of the view held by savage tribes that a name is something with a real existence outside humanity, something possessing power so that the way to escape evil consequences is not to use the plain word for anything bad or dangerous.—Jespersen, Mankind, Nation and Individual, p. 169.

**12. ஆகு பெயர்:**—ஒரு பொருளின் பெயர் அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளைக் குறித்தல்.[20]

'வெற்றிலை' என்பது சினைக்குப் பெயர்; 'வெற்றிலை நட்டான்' என்பதில் முதலுக்குப் பெயராகின்றது.

'உலகம்' என்பது இடத்தின் பெயர்; 'உலகம் பொல்லாதது' என்பதில் உலகமக்களை உணர்த்துகின்றது.

இவ்வாறே காலம், பண்பு, தொழில் முதலிய பலவற்றின் பெயர்கள் அவற்றோடு தொடர்பு உடையவற்றை உணர்த்துதல் உண்டு.

**13. உருவகம்:** ஒரு பொருளை அதற்கு உரிய சொல்லால் உணர்த்தாமல், தெளிவுறுத்த விரும்பி உருவகப் படுத்தி அந்த உருவகச் சொல்லால் உணர்த்தல்.

'பழுத்த கிழவர்' என்பதில் பழுத்தல் என்பது அவ்வாறு பொருளுணர்த்தல் காண்க.

---

20. முதலிற் கூறும் சினைஅறி கிளவியும்
சினையிற் கூறும் முதல்அறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனையமர பினவே ஆகுபெயர்க் கிளவி.

(தொல், சொல், ககசு).

# கஅ. சொல்லின் திரிபு

முன்னோர் வழங்கியவாறே நாம் இன்று சொற்களை வழங்குவதில்லை. சொற்கள் பலவகை மாறுதலை அடைந்தே இன்று வழங்கும் நிலைக்கு வந்திருக்கின்றன. இக்காலத்திலேயே கற்றவர் வழங்கும் சொற்களுக்கும் கல்லாதவர் வழங்கும் சொற்களுக்கும் வேறுபாடு உள்ளது. 'இருக்கின்றது' என்ற சொல் 'இருக்குது' என்றும் 'கீது' என்றும் 'இருக்கு' என்றும் பல்வேறு வகையாக வழங்கப்படுகின்றது. கற்றவர் ஒருவர் அதேசொல்லை வெவ்வேறிடத்தில் வெவ்வேறு வகையாக வழங்குகின்றார். மேடையில் நின்று சொற்பொழிவாற்றும் போது 'இருக்கின்றது' அல்லது 'இருக்கிறது' என்று ஒலிக்கும் அவரே, நண்பர்களோடு அளவளாவும் போது 'இருக்குது' என்று வழங்கி, தம் குழந்தையோடு கொஞ்சும் போது 'இக்குது' என்கின்றார்.

'சிதல்' என்னும் பழஞ்சொல் பிற்காலத்தில் 'செல்' ஆயிற்று. பண்டைக்காலத்தில் யாறு, யாடு, யானை என்று வழங்கிய சொற்கள் பலவும் இன்று ஆறு, ஆடு, ஆனை என வழங்கி வருகின்றன. அவ்வாறு வழங்குவனவற்றிற்கு இலக்கணமும் இடந்தரலாயிற்று. தனிச்சொற்களே அல்லாமல் சோழநாடு, மலைநாடு முதலான தொடர்களும் சோணாடு, மலாடு என வழங்குதற்கு இலக்கணம் இடம் வகுத்து, மரூஉ எனக் குறித்தது.

இவ்வாறு சொற்கள் திரியும் திரிபுகளை ஆராய்ந்தால், அவற்றின் வடிவம் வரவரக்குறுகி வருதல்

காணப்படும்.[1] இவ்வாறு குறுகிக் குறுகியே இறுதியில் ஓரசை ஈரசைச் சொற்களாக நின்றன. தமிழில் மிகப் பழங்காலச் சொற்களெனச் சங்க இலக்கியங்களில் காணப்படும் பலவும் ஓரசை ஈரசைச் சொற்களாகவே உள்ளன. சீன மொழியிலும் ஆங்கில மொழியிலும் இன்றும் இத்தகைய சிறு சொற்களே பலவாக உள்ளன. ஆயின், தமிழில் எழுத்து முறையால் பழங் காலத்திலேயே ஏற்பட்ட சொற்களைக் குறுக்கும் பழக்கத்திற்குப் பெருந்தடை ஏற்பட்டது என்று கூறலாம். இஃது பல மொழிகளுக்குப் பொருந்திய உண்மையே ஆகும்.[2] பேச்சுமொழி சொற்களைக் குறுக்குதலே கடமையாகக் கொண்டிருக்க, எழுத்துமொழி சொற்களின் வடிவம் சிதையாவாறு காத்தலே கடமையாகக் கொண்டு விளங்குகின்றது.[3] ஆயினும், இந்தக் கட்டுப்பாட்டையும் மீறியே சில சொற்கள் குறுகி அமைந்து விடுகின்றன. 'ஆச்சு' 'போச்சு' முதலானவை சொற்கள் இவ்வாறு தப்பித்தவறி இடம் பெறுவன எனலாம்.

ஆங்கிலம் முதலான பல மொழிகளில் ஒன்று இரண்டு மூன்று முதலான எண்ணுப்பெயர்கள் (*one*,

---

1. The general tendency of all languages is towards shorter and shorter forms.—Jespersen, Language, p. 330.

2. The Natural condition of language is diversity and change, and it is only under the artificial influences of civilisation and culture that a language becomes uniform and stationary.—A. H. Sayce, Introduction to the Science of Language, p. 200.

3. A literary dialect is naturally less subject to the inroads of decay than an unwritten one. The spelling of words reacts upon their pronunciation and preserves it from extensive alteration.—ibid. 199.

*two, three* என) ஓரசைச் சொற்களாகவே உள்ளன. ஆனால் இவை குறுகி அமைந்த வடிவங்கள் என்றே கூறல் வேண்டும். தமிழில் ஒன்று முதல் பத்து ஈறாக உள்ள எண்ணுப் பெயர்களைப் பேச்சு மொழிக்கே விட்டுவிட்டிருந்தால், அவையும் அவ்வாறு மாறி அமைந்திருத்தல் கூடும். ஆனால் எழுத்து மொழியின் ஆணை தவறாமையால்,[4] 'இரண்டு' 'ஒன்பது,' என்னும் நீண்ட சொற்கள் இன்னும் சிதையாமல் காக்கப்பட்டுள்ளன. இவை தவிர்ந்த மற்ற எட்டுப் பெயர்களும் (இறுதியில் உள்ள குற்றியலுகரத்தை ஒலித்துணை என நீக்கி ஆராயும்போது) ஓரசைச் சொற்களாகவே உள்ளன. 'இரண்டு' 'ஒன்பது' என்னும் இரண்டு நீண்ட எண்ணுப் பெயர்களும் பிற சொற்களோடு சேர்ந்து தொகையாகும்போது குறுகியே வழங்குகின்றன. 'இருவகை' 'ஈருயிர்' என்பவற்றில் 'இரு' என்றும் 'ஈர்' என்றும் குறுகிய வடிவம் காணப்படுகின்றது. 'தொண்ணூறு' முதலான தொடர்களில் 'ஒன்பது' இடம் பெறாமல் குறுகிய வடிவம் உடைய மற்றொரு சொல்லே இடம் பெற்று வாழ்கின்றது. ஆகையால், ஓரசைச் சொற்களே எவ்வாறேனும் அழியாவாழ்வு பெற முயல்கின்றன என்பது தெளிவு.

இன்று ஓரசையாக வழங்கும் சொற்கள் தொடக்கத்தில் பலவசைச் சொற்களாக நீண்டு வழங்கியிருந்திருக்க வேண்டும் என்பதும் மறுக்க முடியாத உண்மையே ஆகும்: 'ஆச்சு' எனக் (குற்றியலுகரம் ஒலித்

4. Education is an agency which arrests the progress of decay. The tendency to corruption is greatly diminished when a language comes to have a literature—Bhandarkar, Collected works, Vol. IV, p. 252.

துணையாதலின்) ஓரசையாக வழங்கும் சொல்லின் முன்னைய வடிவம் 'ஆச்சுது' எனின், அஃது 'ஆய்விட்டது' என்பதன் திரிபாகல் வேண்டும். ஆங்கிலத்தில் இன்று '*had*' என வழங்கும் ஓரசைச் சொல்லின் பழைய வடிவம் '*habaidedeima*' என ஆராய்ச்சியாளர்கள் கூறுவதும் இங்குக் கருதத் தக்கது.[5] *lord*' என்ற சொல்லும் *hlaford*' என்பதன் திரிபாம்.

இவ்வாறு சொற்கள் குறுகுதலுக்குக் காரணம் என்ன எனப் பலர் பலவாறு ஆராய்ந்து கூறியுள்ளனர். முயற்சிச்சுருக்கம் கருதியும், சோம்பலாலும் இவ்வாறு மக்கள் குறுகி ஒலிக்கின்றனர் என்பது ஒரு கொள்கை. சோம்பல் ஒன்றே காரணம் என்பது மற்றொரு கொள்கை. முயற்சிச் சுருக்கமே காரணம், சோம்பலன்று என்பது இன்னொரு கொள்கை.

சாய்ஸ் என்னும் மொழிநூலறிஞர் ஒற்றுமைப் போலி, தெளிவுறுத்தல், சோம்பல் என மூன்று காரணம் கூறுகிறார்:[6] ஆயினும், முன்னைய இரண்டனையும் சோம்பலில் அடக்கியும் விளக்குகிறார். ஒன்றுபோல் மற்றொன்றை ஒலித்தல் எளிதாக இருத்தலால் அதற்கும் சோம்பலே காரணம் என்கிறார். தெளிவுறக் கூறாவிடின், கேட்போர் மீண்டும் கேட்க, அவர்க்காக இரண்டாம் முறை தெரிவிக்கும் முயற்சி நேர்தலால், அதைத் தடுக்கவே தெளிவுறுத்தல் நேர்கின்றது; ஆதலின் அதற்கும் சோம்பலே காரணம் என்கிறார். ஒற்றுமைப் போலி, தெளிவுறுத்தல் என்ற இந்த

5. Jespersen, Progress in Language, pp. 18, 344.
6. Sayce, Introduction to the Science of Language, p. 167.

இரண்டும் மக்களுக்கும் அவர்கள் வழங்கும் மொழிக்கும் சிறப்பைத் தருவனவே அல்லாமல் குறைவு படுத்துவன அல்ல. விலங்கு முதலியவற்றிற்கு இல்லாமல், மக்களுக்கே இயற்கையாக அமைந்த ஆற்றல் 'போலச் செய்தல்' (*Imitation*) என்பது. ஒருவரைப் பார்த்து அவரைப்போல் ஒலிக்கக் கற்பதும் ஒரு தொழில் செய்யக் கற்பதும் குழந்தையிடமும் காணப்படுவன. இந்த ஆற்றலின் அடிப்படையாகவே நாகரிகம் வளர்ந்தமைந்துள்ளது. குழந்தை முதல் கலைஞன் வரையில் எல்லோருடைய வளர்ச்சிக்கும் இதுவே காரணமாக அமைந்துள்ளது. இதைப் போலவே, தெளிவுறுத்தல் என்பதும் மக்கள் மொழியின் சிறப்பியல் பாகும். ஆதலின், இந்த இரண்டனையும் சோம்பலில் அடக்கிக் கூறல் பொருந்தாது.

சோம்பல்தான் காரணம் என்று கூறுவது பொருந்தாதென டக்கர், ஜெஸ்பெர்ஸன் முதலான மொழிநூலறிஞர் விளக்கியுள்ளனர்.[7] சோம்பல் என்பது செய்யும் வேலையில் ஊக்கமின்மை, வேலையில் இன்பமின்மை, வேலையைக் குறைத்துக்கொள்ளும் வேட்கை இவற்றின் விளைவே ஆகும். ஆனால், மக்களின் வாழ்க்கையில் சோம்பல் மிகுந்தவர்களே பேச்சு மிகுந்தவர்களாக இருக்கக் காண்கின்றோம். பேச்சு ஒரு வேலையாக எண்ணப்படுவதும் இல்லை. பேச்சில் ஊக்கமில்லை என்றும் இன்பமில்லை என்றும் உணர்வோர் மிகச்சிலர். பேச்சைக் குறைத்துக் கொள்ள விரும்புவோர் மிகச்சிலர், ஆதலின், பெரும்பான்மை

7. Tucker, Introduction to the Natural History of Languages, p. 350.

யோரால் திரிபடையும் சொற்களின் குறுக்கத்திற்கு அவர்களைக் காரணம் என்று கூறல் பொருந்தாது. கூறினும், அவர்கள் சோம்பேறிகள் என்று கருதுதல் தவறான கருத்தாகும். பேச்சில் ஊக்கமும் இன்பமும் இழந்து அதைக் குறைத்துக்கொள்ள நாடுவோர், கலைத்துறையிலோ எண்ணக் கடலிலோ ஓய்வின்றி உழைக்கும் சிறந்த அறிஞரே அல்லாமல், சோம்பேறிகள் அல்லர்.

மற்றொரு தடையும் ஆராயத்தக்கது. சோம்பலின் விளைவு தீமையே; சோம்பலால் இழத்தல் நேருமே அன்றி ஈட்டல் நேராது. ஆயின் சொற்களைக் குறுக்கி வழங்குதலால், பேசும் மக்களுக்கு யாதொரு தீமையும் விளைவதில்லை; இழத்தல் ஒன்றும் இல்லை. பேசும் முயற்சியும் குறைந்து பேசும்காலமும் சுருங்குவதால் நன்மையே விளைகின்றது எனலாம்.[8] ஆதலின் இதனைச் சோம்பலின் விளைவு என்று கூற முடியாது. சொற்களின் வடிவம் சிதைந்தது இழப்பு அன்றோ என வினவலாம். இழப்பு மிகுதியா, ஈட்டல் மிகுதியா என்று சீர்தூக்கல் வேண்டும். இழப்பு மிகுதியாயின் சோம்பல் என்று கூறுவது பொருந்தும். ஈட்டல் மிகுதியாயின் அதனைச் சிக்கனம் என்று கூறல் வேண்டுமன்றோ?[9]

8. What we call a word is really and primarily the combined action of human muscles to produce an audible effect; and we see that the shortening of a form means a diminution of effort and a saving of time in the communication of our thoughts.—Jespersen, Language, p. 331.

9. Whitney, Language and the Study of Language, p. 70.

தவிர, ஒருவர் இருவர் சோம்பலால் செய்த மாறுதல்களைப் பரந்த உலகம் கண்மூடி ஏற்றுக் கொள்ளல் இயலுமா? மொழியில் புகும் ஒவ்வொரு புதுமையும் மாறுதலும் முதலில் ஒருவரால் புகுவனவே ஆகும். ஒருவர் முதலில் பேச, அதனைக் கேட்பவர் அதனை ஏற்கலாம்; அல்லது ஏற்காமலும் விடலாம். இவ்வாறே ஒருவர் வாயிலாகப் புகுந்த மாறுதல் உலகத்தாரால் உடனே ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. மக்கள் ஆளும் அரசியலில் ஒருவர் கொள்கை மெல்ல மெல்லப் பரவி எதிர்ப்பைக் குறைத்துச் செல்வாக்கைப் பெருக்கிய பிறகே சட்டமாகின்றது அன்றோ? மொழித்துறையிலும் இவ்வாறே ஒவ்வொரு சீர்திருத்தமும் ஒருவரிடமிருந்து வெளிப்பட்டுப் பலரிடமும் பரவி நிலைக்க வேண்டுவதாயுள்ளது. ஆகவே, சீர்திருத்தம் செய்வோர்க்கும், அதனை ஏற்போர்க்கும் இடையே போராட்டமே உள்ளது என்று கூறலாம்.[10] ஆதலின், பயனற்ற புதுமையோ, நன்மையுற்ற மாறுதலோ கண்மூடி ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. சோம்பல் காரணமாகப் பிறந்த மாறுதல் ஒருநாளும் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. அதற்கு மாறாக, சிக்கனம் என்னும் பெரும்பயன் விளைக்கும் மாறுதல்களே தடையும் எதிர்ப்பும் இன்றி ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. சொற்களைக் குறுக்கும் மொழிவழக்கு இத்தகையதே ஆகும்.

இவ்வாறு சொற்களைக் குறுக்கி ஒலிக்கும் மக்கள், வேண்டுமென்றே செய்வதும் இல்லை; அறிந்து செய்வதும் இல்லை. தங்களை அறியாமல் இயல்பாகவே

செய்கின்ற மாறுதல்கள் என்றே இவற்றைக் கருத வேண்டும்.[11] 'ஆதன் தந்தை'யை 'ஆந்தை' என்று ஒலிக்கவேண்டும் என்று எவரும் பழங்காலத்தில் எண்ணியிருக்க மாட்டார். 'வந்துவிட்டது' என்பதை வந்துடுசி, வந்துசி, வந்த்சி என்றெல்லாம் மாற்ற வேண்டும் என்று இந்தக் காலத்திலும் எவரும் எண்ணித் துணிந்து ஒலிப்பதில்லை. ஆனால் ஒலி மாறிக்கொண்டிருக்கின்றது; அதனால் சொற்களும் குறுகிக்கொண்டிருக்கின்றன. இதுதான் மொழியின் இயல்பான மாறுதல்; பிறர் புதியதைனப் புகுத்தலும், பழையதைனக் கழித்தலுமாகிய செயற்கை முறை இங்கு ஒன்றும் இல்லை. செயற்கைமுறையாக ஒருவர் எண்ணி மாறுதல் செய்யத் தொடங்கின், அம்மாறுதல் எதிர்க்கப்படும்; ஏற்கப்படாது. மொழியைப் பொறுத்த வரையில் தனிமனிதன் ஆட்சி இல்லை; மக்கள் பலரும் உடன்பட்டு நடத்தும் குடியாட்சி முறையே உள்ளது.[12]

மக்களின் வாழ்க்கைக்கு அரசு ஒரு கருவியாக இருப்பதுபோலவே மொழியும் ஒரு கருவியாகும். மொழியை வளர்த்துக் காப்பது அவர்களின் முதல்

11. Phonetic change is the spontaneous working out of tendencies which the individual does not acknowledge to himself, in their effects upon organs of whose structure and working he is almost or wholly ignorant.—Whitney, Language and the Study of Language, p. 51.

12. The speakers of a language thus constitute a republic, or rather, a democracy, in which authority is conferred only by general suffrage and for due cause, and is exercised under constant supervision and control.—Whitney, Language and the Study of Language, p. 38.
Jespersen, Language, p. 320.

நோக்கம் அன்று. ஆனால், மொழியை வளர்த்துக் காப்பதன் வாயிலாகத் தங்கள் வாழ்வைக் காத்துக் கொள்வதே முதல் நோக்கமாகும். ஆதலின், தங்கள் வாழ்க்கைக்கு ஏற்றவாறு மொழியை மாற்றியமைத்துக் கொள்கின்றனர்; அரிய ஒலிகளை எளிய ஒலிகளாக மாற்றியமைத்துக் கொள்கின்றனர்; வேண்டிய ஒலிகளை விடாமல் காத்து, வேண்டாத ஒலிகளைப் புறக்கணித்து விடுகின்றனர்; பலஅசைச் சொற்களுள், இன்றியமையாத அசைகளை ஒலித்து ஏனையவற்றை மறந்து விடுகின்றனர்.. இவ்வாறு செய்வதால் சொற்கள் குறுகி விடுகின்றன,

ஆதலின், இதனைக் குறைபாடு என்று கருதுதல் எவ்வாறு பொருந்தும்? டாக்டர் ஜான்ஸன் என்னும் ஆங்கில நாட்டுப் பெரும்புலவர் தாம் எழுதிய ஆங்கில அகராதியில் இதனைப் பிற்போக்கான தொரு குறை என்றே குறித்துள்ளார்.[13] ஆயின், பழைய உலகம் நல்ல உலகம் என்றும், இன்று வாழும் உலகம் பொல்லாத உலகம் என்றும் கருதும் தவறான மனப்பான்மையே இதற்குக் காரணம் என்று ஜெஸ்பெர்ஸன் கருதுகின்றார். இவ்வாறு சொற்கள் மாற இடங் கொடுத்தலாகாது என்று அறிஞர் பலர் செய்த முயற்சியே இன்று ஆங்கிலத்தில் சொற்கள் எழுதும்போது ஒருவகையாகவும் ஒலிக்கும்போது மற்றொருவகையாகவும் இருத்தற்குக் காரணமாகும்.[14] ஆங்கிலத்தைப்

13. Tongues, like governments, have a natural tendency to degeneration—Dr. Johnson, Preface to his Dictionary.

14. English spelling, under the guidance of the printers, has become a mere system of marks and symbols,

பேசும் மக்கள் பெரும்பாலோர்; எழுதும் மக்கள் சிறு பான்மையோர். பேசும் மக்கள் சொற்களை மாற்றி ஒலித்துப் பழகிவிட்டனர். ஆனால் எழுதும் மக்கள் அதற்கு ஏற்றவாறு எழுத்துக்களை மாற்ற மனமில்லாமல், பழைய எழுத்துக்களை விடாமல் காத்துவருகின்றனர். அதனால் எழுதப்படும் சொல்லுக்கும் ஒலிக்கப் படும் சொல்லுக்கும் வேற்றுமை பெருகிவிட்டது. இந்தத்துறையில் சீர்திருத்தம் மிக இன்றியமையாதது என்று உணர்ந்து பேரறிஞர் பெர்னார்ட் ஷா தம் செல்வத்தையே அத்தொண்டுக்காக எழுதிவைக்கும் நிலையும் நேர்ந்து விட்டது. ஆனால், இதாலிய மொழியிலோ ஜெர்மன் மொழியிலோ இவ்வாறு இல்லை; அம் மொழிகளில் எழுத்துலகம் ஒலியுலகம் என்னும் இரண்டு உலகங்களிலும் சொற்கள் ஒத்த உரிமையோடு வாழ்கின்றன; ஒன்றில் பழையவேடமும் மற்றொன்றில் புதிய கோலமும் புனைவதில்லை; இரண்டு இடத்திலும் இயற்கையாகவே வாழ்கின்றன.

ஆயின், இவ்வாறு சொல் வடிவு குறுகி மாறுவதால் அந்தச் சொல்லின் பிறப்பும் வளர்ச்சியும் அழகும் புலனாகாமல் மறைகின்றன; இது பெரிய குறை என்றே கொள்ளல் வேண்டும். எழிலுற அமைந்த சிற்பம் ஒன்று ஆற்று வெள்ளத்தில் அகப்பட்டுப் புரண்டு புரண்டு அதன் அழகிய உறுப்புக்கள் கை கால் செவி கண் முதலியன தோன்றாதவாறு ஒடிந்தும் அழிந்தும்

---

arranged upon no principle, selected with no rational purpose, each of which by a separate effort of the memory is associated with some sound or word.—Sayce, Introduction to the Science of Language, p. 328.

தேய்ந்து காணப்படின், அதனை எவ்வாறு போற்ற முடியும்? அவ்வாறுதான் இக்கால்த்துத் திரிந்து குறுகிய சொற்கள் சிதைந்து அழகிழந்து தோன்றுகின்றன எனலாம். அழகிய சிற்பம் எங்கே? ஆற்று வெள்ளம் புரட்டிப் புரட்டித் தேய்த்து மழுப்பிய கல்லுருளை எங்கே? உண்மைதான். ஆனால், இங்குத்தான் அறிஞர் ஜெஸ்பெர்ஸன் மொழியின் இயல்புணர்ந்து கூறும் கருத்துக்களை உணர்தல் வேண்டும். அவர் கூறுவன: “மொழி ஒரு கருவி; அந்தக் கருவிகொண்டு கருத்துக்களைப் புலப்படுத்தி மக்கள் வாழ்தல் வேண்டும். மக்கள் வாழும் வகையில், கருத்துக்கள் புலனாயின் அஃது ஒன்றே அமையும், கருத்துக்கள் புலனாகுமாறு சொற்கள் பொருள் தரின் அமையும். அந்தச் சொற்களின் பிறப்பும் வளர்ச்சியும் பற்றிய வரலாறு மக்களுக்கு வேண்டுவதில்லை. சொல் எதனைக் குறித்திடும் என்ற அளவில் பொருளுணர்ச்சி மட்டும் இருந்தால் அமையும். தேய்வுபடாத சொல், வெள்ளத்தில் புரண்டு அழியாத அழகிய சிலை போன்றதே. ஆனால், மொழியைப் போற்றும் மக்கள், சொற்களைச் சிற்பங்களாக வைத்துக்கொண்டு அழகு காக்க விரும்பவில்லை. அஃது அறிஞர் சிலர் சில வேளைகளில் விரும்பும் விருப்பமாக இருக்கலாம். ஆயின், மக்கள் மொழியைப் பற்றி விரும்புவதெல்லாம், வாழ்க்கைப் பாதையைச் செம்மைப்படுத்துவதற்கான சொற்கள் அந்த மொழியில் இருக்க வேண்டும் என்பதே. வாழ்க்கைப் பாதையைச் செம்மைப்படுத்தத் தேய்ந்து மழுங்கிய கல்லுருளைகள் வேண்டுமே அன்றி, உருண்டு பாதையைச் சமப்படுத்த முடியாத சிலைகள் வேண்டா என்பதே. ஆதலின், சிலைகளுக்கு உரிய கலைமண்டபம் வேறு; மக்கள்

வாழ்க்கைக்கு உதவும் மொழி வேறு; மக்கள் வாழ்க்கைக்குக் கருவியாக உள்ள மொழித்துறையில், பலகாலும் உருண்டு உருண்டு பலருடைய வாயிலும் பயிலும் சிறு சிறு சொற்களே தேவை" என்பர் அவர்.[15]

சொல்லின் திரிபால் பொருளுணர்ச்சி குன்றுமாயின், அல்லது மயங்குமாயின், அத்தகைய திரிபு மக்களால் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை, மொழி வழக்கில் இடம் பெறுவதும் இல்லை. 'மலைநாடு' என்பதை 'மலாடு' எனத் திரித்து வழங்குவதில் இவ்வுண்மை காணலாம். அநாடு, அலாடு, மநாடு எனப் பலவாறு திரிந்து வழங்காமல், 'மலாடு' எனத் திரியக் காரணம் என்ன? அதன் பொருளுணர்ச்சிக்கு மலை என்ற முதற் சொல் இன்றியமையாததாக உள்ளது. ஆதலின் அதனை எவரும் ஒலிக்காமல் விடவில்லை. விடின், பொருளுணர்த்தப்படாது போகும். அநாடு, அலாடு,

15. In noting the change from the old to the modern form he used strong language and spoke of degeneration, corruption, depravation, decline, phonetic decay, etc., or even adapted for himself Schleicher's noble simile : "our words, as contrasted with Gothic words, are like a statue that has been rolling for a long time in the bed of river till its beautiful limbs have been worn off, so that now scarcely anything remains but a polished stone cylinder with faint indications of what once it was." Suppose, however, that it would be quite out of the question to place the statue on a pedestal to be admired ; what if, on the one hand, it was not ornamental enough as a work of art, and if on the other, human well-being was at the stake if it was not serviceable in a rolling-mill ; which would then be the better,—a rugged and unwieldy statue, making difficulties at every rotation, or an even, smooth, easy-going and well-oiled roller ?—Jespersen, Progress in Language, p. 11.

மாநாடு என்று திரியின், மலை என்ற பொருட்சிறப்புப் போய், சொல் பயனற்றுவிடுகின்றது. அது போலவே, ஆச்சு, போச்சு என்னும் கொச்சைத் திரிபுகளிலும், பால்காட்டும் விகுதி (பாலறி கிளவி) முதலியன அவ் வளவு இன்றியமையாதன அல்ல; காலம் உணர்த்தும் இடைநிலையின் இயல்பான வடிவமும் சிறந்ததன்று; ஆயின் தொழில் (வினை) இன்னது என்று உணர்த்தும் பகுதியே பொருட்சிறப்பு உடையது. ஆதலின் ஆ, போ என்னும் பகுதிகள் சிதையாமல் வழங்குகின்றன. எடுத்தல் படுத்தல் நலிதல் என்னும் ஒலிமாறுதல்களும் பொருட்சிறப்புப் பற்றி அமைகின்றன அல்லவா? ஆதலின், பொருட்பயனின்றி நலிந்து ஒலிக்கப்படும் அசைகளே சிதைகின்றன; பொருட் சிறப்பின்றிப் படுத்து ஒலிக்கப்படும் அசைகளே திரிபடைகின்றன; பொருட் சிறப்புடையனவாய்ப் பயன் பட்டு எடுத்து ஒலிக்கப்படும் அசைகள் சிறிதும் மாறாமல் நிலைபெறு கின்றன.

# 19. சொற்றொடர்

சொற்கள் காலப்போக்கில் உருவம் வேறுபடும் என்பது கண்டோம். சொற்பொருளும் மெல்ல மெல்ல மாறக் கண்டோம். இலக்கியவளம் பெற்ற மொழிகளில் சொல்வடிவம் மாறப் பல நூற்றாண்டுகள் ஆகும். ஆயின், எழுத்து வழக்கில்லாத காட்டுமிராண்டிகளின் மொழியில் அம் மாறுதல் சில ஆண்டுகளில் நிகழும். தமிழில் 'சிதல்' என்னும் பழஞ்சொல் 'செல்' என்று மாறிவழங்குகின்றது. இதற்குப் பல நூற்றாண்டுகள் ஆயின. 'பொன்', 'நெய்' முதலான சொற்களின் பொருளும் இவ்வாறே மாறியுள்ளன. ஆயின் இத்தகைய மாறுதல்கள் நாகரிகமற்ற மக்களின் மொழியில் சில ஆண்டுகளில் நிகழ்ந்துவிடும். நடு அமெரிக்காவின் பழங்குடிமக்களிடையே தொண்டு ஆற்றி வந்த கிறிஸ்துவப்பாதிரிகள் சிலர் பத்து ஆண்டுகள் தம் நாட்டிற்குச் சென்று ஓய்வு பெற்றிருந்து மீண்டு சென்ற போது, அந்தப் பழங்குடிமக்களின் மொழி அதற்குள் முற்றிலும் வேறுபட்ட புது மொழியாக மாறியிருக்கக் கண்டனராம். முன்பு தாம் தொகுத்து எழுதிய அகராதி முழுதும் பயனற்றுப் போயிருக்கக் கண்டனராம்.[1]

இத்தகைய மாறுதலைச் சொல் வடிவிலும் சொற்பொருளிலும் காணக்கூடுமே அல்லாமல், சொற்றொடரமைப்பில் காணல் இயலாது. சொற்றொடரமைப்பு என்பது நாகரிகமக்களாயினும் நாகரிகமற்ற மக்களா

1. Max Muller, The Science of Language, pp. 58, 59.

யினும் பேசுவோர் உள்ளத்தில் எண்ணங்கள் அமையும் அமைப்பாகும். அந்த அமைப்பு மாறின் பேசப்படும் ஒலிகளுக்கும் உணர்த்தப்படும் பொருள்களுக்கும் தொடர்பில்லாமற் போகும். ஆதலின், எந்த மொழியிலும் சொற்றொடரமைப்பில் மாறுதல் நிகழ்வதில்லை எனலாம்; ஒருகால் நிகழினும், அவை அம்மொழியின் அடிப்படையான இயல்புக்கு மாறுகாத சிறிதளவே ஆகும்; அத்தகைய மாறுதல் நிகழவும் பல நூற்றாண்டுகள் ஆகும். ஆதலின், சொற்றொடரமைப்பு ஒன்றே மொழிகளின் சிறப்பியல்புகளை எடுத்துக்காட்ட வல்லதாகும்.

சொற்கள் பல தொடர்ந்து அமையும் முறையே சொற்றொடரமைப்பு என்பதாகும். எளியநிலையில் இரு சொற்கள் தொடர்ந்து அமையும் வாக்கியமாகத் தோன்றி, நாகரிகம் வளர வளரப் பல சொற்கள் தொடர்ந்து அமையும் அமைப்பு ஏற்படுகின்றது.

ஒரு சொல்லே வாக்கியமாக அமைதலும் உண்டு. 'நட' என்பது ஒரு வாக்கியம். இலக்கணப்படி 'நீ நடவாய்' என்று அமைய வேண்டும். ஆதலின், 'நட' என்னும் ஏவலொருமை வினைமுற்றில் 'ஆய்' விகுதி கெட்டது என்று இலக்கணம் கூறும். மற்ற வினைமுற்றுக்களில் பாலறிகிளவி சேர்ந்தே இருத்தலால், ஏவல் ஒருமை வினைமுற்றிலும் பாலறிகிளவி இருக்க வேண்டும் என்னும் பொதுவிதி பற்றியே இலக்கணம் இவ்வாறு கூறுகின்றது. மக்களின் மொழி இவ்வாறு விதிகளை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது அன்று; தேவைகளுக்கு ஏற்ப அமைந்ததாகும். ஆதலின், பேச்சு வழக்கில் 'நடவாய்' என்ற வடிவமே

இல்லை. எழுத்திலும் அதற்கு இடம் இல்லை என்றே கூறலாம்; ஒரு சில செய்யுட்களில் அருகிவழங்கும் வழக்காகவே அஃது உள்ளது.[2]

எனவே, 'நீ நட' என்பதே வாக்கிய வடிவம் எனலாம். இஃது ஒருவன் தன் முன்னிலையாக நிற்கும் மற்றொருவனுக்குக் கூறும் சொற்றொடர் அன்றோ? முன் நின்றானுக்கு ஏவலை உணர்த்தும் போது 'நீ' என்று குறித்துக் கூறுவது மிகை அன்றோ? ஆதலின் 'நட' என்ற சொல்மட்டும் நின்று வாக்கியமாக வழங்குகின்றது. குறிக்கப்படும் பொருள் தொலைவில் உள்ளதாக நேரும்போதுதான் அதனைப்பற்றிப் பலவும் அறிவித்தல் இன்றியமையாததாக உள்ளது. அதுபற்றியே, படர்க்கை வினைமுற்றில் திணைபால் எல்லாம் விளக்கமாக உணருமாறு பாலறிகிளவிகள் அமைந்துள்ளன.[3] 'நட' என்னும் ஏவல் வினைமுற்றில், பேச்சைக் கேட்போனே குறிக்கப்படும் பொருளாகவும் இருத்தலின், திணைபால் விளக்கமும் காலமுணர்த்தலும் வேண்டுவன அல்ல. பகுதியாகிய 'நட' என்பது தனித்து நின்று

---

2. உண்மை இவ்வாறிருக்க,
'செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே'

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்குச் (சொல். ௪௫௦) "செய்யாய் என்னும் வாய்பாட்டதாகிய முன்னிலை முற்றுச் சொல் ஆய் என்னும் ஈறுகெடச் செய் என்னும் சொல்லாய் நிற்றலுடைத்து', என்று உரை எழுதியதோடமையாமல், "ஆகிடனுடைத்து என்றதனால் செய்யாயென ஈறுகெடாது நிற்றலே பெரும்பான்மை என்பதாம்" எனச் சேனாவரையர் விளக்குவது வியப்பாகவே உள்ளது.

3. படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படும் திணைபால் அனைத்தும்; ஏனை
இடத்தவற் றொருமை பன்மைப் பாலே,

(நன்னூல், சொல், 6.)

வாக்கியமாக அமைகின்றது.[4] ஆதலின், 'நீ நடவாய்' என்பது இலக்கணத்தின் படைப்பாகவும், 'நட' என்பது உண்மைமொழியாகவும் இருக்கக் காண்கின்றோம்.[5]

இதற்கு அடுத்த நிலையில் வளர்ந்து அமைந்த வாக்கியம் எழுவாயும் பயனிலையுமாக இரண்டு சொற்கள் தொடர்ந்த எளிய வாக்கியம் ஆகும்.[6] பல சொற்கள் தொடரும் வாக்கியங்களை ஆராயின், அங்கும் எழுவாயும் பயனிலையுமாகிய இரு சொற்களே வாக்கிய அமைப்பிற்கு இன்றியமையாதனவாக விளங்கும். மற்றச் சொற்கள் எழுவாய்க்கோ, பயனிலைக்கோ இரண்டற்குமோ அடையாக நிற்பன.

தமிழ்மொழியில் சொற்கள் தொடரும் முறையில் அடிப்படையாக உணரத்தக்கவை சில உள. அவையாவன :—

**1.** தமிழ் வாக்கியத்தில் எழுவாய் எங்கேனும் அமையும். அது பெயராகவே இருக்கும். (தொழிற்

---

4. Jespersen, A Modern English Grammar, p. 67.

5. We cannot say that 'come' is an elliptical form of 'come thou'; 'come thou' is rather an extended or redundant form of 'come,' for as the pronoun is really superfluous—commands being generally addressed to some one person—'come' is the normal form of expression"—A. E. H. Swaen, Grammatical Miscellany to Otto Jespersen, p. 275.

6. As the psychological subject is that idea or group of ideas which first comes to the speaker's mind, and as there is no predicate without an underlying subject, the natural order of words in the simple sentence is: first subject, then predicate—Kellner, Historical Outlines of English Syntax, p. 286.

பெயரும் வினையாலணையும் பெயரும் பெயராய் அடங்கும்).[7]

2. பயனிலை பெரும்பாலும் இறுதியில் நிற்கும்.[8] விரைவு முதலான குறிப்பைப் புலப்படுத்த நேரும்போது முதலிலும் இடையிலும் நிற்றல் உண்டு. பயனிலை பெரும்பாலும் வினைமுற்றாக இருத்தல் இயல்பு. சிறுபான்மை பெயராக இருக்கும்.

| | | |
|---|---|---|
| நக்கீரர் வந்தார் | — | பயனிலையாக வினைமுற்று இறுதியில் வரல் |
| வந்தார் நக்கீரர் | — | முதலில் வரல் |
| அது பூனை | — | பெயர் பயனிலையாதல் |

பெயர் பயனிலையாக அமையும் வாக்கியத்தில் வினைச்சொல் இல்லாமை காணப்படும். இஃது ஆங்கில முதலான பல மொழிகளுக்கு வேறுபட்ட வழக்காகும். ஆங்கில முதலான மொழிகளில் 'இருக்கின்றது' என்னும் பொருளுடைய வினை ஒன்று இடையே சேர்க்கப்படும். அந்த வினை ஒரு தொழிலையும் உணர்த்தாது பொருளின்றி வரும்; அதன் பயன் வாக்கிய இலக்கணம் நிரம்புதலே ஆகும்.[9] அதனைக் 'கோபுலா' (*copula*) எனக் குறிப்பர்.[10]

---

7. A verbal noun is a noun because it is a word that is used as a name.—H. R. Strokoe, The Understanding of Syntax, p. 156.

8. கூ முதலான மற்றத் திராவிட மொழிகளிலும் இவ்வியல்பு மாறவில்லை.—Winfield, A Grammar of the Kui Language, p. 158.

9. It is quite consistent with the psychological facts, as well as with the science of language, that the simple juxtaposition of subject and predicate is anterior to the connection by means of a copula. The original state is still kept in proverbs and similar expressions : "first come first served" etc.—Kellner, Historical Outlines of English Syntax, p. 44.

10. Copula is the term applied to a verb so used that it serves as a link joining a noun or a pronoun or an adjec-

It a cat
அது பூனை

என்னும் வழக்கு அங்கு இல்லை.

It is a cat

என்பதே அங்கு வழங்குவது. இவ்வுண்மையை அறியாத சிலர், தமிழின் சொற்றொடரமைப்பை ஆராயாத சிலர், தமிழில் மொழிபெயர்க்கும்போது இது போன்ற அமைப்பைப் புகுத்தித் தவறுவர்.

அது பூனையாக இருக்கின்றது

என்பதுபோல் அப்படியே பெயர்த்து எழுதுவர்.

பயனிலையாகிய வினைமுற்று வாக்கியத்தின் இறுதியில் நிற்கும் தமிழ் அமைப்பு முறை உளநூலுக்கு (*psychology*) இயைந்த முறையாகவே உள்ளது. ஊமைகளின் மொழியில் வினைச்சொல்லை உணர்த்தும் இடம் எங்கே என்று ஆராய்ந்தால், அதற்கு முன்னே எழுவாய், செயப்படுபொருள், இடம், காலம் முதலான எல்லாவற்றையும் உணர்த்திவிட்டு இறுதியில் தான் வினையை உணர்த்துகின்றனர் என்பது விளங்குகின்றது.[11] ஆகவே, அது பேசுவோர் உள்ளத்தில்

---

tive to the subject in such a way that the noun, pronoun or adjective may be said to agree with the subject.—Stokoe, The Understanding of Syntax, p. 189.

11. Indeed, the verb seems to fix itself at the end of the sentence almost naturally, since the deaf-mute when taught to communicate with others invariably sets the verb in this position, the subject and object to which his thought is chiefly directed being the first to occur to his mind.—Sayce, Introduction to the Science of Language, p. 102.

எழும் எண்ணங்களின் இயற்கையான அமைப்பு என்பது தெளிவு.

3. எழுவாயும் பயனிலையும் திணை பால் இடம் எல்லாவற்றால் ஒத்திருத்தல் திராவிட மொழிகளின் இயல்பு.[12] ஐரோப்பிய மொழிகளில் எழுவாய் பயனிலைகளே அல்லாமல் பெயரடையாக வரும் சொற்களும் அவ்வப் பெயர்களோடு திணை பால் ஒத்திருத்தல் வேண்டும். ஆங்கிலத்திலும் அவ்வாறு இருந்த காலம் உண்டு. இப்போது '*good*' முதலான பெயரடைகள் எல்லாப் பெயர்களுக்கும் பொதுவாக உரியனவாய்த் திணை பால் வேறுபாடு உணர்த்தாதனவாய் வழங்குகின்றன.[13] ஆங்கிலம் அந்த நிலைமையும் கடந்து வளர்ந்துவிட்டது. பயனிலையாகிய வினைமுற்று ஆங்கிலத்தில் திணை பால் உணர்த்துவதில்லை. இறந்தகால எதிர்கால வினைகளான '*went*' '*will go*' முதலானவை எல்லாத் திணைபாலிடங்களுக்கும் பொதுவானவை. நிகழ்கால வினைகள்மட்டும் படர்க்கையில் ஒருமை பன்மை உணர்த்துகின்றன (*go, goes; come, comes*). திராவிட மொழிகளுள் மலையாள மொழி ஒன்றே ஆங்கிலத்தையும் கடந்து வளர்ந்துவிட்டது. மலையாளத்தில் எல்லா வினைமுற்றுக்களும் இருதிணை

---

12. வினையின் தோன்றும் பாலறி கிளவியும், பெயரின் தோன்றும் பாலறி கிளவியும், மயங்கல் கூடா தம்மர பினவே. (தொல். சொல். ௧௧.)

13. Every adjective and adjective-pronoun was declined in the three genders, and made to agree with its noun in gender as well as in number and case, just as if it were Latin or Greek. This completely passed from our memory and our conception, leaving not a trace behind.—Whitney, Language and the Study of Language, p. 78.

ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவானவை. தமிழில் அவ்வாறு இல்லை.

நண்பன் வந்தான்

என்னும் தமிழ் வாக்கியத்தில் இரு சொல்லும் படர்க்கை உயர்திணை ஆண்பாலாக ஒத்து அமைந்து வாக்கியமாயின.

நண்பன் உண்டு
நண்பன் இல்லை

என்ற வாக்கியங்களில் நண்பன் என்பதற்கேற்ப ஆண்பாலுணர்த்தும் பயனிலை இல்லை எனினும், இரு திணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாக வழங்கும் சொற்கள் பொருந்தும்.

4. பெயரடை எல்லாம் பெயர்க்கு முன்னும், வினையடை எலலாம் வினைக்கு முன்னும் அமைகின்றன.

நல்ல நண்பன் — பெயரடை
விரைந்து சென்றான் —வினையடை

**5.** ஆறும் வேற்றுமை உருபும், எல்லைப்பொருளை உணர்த்தும் ஐந்தாம் வேற்றுமை உருபும் பெயர் கொண்டு முடிவன. மற்ற வேற்றுமையுருபுகள் வினை கொண்டு முடிவன.[14] நான்காம் வேற்றுமையில் சில இடங்களில் ‘ கு ’ உருபு பெயர் கொண்டு முடியும்,

எனது கை — ஆறும் வேற்றுமை
சென்னையின் மேற்கு சேத்துப்பட்டு — ஐந்தாவது எல்லை ‘ இன் ’
அவனுக்குப் பகை — நான்காம் வேற்றுமை

---

14. எல்லை இன்னும் அதுவும் பெயர் கொளும், அல்ல வினை கொளும் (நன்னூல், பெயரியல்.)

தலைவனைக் கண்டேன் }
மண்ணால் செய்த குடம் } மற்றவை: செயப்படு பொருள்,
உனக்குத் தந்தேன் } கருவி முதலியன.

6. செப்பாக வரும் வாக்கியங்களுக்கும் வினாவாக வரும் வாக்கியங்களுக்கும் வேறுபாடு இல்லை எனலாம். செப்பு வாக்கியத்தின் ஈற்றில் ஆ ஓ முதலாயின வினா இடைச்சொற்களாக சேர்க்கப் படும். அல்லது, செப்பு வாக்கியத்தில் சுட்டுப் பெயர் நிற்குமிடத்தில் வினாப் பெயர் அமைக்கப் படும்.

இளங்கோ வந்தான் — செப்பு
இளங்கோ வந்தானா? — வினா
அங்கே கண்டான் — செப்பு
எங்கே கண்டான்? — வினா

7. இணைத்தற்கு வரும் உம்மை இடைச்சொல் (ஆங்கிலத்தில் '*and*' வருவதுபோல்) ஓரிடத்தில் வருதல் அமையாது; இணைக்கப்படும் பல சொற் களோடும் சேரும்.

சேரனும் சோழனும் பாண்டியனும் வந்தனர்.

(The Chera, The Chola, and the Pandiya came.)

8. இவ்வளவு என்று வரையறுத் துணரப்பட்ட வற்றின் பெயரைத்தொடர்ந்து வினை வரும்போது, அத்தொகுதிப் பெயருக்கு உம்மை கொடுத்துக் கூறல் வேண்டும்.[15]

15. இனைத்தென் றறிந்த சினைமுதற் கிளவிக்கு, வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும். (தொல் சொல். ௩௩.)

ஐந்து விரலும் சிவந்தன.
மூவேந்தரும் போற்றினர்.

எல்லாம் என்ற சொல்லும் இவ்வாறு தொகுதிப் பொருளுணர்த்துவதால், வாக்கியமாக அமையும் போது தொகுதிப் பெயரைச் சார்ந்து உம்மை வரும்.

எல்லா நாடுகளுக்கும் சென்றனர்.

வேற்றுமையுருபுகள் பெயர்க்குப் பின் தொடர்தலையும், இவ்வாறே பிற இடைச்சொற்கள் பெயர் வினைகளைத் தொடர்தலையும் முன்பு கண்டோம். இவையே தமிழ்ச் சொற்றொடரின் அமைப்பு முறை முறைகளாகும்.

இவ்வாறு அமைந்த சொற்றொடர் முறை பலவற்றிற்கும் காரணங்கள் இன்ன இன்ன எனத் தருக்க முறையால் ஆராய்ந்து கூறல் இயலாது. மொழியைப் பேசும் மக்கள் காரணங்களை ஆராய்ந்தே சொற்களையும் சொற்றொடர்களையும் அமைத்துப் பேசுகின்றனர் என்று சொல்வதற்கில்லை. காரணங்களை ஆராய்ந்து அமைக்கும் முறையும் உண்டு. ஆனால் அதனினும் சிறப்பாக அவர்கள் உள்ளத்தில் உள்ளது ஒன்று; அஃதாவது ஒருவரைப் போல் ஒருவர் பேசுதல், ஒருவர் முறையை ஒருவர் பின்பற்றல் என்று சொல்லத் தக்க ('போலச் செய்தல்' (*imitation*) என்னும்) இயற்கை ஆற்றலே ஆகும். இது விலங்குகளிடத்தும் பறவைகளிடத்தும் வளர்ச்சி பெறாமல் மக்களிடத்து மட்டுமே சிறந்து விளங்குவது. மொழியின் தோற்றத்திற்கும் பெருக்கத்திற்கும் இதுவே காரணம் என்பது முன்பு கண்டோம். மொழியின் வளர்ச்சிக்கும்

சிறப்புக்கும் அமைப்புக்கும் இதுவே காரணம். இதுவே ஒற்றுமைப்போலி (*analogy*) என மொழி நூலார் விளக்குவதாகும்.[16] இதனாலேயே சொற்றொடரமைப்புமுறை தொன்றுதொட்டுச் சில வாய்பாடுகளாக நிலைத்துவருகின்றது.

ஆதலின், செயப்படு பொருளை முன்னும் வினையைப் பின்னும் அமைக்கும் தமிழ் முறைக்கும், வினைக்குப் பின் செயப்படுபொருளை அமைக்கும் ஆங்கில முறைக்கும் காரணங்கள் இவை எனத் துணிவதற்கில்லை. தருக்க முறையான இலக்கண ஆராய்ச்சி இங்குச் செல்லாது. அவ்வாறே வேற்றுமையுருபுகளைப் பெயர்க்குப் பின் சேர்க்கும் தமிழ் முறைக்கும், அவற்றைப் பெயர்க்கு முன் சேர்க்கும் மற்ற மொழி

16. There have been attempts to find a sort of logical framework behind the rules of grammar, but language is too rich and not sufficiently rectilinear to lend itself to this presentment. It overflows the bounds of logic on every side. Moreover, its categories do not coincide with those of reasoning; having a method of procedure peculiar to itself, it at times constitutes grammatical groups which are not reducible to any abstract conception.

This logic rests entirely on Analogy, Analogy being the method of reasoning of children and the multitude. An expression is given; they form another somewhat like it. This one in its turn produces a third, slightly different, which again provokes imitations, the first and the second not having in the meantime ceased to be the productive. Language can go far in this way....What we must do is to retrace the road over which language has travelled, striving to recognise the turnings, and never forgetting that language being the work of the people, we must, to understand it, put off the logician and become one with the people ourselves.—Breal, Semantics, pp. 220, 227, 228.

களின் முறைக்கும் காரணம் காணல் இயலாது. அந்தந்த மொழிகளைப் பேசிய பண்டைக்காலத்து மக்கள் அமைத்த முறையே—அவர்கள் கையாண்ட வாய்பாடுகளே பிற்காலத்தாரால் பின்பற்றப்பட்டது எனலாம். இன்னும், தமிழ் பேசும் தாய் ஒருத்தி அவ் வாய்பாடுகளால் (எழுவாய் — செயப்படுபொருள் — வினைமுற்று எனவும், பெயர் + வேற்றுமையுருபு எனவும்) பேசித் தன் குழந்தை தன்னைப் பின்பற்றுமாறு செய்து பண்டை முறையைக் காத்துப் பரப்புகின்றாள். அவ்வாறே ஆங்கிலம் பேசும் தாயும் ஆங்கில அமைப்பு முறைப்படி பேசித் தன் குழந்தைக்குக் கற்பித்து அந்த முறையைப் பரப்புகின்றாள். ஆகையால் வேறுபட்ட சொற்றொடரமைப்பு உடைய மொழிகள் இன்றுவரை அவ்வாறே வேறுபட்டு வழங்கிவருகின்றன.

ஒரு மொழியினர் மற்றொருவகை மொழியினரோடு கலந்து நெடுங்காலம் பழகிய பின்பும் சொற்றொடரமைப்பில் கலப்புக் காணப்படுதல் அரிதாகவே உள்ளது. முதலில் கலப்பன பெயர்ச் சொற்களே; அவற்றிற்கு அடுத்தநிலையில் எளிதில் கலப்பன பெயரடைகள்; பிறகே வினையடைகள் கலக்கும்; வினைச் சொற்கள் அரிதில் கலப்பன; சொற்களைப் பிணைத்துச் சொற்றொடர் அமைக்க உதவும் இடைச்சொற்களோ கலத்தலே இல்லை எனலாம்.[17] ஆயின், கலப்பனவும் மாறுவனவுமாகிய ஒலியியல் (*Phonetis*), சொற்பிறப்பு (*Etymology*), சொற்பொருள் (*Sematology*), சொல்லமைப்பு (*Morphology*) என்பவற்றை ஆராயச் செய்

17. Whitney, The Life and Growth of Language, p. 119.

யப்படும் அவ்வளவு முயற்சி, கலப்பும் மாறுதலும் இல்லாத சொற்றொடரமைப்பு (*Syntax*) பற்றிச் செய்யப்படுவதில்லை.

ஒவ்வொருவரும் ஓயாமல் இரவும் பகலும் மூச்சு வாங்கி விட்டுக்கொண்டே இருக்கின்றனர். ஆயின், அவ்வாறு மூச்சு வாங்கிவிடும் தொழில் எவ்வாறு நடைபெறுகின்றது என்பதை ஆராய்வோர் ஒரு சிலரே, அதுபோலவே எல்லோரும் மொழியைப் பேசியும் எழுதியும் ஆளுகின்றனர். ஆனால், எவ்வாறு சொற்கள் தொடர்ந்து அமைகின்றன என்பதை ஆராய்வோர் ஒரு சிலரே. ஒருவனுக்குத் தன் காலும் தெரியும்; காலால் நடக்கும் வழியும் தெரியும்; ஆனால் இரண்டு கால்களும் மாறி மாறி அடி எடுத்துவைத்து நடக்கும் முறையை அவன் எண்ணிப் பார்ப்பதில்லை. மொழியை வழங்குவோனும் அந் நிலையிலேயே உள்ளான். அவனுக்கு ஒலிகள் தெரியும்; சொற்கள் தெரியும்; அவைகொண்டு உணர்த்தும் பொருளும் தெரியும்; ஆனால் அந்தச் சொற்கள் அந்தப் பொருளை உணர்த்துவதற்காக, ஒன்றை ஒன்று தொடர்ந்து அமையும் அமைப்புத் தெரிவதில்லை. ஒலியும் சொல்லும் பொருளும் அறிந்தவன் சொற்றொடரமைப்பை அறிவதில்லை; அறிய முயல்வதும் இல்லை. இதுதான் சொற்றொடர் அமைப்பு (வாக்கிய அமைப்பு) என்னும் மொழியியற் பகுதி தக்கவாறு விளக்கப்படாமல் இருத்தற்குக் காரணமாகும்.

ஒருவன் தன் மூச்சின் இயக்கத்தை ஆராயத் தொடங்கின், மூச்சுத் தடைப்படுவதும் உண்டு. தன்

கால்களின் இயக்கத்தை ஆராயத் தலைப்பட்டால், நடை தடைப்படுவதும் உண்டு. ஆதலின், சொற்றொடரமைப்பினை உணர்வதால், மொழியின் இயல்பான போக்கிற்குத் தடை நேருமோ என்ற அச்சம் சிலர்க்கு உண்டு. எவ்வாறாயினும் ஆகுக, மொழியின் இயல்பை உள்ளவாறு உணர விரும்புவார்க்குச் சொற்றொடர் ஆராய்ச்சி இன்றியமையாததாக உள்ளது. ஒலியையும் சொல்லையும் சொற்பொருளையும் ஆராய்ந்தவர் மொழியியல் தெளிந்தவர் ஆகார். அவர் மொழியின் ஆடையும் அணியும் உடலும் பற்றி ஆராய்ந்தவரே அன்றி, மொழியின் வாழ்வைத் தெளிந்தவர் அல்லர். சொற்றொடரின் அமைப்பே ஒரு மொழியின் உயிர் எனலாம். அதனை ஆராய்ந்து அறிந்தவரே, மொழியின் உயிர்வாழ்வை அறிந்தவர் ஆவர்.

ஆடையும் அணியும் மாறுவதுபோல ஒரு மொழியின் ஒலியும் சொல்வடிவும் அடிக்கடி மாறக் காண்கின்றோம். வளர்ச்சியின் காரணமாக உடல் மாறுவது போலவே, சொற்பொருளும் அடிக்கடி மாறக் காண்கின்றோம். ஆதலின், நிலையின்றி மாறிவரும் இவற்றை அடிப்படையாகக் கொண்டு நிகழ்த்தும் மொழியாராய்ச்சியும் பயனற்றுப் போகும். தமிழ்மொழி வடமொழியிலிருந்து பிறந்ததென்றும், சித்திய இனத்தைச் சார்ந்தது என்றும், இன்னும் பலவாறும் பலர் ஆராய்ந்த ஆராய்ச்சிகளெல்லாம் இத்தகைய ஆராய்ச்சிகளே ஆதலின், பயனற்றுப்போயின. வடநாட்டில் வழங்கும் மொழிகளெல்லாம் ஐரோப்பிய மொழிகளென்று வகுத்து முன்பு இடர்ப்பட்டவர்களும், இந்தோ-ஐரோப்பிய மொழிகள் என வகுத்து இன்று

மயங்குகின்றவர்களும் உண்மை காணுமைக்கும் இதுவே காரணமாகும். இவர்களுள் பலரும் சொற்ருெடரமைப்பை ஆராயத் தவறினர்; சிலரே அம் முயற்சியில் தலைப்பட்டனர்; அவரும் போதிய அளவு உழைக்கவில்லை. சொற்ருெடரமைப்பும் ஆராய்தற்கு எளிய துறையாக இல்லை; மிக மிக அரிதாகவும் நுண்ணிதாகவும் உள்ளது.

அரியதே ஆயினும் அந்த ஆராய்ச்சி இன்றியமையாததாகும். மொழி என்பது கருத்தைப் புலப்படுத்தும் கருவி. அந்தக் கருத்திற்கு—எண்ணத்திற்கு ஒலிவடிவான சொல்லும் அச்சொல் உணர்த்தும் பொருளும் உடையாகவும் உடலாகவும் அமைந்து உதவுகின்றன. ஆனல், அவற்ருல் எண்ணம் அமைந்து வளர்ந்த முறையை — எண்ணத்தின் போக்கை உணரமுடியாது. எண்ணத்தின் போக்கை நேரே உணர்த்துவது சொற்ருெடரமைப்பே ஆகும்.[18] ஆதலின், தாய் மொழியைத் தெளிய விரும்புவோராயினும், பிறமொழியைக் கற்க விரும்புவோராயினும், யாவர்க்கும் இந்த ஆராய்ச்சி வேண்டும்.

18. Phonetics deal for the most part with the physical and physiological side of human speech; they show how sounds, the primitive elements of every language, are from time to time modified by various causes. Accidence and syntax have but little to do with physical facts-only so far as changes of sounds exercise influence on them. The proper department of accidence and syntax is to study the psychical process as they reveal themselves in the structure of human speech.—Kellner, Historical Outlines of English Syntax, p. 3.

ஆங்கிலேயர் தமிழைக் கற்கும்போது ஒலியும் சொல்லும் கற்ற பிறகும், தமிழைப் பேச முடியாமல் இடர்ப்படுவது உண்டு. இவ் விடர்ப்பாட்டையும் கடந்து தமிழில் தேர்ந்தவர் ஒரு சிலரே. அவருள் டாக்டர் ஜி. யு. போப் தலையானவர். அவரும், தம் அனுபவத்தின் பயனாக, தமிழரைப் போல் எண்ணவும் உணரவும் முடிந்தாலன்றி, தமிழரைப் போல் பேச முடியாதெனத் தெளிவுறுத்தியுள்ளார். வேறு இனத்தைச் சார்ந்த ஒரு மொழியைக் கற்கும்போது, சொற்றொடரமைப்பைக் கற்றாலன்றிப் பயன் விளையாது. சொற்றொடரமைப்பைக் கற்பது என்றால். அம்மக்களின் எண்ணப்போக்கைக் கற்பது ஆகும். ஆதலின், தமிழரைப் போல் எண்ணத் தெரிந்தாலன்றி அவர்களைப் போல் பேச இயலாது என்ற உண்மையை அறிஞர் போப் வலியுறுத்தியுள்ளார்.[19]

ஆங்கிலேயன் எண்ணுவதும் தமிழன் எண்ணுவதும் ஒரே கருத்தாக இருக்கலாம். ஆனால் ஆங்கிலேயன் உள்ளத்தில் அந்தக் கருத்து வளர்ந்தமைந்த முறைக்கும் தமிழன் நெஞ்சத்தில் அது வளர்ந்தமைந்த முறைக்கும் வேறுபாடு உள்ளது. இரண்டு வாக்கியங்களை எடுத்துக்காட்டாகக் காண்போம்.

I went to his house

நான் போனேன் - கு - அவனுடைய வீடு

இஃது ஆங்கிலேயன் எண்ணப்போக்கை விளக்குவதாகும். எழுவாயை முன்னே எண்ணி, பிறகு செயலை

19. G. U. Pope, A Handbook of the Ordinary Dialect of the Tamil Language, p. 193.

எண்ணுகின்றான். பிறகுதான் அந்தச் செயலிற்கு உரிய இடமும் அந்த இடத்திற்கு உரியவனைப் பற்றிய உரிமைக் குறிப்பும் அமைகின்றன. செயலிற்கும் இடத்திற்கும் இடையே வேற்றுமைக் குறிப்பு ('கு' உருபு) அமைகின்றது. இது பல தலைமுறைகளாக ஆங்கிலேயர் கூட்டத்தில் எண்ணங்கள் வளர்ந்தமைந்து பண்பட்ட முறையாகும். ஆதலால், இன்று அவர்களுக்கு இதில் புதுமை ஒன்றும் இருப்பதில்லை. இன்று சைகில் செலுத்தும் இளைஞன், அந்தச் சைகிலை என்னும் ஊர்தியின் வரலாற்றைப் பற்றிக் கவலைப்படுகின்றானா? முதலில் அது மூன்று சக்கரம் உடையதாய்த் தோன்றியதையும், ஒரு சக்கரம் உடைந்த போது அதைச்செலுத்தியவன் எஞ்சிய இரு சக்கரங்களைக்கொண்டு இடர்ப்பட்டதையும், விடாமுயற்சியின் பயனாக அந்த இரு சக்கரங்களைக் கொண்டே செலுத்தும் முறையில் வெற்றி கண்டதையும், காலப் போக்கில் அதன் உருவம் எவ்வெவ்வாறு படிப்படியாக மாறிவந்தது என்பதையும் இன்று அந்த இளைஞன் எண்ணிப் பார்ப்பதில்லை. அதுபோலவே ஆங்கிலேயனுக்குத் தன் தாய்மொழி வாக்கியத்தில் புதுமை ஒன்றும் தோன்றுவதில்லை. ஆயின், அவனே பிற மொழியின் வாக்கியம் ஒன்றைப் படிக்கும்போது, அதில் எழுவாயும் பயனிலையும் இடமும் உருபும் பிறவும் எங்கெங்கே அமைந்துள்ளன என்பதைக் காணும் போது, வேறுபாடுகளைக் கண்டு மருள்கின்றான். அவ்வாறே நாமும் ஆங்கிலம் முதலான பிறமொழிகளின் சொற்றொடரமைப்பைக் காணும்போதுதான், வேறுபாடு உணர்கின்றோம்.

நான் அவனுடைய வீட்டுக்குப் போனேன்

என்னும் தமிழ் வாக்கியம்,

I his house to went

என்று ஆங்கிலத்தில் சொற்பெயர்க்கப் பட்டபோது (மொழி பெயர்ப்பு அன்று, சொற்பெயர்ப்பு மட்டுமே) வேறுபாடு தெளிவாகும். இவ்வேறுபாடு பற்றியே ஆங்கில மொழி வேறு இனம், தமிழ் வேறு இனம், என்று கூறல் வேண்டும்.

அன்றி, ஒலியாலாகிய சொல் பற்றியோ சொல்லா லுணரும் பொருள்பற்றியோ மொழிகளை ஆராயத் தலைப்பட்டால், உண்மை புலனாகாது. ஆயிரம் ஆண்டு களுக்கு முற்பட்ட மக்கள் வழங்கிய தமிழும் இன் றுள்ள மக்கள் வழங்கும் தமிழும் அந்த ஆராய்ச்சியின் படி வெவ்வேறு இனத்தைச்சார்ந்த மொழிகளாகி விடும். சொல்வடிவும் சொற்பொருளும் கொண்டு நிகழ்த்தும் ஆராய்ச்சியின்படி, சங்ககாலத் தமிழும் இன்று பேசும் தமிழும் உறவற்ற மொழிகளாகத் தோன்றும்; தமிழும் தெலுங்கு கன்னடம் மலையாளம் முதலான மற்றத் திராவிட மொழிகளும் வெவ்வேறு இனங்களைச் சார்ந்த மொழிகள் எனக் கூறித் தடுமாற நேரும்.

நான் அவனுடைய வீட்டுக்குப் போனேன்

என்பது இன்றுள்ள தமிழர் பேசும் வாக்கியம். பல நூற்றுண்டுகளுக்கு முன்பு

யான் அவன் இல்லம் சென்றேன்

என்றுவது

யான் அவன் இற்கு ஏகினேன்

என்றுவது, வேறு வடிவிலாவது வழங்கியிருக்கும். இது பல நூற்றுண்டுகளுக்கு முன் இருந்த தமிழர் பேச்சு பேசி வந்த பேச்சு எனலாம். இந்த மக்களின் மூதாதையரே பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பு வட இந்தியாவில் கங்கைக் கரையில் வாழ்ந்தவர்கள். அந்த மக்களும் இக் கருத்தை

யான் ஆன் இற்குச் சென்று

என்பது போலக் கற்பனையளவில் கருதக்கூடிய ஒரு வாக்கியத்தைப் பேசியிருக்கக்கூடும். ஆரியர் வந்து கலந்த பிறகு அவர்தம் மொழியிலிருந்த பல சொற்களை நாகரிகமானவை எனக் கருதி, இதே சொற்றொடரமைப்பில் புகுத்தினர். இன்னும் பல நூற்றுண்டுகளுக்குப் பிறகு முகம்மதியர் வந்து கலந்த பிறகு அரேபிய பாரசீகச் சொற்களும் நாகரிகமாகக் கருதப்பட்டு, அதே சொற்றொடரமைப்பில் இடம் பெறலாயின. இவ்வாறு, ஒலியும் சொல்லும் மட்டும் மாறி அந்த வாக்கியம் அதே அமைப்பில் இன்றும் நிலவுகின்றது. அந்தப் பழங்கால மக்களின் வழி வந்தவர்களாக இன்று கங்கைக் கரையில் வாழும் மக்கள் அந்த வாக்கியத்தை எவ்வாறு பேசுகின்றனர்?

மை உன்கா கர்க்கு ஜாயா
நான் அவனுடைய வீட்டுக்குப் போனேன்

அந்தப் பழைய திராவிட மொழியின் வாக்கிய அமைப்பே இன்று கங்கைக் கரையில் வழங்கும் இந்தி வாக்கிய அமைப்பாக உள்ளது. இதன் காரணம்

என்ன? ஒலிகள் மாறின, சொற்கள் மாறின, சொற் பொருளும் மாறின; ஆனால் மக்களின் எண்ணப் போக்கு மாறவில்லை; அதனால் சொற்றொடரமைப்பு மாறவில்லை; எழுவாய் முதலிலும், வினைமுற்று இறுதியிலும், இடம் அதன் முன்னரும், வேற்றுமையுருபு பெயரின் பின்னரும் அமைகின்ற அமைப்பு முறை மாறவில்லை.[20] இந்த அமைப்பு முறை, கங்கைக் கரையில் பழங்காலத்தில் வாழ்ந்த மக்களின் மொழியில்—திராவிட மொழியில் இருந்ததே அல்லாமல், அங்கு வந்து குடியேறிய ஆரியர் மொழியிலும் இருந்ததில்லை; இன்றும் அந்த மொழிக்கு உறவாக உள்ள லத்தீன், கிரீக், பிரஞ்சு, ஜெர்மன் முதலான மொழிகளிலும் இல்லை. பிற்காலத்தில் வந்து குடியேறிய அரேபியர் மொழியிலும் இல்லை, பாரசீகர் மொழியிலும் இல்லை. அந்தந்த மொழிச் சொற்கள் வந்தன; கலந்தன; வாழ்ந்தன. ஆனால் அவையெல்லாம், ஆடையணிகளின் மாற்றமே அன்றி மொழியின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றமன்று; மொழியின் உயிராகிய சொற்றொடரமைப்பு ஒரு சிறிதும் மாறவில்லை. கங்கைக் கரையில் இன்று வாழும் மக்களின் எண்ணப்போக்கும், கோதாவரியின் கரையில் வாழும் தெலுங்கரின் எண்ணப்போக்கும், பொருநையாற்றங் கரையில் வாழும் தமிழரின் எண்ணப்போக்கும் ஒரே தன்மையவாக இருக்கின்றன. ஆயினும், மொழிநூலில் முதலிடம் பெற்று ஆராய்தற்கு உரியதாக உள்ள இது புறக்கணிக்கப்படுகின்றது. ஆதலின், வெறுஞ் சொல்

லாராய்ச்சியும் ஒலியாராய்ச்சியும் செய்யப்பட்டு, வட நாட்டு மொழிகள் எல்லாம் ஐரோப்பிய இனம் எனக் கொள்ளும் கொள்கை வாழ்ந்துவருகின்றது.

அன்று கங்கைக் கரையில் பழஞ் சொற்களைக் கைவிட்டு நாகரிகம் என மயங்கிப் புதுச் சொற்களைப் பேசிய மக்களைப் போலவே, இன்றும் காவிரிக் கரையில் தமிழ்ச் சொற்களைக் கைவிட்டு பிறமொழி மோகமுற்று ஆங்கிலச் சொற்களைப் பேசுவோர் உள்ளனர்.

நான் அர்ஜண்டாய் ஸ்டார்ட் பண்றேன்
(நான் urgent ஆய் start பண்ணுகிறேன்)
[நான் விரைவாய்ப் புறப்படுகிறேன்)

என்று ஆங்கிலச் சொற்கள் இடம் பெற்ற ஒரு மொழியை ஆங்கிலத்தின் இனம என்று மொழியாராய்ச்சியாளர் கொள்வாரோ?[21] ஒருகாலும் கொள்ளார். ஆயின், இன்று வட இந்தியாவில் வழங்கும் மொழிகளைப்பற்றிய வரையில் ஆடையணிகளான ஒலி முதலியவைகளைக் கண்டு அவற்றையெல்லாம் ஐரோப்பிய இன மொழிகள் என்று வகுக்கும் முறை வியப்பாகவே உள்ளது.

21. In comparing languages we have first to compare their grammars, not their vocabularies. The reason of this is obvious. It is in the sentence, not in the isolated word, that languages agree or differ, and grammar deals with the relations that the several parts of the sentence bear to one another.—Sayce, Introduction to the Science of language. p.48.

# மொழிபெயர்ப்பு

நண்பர் ஒருவர் ஆறு பக்கங்கள் நிரம்ப எழுதிக் கொண்டு வந்து, "இவற்றைப் பார்த்துத் தருக" என்றார். இரண்டு நாள் கழித்து அவரைக் கண்டு, "கட்டுரை மிக நன்று; பாட்டு ஒன்று இனிது அமைந்துள்ளது. மற்றொன்றில் பாட்டின்பமே காணேன்" என்றேன். மற்றொன்று எது?" என்றார். சுட்டிக் காட்டினேன். "என்ன ஐய! அதைத்தானே நண்பர் சிலர் வியந்து பாராட்டினர். உம் கருத்து மாறாக இருக்கின்றதே! அது டென்னிசன் எழுதிய பாட்டின் (In Memoriam என்பதன்) மொழி பெயர்ப்பு ஆயிற்றே!" என்றார். உடனே அந்தப் பாட்டை ஆங்கிலத்தில் படித்துணரல்வேண்டும் என்ற வேட்கை என் உள்ளத்தே எழுந்தது.

இருவாரம் கழித்து ஒருநாள் ஓய்வு வாய்த்தது. டென்னிசன் பாட்டைப் படித்தேன். ஆங்கிலத்தில் அழகிய நடையில் உணர்வு கலந்து பாடிய சிறந்த பாட்டு அது. பாடி முடித்தபின் நண்பர் மொழிபெயர்த்த பாட்டில் உணர்வு ஒரு துளியும் இல்லையே; என்ன காரணம் என்று மேன்மேலும் எண்ணினேன்; எண்ணினேன் என்பது கோடி. 'மொழிபெயர்ப்பு' என்ற தொடரைப் பற்றிய ஆராய்ச்சி வந்துற்றது.

சென்ற நூற்றாண்டில் ஆங்கிலத்திலிருந்து தமிழிற்கும், தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கும் கருத்துக்களைப் பெயர்த்தல் ஒரு கலையாக வளர்ந்துவந்தது. ட்ரான்ஸ்லேஷன் (Translation) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நேராகத் தமிழ்காணத் தலைப்பட்டவர் எவரோ, அறியேன். அதற்கு உரிய சொல் அவர்க்கு எளிதில் வந்தது. 'மொழி பெயர்ப்பு' என்பது அவர் கண்ட சொல்.

அவர் அந்தச் சொல்லை ஆக்கினர் என்பது தவறு: போற்றினர் என்பதே பொருந்துவது. ஏன்? அது பழந்தமிழில் காணும் சொல்லே ஆகும்.

மொழி பெயர்ப்பு என்ற சொல்லைக் கேட்டதும், பலர்க்கும் பலவகை நினைவு தோன்றல்கூடும். பரீட்சை வினைத்தாள்களும், அவற்றில் நீண்டமைந்த ஆங்கில வாக்கியங்களும் இடையிடையே புதிய அரிய ஆங்கிலச் சொற்களும் ஒருவகை மயக்கமும் சிலர் நினைவிற்கு வரும். ஒரு பெரிய மேடையில் தலைவர் அமர்ந்திருக்க, வலப்புறத்தில் ஒருவரும் இடப்புறத்தில் மற்றொருவருமாக நிற்க, ஒருவர் ஆங்கிலத்தில் முழநீளம் பேசி வியர்க்க, மற்றொருவர் அதைச் சாணளவிற்குக் குறைத்து உப்பின்றி உரைக்கக் கண்ட காட்சி சிலர் நினைவில் எழலாம். (அவ்விருவரும் தமிழராகவே இருத்தலும், அவருள் ஒருவர் "எனக்கு டமிள் பேச வராது. இங்லீஷில் பேசுவதற்காக மன்னிக்க வேணும்" என்று முன்னுரை கூறலும் இயற்கை.) 'துப்பு இங்கே', 'அத்துமீறி நடக்கிறவர்கள் தண்டிக்கப்படுவார்கள்' என்பன போன்றவைகளையும் சிலர் நினைத்தல் கூடும். வேதாரணியம் (மறைக்காடு), விருத்தாசலம் (முதுகுன்றம்) முதலான ஊர்களும் சிலர் நினைவிற்கு வரும். இங்ஙனம் நினைப்புக்கள் பல ஆகலாம். ஆனல் சங்கத்தமிழைச் சுவைத்த மனத்திற்கு மொழிபெயர்ப்பு என்ருல் இவை வாரா. மற்று, எவை நினைவிற்கு வரும்? பண்டைத்தமிழர் இல்வாழ்க்கை, பொருள் வேட்கை, செல்வம் தேடிய சிறப்பு, பரபரப்பான கால்கள், சுறுசுறுப்பான மனம், காடு மேடு பாலை என்று தயங்காமல் ஏறுபோல் நடந்த பீடு நடை, பிறநாடுகளுக்குச் சென்று அந்நாட்டு மக்களுடன் பழகித் தமிழொலி பரப்பி மீண்ட வெற்றி—இவை யாவும் சங்கத்தமிழ்ச்சுவை அறிந்தவர் மறக்க முடியாதன. அகநானூறு என்னும் அருமணிப் பேழையுள் சில இடங்கள் மொழி பெயர்தலை அறிவிக்கும்.

இக்காலத்துப் பலர், செல்வம் என்ருல் குசராத்தியரும் பிறரும் வைத்துள்ள கடைகளையும் அக்கடைகளில் நாட்டுச்செல்வம் சென்று குவிதலையும் எண்ணுவர். அக்காலத்து மக்களோ,

செல்வம் என்றால், வேங்கடமலை கடந்து வடநாடுகளுக்குச் சென்று உண்மையுடனும் ஊக்கத்துடனும் வீரத்துடனும் வாணிகம் செய்து உழைத்த உழைப்பின் பயனாய்த் திரண்டு தமிழ்வீடு நோக்கி வந்த அந்தச் செல்வத்தையே எண்ணினர். அன்று அவ்வாறு நாடு கடந்து சென்று செல்வம் சேர்க்க விரும்பிப் பிரிந்த குடும்பத் தலைவனைப் பற்றிய பாடல்கள் மேற்குறித்த அருமணிப்பேழையுள் உள்ளன. சில அடிகள் வருமாறு,—

> சென்றார் என்பிலர் தோழி............
> தமிழ்கெழு மூவர் காக்கும்
> மொழிபெயர் தேஎத்த பன்மலை இறந்தே. (அகநா. 31)
> கல்லா மழவர் வில்லிடந் தழீஇ
> வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை
> மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்
> பழிதீர் காதலர் சென்ற நாட்டே. (ஷை 127)
> கல்பிறங்கு ஆரிடை விலங்கிய
> சொல்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே, (ஷை 205)
> பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
> மொழிபெயர் தேஎத்தர் ஆயினும் நல்குவர். (ஷை 211)
> எவனாய்ந் தனர்கொல் தோழி............
> சொல்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே. (ஷை 349)

இவ்வாறு தமிழர் வாழ்ந்த நல்வாழ்வை நினைவூட்டுகின்றது மொழி பெயர்ப்பு என்ற சொல். மொழிபெயர்ப்பு என்று அமைக்காமல் சொற்பெயர்ப்பு என்றோ எழுத்துப் பெயர்ப்பு என்றோ அமைத்திருப்பின் தொல்லையாக முடிந்திருக்கும் போலும்!

ஒருநாள் தபாலில் அழைப்பிதழ் இரண்டு வந்தன. ஒன்று தமிழ்; மற்றொன்று ஆங்கிலம். தமிழை முதலில் படித்தேன். ஒரு சங்கத்தின் ஆண்டு விழாக் கூட்டத்திற்கு வருமாறு அழைத்த அழைப்பு அது. அதில் இருந்த ஒரு வாக்கியம்: "இந்தக் கூட்டத்திற்கு வருமாறு நீங்கள் வேண்டிக்கொள்ளப்படுகிறீர்கள்." இந்தத் தமிழ் எனக்கு எட்டிக் கசப்பாக இருந்தது. ஆனால் அனுப்பின சங்கத்தாரோ தமிழ்ப்பற்று மிகுந்தவர்கள்.

அவர்கள் செய்யும் தமிழ்த்தொண்டோ மிகப்பெரிது. அத் தமிழ்ப் பற்றையும் தமிழ்த்தொண்டையும் நினைந்தேன். இனிய நினைப்பு ஆதலின் கசப்பு ஒருவாறு மாறியது. பிறகு ஆங்கிலத்தில் உள்ள அழைப்பிதழைப் படித்தேன். "You are requested to attend the meeting" என்று எழுதியிருந்தது. மொழிபெயர்க்கும் முயற்சியால் விளைந்த தீமை என்று உடனே உணர்ந்தேன். அந்த ஆங்கில வாக்கியத்திலுள்ள எல்லாச் சொற்களையும் அப்படியே தமிழாக்கி எழுதினது பிழையாகும். அதுதான் **சொற்பெயர்ப்பு** என்பது. இஃது ஒரு சிறிய உதாரணம். எவ்வளவோ நூல்கள் தமிழில் அவ்வாறு எழுதப்பட்டுள்ளன. அவற்றைப் படிக்கும்போதே சொற்பெயர்ப்பு என்பதன் தீங்கினை உணரலாம். தபால் விதிகளும் ரயில் விதிகளும் இவை போன்றவைகளும் தமிழில் உள்ளவை இந்த இனத்தில் சேரும். ஒரு மொழியின் உயிர், எழுத்திலும் சொல்லிலுமே இருப்பதாகாது. அது வாக்கிய அமைப்பிலேயே வாழ்வதாகும். இந்த உண்மையை மறந்தவர்கள் எழுதும் தமிழ் இப்படித்தான் நெளியும்.

ஆங்கிலம், இங்கிலாந்து, ஐரோப்பா, கிறித்து முதலான சொற்கள் தமிழ் வடிவாக அமைந்துள்ள அழகு போற்றத் தகுந்தது. ஆனால், இக்காலத்துப் பத்திரிகை ஆசிரியர்கள் சிலர் நூற்றாண்டுகளுக்குமுன் பிறந்திருந்தால், இங்கிலீஷ், இங்கிலாண்ட், யூரப், கிரைஸ்ட் என்றே எழுதல்வேண்டும் என்று ஓர் இயக்கம் தொடங்கியிருப்பார்கள். நல்லகாலமாக அந்தச் சொற்கள் தப்பிப் பிழைத்தன. பிறமொழி எழுத்துக்களையும் அப்படியே பெயர்த்து எழுதவேண்டும் என்று இக்காலத்தினர் சிலர் விரும்புகின்றனர். அதைத்தான் **எழுத்துப் பெயர்ப்பு** எனல்வேண்டும். சீன மக்களிடம் சென்று 'கிரைஸ்ட்' என்று சொல்லுமாறு வற்புறுத்தினால் அவர்கள் நகைப்பார்கள். 'கிலிசெது' என்று ஒலிக்கக் கேட்பதிலன்றோ சீனத் தலைவர் சியாங் கேஷேக் என்பாரும் ஆங்கிலம் அறிந்த அவர் துணைவியாரும் மகிழ்வார்கள்? சப்பானியரும் 'க்ரைஸ்ட்' என்பதில்லை; 'கிரிசெது' என்பார்கள். எழுத்துப் பெயர்ப்பிற்கு அவர்கள் மனம் பெயர

வில்லை. ஆங்கிலேயர் 'திருநெல்வேலி' என்னுமல் 'டின்னவெலி' என்று தம் ஒலியியலுக்கு ஏற்பக் கூறுவர். எழுத்துப் பெயர்ப்பிலும் சொற்பெயர்ப்பிலும் நோக்கம் செலுத்தித் தாய்மொழியினை மறப்பவர் அவர்கள் அல்லர். தாயை வருத்திப் பேயும் பூதமும் களிக்க விருந்திடுவோர் அவர்கள் அல்லர்.

ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை

என்று திருவள்ளுவர் வகுத்த பேதையர் இனத்துள் சேர்வோர் அவர்கள் அல்லர்.

நண்பர் கொணர்ந்த பாட்டில் எழுத்துப்பெயர்ப்போ, சொற்பெயர்ப்போ இல்லை. ஆயினும் பாட்டின்பம் பெருமைக்குக் காரணம் என்ன? மொழிபெயர்ப்பு என்று எவற்றையும் மொழிபெயர்த்திடல் முடியாது. திருவாசகத்தைப் பல ஆண்டுகள் பாடிப் படித்து உருகி உணர்ந்த அறிஞர் போப் என்பவரின் பேருழைப்பின் பயனாக வெளிவந்துள்ள ஆங்கில மொழிபெயர்ப்பான திருவாசகத்தை நோக்கினால் உண்மை விளங்கும். உயிரின் உணர்வு இன்றி மூளையின் உழைப்பு மட்டும் கொண்டு வெளிவந்த நூல்களை மொழிபெயர்த்திடலாம். வரலாறுகள், கலைநூல் முதலியன, அவைபற்றிய ஆராய்ச்சிகள், அரசியல் சட்டங்கள், சங்கவிதிகள், உலக நிகழ்ச்சிகள் முதலானவற்றை மொழிபெயர்த்தல் கூடும். உணர்வு மிகுதியாகக் கலந்த சிறந்த பாடல்களையும் நாடகங்களையும் கட்டுரைகளையும் மொழிபெயர்த்தல் எளிதன்று. இவற்றை அருளியுதவும் இயற்கையறிவு வாய்ந்த புலவர் எல்லாவற்றையும் வெளிப்பட உரைப்பாரல்லர். சிலவற்றை வெளிப்பட உரைப்பர்; சிலவற்றைக் குறிப்பால் புலப்படுத்துவர்; சிலவற்றைக் கூறாது விடுத்து ஒழியிசை யாக்குவர். வெளிப்பட உரைப்பனவே மொழிபெயர்ப்புக்கு இயையும். மற்றவை இயையா. குறிப்பிலும் ஒழியிசையிலுமே புலவர் உணர்வு கலந்து வாழும். ஆதலின், நண்பர் மொழிபெயர்த்த பாட்டில் உணர்வு இல்லா வறுமை கண்டேன். அது போன்ற பாட்டுக்களை உயிரில்லாப் பாட்டுக்கள் எனலாம். இயற்கையறிவு வாய்ந்தவர் இத்தகைய மொழிபெயர்ப்பில்

காலம் கழித்தல் ஆகாது. மொழிபெயர்ப்பில் மூழ்ந்தால் இயற்கையறிவினை இழந்துவிடுவர். இதனை நண்பருக்கு மற்றொரு நாள் சுட்டிக் காட்டினேன்.

தமிழ்மாணவர் எனப் புகழ்பெற விரும்பிய அறிஞர் போப் போன்றவர் மேற்கொண்ட முயற்சியைக் குறைகூறுதல் தக்கது அன்று. மொழிபெயர்ப்பின் குறையே அன்றி மொழிபெயர்ப்போர் குறை அன்று எனலாம். அறிஞர் போப் முயற்சியால்தான், இன்று ஆங்கிலம் அறிந்த பிறநாட்டினரும், தமிழ் அறியாத் தமிழ் நாட்டினரும் திருவாசகம், திருக்குறள், நாலடியார் என்பன என்ன என்று அறியமுடிகின்றது. அது போலவே, டென்னிசன் மொழிபெயர்ப்புப் பாட்டும் உணர்வு ஊட்டாவிடினும் இன்னது என்று அறிவிக்கும். கீதாஞ்சலி ஆசிரியர் தாகூர் அதனை வங்காளி மொழியில் பாடினார். அவரே அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்; நோபெல் பரிசும் பெற்றார்; உலகப் புகழும் உற்றார். ஆனால் ஆங்கிலேயருள் அறிஞர் சிலர் மொழிபெயர்ப்பைப் படித்த அளவில் அமையாமல், வங்காளி மொழியினைக் கற்று, அம்மொழியில் அந்நூலைப் பாடி இன்புற்றனர். எனினும் அவர்கள் பெற்ற இன்பம், வங்காளியைத் தாய்மொழியாகக் கொண்ட அறிஞர் ஒருவர் பெறும் இன்பத்தில் ஒரு பகுதியே ஆகும்.

பிறநாட்டுக் கலைகளின் இயல்பை அறிவதற்காக மொழிபெயர்ப்பு நூல்களின் துணை வேண்டும். ஆனால் பாட்டின்பத்திற்காக மொழிபெயர்ப்பை நாடுவதில் பயனில்லை. தமிழில் பாட்டுக்குப் பஞ்சம் இல்லை. புலமைக்குத் தமிழ்நாடு பேர்பெற்றது. திருவள்ளுவர், இளங்கோவடிகள், மாணிக்கவாசகர், ஆண்டாள், குமரகுருபரர் முதலானோர் பிறந்த நாட்டில் பிறந்து, அவர்கள் பேசிய மொழி பேசி, அவர்கள் வளர்த்த நாகரிகத்திலும் ஒருவாறு வளர்ந்து, அவர்கள் பாடிய பாட்டுக்களை அந்தத் தாய்மொழியிலேயே பாடி இன்புறும் பேறு பெற்றதை நினைக்க நினைக்க மனம் இறுமாப்பு உறுகின்றது. அத்தகைய தாய்மொழியைத் தக்கமுறையில் போற்றுவோரும் போற்றுவோர்க்குத் துணை ஆற்றுவோரும் பெருகவில்லையே என்று ஏக்கமும் உறுகின்றது.

# பெண் அஃறிணையா?



"'அம்மா சமையல் செய்கிருள்', 'அத்தை பணம் தருவாள்,' 'அக்கா கடிதம் எழுதினுள்', 'தங்கை பள்ளிக்கூடம் போயிருக்கிருள்' என்று சிலர் பேசுகின்றனர். 'செவி கைப்பச் சொற் பொறுத்தல்' என்பது இச்சொற்ருெடர்களைக் கேட்டுப் பொறுத் தலே" என்ருர் ஒருவர்.

"இச்சொற்ருெடர்களில் எழுவாய் பயனிலை பிழை ஒன்றும் இல்லையே. அம்மை, அத்தை, தமக்கை, தங்கை என்பவை உயர்திணைப் பெண்பாற் பெயர்கள். செய்கிருள், தருவாள், எழுதினுள், போயிருக்கிருள் என்பவை அத்திணையும் பாலும் குறிக்கும் வினைமுற்றுக்கள். ஆதலால் இவை தவருதல் இல்லையே!!" என்ருர் மற்ருெருவர்.

"ஐயா! இலக்கணப் பிழைபற்றி இங்குப் பேச்சு வேண்டா. பொருளைக் காண்க. திணையோ பாலோ வேண்டா. அவள் என்றும், இவள் என்றும், வந்தாள் என்றும், செய்கிருள் என்றும் பேசுதல் நாகரிகமா?" என்ருர் முன்னவர்.

"ஓ! அப்படியானுல், 'அம்மா சமையல் செய்கிருர்' 'செய்கிருர்கள் (செய்கிருங்க) முதலான சொற்ருெடர்களால் பேசுதல் வேண்டும் போலும். அர் ஆர் என்னும் விகுதிகளும், கள் என்னும் விகுதிமேல் விகுதியும் சேர்ந்தாலேதான் நாகரிகமும் மதிப்பும் உண்டு என்று கருதுகின்றீரே! வெறுஞ்சொற்களால்—சில விகுதிகளால் மதிக்கும் மதிப்புத்தானு சிறந்தது? இதுதானு தமிழர் நாகரிகம்?" என்று மற்றவர் கூறினுர்.

முன்னவர் அமைதி இழந்தார். தம்மை மறந்து பேசத் தொடங்கினுர். "நன்று, நன்று; சொற்களால் மதிக்கும் மதிப்புத் தங்களுக்கு வேண்டா போலும்! பெண்ணை மதிக்கும் மதிப் புத் தங்களுக்கு வேண்டாபோலும்! பெண்ணைக் குறிக்கும்

போதுமட்டும் இவ்வாறு பேசுகின்றீரே! ஆணைக்குறித்து உமது கருத்து என்ன? 'அப்பா ஊருக்குப் போகிறான்' 'மாமன் பணம் தருவான்' என்று நீர் பேசுகின்றீரா? இல்லையே. 'அப்பா ஊருக்குப் போகிறார்' அல்லது 'போகிறார்கள்', 'மாமா பணம் தருவார்' அல்லது 'தருவார்கள்' என்று பேசுகின்றீர். 'பாதர் (Father) வந்தார்' என்று மதிப்புடன் சொல்லும் வாயால் 'மதர் (Mother) வந்தாள்' என்று சொல்லுகின்றீர். 'பிரதர் (Brother) சொன்னார்' என்ற ஆங்கில வாயால் 'சிஸ்டர் (Sister) சொன்னாள்' என்கின்றீர். இந்த வேறுபாடு ஏன்? விகுதிகளால் மதிக்கும் மதிப்பு உம்மிடம் இல்லையோ?'' என்றார்.

உடனே, மற்றவர் பரபரப்புடன் சில கருத்துக்களைக்கூறத் தொடங்கினார். ''அப்படியா? 'தமக்கை வந்தாள்' என்று சொல்லுகின்ற முறை ஒரு வகையில் ஏற்புடையதே ஆகும். ஆங்கில மொழியை ஆராய்க. ஒருவனையோ ஒருத்தியையோ அவர் என்று கூறும் வழக்கு அம்மொழியில் இல்லை. ஆணை 'ஹி (He)' என்றே வழங்குவர்; பெண்ணை 'ஷி (She)' என்றே வழங்குவர். அந்த முறை பகுத்தறிவுக்கு இயைந்தது. எனவே, 'தமக்கை வந்தாள்', 'தங்கை போனாள்' என்று பேசுதல் குற்றமாகாதே! ஆனால், 'தமக்கை வந்தது' தங்கை போனது' என்று நீர் பேசுகின்றீரே! அது நாகரிகந்தானா? உம்முடைய கண்ணுக்குப் பெண் உயர்திணையாகத் தெரிவதில்லையோ? 'நாய் போனது' 'பூனை வந்தது' என்பது போல, பெண் ஒருத்தியைக் குறிக்கும்போது 'போனது, வந்தது' என்று பேசுதல் தகுமோ? அன்றி, பெண் உயிரில்லாத பொருளோ? மரம், கல் முதலியவற்றிற்கு ஒப்பாகக் கருதுகின்றீரோ? அது போனதாம், இது வந்ததாம்—நல்ல பேச்சு ஐயா! தமக்கையையும், தங்கையையும் சுட்டிப் பேசும் போது என்ன சொல்லுகின்றீர்? அது சொன்னது, இது கேட்டது என்கிறீர். தமக்கையும் தங்கையும் அதுவும் இதுவுமா? எண்ணிப்பார்த்தால் குறை தெரியும் ஐயா? 'ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம்' காணல் வேண்டாவோ?'' என்று பேசிக்கொண்டே போனார்.

அவர்தம் பேச்சு முடிவுபெறவில்லை. அப்பேச்சு விளக்குவது என்ன? பிற்காலத் தமிழில் பெண் உற்ற சிறுமையை விளக்குகின்றது என்னலாம். ஆணை மதித்து உயர்வாகக் கூறியவர் பெண்ணை உயர்த்தாது விட்டது தவறன்றோ?

சொற்பொருளமைதியிற் சிறந்தது தமிழ்மொழி. அத்துறையில் உலகில் வேறொரு மொழி இதற்கு இணையெனக் கூறல் இயலாது. இது மொழியியல் ஆராய்ச்சியாளர் அனைவரும் அறிந்த உண்மையாகும். பெண்ணுரிமையைப் போற்றும் அகப்பொருள் நுட்பங்களை இலக்கண நூல்களாகவும் இன்சுவைப் பாட்டுக்களாகவும் எடுத்தோதும் சிறப்புடையது இச்சீரிய மொழியே. இத்தகைய மொழியில் பேச்சு வழக்கில் நுழைந்து இடம் பெற்ற குறை எத்தகையது? 'பழையன கழிதலும் புதியனபுகுதலும்வழுவல' என்பது உண்மையே ஆயின் ஒரு நாட்டு மக்களின் உயர்ந்த நாகரிகத்துக்கு இழிவைத் தருவதொன்று புதியதாய்ப் புகுதலும், சிறப்பைத் தருவதொன்று பழையதாய்க் கழிதலும் அழகோ?

ஆணை உயர்த்தப் புகுந்த மக்கள் பெண்ணை உயர்த்தாது விட்டனர்; அவ்வளவில் நிற்காமல், பெண்ணைத் தாழ்த்தவும் தொடங்கினரே! உயர்திணையில் பெண்பாலாக இருந்த ஒருத்தி அஃறிணையில் ஒன்றன் பாலாக ஆயினளே! அவளும் இவளும் 'அது' 'இது' ஆதல், 'வந்தது' 'சொன்னது' எனல்—ஆகிய இவை அறிவிப்பது என்ன? பகுத்தறிவில்லாத ஒன்றையன்றோ அஃறிணை என்று இலக்கணம் கூறுகின்றது? பெண்ணுக்குப் பகுத்தறிவு இல்லையோ?

தமிழில் இக்குறை பேச்சு வழக்கில்மட்டும் உள்ளது என்னலாம். இலக்கணமாக எழுதுகையில் இதற்கு இடமில்லை. ஆனால், தெலுங்கு, கோண்டு (Gond) இருமொழிகளிலும் ஒருத்தியை உணர்த்தும் பெண்பால் இல்லை. ஒருத்தியைக் குறிக்க அஃறிணை ஒன்றன்பாலை யன்றோ வழங்குகின்றனர்? ஒருத்தியைக் குறிக்கும் சுட்டுப் பெயர்களையும் வினைமுற்றுக்களையும் அஃறிணையாகவே அமைத்துள்ளனர். அரசியைக் குறிக்கும்

போதும் 'அதி' 'இதி' (அது, இது) என்பர்; திருமகள் கலைமகள் முதலான பெண்தெய்வங்களைக் குறிக்கும் போதும் 'அதி' 'இதி' என்று சுட்டுதல் உண்டு. எத்துணை உயர்வு பெற்ற பெண்ணையும் அஃறிணை ஒருமையாகச் சுட்டுகின்றனர். தெலுங்கில் பெண்பாலைக் குறிக்கும் சில பழஞ்சொற்கள் உள்ளன. ஆனால் அவை அருகி வழங்குகின்றன.

ஆணை அவன் என்றும், அவன் வந்தான் என்றும் கூறும் இலக்கணம் பெண்ணை அது என்றும், அது வந்தது என்றும் கூறுதல் வியப்பன்றோ? **பெண்பாற் பெயர்களை அஃறிணைப் பெயர்கள் (அமஹத்) என்றே தெலுங்கு மொழியின் இலக்கணம் கூறுகின்றது.** தெலுங்கு பேசும் மக்கள் இருநூறாயிரவர்க்கு மேற்பட்டவர் அனைவரும் இவ்வாறே பேசுகின்றனர்; 'அவள்' என்று தமிழில் உள்ளதுபோலத் தெலுங்கில் ஒரு சொல் இல்லையே; ஆயினும், பெண்டிர் பலரைக் குறிக்கும்போது அவைகள் என்று சொல்லாமல், அவர்கள் என்றே வழங்குகின்றனர்.

துதவரும் (Tudas) கோடரும் (Kotas) ஆணையினும் பெண்ணினும் விலங்காயினும் கல்லாயினும் அது என்று திணைப் பாகுபாடு இன்றியே கூறுவர். அவர்தம் சுட்டுக்களில் ஆண் பெண் வேறுபாடும் இல்லையாதலின், ஈண்டு ஆராய்தல் வேண்டா.

தமிழில் அமைந்துள்ள மொழியியற் சிறப்புக்களுள் திணைப் பாகுபாடும் ஒன்று. அதனைக்குறித்துக் கால்டுவெல் என்னும் அறிஞர் கூறும் மொழிகள் போற்றற்குரியன;—

"திராவிட மொழிகளின் திணைப்பாகுபாடு இந்தோ ஐரோப்பிய மொழிகளிலும் செமிடிக் மொழிகளிலும் உள்ள பாகுபாடு போன்று கற்பனையால் ஆகியது அன்று; சிறந்த தத்துவ உணர்வால் ஆகியது என்பது தெளிவு. **பகுத்தறிவு உடையவை, பகுத்தறிவு இல்லாதவை என்ற பிரிவு சிறப்பும் இன்றியமையாமையும் உடையதன்றோ?"**

"உயிருள்ளனவற்றின் பெயர்களுக்கு ஒரு பன்மை விகுதியும் உயிரில்லனவற்றின் பெயர்களுக்கு மற்றொரு பன்மை விகுதியும் சேர்த்து வழங்குவது பாரசீகமொழி ஒன்றே. அந்த மொழி ஒன்றே திராவிடமொழிகளோடு இவ்வகையில் ஒருபுடை ஒப்புமை உடையதாகும். ஆனால் அந்த ஒப்புமை மிகச்சிறிதே. எனவே, திராவிட மொழிகளின் திணையிலக்கணம் தனிச் சிறப்புடைய தொன்றாகும். இஃது அறிவும் இலக்கணமும் வளர்ந்து மேம்பட்டதன் பயனே ஆகும்."

இவ்விழுமிய கருத்துக்கள் திராவிடமொழிகளின் திணையிலக்கணத்தைப் போற்றுகின்றன. இது திராவிடமொழிகள் எல்லாவற்றிற்கும் உரியதொன்றே. ஆயினும், பிறமொழிக்கலப்பால் கன்னடம், மலையாளம் முதலியன திணையிலக்கணம் இழந்தன. தமிழும் தெலுங்குமே இவ்விலக்கணம் உடையனவாக விளங்குகின்றன. இவற்றுள்ளும், தெலுங்கு, பெண்ணை உயர்திணை எனக் கூறல் மறந்து அஃறிணையாக்கிவிட்டது; இலக்கணமும் எழுதிவிட்டது. தமிழோ பேச்சுவழக்கில் அந்நோய்க்கு இடந்தந்துள்ளது.

# 'இந்தி'யின் தாய்

எல்லா மொழிகளும் வடமொழியினின்றும் பிறந்தன என்றே இந்நாட்டுப் புலவருள் பெரும்பான்மையோர் கருதிவந்தனர். இந்நூற்றுண்டின் தொடக்கத்திலும், வடமொழியின் சொற்கள் எல்லா மொழிகளிலும் கலந்திருத்தலால், அம் மொழியே பிறமொழிகளெல்லாவற்றிற்கும் தாய் என்று புலவர் சிலர் தத்தம் நூல்களில் எழுதியுள்ளனர். முதனிலை இன்னது என்று அறியப்படாத பகுபதம் எதனையும் அது வடசொல்லாயிருத்தல் கூடும் என்று மாணவர்க்கு அறிவிப்பதே தமிழாசிரியர் சிலர்க்கு எளியதொரு வழியாக இருந்துவந்தது. வடமொழி சிறிது கற்றவர், வடநூற் சூத்திரங்களை எடுத்துக் கூறி, எல்லாச் சொற்களுக்கும் முதனிலை வடமொழியில் இருப்பதாக நாட்ட முயன்று வந்தனர். "கண் என்பது தமிழ்ச் சொல் அன்று; கன்னு என்று தெலுங்கில் வழங்குதலால், அது வடமொழியாயிருத்தல் வேண்டும்'' என்று ஒருசமயம் ஆசிரியர் ஒருவர் கூறியது நினைவிற்கு வருகின்றது. 'செப்பு முதலிய சொற்கள் தெலுங்கில் வழங்குதலால் அவை தமிழ்ச்சொற்கள் அல்ல' என்பார் சிலர் இன்றும் உள்ளனர்.

இவையெல்லாம் நிற்க; தமிழ் உயர்தனிச் செம்மொழி; வடமொழியின் துணைவேண்டாது வாழவல்ல தனிமொழி என்னும் உண்மையை உணர்ந்தும் வாய்விட்டுக் கூறுதற்கு அறிஞர் அஞ்சி வாழ்ந்த காலம் உண்டு. மொழிநூலாராய்ச்சியில் தலைசிறந்த அறிஞர் கால்டுவெல், 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற தம் நூலில் பலவகையானும் திறம்பட ஆராய்ந்து இவ்வுண்மையை எழுதியுள்ளார். உண்மையை எழுதிய குற்றத்தால், ''அந்நூல் தவருன கொள்கைகளைக் கூறுவது; பயனற்றது; ஆராய்ச்சிக்கு உதவாதது; இந்திய மொழிகளின் இயல்பு அறியாத ஒருவர் இயற்றியது'' என்று பலரும் ஒதுக்கிவந்தனர். தமிழறிஞர் வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் போன்ருர்,

அவ்வுண்மையினையே எடுத்தெடுத்துக் கூறி வற்புறுத்தி நூல்கள் எழுதி மறைந்த பின்னரும், இன்னும் அறிஞர்கால்டுவெல்லைப் போற்ற மனங்கொள்ளாது வெறுத்து வேறுபட்டு ஒதுக்கும் சிலர் உள்ளனர்.

தமிழ் மொழிக்குள்ள ஆற்றலைப் பயன்படுத்த விழைந்த அறிஞர் எழுதிய தமிழ் நடையைக் கண்டு மனம் வெதும்பி வந்தனர் சிலர்; மணிப் பிரவாள நடையே மாண்புடையது என்று நிலைநாட்டத் தாம் முயன்ற முயற்சிகள் வீணானமை குறித்து அவர் மனங் கவன்றனர்; நல்ல தமிழ் நடையில் எழுது வோரைக் கண்டபோதெல்லாம் விழித்து விழித்துப் பார்த்துப் பலவகையாலும் ஐயுற்றனர்.

ஆயினும் மாறுதல் தொடங்கிவிட்டது; உண்மைகள் பல விளங்கிவிட்டன. வடமொழியிலிருந்து தமிழ் பல சொற்களைக் கடன் வாங்கிக்கொண்டது; அது மொழிகளின் இயற்கை. வட மொழியும் திராவிட மொழியிலிருந்து சில சொற்களைக் கடன் வாங்கியுள்ளது. சொற்களையே அல்லாமல் எழுத்துக்களையும் கடன் வாங்கியுள்ளது. சொற்றொடரமைப்பிலும் வடமொழி அடைந்த சில மாறுதல்களுக்குத் திராவிட மொழியே காரணம். இந்தி, குசராத்தி, வங்காளி முதலிய வடநாட்டு மொழிகளில் திராவிட ஒலிகளும் சொற்களும் பல உள்ளன. இந்தி முதலிய மொழிகளின் இலக்கண அமைப்புத் திராவிட மொழியின் கூட்டுறவால் ஏற்பட்டதே என்றும், அக்காரணத்தால், அவற்றைத் திராவிட மொழியின் சிதைவு என்பது பொருந்துவதே என்றும் இன்று அறிஞர்கள் எடுத்துக்காட்டுகின்றனர். தமிழ் வட மொழியினின்றும் தோன்றியதன்று என்ற கூற அஞ்சிய நிலை போய், இந்தி முதலிய வடநாட்டு மொழிகளும் திராவிட அடிப் படை உடையனவே என அறிஞர் நிறுவும் காலம் இக்காலம். எனவே, உண்மையைக் கூற இனி அஞ்சுதல் வேண்டா. தமிழ், தெலுங்கு முதலிய திராவிட மொழிகள் நேற்று வந்த ஆங்கிலத்தி லிருந்து பிறந்தன என்பது எத்துணை உண்மையோ, அத்துணை உண்மையே அவை வடமொழியிலிருந்து பிறந்தன என்பார் கூற்றும் எனலாம்.

ஆந்திர சப்த சிந்தாமணி, ஆந்திரா பாஷா பூஷணமு, பால வியாகரணமு முதலான தெலுங்கு இலக்கண நூல்களில் தெலுங்கு மொழியானது விக்ருதிகளுள் (சம்ஸ்கிருத பிராகிருதங்களிலிருந்து பிறந்த மொழிகளுள்) ஒன்று என்பது கூறப்பட்டுள்ளது. ஆனல், இன்று, தெலுங்கு மொழிப்பற்றும் ஆராய்ச்சியும் வல்லார் எவரும் அஃது உண்மை என்று உடன்படுகின்றாரல்லர். மொழிகளின் பாகுபாடு (On the Classification of Languages) என்ற நூலாசிரியர் குஸ்தவ ஆப்பெர்ட் (Gustave oppert) என்பார், மொழியியல் இன்னதென விளக்குகையில், பின்வருமாறு கூறுகின்றார்:—"ஒரு மொழி பிறிதொரு மொழியினின்றும் எவ்வளவு சொற்கள் வேண்டுமாயினும் கடன் வாங்கலாம்; தன் ஒலிமுறைக்கேற்ப அவற்றை அமைத்துக்கொண்டு வழங்கலாம். ஆனல் அக்காரணத்தால் அதன் இயல் வேறுபடாது. அது தன் இலக்கண அமைப்பினை—சொற்றொடர் யாப்பு முதலியவற்றை—மாற்றல் இயலாது; மாற்றத் தொடங்கினல் அதன் இயல் வேறுபடாகிராது. ஏன் எனின், எண்ணங்கள் உள்ளத்தில் தோன்றி வளரும் முறையினையே இலக்கண அமைப்புக் காட்டுகின்றபடியால், அந்த அமைப்பினை மாற்ற வல்ல ஆற்றல் எவரிடமும் இல்லை என்க."

எனவே, ஒரு மொழி எதினின்றும் பிறந்தது, எவ்வினத்தைச் சார்ந்தது என ஆராய்வதற்கு முன்னர், ஆராய்ச்சியாளர்க்கு இன்றியமையாக் கடமை என்ன? அஃது எம்மொழியினின்றும் சொற்களைக் கொண்டது என்ற ஆராய்ச்சி போதாது; வேண்டாததுமாம். அம்மொழியின் இலக்கண அமைப்பு எதனல் ஏற்பட்டது, அம்மொழி இலக்கண அமைப்பால் எதனை ஒத்திருக்கின்றது என்பனவே ஆராயத்தக்கனவாகும். அத்தகைய ஆராய்ச்சியில் தேர்ந்த தெலுங்கு மொழிப் புலவர், இன்று, "தெலுங்கு விக்ருதிகளுள் ஒன்று அன்று" எனக் கூறும் கூற்றே உண்மையானதன்றோ? வடமொழியோடு தொன்றுதொட்ட தொடர்பும் நெருங்கிய கலப்பும் தெலுங்கு மொழிக்கு உள்ளதுபோலத் தென்னிந்திய மொழிகள் பிறவற்றிற்கு இல்லை. வடசொற்களும் ஒலிகளும் தெலுங்கு மொழியில்

மிகப் பலவாய் உள்ளமையும், வடமொழிப் புலவர்களே தெலுங்கு மொழியில் இலக்கிய இலக்கண நூல்கள் பல எழுதிய போக்கும் நோக்க, தெலுங்கு திராவிட மொழியினத்தைச் சேர்ந்ததோ என்ற ஐயம் எழுதல் இயல்பு. அத்தகைய மொழியைப் பற்றிய உண்மையும் இன்று தெற்றென விளங்கலாயிற்றன்றோ? தமிழ் முதலிய பிற திராவிட மொழிகளைக் குறித்துக் கூற வேண்டுவதே யில்லை.

இவ்வாறு மொழியியல் உண்மைகள் விளங்கும் இக்காலத்தே, இந்தி முதலான வட நாட்டு மொழிகளைப்பற்றி அறிஞர் கூறுவன என்ன எனக் காண்போம். அம்மொழிகளில் உள்ளசொற்களை ஆராயின், வடமொழியில் இல்லாத சொற்கள் பல இருத்தல் காணப்படும். அச்சொற்கள் எம்மொழியைச் சார்ந்தவை, அவை இம்மொழிகளில் புகுந்த காரணங்கள் என்ன என்பன அறியாத இலக்கண ஆசிரியர்கள் அவற்றைத் தேசீயச் சொற்கள் என்ற பகுப்பில் அடக்குகின்றனர். ஆனால், அவை திராவிட மொழியின் சொற்கள் என்பதே உண்மையாகும். திராவிட மொழியின் சொற்கள் இந்தியிலும் பிறவற்றிலும் காணப்படல் வியக்கத்தக்கது அன்று. வடமொழியில் தொன்மைக்குப் பெயர்போன இருக்குவேதத்திலும் திராவிட மொழியின் சொற்கள் பல உள்ளன எனக் கூறி, வங்காளி மொழியின் தோற்றமும் வளர்ச்சியும் (TheOrigin and Development of the Benagli Language) என்ற நூலாசிரியர் சுனிதிகுமார் சட்டர்ஜி என்பவர் பின்வரும் சொற்களை எடுத்துக் காட்டாகக் குறிக்கின்றார்: அணு, அரணி, கபி (குரங்கு) கர்மார (கருமான், கம்மான்), கால (காலம்), குட (குடில்), நீல (நீலம்), புஷ்ப (பூ), பூஜை (பூசை), பல (பழம்), பீஜ (பித்து, வித்து), மயூர (மயில்), ராத்திரி (இரா, இரவு), ரூப (உருவம்) முதலியன. பின்னர்த் தோன்றிய வடநூல்களில் மேன்மேலும் பற்பல சொற்கள் புகலாயின.

இந்தியிலுள்ள எழுத்துக்களுள், ட (t), ட (d), ண, ள என்பவை திராவிட மொழிக்கு உரியனவே. அவை வடமொழியிலும் உள்ளன எனினும், வடமொழிக்கு உரியன அல்ல. அம்

மொழியினர் திராவிட மொழியினரிடமிருந்து அவ்வொலிகளைக் கற்றனர்; தம் நூல்களிலும் புகுத்தினர்; நாளடைவில் பழகப் பழக, அவற்றைத் தம் மொழிக்கு உரியனவாகவே கொண்டனர். இதுவே உண்மை. அவை வட மொழிக்கு உரியவை எனின், லத்தீன், கிரீக்கு முதலிய இனமொழிகளிலும் இருத்தல் வேண்டுமன்றோ? அவ்வாறு இன்மையின், அவை இந்நாட்டுத் திராவிட மொழிகளுக்கே உரியவை என்பது தேற்றம்.

வீடு என்ற சொல்லுடன் 'கு' என்ற உருபைச் சேர்த்து வீட்டுக்கு என வழங்குதல் திராவிடமுறை. குவீடு என உருபை முன்னர்ச் சேர்த்து வழங்கல் இல்லை. ஐரோப்பிய மொழியமைப் பின்படி, அவ்வாறு உருபை முன்னர்ச்சேர்த்து வழங்கல் வேண்டும். டு தி ஹவுஸ் (to the house) என ஆங்கிலத்தில் உருபை முன்னர்ச் சேர்க்கும் முறை காண்க. இந்தியின் அமைப்பு எத்தகையது? கர் (வீடு) + கு (உருபு) — கர்க்கு எனத் தமிழிலுள்ளது போலவே உருபைப் பின்னுற் சேர்த்தல் இந்தியின் அமைப்பு. வட நாட்டு மொழிகள் எல்லாவற்றிலும் காணப்படுவது இத் திராவிட மொழியியலே; ஐரோப்பிய மொழியியல் அன்று. இங்ஙனமே, (வினைச் சொல்லாக்கம்) முதலான இலக்கணங்களிலும் இந்தி முதலிய மொழிகள் திராவிட மொழியைப் பின்பற்றி அமைந்துள்ளன.

வாக்கிய அமைப்பில் வடநாட்டு மொழிகள் எல்லாம் திராவிட மொழியினின்றும் வேறுபடவில்லை. "நான் தமிழ் கற்கிறேன்" என்பது தமிழ் வாக்கியம். "மை தமிள் பாட்தாஹூம்" என்பது இந்தியில் அப்பொருள் அமைந்த வாக்கியம். 'ஐ ஆம் ஸ்டடியிங் 'டமிள்' என்பது ஆங்கிலம். பயனிலை வாக்கிய முடிவிலும், செய்யப்படுபொருள் அதனை அடுத்தும், எழுவாய் முதலியன ஏற்ற இடங்களிலும் தமிழில் அமைந்துள்ளவாறே, இந்தியிலும் வங்காளி முதலியவற்றிலும் அமைந்துள்ளன. தமிழ் வாக்கியங்களிலுள்ள அவ்வச் சொற்களுக்கும் உருபுகளுக்கும் பதிலாக வடநாட்டு மொழியின் சொற்களையும் உருபுகளையும் முறையே அமைத்தால் நல்ல மொழிபெயர்ப்பு ஆகிவிடும். ஆங்கில முதலிய ஐரோப்பிய மொழிகளில் உள்ள அமைப்பு முற்றும் வேறுபட்டதொன்றாகும்.

இவை சில கூறுகள். இவைபோன்ற எல்லாவற்றையும் மொழியியற் கண்கொண்டு ஆராய்ந்தால், இந்தி முதலிய மொழிகள் வடசொற் பெருக்கம் உடையனவேனும், அவற்றின் அமைப்புக்குக் காரணமான தாய்மொழி திராவிட மொழியா, ஐரோப்பிய மொழியா என்பது நன்கு விளங்கும்.

உண்மை இவ்வாறாக நிற்க, சில நூற்றாண்டுகளுக்குமுன் வட நாட்டுப் பிராகிருத இலக்கண ஆசிரியர்கள் "தென்னிந்திய மொழிகள் எல்லாம் விக்ருதிகளே" (சம்ஸ்கிருதத்தினின்றும் பிறந்தவைகளே) என எழுதிப் போந்ததன் காரணம் என்ன? அக்காலத்திற் கேற்ப அவர்கள் கொண்ட மொழிப்பற்றே அதற்குக் காரணமாயிற்று. ஆனால், இன்று இந்தி முதலிய மொழிகளெல்லாம் திராவிட மொழியினையே அடிப்படையாகக் கொண்டு அமைந்தன என அறிஞர் கூறுவதன் காரணம் அத்தகைய பற்று அன்று; மொழியியல் ஆராய்ச்சியேயாகும்.

# தலைச் சோறு

---

திராவிட மொழிகளுள் உயர்தனிச் செம்மொழியாகிய தமிழ் மொழியுடன் நெருங்கிய தொடர்புடையது மலையாளமே; அம்மொழியைத் தமிழிலிருந்து கிளைத்த மொழியாகக் கூறுதலும் பொருந்தும் என்று அறிஞர் **கால்டுவெல்** தமது அரிய ஆராய்ச்சி நூலில் விளக்கியுள்ளார். தமிழன்னையின் மணி வயிற்றில் உதித்தெழுந்த மொழிகளுள் மலையாளமும் ஒன்று என்பது **மனோன்மணீய நூலாசிரியர்** சுந்தரம் பிள்ளை என்னும் அறிஞரின் கருத்தாகும். நடுநிலை வாய்ந்த ஆராய்ச்சியாளர் அனைவரும் தமிழின் தொன்மையையும் மலையாளத்தின் தோற்றத்தையும் நன்கு அறிவர்.

**மலையாளம்** என்னும் பெயர் **மலை** என்னும் சொல்லினடியாகப் பிறந்தது; மலை—ஆள்—அம் எனப் பிரிக்கப்படும். வேளாளன், வில்லாளன் முதலியவற்றிற்போல, ஆள் என்னும் உறுப்பு ஈண்டும் உரிமைப் பொருளை உணர்த்துகின்றது. ஆதலின், அச்சொல் மலையுடைய நாடு என்னும் பொருள்படும். வட ஆற்காடு சில்லாவில் ஏலகிரி, சவ்வாது மலைகளின்மேல் உள்ள சிற்றூர்களைப் பொதுவாக மலையாளம் என்றும், அங்குக் வாழ்வோரை மலையாளிகள் என்றும் மக்கள் வழங்குதலிலும் இப்பொருள் உண்மை காணப்படும்.

**கேரம், கேரளம்** என்பன மலையாள நாட்டிற்குப் பெயராகப் பிறமொழிகளிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றன. அவை திரிந்த பெயர்களே ஆகும். மலையாளத்தில் **சேரலம், சேரம்** என்னும் பெயர்களும் பழைய நூல்களில் வழங்குகின்றனவாம். எனவே, '**சே**' என்னும் எழுத்தே '**கே**' என வடிவில் திரிந்து மாறி, **கேரம் கேரளம்**, என்னும் பெயர்களுக்கு இடந்தந்ததெனக் கொள்ளலாம். **சேரநாடு, சேரன், சேரல், சேரலன்** என்னும் சொற்கள் தமிழ் நூல்களில் வழங்குதலும் காண்க.

மொழியின் பெயரும் நாட்டின் பெயரும் ஆகிய இச் சொற்கள் தமிழ்ச் சொற்களா யிருத்தல் இங்ஙனம் விளங்குகின்றது. அன்றியும், கிழக்கு என்றும் மேற்கு என்றும் தமிழில் திசைகளைக் குறிக்க வழங்குஞ் சொற்கள் மலையாளத்திலும் அவ்வாறே உள்ளன. தமிழ் நாட்டில் வாழ்ந்த மக்கள் அப் பெயர்களை வழங்கினமை பொருத்தமேயாம். ஆனால் அவை பழஞ் சொற்கள் அல்ல. கிழக்கைக் குறிக்கும் பழஞ்சொல் குணக்கு என்பது. மேற்கைக் குறிக்கும் பழஞ்சொல் குடக்கு என்பது. குண திசையும் குடதிசையும் இடமாகக் கொண்டவைகளே கொண்டல், கோடை என்பவை. கிழக்கு, மேற்கு என்னும் சொற்கள் பரந்து வழங்கலாயின பிறகு இந்தப் பழஞ் சொற்கள் வழக்கு வீழ்ந்தன. எக்காரணம் பற்றிக் கிழக்கு என்றும் மேற்கு என்றும் கூறப்பட்டன? செல்லச் செல்லத் தாழ்ந்து விளங்கும் நிலப்பகுதியைக் கீழ் - கிழக்கு என்றும், உயர்ந்து உயர்ந்து குன்றுகளாகவும் மலைகளாகவும் விளங்கும் நிலப்பகுதியை மேல்—மேற்கு என்றும் அத்தமிழர் முதலில் குறித்திருப்பார்.

பின்னர், அச்சொற்களால் அவ்வத்திசைகளையும் வழங்கத் தொடங்கியிருப்பர். ஆனால் இச்சொற்களை மலையாள நாட்டு மக்கள் வழங்குவதில் பொருந்திய பொருள் காணோம். அவர்கள் கிழக்கு என்று வழங்கும் திசையில் குன்றும் மலையுஞ் செறிந்து நிலப்பகுதி மேலுயர்ந்து நிற்கின்றது. மேற்கு என்று வழங்கும் திசையில் நிலப்பகுதி மேற்பட்டு உயராமல் தாழ்ந்து செல்கிறது. ஆதலின், தமிழ் நாட்டிலிருந்து மக்கள் பலர் அங்குக் குடியேறினார்கள் என்பதும் அம்மக்கள் கிழக்கு மேற்கு என்னும் சொற்களை அவ்வாறே அங்கும் வழங்கினர் என்பதும் விளங்குகின்றன. அன்றியும் **படிந்நாறு படிந்நாயிறு** என்று மலையாள மொழியில் மேற்குத் திசையைக் குறிக்கப் பெரிதும் வழங்குகின்றனர். அவ்வழக்கும் ஆராயற்பாலதே. படுஞாயிறு என்னும் சொற்றொடர் தமிழில் கதிரவன் மறைவைக் குறிக்கும். பகலவன் மறைவுக்குரிய அத்திசையை அப்பெயரால் வழங்குதல் பொருந்துமன்றோ? ஆதலின் படுஞாயிறு என்னும் தொடர் படுநாயிறு - படிந்நாயிறு - படிந்நாறு எனப் பலவாறு திரிபுற்றிருத்தல் வேண்டும்.

இவற்றை மலையாள மொழிப் பற்றுடையோரிடம் கூறின் அவர் உடன்படுதல் இல்லை. அன்னாரிடம் மொழிப்பற்று மிகும் துள்ளவாறே ஆராய்ச்சியும் மிகுமாயின், உண்மை விளக்கம் ஏற்படும். இவ்வுண்மையை விளக்கும் நோக்கத்துடன் மலையாள நண்பர் ஒருவருடன் யான் உரையாடிக் கொண்டிருந்தேன். அவர் ஒருவாறு இசைந்தும் ஒருவாறு உடன்பட மறுத்தும் மறு மொழி கூறிக்கொண்டு வந்து இறுதியில் வாளா இருந்தார். அந்நிலையில் என்னுடைய நண்பராகிய மருத்துவர் (டாக்டர்) ஒருவர் இடையே புகுந்தார்; எங்கள் பேச்சிலுங் கலந்தார். வாளா இருந்த நண்பரை நோக்கி "ஐய! மலையாள மொழி தமிழுக்கு நிரம்பக் கடன்பட்டது. மலையாளத்தில் மூளையைக் குறிக்கும் சொல் கூறும்" என்றார். அவர் "உமக்குத்தெரியும் போல் இருக்கிறதே! தலைச்சோறுதானே? அதுவும் தமிழ் என்று சொல்லுகிறீர்" என்றார்.

யான் வியந்தேன். என்ன அழகிய சொல்! சோறு என்னும் இனிய செந்தமிழ்ச் சொல்லை இக்காலத்தே நாகரிகம் (போலி...!) உடையோர் தம் நாவால் கூறவும் கூசுகின்றனர்; பிறர் அச்சொல்லை வழங்கின், அவரைப் பட்டிக்காட்டார் என இகழும் குறிப்புடன் நோக்குகின்றனர். சிற்சில வேளைகளில் 'சாதம்' எனக் கூறித் திருத்தவும் முற்படுகின்றனர். ஆனால் அது தமிழொலி சான்ற இனிய சொல் அன்றோ? "உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலை" என்ற மொழியும் திருவாய் மொழி அன்றோ? சொல் என்னும் பெயருடைய நெல்லின் அரிசியால் சமைத்த உணவுக்கே சோறு (சொல் அது) என வழங்குதலே அன்றி, நாட்டுப்புறங்களில் வேறு சில சத்துப் பொருள்கட்கும் அச்சொல் வழங்குதல் உண்டு. பனஞ்சோறு, தென்னஞ்சோறு, ஈச்சஞ்சோறு என்பன, பனை, தென்னை, ஈந்து இவற்றின் தலையில் உள்ள செழும் பொருள் ஆகும். இவற்றின் குருத்தை அறுத்துக் குருத்தின் கீழ் உள்ள அச்செழும் பொருளை மக்கள் விரும்பி உண்டு மகிழ்தல் வழக்கம். மக்கள் தலையில் உள்ள செழும் பொருளுக்கு—மூளைக்குத்—தலைச் சோறு என்னும் அப்பெயர் அத்துணைப் பொருளமைதியுடன் முன்னோர்களால் வழக்கப்பட்டது!

இவ்வாறெல்லாம் எண்ணி மகிழ்ந்த நான் அந்த நண்பரை நோக்கினேன். "ஐய! நன்று, நன்று. வடமொழிக்கு வாயில்லை என்றார் தமிழ்ப் புலமை சான்ற சூரிய நாராயண சாஸ்திரியார். அஃதே போன்று மலையாளத்திற்கு மூளையில்லை என்று கூறுதல் வேண்டா. அங்ஙனம் கூறின், நம்முடைய நண்பர் வருந்துவார். மலையாளத்திற்குத் தமிழ்மொழியே மூளை என்று கூறும்; அஃது அவர்க்கு வருத்தம் விளைக்காது" என்றேன். என்றதும் என் மனம் மாறியது. நண்பரை நோக்கினேன். "ஐய, மன்னிக்க. யான் கூறுவன எல்லாம் பழங்கதை. இன்று முன்னேற்றம் உங்களுடையதாகவே இருக்கின்றது. தமிழர்தாம் தாழ்நிலையுற்றுத் திகைக்கின்றார்கள். யான் பேசிய பழம் பெருமையால் பயன் இல்லை. இன்று தமிழர் செவிடர்களாய்க் குருடர்களாய் வாழ்கின்றார்கள். ஊமையர் அல்லர்; தமிழர் வாயாடிகளே; என்றாலும் பயன் இல்லை. தமிழர்க்குத் தலைச்சோறு போய்விட்டது போலும்!" என்றேன். நண்பர் ஒரு பெருமூச்சுவிட்டார்; "இரவு உண்டேல், பகலும் உண்டு; தமிழ்ப்பகல் வரும்" என்றார்; உண்மையே.

# “நிற்பது கூடாது”

---

யான் ஆரும் வகுப்பில் கற்றபோது எனக்குத் தமிழ் இலக்கணம் கற்பித்தவர் கணக்கு ஆசிரியர். அவர் தமிழ் கற்றுத் தேர்ந்தவர் அல்லர்; வடமொழியைப் பாடமாகக் கொண்டு தேர்ந்து கணக்கு ஆசிரியராக வந்தவர்; ஆயினும், தமிழ் வகுப்பு அவரைத் தமிழ் கற்கத் தூண்டியது. அவர் நடத்திய வகுப்பில் இலக்கணப்பகுதி வரும்போதெல்லாம் மாணவர்க்குப் பேரச்சம். ‘இலக்கணக் கேள்விகளுக்கு நன்றாக விடை எழுதுவோர்க்கு நல்ல மார்க்குத் தருவேன். அப்படித்தான் இவன் என்னிடம் 60, 65 என மார்க்கு வாங்குகிறான்’ என்று மற்ற மாணவரிடம் கூறுவார். ஆனால் யான் தவறு செய்யும் போதெல்லாம் தண்டனையும் இரட்டிப்பாகத் தருவது அவர் வழக்கம்.

ஒருநாள் ‘இலக்கண வகுப்பில்’ வாக்கியங்கள் பலவற்றிற்கு எழுவாய் பயனிலை கூறிவந்தனர் மாணவர். எனக்கு முன் நான்காம் வரிசையில் உள்ள மாணவனுக்கு முறை வந்தது. ‘அவனால் மணலைக் கயிறாகத் திரிக்க முடியாது’ என்பது அவனுக்குக் கொடுத்த வாக்கியம். ‘அவனால்—எழுவாய்’ என்றான் அவன். ‘மணலை—எழுவாய்’ என்றான் அடுத்தவன். ‘கயிறாக’ என்றான் மற்றொருவன். ‘திரிக்க—எழுவாய்’ என்றேன் யான் எல்லோருக்கும் பிரம்பால் ஒவ்வோர் அடி கிடைத்தது. எனக்கு மட்டும் அன்று மூன்று அடி. ‘கண்ணை மூடிக்கொண்டு அந்த வாக்கியத்தில் உள்ள ஒவ்வொரு சொல்லையும் எழுவாய் எழுவாய் என்கிறீர்களா?’ என்று சினந்தார் ஆசிரியர். ‘நீயும் அவர்களைப்போல ஆகிவிட்டாய்’ என்று வெகுண்டார் என்னை. ‘அவன் என்பது தோன்றா எழுவாய்’ என்று அவரே விடை கூறினார்.

யான் கண்ணை மூடிக்கொண்டு சொல்லவில்லை. ஆசிரியர் கற்பித்த முறையே சென்றுதான் எழுவாய் கண்டேன். முதலில் பயனிலை காணவேண்டும் என்றும், அது பெற்ற பிறகு, எவர்,

எது முதலிய கேள்விகளை எழுப்பி விடையாக வருவது எழுவா யாகக் கொள்ளவேண்டும் என்றும் அந்த ஆசிரியரே, எனக்குக் கற்பித்திருந்தார்.

'முடியாது' பயனிலை என்று கண்டேன். எது முடியாது என்று கேட்டேன். திரிக்க முடியாது என்று விடை வந்தது. திரிக்க—எழுவாய் என்று கூறினேன்; மூன்று அடி பெற்றேன். ஆசிரியர்பால் எனக்குச் சிறிதும் வெறுப்பு இல்லை. அவர் 60, 65 என உயர்ந்த மார்க்கும், தவறியபோது இரட்டிப்புத் தண்டனையும் கொடுத்த கொடையே என்னை இன்று தமிழ்க் கடலுள் திளைக்கச் செய்துள்ளது என நினைந்து நன்றியுடையேனாகும்போது என் உள்ளம் குளிர்கின்றது.

அவன்—எழுவாய் என ஆசிரியர் சொன்ன விடை என் உள்ளத்தில் பதியவில்லை.

பதின்மூன்றாண்டுகள் கழிந்த பின்னர் அதே உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் தொழில் பெற்றேன். பத்தாம் வகுப்பு வரை தமிழ் கற்பிக்கும் உரிமை பெற்றேன். எனக்கு எழுவாய் பயனிலை கற்பித்த ஆசிரியரோ, அன்றும் அந்நிலையிலே இருக்கக் கண்டேன். என் ஆசிரியர் என்னை நண்பனாகக் கொண்டார். யான் அன்றும் இன்றும் ஆசிரியராகவே அவரை மதித்து வருகின்றேன்.

எழுவாய் பயனிலை கற்பிக்கும் வாய்ப்பு எனக்கு ஒருநாள் வாய்த்தது. 'அவருடைய புகழை எவராலும் சொல்ல முடியாது' என்பது வாக்கியம். மாணவரைக் கேட்டேன். வெவ்வேறு வகையான விடைகள் வந்தன. எல்லாம் தவறே. 'முடியாது—எது' என்று கேள்வி கேட்குமாறு வழிகாட்டினேன். அப்போதும் பலரும் திகைத்தனர். ஒருவன் எழுந்து 'சொல்லுவது—எழுவாய்' என்றான். 'வாக்கியத்தில் இல்லையே' என்றேன். மற்றொருவன் தோன்று எழுவாய் என்றான். 'தோன்று எழுவாயினைச் சேர்த்துப்படித்தால் வாக்கியம் நிரம்பவேண்டும்; இது மிகையாகின்றது. ஆகையால் தோன்று எழுவாய் ஆகாது. சொல்ல என்பதை எழுவாயாகக் கொள்ள வேண்டும்' என்று கற்பித்தேன். இன்னொரு மாணவன் எழுந்தான்.

'நேற்று' சொல்ல—வினையெச்சம் என்று சொல்லிக் கொடுத்தீர்கள்' என்றான். மற்றொருவன் எழுந்து ஏதோ கேட்க முயன்று வாளா அமர்ந்தான். இன்னொருவன், 'பெயர்ச்சொல் தானே எழுவாயாக வரும்; வினையெச்சம் எழுவாயாகுமா ?' என்று கேட்டான்.

மாணவர் மூளையை எண்ணி வியந்தேன். இதுபோன்ற வாக்கியம் என் ஆறும் வகுப்புக் கல்வி முதற்கொண்டே, என் உள்ளத்தைக் கலக்கித் தெளிவித்திருப்பதால், அன்று மாணவர் உள்ளம் கொள்ளுமாறு விளக்க முடிந்தது

என் உயர்நிலைப்பள்ளிக் கல்வி முடிந்த பின்பு, திரு. வி. கலியாணசுந்தரனார் உரைநடை கற்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. "தீண்டாமைப் பேய் இந்நாட்டினின்றும் ஒழிதல் வேண்டும்; சாதிவேற்றுமை என்னும் தொத்துநோய் தொலைதல் வேண்டும்; பெண்ணடிமை ஒழிந்து பண்டைத் தமிழ் நாட்டிற்போல் பெண்ணுரிமை ஓங்கல் வேண்டும்" என்பன போன்ற வாக்கியங்கள் என் நினைவில் பதிந்தன. ஒழிய வேண்டும், தொலைய வேண்டும், ஓங்க வேண்டும் என்று பிறர் எழுதும் இடங்களில் ஒழிதல் வேண்டும், தொலைதல் வேண்டும், ஓங்கல் வேண்டும் என்று திரு. வி. க. எழுதுவதைக் கூர்ந்து ஆய்ந்தேன். வினையெச்சம் என்று யான் கருதியவற்றை அவர் தொழிற்பெயராக்கி எழுதியிருத்தல் கண்டேன். பின்னர் மறைமலையடிகளார் எழுதிய நூல்களைக் கற்றேன்; உண்மை மேலும் விளங்கிற்று. திருக்குறள் — பரிமேலழகர் உரை கற்றேன்; உண்மை தெளிவாயிற்று. பரிமேலழகர் உரை நடையினைத் துருவித்துருவி ஆராய்ந்தேன். சங்க இலக்கியங்களைக் கற்கும் வாய்ப்பு, பின்னர் வித்துவான் தேர்வுக்குரிய கல்வியால் ஏற்பட்டது. ஐயங்கள் அனைத்தும் பறந்தொழிந்தன.

ஆதலின், மாணவரிடம் 'சொல்ல' என்பது தொழிற்பெயர் என்றும் 'சொல்லல்' என்பதன் ஈறு சிதைந்தது என்றும், பாண்டியநாடு என்பது பாண்டிநாடு என்றாற்போல் சொல்லல் வேண்டும் என்பது சொல்லவேண்டும் என்றாதல் மரூஉ எனக் கொள்ளவேண்டும் என்றும் விளக்கினேன்.

இஃது எவ்வாறோ உடனுள்ள ஆசிரியர் மற்றொருவர் செவிக்கு எட்டியது. மறுநாள் காலையில் பள்ளியுள் நுழையும் போது, சொற்பொழிவு ஒன்று கேட்டது. "இந்தக் காலத்தில் இலக்கணம் என்றால் என்ன என்று நினைத்துக்கொண்டிருக் கிறார்களோ, தெரியவில்லை. ஒரு விதியை மாற்றுவார்களானால் தமிழ் அடியோடு போயிற்று என்பதை உணரவில்லை. மனம் போன போக்கெல்லாம் இலக்கணமாம். 'சொல்ல' என்பது ஒரு வாக்கியத்துக்கு எழுவாயாம். இவர்கள் எல்லாம் வித்துவான் களாம் வித்துவான் பட்டம் வந்த அன்றைக்கே, கெட்டது தமிழ். இந்தப் பல்கலைக் கழகத்தார்தாம் வித்துவான் பரீட்சை ஏற்படுத் தித் தமிழைக் குட்டிச்சுவர் ஆக்கிவிட்டார்கள்" என்று சொற் பொழிவு நீண்டுகொண்டே யிருந்தது. என் தலை கண்டதும் சொற்பொழிவு குறுகிவிட்டது. அந்த ஆசிரியர் என் நண்பரே. ஆயினும் தமிழின்மேல் கொண்டுள்ள பற்றே அவரை அந்தச் சொற்பொழிவு ஆற்றத் தூண்டியது.

நண்பருடன் உள்ளம் கலந்து பேசமுடிந்தது. ஆனால் உண் மையை விளக்க முடியவில்லை. என் குறைபோலும். அவர் என் கருத்து வேறுபாட்டிற்கு இடந்தர மறுத்துவிட்டார்.

மொழியியல் (Philology) என்பது மேனாட்டவர் சென்ற நூற்றாண்டில் வளர்க்கத் தலைப்பட்டதோர் உயர்ந்த அறிவியல் துறை. அத் துறையில் யான் முதன்முதலாகக் கேட்டுக் கண்டு கற்றநூல் கால்டுவெல் பெரியார் எழுதிய ஒப்பிலக்கணமாகும். அது மேலும் பல நூல்களைக் கற்கத் தூண்டியது. அவற்றுள், 'ஆறு மொழிகளில் சொற்றொடரிலக்கணம்'. (Syntax in Six Languages - By F. M. Purdie, M. A.) என்பதொன்று. அத னுள், தொழிற்பெயர் நிலையில் உள்ள சொல் எச்ச வடிவிற்கு மாறுவதைப்பற்றிய ஆராய்ச்சி உள்ளது. தொழிற்பெயர் அவ் வாறு எச்சமாக மாறுதல் லத்தீன் மொழியில் காணப்படுகின் றது என்றும், செர்மனி மொழியிலும் அஃது உள்ளது என்றும், பிரஞ்சு மொழியில் அது வினையெச்சமாக மாறிய பின்னும் எழு வாயாகவும் செயப்படுபொருளாகவும் அமைதல் உண்டு என் றும், ஆங்கிலத்தில் அந்தப் பெயர்ச்சொல் ஈறு கெட்டு உருபு ஏற்கின்றது என்றும் ஆராய்ந்து எழுதியுள்ளார்.

தமிழிலும் ஆங்கிலத்திற் போல, அந்தச் சொல் உருபேற்றல் உண்டு.

**மணலைக் கயிருகத் திரிக்க முடியாது**
**மணலைக் கயிருகத் திரிக்கிறதற்கு முடியாது**

என்னும் இரண்டும் பேச்சு வழக்கில் உண்டு. திரித்தல் திரிக்கல் திரிக்கிறது என்னும் மூன்றும் தொழிற்பெயர். முதல் சொல் எழுத்து வழக்கில் உள்ளது. இரண்டாம் சொல் மேற் கூறிய வாறு சிதைந்து பேச்சு வழக்கில் உள்ளது. மூன்ரும் சொல் காலங் காட்டும் தொழிற்பெயர். அது நான்கனுருபு ஏற்று மேற் கூறியவாறு வழங்குகின்றது. இந்த மூன்றனுக்கும் உள்ள தொடர்பை உன்னின், எழுவாய்—பயனிலை வகுப்பில் வந்த மயக்கம் தெளியுமன்ரே ?

'திரிக்கிறதற்கு முடியாது' என்பதில் தொழிற்பெயர் நிகழ் காலம் காட்டுவது. 'திரிப்பதற்கு முடியாது' என்பதில் தொழிற் பெயர் எதிர்காலம் காட்டுவது ; ஆயினும் காலம் குறியாது பொதுவாக வழங்குவது.

ஒருநாள் சென்னை டிராம் வண்டி ஒன்றில், சுற்றிலும் எழுதப்பட்டுள்ளவற்றைப் பார்த்து வந்தேன். 'நிற்பது கூடாது' என்ற தொடர் தெரிந்தது. மற்ற எழுத்துக்கள் நெடியார் ஒருவர் தலையால் மறைந்திருந்தன. அவர் திரும்பி அசைந்தார். **பிரயாணிகள் டிரைவர் பிளாட்பாரத்தில் நிற்பது கூடாது** என்று முழுமையும் தெரிந்தது. சிறிது தயங்கினேன். Passengers are forbidden to stand on the driver's platform என்று ஆங்கில வாக்கியம் உடனிருந்ததைக் கண்டேன் ; தெளிந்தேன். மேற் கூறிய இலக்கண நினைவுகள் எல்லாம் வந்தன.

மொழிபெயர்ப்பு அழகியதே. சுருங்கச்சொல்லல் என்பதே அந்த அழகு. அன்றியும், 'Spit here' என்பதற்குத் 'துப்பு இங்கே' என்று எழுதியது போன்ற சொற்பெயர்ப்பு இராமல் மொழிபெயர்ப்பாகவே அமைந்துள்ளது அறிந்து மகிழ்ந்தேன். You are requested to attend the meeting என்பதற்குக் 'கூட்டத்திற்கு வருமாறு நீங்கள் வேண்டிக்கொள்ளப்படுகின்றீர்கள்

என்று மொழிபெயர்க்கும் நண்பர், டிராம்வே கம்பெனியார்க்குக் கிடைத்திருந்தால் வேறுவகைப் புதுமை காணக் கிடைத்திருக்கும்.

'நிற்கக்கூடாது' என்று பேச்சு வழக்கில் உள்ள ஒன்றை 'நிற்பது கூடாது' என்று தொழிற்பெயர் வாய்பாட்டால் எழுதியவர் போற்றத் தக்கவரே. முன்னது எளியது என்பதும், பின்னது அரியது என்பதும் உண்மையே. ஆயினும், 'நிற்க' என்னும் பேச்சுச் சொல்லை 'நிற்பது' என்று திருத்திய அவர் நோக்கம்தான் யாதோ? யாதாயினும் ஆகுக. அவர் 'வினையெச்சம் எழுவாயாகுமா' என்றும், 'தொழிற்பெயர் இவ்வாறு சிதைந்ததோ' என்றும் ஐயுறும் இலக்கணக்கல்வி பெற்றிலராயினும் ஆகுக. இவ்வாறு எழுதிய அவர் மூளை தமிழ் வடிவினது; அவர் தாய்மொழி தமிழ் என்று துணிந்து கூறலாம்.

# தமிழ் எழுத்துக்கள்

சென்ற ஆண்டில் என் மகனுக்கு ஆங்கிலம் கற்பிக்கத் தொடங்கினேன். தப்போ ஒப்போ எனக்குத் தெரிந்ததொரு முறையினைக் கையாண்டு முதலில் இருபத்தாறு எழுத்துக்களையும் கற்பித்தேன். அவற்றை அவன் கற்ற பிறகு, பூனைப் படத்தைக் காட்டி அதனைக் 'கேட்' என்றேன். எலிப்படத்தை 'ரேட்' என்றேன். விசிறிப்படத்தை 'பேன்' என்றேன். மனிதன் படத்தை 'மேன்' என்றேன். அவற்றின் கீழ் உள்ள CAT. RAT, FAN, MAN என்ற சொற்களின் எழுத்துக்களைப் பிரித்துக் கற்பிக்கவில்லை. மறுநாள் காலையில் புத்தகத்துடன் வந்து, "இந்த நாலும் வரும்" என்று சொல்லிப் படித்தான். அவன் படித்த முறை வருமாறு:—

சி - ஏ - டி — சியேடி — பூனை
ஆர் - ஏ - டி — ஆரேடி — எலி
எப் - ஏ - என் — எபேன் — விசிறி
எம் - ஏ - என் — எமேன் — மனிதன்

அப்போது எனக்கு வந்த சிரிப்பை அடக்கியும் பயனில்லை. சிறுவனோ சிரிப்பின் காரணம் அறியாது திகைத்தான். 'நான் படித்தது தப்பா, அப்பா? என்ன தப்பு அப்பா?' என்று பல முறை விடாமல் கேட்டான். என்ன சொல்வது என்பது விளங்காமல் சிரிப்பு நின்றது. 'வேலையாக இருக்கிறேன்; பிறகு சொல்லுகிறேன்' என்று கூறியும் அவன் விடவில்லை. பிறகு. வேறு வழியின்றி 'படத்தை மட்டும் படி, எழுத்தை இப்போது படிக்காதே. எழுத்தைப் பார்க்கவும் பார்க்காதே' என்று கண் மூடி வித்தையைக் கருவியாகக் கொண்டு விடுதலை பெற்றேன்.

அவனுக்கு எழுத்துக்களைக் கற்பிக்காமல் கேட், ரேட், பேன், மேன் என்று கற்பித்திருந்தால் பயன்பட்டிருக்குமோ என எண்ணலானேன். எழுத்துக்களை முதலில் எழுதப் பழக்குதல் எனக்குப் பிடிக்காத முறைதான். ஆனால் எழுத்துக்களின் பெயர்களை முதலில் கற்பிக்காது சொற்களைக் கற்பித்தலில் எனக்கு நம்பிக்கை இல்லை. உடனே ,சிறுவன் படித்த புதுமைக்குரிய காரணத்தை ஆராய்ந்து, ஆங்கில எழுத்துக்களைப் பெயரிட்டாளும் முறையின் குறைபாட்டை எண்ணத் தொடங்கினேன். அஃது ஐரோப்பிய முதல் மொழிகளின் வழக்கிலிருந்து வந்தது என்று அறிந்திருந்தும், குறை குறையே எனத்

தோன்றியது. எழுத்துக்கள் எந்த எந்த ஒலிக்கு வரிவடிவாக அமைந்துள்ளனவோ, அந்த அந்த ஒலியாலேயே பெயர் பெறுதல் சிறப்பு; அல்லது, சாரியை கொடுத்து வழங்குவதாயிருப்பின், ஏ, பே, சே, டே என்று ஏகாரமே சாரியையாகக் கொடுத்து இருபத்தாறு எழுத்துக்களையும் ஆளலாம். எ என்பதும், பி. என்பதும், பிறகு சி என்பதும்,...எப் என்பதும்,... எல் என்பதும்...ஆர் என்பதும்,...டபள்யூ என்பதும், முதலில் அமைந்த காரணம் அறியாமல் எண்ணுவார்க்குக் கோளாறு எனவே தோன்றும்.

தமிழில் சாரியைகள் பல உள்ளன. அகரம், ககரம் என்பது முதலாக அ ஆனா கஆனா என்று திண்ணைப் பள்ளிக் கூடங்களில் வழங்குது வரை உள்ளன எல்லாம் காண்க. இவை ஆங்கிலம் போலக் குறையுடையன அல்ல. எல்லாவற்றினும் நல்லதொன்றாக, சாரியை கொடாமல், அ, ஆ, இ,...க் ங் ச் என வழங்கும் முறையினை இக்காலத்துப் பள்ளிக்கூடங்களில் கையாளுதல் மனமகிழ்ச்சியே தருகின்றது.

உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் பிரிக்காது குழப்பும் ஆங்கிலம்போல் அல்லாமல், உயிர் பன்னிரண்டு என்றும், மெய் பதினெட்டு என்றும் தமிழில் தனித்தனியே பிரித்து எழுதி வழங்கும் நலமும் போற்றத்தக்கதே.

இவ்வளவு திருந்திய முறையில் அமைந்தும், தமிழ் எழுத்துக்களில் குறைபாடு இல்லாமற் போகவில்லை. க, ச, ட, த, ப என்னும் ஐந்தெழுத்திற்கும் வல்லொலியும் மெல்லொலியும் அமைந்திருத்தல் (கண், அகம், சக்கரம், அஞ்சல், ஓட்டம், ஓடம், தப்பு, கதவு, பங்கு, நம்பன்)—அஃதாவது இரண்டொலிக்கு ஓரெழுத்தாக அமைந்திருத்தல்—யாவரும் அறிந்ததே. இரண்டொலிக்கு இரண்டெழுத்து வேண்டும் எனல் இயல்பே; வேண்டா எனக் கருத்து வேறுபடுவாரும் உள்ளனர். இவற்றுடன் ஹகர ஒலி கலந்த எழுத்துக்கள் பத்தும் வடமொழியில் இருப்பதால் தமிழிலும் வேண்டும் என்று எண்ணுவாரும் உள்ளனர். அவை வடமொழியில் உள்ளன என்பது உண்மையே. ஆயினும் வடமொழியோடு ஓரினத்தனவாகிய ஐரோப்பிய மொழிகளில் பல அவற்றைத் தள்ளிவிட்டன; சில படிப்படியே தள்ளிவருகின்றன என்பதைத் தமிழுலகம் மறத்தல் கூடாது.

உலகிலுள்ள ஒலிகளுக்கெல்லாம் ஒவ்வொரு மொழியிலும் எழுத்துக்கள் இருத்தல் வேண்டும் என்று கொண்டால், எந்த மொழியிலும் ஐந்நூற்றுக்குக் குறையாத எழுத்துக்கள் இருக்க

நேரும். ஐந்நூறு எழுத்துக்களைப் பெற்று அல்லல்படுவதை விட ஐம்பது எழுத்துக்களைக்கொண்டு குறையுறுவதே சாலவும் நன்றன்றோ? ஒரு மொழியில் இயற்கையாக அமைந்த ஒலிகள் எவையோ அவற்றிற்கு மட்டும் எழுத்துக்கள் இருத்தல் போதும். தமிழிற்கும் அங்ஙனமே அமைதல் மொழிநலம் பயக்கும். உலகமெல்லாம் சுற்றித் திரிந்து பறந்துவரும் ஆங்கில மொழியிலும் எல்லா ஒலிக்கும் எழுத்துக்கள் உண்டென்று எண்ணுவது அறியாமை. ஆங்கிலத்தில் உள்ள உயிரெழுத்துக்கள் ஐந்தே (a, e, i, o, u). இந்த எழுத்துக்களுள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோரொலியே என்று கொள்ளல் பெருந் தவறாகும். ஓர் எழுத்துக்கு மூன்று முதல் ஒன்பதுவரை வகைப்பட்ட ஒலிகள் உண்டு. அஃதாவது, ஆங்கிலத்தில் ஐந்து உயிரெழுத்துக்கள் ஏறக்குறைய முப்பது உயிரொலிகளைக் குறித்து நிற்கின்றன. மெய்யெழுத்துக்களிலும் இத்தகையன உண்டு. ஆங்கில ஒலி பற்றிய குழப்பம் மிகப் பெரிது என்றும், சீர்திருத்த முயற்சி மிகச் சிறிது என்றும் எண்ணியே, அறிஞர் பெர்னார்ட் ஷா என்பவர் 'பிக்மாலியன்' (Benard Shaw's *Pygmalion*) என்று ஒரு நாடகம் எழுதி, அதன் முகவுரையில் 'ஓர் ஆங்கிலேயன் வாயைத் திறந்து பேசினால் மற்றோர் ஆங்கிலேயன் அப் பேச்சைக் கேட்டு வெறுப்படையாமல் இருக்க முடியாது......ஆங்கிலம் ஆங்கிலேயருக்கே கற்க வராத மொழியாக உள்ளது. இங்கிலாந்திற்கு இன்று இன்றியமையாது வேண்டியுள்ள சீர்திருத்தக்காரர் ஊக்கம் மிகுந்த ஒலியியல் அறிஞர் ஒருவரே' என்று குறித்துள்ளார்.

எதிர்காலம் என்ன சீர்திருத்தம் செய்யும் என்பது, மக்கள் மொழியியலில் செலுத்தும் ஊக்கத்தையும் உழைப்பையும் பொறுத்து நிற்கின்றது. இக்காலத்துப்போல, அரசியலிலும் பிறவற்றிலுமே ஊக்கத்துடன் உழைத்து, மொழியியலை எட்டிப் பார்த்து மறையும் இயல்பினராயின், எதிர்காலத்தினரை நம்புவதில் பயனில்லை.

இதுபோன்ற சீர்திருத்தத் துறைகள் பல உள. அவற்றை இங்கு விரித்தல் நோக்கம் அன்று.

ஆங்கிலம் கற்பித்தபோது கண்ட புதுமைபோல, தமிழ் கற்பித்தபோதும் ஒரு புதுமை கண்டதுண்டு. உயிரெழுத்து முடிந்து, மெய்யெழுத்து முடிந்து, உயிர்மெய் யெழுத்தும் ஊகார வரிசை வரைக்கும் முடிந்தது.

# மொழி நூல்



1663

ஆசிரியர் :
வித்துவான் மு. வரதராசன், B. O. L., M. O. L.,
தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி,
Honorary Reader, University of Madras



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி, :: :: சென்னை

*First Edition*: *1947*

*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS

UBLISHING SOCIETY TINNEVELLY LTD.

TIRUNELVELI & MADRAS.

The Royal Printing Works, Mount Road, Madras.-M. S. 175
Q. H. M. S. 95 B. 800 Copies 10—8—47

1489/2

# முன்னுரை

எல்லார்க்கும் ஒத்த உரிமை நல்கும் குடியாட்சி முறை (Democracy) அரசியலில் இன்னும் ஒரு கொள்கையாக நிலவுகின்றதே அல்லாமல், நிலைபெற்றுவிட்ட அமைப்பாக உருப்பெறவில்லை. உருப்பெற முடியுமோ என்று ஐயுறுவோரும், முடியாது என்று மறுப்போரும் உள்ளனர். அதன் நிலைமை இவ்வளவிலேயே உள்ளது. ஆனால் மொழித்துறையில்—மொழியின் வாழ்வில்—மொழியின் ஆட்சியில் இந்த முறை ஒன்றே இருந்து வந்திருக்கின்றது.

மக்கள் மற்ற உயிர்களை விடச் சிறந்து விளங்குதல் போலவே, மக்கள் படைக்கும் பொருள்களும் மற்ற இயற்கைப் பொருள்களைவிடச் சிறந்து விளங்குகின்றன. இந்த உண்மையை மக்கள் படைத்து வளர்த்துப் போற்றும் மொழி விளக்கிவருகின்றது.

பயனுள்ளது வாழும்; பயனில்லாதது வீழும். வேண்டாத ஒன்று தானே அழிதல் இயற்கை; அந்த அழிவும் ஆக்கம் கருதியதே. மாறுதல் ஒவ்வொன்றும் முன்னேற்றத்தின் படியே. இவ்வளவும் உயிர் வாழ்க்கையின் மற்றத் துறைகளில் காணப்படுதல் போலவே மொழித் துறையிலும் காணப்படுகின்றன.

மொழியைப் பேசுவோர்க்கும் எழுதுவோர்க்கும் பிணக்கும் போராட்டமும் உள்ளன. மொழியின் பழமையைப் போற்றுவோர்க்கும் மொழியின் வளர்ச்சியை விரும்புவோர்க்கும் பகை பெருகுகின்றது. இந்தப் பிணக்கு, போராட்டம், பகைமை எல்லாம் வேண்டாதவை; வீண். இவ்வாறு உணர்த்த வல்லது மொழியின் ஆராய்ச்சியே.

இலக்கியம் என்பது மொழியின் நிலைபெற்ற வாழ்வு. இலக்கணம் என்பது மொழியின் இறந்தகால நிலையை விளக்கி நிகழ்கால நிலையைச் சொல்ல முயல்

வது. மொழியியல் என்பது மொழியின் வரலாற்றை விளக்குவதோடு நிகழ்கால நிலையைத் தெளிவாக்கி எதிர்காலப் போக்கையும் அறிவிக்கவல்லது.

இவை போன்ற அரிய உண்மைகளையும் கருத்துக்களையும் கற்கத்தொடங்குவார்க்கு மொழிநூல் ஒரு தனிக் கலையாக விளங்கும். உயிர்நூல் உளநூல் முதலியன போல மொழிநூலும் சிறப்புடைய ஒரு கலையே என்று கண்டமையால்தான் சென்ற நூற்றாண்டில் ஐரோப்பிய அறிஞர்கள் இத்துறையில் ஓயாமல் உழைத்தனர்; அந்த உழைப்பிலே இன்பமும் கண்டனர். இந்த நூற்றாண்டிலும் ஆட்டோ ஜெஸ்பெர்சன் வாழ்நாள் முழுதும் மொழிநூல் கல்வியே பொழுதுபோக்காகக் கொண்டு பல சிறந்த நூல்களை எழுதியுள்ளார். அவர் எழுதிய நூல்களைக் கற்றுக் கலைப்பித்தர் ஆனவர் பலர். அவருள் கேம்பிரிட்ஜ் பேராசிரியர் டார்ன்லி நாய்லர் (Prof. H. Darnley Naylor) என்பவர் ஒருவர். அவரை, ஒரு பல்கலைக் கழகம் (University of Adelaide) பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவு ஆற்ற அழைத்தபோது ஜெஸ்பெர்சன் இயற்றிய "மொழியும் அதன் இயல்பும் வளர்ச்சியும் தோற்றமும் (Language Its Nature Development and Orgin)" என்ற ஒரு நூலைப் பற்றிய ஆராய்ச்சியையே சொற்பொழிவாக ஆற்றினார். இவ்வாறு, மொழிநூற்கலை, யாவரும் உணர்ந்த ஒரு கலையாக விளங்காவிட்டாலும், ஆற்றல்மிக்க ஒரு கலையாகவே திகழக் காண்கின்றோம்.

இந்த அருங்கலை தமிழ்நாட்டில் பரவுவதற்குக் காரணமாக இருந்து மொழித்தொண்டாற்றியவர் டாக்டர் கால்டுவெலே. திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்னும் அவர்தம் நூல் முதல் முயற்சியே ஆயினும், குறை சிறிதாகவும் திறம் பெரிதாகவும் அமைந்து ஒப்புயர்வற்றதாய் அறிஞர்க்கு வழிகாட்டி வருகின்றது. மொழிநூல் ஆராய்ச்சிக் கண்கொண்டு தொல்காப்பியம் முதலான பழைய நூல்களைக் காணக் காண, தமிழ் மொழியின் சிறப்பும் தமிழ்ச் சான்றோரின் பெருமையும் நன்கு விளங்கிவருகின்றன. ஆதலின்

அறிஞர் கால்டுவெல் ஆற்றிய மொழித்தொண்டு தமிழகம் என்றும் மறவாது போற்றத்தக்க பேருதவி யாகும். இத்துறையில் தொண்டு பூண்டு தமிழ் மொழியிலே நூல்கள் இயற்றி யுதவிய பேராசிரியர்கள் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், மாகறல் கார்த்திகேய முதலியார், கா. சுப்பிரமணிய பிள்ளை ஆகியோர். திருவாளர் ஞானப்பிரகாசர், தேவநேயப் பாவாணர் முதலான அறிஞரும் நம்மிடையே இருந்து மொழியியல் நூல்கள் எழுதி உதவிவருகின்றனர்.

சென்னைப் பல்கலைக் கழகத்து மொழிநூல் பாடத் திட்டத்தை ஒட்டி, பச்சையப்பன் கல்லூரியில் பி. ஓ. எல். ஆனர்ஸ் (B. O. L. Hons) வகுப்பிற்கு மொழிநூல் பாடம் கற்பிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தபோது, எனக்கு இந்நூலைப் பற்றிய எண்ணம் அரும்பியது. முதலில் மாணவராக இருந்த திருவாளர் போ. குரு சாமி, சி. வேங்கடசாமி, ச. ரகுநாயகன், ரா. சீநிவாசன ஆகியோர் அந்த எண்ணத்தை மேன்மேலும் வளர்த்து வந்தனர். அவர்கள் யான் சொல்லிவந்தவற்றை எழுதி வைத்த குறிப்புக்களே இந்நூல் வடிவு பெற்றன. மொழி யியல் பற்றிச் செந்தமிழ்ச் செல்வி முதலியவற்றில் யான் எழுதிவந்த சில கட்டுரைகள் நூலின் பிற்பகுதி யாக இணைக்கப்பட்டுள்ளன.

இதனை அழகுற அச்சிட்டு வெளிப்படுத்தச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் முன்வந்தது எனக்கு வாய்த்த நல்லுதவியாகும்.

மேற்குறித்த அனைவர்க்கும் நன்றி செலுத்துகின் றேன். தமிழகம் என் சிறு முயற்சியை வரவேற்று ஊக்கமளிக்கும் என நம்புகின்றேன்.

மு. வரதராசன்

# மேற்கோள்

## தமிழ்

அமித சாகரர் — யாப்பருங்கலம்
இளங்கோவடிகள் — சிலப்பதிகாரம்
இளம்பூரணர் — தொல்காப்பிய எழுத்ததிகார
ஔவையார் — புறநானூற்றுப் பாடல் [உரை
கடியலூர் உருத்திரங் கண்ண
னார் — பெரும்பாணாற்றுப் படை
கூலவாணிகன் சாத்தனார் — மணிமேகலை
சங்கர நமச்சிவாயர் — நன்னூல் உரை
சிவஞான முனிவர் — நன்னூல் விருத்தியுரை
வி. கோ.
சூரியநாராயண சாஸ்திரியார் — தமிழ் மொழி வரலாறு
சேனாவரையர் — தொல்காப்பியச் சொல்லதி
திருத்தக்கதேவர் — சீவக சிந்தாமணி [கார உரை
திருவள்ளுவர் — திருக்குறள்
தென்னிந்தியக் கல்வெட்டுக்கள்
தொல்காப்பியனார் — தொல்காப்பியம்
நச்சினார்க்கினியர் — தொல்காப்பிய எழுத்ததிகார
[உரை
" — தொல்காப்பியப் பொருளதி
பவணந்தியார் — நன்னூல் [கார உரை
புத்த மித்திரனார் — வீரசோழியம்
பெருங்கடுங்கோ — கலித்தொகை
பேராசிரியர் — தொல்காப்பியப் பொருளதி
மருதனிளநாகனார் — அகநானூறு [கார உரை
வேங்கடராஜுலு ரெட்டியார் — திராவிட மொழியின் மூவிடப்
[பெயர்

ஆங்கிலம் :

Anavaratavinayagam Pillai— Sanskrit Elements in the Vocabularies of the Dravidian Languages
Ballard, P. B. — Thought and Language
Beschi, Constantius Joseph — A Grammar of the Common Dialect of the Tamil Language
Bhandarkar, Sir. R. G. — Collected Works
Bray, Denys De. S. — The Brahui Language
Breal, Michel — Semantics
Brown, C. P. — A Grammar of the Telugu Language
Caldwell, Dr. — A Comparative Grammar of the Dravidian Languages
Chatterjee, S. K. — The Origin and Development of the Bengali Language
Grierson — Linguistic Survey
Gundert, Dr. — Malayalam Dictionary
Hahn, F. — Kurukh Grammar
Haveloque, Abel — The Science of Language
Jespersen, Otto — Growth and Structure of the English Language
" — Language, Its Nature, Development and Origin
" — Mankind, Nation and Individual
" — Progress in Language
" — The Philosophy of Grammar
" — The System of Grammar
Jones, Daniel — An Outline ofEnglish Phonetics
Kittel, Dr. F. — A Grammar of the Kannada Language
Max Muller — The Science of Language

Noel - Armfield, G. — General Phonetics

Pillsbury W. B. and Meader C. L. — The Psychology of Language

Platts, John, T. — A Grammar of the Hindustani or Urdu Language

Pope, Rev G. U. — A Handbook of the Ordinary Dialect of the Tamil Language

Purdie, F. M — Syntax in Six Languages

Ramakrishnayya, K. — Studies in Dravidian Philology

Sayce, A. H. — Introduction to the Science of Language

Semenov, A. F. — The Greek Language in Its Evolution

Stokœ, H. R. — The Understanding of Syntax

Subbaiya, K. V. — Dravidic Studies

Sweet, Henry — The Practical Study of Languages

Thalbitzer, William — Grammatical Miscellany to Otto Jespersen

Tucker, T. G. — Introduction to the Natural History of Language

Vendryes, J. — Language

Venkatarama Ayyar, C.P. — Dravidic Studies No. I

Wade, G. W. — Elementary Chapters in Comparative Philology

Whitney, William Dwight — Language and the Study of Language

„ — The Life and Growth of Language

Winfield, W. W. — A Grammar of the Kui Language

Zipf, G. K. — The Psycho - Biology of Language

# பொருளடக்கம்

'கோபுலா' - திணை பால் இடம் ஒத்திருத்தல் - வேற்றுமை யுருபுகள் - செப்பு, வினு - உம்மை - இயற்கை யமைப்பு - மொழியின் உயிர்வாழ்வும் ஆடை யணியும் - எண்ணத்தின் போக்கே சொற்ருெடர் அமைப்பு.

**இணைப்பு**

# மொழி நூல்

## க. மொழியின் தோற்றம்.

ஒருவர் தம் உணர்ச்சியையோ கருத்தையோ மற்றவருக்கு வெளிப்படுத்துதற்குக் கருவியாய் இருப்பது யாதாயினும் அதனை மொழியென்று கூறல் தகும். காட்டு விலங்குகளின் ஒலிகளை இக்காரணம் பற்றியே **விலங்குமொழி** (*Animal Language*) என்ற பெயரால் மொழி நூலார் குறிப்பர். பறவை ஒலிகளும் அங்ஙனமே பறவை மொழி என்று குறிக்கப்படும். சைகைகள் (*Gestures*), தொன்று தொட்டே மொழியாகக் கருதப்பட்டு வந்திருக்கின்றன. முகக்குறிப்பு (*Grimace*) மெய்ந்நிலை (*Posture*), இசை அல்லது போலி ஒலி (*Imitative utterance*) என்பனவும் மொழியாகக் கருதப்பட்டவையே. சைகையாய், குறிப்பாய், போலியாய் இருந்த நிலை படிப்படியே வளர்ந்து சிறந்து பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகு மக்களிடத்தில் உயர்நிலை அடைந்திருக்கின்றது. வரிவடிவாகவும் ஒலிவடிவாகவும் இன்று நாகரிக மக்களிடையே உள்ள மொழி இந்த வளர்ச்சியாகிய கூர்தல் அறத்தின் (*evolution*) பயனே ஆகும். மொழிப்பிறப்பைப்பற்றி முன்னோர் பல்வேறு கருத்துக்கள் கொண்டிருந்தனர்.[1] சைகை முதலான

1. மொழியின் தோற்றத்தைப் பற்றிய ஆராய்ச்சி பல்வேறு காலத்துப் பல்வேறு வகையாக நடைபெற்றது. பயனோ, அவ்வப்போது முரண்பட்ட வாதங்களும் குழப்பங்களுமே யாயின.

எளிய நிலையிலே உள்ள மொழிக்கும், பேச்சும் எழுத்தும் ஆகிய உயர்நிலையிலே உள்ளமொழிக்கும் அமைந்துள்ள தொடர்பை அவர்கள் உணரவில்லை. அதனால், உயர்நிலையில் உள்ள பேச்சும் எழுத்தும் ஆகிய மொழி எதிலிருந்து தோன்றி வளர்ந்தது என்பதை அவர்கள் விளக்கவில்லை. இந்த மொழி திடீரென்று ஏற்பட்டு இருக்கலாம் என்று அவர் கருதினர். அது பற்றியே மொழி கடவுளால் படைக்கப்பட்டது என்ற கொள்கை உடையராயினர்.

பகுதிகளையும் முழுச் சொற்களையும் கடவுளே அவருடைய வியத்தகு ஆற்றலால் படைத்து முதலில் தோன்றிய மக்களுக்கு வழங்கினார் என்பது சிலர் கொள்கை. தென்மொழியும் வடமொழியும் சிவ பெருமான் தமருக ஒலியிலிருந்து பிறந்தன என்பது புராணக் கூற்று. சிவபெருமான் வடமொழியைப் பாணினிக்கும் தென்மொழியை அகத்தியர்க்கும் வகுத்தருளினார் என்னும் கருத்தும் உள்ளது.[2]

பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களும் பிறவும் அமைந்த மொழியைக் கடவுள் மக்களுக்குக் கற்பித்து மாநிலத்தில் வாழச் செய்தார் என்று எண்ணுதல் பொருந்துமோ? முதற்காலத்து மக்கள் நாம் அணி

---

ஆதலின், பிரெஞ்சு நாட்டுக் கழகம் சென்ற நூற்றாண்டின் இறுதியில் இத்தகைய ஆராய்ச்சிக்கு இடந்தரவும் மறுத்துவிட்டது.

(W. B. Pillsbury and C. L. Meader--The Psychology of Language, p. 112)

2. பாணினியும் அகத்தியரும் முறையே வடமொழிக்கும் தென்மொழிக்கும் சிறந்த இலக்கண நூல்கள் எழுதினமை பற்றி இவ்வாறு போற்றப் பெற்றனர்.

வன போன்ற ஆடை அணிகளும், நாம வாழவன போன்ற வீடுகளும் பெற்றே மாநிலத்தில் பிறந்தார்கள் என்று எண்ணுவது தகுமோ? மொழியின் தோற்றம் பற்றிய இக்கருத்தும் அத்தகையதே யாகும்.

பேச்சுமொழி உலகெங்கும் மக்கள் பலரிடத்திலும் காணப்படுகின்றது. நாகரிகம் அற்றவர்களும் விலங்கோடு ஒப்ப வாழ்கின்றவர்களும் ஆகிய மக்கள் கூட்டத்தாரும் பேச அறிந்தே இருக்கின்றனர். ஆனல், விலங்குகளுக்குள்ளே எவ்வளவு உயர்நிலை அடைந்தனவும் பேசும் ஆற்றல் அற்றனவாகவே உள்ளன. இதனல் ஓர் உண்மை விளங்குகின்றது. அஃதாவது, உண்பதும் உறங்குவதும் உயிர்ப்பதும் உழைப்பதும் மக்களுக்கு எவ்வளவு இயற்கையோ, பேசுவதும் அவ்வளவு இயற்கையாக அவர்களுக்குப் படைப்பவன் படைத்திருக்கின்முன். ஆனல் அறியத்தக்கது ஒன்று. உயிர்த்தல் முதலியவற்றில் மக்களின் எண்ணமும் முயற்சியும் குறைவு. அவை தாமே இயற்கையாய் நடைபெறுவன என்று கூறத்தக்கன. மொழி அவ்வாறு தானே அமைந்து நடைபெறும் ஒன்று என்று கூறிவிடல் இயலாது. இயற்கையாய் அமைந்த சில தேவைகளின் பொருட்டு, இயற்கையாய் அமைந்த ஆற்றலைக்கொண்டு உடையும் உறைவிடமும் மக்கள் தேடிக்கொள்வதுபோல, மொழியும் அவர்களால் கற்றுக் கொள்ளப்பெற்றது.

எனவே, மக்களின் இயற்கையாக அமைந்த பலவகை ஆற்றல் போலவே பேசுதலும் இயல்பான ஓர் ஆற்றலே. இந்த ஆற்றல் இயற்கையாதலின் மொழி

கடவுளின் படைப்பு என்பது உண்மையாகின்றது[3]. அந்த இயற்கை ஆற்றலை மக்கள் பயன்படுத்தி வளர்த்த முறைகளை நோக்குங்கால், அது மக்களின் முயற்சியால் அமைந்தது என்பதும் பொருந்துவதே ஆகின்றது.

எங்ஙனமாயினும் நூற்றுக்கணக்கான தலைமுறைகளாகப் பல்லாயிரக் கணக்கான மக்கள் பாடுபட்ட முயற்சியின் பயனாகவே மொழி இன்று உள்ள நிலைமையை அடைந்திருக்கிறது என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

அவர்கள் மொழியை எவ்வாறு வளர்த்தார்கள்? இயற்கை உணர்ச்சியாக (*instinctive*) இருந்த மொழி, விரும்பிச் செய்வதொன்றாக (*intentional*) மாறியது எங்ஙனம்? தம் கருத்தைப் பிறர்க்கு உணர்த்தவும் பிறர் கருத்தைத் தாம் உணரவும் விழைந்த விழைவே காரணம் என்னலாம்.

விலங்குகள் சிலவற்றினிடையே இவ்வாறு கருத்தை வெளிப்படுத்தும் விழைவு இல்லாமற் போகவில்லை. ஆயினும் அவை கருத்தை உணர்த்தும் வாயில்

---

3. We would ask...whether the hand of the creator is any the less clearly to be seen, and need be any the less devoutly acknowledged, in its production, if we regard man himself as having been created with the necessary impulses and the necessary capacities for forming language, and then as having possesed himself of it through their natural and conscious workings. The power which originates is not to be separated from that which maintains and develops; both are one, one in their essential nature, one in their general mode of action. (Whitney, Language and the Study of Language, p. 399)

மக்கள் பேசும் மொழியிலிருந்து முற்றிலும் வேறுபட்டதேயாகும். விலங்குகளினிடையே காணப்படும் வாயில் இயற்கையாகத் தானாகவே அமைந்த ஒன்று; மக்கள்மொழி விரும்பி வளர்த்து அமைத்துக் கொண்ட ஒன்றாகும். விலங்குமொழி வேறுபாடில்லாமல், பெருகாமல், வளர்ச்சி பெறாமல் தோன்றிய நாள் போலவே இன்றும் இருக்கக் காண்கிறோம். மக்கள் மொழி பலவாறு வேறுபட்டுப் பெருகி வளர்ந்து உயரக் காண்கின்றோம்[4]. இதற்குக் காரணங்கள் மேற்கூறியவையே ஆகும். மக்கள்மொழி ஒருவரிடமிருந்து மற்றவர் கற்று வளர்வது. விலங்குமொழியோ எல்லா விலங்குகளுக்கும் தனித்தனியே இயற்கையாக அமைந்தது.

---

4. ஔவையார் பாடியதாக உள்ள வெண்பா ஒன்று மற்ற உயிர்களுக்கு இயற்கையாக அமைந்துள்ள ஆற்றலை விளக்குகின்றது:—

வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்கும் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே என்று வலிமைசொல வேண்டாகாண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது.

குருவி, குளவி, சிலந்தி, தேனீ, சிதல் முதலிய உயிர்களின் ஆற்றல் படைப்புக்காலந் தொடங்கி ஒரே தன்மையாய் மாறுதலின்றி இருத்தல் கருதத்தக்கது. குருவியின் கூடுபோலவும், குளவியின் அரக்குப் போலவும், தேன்கூடு போலவும், சிலந்தியின் கூடுபோலவும், சிதலின் புற்றுப்போலவும் மனிதனால் செய்ய இயலாமற்போயினும், மனிதனின் ஆற்றலில் வளர்ச்சியும் முற்போக்கும் காணப்படுகின்றன. இந்த வேற்றுமை மொழித் துறையிலும் காணப்படுவதாகும்.

Man differs from brute animals not in degree or in the addition of new powers, but in a totally different direction and development of all powers. Man's inferiority to animals in strength and sureness of instinct is compensated by his wider space of attention. (Otto Jespersen—Language, Its Nature, Development and Origin. p. 27)

மொழியின் தோற்றம் பற்றிச் சென்ற நூற்றாண்டில் ஆராய்ந்த அறிஞர்கள் சிலர், குழந்தை எவ்வாறு பேசக்கற்கின்றது என்பதையே ஆராய்ச்சிக் கருவியாகக் கொண்டார்கள். அதனால் அவர்கள் உண்மை காண இயலாமற் போயிற்று. ஒரு குழந்தை முன்னமே வளர்ந்து அமைந்த மொழியைக் கற்கின்றது. அது கற்கும் முறையில் மொழித்தோற்றத்தை ஆராய இடமில்லை. அதன் பச்சிளங்குழந்தைப் பருவத்தில் அது பேசும் முறையை ஆராய்ந்தால் ஒரு சிறிது பயன் உண்டு. அப்பருவத்தில் அந்த இளங்குழந்தை பிறர் பேச்சைக் கவனிக்கவும், அதன் பயனை உணரவும் அறியாத நிலையில் இருக்கின்றது. அதன் செங்கீரைப் பருவத்தில் அதன் சிறிய செவ்வாயிலிருந்து பிறக்கும் இனிய ஒலிகள் காரணமின்றி எழுபவை. அந்த மழலை ஒலிகள் வேறு; அது சிறிது வளர்ந்து பேசும் மழலை மொழியும் வேறு. மழலை ஒலிகளிலே நாம் இயற்கை ஒலிகளைக் கேட்கிறோம். ஆகையால் அந்த ஒலிகளிலே முதற்காலத்து மக்கள் பேசிய இயற்கை மொழியின் கூறுகள் ஒருவாறு அமைந்திருக்கக் காணலாம்.

மொழியின் தோற்றத்தை அறிவதற்கு மற்றொரு வழி, நம் காலந்தொடங்கிப் பின்நோக்கிச் சென்று மொழியின் வளர்ச்சியை ஆராய்ந்து கொண்டு செல்வதாகும். சில நூற்றாண்டுகள்வரை இவ்வாறு பின்நோக்கிச் சென்று ஆராய முடிகின்றது. அதற்கும் முன்னே செல்ல முடியவில்லை. எடுத்துக்காட்டாக, சில மொழிகளின் வரலாறு எழுநூறு எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்டுச் செல்ல இடந்தரவில்லை. சில மொழிகளின் வரலாறு ஈராயிரம் ஆண்டுகள்வரை

ஆராய இடந்தருகின்றது. மிகப்பழைய மொழிகளுள் சிறந்ததொன்றாகிய தமிழ் மொழியும் கி. மு. 3000 வரைக்குமே செல்ல இடந்தருகின்றது. பண்டைக் காலத்தில் தமிழில் இயற்றப்பெற்ற பாடல்கள், நாகரிக மக்களின் மொழி நிலையினையே தெரிவிக்கின்றன. அக் காலத்திற்குப் பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்னே வழங்கிய மொழியின் நிலைமையை, அவற்றைக் கொண்டு அறிய முடியவில்லை. கல்வெட்டுக்கள், செப்பேடுகள், புதைந்த பொருள்கள் என்பவற்றால் மொழித் தோற்றத்தைப் பற்றி அறிவது போதுமான தாகவில்லை.

காட்டுமிராண்டிகள் பல நாடுகளில் பலவகை யான மொழிகளைப் பேசுகின்றார்கள். அவற்றை ஆராய்ந்து அறிஞர்கள் குறித்திருக்கின்றார்கள். முதற் காலத்து மக்களுக்கும் இவர்களுக்கும் ஓரளவு வேறு பாடு உண்டு. அது காலப்போக்கால் ஏற்பட்டது. அது போலவே முதற்காலத்து மொழிக்கும் இவர்கள் மொழிக்கும் வேறுபாடு உண்டு. காட்டுமிராண்டி கள் சிலர் பேச்சில் எத்துணையோ வேறு வேறு அமைப்புக்கள் உள்ளன. தவிர, நாகரிக மக்கள் மொழி யில் காண்பதைவிடப் பன்மடங்கு மாறுதல் காட்டு மிராண்டிகள் மொழியிலே சில ஆண்டுகளில் நிகழ்கின் றது. நாகரிக மொழிக்கும் அநாகரிக மொழிக்கும் கருத்துக்களின் வேறுபாடே பெரிது. மொழிவடிவின் வேறுபாடு பெரிதன்று[5]. ஆதலால் மொழித்தோற்றத்

5. நாகரிகமற்ற மக்களின் மொழியில் பொருள்களுக்குப் பெயர்கள் மலிந்து கிடக்கின்றன; ஆனால் கருத்துக்களுக்குச் சொற் கள் இல்லை; பொதுமையாகவும் நுட்பமாகவும் உணரும் ஆற்றல் அந்த மக்களுக்கு இல்லை; ஆதலால், அவர்கள் மொழியில்

தைப் பற்றிக் காட்டுமிராண்டிகளின் பேச்சுக்களும் அறிவிக்க வல்லன அல்ல.

எனவே, இவற்றையெல்லாம் விடுத்து, மக்களின் தோற்றத்தையும், சமூக அமைப்பின் தோற்றத்தையும் ஆராய்வதால் மொழியின் தோற்றத்தைப் பற்றிய உண்மை உணரலாம். காரணம் என்னவெனில், மொழி தோன்றி வளர்ந்த வரலாறு மக்களின் மனப் பண்பாட்டையும் சமூக அமைப்பையும் ஒட்டிய

---

பொதுப் பெயர்களும் வினைகளும் இல்லை. எடுத்துக்காட்டாக, நடு பிராசில் (Central Brazil) நாட்டுப் பகைரி (Bakairi) மொழியில், ஒவ்வொரு வகைக் கிளிக்கும் ஒவ்வொரு பெயர் உண்டு; ஆனால் கிளி என்ற பொதுப் பெயர் இல்லை. லிதுவேனியர் (The Lithuanians) மொழியில், குதிரையின் வெண்ணிறத்திற்கு ஒரு பெயரும், கால்நடையின் வெண்ணிறத்திற்கு வேறொரு பெயரும், மற்ற விலங்குகளின் வெண்ணிறத்திற்கு மற்றொரு பெயரும் வழங்க, பொதுவாக வெண்ணிறத்தை உணர்த்த ஒரு சொல் இல்லை. சில மொழிகளில், கை கழுவலை உணர்த்த ஒரு சொல்லும், தட்டு முதலியன கழுவலை உணர்த்த வேறு சொல்லும் இருக்க, கழுவுதல் என்னும் பொது வினைக்கு ஒரு சொல் இல்லை. க்ளாமத் இந்திய மொழியில், ஒவ்வொரு விலங்கின் ஓட்டமும் ஒவ்வொரு சொல்லால் குறிக்கப்படுகின்றது; ஆனால் ஓடுதல் என்ற பொதுவினை இல்லை. (Pillsbury and Meader, The Psychology of language, p. 175). தென் அமெரிக்காவில் சில மொழிகளில் என் தலை, உன் தலை, என் கண், உன் கண் முதலியவற்றிற்குச் சொற்கள் உள்ளன; ஆனால் தலை, கண் என்னும் சொற்கள் இல்லை. டாஸ்மானியர் மொழியில் மரவகைக் கெல்லாம் தனித்தனிப் பெயர் இருக்க, மரம் என்னும் பொதுப் பெயர் இல்லை. (Jespersen, Progress in Language, pp, 26, 350) சில மொழிகளில் அண்ணன், தம்பி என்பவரை உணர்த்தச் சொற்கள் உளவாயினும், 'சகோதரன்' என்ற பொதுச் சொல் இல்லை. தமிழில் 'உடன்பிறந்தார்' என்ற சொல் இருந்தல் நாகரிகச் சான்றேயாகும். சிறப்புப் பெயர்கள் உள்ள இடத்திலெல்லாம் இவ்வாறே பொதுப் பெயரும் தமிழில் காணப்படுகின்றது. களிறு, பிடி என்பன ஆண் பெண் யானைகளை உணர்த்த, யானை என்பது பொதுத்தன்மை உணர்த்தியது காண்க. இத்தகைய அமைப்பு அநாகரிக மக்கள் மொழியில் இல்லாததாகும்.

தாகவே இருக்கின்றது. மனத்தில் தோன்றிய கருத்தைச் சமூகத்தில் பிறர்க்கு உணர்த்தி, பிறர் கருத்தைத் தானும் உணர்ந்து பேசிய காரணத்தாலன்றோ மொழி வளர்ச்சிபெற்றது? எனவே, உள நூலும் சமூக நூலும் (*psychology & socialogy*) மொழி நூலுக்குப் பெருந்துணை செய்வனவாகும்.

சைகைகளிலிருந்தே மொழி தோன்றியதாகச் சிலர் கூறுகின்றனர். சைகைகள் அறிவை அடிப்படையாகக் கொண்டவை. சைகைகள் மக்களிடமே காணப்படுகின்றன. சுட்டிக்காட்டுதல் போன்ற எளிய சைகையும் எந்த விலங்கினிடமும் காணமுடியாது. ஆனால், எல்லா இனத்து மக்களும் அந்தச் சைகைகள் செய்ய வல்லவராய் இருக்கின்றனர். ஆகையால், மக்கள் மக்களாய் இருப்பது மொழிக்கு அடிப்படையான சைகைகள் செய்யவல்லவராய் இருத்தல் பற்றியே என்றும் சிலர் கருதுகின்றனர்.

ஆயினும், கருத்தை உணர்த்தச் சைகைகள் மிகச் சிறிதே பயன்படுகின்றன. உள்ளத்தில் உணர்ந்ததை உள்ளவாறு முழுவதுமாகப் பிறர்க்கு உணர்த்தச் சைகைகள் போதா. தவிர, சைகைகளால் உணர்த்துவதில் சில இடையூறுகளும் உள்ளன. எடுத்துக்காட்டாக, கண் காணாவிடத்திலும், ஒளி இல்லா இராக் காலத்திலும் சைகைகளைப் பிறர் அறியமுடியாது[6].

6. தென் ஆப்பிரிக்காவில் உள்ள புதர்மக்கள் இரவில் பேச விரும்பினால், தீ வளர்ப்பார்களாம். தீயின் ஒளியால் சைகைகள் தெரியாவிட்டால், அவர்களின் பேச்சு விளங்காமற் போகுமாம். ஆதலின், அவர்கள் பேசும் மொழியில் சைகைகளே உயிராய் இருத்தல் அறியப்படும். (G. W. Wade, Elementary chapters in Comparative Philology, p. 2).

மற்றொன்று, கைகளால் வேலை செய்துகொண்டிருக்கும் ஒருவன் அந்த வேலையை விட்டபிறகே சைகைகளைச் செய்யமுடியும். பேச்சுமொழி வல்ல ஒருவன், பேசிக் கொண்டே தொழில் செய்வதுபோல, தொழிலும் சைகையும் ஒருங்கே செய்வதற்கு அவனால் முடியாது. கைகள் தொழில் செய்யத் தேவையில்லாமல் இருந்திருப்பின் பழங்காலத்து மக்கள் சைகை மொழியோடு நின்றுவிட்டிருப்பார்கள்; பேச்சு மொழி தேவையென்பதை உணர்ந்து அதை வளர்த்திருக்க மாட்டார்கள். சைகைகளுக்குப் பயன்பட்ட கைகள் வேறு தொழிலுக்கும் வேண்டியிருந்தன. ஆனால் வேறு தொழிலுக்குப் பயன்படாமல், பேச்சுக்கெனவே அமைந்திருக்கின்ற ஓர் உறுப்பு உடலில் இருக்கின்றது. அதுதான் குரல்வளை. ஆதலின் கைகள் வேறு வேலைக்குத் தேவையாயிருந்தபோது மக்கள் குரலைப் பயன்படுத்திக் கொண்டனர். குரல்வளையில் அமைந்த தசைநார்கள் மிகமெல்லியவை, நுண்ணியவை, பல்வேறு வகையாக அமைந்து தொழிலாற்ற வல்லவை; பெருமுயற்சியும் வேண்டாமல் சிறு காற்றாலேயே அசைந்து தொழில் செய்பவை. இக்காரணங்களால் சைகைக்கு உரிய கைகள் தோற்றன. குரல், மொழிக்கு உரியதாய் வென்றது. மொழி என்றால் பேச்சு மொழியே என்னும் நிலைமையும் வந்தது.

இவ்வாறு வெற்றிபெற்ற குரலை மக்கள் எவ்வாறு பயன்படுத்தினர்? இதுபற்றிய ஆராய்ச்சிகள் பலதிறத்தன. அவற்றுள் குறிக்கத்தக்கன ஐந்து:

பறவை, விலங்கு முதலியவற்றின் ஒலியைக் கேட்டு அவற்றைப்போல் ஒலித்தலால் மொழி பிறந்

தது என்பது ஒரு கொள்கை. அவ்வாறு பிறந்த மொழியே இசைமொழி அல்லது போலிமொழி (*The onomatopoetic theory or the bow-wow theory*) என்பது. இப்படிப் பிறந்த ஒலிகளைச் சொற்களாகக் கொண்டு பல பொருள்களுக்கும் செயல்களுக்கும் பெயராகவும் வினையாகவும் இட்டு வழங்கினர் என்றும், அந்தச் சொற்களிலிருந்தே மற்றச் சொற்களும் அமைந்து மொழி வளர்ந்தது என்றும் கூறுவர்[7]. எடுத்துக்காட்டாக, காக்கை, குயில், கிலுகிலுப்பை முதலிய தமிழ்ச் சொற்களைக் குறிப்பிடலாம்[8]. எகிப்து நாட்டு மக்கள் பூனையை மியா என்பார். பாப்பன் மக்கள் (*Papuans*) கோடரியை டின்டின் (*dindin*) என்பர்; உணவை 'நம்நம்' (*num-num*) என்பர்; நாயை 'பவ்வவ்' என்பர்[9]. இங்ஙனமே பல மொழியிலும் பல சொற்கள் உள்ளன. ஆயினும் ஒரு மொழியில் உள்ள எல்லாச் சொற்களும் இவ்வாறே பிறந்தன என்று கூறுதல் பொருந்தாது. மாக்ஸ்முல்லர் கூறுவது போல இத்தகைய போலி ஒலிகள் ஒரு மொழிக்கு

7. இந்தக் கொள்கையைப் பல சான்றுகள் தந்து நிறுவியவர் ஹொர்டர் என்னும் அறிஞர். பெர்லின் கழகம் (Berlin Academy) மொழித் தோற்றத்தைப் பற்றிய சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரைக்குப் பரிசு வழங்க முன் வந்தது. அந்தப் பரிசை அறிஞர் ஹொர்டரே பெற்றார். ஆயின், அவருடைய இறுதிக் காலத்தில் அந்தக் கொள்கை மதிப்பிழந்துவிட்டது. பரிசு வழங்கிய கழகமும் அவரைக் கைவிட்டது. (Max muller, The Science of Language. P. 409).

8. வங்காளி மொழியில் இத்தகைய சொற்களை எண்ணி நூற்றைம்பது உள்ளன என்பர். (The Origin and Development of the Bengali Language, p. 890).

9. Sayce, Introduction to the Scince of Language, Ch. II.

இன்றியமையாத கருவிகளல்ல. விளையாட்டுப் பொருள்கள் என்னலாம்.

வெறுப்பு, வெகுளி, மகிழ்ச்சி, அழுகை முதலிய உணர்ச்சி வயமாக இருக்கும்போது பிறக்கும் ஒலிகள் மொழிக்குக் காரணம் என்பர் ஒருசாரார். இதனை உணர்ச்சி மொழி அல்லது குறிப்பு மொழி பற்றிய கொள்கை (*the interjectional theory or the pooh-pooh theory*) என்பர். ஆ, ஓ, அன்னோ, அந்தோ, சீ முதலிய சொற்கள் அவ்வாறு பிறந்தன என்னலாம். இந்தக் கொள்கையும் குறையுடையதே. உணர்ச்சி பற்றிப் பிறக்கும் ஒலிகள் மிகச் சில சொற்களுக்கே காரணமாக இருக்கின்றன. தவிர, அச்சொற்கள் உணர்ச்சியை அறிவிக்குமே ஒழியக் கருத்தை அறிவிப்பதில்லை. சொற்கள் உணர்ச்சிக்குக் கருவியாய் இருக்கும் நிலை குன்றி அறிவுக்குப் பயன்படும் நிலை வந்தால்தான் மொழி வளர்கின்றது. சுருங்கக் கூறினால், உண்மையான பேச்சு மொழி உணர்ச்சியால் பிறக்கும் ஒலிகளைக் கடந்ததாகவே உள்ளது[10].

மணியின்கண் ஒலி அமைந்திருத்தல் போல, ஒவ்வொரு பொருளுக்கும் இயல்பாகவே ஒவ்வொரு வகையாக ஒலிக்குந்தன்மை உள்ளது. மக்களுக்கும் அத்தன்மை உண்டு. அறிவால் உணரும் பொருள்களைக் குறிக்கச் சொற்களை ஆக்கி அமைத்துக்கொள்ளும் ஆற்றலும் மக்களுக்கு இயல்பாக அமைந்தஒன்று. இவ்வாறு கூறுவர் மாக்ஸ்முல்லர் என்னும் அறிஞர்.

---

10. These interjections are only the outskirts of real language. Language begins where interjections end. (Max Muller, The Science of language, p. 420).

இக்கொள்கையைப் **பண்பு மொழிக் கொள்கை** *(the ding-dong theory)* என்பர். மக்களுக்கு முதலில் இயல்பாக அமைந்த ஆற்றல் பிற்காலத்தே எவ்வாறு மறைந்து விட்டதோ தெரியவில்லை. அன்றியும் இந்தக் கொள்கை எல்லாவற்றையும் பற்றித் தெளிவற்றுக் கிடப்பதால், ஒன்றையும் விளக்காது பயனற்றுப் போகின்றது.

நான்காவது கொள்கை ஏலேலோ மொழி பற்றியது *(yo-he-ho theory)*. முயன்று உடல் வருந்தித் தொழில் செய்யும் தொழிலாளர் மூச்சுவிட்டு வாங்கும் துன்பம் குறைதற் பொருட்டுக் குரல்வளையைப் பலவாறு இயக்கப் பிறக்கும் ஒலிகளே இத்தகையன. தொழிலாளர் பாட்டுக்களில் இத்தகைய சொற்கள் பல உள்ளன. ஆனால், ஒரு மொழியில் உள்ள எல்லாச் சொற்களையும் நோக்குங்கால் இக்காரணம் பற்றிப் பிறப்பன மிகமிகச் சிலவேயாகும்.

இக்கொள்கைகள் அனைத்தும் மொழியின் சிற்சில பகுதிகளை விளக்குகின்றனவே யன்றி முழுமையும் விளக்கவில்லை. முக்கியமான பகுதிகளையும் விளக்கவில்லை. ஆதலின் இவை மொழியின் தோற்றத்தை விளக்குவன அல்ல என்பர் அறிஞர் ஆட்டோ ஜெஸ்பெர்ஸன். அவர் கூறும் காரணம் பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. உடலில் எந்த உறுப்பும் பயன்படாமல் இருந்து திடீரென முழுவளர்ச்சி பெறுவதில்லை; படிப்படியாகவே வளர்ந்து பயன்படுகின்றது. அவ்வாறே மக்களின் குரலும் வாளா இருந்து திடீரென்று சொற்களை ஒலிக்கப் பயன்பட்டதாகக்

கொள்ளுதல் பொருந்தாது. மேற்குறித்த நான்கு கொள்கைகளும், ஒலிகள் பிறக்கும் வரைக்கும் மக்கள் ஊமையராக இருந்தார்கள் என்று கொள்ளுவதால், பொருந்தாமல் போகின்றன.

ஜெஸ்பெர்ஸன் கொள்கைப்படி, முதற்காலத்து மக்கள் ஒரு காரணமும் இல்லாமல் மழலை ஒலிகளை ஒலிக்கும் இளங்குழந்தைபோல் பேசிவந்தார்கள். அவர்களின் பேச்சு ஒலிகள் அப்போது கருத்தை உணர்த்துவதற்காகப் பயன்படவில்லை. வெறும் பொழுது போக்கான இன்ப விளையாட்டாக இருந்தன. ஒரு தாய் தன் இளங்குழந்தையுடன் பொருளற்ற ஒலிகளைப் பேசி மகிழ்வித்துத் தானும் மகிழ்வது போல இருந்தது அந்த நிலைமை. குழந்தையின் செங்கீரைப் பருவத்தில் அதன் நாக்கு அதற்குச் சிறந்த விளையாட்டுக் கருவியாக இருப்பதுபோல், முதற்காலத்து மக்களுக்குப் பேச்சுமொழி பொழுதுபோக்கான இன்பப் பாட்டாக இருந்தது[11].

11. இக்காலத்திலும், நாகரிகம் மிக்க மக்களின் பேச்சுக்கும் நாகரிகம் குறைந்த மக்களின் பேச்சுக்கும் இடையே ஒலி வகையில் வேறுபாடு உள்ளது. நாகரிகம் மிக்க மக்களின் பேச்சில் அறிவு மேம்பட்டுள்ளது; மற்றவர்கள் பேச்சில் உணர்வே தலைகாட்டுகின்றது. அதனால் முன்னவர் பேச்சில் ஆற்றொழுக்குப் போன்ற ஒலியமைப்பு உள்ளது; பின்னவர் பேச்சு எடுத்தலும் படுத்தலும் விரவி, ஒருவகை இசையாய்க் கேட்கின்றது. நகர மக்கள் சொற்களை ஒலியளவு கடவாமல் பேச, நாட்டுப்புற மக்கள் சொற்களை நீட்டி நீட்டிப் பேசி இசையோடு முடித்தல் இன்றும் உள்ளதே ஆகும்.

Men sang out of their feelings long before they were able to speak their thoughts. But of course we must not

அவர்கள் பேச்சைப் பாட்டு என்று குறிப்பிடுதல் முற்றிலும்பொருந்தும். ஏனெனின், மொழியின் தோற்றம் இன்பமான விளையாட்டுப் பகுதியில் காணத்தக்கதே யன்றிக் கவலையான வாழ்வுப் பகுதியில் காணத்தக்கதன்று. அறிவு கொண்டு அறிந்து ஆழ்ந்திருந்த நிலையில் மொழி பிறக்கவில்லை. ஆனால் உணர்வு கொண்டு உணர்ந்து இன்பமாய் விளையாடிய நிலையிலேயே மொழி பிறந்தது. இன்ப ஆடல்களில் சிறந்தது காதல் விளையாட்டு. ஆற்றல் மிக்க இளமை, பாட்டாகப் பொங்கி வழிதல் இயற்கை. கவலையற்ற உள்ளத்தில் பாட்டுப் பிறத்தல் இயற்கை. நாகரிக மற்ற காட்டு மிராண்டிகளிடம் இந்த உண்மையை இன்றும் அறியலாம். அவர்கள் ஆடும்போதெல்லாம் பாடுகிறார்கள். அவ்வப்போது புதியனவாகப் புனைந்த பாட்டுக்களே பாடுகிறார்கள். முதற்காலத்து மக்கள் இவ்வாறு ஆடுகின்ற நிலையிலே மொழியைத் தோற்றுவித்தார்கள். அவர்கள் பாட்டெல்லாம் பொருளற்ற வெற்றொலிகளாக இருந்தன. படிப்படியே அவை பொருளுணர்த்தத் தொடங்கின. பிறந்த காலமும் இடமும் காரணமும் பற்றி ஒவ்வோரொலியும் ஒவ்வொரு பொருளையோ தொழிலையோ சுட்டத் தொடங்கின. இவ்வாறுதான் பொருளற்ற வெற்றுரைகள்

---

imagine that "singing" means exactly the same thing here as in a modern concert hall. When we say that speech originated in song, what we mean is merely that our comparatively monotonous spoken language and our highly developed vocal music are differentiations of primitive utterances, which had more in them of the latter than of the former. (Jespersen, Language, Its Nature etc. p. 436).

கருத்துணர்த்தும் சொற்களாயின[12]. எனவே எல்லா நாடுகளிலும் பாட்டு உரைநடையை விடப் பழமையாய் இருப்பது போலவே, பாட்டு மொழி, பேச்சு மொழியினும் முற்பட்டதாகும். ஓவியம் முந்தியது; அதிலிருந்து தோன்றிய எழுத்துப் பிந்தியது. அது போலவே முதற்காலத்து மக்கள் பாடிய பாட்டுக்களே பிற்பட்ட பேச்சுமொழியின் தோற்றத்திற்குக் காரணமானவை. இந்தக்கொள்கையே 'தானனன கொள்கை' அல்லது 'பாட்டு மொழிக் கொள்கை' (*the lyric theory or the beynonino theory*) என்பது.

---

12. பெட்டைக் கோழி கிக் கிக் என்று ஒலித்துக்கொண்டிருக்கின்றது. வானத்தில் பருந்து பறந்து வருவதைக் கண்ட போது, தன் குஞ்சுகளுக்கு எச்சரிக்கை செய்யத் தொடங்கி, கிக் கிக் என்னும் ஒலியையே ஒருவகை மாறுதலுடன் ஒலிக்கின்றது. அந்த ஒலிவேறுபாட்டைக் குஞ்சுகள் தெரிந்துகொண்டு தாயின் சிறகை அரணாக அடைகின்றன. பொருளற்ற 'கிக் கிக்' என்னும் ஒலி இவ்வாறு எச்சரிக்கைப் பொருள் பெற்றது போலவே, பண்டைக் காலத்தில் ஒவ்வொருவகை ஒலியும் சொல்லாய்ப் பொருள் பெற்றது என்பது ஜெஸ்பெர்சன் கொள்கை. (Jespersen Language. Its Nature, etc. p. 437).

## உ. குழந்தை மொழி.

மொழியின் தோற்றத்தை அறிவதற்குக் குழந்தை மொழி பற்றிய ஆராய்ச்சி பெரிதும் பயன்படாமை மேலே கண்டோம். மொழி முதலில் தோன்றி வளர்ந்த நிலை வேறு; ஒரு குழந்தை மொழியைக் கற்று வளரும் நிலை வேறு. பல்வகை அமைப்பும் நிறைந்து பண்பட்ட மொழியையே குழந்தை கற்கத் தொடங்குகின்றது. ஆதலின், குழந்தை மொழியை ஆராய்வது, மொழி கற்கப்படும் முறையை உணர்வதற்கே பெரிதும் பயன்படும்.

மனிதன் தன் வாழ்நாளில் பெறுதற்கு அரிதாய்ப் பெற்ற பெருஞ்சிறப்பு, மொழி பேசக் கற்ற நிலையே. குழந்தைப் பருவத்தில் முதல் மூன்று ஆண்டுகளில் கற்கும் அவ்வளவு கல்வியை வேறு எந்த மூன்று ஆண்டுகளிலும் மனிதன் கற்பதில்லை. இத்துணை முயற்சியும் முயற்சிக்கு ஏற்ற பயனும் உள்ள வாழ்வின் பகுதி ஆராய்ச்சிக்கு உரிய பகுதியாகும்.

குழந்தைப் பருவத்தில் மொழியைக் கற்கும் போது செய்யப்படும் முயற்சியோ மிகப் பெரிது; ஆனால் அது துன்பமாகவே உணரப்படுவதில்லை. எல்லாம் இயல்பாக நடைபெறுவதால் எள்ளளவும் துன்பமில்லை. அதற்குமாறாக, நாள்தோறும் புதுமையே காணப்படுவதால் அக் கல்வி இன்பம் நிறைந்ததாக உள்ளது. கற்கும் குழந்தையும் இன்புறுகின்றது. கற்றலைக் காணும் பெற்றோரும் இன்புறுகின்றனர்.

குழந்தை கற்கும்போது நேரும் வழுக்களுக்குக் கணக்கில்லை. ஆனால், அவ்வாறு வழு நிறைந்த மழலையே இன்பத்திற்குக் காரணமாக விளங்குகின்றது. வழுக் குறையக் குறைய, பிழையின்றிப் பேசுதல் பெருகப் பெருக, குழந்தையின் பேச்சில் இன்பம் குறைகின்றதுபோலும்! இரண்டாம் ஆண்டில் குழந்தை பேசும் பேச்சில் பிறக்கும் அவ்வளவு இன்பம், ஐந்தாம் ஆண்டில் பேசும் பேச்சில் இல்லையன்றோ?

சிறந்த இனிமை பயப்பனவாகத் தமிழர் கருதியன யாழும் குழலும். திருவள்ளுவர் அவற்றின் இனிமையைக் குறை கூறவில்லை. ஆயினும், குழந்தையின் மழலைச் சொல் பயக்கும் இனிமையோடு ஒப்பிடும்போது,

> குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
> மழலைச்சொல் கேளா தவர்[1].

என்று போற்றுவாராயினர்.

மொழிக்கு இனிமை நிரம்புதல் இருவகையாலாகும். ஒன்று, சொல்லும் சொற்களாலேயே அமையும் ஒலியின்பம்; மற்றொன்று சொல்லும் பொருளால் அமையும் கருத்தின்பம். குழந்தையின் மழலையில் யாழிசைபோன்ற ஒலியின்பமும் காணோம்; அதற்குக் குழந்தையின் கருத்தைப் புலப்படுத்தும் ஆற்றலும் இல்லை; பெற்றோரும் அதன் பொருளை அறிய முடியாமலிருந்தும் இன்புறுகின்றனர். இதனை உணர்ந்து வியந்தார் ஔவையார் என்னும் புலவரும்[2].

---

1. திருக்குறள் 66.

2. புறநானூறு 92. ஔவையார் இங்கு மழலை மொழியைப் பொருளற்ற சொற்கள் என்று சொல்லத் துணியாமையும், அவை

குழந்தை மொழி கற்கும் நிலை மூவகைப்படும். அவை, அழு நிலை, செங்கீரை நிலை, பேச்சு நிலை எனப் படும். அழத் தெரியாத குழந்தையைப் பற்றிப் பெற்றோர் ஐயமும் கவலையும் கொள்வர். அந்தக் குழந்தை ஊமையாகுமோ, பிழைத்து வாழுமோ என்று ஐயுறுவர்; கவல்வர். குழந்தை பிறந்ததும் அழுகின்றதா என்று கேட்பதும், அழுகுரல் கேட்டு அகமகிழ்வதும் வழக்கம். அழு நிலையில், ஒரு கருத்தை உணர்த்தும் நோக்கம் குழந்தைக்கு முதலில் எழுவதில்லை. இயல்பாகப் பெற்ற அந்த ஆற்றலை நாளடைவில் ஒரு நோக்கத்திற்குப் பயன்படுத்திக் கொள்கின்றது. பசித்துன்பத்தையோ வேறொன்றையோ அழுகுரலால் அறிவிக்கும் நிலைக்கு வருகின்றது. அன்றியும், இவ்வாறு அழுதலால் குரலுக்கும் அதனை அடுத்துள்ள உறுப்புக்களுக்கும் தன்னை அறியாமல் பயிற்சி கொடுத்துக் காத்துக் கொள்கின்றது; எதிர்காலத்தில் இசைக் கலைஞனாகவோ சொற்பொழிவாளனாகவோ விளங்கத் தக்கவாறு குழந்தை பெறும் முதல் பயிற்சி இதுவேயாகும்.

இந் நிலை கடந்து செங்கீரைப் பருவம் அடைந்ததும், குழந்தையின் வாயில் பிறக்கும் ஒலிகள் செவிக்கு இன்பம் பயக்கும் ஒலிகளாகும். இந்த ஒலிகளே அடுத்த நிலையில் சொல்வடிவு பெறுவன. சொல்வடிவு பெறாத இவ்வொலிகளைச் செங்கீரைப் பருவத்

---

குழந்தையின் கருத்திற்கு வடிவந் தந்து வெளிவருவனவே என உணர்ந்தமையும், குழந்தை கருதிய பொருளைப் பெற்றோர் அறிய முடியவில்லை எனக்கூற முன் வந்தமையும் காண்க. 'பொருளில்லாதன' என்னமல், 'பொருளறி வாரா' என்ற கருத்து உள நூலாராய்ச்சியாளருக்கு உவகை யூட்டுவதாகும்.

தில் குழந்தை ஒலிக்கக் காரணம் என்ன? குழந்தை விளையாட விரும்பும் விருப்பமே காரணமாகும். இந்த முதல் விளையாட்டில் குழந்தைக்கு விளையாட்டுக் கருவியாய்க் கிடைப்பது அதன் நாக்கே. நாக்கு முதலில் அசைந்த அசைவுகள் தன்னையறியாமல் நடைபெற்றன. குழந்தை அந்த நாக்கை இப்போது கருவியாய்ப் பெற்று, அதனைக் கொண்டு விளையாடத் தொடங்குகின்றது.

இப்போது நாக்கின் அசைவால் பிறக்கும் ஒலிகள் ஆ, ஊ, லா, ரா, மா, பா போன்றவை; (தனி உயிர், அல்லது ஒரு மெய்யோடு கூடிய உயிர்) இவற்றை எந்த மொழியின் எழுத்து வடிவாலும் எழுதிக் காட்ட இயலாது. குழந்தையின் இரண்டாந் திங்களிலேயே இவ்வொலிகள் தோன்றலாம்; மூன்றாந் திங்களில் இவை வளரத் தொடங்கும்.

தன் ஒலிகளைத் தானே கேட்டு அறியும் நிலை அடுத்து வரும். அப்போது அஃது ஒரு தூண்டுகோலாக அமைந்து, குழந்தை தன் ஒலிகளைப் பலவடிவாய்ப் பயிலச் செய்யும். பெற்ற தாயோ மற்றவரோ குழந்தை முன் இருந்து அத்தகைய ஒலிகளை ஒலித்து மகிழ்ந்து கொண்டிருந்தால், அது மற்றொரு தூண்டுகோலாகும். தமிழ் நாட்டார் குழந்தையைத் தொட்டிலில் இட்டு, "ஆராரோ ஆரிரிரோ ஆரிவரோ" என்று பாடுவது விழுமிய தொண்டாகும். தாலப் பருவம் என்பது நாக்கின் பயிற்சியைக் குறித்தலும், தாலேலோ என்று முடியும் பாடல்கள் அதனைப் போற்றலும் அறிந்து மகிழ்தற்கு உரியன. பெற்றோர்கள் இப்பருவத்தில் குழந்தைக்குச் செய்யும் பேருதவி,

குழந்தையோடு ஒலித்து மகிழ்வதே ஆகும். அதன் பயன், அப்போது காணப்படாவிடினும், குழந்தையின் பிற்கால மொழிப் பயிற்சிக்குச் சிறந்த அடிப்படையாக அமையும்.

படிப்படியே குழந்தை பெற்ருேர் போல் ஒலிக்க முயலும். அப்போது புதிய பல ஒலிகளும் அதன் வாய் மலரில் மணக்கும். பால் குடிப்பதோடு வேறு தின்பண்டங்களும் பழங்களும் உண்ணத் தொடங்கி, நாக்கும் வாயும் இதழும் பயிற்சி பெறப் பெற, இம் முயற்சியில் வெற்றி பெற்றுக் கொண்டே வளரும். பெற்ருேர் பேச்சில் கேட்ட பல ஒலிகளைத் தானும் ஒலிக்க முயலும்[3]. இதுவே, அடுத்த நிலையாகும்.

முதலில் ஓரசையாகவே சொற்கள் ஒலிக்கப்படும். அவ்வாறு ஒலிக்கும் ஒலிகளும் பல திரிபுகளுக்கு உட்படும். நெய் நீ ஆகும்; காய் சா ஆகும்; மேலே மே ஆகும்.

ஈரசைச் சொற்களானுல், முதலில் உள்ள மெய்யையாவது ஈற்ருெலியையாவது விட்டு ஒலிக்கும். மூவசை நாலசைச் சொற்களை எவ்வாறேனும் ஈரசையாக்கிவிடும். ஆனுல், அந்தக் குழந்தையிடம் அறியாமை இல்லை. எது திருத்தமான ஒலி என்பது

3. குழந்தை முதல் முதலில் வரையும் ஓவியங்களை இங்கே கருதவேண்டும். வெள்ளைத் தாளில் கருங்கோடு கிழித்து 'இது மாடு' என்னும். மற்ருெரு கோணல் எழுதி 'இது குருவி' என்னும். அந்தக் குழந்தை கருதிய உருவங்களுக்கும் வரைந்த கீற்றுக்கும் எவ்வளவு பொருத்தம் உண்டோ, அவ்வளவு பொருத்தமே பெற்ருேரின் பேச்சில் கேட்ட ஒலிக்கும் அதுபோல் தான் ஒலித்த ஒலிக்கும் உண்டு.

அதற்குத் தெரியும். ஒலிக்க முடியாத குறையால் அவ்வாறு திரிபு நேர்கின்றது. மற்றவர்கள் திரித்து ஒலித்தால் குழந்தை கேட்டுக்கொண்டு தலையசைப் பதில்லை. 'தோசை' என்று நன்றாகச் சொல்லமுடியா மல் 'ஓசை' என்னும் குழந்தையே, அதன் தாய் 'ஓசை' என்று ஒலித்தால், ஒத்துக்கொள்ளாமல் மறுக்கின்றது. யாராவது வேண்டுமென்றே, அவ் வாறு அதன் எதிரே பலமுறை தவறாக ஒலித்தால், வருந்துகின்றது; அழவும் அழுகின்றது. ஆதலால் குழந்தைக்கு அந்தச் சொல்லின் முழு வடிவம் தெரி யும். ஆயினும் அதனால் அவ்வாறு ஒலிக்க முடிய வில்லை. இந்தக் குறையைப் பெற்றோர் உணர்ந்து நடக்கவேண்டும். குழந்தையின் பிழையை எடுத்துக் காட்டலாகாது. அவர்கள் அப்போது செய்ய வேண்டும் கடமை ஒன்றே. அஃதாவது, பரபரப்பாகப் பலவற்றை விரைந்து பேசிக் குழந்தையைத் திகைக்கச் செய்யாமல், சில சொற்களே சொல்லவேண்டும்; அவற்றையும் நிறுத்தி ஒலிக்கவேண்டும்.

பெற்றோர் குழந்தைக்குக் கருத்துக்களைக் கற்பித் தால் அமையும்; ஒலிகளைக் கற்பிக்கத் தொடங்கிச் சோர்வுறச் செய்தல் வேண்டா. ஒலிகளைக் கற்றுப் பேசவேண்டும் என்பதில் குழந்தைக்கு ஊக்கமும் ஆர்வமும் இயற்கையாகவே உள்ளன. அவற்றைக் கெடுக்காமலும் குறைக்காமலும் இருந்தால் போதும். அதுவே பெற்றோரின் கடமையாகும், குழந்தையின் மூளை இடைவிடாமல் ஒலியாராய்ச்சி நடத்திக் கொண் டிருக்கின்றது. அதற்கு இடையூறு செய்யாமல் விட்டுவிட்டால், வளர்ச்சி காண்பது திண்ணம்.

'பூனை'யை நன்றாக ஒலிக்க இயலாத குழந்தை, 'மியா' என்ற ஒலியால் அதனை எளிதில் உணர்த்திவிடுகின்றது. இந்த இயல்பு வளர்ந்த மக்களிடத்தும் காணப்படுகின்றது. காக்கை என்றும், கிலுகிலுப்பை என்றும் பெயர் வைத்த காரணம் இதுதானே!

பக்கத்து வீட்டில் ஒரு பொருளுக்கு ஒரு பெயர் வைத்துப் பேசக் கேட்ட குழந்தை, அதனை நினைவில் வைத்துக் கொண்டு தன் தாயிடம் சென்று 'இது என்ன?' என்று விடாப்பிடியாய்க் கேட்டு அழுதலும் உண்டு. அப்போது தாய் சொன்ன பெயர் தனக்குப் பொருத்தமாகத் தோன்றாமையாலும், தன்னால் நன்றாக ஒலிக்க முடியாமையாலும் குழந்தை ஏமாற்றம் அடைகின்றது. ஒலிகளைக் கற்பதில் இதுபோன்ற போராட்டம் எத்தனையோ குழந்தைக்கு நேர்கின்றன. ஆங்கிலம் தெரியாத ஒருவர், தெரிந்த ஒரு மாணவனைப் பார்த்து 'தம்பி! உன் பெயர் ஆங்கிலத்தில் என்ன?' என்று கேட்டுத் திகைப்பது உண்டன்றோ? வளர்ந்த பிறகும் மொழிப் போராட்டம் விட்டபாடில்லை.

ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு பொருளையே குறிக்கும் என்று நெடுநாள் வரையில் குழந்தை எண்ணி வளர்ந்து, பிறகு ஒரு நாள் ஏமாந்து போகின்றது. அப்பா என்றால் தன் தந்தை ஒருவரையே குறிக்கும் என்று முதலில் உணர்ந்த குழந்தை, வீடு தோறும் 'அப்பா' என்று ஒருவர் இருத்தலை உணர நாளாகும். முதலில் கண்ட தென்னை ஒன்றையே 'மரம்' என்ற சொல்லால் உணர்ந்த குழந்தை, முருங்கை மரத்தைப் பக்கத்து வீட்டார் 'மரம்' என்று சொல்லும்போது மறுக்க முனைகின்றது.

திணை பால் முதலியவற்றைப் பற்றி முதலில் குழந்தை எள்ளளவும் கவலை கொள்வதில்லை. தன்னை 'நல்ல பையன்' என்று பாராட்டிய தாயைத் தானும் அந்தத் தொடரால் 'நல்ல பையன் நீ' என்று பாராட்டுகின்றது. தன் எதிரே வாலாட்டும் நாயை யும் 'நல்ல பையன்' என்று பாராட்டுகிறது.

மொழிநூலறிஞர் ஜெஸ்பெர்ஸன் தம் குழந்தை எவ்வாறு எண்களைக் கற்றது என்று ஆராய்ந்து சில குறிப்புக்களை விளக்கியுள்ளார். வேனிற்காலத்தில் வெளியே சென்று விளையாடவும் பலவற்றைப் பார்த்து அறியவும் வாய்ப்பு நேர்வதால், மற்றக் காலத் தில் வீட்டினுள் இருந்து கற்றவற்றை அக் குழந்தை மறந்துவிடக் கண்டாராம். முதலில் கற்ற எண்களை மறந்துவிட்டு மறுபடியும் அவற்றையும் அவற்றிற்கு மேற்பட்டவற்றையும் கற்றதாம்.[4] பத்து வரையில் குழந்தை தவறில்லாமல் எண்ணுவதே பெரிய வெற் றிச் செயலாகும்.

ஒன்று அறிந்து இரண்டு என்னும் எண்ணைக் கற்கும்போது, ஒன்றுக்கு மேற்பட்ட எல்லாவற்றை யுமே இரண்டு என்று குறிப்பது குழந்தையின் இயற்கை. மூன்று கற்றபோது, ஐந்து பழத்தைப் பார்த்தாலும் மூன்று என்றே சொல்லும்; பத்துப் பழத்தைப் பார்த்தாலும் மூன்று என்று சொல்லும். இப்படியே மற்ற எண்களையும் படிப்படியே கற்று வளர்கின்றது.

குழந்தையிடம் காணப்படும் இந்த இயல்பு மக் கள் பேசும் பல மொழிகளிலும் காணப்படுகின்றது.

4. Jespersen, Language, Its Nature, etc., p. 119.

தென் ஆப்பிரிக்காவில் 'தம்மரர்' பேசும் மொழியில் எண்களே இல்லை என்று கூறலாம். அம்மக்கள் ஒன்றுமுதல் மூன்று வரையிலுமே எண்ணக் கற்றிருக்கின்றார்கள். ஓர் எருது காணமற் போனதென்றால், அதனை அவர்கள் எண்ணித் தெரிந்துகொள்வதில்லையாம்; காணமற் போன எருதின் முகத்தை நினைந்தே தெரிந்துகொள்கின்றார்களாம்.[5] ஆஸ்டிரேலியாவின் பழங்குடி மக்களுக்கு நான்கு வரையில் எண்ணத் தெரியுமாம். அதற்கு மேற்பட்ட எண்ணிக்கையைக் குறிக்கப் 'பல' என்பது போன்ற ஒரு சொல்லை வழங்குகின்றார்களாம்[6].

எண்களையும், பொருள்களையும் பிரித்து நுட்பமாக உணரும் அறிவு குழந்தைக்கு ஏற்படச் சில ஆண்டுகளாகும். அதனால், "இரண்டு கண்ணும் ஒரு மூக்கும் எவ்வளவு?" என்று குழந்தையைக் கேட்டால், "மூன்று" என்று விடை சொல்லிவிடும்.

குழந்தை வளர வளர, அது கற்கும் சொற்களின் தொகையும் பெருகுகின்றது. அதனால், முதலில் சொற்பொருள் பற்றிக் குழந்தையிடம் இருந்த தெளிவு வர வரக் குறைகின்றது. ஆனால், குழந்தையின் மூளைவன்மைக்கேற்ப இது வேறுபடும். ஒரு திங்களில் நூற்றுக்கணக்கான சொற்களைக் கற்கும் குழந்தையும் உண்டு; சில சொற்களையே அரிதில் கற்கும் குழந்தையும் உண்டு. பெரும் புலவர்களிடையிலும் இத்தகைய வேறுபாடு உண்டு. ஆங்கிலப்புலவர்

5. Sayce, Introduction to the Science of Language, p. 11
6. Abel Haveloque, The Science of Language, p. 68.

ஷேக்ஸ்பியர் இருபதினாயிரம் சொற்களை எடுத்தாண்டுள்ளவர் என்றும், மில்டன் ஆண்ட சொற்கள் எண்ணாயிரம் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர்.

சொற்களைக் கற்பதைவிட, சொல்லிலக்கணம் கற்பதே அரிய கல்வியாகும். குழந்தையின் மொழியில் எவ்வாறோ இலக்கணமும் அமைந்து படிப்படியே திருத்தமும் பெற்று வருகின்றது. எவ்வாறோ என்று கூறவேண்டுவதில்லை. ஒற்றுமைநயம் (Analogy) என்னும் விதிபற்றிப் பல வாக்கியங்கள் குழந்தையின் மூளையில் பதிந்து ஒழுங்கு பெறுகின்றன, அந்த ஒழுங்கைத்தான் இலக்கணம் என்ற பெயரால் நாம் வழங்குகின்றோம். அண்ணன் வந்தான் என்றும், அது வந்தது என்றும் இப்படிப் பல வாக்கியங்கள் பலநாள் கூறக்கேட்டுப் பயின்று ஆண்பால் வினைமுற்றும், ஒன்றன்பால் வினைமுற்றும் குழந்தைக்குப் பழக்கமாகின்றன. பல ஆண்டுகள் கழிந்த பின்னர், தனக்கு முன்னமே தெரிந்த இதனையே, இலக்கணம் என்னும் பெயரால், ஆண்பால் விகுதி ஆன் எனவும், ஒன்றன்பால் விகுதி து எனவும் முயன்று இடர்ப்பட்டுக் கற்கின்றது.

கால வேறுபாடு அறிந்து சொற்களை ஆள்வதிலும் குழந்தைக்கு இடர்ப்பாடு உண்டு. முதலில் நாளைக்கு என்ற எதிர்காலச் சொல்லைக் கற்ற குழந்தை, அந்தச் சொல்லையே இறந்த காலத்திற்கும் வழங்கும். "எப்போது வந்தாய்?" என்ற கேள்விக்கு விடையாக, "நாளைக்கு வந்தேன்" என்றே சொல்லிவிடும். 'நேற்று' என்பது வேறு, 'நாளை' என்பது வேறு எனப் பகுத்துணரும் ஆற்றல் அப்போது குழந்தைக்கு இல்லை.

எதை எடுத்தாலும் 'ஏன்?' 'ஏன்?' என்று விடாமல் கேட்டுத் தொல்லை உண்டாக்குவதற்குக் குழந்தை பின்வாங்குவதே இல்லை[7]. இவ்வாறு 'ஏன்' என்று கேட்கும் வேட்கை பெரும்பாலும் மூன்றாம் ஆண்டின் இறுதியில் தொடங்கும். அதனோடு சேர்ந்தாற்போல் 'எங்கே' 'எப்போது' முதலான இடவினா காலவினாக்களும் குழந்தை அறிவுக்கு எட்டும். ஆனால், முதலில் குழந்தையின் வினாப் பலவும் ஒரு சொல் அளவிலேயே தொடங்கும். 'அப்பா?' என்று தாயைக் குழந்தை கேட்கும்போது, இடமும் காலமும் நோக்கியே தாய் அந்த வினாவின் பொருளைத் தெரிந்துகொள்ள வேண்டும். 'அப்பா வந்தாரா?' 'அப்பா போனாரா?' 'அப்பா எங்கே?' 'அப்பா கொடுத்தாரா?' முதலான பல பொருள்களை மனத்தில் இருத்திக்கொண்டு 'அப்பா?' என்று ஒரு சொல்லை வினாவாக ஆளும். சில திங்கள் கழித்து, 'அப்பா கொடுத்து?' 'அப்பா கொடுத்தாங்க?' முதலான வாக்கியங்களை வினாவாக ஆளும். 'அப்பா கொடுத்து—ஊ?' என்பது போன்ற வாக்கிய முடிவை நோக்கியே அந்த வாக்கியம் வினா என்று உணரவேண்டும். குழந்தையோடு பழகுவோர் இவற்றையெல்லாம் முயற்சியின்றி அறிந்துகொள்வர். நான்காம் ஆண்டில், ஏன் எங்கே முதலான வினாக்கள் பயின்ற பிறகே, 'கொடுத்

---

7. இத்தகைய வினாக்கள் மிக மிக இன்றியமையாதன என்றும், இவற்றின் வாயிலாகவே உலகத்தையும் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் குழந்தை அறிய முடிகின்றது என்றும், தொடர்ந்தாற்போல் வினாக்கள் எழும்போது தொல்லையாகத் தெரிந்தாலும் குழந்தையின் நன்மையைக் கருதிச் 'சும்மா இரு' எனச் சொல்லித் தடை செய்யவே கூடாது என்றும் ஜெஸ்பர்ஸன் கூறுகிறார். (Language, Its Nature, etc., p. 137.)

தாரா?' வந்தானா?' போன்ற ஈற்று வினாக்களைக் கற்கத் தொடங்கும்.

குழந்தை இரண்டு ஆண்டு நிரம்பும் வரையில் மூவிடப் பெயர் கற்பதில்லை; நான் என்றும், நீ என்றும் பேச அறியா நிலையில் குழந்தை இருக்கின்றது. அவற்றைப் பேசத் தொடங்கும்போது, முதலில் தன்மை ஒருமை 'நான்', பிறகு முன்னிலை ஒருமை 'நீ' இவை தோன்றுகின்றன[8]. அப்போதும் எனக்கு உனக்கு முதலான சொற்களைக் குழந்தை பேசுவதில்லை. ஐ, கு முதலிய வேற்றுமை உருபுகளைச் சேர்த்துப் பேச இன்னும் நாளாகும். 'நானு மியா பிடிச்சு' 'நானு அண்ணா குடுத்து' என்பன போன்றவை குழந்தை அப்போது பேசுவன. சில திங்கள் கழித்து வேற்றுமை யுருபுகளைச் சேர்க்கும்போது, முதலில் எளிதில் பயில்வது 'கு' உருபே யாகும். 'அம்மாக்கு' 'அப்பாக்கு' என்று நான்காம் வேற்றுமை கற்கும்போது, 'எனக்கு' 'உனக்கு' என்ற சொற்கள் எளிதில் வருவதில்லை. 'நானுக்கு' என்றும், 'நீக்கு' என்றும் குழந்தை பேசிப் பெற்றோர் செவிக்கு அமிழ்தம் ஊட்டும்.

குழந்தை 'நானுக்கு' என்று சொல்லும்போது தவறு செய்வதாக எண்ணுவது அறியாமை. குழந்தை செய்யும் தவறுகளும் உண்டு; ஒரு மொழியில் இயல்பாக அமைந்துவிட்ட தவறுகளும் உண்டு. ஆதலின், குழந்தையின் தவறு என்று துணிந்து கூறிவிடலாகாது. குழந்தையின் மூளை ஒழுங்கை விரும்புவது. 'அப்பாக்கு', 'அக்காக்கு', 'அண்ணாக்கு' என்று கு உரு

8. P. B. Ballard, Thought and Language, p. 127.

பைச் சேர்க்கும் முறையை 'நானுக்கு' என்பதிலும் கையாள்வது தவரு? இது, மொழிக்கும், மொழி கற்போருக்கும் உள்ள போராட்டமாகும். இந்தப் போராட்டத்தில் சிலவேளைகளில் மொழியே வெற்றி பெறுகின்றது; சில வேளைகளில் மொழி கற்போர் வெற்றி பெறுகின்றனர். குழந்தையின் கல்வியில் காணும் பல உண்மைகளும், மொழிநூலின் அடிப் படையாக அமைந்த உண்மைகளாகும்.

சில திங்கள் 'நானுக்கு' 'நீக்கு' என்றே பேசி வரும் குழந்தை, பிறகு, படிப்படியே, பெற்ருேரும் மற்ருேரும் பேசுவதைக் கேட்டுக் கேட்டு, 'எனக்கு' 'உனக்கு' என்று பேசத் தொடங்குகின்றது. இங்கு மொழியே வெற்றி பெற்றுவிட்டது.

'நான் மாட்டைப் பார்த்தேன்' என்று ஐ உருபு சேர்த்துச் சொல்லாமல், 'நான் மாடு பார்த்தேன்" என்றே குழந்தை பேசுகின்றது. இப்படி எத்தனையோ வாக்கியங்களில் குழந்தை உருபு இல்லாமல் பேசிப் பேசி, வளர்ந்த பிறகும் அந்த வாக்கியங்களையே போற்றுகின்றது. மொழியும், அதற்கு உடன்பட்டு, பொருள் புலப்பாட்டில் ஐயமும் இடர்ப்பாடும் இல்லாத போது வேற்றுமைத் தொகைக்கு இடந்தந்துள்ளது. இது மொழி கற்போர் பெற்ற வெற்றியாகும்[9].

---

9. ஆங்கிலத்தில் 'speak' என்னும் வினைச் சொல்லின் இறந்த காலமாக 'spake' இருந்தது. பெரும்பாலோர் 'spoke' என்று பேசி வந்தனர். முதலில் எதிர்ப்பு இருந்தது; வர வர எதிர்ப்புக் குன்றியது. இப்போது 'spoke' என்பதே இலக்கண மாகிவிட்டது. (Whitney, Language and the Study of Languages, p. 29.)

இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபட்டுக் குழந்தையின் மொழிக்கல்வியை நோக்குவோர், அதன் ஒழுங்கு வேட்கையினை உணர்வர்[10].

குழந்தையின் வாழ்வில் எண்ணுவதெல்லாம் பேச்சாகும்; பேசுவதெல்லாம் செயலாகும். குழந்தையுலகமே செயல் உலகம் எனலாம். காக்கை நரி முதலியவற்றின் கதைகளைக் குழந்தை சொல்லும்போது கைகட்டியிருக்க முடியாது. கதையில் வரும் உணர்வெல்லாம் குழந்தையின் கை காலில் செயலாய் விளங்கும்; உடலில் அசைவுகள் பலவாகும். அதனால் குழந்தை எண்ணுகின்றது, பேசுகின்றது என்பதை விட நடிக்கின்றது என்பது பொருந்தும். இதனால் குழந்தை கற்கும் மொழியில் வினைச்சொற்கள் செல்வாக்குப் பெறும். ஒவ்வொரு வினையும் முற்றாகவே இருக்கும். எச்சம் முற்று என்னும் வேறுபாடு முதலில் இடம் பெறுவதே இல்லை. "மாடு வந்தது, போனது" என்று பேசத் தெரியுமே தவிர, "மாடு வந்து போயிற்று" என்பது தெரியாது. "அண்ணன் எடுத்தான், பொம்மை உடைந்தது" என்பது குழந்தை வாக்கியம். "அண்ணன் எடுத்ததனால் பொம்மை உடைந்தது" என்பது மாணவன் வாக்கியமே.

பிறர் சொன்னதைச் சொல்லும்போது "என்று" என்னும் எச்சத்தை ஆளவும் முடியாது. "பழம்

10. The languages of children is more regular than our own. I have heard children say badder and baddest, instead of worse and worst...Children say, I goed, I comed, I catched; and it is this sense of grammatical justice, this generous feeling of what ought to be, which in the course of centuries has eliminated many so-called irregular forms. Max Muller, The Science of Language, p. 73.)

கொடுப்பேன், அப்பா சொல்லி" என்றே குழந்தை பேசும். "பழம் கொடுப்பேன் என்று அப்பா சொன்னார்" என்பது பிற்காலத்தே அது கற்கும் வாக்கியம்[11].

குழந்தையின் பெற்றோர் மொழியும் சுற்றுப்புற மொழியும் ஒன்றாகவே இருந்தால் குழந்தை அந்த மொழியை எளிதில் கற்றுக் கொள்ளும். அதனால் தமிழ் நாட்டில் தமிழ்க் குடும்பத்தில் உள்ள குழந்தை தமிழை எளிதில் கற்றுக் கொள்ளக் காண்கின்றோம். ஆனால், பம்பாயில் உள்ள ஒரு தமிழ்க்குடும்பத்தின் குழந்தை, வீட்டில் தாய் பேசும் தமிழ் மொழியைக் கற்றுவருதல் எளிதன்று; சுற்றுப்புறத்தில் பேசப்படும் இந்தி மொழி அதனைக் கவரும். இருமொழியும் கற்பதால் குழந்தையின் இடர்ப்பாடுகளும் பெருகும். குடும்பத்தில் கற்கும் தாய் மொழியைப் போலவே சுற்றுப்புறத்தில் பேசப்படும் பிறமொழியும் எளிதில் பயிலப்படும் என்பது சிலர் கருத்து[12].

ஆனால், இது குழந்தையின் ஆற்றலையும் அதன் வயதையும் பொறுத்திருக்கின்றது. முதல் மூன்று ஆண்டுகளில் குழந்தையிடம் புதியனவற்றைக்கற்கும் ஆற்றல் மிகுதியாக உள்ளது. வளர வளர, அவ்

---

11. Father said: "I will give you fruit" என்று ஆங்கிலத்தில் "that" என்னும் சொல்லின்றி வழங்கும் நேர்ப் பேச்சு (direct speech) வழக்கு நோக்குக.

12. விட்னே என்னும் அறிஞர் இதனை விளக்கக் கிறிஸ்துவப் பாதிரிமார்களின் குழந்தைகளைக் குறித்துக் கூறுகின்றார். உலகத்தில் எந்தப் பகுதியிலிருந்தாலும், தாய்மொழியோடு உறவற்ற எந்த மொழி சுற்றுப்புறத்தாரால் பேசப்பட்டாலும், அந்த நாட்டு மொழியைத் தாய்மொழி போல் இயற்கையாகவே அக்குழந்தைகள் கற்றுக்கொண்டு பேசுகின்றன என்பர் (The Life and Growth of Language, p. 89.)

வாற்றல் குறைந்து வருகின்றது. ஆதலின், அது தாய் மொழியை எப்போது கற்கின்றது, பிறமொழியை எப்போது கற்கின்றது, எதற்கு மிகுதியான காலம் செலவாகின்றது என்பன போன்ற ஆராய்ச்சியின்றித் துணிய முடியாது.

ஆனால் குழந்தை இருமொழி கற்பதால், அம் மொழிகளுக்கு நேரும் தீங்கைவிடக் கற்கும் குழந்தைக்கு நேரும் இடர்ப்பாடே மிகுதி. இயற்கையாகச் சொல்லும் பொருளும் கற்று உணர்வைப் பெருக்கி அறிவை வளர்க்க வேண்டுவதான வாழ்வு அகராதி வாழ்வாக மாறுதல் அந்த வயதிற்குத் தீமையே பயக்கும். குழந்தைப் பருவத்தில் இருமொழி கற்ற எந்தக் குழந்தையேனும் வளர்ந்தபின் சொற்பொழிவாளனாகவோ, புலவனாகவோ சிறப்புற்றது உண்டோ என்று ஜெர்பர்ஸன் வினவுகின்றார்[13].

13. It is, of course, an advantage for a child to be familiar with two languages: but without doubt, the advantage may be, and generally is, purchased too dear. First of all the child in question hardly learns either of the two languages as perfectly as he would have done if he had limited himself to one. It may seem, on the surface, as if he talked just like a native, but he does not really command the fine points of the language. Has any bilingual child ever developed into a great artist in speach, a poet or orator ?

Secondly, the brain effort required to master two languages instead of one certainly diminishes the child's power of learning other things which might and ought to be learnt. The worst of the system is, that instead of learning other things necessary to us we must spend our time and energy in learning to express the same thought in two or three languagrs at the same time. (Language, Its Nature, etc., p. 148.)

## ௩. மொழி வகை

**மக்களும் மொழியும் :**

நூற்றுக்கணக்கான மொழிகள் உலகில் பேசப் படுகின்றன. ஒரு நாட்டு மக்கள் பல மொழிகளைப் பேசுதலும் உண்டு; பல நாட்டு மக்கள் ஒரு மொழி யைப் பேசுதலும் உண்டு. மக்களை இனம் கருதிப் பிரிப்பவர் மொழி யாராய்ச்சி நடத்தி முடிவுகாண முயல்வதும் உண்டு. அத்தகைய ஆராய்ச்சிக்குத் தெளிவாகாமல் தடைப்படும் ஒன்று மக்களும் மொழி களும் கலக்கும் கலப்புமுறையே யாகும். இருவகை மக்கள் ஒரு நாட்டில் பழகிக் கலந்துவாழும் வாழ்வில் ஒற்றுமை மிகுதியாக உள்ளது. ஆயின், அவர்கள் பேசும் இருவகை மொழிகளும் அவ்வளவு நெருங்கிக் கலத்தல் அருமையாகவே உள்ளது. மக்கள் கலப்பில் இரண்டு இனம் உரிமையுடன் கலந்து ஒன்றாகக் காண்கின்றோம். ஆனால், மொழிக் கலப்பில் ஒரு மொழி செல்வாக்குப் பெற்று ஓங்க, மற்றொரு மொழி உரிமை யிழந்து அழிதலே காண்கின்றோம். ஆதலின், மக்களின் ஆராய்ச்சி வேறு, மொழிவகை ஆராய்ச்சி வேறு எனப் பிரித்தறிதல் நலம்.

மொழிவகை ஆராய்ச்சியில், ஒலியைக் கருவியா கக் கொண்டு வகுத்தல் பயனற்றுப் போகின்றது. பல ஒலிகள் மொழிகளுக்கெல்லாம் பொதுவாக உள் ளன. ஒலித்துறையில் ஒற்றுமை மிகுதி; வேற்றுமை குறைவு. தவிர, காலப்போக்கில் ஒலிவகையில் காணும் மாறுதல்களும் பற்பல.

மக்கள் பேசும் பலவகைச் சொற்களையும் ஆராய்ந்து அவற்றால் மொழிகளை வகைப்படுத்துவதும் ஒரு சாரார் முயற்சியாகும். அவர்கள் முயற்சியும் தெளிவு பயப்பதில்லை. உறவல்லாத இரண்டு மொழிகளுக்குள் ஒரு சில சொற்கள் ஒத்திருத்தலும் உண்டு. எடுத்துக் காட்டாக, ஆங்கிலத்தில் எய்ட் (*Eight*), பிரைஸ் (*Prize*), மம்மா (*Mamma*) முதலிய சொற்களை எட்டு, பரிசு, அம்மா என்னும் தமிழ்ச் சொற்களோடு ஒப்பிட்டுக் காணலாம். நெருங்கிய உறவுடைய இரு மொழியுள் பல சொற்கள் வேறுபடுதலும் உண்டு. அவன், உள், எழுபது என்னும் தமிழ்ச் சொற்களும் வாடு, லோ, டெப்பை என்னும் தெலுங்குச் சொற்களும் உறவு அற்றவைபோல் தோன்றுகின்றன அல்லவா? தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் இவற்றின் அகராதிகளை ஒப்பிட்டால் இந்த உண்மையை அறியலாம். தவிர, சொற்கள் அடிக்கடி உருவம் மாறுவன, கெடுவன. ஒரு சொல் அழிந்த பின், தொடர்பில்லாத வேறு சொல் அதன் இடத்தைக் கொள்ளுவதும் உண்டு.

ஆதலின், ஒலியியலையும் (*Phonetics*) சொற்பிறப்பையும் (*Etymology*) விடுத்து, சொல்லமைப்பை (*Morphology*) ஆராய்தல் நலம். சொல்லமைப்பினைக் கொண்டு மொழிநிலையைப் பொதுவாக மூன்று வகைப் படுத்தலாம்.

**தனி நிலை :**

சொற்கள் ஒன்றோடொன்று ஒட்டாமல் தனித் தனியே நின்று வாக்கியமாக அமைந்து பொருளை உணர்த்தும் நிலை ஒன்று. இது தனி நிலை (*Isolation*)

எனப்படும். இங்கிலேயில் உள்ள மொழியில் பெயர் வினைகளாகிய சொற்களைப் பெரும்பாலும் ஓரசைச் சொற்களாகவே (*Monosyllabic words*) இருத்தல் இயல்பு.

இத்தகை மொழியில் சொற்கள் எல்லாம் அடிச் சொற்கள் (*Roots*) ஆகும். அதாவது, அம்மொழியில் சொற்களுக்கும் பகுதிகளுக்கும் வேறுபாடு இல்லே. சொற்களெல்லாம் பகுதிகளே; பகுதிகளே சொற்கள். விகுதி இடைநிலே முதலியன இல்லே. இலக்கணம் என்பது இம்மொழியில் வாக்கிய அமைப்பைப் பற்றியதே யாகும்.[1] அதற்கு அடுத்தபடி, சொற்களை எடுத்தும், படுத்தும், நலிந்தும் ஒலித்துப் பொருள் வேறுபாடு புலப்படுத்தும் முறை இன்றியமையாதது. சீன மொழி, சயாம் மொழி (*Siamese*), பர்மிய மொழி, திபெத்துமொழி எல்லாம் இவ்வகையைச் சார்ந்தவை.

சீனமொழியில் இலக்கணத்தை விளக்கும் முறை வியப்பூட்டுவதாகும். "சொற்கள் இருவகைய. அவை பொருளுணர்த்தும் சொற்கள், வெறுஞ் சொற்கள் என்பன. பொருட் சொற்களுக்கும் வெறுஞ் சொற்களுக்கும் வேற்றுமை புலப்படுத்தும் கலேயே இலக்கணம் எனப்படும்" என்பது அந்த விளக்கம்.[2] இதிலி

1. The grammar of all monosyllabic or isolative idioms is necessarily and entirely a question of syntax. (Abel Haveloque, The Science of Language, p. 34.)

2. The Chinese divided the roots into two distinct classes—the full and the empty words (chi-tsen and lin-tsen) By the first, they under stood those roots that retained their full and independent meaning·They called emptywords those roots whose proper value was becoming gradually obscuted

ருந்தே அம்மொழியில் இலக்கணம் அமைந்த முறை யினை எண்ணி வியக்கலாம். "கையால் எடு" என்ற தமிழ் வாக்கியத்தில் சீன இலக்கணப்படி, 'கை' என்னும் பெயரும் 'எடு' என்னும் வினையும் பொருட் சொற்கள். 'ஆல்' என்னும் வேற்றுமையுருபு வெறுஞ் சொல்லாகும்.

தா என்னும் சீன மொழிச் சொல் ஒன்று இடத் திற்கேற்பப் பல பொருள் தரும். பெயராக நிற்கும் போது 'பெருமை' என்னும் பொருளும், பெயரடை யாக நிற்கும்போது 'பெரிய' என்னும் பொருளும், வினையாகும்போது 'பெரிதாக்கு, பெருகு' என்னும் பொருளும், வினையடையாகும்போது 'பெரிதும், பெரிதாக' என்னும் பொருளும் உணர்த்தும்.[3] கல் என்னும் தமிழ்ச் சொல், 'கல் எடு', 'கல் வீடு', 'அதைக் கல்' என்னும் வாக்கியங்களில் பெயராகவும், பெயரடையாகவும், வினையாகவும் வேறுபடுமாறு போலக் கொள்க. ஆகையால், அம்மொழியில் சொல் நிற்கும் இடம் (*Word order*) அறிந்து பொருளுணர வேண்டும்; வாக்கிய இலக்கணம் இன்றியமையாத தாகின்றது.

தமிழிலும் ஓரசைச் சொற்கள் பலவாக உள்ளன. நீ—போ, மண்—பார், பூ—தா முதலான வாக்கியங்

---

and which, little by little, acquired the function of fixing precisely the extremely vague idea of the full words, whose primitive sense was still fully preserved. "What is grammar?" the Chinese teacher asks his pupil. "It is a very useful art" replies the pupil; "an art that teaches us to distinguish between the full and empty words." (ibid, p. 37.)

3. Whitney, Language and the Study of Language, p. 330.

களும் உள்ளன. சங்க இலக்கியத்தில் பெரும்பாலும் ஓரசைச் சொற்களும் ஈரசைச் சொற்களுமே இருத்தல் கருதத்தக்கது.

**ஒட்டு நிலை:**

அடிச்சொல் (*Roots*) இரண்டு சேருங்காலத்தில், அவற்றுள் ஒன்று சிதையாமல் நிற்க, மற்றொன்று சிதைதல் உண்டு. இவ்வாறு அடிச்சொல் இரண்டும் பலவும் ஒட்டி நிற்கும் நிலை, ஒட்டு நிலை (*Agglutination*) என்பது. 'கண்ணன் பார்த்தான்' என்னும் தமிழ் வாக்கியத்தில் 'கண்ணன்' என்ற சொல் ஒட்டு நிலையாக அமைந்ததே. 'கண்' என்ற சொல்லும் 'ஆன்' (அன்) என்ற சொல்லும் ஒட்டி முன்னது சிதையாமல் நிற்க, பின்னது குறுகிக் கண்ணன் என்று ஆயிற்று. பார்த்தான் என்பதிலும் பார் என்பதோடு வேறு சில சேர்ந்து நின்றன.

இச்சொற்களில் முதலில் நிற்கும் கண், பார் என்பவற்றை இலக்கண நூலார் பகுதி என்பர். மொழி நூலார் அடிச்சொல் (*Root*) என்பர். அவற்றோடு சேர்ந்த விகுதி இடைநிலை முதலியவை இடைச்சொல் எனப்படும். இடைச்சொல தமக்கென்று பொருளில்லாதவை. தாம் சாரும் பெயர் வினைகளின் பொருளைத் தெளிவாக்குவன.[4] முதலில் இடைச்சொல் என்று ஒருவகைச் சொல் இல்லை என்பதும், பெயர்

---

4. இடையெனப் படுவ பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே.
(தொல். சொல். உசகூ)

"பெயரும் வினையும் உணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றை வெளிப்படுப்பதல்லது, தமக்கெனப் பொருளுடைய அல்ல" என்று சேனாவரையர் தரும் விளக்கம் காண்க.

வினைகளே நாளடைவில் சிதைந்து அவ்வாறு பயன் பட்டன என்பதும் மொழி நூலார் கொள்கை. முழுச் சொற்களாக இருந்த இவை சிதைந்து இடைச்சொற் களாய்ப் பெயர் வினைகளோடு ஒட்டி நிற்றலே ஒட்டு நிலை என்பது.

உலகில் உள்ள மொழிகளில் பெரும்பாலன இந் நிலையில் உள்ளன. சித்திய மொழி என வகுக்கப் பெற்றமொழிகளும் இவ்வகையினவே. அவற்றின் உட் பிரிவாகவோ வேறாகவோ கருதப்படும் திராவிட மொழிகளும் இவ்வகையினவே. தமிழ் மொழியின் பகுதிகள் பலவும் ஓரசையாக இருத்தலும், அவை இடைச்சொற்களோடு ஒட்டி நிற்றலும் காண்க.

தென் ஆப்பிரிக்காவின் பழங்குடி மக்களின் பண்டு (*Bantu*) மொழி, ஆஸ்டிரேலியாவின் பழங் குடி மக்களின் மொழி, மலேயா—பாலினேஷியன் மொழி, ஜப்பானிய மொழி, கொரிய மொழி, பின்னிஷ் (*Finnish*) மொழி, பாஸ்க் (*Basque*) மொழி முத லான பல மொழிகளும் ஒட்டுநிலையினவே.

**உட்பிணைப்பு நிலை :**

அடிச்சொல் இரண்டு சேருங்காலத்து இரண்டும் சிதைந்து ஒன்றுபட்டு நிற்றல் உண்டு. இந்நிலையே உட்பிணைப்பு நிலை (*Inflection*) என்பது. இவ்வகை மொழியில் அடிச்சொல் தெளிவாய் நிற்றல் இல்லை.[5] பகுதி விகுதி முதலியவற்றை எளிதில் பிரித்தறிய

5. தமிழில் ‘கொணு’ என்னும் சொல் அவ்வாறு உட் பிணைப்பாய் நிற்கும் சொல்லாகும். செத்தான், சென்றது முதலான சொற்களிலும் அடிச்சொல் திரிந்து நிற்றல் காண்க. இந்நிலைக்கு எடுத்துக்காட்டாகத் தமிழில் சொற்கள் கிடைத்தல் அரிது. காரணம் தமிழ்ச் சொற்கள் ஒட்டு நிலையின. ஐரோப்பிய மொழிகளில் பல

இயலாது. ஐரோப்பிய மொழிகள் பலவும் வடமொழியும் இவ்வகையைச் சார்ந்தவை.

இத்தகைய மொழியின் வாக்கியங்களில் சொற்களின் இடம் (*Word order*) பற்றிக் கவலையில்லை. எந்தச் சொல்லும் எங்கு வேண்டுமாயினும் இருக்கலாம்.[6] ஏதோ ஒரு மரபு பற்றி மாற்றியமைத்து (அந்வயப்படுத்திப்) பொருள் செய்து கொள்ளலாம். எழுவாய் பயனிலை முதலியவை வாக்கியத்தில் கண்ட இடமெல்லாம் அமைந்து, லத்தீன், ஜெர்மன் முதலான மொழிகளில் காணப்படும் முறையினை, ஜெஸ்பர்ஸன், சொற்களின் ஒளிப்பாட்டம் (*Hide—and—seek*) என்கின்றார்.[7]

செமிடிக் மொழிகளில் உள்ள சொல்லமைப்பு முறை ஒருவகை உட்பிணைப்பாகும். அவ்வகை மொழியில் மூவகைச் சொல்லின் உயிரெழுத்துக்களின் மாறுதலால் பொருள் வேறுபாடு உணர்த்தப்படும். அவற்றில் அடிச்சொல் இரண்டு பிணைந்தன என்றோ, சிதைந்தன என்றோ கூறுதற்கில்லை[8].

---

சொற்களும் உட்பிணைப்பாய் அமைந்துள்ளன. Such, which என்னும் ஆங்கிலச் சொற்கள் so-like, who-like என்பவற்றின் பிணைப்பாம்.

6. The more highly inflected a language is, the greater is the liberty which it may take in positional arrangement. The presence or absence of inflectional devices, and the degree of their usage, modifies the scope of syntactical arrangement. (G. K. Zipf, The Psycho-Biology of Language p. 246.)

7. Growth and Structure of the English Language, p. 11.

8. Whitney, Language and the Study of Language, p. 301.

எடுத்துக்காட்டாக அரபிய மொழியில் க்-ட்-ல் (Q-T-L) என்னும் மூன்று மெய்யும் அடங்கிய அடிச் சொல் கொல்லுதல் என்னும் பொருளைத் தரும். அம் மெய்யெழுத்துக்களுடன் உயிரெழுத்துக்கள் பல வகையாகச் சேர்ந்து பல பொருள் தரும்.

காடாலா—*Qatala*—அவன் கொன்றான்.

குடில —*Qutila*—அவன் கொல்லப்பட்டான்.

குடிலு —*Qutilu*—அவர்கள் கொல்லப்பட்டனர்.

உக்டுல் —*Uqtul* —கொல்

காடில் —*Qatil* —கொலை

கிட்ல் —*Qtil* —பகைவன்

அமெரிக்காவின் பழங்குடி மக்கள் பேசும் மொழிகள் முற்றிலும் வேறுபட்ட மற்றொரு நிலையில் உள்ளன. அவற்றில் சொற்கள் பல ஒன்றாய்ச் சேர்ந்து ஒரு தொகுதியாய் நீண்டு கிடக்கின்றன. அம்மொழிகளில் சொல்லுக்கும் வாக்கியத்திற்கும் வேறுபாடு இல்லை என்னலாம். எவ்வளவு பெரிய வாக்கியமும் பிரிக்கமுடியாமல் ஒரு சொல்லாகவே இருக்கின்றது. இந்நிலை சொற்கோவை நிலை (*Incorporative or Polysynthetic stage*) என்பது.[9]

---

9. It tends to the exclusive and abnormal agglomeration of distinct significant elements in its words. The Mexican name for goat is 'kwa-kwanch tentsone,[2] literally 'head-tree (horn)-lip-hair (beard)' or 'the horned and bearded one...'I-it-him-give-the bread-my son' [2] for 'I give my son the bread.' (Ibid, p. 348.)

**மொழிநிலையில் நாகரிகம் :**

சென்ற நூற்றாண்டில் மாக்ஸ் முல்லர் மொழிப் பாகுபாட்டினை ஆராயத் தலைப்பட்டு உலக வரலாற்றிலிருந்து சான்றுகள் தேடினார். அவர் முயற்சி பயனற்றுப் போனது; அவர் கண்ட முடிபுகளும் அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அவர் மக்கள் இனத்தை மூவகையாக்கினார். குடும்ப வாழ்க்கை அளவில் நாகரிகம் நின்றுவிட்ட மக்கள் பேசும் மொழி தனிநிலை என்றார். ஒட்டுநிலை மொழி ஊர் ஊராக நாடு தோறும் அலைந்து திரியும் நாடோடிக் கூட்டத்தினர் பேசும் மொழி என்றார். ஒரு நாடு அமைத்து ஆளும் நாகரிகம் பெற்று உயர்ந்த மக்கள் பேசும் மொழியே உட்பிணைப்பு மொழி என்றார். இவ்வாறு அவர் செய்த முயற்சி யெல்லாம் ஐரோப்பிய மொழிகளுக்குச் சிறப்புத் தேடுவதற்கே பயன்பட்டது. அவர் கருத்தின்படி திராவிட மொழி பேசிய மக்கள் நாடோடிகளாய்த் திரிந்தவர்கள் என்றும், அரசியல் நாகரிகம் அடையாதவர்கள் என்றும் கொள்ள வரும். ஆனால் அறிஞருலகம் கண் மூடியிருந்து அதனை ஏற்றுக் கொள்ளவில்லை. தமிழ், தெலுங்கு முதலான மொழிகளில் ஒரு சில உட்பிணைப்புகள் காணப்படுவதால், அவற்றைப் பேசிய மக்கள் ஒரு சிறிது அரசியல் நாகரிகத்தை எட்டினவர் என்றும் அவர் கூறியுள்ளார்.[10]

10. Where nomadic tribes approach to a political organisation, their language, though Turanian, may approach to the system of political or traditional languages, such as Sanskrit or Hebrew· This is indeed the case with the most advanced members of the Turanian family, the Hungarian, the Finnish, the Tamil, Telugu, etc. (Max Muller, The Science of Language, p. 340.)

ஆனால், ஜெஸ்பர்ஸன் முதலிய சிறந்த அறிஞர் ஆராய்ச்சியால் அது மறுக்கப்படுகின்றது. உட்பிணைப்பு மொழிகள் கருத்துக்களை எளிதில் புலப்படுத்தாமையால் அவை தனிநிலை மொழிகளைவிடத் தாழ்ந்தவை என்பது ஜெஸ்பெர்ஸன் கொள்கை. சாய்ஸ் என்னும் அறிஞரும் உட்பிணைப்பு மொழிக்குச் சிறப்புத்தர மறுக்கின்றார்; அவர் ஒட்டுநிலை மொழியைப் போற்றி அம்மொழி அமைப்பிலுள்ள அறிவாற்றலை எடுத்து விளக்கியுள்ளார்.[11]

தென் ஆப்பிரிக்காவில் பண்டு (*Bantu*) முதலிய மொழிகளில் மிகச் செறிந்த உட்பிணைப்புநிலை காணப்படுகின்றது. அவற்றை நோக்க, சமஸ்கிருதம், கிரீக், லத்தீன் முதலிய மொழிகளில் உட்பிணைப்பு இல்லை என்றும் கூறிவிடலாம். ஆனால், மாக்ஸ் முல்லர் கருத்துப்படி, பண்டு (*Bantu*) முதலிய மொழிகளைப் பேசுவோர் நாகரிகம் மிகுந்தவர்கள் என்று கூறுதல்

11. In fact, when we examine closely the principle upon which flection rests, we shall find that it implies an inferiorlogical faculty to that implied by agglutination. In a flectional language the relations of the sentence are denoted by particular suffixes or internal vowel-changes, which group themselves, as it were, round the principal thought contained in the sentence...In other words, every subordinate thought should be denoted by a flection....In fact, the principle of flection cannot be logically carried out beyond the narrow circle of those simple sentences which sufficed for the needs and intelligence of primitive man, and progress of thought in modern Enope has been marked by a corresponding revolt from the trammels of flection. English has fitted itself to become a universal language by struggling to assimilate its condition to that of Chinese. (Sayce, Introduction to the Science of Language, p. 375.)

பொருந்துமோ? அல்லது தனிநிலையாக வழங்கும் சீன மொழியைக் கண்டு, சீன மக்கள் நாகரிகமற்ற காட்டு மிராண்டிகள் என்று கூறுதல் தகுமோ? பண்டைக் காலத்துச் சிறப்பெய்திய ஒரு சில நாகரிக நாடுகளுள் சைனுவும் ஒன்றாக ஓங்கியிருந்ததன்றோ? ஆதலின், மாக்ஸ் முல்லர் கொள்கை தவறாகும்.

**மொழியின் மாவட்டம்:**

மற்றும், இந்த மூவகை நிலையும் (தனிநிலையும் ஒட்டு நிலையும் உட்பிணைப்பு நிலையும்) ஒவ்வொரு மொழியிலும் உள்ளன. இந்த நிலை இன்னமொழிக்கே உரியது என்று வரையறுத்து ஒதுக்குவதற்கில்லை.[12] எடுத்துக்காட்டாக, தமிழைக் காணலாம். தமிழ் ஒட்டுநிலையில் உள்ளது என்று கூறப்படுகின்றது. நாட்டார், மனைவி, காண்பார், வரும் முதலான ஒட்டு நிலைச் சொற்கள் பெரும்பாலனவாக இருத்தல் உண்மையே. ஆனால், கல், மண், நான், நீ, போ, வா முதலான சொற்கள் தனிநிலையில் வழங்குதலும் சிறுபான்மை உண்டு. கொணு, சென்றது, சிவந்தன முதலான சில சொற்கள் உட்பிணைப்பு என்று சொல்லக்கூடியவாறும் உள்ளன. ஆங்கில மொழியில் பெரும்பான்மையும் தனிநிலையே காணப்படினும், ஒட்டு நிலையும் உட்பிணைப்பு நிலையும் இன்னும் உள்ளன. ஆகையால், இன்ன மொழி இன்ன நிலையில் உள்ளது என்று ஆராய்தலைவிட, இன்ன மொழியில் இன்ன நிலை பெருகியுள்ளது என்று ஆராய்தல் தக்கது.

---

12. Vendryes, Language, p. 349.

தனிநிலை மொழியில் உள்ள சொற்கள் நாளடை வில் சேர்ந்து ஒன்றுபட்டு ஒட்டுநிலையாதல் உண்டு.

மக + அன் — மகன்
மக + அள் — மகள்

ஒட்டுநிலை உட்பிணைப்பாதலும் உண்டு. தந்தை தவ்வை, களிறு, முதலிய சொற்கள் அவ்வாறு அமைந் தன எனலாம். உட்பிணைப்பாய் அமைந்த சொற்கள் மீண்டும் தனிநிலையாய் வழங்கலும் உண்டு. கொணு, கொடு முதலிய சொற்கள் இன்று சிறு சிறு அடிச் சொற்கள் போல் வழங்குகின்றன. கொண்டுவா, கொள்ளச் செய் முதலான கருத்துக்கள் அச்சொற்க ளில் அடங்கியிருத்தலின், அவை நீண்ட உட்பிணைப் புச் சொற்களாக இருந்தே குறுகியிருத்தல் வேண்டும் என்பது தெளிவாகின்றதன்றோ? கொணர்ந்தான் கொடுத்தான் என்னும் போது, தனி நிலையாய் வழங் கின கொணு கொடு என்பன ஒட்டுநிலையாகின்றன. இவ்வாறு ஒருநிலை மற்றொரு நிலையாய், அது மீண்டும் வேறொன்றாய் மாறி மாறி வரக்காண்கின்றோம். வட்ட வடிவமான கோளத்தைச் சுற்றி வந்து புறப்பட்ட இடத்தை அடைதல் போல் உள்ளது இது. மொழி வரலாற்றில் இம்மாறுதலை ஒரு மாவட்டம் என் பர்.[13] தனிநிலையாகவே எல்லா மொழிகளும் தொடங் கியிருக்க வேண்டும் என்றும், அவை படிப்படியே வளர்ந்து மாறி மாறி மீண்டும் தனிநிலை அடையும் என்றும் மொழிநூலறிஞர் சிலர் கருதுகின்றனர். ஆங் கிலம் அவ்வாறு சுற்றிவந்து இன்று தனிநிலையாய் ஓங்கிநிற்கக் காண்கின்றோம். தமிழிலும் அதற்குரிய அறிகுறிகள் சில காணப்படுகின்றன.

13. G. K. Zipf, The Psycho—Biology of Language.

**வாக்கிய அமைப்பு :**

பழங்காலத்து மக்களுக்கு நினைவில் நின்ற கருத்துக்களும் பொருள்களும் சிலவே. இக்காலத்து மக்கள் அறிந்து நினைவில் வைத்துக் காக்க வேண்டும் கருத்துக்களும் பொருள்களும் பற்பல. அன்றியும், நாகரிக வாழ்வில் நினைவாற்றல் வேறு பல துறைக்கு வேண்டுவதாக உள்ளது. ஆதலின், நாகரிகம் வளர வளர நினைவாற்றல் குறைவதாகக் காணப்படும். நினைவாற்றல் குறைந்த மக்கள் ஒவ்வொரு சொல்லிலும் இலக்கண வேறுபாடுகளை அமைத்து அவற்றை மறவாமல் போற்றிப் பேசுதல் அரிதாகும். அதனால் காலப் போக்கில் இலக்கண வேறுபாடுகளைச் சொல்லின் இடைநிலை, விகுதி, உருபு முதலியவற்றால் உணர்த்தும் முயற்சி குறைந்து போகும்; அதற்கு ஈடாக, இன்ன சொல் இன்ன இடத்தில் அமைந்து இன்ன பொருள் பயக்கும் என்ற வாக்கிய இலக்கணமே தலையெடுத்து வாழும். இதுவே ஆங்கில முதலிய மொழிகளின் வளர்ச்சியில் காணப்படுவதாகும். இதனைத் தனிநிலை மொழி பலவற்றுள்ளும் காணலாம். தமிழ் தனிநிலைமொழி அன்று. ஆயின், தமிழிலும் பலவாக்கியங்கள் இம்முறையில் அமைந்து வருகின்றன.

'உண்டிலன்' என்னும் சொல்லில் உண்ணுதல் என்னும் வினையும், இறந்த காலத்தை உணர்த்தும் இடைநிலையும் (ட்), எதிர்மறைப்பொருள் பயக்கும் இடைநிலையும் (இல்), உயர்திணை ஆண்பாலை உணர்த்தும் விகுதியும் (அன்) ஒட்டி நின்று இலக்கண வேறுபாடுகளை உணர்த்தல் காண்க. ஆனால் இச்சொல் இன்று பேச்சு வழக்கில் இல்லை. அதற்கு ஈடாக

'அவன் உண்ண வில்லை' என்ற வாக்கியம் வழங்குகின்றது. ஆண்பாலை ஒன்று உணர்த்த, வினையை மற்றொன்று தெரிவிக்க, எதிர்மறையை இன்னொன்று அறிவிக்க, காலத்தைப் பேசுவோன் குறிப்புப் புலப்படுத்த, ஒரு வாக்கியத்தில் சொற்கள் தனித்தனியே அமைந்து கருதிய பொருளைத் தருகின்றன.[14] முன்னையது தொகுநிலை (*Synthetic stage*) என்றும் பின்னையது பிரிநிலை (*Analytic stage*) என்றும் குறிக்கப் பெறும். ஆங்கிலத்தில் இத்தகைய மாறுதல் மிகுதி; சீனம் முதலிய தனிநிலை மொழிகளில் இஃது இயல்பாகவே அமைந்துள்ளது. சீனத்தில் இலக்கணம் எளிதாக உள்ள காரணமும் இதுவே. ஆங்கிலத்தை இக்காரணம்பற்றி, 'இலக்கணம் இழந்தமொழி' என்று கடிதலும் உண்டு.[15]

**தனி நிலையின் சிறப்பு:**

இவ்வாறு அமைந்த தனிநிலை மொழிகளே மிகச் சிறந்தவை என்பது அறிஞர் ஜெஸ்பெர்ஸன் கொள்கை. அவர் அதற்குத் தக்க காரணங்கள் காட்டி நிறுவியுள்ளார். இவ்வாறு சொற்கள் அமையும் முறை பேசுவதற்கு எளியதாகவும், கேட்டு உணர்வதற்குத் தெளிவாகவும் உள்ளது. திணை பால் இடம் வேற்றுமை காலம் முதலியவற்றிற்கு ஏற்ப, விகுதி

14. The logical ideal of grammar would be to have an expression for each function and a single function for each expression. (Vendryes, Language, p. 154.)

15. Ancient languages have a more copious grammar than modern ones. The comparison of the two extremes, Greek and English, has often prompted the remark that English has 'no grammar.' (Sweet, The Practical Study of Languages, p. 273.)

முதலியவை ஒட்டி நீண்ட சொற்களைக் காக்கும் முயற்சியின்றி, ஓரசை ஈரசைச் சொற்கள் சிலவற்ருல் வாக்கியங்களைத் தெளிவாக அமைத்துக்கொள்ள முடிகின்றது. சொற்களில் திணை பால் காலம் முதலியவற்றை எவ்வாறு செறிக்கலாம் என்று முயல்வதைவிட, வாக்கியத்தில் எவ்வெச் சொற்களை எவ்வெவ்விடத்தில் அமைத்திடல் சிறந்தது என்ற ஆராய்ச்சியும் பயிற்சியும் முற்போக்கானவை. இவ்வாறு விளக்கும் ஜெஸ்பெர்ஸன், மொழி ஒரு கருவி என்று கூறி, ஆட்சிக்கு எளிதாய் ஆக்கம் பெரிதாய்ப் பயக்கும் கருவியே சிறந்த கருவி என்று குறித்து, சிறு சொற்கள் சிலவற்றைக்கொண்டு பற்பல அரிய கருத்துக்களையும் எளிய முறையில் தெளிவுற உணர்த்துதலே மொழியின் வெற்றி என விளக்குகின்ருர். எதிர்காலத்தில் மொழியின் முற்போக்கு என்பது இவ்வாறு அமைந்து பயன்படுவதேயாகும் என்பது அவர் நம்பிக்கை.[16]

16. Languages tend on the whole more and more to utilise word position for grammatical purposes; and this is really a progressive tendency, directly progressive, because it is in itself the easiest and nicest linguistic expedients, rendering the task of speaking easier, and involving less effort on the part of the speaker; indirectly, because it facilitates the great work of simplification in language by making the unwieldy forms used of old to indicate concord, etc., more and more superfluous. The substitution of word order for flections means a victory of spiritual over material agencies. 'Jespersen, Progress in Language, p. 110.'

What is to be taken into account is of course the interests of the speaking community, and if we consistently consider language as a set of human actions with a definite end in view, namely, the communication of thought and feelings, then it becomes easy to find tests by which to

ரஷிய மொழியில் உட்பிணைப்பே மிகுதியாக இருந்தது. இன்றும் எழுத்து மொழியில் உட்பிணைப்பே பெருகிக் கிடக்கின்றது. ஆனால், பேச்சு மொழியில் தனிநிலை தலையெடுத்து வருகின்றது. சொற்களைச் சிதைத்துப் பிணைக்கும் பழைய முறை மெல்ல மறைந்துவர, சொற்களைத் தனித்தனியே அமைத்து வாக்கிய அமைப்பால் தெளிவுபடுத்தும் முறை செல்வாக்குப் பெற்று வருகின்றது. பழைய கிரேக்க மொழியையும் இன்று வழங்கும் மொழியையும் ஒப்பிட்டாலும் இவ்வுண்மை புலனாகின்றது. இவற்றை யெல்லாம் ஆராய்ந்த 'மீடர்' என்னும் பேராசிரியர் பேசும் மக்களின் அறிவு வளர்ச்சிக்கும் பேசப்படும் மொழியின் வளர்ச்சிக்கும் தொடர்பு கண்டு, மொழிகள் தனிநிலையாகும் காரணத்தை விளக்குகின்றார்.[17] மக்களின் அறிவு வளர்ச்சியில் தேக்கம் காணப்படுமாயின்—அறிவு மேன்மேலும் வளராது நின்று தடைப்படுமாயின், அவர்கள் பேசும் சொற்கள் ஒன்றோடொன்று பிணைந்து சிதைந்து பிரிக்கப்பட முடியாதவாறு மாறும் என்கின்றார். இஃது உட்பிணைப்பு நிலைக்குக் காரணம். மக்களின் அறிவு வளர்ச்சியில் தடையின்றி முற்போக்குக் காணப்படுமாயின், அவர்பேசும் சொற்கள் பிரிக்கப்பட்டுத் தனித்

---

measure linguistic values, for from that point of view it is evident that language ranks highest which goes farthest in the art of accomplishing much with little means, or, in other words, which is able to express the greatest amount of meaning with the simplest mechanism. (Jespersen, Language, Its Nature, etc. p. 324.

17. W. B. Pillsbury and C. L. Meader, The Psychology of Language, pp. 289, 290.

தனியே பொருளும் அமைப்பும் பெற்றுத் தெளிவு பெறும் என்பது அவர் கருத்து. இது தனிநிலைக்குக் காரணம். அடுத்தது காட்டும் பளிங்குபோல் மக்கள் மனப்பண்பை மொழி காட்டும் என்கின்றார். மனத்தில் கருத்துக்கள் புதியனவாய்த் தோன்றத் தோன்ற, கருத்துக்களில் மாறுதல்கள் விரைந்து நிகழ நிகழ, மொழியின் அமைப்பும் அவற்றிற்கு ஏற்ப மாறும் என்றும், கருத்துக்கள் தேக்கமுறின் மொழிவளர்ச்சியும் தடைப்படும் என்றும் எடுத்துரைக்கின்றார்.

## ௪. எழுத்தின் வரலாறு.

**எழுத்தின் தோற்றம் :**

பேச்சு மொழி இல்லையானல், மனிதனுக்கும் விலங்கிற்கும் வேறுபாடு இல்லை எனலாம். எழுத்து மொழி இல்லையானல் காட்டுமிராண்டிக்கும் நாகரிக மனிதனுக்கும் வேறுபாடு இல்லை எனலாம். விலங்கினிடமிருந்து மனிதனைப் பிரித்து உயர்த்தியது பேச்சு மொழி. உண்பதும் உறங்குவதுமாகவே வாழ்ந்த பழங்காலக் காட்டு மனிதனை வளர்த்துப் பண்படுத்தி நாகரிகம் பெறச் செய்தது எழுத்து மொழி. பேச்சு மொழி, அதனை அறிந்து பழகும் ஒரு கூட்டத்தாருக்கு மட்டுமே நன்மை செய்ய வல்லது; அவர்கள் அளவில் ஒற்றுமை வளர்க்க வல்லது. ஆனல் எழுத்து மொழி, ஒரு கூட்டத்தாருக்கும் மற்றொரு கூட்டத்தாருக்கும் பழகும் வாய்ப்பைத் தந்து ஒற்றுமை வளர்க்கச் செய்வது; பழகாத பல இனத்தாருக்கும் நன்மை செய்து உலகத்தை ஒரு குடும்பமாக ஆக்கவல்லது. இவ்வளவு சிறப்புடைய எழுத்துமொழி தொடக்கத்தில் பல இடர்ப்பாடுகளிடையே வளர்ந்து வந்தது. எழுதும் முறையிலும் குறை பல இருந்தன. எழுதுதற்குரிய கருவிகளிலும் குறை பல இருந்தன. எழுதிய எழுத்துக்கள் பரவும் வகையிலும் குறை பல இருந்தன. ஆதலின் அக்காலத்தில் கற்றல் குறைவாகவும் கேட்டல் மிகுதியாகவும் இருந்தன. "கற்றில னாயினும் கேட்க [1]" என்று அறிவுறுத்தவேண்டிய நிலையே அக்

கால நிலை. ஆனால், எழுத்துக்கள் திருத்தமும் ஒழுங்கும் பெற்ற பின்னர், காகிதமும் அச்சுப் பொறிகளும் பெருகிய பின்னர், நூல்கள் பரவுமாறு போக்குவரவுக்குரிய புகைவண்டி, கப்பல், வானவூர்தி முதலியவை பெருகிய பின்னர், எல்லாரும் கற்றல் வேண்டும் என்னும் உயரிய வாழ்வு வாய்த்துள்ளது; எழுத்தறிவில்லாதவர் நாகரிகம் அற்றவராக இழிக்கப்படும் நிலை வந்துள்ளது. ஆதலின், இக்காலத்தில் கேட்டல் குறைவு; கற்றலே மிகுதி எனலாம்.

பேசக் கற்ற மொழியை எழுதக் கற்குமாறு மனிதனைத் தூண்டியது எது? தன் எதிரிலோ அண்மையிலோ இல்லாத ஒருவனுக்குத் தன் கருத்தைத் தெரிவிக்க வேண்டும் என்னும் முயற்சியே ஆகும். இஃது இடத்தின் சேய்மையைக் கருதியது. நாளடைவில் காலத்தின் சேய்மையைக் கருதியும் இம் முயற்சி எழுந்தது. தன் காலத்தில் இல்லாத மக்களுக்கு—பிற்காலத்தில் வாழப்போகும் மக்களுக்குத் தன் கருத்தைத் தெரிவிக்கவேண்டும் என்ற முயற்சியால் கல்லிலும் செம்பிலும் கருத்தைப் பொறித்து வைக்கத் தலைப்பட்டான் மனிதன்.

இவ்வாறு சேய்மையில் உள்ளவர்க்குத் தன் கருத்தை அறிவிக்க விரும்பிய மனிதன் முதலில் எழுதிய எழுத்துக்கள் எவை? அவற்றை அவன் எவ்வாறு கற்றான்? பேச்சு மொழியின் வரலாற்றை அறிவதற்குக் குழந்தை மொழியும் காட்டுமிராண்டிகள் மொழியும் ஓரளவு பயன்பட்டன அல்லவோ? அதுபோலவே, எழுத்து மொழியின் வரலாற்றை அறிவதற்கும்,

குழந்தையின் எழுத்துக்களும் காட்டுமிராண்டிகளின் எழுத்துக்களும் ஓரளவு உதவுகின்றன.

குழந்தையின் கையில் ஒரு சாக்கு (சுண்ணும்பு)த் துண்டைக் கொடுத்து, "காக்கையை எழுது" என்று வேண்டினுல், ஒன்று அல்லது இரண்டு கோணல் கீற்றுக்களைக் கிழித்து "இதுதான் காக்கை" என்னும். இவ்வாறே எந்தப் பொருளை எழுதச் சொன்னுலும், தன் மெல்லிய பூங்கையால் கிறுக்கி "இதுதான் அது" என்னும். பார்ப்பவர்க்கு அந்தக் கிறுக்கலில் காக்கையும் இராது; குருவியும் இராது. ஆனுல் ஓவியப் புலவனுகிய அந்தக் குழந்தையின் கண்ணுக்கோ அங்கே காக்கையும் காணப்படும்; குருவியும் காணப்படும். அந்தக் கீற்றுக்களில் அந்தந்த உருவங்களையே குழந்தை காண்கின்றது. ஆதலால் குழந்தையின் மனத்திற்கு, எழுத்துக்கள் என்பன பொருள்களின் உருவங்களே அன்றி வேறு குறிகள் அல்ல.

காட்டு வாழ்க்கையராக அமெரிக்காவிலும் ஆஸ்டிரேலியாவிலும் உள்ள பழங்குடி மக்களுக்கும் எழுத்து என்பது இத்தகையதுதான்.[2] ஆனுல், குழந்தையின் எழுத்திற்கும் இவர்கள் எழுதும் எழுத்திற்கும் வேற்றுமை உண்டு. குழந்தை கற்பனைக் களஞ்சியம். அது தன் மனம்போல் கற்பனையுலகில் பறந்து வாழும் ஆற்றல் பெற்றது. ஆதலால் ஒன்றை எழுதி மற்ருென்றைக் காணும் ஆற்றல் அதற்கு இயற்கை.

2. The first endeavours at the communication of thought to the eye would naturally take the shape of sketches or drawings, such as those executed by the American Indians or the Australian aboriginals. (Tucker, Introduction to the Natural History of Language, p. 44.)

விளையாட்டையே வாழ்வாக உடைய குழந்தைக்கு எழுத்தும் ஓர் விளையாட்டே. ஆனால், காட்டுமிராண்டி வாழ்க்கையின் கவலையைக் கண்டவன் கற்பனையும் விளையாட்டும் அவனுக்கு என்றோ ஒருநாள் ஒருவேளை வந்து போவன. அவன் கண்ணால் காண்பன, காதால் கேட்பன இவற்றை நம்புகின்றான்; குழந்தைபோல் உலகம் பொய் என்று தள்ளி விளையாட்டை மெய் என்று கொள்ளல் அவனால் இயலாது. அதனால் அவனை நோக்கி, "காக்கையை எழுது" என்று கேட்டால், காக்கையின் உருவத்தைத் தனக்குத் தெரிந்த அளவில் எழுதிவிடுவான்.

அமெரிக்காவிலும் ஆஸ்டிரேலியாவிலும் உள்ள பழங்குடி மக்களின் எழுத்தெல்லாம் இவ்வாறு உருவங்களை வரையும் நிலையிலேயே இருக்கின்றன.

நாகரிக மொழிகளுள், சீன மொழி மட்டும் எழுத்துக்கள் தோன்றிய வரலாற்றை விளக்க வல்லதாய்ப் பழைய நிலையில் உள்ளது. சீன மொழியில் மலை என்னும் பொருளைக் குறிக்க, மலையின் உருவமே எழுத்தாக எழுதப்படுகின்றது. மனிதனைக் குறிப்பதற்கும் இவ்வாறே ஓர் எழுத்து அமைந்துள்ளது.[3] நீர் வேட்கையைக் குறிக்க, நாக்குப்போல் வளைந்த கோடும், அதன்மேல் நீரைக் குறிப்பிட இரண்டு புள்ளியும் எழுதப்படுகின்றன. 'கேள்' என்ற வினையைக் குறிக்க, ஒரு கதவின் அருகே அமைந்த காது எழுதப்படுகின்றது. நட்பைக் குறிக்க, இரண்டு கைகள் இணைத்து எழுதப்படுகின்றன. கண்ணீரைக் குறிக்கக் கண்ணும் நீரும் சேர்த்து எழுதப்படுகின்

றன. ஞாயிறும் திங்களும் எழுதப்பட்ட உருவம் ஒளியைக் குறிக்கும். வாயும் பறவையும் எழுதப்பட்ட உருவம் பாட்டைக் குறிக்கும். இவ்வாறு ஏறக் குறைய நாற்பதினாயிரம் அடையாள உருவங்கள் எழுத்துக்களாக உள்ளன. சீன மொழியில் பேசப் படும் சொற்களின் தொகை மற்ற மொழிகளைவிடக் குறைவு; ஆனால் எழுதப்படும் எழுத்துக்களின் தொகை மற்ற மொழிகளைவிட மிகுதி.[4] சீன எழுத் துக்களைப் படிக்கக் கற்றல் அவ்வளவு அருமை அன்று; எழுதக் கற்றல் அருமையாம்; எழுத்துக்களை நன்கு பயின்று எழுதுவதற்கு எட்டாண்டுகள் வேண்டுமாம்.[5]

முதலில் எழுத்துக்கள் இவ்வாறு பொருள்களின் உருவங்களோடு பிணைக்கப்பட்டிருந்தமை கண் டோம். இவ்வாறு கட்டுப்பட்டிருந்த எழுத்துக்கள் படிப்படியே விடுதலை பெற்றுத் தனித்தனி ஒலிகளைக் குறிக்கும் குறியீடுகளாயின. சீன மொழியின் எழுத் துக்கள் இவ்வாறு வளர்ந்து வந்துள்ளன. எகிப்து மொழியின் எழுத்து வளர்ச்சியும் இத்தகையதே. அம்மொழியில் லாபோ (*labo*) என்பது சிங்கத்தைக் குறிக்கும் சொல்லாகும். லாபோ என்பது அம்மொழி யில் ஓர் எழுத்து. அவ்வெழுத்து சிங்கம் போன்ற உருவமாக எழுதப்படுவது. இன்று அது சிங்கத்தைக் குறிக்காமல் (லாபோ) என்பதன் முதல் எழுத்தாகிய லகரத்தைக் குறிக்கின்றது. அவ்வாறே அகர உயி ரெழுத்து, கழுகின் உருவம் உடையது. கழுகின் உருவ

4. Whitney, Language and the study of Language, pp. 455-459.

5. Sweet, The Practical Study of Languages, p. 30.

மாக எழுதிய எழுத்து முதலில் கழுகை உணர்த்தும் எகிப்திய சொல்லாகிய அஹோம் (*ahom*) என்று கூறப்பட்டு, இன்று அச்சொல்லின் முதலொலியாகிய அகர உயிரைக் குறிக்கின்றது.[6] மற்ற மொழிகளின் எழுத்து வரலாறும் இவ்வாறுதான் கொள்ளவேண்டும். தமிழிலும் இவ்வாறே முதலில் பொருள்களின் உருவம் குறித்த எழுத்துக்கள் காலம் செல்லச் செல்ல ஒலிகளைக் குறிக்கும் குறியீடுகளாக மாறியிருக்க வேண்டும். முதலில் பாட்டாய் எழுந்த மொழி பிறகு நாளடைவில் பேச்சாய் மாறி வளர்ந்தது என்பதை விளக்கும் அறிஞர் ஜெஸ்பெர்ஸன், முதலில் ஓவியமாய் எழுந்த ஒரு கலையே பின்னர் எழுத்தாய் வளர்ந்தமைந்துள்ளது என்ற கருத்தைப் புலப்படுத்துகின்றார்.[7]

**திராவிட மொழிகளின் எழுத்துக்கள் :**

திராவிட மொழிகளுள் தமிழுக்கும் மலையாளத்துக்கும் தனித்தனியே எழுத்துக்கள் உள்ளன.

---

6. Whitney, Language and the Study of Language, p. 454.

7. As is the art of writing to primitive painting, so is the art of speaking to primitive singing. (Jespersen, Progress in Language, p. 360).

A certain poet, praising painting, called it the art by which we paint words, and speak to the eyes this he said poetically rather than truly ; for a picture expresses indeed our ideas, but not our words. Nor would I say that painting differs much from writing, except that it is a book which is read even by the ignorant, and is drained, at one glance, and devoured, as it were, by the eyes. (Rev. Beschi, A Grammar of the Common Dialect of the Tamil Language, p. 11.)

தெலுங்கு, கன்னடம் ஆகிய இரு மொழிகளுக்கும் உள்ள எழுத்துக்கள் பெரும்பான்மையும் ஒத்திருப்பதால் அவ்விரு மொழிகளுக்கும் ஒருவகை எழுத்து இருப்பதாகக் கொள்ளலாம். தெலுங்கு கன்னட எழுத்துக்களுள் உள்ள வேறுபாடு மிகச் சிலவே; முக்கியமான வேறுபாடு ஒன்றும் இல்லை.

துளு மொழி மலையாள எழுத்துக்களில் எழுதப்பட்டு வந்தது. இப்போது கிறித்தவப் பாதிரிகள் கன்னட எழுத்துக்களில் நூல்களை அச்சிடுகின்றார்கள். எவ்வாறாயினும் துளு மொழிக்கென ஓர் எழுத்து வகை இல்லை.

கூ மொழியை ஒரியா எழுத்தால் எழுதுகின்றார்கள். இலக்கிய வளமற்ற மற்ற மொழிகளை ஆங்கில (ரோமன்) எழுத்துக்களால் எழுதுகின்றார்கள்.

எனவே, திராவிட மொழிகளுக்கே உரிய எழுத்து வகைகள் மூன்று எனலாம். ஹள கன்னடம் என்னும் பழைய கன்னடத்திற்கு இப்போதுள்ள தெலுங்கெழுத்து இல்லாமல் வேறு எழுத்துவகை இருந்து வந்திருக்கின்றது. தமிழ் மொழியில் உள்ள பழைய கல்வெட்டுக்களை ஆராயும்போது தமிழ் மொழியிலும் இவ்வாறே பண்டைக்காலத்தில் வேறுவகை எழுத்து இருந்துவந்தமை அறிகின்றோம்.

இப்போதுள்ள தமிழ் எழுத்துக்களைப் பற்றிய ஆராய்ச்சியிலும் பண்டைத் தமிழ் எழுத்துக்களைப் பற்றிய ஆராய்ச்சியிலும் கருத்து வேறுபாடுகள் பல உள்ளன. ஆனால், இன்றுள்ள மலையாள எழுத்துக்கள் தமிழ்க் கிரந்த எழுத்துக்களை ஒட்டி அமைக்கப்

பட்டவை என்பதில் அறிஞர்கள் ஒன்றுபட்ட கருத்து உடையவர்களே. தெலுங்கு-கன்னட எழுத்துக்கள் தேவநாகரி எழுத்துக்களை ஒட்டி அமைந்தவை. தேவநாகரி முறைக்கும் தெலுங்கு-கன்னட எழுத்து முறைக்கும் வேறுபாடு மிகச் சிறிதே. தேவநாகரியில் இல்லாத குறில் எ, குறில் ஒ, றகரமெய், ளகரமெய் இவை தெலுங்கு-கன்னட எழுத்துக்களில் உள்ளன. வேறுபாடு இவ்வளவே. தமிழ் எழுத்துக்களோ தேவநாகரியை ஒட்டி அமைந்தவை என்றோ, கிரந்த எழுத்துக்களை ஒட்டி அமைந்தவை என்றோ கூறமுடியாது.

பழங் கன்னடத்தில் ழகர எழுத்து இருந்தது. புதுக் கன்னடத்தில் இல்லாமற் போயிற்று. அந்த எழுத்து, தமிழில் உள்ளது போலவே, இன்றுவரை மலையாளத்திலும் உள்ளது. மலையாள எழுத்துக்களுக்கும் தெலுங்கு-கன்னட எழுத்துக்களுக்கும் இந்த ழகரம் இருத்தல் ஒரு வேறுபாடாக இருந்து வருகிறது. மலையாள எழுத்து முறைக்கும் தேவநாகரி எழுத்து முறைக்கும் வேறுபாடு சிறிதே எனலாம். எனினும் எழுத்து வடிவங்கள் தமிழ் எழுத்து வடிவங்களை ஒட்டியவைகளேயாகும்.

**தமிழ் எழுத்துக்கள் : வேறுபாடுகள்**

தமிழ் மொழியோ எழுத்து முறையில் ஏனைய மொழிகளினின்றும் பெரிதும் வேறுபட்டு விளங்குகின்றது.

(1) எகர ஒகரக் குறிலுக்கும் அவ்வந் நெடிலுக்கும் தமிழில் தனித்தனி எழுத்துக்கள் உள்ளன. தெலுங்கு-கன்னடத்திலும் அவை உள்ளன. ஆனால்

தேவநாகரியில் அவை இல்லை; நெடிலுக்கு மட்டுமே எழுத்துக்கள் அம்மொழிகளில் உண்டு.

(2) தேவநாகரியில் உயிரினத்தோடு ஒருசேர வைக்கப்பட்டுள்ள ரு, லு என்பவை தமிழில் இல்லை.

(3) தமிழில் அநுஸ்வார எழுத்து இல்லை.

(4) தெலுங்கிலுள்ள அர்த்தாநுஸ்வாரம் தமிழில் இல்லை.

(5) தமிழில் ஹ (*aspirate*) இல்லை. வல்லினங்களோடு கூடி ஒலிக்கும் ஹகர ஒலியும் (**aspirated consonants**) அவற்றிற்குரிய எழுத்துக்களும் தமிழில் இல்லை. அவற்றிற்கு ஈடாகத் தமிழில் ஆய்தம் என்னும் நுண்ணொலி உள்ளது.

(6) தமிழில் வல்லினமாகிய க ச ட த ப என்பவற்றிற்கு இனமான (கடல், அகம், அச்சு, அஞ்சு, தட்டு, தடு, பத்து, பந்து, அப்பர், அம்பல்) மெல்லொலி அமைந்த சொற்கள் உள்ளன. ஆனால் அவற்றைக் குறிக்கும் எழுத்துக்கள் இல்லை. ஏனை மொழிகளில் உள்ளன. வல்லினத்தில் வல்லொலி மெல்லொலி இரண்டையும் குறிக்க ஓரெழுத்தே பயன்பட்டு வருகின்றது.

(7) தேவநாகரியில் இல்லாத ழ, ள, ற, ன என்னும் நான்கெழுத்துக்களும் தமிழுக்கு இன்றியமையாதனவாய் உள்ளன. அவை தமிழுக்குச் சிறப்பெழுத்துக்கள் எனப்படும். அதுபற்றியே அவை எழுத்துக்களின் இறுதியில் இடம்பெற்று விளங்குகின்றன என்பர்.

(8) தேவநாகரியிலும் மலையாளம் முதலியவற்றிலும் உள்ள ஶ, ஸ, ஷ (*sibilants*) என்பவை தமிழில் இல்லை.

**தமிழ் எழுத்து வரலாறு:**

தமிழில் எழுத்துக்களை நெடுங்கணக்கு என்ற பெயரால் குறித்தல் மரபு. அவற்றைக் கற்பிக்கும் ஆசிரியரைக் கணக்காயர் என்பது வழக்கு. அன்றியும் எழுதப்படுதலின் எழுத்து என்ற தனிப்பெயரும் உண்டு. எழுதப்பட்ட நூலுக்குச் சுவடி என்ற பெயரும் உள்ளது. இத் தூய தமிழ்ப் பெயர்கள் அனைத்தும் தமிழ் மொழியின் எழுத்து முறையின் தொன்மையும் தனிமையும் விளக்கும் சான்றுகளாகக் கொள்ளத் தக்கவை.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் இலக்கணம் எழுதப்புகுந்த பவணந்தியார் எழுத்துக்களைப் பன்னிரண்டு வகையான் ஆராய்ந்தார். அவற்றுள் உருவம் என்பதும் ஒன்று.[8] எழுத்துக்களின் உருவத்தை இலக்கண நூலாரும் போற்றும் அத்துணைத் தனிச்சிறப்பு, தமிழ் எழுத்துக்களுக்கு இருந்தமை இதனால் தெளிவாகின்றது.

ஆயினும் இன்று வழங்கும் தமிழ் எழுத்துக்களே தொன்றுதொட்டு இருந்துவந்தன என்று கூறல் பொருந்தாது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே முற்றிலும் வேறுபட்ட எழுத்தே இருந்துவந்தது. அந்த

8. எண்பெயர் முறைபிறப்(பு) உருவம் மாத்திரை
முதலீ றிடைநிலை போலி என்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

(நன்னூல், 57.)

எழுத்தை வட்டெழுத்து என்பர். அதுவே மிகப் பழைய தமிழ் எழுத்தாகும். பிறகு வடமொழியா ரால் பரப்பப்பெற்ற கிரந்த எழுத்து, படிப்படியே தமிழ் நாட்டில் இடம் பெற்றது. முதலில் சிறுபான் மையாராலேயே அது கையாளப்பட்டு வந்தது. சிறிது சிறிதாகச் செல்வாக்குப் பெற்றுப் பதினொன் காம் நூற்றாண்டில் அது வட்டெழுத்துக்களைப் பெரி தும் மாற்றி இப்போது வழங்கும் எழுத்துக்களை அமைத்து விட்டது.

தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்களையும், திருவாங்கூர், கொச்சி சமத்தானங்களில் உள்ள கல்வெட்டுக்களை யும் ஆராயும்போது, சில வட்டெழுத்துக்களிலும் சில கிரந்த எழுத்துக்களிலும் அமைந்திருக்கக் காண்கின் றோம். மதுரை திருநெல்வேலி வட்டாரங்களில் அசோக மன்னரின் பிராமி எழுத்துக்களும் கல்வெட் டுக்களில் இருப்பதைக் காண்கிறோம். எனவே, தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்கள் மூவகை எழுத்துக்களைத் தெரிவிக்கின்றன :

(1) மிகப் பழைய கல்வெட்டுக்களில் உள்ள வட்டெழுத்து—தமிழரின் பழைய எழுத்து.

(2) வடமொழியாளர் பரப்பிய கிரந்த எழுத்து.

(3) பௌத்தர் புகுத்திய பிராமி எழுத்து.

வட்டெழுத்து வாழ்விழந்த காலம் இதுவென் றும், ஏனை எழுத்துக்கள் புகுந்த காலங்கள் இவை என்றும் வரையறுத்துக் கூறமுடியவில்லை. கல்வெட் டுக்களே ஒருவாறு துணைசெய்யும் கருவிகளாக உதவு கின்றன. தொண்டைமண்டலத்தில் பல்லவராட்சிக்

காலத்தில் பிராமி எழுத்துக்கள் பல்லவ எழுத்துக்களாக விளங்கின. அவை கி. பி. 650 ஆண்டு வரையில் சென்று ஆராய இடந்தருகின்றன. கூரத்துச் சாசனம் எடுத்துக்காட்டாகக் கூறலாம். சோழ நாட்டில் மிகப் பழைய கல்வெட்டுக்களாகக் காணப் பட்டவை கி. பி. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவை. அவை கிரந்த எழுத்துக்களில் அமைந்துள்ளன. சோழநாட்டில் ஆங்கொன்றும் ஈங்கொன்றுமாக வட்டெழுத்துச் சாசனங்கள் உள்ளன. அவை பெரும் பாலும் பாண்டிய வேந்தர்களால் ஏற்பட்டவையாக உள்ளன. பாண்டிய நாட்டில் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட பழைய கல்வெட்டுக்களும் உள்ளன. அவற்றுள் சில வட்டெழுத்துக்களாலும் சில கிரந்த எழுத்துக்களாலும் அமைந்தவை. சேரநாட்டில் வட்டெழுத்து நெடுங்காலம் வாழ்ந்துவந்திருக்கின்றது. இன்றும் மேற்குக் கடற்கரை ஓரமாக உள்ள மாப்பிள்ளை வகுப்பார் சிலவற்றை வட்டெழுத்திலேயே எழுதுகின்றார்கள். ஆகவே, வட இந்தியர் முதலில் பரவிய தொண்டைமண்டலத்திலும் சோழ மண்டலத்திலும் கிரந்த எழுத்துக்கள் முதலில் பரவின என்றும், பிறகே ஏனை நாடுகளில் இடம்பெற்றன என்றும் அறிகின்றோம்.

அன்றியும் வட்டெழுத்து கி. பி. எட்டாம் நூற்றாண்டின் கல்வெட்டு வரையிலும் காணப்படுகின்றது. இலக்கண நூலாரை அணுகின், அதன் தொன்மை தெளிவாகின்றது. கி. மு. 1000-க்கு முற்பட்ட பழங் காலத்தில்[9] இயற்றப்பட்ட தொல்காப்பியம் என்னும்

---

9. தொல்காப்பியனார் தமது நூலில் இந்திரன் என்னும் வட மொழியிலக்கண ஆசிரியரைக் குறிப்பிட்டுள்ளார்; ஆயின்,

தொன்மைத் தமிழ்நூலில் கூறப்பட்ட எழுத்து வடிவங்கள் வட்டெழுத்துக்களைக் குறிப்பனவே ஆகும்.

இவ்வட்டெழுத்தினையே கோலெழுத்து எனவும் கண்ணெழுத்து எனவும் பழந்தமிழ் நூல்கள் குறிக்கும்.[10] சித்திரம்போல் எழுதப்பெற்றவை யாதல்பற்றியே இப்பெயர்கள் அமைந்தன. சீனம் முதலிய மொழிகளிலும் முதன் முதலில் எழுத்துக்கள் ஓவியமாக எழுதப்பெற்று வந்தமையும் இன்றும் ஓரளவு அவைபோல் இருத்தலும் ஈண்டுக் கருதத்தக்கன.

**வட்டெழுத்துக்கள் வேறு; வட இந்திய எழுத்துக்கள் வேறு.**

வட்டெழுத்துக்களின் தொன்மையும் சிறப்பும் இத்தன்மையவாக, அவையும் கிரந்த எழுத்துக்களின் திரிபு என்றும், பிராமி எழுத்துக்களினின்றும் பிறந்தவை என்றும் கூறும் கொள்கைகள் பொருந்தாதன ஆகும். ஆராய்ச்சியின் முடிபும் அவ்வாறே தெளிவிக்கின்றது. டாக்டர் கால்டுவெல் பிற எழுத்துக்களுக்கும் தமிழ் எழுத்துக்களுக்கும் உள்ள வேறுபாடுகளையும், அவற்றின் காரணங்களையும் தெளிவாக விளக்கிய போதிலும், இறுதியில் எல்லாம் கிரந்த எழுத்துக்களின் திரிபே என்று கூற முன்வந்ததும் பொருந்தாமலே நிற்கின்றது.[11]

---

அவர் பாணினி என்னும் வட மொழியிலக்கண ஆசிரியரைக் குறிப்பிடவில்லை. பாணினியின் காலம் கி. மு. 350 என்று ஆராய்ச்சியாளர் கூறுதலால், தொல்காப்பியனார் அதற்கு முற்பட்டவர் எனலாம்.

10. சிலப்பதிகாரம், 5—112; 26—136.

11. There can be little doubt of the derivation of the Tamil character in ordinary use from the Grantha; for some characters are identical with Grantha letters which

வட்டெழுத்துக்கள் வடமொழியிலிருந்து கடன் வாங்கினவை என்ற கொள்கையும் பிராமியிலிருந்து அமைக்கப்பட்டவை என்ற கருத்தும் பொருந்தாமைக்குக் காரணங்கள் :—

(1) திராவிடர்கள் மிகப் பழைய குடிமக்கள்; தங்களுக்கே உரிய தொன்மையான நாகரிகம் வாய்ந்தவர்கள். கி. மு. பத்தாம் நூற்றாண்டுக்கு முன்னரும் எகிப்தியர் முதலான நாகரிக நாட்டினரோடு வாணிகம் முதலான தொடர்பு கொண்டிருந்தவர்கள். பிற மொழிகளில் புகுந்த தோகை, அரிசி முதலிய தமிழ்ச் சொற்கள் இதற்குச் சான்றுகளாம். எனவே, பிற்காலத்தே இந்நாட்டில் அமைந்த தேவநாகரி பிராமி என்பவற்றைப் பார்த்து எழுதக் கற்றனர் என்பது பொருந்தாது.

(2) வடமொழியின் இலக்கண நூல்கள், தமிழ் இலக்கண நூல்கள் சிலவற்றை எழுதக் காரணமாக இருந்திருப்பினும், இலக்கண நூல்களுக்கு மிக முற்பட்ட எழுத்து முறைக்கு அவை காரணமாகா. தவிர, எழுத்து, சுவடி, நெடுங்கணக்கு என்ற தனித் தமிழ்ப் பெயர்கள் தமிழ் எழுத்து முறை இருந்த உண்மையைத் தெரிவிக்கின்றன.

---

are still in use, and others with more ancient forms of the Grantha; but the other part of the hypothesis, viz., the existence of a Pre-Sanskrit Tamil character, out of which the Grantha itself was developed, is more doubtful. (Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 125.)

The materials of that alphabet appear to be wholly, or in the main, Sanskrit; but the use which is made of those materials is Tamilian. (Ibid. p. 30).

(3) வடமொழியைப் போல் தமிழிலும் எ, ஒ என்பவற்றிற்குத் தனி எழுத்துக்கள் இல்லையாதலின், வடமொழியை ஒட்டியே தமிழ் எழுத்துக்கள் ஏற்பட்டன என்பர் கால்டுவெல். இதுவும் பொருந்தாக் கூற்றே. மெய்யெழுத்துக்களுக்கு இருப்பதுபோல் எகர ஒகரக் குற்றெழுத்துக்களுக்கும் புள்ளியிருந்தது. இவற்றின் வரி வடிவங்களைப்பற்றித் தொல்காப்பியர் கூறுவதால், அவர் காலத்திற்கு மிக முன்னரே எ, ஒ இவற்றிற்குத் தனி எழுத்து வடிவம் இருந்தமை புலனாகும்.[12] குறிலில் புள்ளியை நீக்கி, நெட்டெழுத்துக்களில் ஏ, ஓ என்ற உருவ வேறுபாடு செய்தவர் வீரமாமுனிவர். அதனாலேயே அவர்க்குமுன் ஒரு வேறுபாடும் இல்லை என்று கருதுதல் தவறு.

(4) க (ㅋ) ப (2) ர (7) ல (V)

என்னும் வட்டெழுத்துக்கள் அசோகர் காலத்துப் பிராமி எழுத்துக்களைப் போலுள்ளன என்பர். இத்தகைய ஒற்றுமை நான்கு அல்லது ஐந்து எழுத்துக்களில் இருத்தலைக் கொண்டு, எல்லா எழுத்துக்களும் அப்படியே என்று துணிதல் கூடாது.

(5) வடமொழியிலிருந்தோ, பிராமியிலிருந்தோ தமிழ் எழுத்துக்கள் அமைந்திருந்தால், தெலுங்கு

12. 'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்' (எழுத்ததிகாரம், ௧௫) என்றும், 'எகர ஒகரத்து இயற்கையும் அற்றே' (எழுத்ததிகாரம், ௧௬) என்றும் தொல்காப்பியனார் கூறியுள்ளார். இவற்றால் குறிலெழுத்துக்களாய எகர ஒகரங்களின் வரிவடிவ வேறுபாடு தெளிவாக்கியுள்ளார். இக்காலத்து எ ஏ என்றும் ஒ ஓ என்றும் எழுதப்படும் குறில் நெடில்கள் அக்காலத்தில் எ͘ எ என்றும் ஒ͘ ஒ என்றும் எழுதப்பட்டன. குறில்களாகிய எகர ஒகரம் புள்ளியோடு நிற்கும் என்பதே அவர் விளக்கம்.

மலையாளம் முதலியவற்றில் உள்ளவாறுபோல், தமிழிலும் எல்லா எழுத்துக்களும் இருக்கவேண்டும். ஆனால் தமிழில் எழுத்துக்கள் உயிரும் மெய்யுமாக முப்பதே. அவற்றிலோ ஐம்பத்தாறு. எனவே, தொடக்கத்திலேயே பெரிய வேறுபாடு இருந்ததெனக் கொள்ளல் வேண்டும்.

(6) மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியிடும் வழக்கம், பிராமியிலும் அதைச் சார்ந்தவற்றிலும் இல்லை. ஆனால் தமிழிலும் மேற்கு ஆசியாவில் வழங்கும் செமிட்டிக் மொழியிலும் இம்முறை உண்டு.

(7) அசோக மன்னர் பௌத்த சமயத் துறவிகளைத் தமிழகத்திற்கு அனுப்பிப் பிராமியைப் பரப்பிய காலம் கி. மு. 250. அதற்கு முன்னமே தமிழில் இலக்கணமும், இலக்கியமும், எழுத்தும் இருந்தமை மறுக்க முடியாத உண்மையாகும். தொல்காப்பியர் கூறும் எழுத்து வடிவங்கள் பிராமி எழுந்துக்களைப் பற்றியன அல்ல.

(8) வடமொழிப் பகுதியைக் கிரந்த எழுத்துக்களாலும் தமிழ்ப் பகுதியை வட்டெழுத்துக்களாலும் விரவி எழுதிய முறையைப் பல கல்வெட்டுக்களில் காண்கின்றோம். இதனால் கிரந்த எழுத்துக்கள் தமிழ் நாட்டில் புகுந்த காரணம் வடமொழிப் பகுதிகளை எழுதவே என்றும், நாளடைவில் வட்டெழுத்து வழக்கொழிய, கிரந்தம் இடம் பெற்றது என்றும் அறிகிறோம்.[13] கிரந்தமும் பிராமியிலிருந்து பிறந்தது என்று

13. கி. பி. 770-ல் ஏற்பட்ட ஆனைமலை சாசனத்தில் வட்டெழுத்தும் கிரந்த எழுத்தும் கலந்துவிட்டமை காண்கின்றோம். ஆதலால், அக்காலத்திலிருந்தே வட்டெழுத்துக்கள் படிப்படியே மாறி வரத் தொடங்கின எனலாம்.

அறிஞர்கள் கருதுவதால், பிராமி தமிழ் நாட்டில் வந்த காரணமும் அதுவே ஆகும். ஆகவே, தமிழை எழுத வட்டெழுத்தே முதலில் பயன்பட்டு வந்தது.

(9) உயிர் ஏறிய மெய் என்பதை அறிவிக்கும் விலங்கு, கோடு, கால் முதலியன வட்டெழுத்துக்களில் ஒழுங்காக உள்ளன. ஆனால் இன்றுள்ள தமிழில் அந்த ஒழுங்கு இல்லை. இது, கிரந்த எழுத்துக்கள் இடைக்காலத்தில் கலந்து செய்த மாறுதல்களின் பயனாகும். (கா, ணா, றா; கு, சு, நு; கை, லை முதலியவற்றில் ஒழுங்கு இல்லை.)

ஆகவே, கிரந்தமும் பிராமியும் அல்லாமல் தமிழுக்குத் தனி எழுத்துக்கள் இருந்துவந்தமை அறிகின்றோம். அந்த எழுத்துக்கள், கி. மு. பத்தாம் நூற்றாண்டுக்கு முன்னரே இருந்தவை என்பது அறிஞர் கருத்து.

**தொல்காப்பியத்தில் விளக்கப்படும் எழுத்து வடிவம் சில :**

1. மெய்யெழுத்துக்கள் புள்ளி பெறல்.[14]
2. எகர ஒகரக் குறில் புள்ளி பெறல்.[15]
3. குற்றியலுகரமும் குற்றியலிகரமும் புள்ளி பெறல்.[16]

---

14. தொல். எழுத்து. ௧௫.
15. ஷை ௧௬.
16. தொல். பொருள். செய்யுளியல் ௩௨௰-ம் சூத்திரமாகிய “ஒற்றெழுத் தியற்றே குற்றிய லுகரம்” என்பதற்குப் பேராசிரியர் பின்வருமாறு எழுதும் உரை இதற்குச் சான்றாகும்:—

“‘மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்’ (தொல். எழுத்து. ௧௰௪) எனக் கூறி,

“‘குற்றிய லுகரமும் அற்றென மொழிப’ (ஷை. ௧௰௫) எனக் குற்றுகரத்திற்குப் புள்ளி பெறுதலும் கூறினான். அதுபோலக் குற்றிகரமும் புள்ளிபெற்று நிற்றல் உடைத்தெனவும் . . . . ஆயிற்று. . . . . இவற்றையெல்லாம் ‘ஒற்றெழுத்தியற்றே’ என்பதனாற் புள்ளியிட்டெழுதுக.”

4. ம—ப என்ற வடிவாக, பகரத்தினுள் புள்ளி யிட்டு எழுதப்படல்[17].

**பிற்கால மாறுதல்கள் :**

1. எகர ஒகரக் குறில் புள்ளி பெறுமை.
2. ஏ ஓ என்பவை காலும் சுழியும் பெறல்.[18]
3. குற்றியலுகரமும் குற்றியலிகரமும் புள்ளி பெறுமல் மற்ற உகர இகரங்களைப்போலவே எழுதப்படல்.
4. ப என எழுதாமல், புள்ளியை வளைத்து ம என எழுதல்.
5. கா ஙா முதலியவற்றில் கால் சேர்க்கப்படல். முற்காலத்தில் இவை க. ங. என எழுதப்பட்டன.[19]

தமிழில் உயிர்மெய் யெழுத்துக்கள் எப்படி ஒலிக்கும் என்பதை இலக்கண ஆசிரியர் பவணந்தி

17. உட்பெறு புள்ளி உருவா கும்மே (தொல். எழுத்து. கச.)

18. இவை வீரமாமுனிவர் (Rev. Beschi) செய்த மாறுதல்கள். "I also state I have devised another and easier way of distinguishing e and o long from e and o short." (Rev. Beschi, A Grammar of the Common Dialect of the Tamil Language, p. 7).

19. "உருவு திரிந்து உயிர்த்தலாவது மேலும் கீழும் விலங்கு பெற்றும் கோடு பெற்றும் புள்ளி பெற்றும் புள்ளியும் கோடும் உடன் பெற்றும் உயிர்த்தலாம். கி கீ முதலியன மேல் விலங்கு பெற்றன. கு கூ முதலியன கீழ் விலங்கு பெற்றன. கெ கே முதலியன கோடு பெற்றன. கா ஙா முதலியன புள்ளி பெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர். மகரம் உட்பெறு புள்ளியை வளைத்தெழுதினர். கொ கோ பொ போ முதலியன புள்ளியும் கோடும் உடன் பெற்றன" என நச்சினார்க்கினியர் எழுதிய உரை காண்க.

—தொல். எழுத்து. கஎ.

யார் விளக்கிச் சென்றுள்ளார். மெய் முன்னும் உயிர் பின்னுமாக ஒலிக்கும் என்பதே அவர் செய்த விளக்கம்.[20] இஃது ஒலி வடிவிற்கு ஆகும். ஆனால் வரி வடிவில் பல எழுத்துக்கள் அவ்வாறு (மெய் முன்னும் உயிர் பின்னுமாக) அமையவில்லை. 'கி' என்பதை எழுதும்போது 'க' என்று மெய் முன்னெழுதி இகர உயிரின் வடிவைப் பின்னெழுதுகிறோம். 'கெ' என்பதை எழுதும்போது, 'ெ' என்பதை முன் எழுதுவது தவறன்றோ? 'தை' என்று எழுதின் தகர மெய்யும் ஐகார உயிரும் கூடிய உயிர்மெய் என்பது தெளிவாகும். 'ஐ' என்ற ஒலியை—அதன் குறியை—'ை' என்று மெய்க்குமுன் எழுதுவது பொருந்துமாறு எங்ஙனம்? கொ, கோ, கௌ முதலான எழுத்துக்களில் மெய்யை இடையில் வைத்து, உயிரின் வடிவை முன்னும் பின்னுமாகப் பிரித்து எழுதல் பெருங்குறையாகும்.

மேற்சொன்ன குறை தமிழிலும் மலையாளத்திலுமே உண்டு. தெலுங்கிலும் கன்னடத்திலும் இல்லை. தெலுங்கிலும் கன்னடத்திலும் மெய்யின் வடிவு எழுதின பிறகே, உயிரின் வடிவை எழுதல் இன்றும் உள்ள வழக்கம்.

---

20. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை உயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடும் ஒற்றுமுன் னாய்வரும் உயிர்மெய்.
—நன்னூல், எழுத்து. 89.

## ரு. உயிரெழுத்துக்கள்.

**குறியீடுகள் :**

தமிழிலக்கண நூல்களில் உயிரெழுத்து என்றும் மெய்யெழுத்து என்றும் குறியீடுகள் வழங்குகின்றன. உயிர், மெய் என்னும் பெயர்கள் சிறந்த காரணம் பற்றி அமைந்துள்ளன. தனித்தியங்கும் ஆற்றலை உயிர் என்ற பெயரும், உயிருடன் கூடியே இயங்கும் இயல்பை மெய் (உடம்பு) என்ற பெயரும் தெரிவிக்கின்றன. உடலும் உயிரும்போல இரண்டும் கூடி இயங்குதலின் உயிர்மெய் என்ற பெயரும் பொருத்தமாக அமைந்துள்ளது. தனித்ததோர் தன்மையின்றிச் சார்ந்து வருதலே தமக்கு இயல்பாக உடைய எழுத்துக்கள் மூன்றனைச் சார்பெழுத்து என்பர் தொல்காப்பியனார்.[1] அவை குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பன.

**பிறப்பும் பாகுபாடும் :**

ஒலிநூல் (*Phonetics*) ஆராய்ச்சியின்படி, உள்ளிருந்தெழும் மூச்சு மிடற்றின் முயற்சியால் வாயின் வழியாகத் தடையின்றி வெளிப்படும்போது உயிரெழுத்துக்கள் பிறப்பனவாம். மிடற்றின் முயற்சியால் பிறக்கும் ஒலிகள் அ, வ் முதலியன (*voiced sounds*). மிடற்றின் முயற்சியின்றிப் பிறக்கும் ஒலி

1. அவைதாம்
குற்றிய லிகரம் குற்றிய லுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன.
—தொல். எழுத்து. உ.

கள் ப், த் முதலியன (*voiceless or breathed sounds*).[2] அங்ஙனம் வெளிவரும் மூச்சு வாயில் தடைப்படின் மெய்யெழுத்துக்கள் பிறக்கும். சிறு தடையுமின்றி வெளிப்படின் உயிரெழுத்துக்களாம்.[3] இந்த உயிரெழுத்துக்கள் பிறக்கும் முயற்சிவகையால் பல்வேறு வகைப்படும். தொல்காப்பியனார் பிறப்பியலில் கூறுமாறு பிறப்பிடமும் முயற்சியும் பலவாகும்.

உந்தி முதலா முந்துவளி தோன்றித்
தலையினும் மிடற்றினும் நெஞ்சினும் நிலைஇப்
பல்லும் இதழும் நாவும் மூக்கும்
அண்ணமும் உளப்பட எண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா எழுத்தும் சொல்லுங் காலைப்
பிறப்பின் ஆக்கம் வேறுவே றியல.[4]

இவ்வகை உறுப்புக்களின் முயற்சியாலேயே ஒலி பல்வேறு வகையாகப் பகுத்தறியக் கிடக்கின்றது.

---

2. When the vocal chords are wide apart (i. e. when the glottis is open) and air passes between them, the sound produced is called *breath*; when they are drawn together and air is forced between them so that they vibrate, the sound produced is called *voice*... Every speech sound contains either breath or voice. Those which contain breath are called breathed or voiceless sounds; and those which contain voice are called voiced sounds. (D. Jones, An Outline of English Phonetics, pp. 9, 10).

3. A vowel (in normal speech) is defined as a voiced sound in which the air has a free passage through the mouth, and does not produce any audible friction. All other sounds (in normal speech) are called consonants (ibid. 11).

4. தொல். எழுத்து. அஙு.

திராவிட முதல் மொழியில் உயிரெழுத்துக்கள் மூன்றே இருந்தன என்பர். அம்மூன்று அ, இ, உ என்பன. இம்மூன்று உயிரொலிகளும் பிறக்கும் நாநிலைகளை ஆராய்ந்தால் ஓர் உண்மை புலனாகும். அஃதாவது நா அடியில் படிந்திருக்கும் நிலையில் அகரம் பிறத்தலும், முன் அண்ணம் நோக்கி மேலெழுங்கால் இகரம் பிறத்தலும், உண்ணாக்கை நோக்கி எழுங்கால் உகரம் பிறத்தலும் உணரப்படும். இப் பிறப்பிடங்களை ஒரு முக்கோணத்தின் மூலைகளுக்கு ஒப்பிடலாம்.




இதனை உயிர்முக்கோணம் (*vowel-triangle*) என்றும், இம்மூன்று ஒலிகளே உயிரெழுத்துக்களுக்கு அடிப்படை என்றும் கூறுவர். சிவஞான முனிவரும் உயிரெழுத்துக்களின் முறைவைப்பை விளக்கும்போது இவ்வுண்மையைப் புலப்படுத்துகின்றார்.[5]

உயிரெழுத்துக்களின் பிறப்பைக் கூறும்போது தொல்காப்பியனார் இகரத்தோடு எகரத்தையும், உக

5. இனி, உயிர்களுள், அ இ உ என்பன, முறையே அங்காந்து கூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு அண்பல்லடி நாவிளிம்புறக் கூறு முயற்சியானும், அவ்வங்காப்போடு இதழ் குவித்துக் கூறு முயற்சியானும் பிறத்தலான், அப்பிறப்பிடத்து முறையே முறையாக வைக்கப்பட்டன.

—(நன்னூல், எழுத்து. 73 விருத்தியுரை.)

ரத்தோடு ஒகரத்தையும் சேர்த்துள்ளார்.[6] பிறப்பிடமும் முயற்சியும் பற்றி இகரத்தோடு எகரம் தொடர்புடையது; உகரத்தோடு ஒகரம் தொடர்புடையது. இத்தொடர்பு பற்றியே யாப்பிலக்கணக்காரர் இவற்றை இனவெழுத்தாகக் கொண்டு மோனைத் தொடை கொள்வர்.[7]

இகரத்திற்கும் எகரத்திற்கும் உள்ள உறவைப் பின்வரும் சொற்கள் விளக்கும் :—

| | | | |
|---|---|---|---|
| எழுத்து மொழியில் | — இலை ; | பேச்சு மொழியில் | — எலை |
| ,, | — இணை ; | ,, | — எணை |
| ,, | — இழை ; | ,, | — எழை |
| கன்னடத்தில் | — இலி ; | தமிழில் | — எலி |
| தமிழில் | — சிதல் ; | கன்னடத்தில் | — செதலு |

உகரத்திற்கும் ஒகரத்திற்கும் உள்ள உறவை விளக்கும் சொற்கள் :—

| | | | |
|---|---|---|---|
| எழுத்து மொழியில் | — உலகம் ; | பேச்சு மொழியில் | — ஒலகம் |
| ,, | — உரல் ; | ,, | — ஒரல் |
| ,, | — உடம்பு ; | ,, | — ஒடம்பு |
| ,, | — உயரம் ; | ,, | — ஒயரம் |

---

6. இ ஈ எ ஏ ஐ என இசைக்கும்
அப்பா லைந்தும் அவற்றோ ரன்ன
அவைதாம்
அண்பல் முதல்நா விளிம்புற லுடைய.
—(தொல். எழுத்து. ௮௫.)

உ ஊ ஒ ஓ ஔ என இசைக்கும்
அப்பால் ஐந்தும் இதழ்குவிந் தியலும்.
—(௸ ௮௬.)

7. இகரம ஈகாரம எகரம ஏகாரம இவை தம்முள் இனமாம். உகர ஊகார ஒகர ஓகாரங்கள் தம்மு ளினமாம்.

| | | | |
|---|---|---|---|
| எழுத்து மொழியில் | — உயர்த்தி ; | ,, | — ஒசத்தி |
| ,, | — உவகை ; | சில இடத்தில் | — ஓகை |
| தமிழில் | — உடல் ; | தெலுங்கில் | — ஒள்ளு |

அகர இகரங்களுக்கு இடையே எகரம் பிறத்தலும், அகர உகரங்களுக்கு இடையே ஒகரம் பிறத்தலும் ஒலிநூல் (*Phonetics*) கூறும். இவ்வுண்மை இலக்கண நூலார்க்கும் உடன்பாடே[8]. அவர் இவற்றைக் கலப்பொலிகள் என்பர். அந்த முக்கோணத்தில், எகர ஒகரங்கள் பிறக்குமிடங்களை முறையே அகர இகரங்களுக்கும், அகர உகரங்களுக்கும் இடையே சுட்டுவர்.

இக்கோணத்தில் உள்ளவாறு, நாவின் முன்னோக்கிய எழுச்சியால் இ, எ இரண்டும் பிறத்தலால் அவற்றை முன்னண்ண உயிர் (*front vowels*) என வகுப்பர். அவ்வாறே உ, ஒ இரண்டும் நாவின் பின்னோக்கிய எழுச்சியால் பிறத்தல்பற்றி அவற்றைப் பின்னண்ண உயிர் (*back vowels*) என வகுப்பர்.

உகர ஒகரங்களை ஒலிக்கும்போது இதழ் குவிதல் பற்றி அவற்றை இதழ்குவியுயிர் (*rounded vowels*) என்றும், ஏனையவற்றை இதழ்குவியாவுயிர் (*unrounded vowels*) என்றும் வகுக்கலாம்.

---

8. எகரமாவது அகரக்கூறும் இகரக்கூறும் தம்முளொத் திசைத்து நரமடங்கல் போல் நிற்பதொன்றாகலானும், ஒகரமாவது அகரக்கூறும் உகரக்கூறும் தம்முளொத் திசைத்து அவ்வாறு நிற்ப தொன்றாகலானும்

இந்த ஐந்து உயிரொலியும் குறுகியொலிக்கும் போது குறில் எனவும், நீண்டு ஒலிக்கும்போது நெடில் எனவும் பெயர்பெறும். குற்றெழுத்தை ஒலித்தல் அருமையாகவும் நெட்டெழுத்தை ஒலித்தல் எளிமை யாகவும் இருத்தல்பற்றி, அவற்றை அரியன என்றும் எளியன என்றும் (*tense vowels, lax vowels*) குறிப்பர்.

இப் பாகுபாடுகளுள், குறில், நெடில் என்பன அளவு (மாத்திரை) பற்றிப் பகுக்கப்பட்டவை. ஏனையவை அவற்றின் பிறப்பிடம் பற்றியும் முயற்சி பற்றியும் பகுக்கப்பட்டவை.

இவ்வாறு முதல் மொழியில் மூன்றாக இருந்த உயிர்கள் ஐந்தாய் வளர்ந்து, பிறகு குறுகியும் நீண்டும் ஒலித்தல்பற்றிப் பத்தாய்ப் பெருகின என்று கண்டோம்.[9] தமிழில் இவையே அல்லாமல், ஐ, ஔ என இரண்டு உயிரெழுத்துக்கள் உள்ளன. அவற்றை இலக்கண நூலார் சந்தியக்கரம் (*diphthong*) என்பர். அவைபற்றிப் பின்னர் ஆராய்வோம்.

ஒலிநூலார் கொள்கைப்படி யகரமும், வகரமும் அரையுயிர் (*semi-vowels*) எனப்படும்; உயிரோ டொத்தன என்பது கருத்து. உயிரொலிகள் பிறக்

9. ஆங்கிலத்தில் உயிரெழுத்துக்கள் *a, e, i, o, u* என்னும் ஐந்தே உள்ளன. ஆயின் பதினைந்து உயிரொலிகள் இன்றியமை யாதனவாக உள்ளன. இவ்வாறே எல்லா மொழியிலும் கேட்கும் உயிரொலிகள் பலவாக இருந்தும், எழுதும் உயிர் வடிவங்கள் சிலவாக உள்ளன. நுணுகி ஆராய்வார்க்கு ஐம்பதுக்கு மேற்பட்ட உயிரொலிகள் புலனாகும் என்று ஒலிநூலறிஞர் ஜோன்ஸ் கருதுகின்றார். (Daniel Jones, An Outline of English Phonetics, p. 15.)

கும்போது மூச்சு வாயின் வழியாகத் தடையின்றி வெளிவரும் என அறிந்தோம். அப்போது மிகச் சிறு தடை நிகழுமேல் யகரமோ வகரமோ பிறக்கும். இவை பிறக்கும்போது க ங முதலிய மெய்யெழுத்துப் பிறப்பில் உள்ள அவ்வளவு பெருந்தடை யில்லாமை காணலாம். ஆதலால், இவற்றை உயிரெழுத்துக் களுக்கும் மெய்யெழுத்துக்களுக்கும் இடைப்பட்ட எழுத்துக்கள் என்பது பொருந்தும். இடையினம் என்று முன்னோர் வகுத்த காரணம் இதுவாகவே இருத்தல் வேண்டும். வல்லினம் மெல்லினம் என்றற்கு இடைப்பட்டவை என்று கூறுவது பொருந் தமையும் ஈண்டுக் கருதலாம்.

யாப்பிலக்கணக்காரர் ய ர ல ழ என்னும் நான் கெழுத்துக்களும் ஆசெழுத்துக்கள் எனக் குறித்து, அவை எதுகைக்குரிய எழுத்துக்களுக்கு இடையே வரினும் எதுகையாகத் தடையில்லை என விதித்ததும் ஈண்டுக் கருதத்தக்கதே.[10]

இவற்றில் ய, வ என்னும் இரண்டையுமே ஒலி நூலார் உயிரோடொப்புமை கருதி அரையுயிர் (*semi-vowels*) எனக் கொள்வர். நாவின் முன்னேக் கிய எழுச்சியில் தடை சிறிது ஏற்படின், யகரம் பிறத் தலால், இகரத்திற்கும் யகரத்திற்கும் உறவு உண்டு. இன்னும் தமிழ் மக்கள் உயிரெழுத்தாகிய இகரத்தை உயிர்மெய்யாகிய 'யி' போல் தவருக ஒலித்தலும்,

10. இனி ஆசிடை யெதுகைக்குச் சொல்லுமாறு :
" யரலழ என்னும் ஈரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பின்
ஆசிடை யெதுகை என் றறிந்தனர் கொளலே."
—யாப்பருங்கல விருத்தி. 37.

சிலர் அவ்வாறே தவருக எழுதுதலும் காண்க. நாவின் பின்னேக்கிய எழுச்சியில் தடை சிறிது ஏற்படின் வகரம் பிறத்தலால் உகரத்திற்கும் வகரத்திற்கும் உறவு உண்டு. உயிரொலிகள் சேர்ந்தொலிக்கும் போது பிறக்கும் உடம்படு மெய்கள் என முன்னேர் கொண்ட எழுத்துக்கள் யகரம் வகரம் ஆகிய இரண்டு இடையின எழுத்துக்களே. இவை உடம்படு மெய்யாக வரும் முறையும் இவற்றின் இயல்பை விளக்குகின்றது.

**மூக்கின உயிர்** (*Nasalisation or Euphonic Nunnation*)

இதுவரை ஆராய்ந்த உயிரொலிகள் எல்லாம் வாயின் வழியாக மூச்சு வெளிப்படுதலால் பிறந்தவையே. இவை பிறக்கும்போது உண்ணக்கு மூக்கு வழியைத் தடுத்து நிற்கும். ஆதலால் மூச்சு மூக்கின் வழியாகச் செல்வதில்லை. சில சமயங்களில் உண்ணக்கு அவ்வாறு தடுக்காமல் இயற்கை நிலையில் நிற்கும். அப்போது மூச்சின் ஒரு பகுதி வாய் வழியாகவும், மற்ருெரு பகுதி மூக்கு வழியாகவும் செல்லும். அப்போது பிறக்கும் உயிரொலிகளை மூக்கின உயிர் (*Nasalised vowels*) என்பர்.

| | |
|---|---|
| தமிழிலக்கியத்தில் | 'தொடு' |
| கன்னடத்தில் | 'தோடு' |
| இக்காலத் தமிழில் | 'தோண்டு' |
| பூடு > | பூண்டு |
| மோதிரம் > | மோந்திரம் |

திராவிட முதல் மொழியில் மர என்பதே சொல் என்றும், இறுதியுயிர் மூக்கினமாக மாறித் தமிழில் மரன் என்றும் மரம் என்றும் ஆயிற்று என்றும், தெலுங்கில்

மரானு>ம்ரானு>மானு என ஆயிற்று என்றும் கூற லாம்.

| கன்னடம் | தமிழ் |
|---|---|
| இரடு | இரண்டு |
| இருவை | எறும்பு |
| கறு | கன்று |
| மூறு | மூன்று |

**உயிரின் சிறப்பியல்புகள், மாறுதல்கள் :**

அ, ஆ :

அ—குறில் ஆ—நெடில்

இரண்டு குறில் சேர்ந்ததே நெடில் என்பர் கால்டுவெல்.[11] ஆனால் அது தொல்காப்பியனார் முதலானோர் கருத்துக்கும் இக்காலத்து மொழிநூலறிஞர் கருத்துக்கும் மாறாக உள்ளது. நெடிலை ஒலிக்கும் முயற்சி வேறு; குறிலுக்குரிய முயற்சி வேறு. அவற்றின் ஒலிப்பிறப்பே வேறுபாட்டை நன்கு தெரிவிக்கின்றது. அ-அ எனக் குறிலை இருமடங்கு நேரம் ஒலிப்பதால் நெடில் பிறக்காததால் கால்டுவெல் கருத்துப் பொருந்தவில்லை.

உயிரெழுத்துக்களில் அகரம் அடிக்கடி மாறுகின்றது; காரணம் அதனை ஒலித்தல் அருமையாக இருத்தலேயாகும். பல இடங்களில் அஃது எகரமாக மாறுகின்றது.

11. Caldwell, A Comparative Grammar of Dravidian Languages, p. 133.

(வடமொழி) ஜப > செபம் (தமிழில்)
சா (பகுதி) > செத்தால் (சொல்லாகும்போது)

சகர மெய் அகரத்தோடுகூடி மொழிமுதல் ஆகாது என்பர் தொல்காப்பியனார். அஃது அவர் காலத்துத் தமிழியல்பு. மற்ற மொழிகளில் மொழிமுதலில் அகரம் மாறுவதில்லை. மொழியிறுதியில் நிற்கும் **அகரம்** மாறுகின்றது.

| தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|
| கடை | கட | கட | கடெ |
| கரை | கர | கர | கரெ |
| அவை | அவி | அவ | அவு |
| சில | | | கெலவு |
| தலை | தல | தல | தலெ |

நெடில் ஆ, ஓ என மாறுகின்றது. அது பெரும்பாலும் மகரத்தினை அடுத்து வரும்பொழுதே ஆகும். மகரம் இதழ்பற்றிப் பிறப்பதாகலால், ஆகாரம் இதழ் குவிந்து பிறக்கும் ஓகாரமாக மாறுகின்றது. இது போன்ற மாறுதல்களை இதழ்பற்றிய மாறுதல் (*Labialisation*) என்பர். மலையாளத்தில் குறில் அகரமும் இவ்வாறு மாறும் (கும்பம்>கும்பொம்). 'ஆ ஓ ஆகலும் செய்யுளுள் உரித்தே' எனத் தமிழிலக்கணம் குறிப்பதும் இதனையே. (வந்தாம்>வந்தோம். வருவாம்>வருவோம்.)

**இ, எ :** இவை ஓரினம்.

(இகரம் எகரமாதல் முன்னர்க் கண்டோம்.)

**குற்றியலிகரம் ;**

ரம் எனப்படும். அதன் ஒலி அளவு அரை மாத்திரை. குற்றியலுகரம் யகர முதன்மொழியோடு புணரும் போது, குற்றியலிகரமாக ஒலிக்கும். நாகியாது வரகியாது முதலிய தொடர்களில் குற்றியலிகரம் காண்க. இவற்றைப் பண்டைக் காலத்தில் புள்ளியிட்டு வேறுபடுத்தினர்.[12]

உ, ஊ : இவை ஓரினம்.

(உகரம் ஒகரமாதல் முன்னர்க் கண்டோம்.)

**குற்றியலுகரம் :**

உயிர்க்குற்றெழுத்தாகிய உகரம் வேறு; சார்பெழுத்தாகிய குற்றியலுகரம் வேறு. இதுவே தொல்காப்பியனார் கருத்து. கால்டுவெல் அவ்வாறு கருதவில்லை. குறிலாகிய உகரம் உயிரெழுத்துக்களுள் மிக எளியது என்றும், நிலைபேறில்லாதது என்றும் கூறி, இதுபற்றியே அஃது ஒலிநயத்திற்காகப் பல சொற்களின் இறுதியில் சேர்க்கப்படுகின்றது என்றும் அவர் கருதுகின்றார்.[13]

---

12. குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யா என் சினைமிசை உரையசைக் கிளவிக்(கு)
ஆவயின் வருஉம் மகரம் ஊர்ந்தே.

புணரியல் நிலையிடைக் குறுகலும் உரித்தே
உணரக் கூறின் முன்னர்த் தோன்றும்.

யகரம் வருவழி இகரம் குறுகும்
உகரக் கிளவி துவரத் தோன்றாது.

—தொல். எழுத்து ௩, ௨, ௪௧௦.

13. Short u is of vowels the weakest and lighest, and is largely used, especially at the end of words, for euphonic purposes, or as a help to enunciation. (Caldwell, A Comparative Grammar of Dravidian Languages, p. 134).

தெலுங்கு மொழியில் ஒவ்வொரு சொல்லும் உயிரீருகவே இருக்கவேண்டும் என்பது இலக்கணம். இயல்பாக உயிரீறு பெருத சொற்களின் இறுதியில் உகரம் சேர்க்கப்படுகின்றது. (கண்—கன்னு, மண—மன்னு). புதுக்கன்னடத்தில் இவ்விதி உள்ளது. அம்மொழியில் அகரவீருக உள்ள சொற்களுக்கும் உகரம் சேர்க்கப்படுகின்றது. (சில>கெல>கெலவு. பல>பலவு).

தமிழில் வல்லின மெய்கள் ஈருக வரும்போதே குற்றியலுகரம் ஒலிக்கப்படும். வல்லின மெய்யினை மொழியிறுதியில் ஒலித்தல் அருமையாதலால், இவ்விதி முற்றிலும் பொருத்தமானதே.

"நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே"[14]

என்பது தொல்காப்பியம். இக்காலத்துப் பேச்சு மொழியிலோ வல்லின ஈறே அல்லாமல், மெல்லின இடையின ஈருக வரும் சொற்களுக்கும் குற்றியலுகரம் வருகின்றது எனலாம். (மண்ணு, பொன்னு, கொள்ளு).

இலக்கியத்தில் 'சொல்லு' முதலிய சொற்கள் உள்ளன. இந்த இறுதியுகரம் ஐரோப்பிய மொழிகளில் இல்லாத ஒன்று. இது வடமொழி ஒலியமைப்பிலும் காணப்படாதது. 'வாக்' முதலான வடசொற்களும் தமிழில் புகும்போது இக்குற்றியலுகரம் பெறுகின்றன. (வாக்>வாக்கு)

கால்டுவெல் கூறுமாறு இக்குற்றியலுகரம் ஒலிநயம் காரணமாக (*Euphonic purpose*) வருவது என்

பதைவிட, முயற்சி எளிமை (*Economy of effort*) காரணமாக வருவது என்பது மிகப் பொருத்தம். காட், நாட், பாக் என்பவற்றைவிடக் காடு, நாடு, பாக்கு என்பவை ஒலிக்கும் முயற்சிக்கு எளியனவாக உள்ளன.

இக் குற்றியலுகரத்தின் ஒலியளவு (மாத்திரை) மிகக் குறுகியது என்றும், அரை மாத்திரை என்றும் இலக்கண நூலார் கூறுவர். நச்சினார்க்கினியர் என்னும் உரையாசிரியர் மற்றுமொரு வேறுபாடும் கூறுவர். உகரத்திற்கு உள்ள இதழ் குவிக்கும் முயற்சி குற்றியலுகரத்திற்கு இல்லை என்பர்.[13]

மலையாளத்தில் குற்றியலுகரம் நிற்றற்குரிய இடத்தில் அகரக் குறில் நிற்பதுண்டு. குற்றியலுகரம் மலையாளத்திலும் உண்டு. அது சில சொற்களில் அரை மாத்திரையும் பெறாமல் வரும்போலும். அதனால் அதனை உகர வடிவிற்றாக எழுதாமல் அதற்குரிய மெய்யெழுத்தின்மேல் ஒரு புள்ளியோ சிறு வட்டமோ வரையப்படும். பண்டைத் தமிழிலும் குற்றியலுகரம் இக்காலத்தில் எழுதுமாறு எழுதப்படாமல், புள்ளியிட்டு எழுதப்பட்டு வந்தது என்பது முன்னர்க் கண்டோம்.

**எ, ஏ; ஒ, ஓ.**

குற்றெழுத்துக்களாகிய எகரமும் ஒகரமும் வடமொழியில் இல்லை. ஆனால் அதன் இனமாகிய ஐரோப்பிய மொழிகளில் இருந்திருக்கின்றன. திராவிட மொழிகளில் அவை பெருவழக்கின; திராவிட மொழிகளுக்கு மிக மிக இன்றியமையாதன.

13. தொல். எழுத்து. கூஅ நச்சினார்க்கினியர் உரை.

திராவிட மொழிகளில் எகர ஒகரக் குறில்களுக்கும் அவற்றின் நெடில்களுக்கும் உள்ள வேறுபாடு ஒலிநயம் பற்றியோ, புணர்ச்சி வேறுபாடு பற்றியோ அமைந்ததன்று. அடிச்சொற்கள் எனப்படும் பகுதிகளைப் பிரித்துணர்தற்கு இவ்வேறுபாடு வேண்டும். ஆதலின் இவ்வேறுபாடு மொழிக்கு அடிப்படையாக நிற்கின்றது :

| | | |
|---|---|---|
| தெள் | — | தெளிவு |
| தேள் | — | நச்சுப்பூச்சி |
| தொல் | — | பழமை |
| தோல் | — | உடல்மேலுள்ள தோல் |

கொல் வேறு ; கோல் வேறு.
மென்மை வேறு ; மேன்மை வேறு.

## ஐ - சந்தியக்கரம்

ஓர் உயிரொலித்த பிறகு மற்றோர் உயிரினை ஒலிக்கும்பொருட்டு நா முதலிய உறுப்புக்கள் மாறும் இடைக்காலத்து மிடற்றுமுயற்சி (*voice*) சந்தியக்கரம் (*dipthong*) ஆக அமையும். எனவே, சந்தியக்கரம் என்பது இரண்டுயிர்களின் கூட்டொலி யன்று ; இரண்டுமல்லாத தனியொலியாகும்.[14]

வடமொழியிலுள்ள ஐ சந்தியக்கரமாகும். தமிழிலுள்ள ஐ சந்தியக்கரமா என்பது ஐயுறக் கிடக்கின்றது. அஃது அகரவுயிரும் யகரமெய்யுமாக யாண்டும்

14. The term dipthong is applied to the emission of two vowel sounds in one and the same syllable with one and the same breath impulse, giving to the untrained ear the impression of a single sound. (G. Noel-Armfield, General Phonetics, p. 35).

கொள்ளத்தக்கதாக இருக்கின்றது.[15] உரைநடை, செய்யுள், பேச்சு எங்கும் இதைக் காணலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| உரைநடை | — | ஐயர் | — | அய்யர் |
| செய்யுள் | — | கைவேல் | — | கய்வேல் |
| பேச்சு | — | தை | — | தய் |

பனங்காடு (பனை + காடு, பனய் + காடு, பனங் காடு) முதலிய சொற்களின் புணர்ச்சியும், நாரை (நாரய் > நாராய்) முதலிய சொற்களின் விளிவேற்றுமையின் மாறுதல்களும், இக்கருத்தை வலியுறுத்துகின்றன.[16]

‘இகர யகரம் இறுதி விரவும்’ என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற்கு நாய் — நாஇ எனச் சான்று

---

15. ஐய்வனம் அய்வனம் என வரும் என உரையாசிரியர்கள் சான்று காட்டி,

அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்
—தொல். எழுத்து. ௫௬

என்னும் சூத்திரத்தினை விளக்குதல் காண்க.

16. ஐகார வீற்றுப் பெயர்கள் விளியேற்கும் முறைமையை நோக்கினும், ஐ (முன்னிலை ஒருமை விகுதி) என்பது அய் என்பதன் திரிபே என்பது போதரும். அன்னை—அன்னாய்; கிள்ளை—கிள்ளாய் என்னுமிடங்களில் ஐகாரம் ஆய் எனத் திரிந்துளது என்பது அமைதியன்று. தோன்றல்—தோன்றால்; மக்கள்—மக்காள் என்பவற்றில், லகர ளகர வீற்றுப் பெயர்களின் ஈற்றயல் அகரம் ஆகாரமாயிற்று என்பதுபோல, அன்னாய், கிள்ளாய் என்பவற்றிலும் யகர வீற்றுப் பெயரின் ஈற்றயல் அகரம் ஆகாரம் ஆயிற்று என்றலே முறைமையாகும். என்னெனின், யலளக்கள் ஓரினங்களாகலின், அவ்வீற்று மொழிகளெல்லாம் விளிக்கண் ஒரே விதி பெறுதலே முறைமை என்க. இவ்வாறாயின், அன்னை என்பது அன்னய் என யகர வீறாகும். அதன் ஈற்று அய், ஆய் என நீண்டு விளிக்கண் வருதல் இயல்பே. இக்கூறியவற்றால், ஐ என்பது அய் என்பதன் திரிபே என்பது நன்கு விளங்கும்.

—வே. வேங்கடராஜுலு ரெட்டியார், திராவிட மொழியின் மூவிடப் பெயர், ப. 52, 53.

காட்டினர் இளம்பூரணர்.[17] எனவே, தலய், தலஇ என்பன தலை என்னும் சொல்லின் வடிவங்களாகக் கருதப்பட்டன. அதன் காரணம் 'அகர இகரம் ஐகாரமாகும்' என்று சந்தியக்கரமும் உடன் கருதப் பட்டமையே ஆகும்.[18]

டாக்டர் கால்டுவெல், அ இ என்னும் இரண்டும் ஐகாரமாயின எனக் கொள்ளாமல், எகர இகரம் இரண்டும் ஐகாரமாயின என்பர். தலை என்னும் சொல், தமிழில் தலெ என்று ஒலிக்கப்படும். மலை யாளத்தில் தல என்று உள்ளது. கன்னடத்தில் தலெ என்று உள்ளது. எனவே, எ இ இரண்டும் சேர ஐகாரம் பிறந்தது எனக் கால்டுவெல் கூறுவர். வரி வடிவில் கிரந்தத்திலும் மலையாளத்திலும் இரண்டு எகரங்களால் ஐகாரத்தைக் குறித்தலும், தெலுங்கு கன்னடத்தில் எகர இகரங்கள் சேர்ந்த வடிவால் எழுதுதலும் அவர் சான்றாகக் காட்டுவர்.[19] வரிவடிவு ஒலியின் உண்மையைப் புலப்படுத்தாது. ஆதலின் இச்சான்று கொள்ளத்தக்கது அன்று.

### ஔ - சந்தியக்கரம்

இது தமிழுக்கும் ஏனைய திராவிட மொழிகளுக் கும் உரியதோர் எழுத்து அன்று என்றும், வடமொழி யைப் பின்பற்றி நுழைக்கப்பெற்றதே என்றும் கால்டுவெல் கருதுகின்றார்.[20] வடசொற்களில் இது

17. தொல். எழுத்து. ருச
18. தொல். எழுத்து. ருஅ
19. A Comparative Grammar of the Dravidian Languages, p. 133.
20. ibid. p. 136.

மிகுதியாக வழங்குகின்றது. ஔகாரம் வரும் தமிழ்ச் சொற்கள் மிகச் சிலவே; அவையும் அகரஉயிரும் வகரமெய்யுமாக எழுத இடந்தருகின்றன.[21] ஔவை என்னும் சொல் அவ்வை என்றும் எழுதப்பட்டு வருகின்றது. அவ்வை, அம்மை என்பதன் திரிபாதலால், ஔவை என்று எழுதும் முறை காலத்தால் பிந்தியது எனலாம். 'சௌக்கியம்' முதலிய வடசொற்களையும் 'சவுக்கியம்' முதலான வடிவு களில் எழுதும் வழக்கும் காண்க.

**ஆய்தம் ஃ**

வடமொழியிலுள்ள 'ஹ' தமிழ்மொழியில் இல்லை. ஆயினும் அதுபோன்ற நுண்ணொலியைத் தமிழில் ஆய்தம் தரவல்லது. ஆய்தம் எனினும் நுண்ணிது எனினும் ஒக்கும். ஆய்தம் மிகுந்த வண்ணத்தைத் தொல்காப்பியனார் நலிபுவண்ணம் என்றதன் கருத்தும் இதுவே.[22] இது வடமொழி விஸர்க்கத்தோடொத் தது என்றும், இலக்கணக்காரர் படைப்பெனச் சிலர் கூறுவர் என்றும் கால்டுவெல் எழுதியுள்ளார்.[23] தொல்காப்பியனார் இதனைச் சார்பெழுத்தாகக் கூறு வதனாலும் புள்ளிவடிவிற்று என்பதனாலும் இலக்கிய இலக்கணங்களுள் யாண்டும் காணப்படுவதாலும் இது தமிழ்க்கே சிறப்பாக உரிய ஒலியாகும்.

---

21. "அகரத்தின் பின்னர் உகரமேயன்றி வகரப் புள்ளியும் ஔகாரம் போல வருமென்று கொள்க" என்று நச்சினார்க்கினியர் எழுதி, "ஔவை அவ்வை என வரும்" என உதாரணமும் காட்டுகின்றார். (தொல். எழுத்து. ருசு.)

22. நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்.
—தொல். பொருள். ருஙங

23. A Comparative Grammar of the Dravidian Languages, p. 130.

**அளபெடை**

செய்யுளில் இசைநீட்டம் வேண்டும்போது உயிரெழுத்து நீண்டொலிக்கும். அப்போது அதன் அறிகுறியாக உயிர்க்குறில் அதனை அடுத்து எழுதப்பெறும். (ஆஅ, கோஒ என). இதனை அளபெடை (ஒலியளவின் நீட்டம்) என்பர்.

> "நீட்டம் வேண்டின் அவ்வளபுடைய
> கூட்டி எழூஉதல் என்மனார் புலவர்
> "குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
> நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே"[24]

என்பன தொல்காப்பிய விதிகள்.

இவ்வாறு குற்றெழுத்து அடுத்து வரும்போது அவ்வுயிர்களுக்கிடையே உடம்படுமெய் யகரமோ வகரமோ வாராது. காரணம், அது தனியொலியாக நில்லாது, முன் நின்ற நெட்டெழுத்தின் நீட்சியாகவே நிற்றலாம். ஆதலின்,

> தெய்வந் தொழாஅள்[25]

என நிற்கும்.

**மாற்றும் உயிராற்றல்** (*Harmonic sequence of vowels*)

தானி + கு = தானிகி

ஆவு + னி = ஆவுனு

இவை இரண்டும் தெலுங்கு மொழியின் சொற்கள். (i) 'கு' என்னும் நான்கனுருபு 'கி' என்று திரிந்தது. காரணம் 'தானி' என்னும் சொல்லில் உள்ள இகரவுயிரின் ஆற்றலே. (ii) 'னி' என்னும்

24. தொல். எழுத்து. சூ, சக.
25. திருக்குறள். 55.

சாரியை 'னு' என்று மாறிற்று. காரணம் 'ஆவு' என்னும் சொல்லில் உள்ள உகரவுயிரின் ஆற்றலே. கத்திக்குப் பிடி இல்லை, பெட்டிக்குச் சாவி இல்லை என்ற வாக்கியங்களைப் பேசும்போது, கத்திக்கி, பெட்டிக்கி என ஒலித்தல் இத்தகைய மாறுதலே யாகும்.

இவ்வாறு இகரம் உகரம் என்னும் இரண்டு உயிர்களுக்கும் ஏனைய உயிரெழுத்துக்களைத் தம்போல் மாற்றும் ஆற்றல் உள்ளது. இது தெலுங்கில் உள்ள வாறு துளுமொழியிலும் ஓரளவு காணப்படுகின்றது ஏனைய திராவிட மொழிகளில் இல்லை என்று கூறிவிட முடியாது. ஆயினும் தெலுங்கில்தான் பெருவழக்கிற்ருக உள்ளது.

இது துருக்கி, மங்கோலியம், பின்னிஷ் (*Turkish, Mangolian, Finnish*) முதலான சித்திய மொழிகளி லும் காணப்படுகிறது. ஆனால் ஐரோப்பிய மொழி களில் இல்லை.

மேற்கண்ட இரு சொற்களிலும் உள்ள உயி ரொலிக்கு ஏற்ப, உருபும் சாரியையும் மாறி அமைந் தன. சொல்லில் உள்ள உயிர் அவ்வாறு மாற்றினமை கண்டோம். ஆனால், சேர்க்கப்படும் இடைச்சொல் லின் உயிர், சொல்லின் உயிரொலியை அவ்வாறு மாற்றியமைத்தலும் உண்டு.

கத்தி - சொல்

லு - தெலுங்கில் பன்மை உணர்த்தும் இடைச் சொல்; கத்தி + லு = கத்திலு என்றோ கத்திலி என்றோ ஆகாமல் கத்துலு என்றாகும்.

கத்தி + கு = கத்திகி என்றாகும்.
ஆனால், கத்தி + லு + கு = கத்துலகு என்றாகும்.

**உயிர் இடம் பெயரல் :** (*Euphonic displacement of vowels*)

மூன்று உயிரொலிகளைக்கொண்ட உயிர் முதன் மொழியாக வரும் தெலுங்குச் சொற்களில் ஒரு புதுமையான முறையில் உயிரொலி இடம் பெயர்ந்து நிற்கக்காண்கின்றோம்.

(அவர் >) அவரு > அ + வ் + ரு > வ் + அ + ரு
> வ் + ஆ + ரு > வாரு
இவரு > இ + வ் + ரு > வ் + இ + ரு
> வ் + ஈ + ரு > வீரு

அதி, இதி முதலான சொற்களிலும் மற்றோ ரிடைச்சொல் சேர்ந்து உயிரொலி மூன்றாகும்போது இம்மாறுதல் காணப்படுகின்றது.

அதி + னி > அதினி > தானி
இதி + னி > இதினி > தீனி

இவற்றில் காணும் மாறுதல் என்ன ? முதலில் உள்ள உயிர் இரண்டாமிடத்திற்குப் பெயர்ந்து சென்று, அங்குள்ள உயிரைக் கெடுத்து, அதற்கீடாக நீண்டு நிற்றலே இம் மாறுதலாகும்.

மேற்காட்டிய எடுத்துக்காட்டுக்கள் அனைத்தும் சுட்டுப்பெயர்களேயாம். கீழ்வருவன ஏனைப் பெயர் களாம் :

உரல் > உரலு > ஒரலு > ரோலு
உகிர் > உகிரு > ஒகிரு > கோரு

இத்தகைய மாறுதல் நிகழும் சொற்களை ஆராயு மிடத்து இடையிலுள்ள மெய் ர, ல, வ, என்ற இடையின மெய்களாகவே பெரும்பாலும் இருக்கக் காண்கின்றோம். அவற்றின் திட்பமின்மையே இம் மாறுதலுக்குக் காரணம் எனலாம்.

இவ்வொலி மாறும் விதியின் உண்மையை உணர்ந்தபின், பல தெலுங்குச் சொற்கள் இவ்வாறு உயிர் பெயர்ந்து திரிந்த திரிபுகளாக இருத்தல் புலனாகின்றது.

தமிழில் ஆகாது > காது - தெலுங்கில்
தமிழில் இலது > எலது > லேது - தெலுங்கில்
தமிழில் உள் > ஒல் > லோ - தெலுங்கில்
(அதனுள் > தானிலோ)

## உடம்படு மெய் (*Prevention of hiatus*)

வடமொழியில் பெரும்பாலும் நிலைமொழிகளிலும் வருமொழிகளிலும் உள்ள இரண்டுயிரும் ஒன்று சேர்ந்து ஒருயிராக மாறி ஒலிக்கும். தமிழில் அது மிகச் சில சொற்களில் மட்டுமுள்ளது.

வடமொழியில் :— மட + அதிபதி > மடாதிபதி
தமிழில்

சிறுபான்மை :— பரு + அரை > பராரை
பெரும்பான்மை :— சில + அணி > சிலவணி

ஒலித்தல் முயற்சியை எளிதாக்க வேண்டியும், பகுதி இடைநிலை முதலியவற்றைத் தெளிவாகக் காக்கவேண்டியும், தமிழ் முதலாய திராவிட மொழிகளில் எல்லா உயிரொலியும் தனித்தனியே ஒலிக்குமாறு பாதுகாக்கப்பட்டுள்ளன. ஆயினும், விட்டிசை

ஒலித்தல் முயற்சியை அரிதாக்குமாதலின், அது நேராதவாறு, இரண்டுயிர்க்கும் இடையே உயிரோ டொத்த இடையினமாகிய யகரத்தையோ வகரத் தையோ சேர்த்து ஒலித்தல் மரபு. அந்த யகரம் அல்லது வகரத்திற்கு உடம்படுமெய் என்பது பெயர்.

பல + அரசர்　　　மணி + அழகு
இஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன்இவ் இருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்[26]

என்ற விதியால் எங்கெங்கு யகரம், எங்கெங்கு வகரம் என்பது அறியப்படும். சிறுபான்மை மாறாக வரும் இடமும் உண்டு (ஆயிடை, கோயில் முதலியன). யகர வகரமாகிய இவ்விரு மெய்களையும் ஆங்கில ஒலி நூலார் அரையுயிர் (*semi-vowels*) என்பர். அவை உயிரிடையே வரும் மெய்யாதற்குற்ற தகுதியை அது புலப்படுத்துகின்றது.

தெலுங்கில் 'ன்' உடம்படுமெய்யாக உள்ளது என்றும், தமிழிலும் பொருளன, காட்டின முதலிய சொற்கள் பொருளவ, காட்டிய என்பவற்றோடொத்

26. நன்னூல். எழுத்து. 162.

தொல்காப்பியனார் இவ்வாறு வரையறை செய்யாது பொது வாக விதித்தார்:

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருவுகொளல் வரையார்.
—தொல். எழுத்து. ௧௪௦

இவ்வுடம்படு மெய் இன்றியமையாதது எனக் கொள்வதற்கில்லை. "வரையார் என்றதனான் உடம்படுமெய் கோடல் ஒருதலையன்று" என நச்சினார்க்கினியர் குறித்தல் காண்க.

தவை என்றும் கூறுவர் கால்டுவெல்.[27] அந்த னகரம் அன், இன் என்னும் சாரியைகளில் உள்ள மெய்யே யாகும்; உடம்படுமெய் அன்று.

தெலுங்கில் மகரமும் உடம்படுமெய் என்பர். அது வகரத்தின் திரிபே. வகரம் மகரமாதல் ஒலி நூலார்க்கு உடன்பாடே. தமிழிலும் 'என்னவோ' என்பதை 'என்னமோ' என்று ஒலித்தல் காண்க.

கால்டுவெல், 'காரும்' என்ற சொல்லில் ரகரம் உடம்படு மெய் என்பர். (கா + உம் > காரும்.) தெலுங்கில்,

பொத + இல்லு > பொதரில்லு (இலேவீடு)

என்றாகும். தெலுங்கில் சில இடங்களில் ககரம் உடம் படுமெய்யாம்:

பத + ஒண்டு > பதகொண்டு (பதினொன்று)
அறுவர் (தமிழ்) > ஆறுகுரு
அவர் (தமிழ்) > வாரு > காரு.

கூ' முதலான கலைவளமற்ற மொழிகளிலும், உடம்படுமெய் புணரும் இம்முறை அமைந்துள்ளது. விட்டிசையைத் (*hiatus*) தடுப்பதில் திராவிட மொழிக்குள்ள ஆற்றலையும் ஒலிநய உணர்வையும் இதனால் அறியலாம்.

---

27. A Comparative Grammar of the Dravidian Languages, p. 177.

# மெய்யெழுத்துக்கள்

## பாகுபாடு

தமிழிலக்கண நூலார் மெய்யெழுத்துக்களை வல்லினம் மெல்லினம் இடையினம் என வகுப்பர்.

வல்லினம்—க ச ட த ப ற (*Suras*)
மெல்லினம்—ங ஞ ண ந ம ன (*Nasals*)
இடையினம்—ய ர ல வ ழ ள (*Liquids*)

வல்லினம் மார்பையும் மெல்லினம் மூக்கையும் இடையினம் மிடற்றையும் இடமாகக் கொண்டு பிறப்பன என்பது அவர்களின் கருத்து.[1]

ஒலி நூலார் மெய்களைப் பாகுபாடு செய்யும்போது, ஒலிக்கும் கருவிகளாகிய இதழ் பல் அண்ணம் முதலியவற்றைக்கொண்டு பகுப்பர். அம்முறைப்படி தமிழ் மெய்யெழுத்துக்களின் பாகுபாடு வருமாறு :—

1. இதழினம்—ப, வ, ம (*labials*)
2. பல்லினம்—த, ந (*dentals*)
3. முன்னண்ணவினம்—ச, ஞ, ய (*palatals*)
4. பின்னண்ணவினம்—க, ங (*velar sounds*)
5. உண்ணாக்கினம்—ர, ழ (*uvular sounds*) Retroflex

1. அவ்வழி,
ஆவி இடைமை இடம்மிட றாகும்
மேவும் மென்மை மூக்(கு) உரம்பெறும் வன்மை.
(நன்னூல். எழுத்து. 75).

6. வளைநாவினம்—ட, ண, ள (*cacuminals*)[2]. தொல்காப்பியனார் இவற்றின் பிறப்புப் பற்றிக் கூறுவது இப்பாகுபாட்டுக்கு இயைந்ததாக உள்ளது. அவர் கூறுமாறு :-

| | | |
|---|---|---|
| க ங | — | அடிநாவும் அடி அண்ணமும் உறுதல் |
| ச ஞ | — | இடைநாவும் இடையண்ணமும் உறுதல் |
| ட ண | — | நுனிநாவும் நுனியண்ணமும் உறுதல் |
| த ந | — | நாநுனி பல்லினடியை ஒற்றல் |
| ற ன | — | நாநுனி அண்ணம் ஒற்றல் |
| ர ழ | — | நாநுனி அண்ணம் வருடல் |
| ல | — | நாவிளிம்பு வீங்கி அண்பல்லடியை ஒற்றல் |
| ள | — | நாவிளிம்பு வீங்கி அண்பல்லடியை வருடல் |
| ப ம | — | மேலிதழும் கீழிதழும் இயைதல் |

---

2. Apart from the division into the two groups "breathed" and "voiced," consonants may be classified (i) according to the organs which articulate them, (ii) according to the manner in which the organs articulate them.

If we classify them according to the organs which articulate them, we distinguish six main classes.

I. Labial or lip sounds

II. Dental sounds, viz., sounds articulated by the tip or blade of the tongue against the upper teeth or teeth ridge.

III. Palatal sounds, viz., sounds articulated by the front of the tongue against the hard palate.

IV. Velar sounds, viz., sounds articulated by the back of the tongue against the soft palate.

V. Uvular sounds, viz., sounds articulated by the back of the tongue and the extremity of the soft palate of the uvula.

VI. Glottal or laryngal sounds, viz., sounds articulated in the glottis. (D. Jones, An Outline of English Phonetics, pp. 13, 14.)

வ — மேற்பல்லும் கீழிதழும் இயைதல்.
ய — மிடற்றுவளி அண்ணம் கண்ணுறல்.[3]

மெய்யெழுத்துக்களின் பிறப்பு முயற்சியை நோக்கியும் ஒலிநூலார் அவற்றைப் பாகுபாடு செய்வர். அம் முறை வருமாறு:-

1. வெடியினம்—க, ச, ட, த, ப (*Plosives*) (மூச்சுத் தடைப்பட்டு வெடிபோல் வெளியாதல்).

2. மூக்கினம்—ங, ஞ, ண, ந, ம, ன (*Nasals*) (மூச்சு மூக்கின் வழியாக வெளியாதல்).

3. பிரிவளியினம்—ல, ள (*Lateral*) (மூச்சு வெளிப்படுங்கால் வாயிடையே நாக்குத் தடுத்து நின்று அம்மூச்சைப் பிரித்து வெளிப்படுத்தல்).

---

3. ககார ஙகாரம் முதல்நா அண்ணம் (தொல். எழுத்து அகூ).
சகார ஞகாரம் இடைநா அண்ணம் (ஷை—கூ0)
டகார ணகாரம் நுனிநா அண்ணம் (ஷை—கூக)
அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின்
நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத்
தாமினிது பிறக்கும் தகார நகாரம். (ஷை—கூஉ)
அணரி நுனிநா அண்ணம் ஒற்ற
றஃகான் னஃகான் ஆயிரண்டும் பிறக்கும். (ஷை—கூச)
நுனிநா அணரி அண்ணம் வருட
ரகார ழகாரம் ஆயிரண்டும் பிறக்கும். (ஷை—கூரு)
நாவிளிம்பு வீங்கி அண்பல் முதலுற
ஆவயின் அண்ணம் ஒற்றவும் வருடவும்
லகார ளகாரம் ஆயிரண்டும் பிறக்கும். (ஷை—கூசு)
இதழியைந்து பிறக்கும் பகார மகாரம். (ஷை—கூஎ)
பல்லிதழ் இயைய வகாரம் பிறக்கும். (ஷை—கூஅ)
அண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகரம் பிறக்கும். (ஷை—கூகூ)

4. உரப்பினம்—ற (*trilled or rolled consonants*)
(ட்ர் என்பது போல் நாவில் ஒருவகை அசைவுடன் மூச்சு வெளியாதல்)

5. உயிர்ப்பினம்—தமிழில் இல்லை (*Fricative*)
(உஸ்-போலாகும், ஸ — இவ்வகையைச் சாரும்).

6. அரையுயிர்—ய, வ (*semi-vowels*)
(உயிருமாகாது, மெய்யுமாகாது இடையினமாக வருவன). [4]

---

4. If we classify consonants according to the manner in which the organs articulate them, we distinguish six main classes.

I. Plosive consonants, formed by completely closing the air passage and suddenly removing the obstacle, so that the air escapes making an explosive sound...

II. Nasal consonants, formed by completely closing the mouth at some point, the soft palate remaining lowered so that the air is free to pass out through the nose...

III. Lateral consonants, formed by an obstacle placed in the middle of the mouth, the air being free to escape at the sides...

IV. Rolled consonants, formed by a rapid succession of taps of some elastic organ...

V. Fricative consonants, formed by narrowing the air passage at some point so that the air escapes making a kind of hissing sound (f, z).

VI. Semi vowels, or vowels used in the capacity of consonants. (D. Jones, An Outline of English Phonetics, p. 14.)

க ச ட த ப ற என்பவற்றைத் தொல்காப்பியனார் வல்லினம் என வகுத்தது பொருந்தியதாகும்.[5] ஆயின், ங ஞ ண ந ம ன என்பவற்றை மெல்லினம் என்பதைவிட மூக்கினம் என வழங்குதல் ஒலிநூலுக்கு இயைவதாகும். மெல்லினம் என்ற பெயரின் காரணத்தை விளக்கிய நச்சினார்க்கினியர், "மெல்லென்றிசைத்தலானும் மெல்லென்று மூக்கின் வளியாற் பிறத்தலானும் மெல்லெழுத்தாயிற்று" என்று எழுதியுள்ளார்.[6] அக்கடல் என்னுமிடத்தில் ககரம் வல்லொலியே; அதன் மெல்லொலி அங்கவை என்பதன் ககரத்தில் உள்ளது. ஆதலின், ககரம் முதலியவற்றை வெடியினம் எனக் கொள்ளும் ஒலிநூல், அவற்றையே இரண்டிரண்டாகப் பிரித்து வல்லொலியும் மெல்லொலியும் (*surds and sonants*) ஆகக் கொள்ளும். ங ஞ ண ந ம ன என்பவற்றை மூக்கினம் (*nasals*) எனக் கொள்ளும்.

ய ர ல வ ழ ள என்னும் ஆறனையும் இடையெழுத்தெனக் கொண்டார் தொல்காப்பியனார்.[7] அவை, உயிர்க்கும் மெய்க்கும் இடைப்பட்ட இனமாதலின் இடையெழுத்தெனப் பட்டனவாகக் கொள்ளல் வேண்டும். அவை வல்லினத்திற்கும் மெல்லினத்திற்கும் இடைப்பட்ட ஒலிகளாகா. இவ்வாறனுள்ளும் ய வ என்னும் இரண்டே உயிரெழுத்துக்கள் போல் தடைப்படா இயல்புடையனவாய் மெய்யெழுத்துக்கள் போல் உயிர்க்கு உடம்பாய் ஒலிப்பனவாயுள்ளன.

---

5. வல்லெழுத் தென்ப கசட தபற. (தொல். எழுத்து. சங)
6. மெல்லெழுத் தென்ப ஙஞண நமன. (ஷை—சச)
7. இடையெழுத் தென்ப யரல வழள. (ஷை—சரு)

**வல்லின மெல்லின மாறுதல்** (*convertibility of surds and sonants*)

க ச ட த ப என்னும் வெடியின ஒலி ஐந்தனுக்கும் இன்றுள்ள தமிழில் தனித்தனியே ஈரொலி உள்ளன.

**வல்லொலி** (*surds*) **மெல்லொலி** (*sonants*)

| | | |
|---|---|---|
| கடன் | — | பகல் |
| அச்சம் | — | பஞ்சம் |
| பட்டம் | — | படம் |
| தலை | — | அதனை |
| படம் | — | கொம்பர் |

இவற்றில் க ச ட த ப என்பவற்றிற்கு ஈரொலி இருத்தல் காணலாம்.

இதனைக் கால்டுவெல் **வல்லொலி மெல்லொலி மாற்றம்** (*convertibility of surds and sonants*) என்று தனியாக ஆராய்கின்றார்.[8] அவர் கொள்கைப்படி, இவ்வியல்பு தமிழிற்குப் பண்டுதொட்டே இருந்து வந்ததொன்றாம். அது அஃது என்பவை ஒலிக்கும் இடங்களையும் பந்து, பத்து என்னும் மென்றொடர் வன்றொடர்க் குற்றுகர வேறுபாடுகளையும் விளக்கிய தொல்காப்பியனார் இந்த இயல்பை விளக்காதது வியப்பாகவே உள்ளது. நகரத்திற்கும் னகரத்திற்கும் உள்ள மிக நுண்ணிய வேறுபாட்டைத் தெளிவாக்கும் ஆசிரியர் இப்பெரிய வேறுபாட்டைப் புறக்கணித்திருக்க முடியாது. ஆனால், ஒரு மொழியில் சொற்களும், சொற்பொருள்களும் வளர்ந்து பெருகுதல்போல் ஒலிகளும் வளர்ந்து பெருகியிருத்தல் கூடும்;

8. A Comparative Grammar of the Dravidian Languages, p. 138.

அவ்வாறு நாளடைவில் தமிழிடையே புகுந்த ஒலிகளே மெல்லொலிகள் என்று சிலர் கருதுவர். இவ்வாறு கொள்வது மொழிநூலார்க்கு உடன்பாடான கொள்கையே. வல்லொலி மிடற்றில் தடையின்றிப் பிறத்தலையும் மெல்லொலி தடைப்பட்டுப் பிறத்தலையும் ஆராய்ந்துகண்டு, எளிதில் பிறக்கும் வல்லொலிகளையே பழங்காலத்துத் திராவிட மக்கள் கற்றிருந்தனர் என்றும், காலஞ் செல்லச் செல்ல நுட்ப முயற்சிகளில் வல்லுநரான பிற்காலத்து மக்களே அரிதில் பிறக்கும் மெல்லொலிகளையும் கற்றனர் என்றும் அவர் கொள்வர்.

க, ச, ட, த, ப என்னும் ஐந்து எழுத்துக்களும் **மொழிமுதலிலும் மொழியிடையில் இரட்டிக்குமிடத்திலும் வன்மையாக ஒலிக்குமென்றும், ஏனையிடங்களில் மென்மையாக ஒலிக்குமென்றும் கால்டுவெல் கூறுகிறார்.** மொழியிடையே தனித்து வருங்காலத்திலும், மூக்கினமாகிய ங ஞ ண ந ம என்பவற்றை அடுத்து வரும் போதும் அவை வன்மையாக ஒலிப்பதில்லை என்று வற்புறுத்துகிறார். பிற மொழிச் சொற்களைக் கடன் வாங்கும் போதும் இவ்விதி போற்றப்படுகின்றது என்று கூறி, தந்தம் மண்டபம், (*danta in Sanskrit*>*tandam in Tamil, mantapa in Sanskrit*>*mandabam in Tamil*) முதலிய சொற்களை உதாரணமாகக் காட்டுகிறார்.

ஆனால் தொல்காப்பியனார் காலத்தும் அதனை ஒட்டிய காலத்தும் இவ்வெழுத்துக்களுக்கு ஈரொலி இல்லாமையால், இவை சொற்களில் எவ்விடத்தும் ஒரேவகையாக — வன்மையாகவே — ஒலிக்கப்பட்டு

வந்தன என்றும், 'இன்பம்' என்பதை இன்று *inbam* என்று ஒலித்தபோதிலும் பழங்காலத்து மக்கள் அதனை *impam* என்றே ஒலித்திருப்பர் என்றும், இன்றும் மற்றத் திராவிட மொழிகளில் வல்லினத்தை மொழியிடையே மெல்லினம் அடுத்து வரும்போதும் வன்மையாக ஒலித்தல் உண்டு என்றும் சிலர் கூறுவர். கன்னடத்தில் இம்பு (இனிமை என்னும் பொருளது) *impu* என்றே ஒலிக்கப்படுகின்றது. **எந்த** (*enta*), **ஆட** (*ata*) முதலிய **தெலுங்குச்** சொற்களிலும் அவ்வொலிமுறை காணலாம்.

ஆயினும், தொடக்கத்தில் இடத்திற்கேற்ப வன்மை மென்மையாக ஒலிக்கும் முறையே இருந்தது என்றும், நாளடைவில் **பிறமொழிக்கலப்பாலும் நாகரிக வளர்ச்சியாலும்** அம்முறை திரிந்தது என்றும் கொள்ளுதல் பொருந்தும்.

## மெய்யெழுத்துத் திரிபுகள்

**க், ங்**

(i) வடமொழி ஹகரத்திற்குக் ககரம் வரல்: மஹா > மகா

(ii) க > வ: ஆகு > ஆவு
நோக > நோவ

(iii) க மறைதல்: பகுதி > பாதி; பகல் > பால்

(iv) க > ச:

| | | | | |
|---|---|---|---|---|
| கன்னடம்: | கேரி | > | சேரி | (தமிழ், தெலுங்கு) |
| ,, | கின்ன | > | சின்ன | ( ,, ) |
| ,, | கிவி | > | செவி | ( ,, ) |
| ,, | கெய்(gey) | > | செய் | ( ,, ) |
| ,, | கெத்தல் | > | சிதல் (தமிழ்), செதலு (தெலுங்கு) | |

| | | | |
|---|---|---|---|
| கன்னடம், தமிழ் : | கெடு | > செடு | (தெலுங்கு) |
| தமிழ் : | கீரை | > சேர | (மலையாளம்) |
| தமிழ் : | வைக்க | > வைச்ச | (தெலுங்கு) |
| | இங்கிய | > ஒச்சிய | |

**ச், ஞ்**

தமிழகத்தில் பெரும்பாலான பகுதிகளில் இப்பாது சகரம், வடமொழி 'ஸ' ஒலிப்பது போல் ஒலிக்கப்படுகின்றது. இரட்டிக்கும் இடத்தில் மட்டுமே அதன் பழைய ஒலி உள்ளது. (அச்சம், தச்சர்.) தெலுங்கு பழைய ஒலியைக் காத்து வருகின்றது.

தமிழில் ஞகரமாகிய மூக்கின ஒலியை அடுத்து வரும் சகரம் வடமொழி 'ஜ' ஒலிப்பதுபோல் ஒலிக்கின்றது ( அஞ்சு, பஞ்சம் ).

ஞகரம் ஐரோப்பிய மொழிகளில் பிரெஞ்சு மொழி ஒன்றில்தான் உள்ளது.

**(i)** கன்னடத்தில் 'ச' உள்ள இடத்தில் தமிழில் 'ய' உள்ளது. பெசர் > பெயர். தமிழிலும் பசும் > பயும் > பய்ம் > பைம் ஆகியிருக்கலாம் என்கின்றார் கால்டுவெல்.[9]

**(ii)** ஞகரம் நகரமாகவும் யகரமாகவும் மாறுகின்றது.

| | | |
|---|---|---|
| மலையாளம் | ஞான் > | தமிழில் நான், யான் |
| ,, | ஞண்டு > | ,, நண்டு, கன்னடத்தில் யண்ட்ரி |

**ட், ண்**

டகரம் ணகரம் போலவே மொழிமுதல் வாரா எழுத்து. பிறமொழிச் சொற்களில் அது மொழி

முதலாயிருப்பின், தமிழில் வழங்குங் காலத்து, இகரமோ அகரமோ முதலிற்பெற்று வழங்கும் (டம்பம் > இடம்பம்).

**(i)** தமிழ்ச் சொற்களில் உள்ள ணகரம் தெலுங்கில் னகரமாகக் காணப்படுகின்றது. தமிழ்முறையே திராவிட முதல் மொழியின் முறை எனக்கோடல் தகும். கண் > கன்னு, விண் > வின்னு, மண் > மன்னு.

**(ii)** மலையாளத்தில் னகரத்தின் இடத்தில் ணகரம் காணப்படுகின்றது. நினக்கு > நிணக்கு (மலையாளம்).

**(iii)** தெலுங்கைப்போல் மலையாளத்திலும் ணகரத்திற்குப் பதில் னகரம் உள்ளது. துணிய > துனிய (மலையாளம்).

**(iv)** ணகரம் மகரம் ஆதல்: எண்பது (தமிழ்)> எம்பது (மலையாளம்).

**த், ந்**

(i) த > ர: விதை > விரை

(ii) த > ச: வைத்த > வைச்ச (தமிழில் போலி என்பர்)
பெரிது > பெரிசு ,,
சிரித்த > சிரிச்ச (மலையாளம்)

(iii) ந்த > ஞ்ச

ஞ, ச என்பவை முன்னண்ண மெய்கள்; இ, ஈ, ஐ என்னும் முன்னண்ண உயிர்களை அடுத்து வரும்போதே இம்மாறுதல் ஆகும். ஐந்து > அஞ்சு போன்று திரிந்த சொற்களே மலையாளத்தில் பெருவழக்கின.

**ப், ம்**

தூதமொழியில் ஆங்கிலத்திலுள்ள *f* ஒலியும் உள்ளது. ஏனைத் திராவிட மொழிகளில் இல்லை.

(i) ப > ஹ : கன்னடத்தில் மொழிமுதலிலெல்லாம் இம் மாறுதல் உள்ளது. பத்து > ஹத்து. (வடமொழி) பண > ஹண இம்மாறுதல் புதுக் கன்னடத்தில்தான் உள்ளது. பழங்கன்ன டத்தில் பகரமே காணலாம். சீன மொழியின் பகரம் ஜப்பானிய மொழியில் f பகரமாகவும், ஹகரமாகவும் மாறுகின்ற தன்மை இங்கு ஒப்பிட்டு வியத்தற்குரியது.

(ii) ப > ம : பதி (தெலுங்கு) > மிதி (தொம்மிது—ஒன்பது)
உண்பான் (தமிழ்) > உண்மான் (மலையாளம்)
பாம்பு (தமிழ்) > பாமு (தெலுங்கு), ஹாவு (பழங் கன்னடம்)

(iii) ப > வ : உண்பான் > உண்ணுவான்
பகு > வகு

(iv) ம > ங, ஞ, ந :
பழம் + கண்டார் > பழங்கண்டார்
பழம் + சிறந்தது > பழஞ்சிறந்தது
பழம் + தந்தார் > பழந்தந்தார்

(v) ம > ன : தமிழில் போலி என விதிப்பர்.
மரம் > மரன்; குளம் > குளன், கொளனு (தெலுங்கு)

(vi) ம > வ : மாமன் > மாவு (குடகு)
மாமி > மாவி ( ,, )
நாம் > நாவு (கன்னடம்); நீம் (நீர்) > நீவு (கன்னடம்)

**ய ர ல வ ழ ள ற ன**

ய வ ஒழிந்த ஏனைய மொழிமுதல் வாரா. பிற மொழிச்சொற்கள், ர ல முதலாகக்கொண்டு வரின் தமிழில் அ, இ, உ என்பவற்றில் ஒன்று முன்னிற்கும் (அரங்கம், இராமன், உலோகம்).

ழ, ள, ற, ன என்பவை தமிழ்க்கே சிறப்பானவை; திராவிட மொழிகளுக்கே உரிய எழுத்துக்கள்.

**ழ**

ழகரம் தமிழில்தான் பெரிதும் வழங்குகின்றது. எனினும் பேச்சில் மிகத் தவருகவும் பல்வேறு வகையாகவும் ஒலிக்கப்படும் தமிழ் எழுத்து அதுவே. ழகரத்தைச் சில பகுதிகளிலுள்ளவர் ளகரமாகவும், சிலர் யகரமாகவும், சிலர் சகரமாகவும் ஒலிப்பர். ழகரத்தை நன்கு ஒலிப்பவர் சிலரே. இலக்கியத்தில் அது கெடுமிடம் உளது (போழ்து >போது). பதினொன்ரும் நூற்ருண்டில் எழுந்த வீரசோழியம் என்னும் நூல் ழகரம் ளகரமாக மாறுதற்கு விரிவாக இலக்கணமும் வகுத்துவிட்டது. தெலுங்கில் அது டகரமாகவும் கன்னடத்தில் ளகரமாகவும் மாறும்:

ஏழு > ஏடு > ஏளு
கோழி > கோடி > கோளி

ழகரம் கெடுதலும் உண்டு:

| | | | |
|---|---|---|---|
| | கீழ் | > கிந்த | (தெலுங்கு) |
| | விழுங்கு | > மிங்கு | (கன்னடம்) |
| ழ > ண : | முழுகு | > முணுகு | (தெலுங்கு) |
| | குழி | > குணி | (கன்னடம்) |

ழ > ய, ச, ள எனத் தவருக ஒலிக்கப்பட்டு மாறும்.

ழகரம் மலையாளத்தில் இன்றும் வழங்குகின்றது. தெலுங்கிலும் கன்னடத்திலும் மறைந்தது.

**ய**

| | | | |
|---|---|---|---|
| ய > ச : | வயிறு | > வசறு, வசிறு | (கொச்சை) |
| | பையன்கள் | > பசங்கள் | ( ,, ) |

ய > ஞ, ந : யான் > ஞான், நான்

இவற்றில் யகரமே முந்தியது ; ஏனையவை பிந்தியவை என்பதை வடசொற்கள் தமிழில் அடையும் மாறுதல்கள் தெரிவிக்கின்றன.

யமன் > ஞமன், நமன்
யுக > நுகம்

ர

ர > ல : தெரி (தமிழ்) > தெலியு (தெலுங்கு)
பரிசை ( ,, ) > பலிச (மலையாளம்)

இதனால் சிறு—சில, பரு—பல முதலான சொற்களின் பகுதிகள் ஒத்தனவாக இருக்கலாம் என்று கால்டுவெல் ஐயுறுகிறார்.[10]

ல

ல > ர, ற: வில் (தமிழ்) > பிர் (துளு), பில்லா (பிராஹுாய்)
நில் > நிறுத்து, பல்பல > பற்பல

வ

வ > ப (b) : கன்னடத்தில் காணும் மாறுதல்
வாழ் > பாள் (bal)
வ > க (g) : தெலுங்கில் காணும் மாறுதல்
வாரு > காரு, அறுவர் > ஆறுகுரு
செய்வேன் > செய்கேன் (தமிழில்)

ள

ள > ண : துளு மொழியில் காணும் மாறுதல்
கேள் > கேண் (துளு)
கொள் > கொண் ( ,, ), கொணு (தெலுங்கு)

ற

இது வடமொழியில் இல்லை. தெலுங்கு இலக்கியத்தில் காணப்படுகின்றது ; இலக்கண நூலாரும் அதனை வற்புறுத்துகின்றனர். இன்று வழக்கில் அது

மறைந்து வருகின்றது. கன்னடத்தில் செய்யுளில் மட்டும் ஆளப்படுகின்றது. ஆகையால் எல்லா மொழிக்கும் உரிய பொது எழுத்தேயாகும் என்றும், திராவிட முதல்மொழியில் இருந்திருக்கும் என்றும் துணியலாம்.

ற்ற > ட்ட :

மாற்றம் > மாட (mata) (தெலுங்கு)
மாற்றம் > மாடு (matu) (கன்னடம்)
பற்று > பட்டு (தெலுங்கு)
பட்டு, பத்து, ஹத்து (கன்னடம்)
பதற்றம் > பதட்டம் (பேச்சில்)

ற்ற > த்த : பற்று > பத்து (பேச்சில்)

**ஸ, ஶ, ஷ, ஹ**

இவை தமிழல்ல இல்லை. திராவிட முதலமொழியிலும் இவை இருந்ததில்லை. வடமொழிக் கலப்பால், தெலுங்கு முதலியவற்றில் இவை வழங்குகின்றன. தமிழிலோ,

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே[11]

என்ற தொல்காப்பிய விதியே இலக்கியநடையில் இன்றுவரையில் கொள்ளப்பட்டுவருகின்றது. கல்லாதவர்க்கு இவை இன்றும் புதிய ஒலிகளே. பிற மொழி கற்றோரே இவற்றை ஒலிக்க அறிவர்.

ஷ என்பதற்கு ஈடாக ட, ச இவற்றில் ஒன்றை எழுதுவர்.

ஸ் என்பதற்கு ஈடாகத் தகரத்தையாவது சகரத்தையாவது கொள்வர்.[12] சில சொற்களில் அது கெடுதலும் உண்டு.

ஹ புதுக்கன்னடத்தில் மிகுதியாக வழங்குகின்றது. பழங்கன்னடத்தில் 'ஹ' ஒலி இல்லாமல் இருந்தது.[13]

ஹகர ஒலியோடு கூடிய வல்லினம் (*aspirated consonants*) இல்லை. தமிழில் அவை ஒலித்தற்கு எளியவை அல்ல; அவை கலப்பொலிகளே அன்றித் தனியொலிகள் அல்ல. வடசொற்களை எழுதும் பொருட்டு, தெலுங்கு முதலிய மொழிகளின் நெடுங்கணக்கில் அவை உள்ளன. திராவிட மொழிகளுக்கும் அவ்வெழுத்துகளுக்கும் தொடர்பு இல்லை.

உலகமொழியின் பலவற்றுள்ளும் ஹகர ஒலி வழக்கிழந்து வருகின்றது.[14]

---

12. ஏழாமுயிர் இய்யும் இருவும்ஐ வருக்கத்(து)
இடையின் மூன்றும் அவ்வம் முதலும்
எட்டே யவ்வும் முப்பது சயவும்
மேலொன்று சடவும் இரண்டு சதவும்
மூன்றே அகவும் ஐந்திரு கவ்வும்
ஆவீ றையும் ஈயீ றிகரமும் (நன்னூல், எழுத்து. 147)

எனப் பவணந்தியார் விரிவாக வடமொழியாக்கம் கூறியுள்ளார்.

13. ஆங்கிலத்தில் honour, hour முதலான சொற்கள் ஹகரத்தோடு சேர்த்து எழுதப்படினும், ஹகரத்தை ஒலித்தல் பிழையாகவும் ஒலிக்காது விடுதல் விதியாகவும் கொள்ளப்படுகின்றன.

14. Doubtless some appreciable muscular effort is required to utter the aspirate h. Its omission is distinctly easier and therefore nearly all languages in which it has existed have shown a tendency to drop it, and many such as Greek and the Neo-Latin tongues have dropped it

**ட, ண, ள : வளைநா ஒலிகள் (*cacuminals*)**

இவை வாயின் உட்புறத்தே நாமுனையை வளைத்து வன்மையாக ஒலிக்கப்படும் மெய்களாகும்.[15] இவை இந்தியாவிலுள்ள எல்லா மொழிகளிலும் உள்ளன ; திராவிட மொழிகளிலும் உள்ளன ; ஏனைய மொழிகளிலும் உள்ளன. ஆனால் எல்லா மொழிக்கும் பொதுவாக உரிய ஒலிகள் என்று கூறமுடியாது. ஹிந்தி முதலிய மொழிகள் வடமொழியிலிருந்து இவற்றைப் பெற்றிருத்தல் கூடும். ஆனால் தமிழ்

---

altogether. (Tucker, Introduction to the Natural History of Language, p. 329.)

Speakers of French and other Romance languages usually have considerable difficulty in pronouncing h. They generally leave it altogether. (D. Jones, An Outline of English Phonetics, p. 62.)

15. இவற்றைக் கால்டுவெல் linguals, cerebrals என்ற பெயரால் குறிப்பர். இக் குறியீடும் தவறே. (A Comparative Grammar of Dr. Ll. p. 147). மூளையின் அடிப்பகுதியில் (cerebrum) பிறக்கும் ஒலிகள் என்று கொண்ட கொள்கையும் தவறே. ஒலிநூலார் இவற்றைக் குறிக்கும் பெயர் cacuminals என்பது. " A class of tongue-tip consonants, which are as a rule very difficult for the average European who is not a native of Ireland, western England, some parts of Scotland and certain districts of Sweden, is that which is produced with the tip of the tongue somewhat curled back, so as to come in contact with that part of the roof of the mouth which lies between the teeth-ridge and the point where the hard and soft palates meet. It is a class of sound very common in the majority of the Indian tongues...They are frequently significant, and mispronunciation may lead to serious misunderstanding. Indian grammarians class these consonants as cerebrals. The name for them in the terminology of phonetics is retroflex or cacuminal. (G. Noel-Armfield, General Phonetics, pp. 113, 114.)

முதலிய மொழிகளும் அவ்வாறு வடமொழியிலிருந்து பெற்றிருக்கும் என்று கூறுவதற்கில்லை. அதற்கு மாறாக, வடமொழி இவ்வொலிகளைத் திராவிடமொழி களிலிருந்து கொண்டிருக்கும் என்பதற்குப் பின்வரும் சான்றுகள் காட்டுவர் கால்டுவெல்.

(1) பழைய திராவிடமொழிச் சொற்களில் அடிச்சொற்களாக உள்ள பலவற்றிற்கும்—சிறப்பாகத் தமிழ் அடிச்சொற்களுக்கு—இவை இன்றியமையாதவை. ஆனால், இவை வடமொழியில் ஒலிநயத்திற்காகக் கொள்ளப்படுகின்றவையே. (மங்கலம்—மங்களம்.

(2) வடமொழியோடு ஓரினமாக உள்ள கிரீக், லத்தீன் முதலான ஐரோப்பிய மொழிகளில் இவ்வொலிகள் காணப்படவில்லை. ஆனால் திராவிட மொழிகள் பலவற்றுள்ளும்—பிராஹுய் மொழியினுள்ளும்—இவை என்றும் இருந்து வந்திருக்கின்றன. வடமொழியைவிடப் பிராகிருத மொழிகள் இவற்றை மிகுதியாக ஆண்டிருத்தலும் இங்குக் கருதத்தக்கதே.

(3) வடமொழியிலிருந்து பெறப்பட்ட எல்லா ஒலிகளும் தமிழ்க்குப் புதியவையாக இருக்குமேல் தமிழ் ஒலிமுறைக்கேற்ப மாற்றியே கொள்ளப்பட்டிருக்கின்றன. உரப்பியும் கனைத்தும் ஒலிக்கும் எல்லா ஒலிகளும் தமிழ்முறைக்கேற்ப மாற்றப்பட்டுள்ளன. ஆனால் ட, ண, ள என்னும் அத்தகைய ஒலிகள் தமிழ்க்குப் புதியவையானால், மாற்றப்படாமல் கொள்ளப்பட்டிருக்குமோ? அன்றியும் வடசொற்களிலே அல்லாமல் பழைய திராவிடச் சொற்களிலும் அவை அங்கிலையில் போற்றப்பட்டிருத்தல் முடியாதன்றோ?

(4) திராவிடமொழிகளில் தமிழினும் மிகுதியாக வடமொழிக்கலப்பைப் பெற்றது தெலுங்கே. ஆனால் தமிழில் உள்ள அவ்வளவு மிகுதியாக ட, ண, ள ஒலிகள் தெலுங்கில் இல்லை. எனவே வடமொழியிலிருந்து வந்தனவாகக் கொள்ளல் பொருந்தாது.

(5) மற்ற மெய்களுக்கு முற்றிலும் வேறுபட்டவை வளைநா ஒலிகள். அன்றியும் இவ்வேறுபாட்டைப் புறக்கணித்தால், அடிப்படையான பல சொற்கள் பொருள் வேறுபாடின்றிப் பயனற்றுப்போக, மொழியும் ஆற்றல் இழந்துவிடும்.

| மற்ற மெய் | வளைநா மெய் |
|---|---|
| குதி | குடி |
| புதை | புடை |
| கத்து | கட்டு |
| கொத்து | கொட்டு |
| என் | எண் |
| மனை | மணை |
| கொல் | கொள் |
| மால் | மாள் |

எனவே ட, ண, ள என்னும் ஒலிகள் திராவிட ஒலிகளே என்றும், ஒலிநயம் கருதிக்கொள்ளப்பட்டன ஆகாமல் மொழிக்கு அடிப்படையாக இன்றியமையாதவையாகும் என்றும் துணியலாம்.

ஆட்டோ ஜெஸ்பர்ஸன் என்னும் மொழிநூலாசிரியர் இவை திராவிட மொழியிலிருந்து வடமொழி கொண்டவை என்று கருதாமல் நாளடைவில் மக்கள்

இத்தகைய ஒலிகளை ஒலிக்கக் கற்றல் இயல்பு என்றும், பல்வின ஒலிகள் சில வரவர இவ்வாறு மாறிவிடுதல் உண்டு என்றும், அமெரிக்க மொழிகளிலும் இவை காணப்படுகின்றன என்றும் கூறுவர்.[16]

**க, ச, ட, த, ப: வெடியின ஒலிகள்** (*Plosive consonants*)

இவற்றை ஒலிக்க இருவகை முயற்சி இன்றியமையாதன: **(i)** ஒலிக்கும் கருவிகள் ஒன்றோடொன்று பொருந்தல் வேண்டும். **(ii)** உடனே அவை பிரிதல் வேண்டும். அப்போது வெளிப்படும் மூச்சு வெடியொலிபோல் வெளிப்பட நேரும். எடுத்துக்காட்டாக பகரத்தை ஒலிப்பதானால், இதழ்களை முன்னர்க் குவித்துப் பொருத்தி உடனே பிரித்தல் வேண்டும், எனவே, பிரித்தபின் வெளிப்படும் மூச்சு, சிறிது வேறுபட்ட மற்றோர் ஒலியையும் விளைத்தல் காணலாம். அவ்வொலி ஒருவகை உயிராக இருத்தலையும் உணரலாம்.

'வரப்' என்று நிறுத்தினால் பகரம் நன்கு ஒலிக்காமையும், இதழைப் பிரித்து 'வரப்பு' என மூச்சு விட்ட பிறகே பகரம் ஒலித்தலும், அவ்வாறு மூச்சு விடுதற்குத் துணையாக உகரம் போன்ற உயிரொலி

16. It is easy to admit that natives accustomed to one place of articulation of their *d, t, n* will unconsciously produce the *d, t, n* of a new language they are learning in the same place; but then they will do it everywhere. This may have happened in India quite independently of the occurrence of the same sounds in other vernaculars. (Jespersen, Language, Its Nature, etc, p. 196).

உதவுதலும் காணலாம். அவ்வுயிரொலியையே தமிழர் குற்றியலுகரம் என்பர். அக் குற்றியலுகரம் வல்லினத்தை ஊர்ந்து வரும் என்றதன் உண்மையும், அஃது உயிரெழுத்தாகிய உகரத்தின் வேறு பட்ட சார்பெழுத்து என்றதன் உண்மையும் இதனால் விளங்குகின்றன.[17]

### அண்ணமெய் ஆதல் (*Palatalisation*)

இ, ஈ, ஐ என்னும் உயிரொலிகளை அடுத்துவரும் தகரம், பல்லைப் பொருந்தி நாநிற்கும் நிலையிலிருந்து, அவ்வுயிரொலிகளுக்குரிய அண்ணத்தை நோக்கிப் பெயர்தலால் சகரமாகத் திரியும். அண்ணத்தை நோக்கிப் பெயர்தற்குக் காரணம், அவ்வுயிர்கள் அங்குப் பிறத்தலே ஆகும். பல்லினத்தைச் சார்ந்த நகரமும் இவ்வாறே முன்னண்ண இனமாகிய ஞகரமாகத் திரியும். இவற்றைத் தமிழில் போலி என்பர்.[18]

சிரித்த > சிரிச்ச, வைத்த > வைச்ச

கிழிந்த > கிழிஞ்ச, ஐந்நூறு > ஐஞ்நூறு

### பல்லினமெய் ஆதல் (*Dentalisation*)

பற்று > பத்து, விற்றான் > வித்தான்

மண்ணு > மந்நு (தெலுங்கில்), கண்ணு > கந்நு(தெலுங்கில்)

---

17. நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே. (தொல். எழுத்து. ந)

18. ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி
ஞஃகான் உறழும் என்மரும் உளரே. (நன். எழு. 124)

எனப் பவணந்தியார் நகரம் ஞகரமாவதற்கு மட்டும் விதி வகுத்துள்ளார்.

ற, ண இவற்றை ஒலித்தல் அருமையாதலின், நாவைப் பின்னண்ணத்திற்குக் கொண்டு செல்லாமல், பல்லோடு பொருத்தியே ஒலித்தலினுல், இவ்வாறு த, ந ஆகின்றன. சோர்வும் சோம்பலும் இதற்குக் காரணம் என்பர். ஆயின், முயற்சிச் சுருக்கமே காரணம் எனல் சிலர் கருத்து.

**ஒற்றளபெடை**

மெய்யெழுத்துக்கள் தனித்து (உயிருடன் கூடாது) நிற்கும்போது மாத்திரை பெறும். அப்போது அரைமாத்திரை அளவு ஒலிக்கும். உயிருடன் கூடின், அவ்வுயிரின் அளவாகவே ஒலிக்கும்.

செய்யுளில் இசைநீட்டம் வேண்டினுல், அந்த மெய் ஒரு மாத்திரையளவாகவும் மிகுதியாகவும் நீண்டு ஒலிக்கும். அதன் அறிகுறியாக அதனையடுத்து அந்த மெய் வரையப்படும்.[19]

" பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே. "[20]

**அநுஸ்வாரம்**

இது வடமொழியில் உள்ள மூக்கொலியாகும். தமிழில் மூக்கொலியாகிய மெய்கள் பல (ங ஞ ண ந ம ன) இருக்கின்றன. ஆயின், வடமொழியில் உள்ள அநுஸ்வாரம் இல்லை.

---

19. அளபிறந் துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர். (தொல். எழுத். ௩௩)

20. கலித்தொகை. 11

தெலுங்கிற்கே சிறப்பாக உரியதும் மிக நுண்ணியதும் ஆகிய மூக்கொலி அர்த்தாநுஸ்வாரம் எனப்படுவது. அதுவும் தமிழில் இல்லை. வாடு–வாண்டு என்னும் இரண்டிற்கும் இடைப்பட வாoடு என்று ஒலிக்க அர்த்தாநுஸ்வாரம் தெலுங்கில் பயன்படுகின்றது.

**ஓரினமாதல்** (*Assimilation*)

வேறுபட்ட மெய்கள் இரண்டு அடுத்து வரும் போது, அவற்றுள் ஒன்று மற்றொன்றாகவோ அதன் இனமாகவோ திரிதல் உண்டு. இஃது ஓரினமாதல் எனப்படும்.

மரம்+கொம்பு >மரக்கொம்பு —மகரம் ககரமாதல்
மரம்+தெரிந்தது >மரந்தெரிந்தது —மகரம் நகரமாதல்

இம்மாறுதலின் காரணம் என்னை? ஒலிக்கும் முயற்சியில் எளிமையே காரணம் ஆகும். ஒலிக்கும் மக்கள் அரிய முயற்சியை எளிதாக்கல் இயல்பு. (ஆங்கிலத்தில் *economy of effort*, முயற்சிச் சிக்கனம், என்பர்).

இம்மாறுதலில் சில எங்கும் விதியாக வருவன (*established*). சில ஒரோவழி வருவன (*accidential*).

எங்கும் வருவன —உருள்+து>உருட்டு
ஒரோவழி வருவன —சோழ+நாடு>சோணாடு

நிலைமொழி ஈறே மாறுதலும், வருமொழி முதலே மாறுதலும் இரண்டும் மாறுதலும் என மூவகைஉண்டு.

(i) முள்+செடி>முட்செடி—regressive
(ii) என்+தம்பி>என்றம்பி—progressive
(iii) கல்+தூண்>கற்றூண்—reciprocal

நிலைமொழி யிறுதியில் மெய் நிற்காது, உயிர் நிற்பின், வரும் வல்லின மெய் இரட்டித்தலும் உண்டு :—

அ + கடல் > அக்கடல்
பசி + துன்பம் > பசித்துன்பம்
புலி + தோல் > புலித்தோல்

இவை, க ச த ப மிகும் இடம், மிகா இடம என்னும் இலக்கணப் பகுதியில் விரிவாக ஆராயப் படும். பொருள்நோக்கி மிகுதலும் மிகாமையும் உண்டு ஆதலால் தொகைச் சொற்கள் வேற்றுமைப் பொருளவா, அல்வழிப் பொருளவா எனப் பகுத் துணர்தல்வேண்டும்.

கன்னடத்தில் இவ்வாறு வருமொழி முதலில் வந்த வல்லினம் மிகாமல் மெல்லினமாக ஒலித்து நிற்றல் உண்டு.

(புலி + தோல்) ஹுலி + தொகலு (huli + togalu)
> ஹுலிதொகலு (hulidogalu)

தமிழிலும் அத்தகைய தொகைகள் உள்ளன.

காய் + கொம்பு > காய்கொம்பு (காய்க்கின்ற கொம்பு)

காய்கொம்பு என்ற இத்தொகை வினைத்தொகை. வல்லினம் மிகின் காய்க்கொம்பு என வேற்றுமைத் தொகையாய், காயினையுடைய கொம்பு எனப் பொருள் வேறுபடும்.

**மெய் இடம் பெயர்தல்** (*Metathesis, Euphonic displacement of consonants*)

ஒலிநயம் காரணமாகவோ, விரைவு காரண மாகவோ மெய்யெழுத்துக்கள் ஒரு சொல்லில் இடம்

பெயர்தல் உண்டு. பெரும்பான்மை பேச்சிலும் சிறுபான்மை இலக்கியத்திலும் காணப்படும்.

தசை > சதை    விசிறி + சிவிறி
வைசாகி > வைகாசி
குதிரை > குருதை > குர்ரம் (தெலுங்கு)
கொப்பூழ் (தமிழ்) > பொக்கிலி (தெலுங்கு)
> பொக்குழ் (மலையாளம்)
பொக்கிழ் ( ,, )
படர் (தமிழ்) > பாடு (கன்னடம்)

## அடிச்சொற்களில் மெய் கெடல் (*Rejection of Radical consonants*)

தெலுங்கிலும் கன்னடத்திலும் அடிச்சொற்களின் இடையில் உள்ள ர, ல, ழ முதலிய மெய் கெடுதல் உண்டு. துளுவிலும் தமிழிலும் சில உண்டு. கெடுவன வல்லொலிகளும் அல்ல; மூக்கொலிகளும் அல்ல; இடையின ஒலிகளே ஆகும்.

தெலுங்கு :

நெருப்பு > நிப்பு
பொழுது > பொத்து (தமிழ்-போது)
எருது > எத்து (eddu)    மருந்து > மந்து
கொழுப்பு, கொழுமை > கொவ்வு, கொப்பெ (kobbe)

(உடல் > ஒள்ளு என்ற தெலுங்குமொழித் திரிபில் வல்லின மெல்லொலியாகிய டகரமும் அவ்வாறு ஆயிற்று).

கன்னடம் :

மருந்து > மத்து (பழங்கன்னடம்—மர்து)
எருமை > எம்மெ

துளு:

கொழுமை > கொம்மெ

### அசை கெடல் (*Haplology*)

ஒரே ஒலியுடைய அசைகள் இரண்டு ஒரு சொல்லிலோ தொடரிலோ வரின், ஓரசை கெடுதல் உண்டு.

அருமருந்தன்ன > அருமந்த
ஆதன் தந்தை > ஆந்தை
பூதன் தந்தை > பூந்தை

இவற்றை இலக்கணநூலார் மரூஉ என்பர்.[21]

### உயிர் தோன்றல் (*Anaptyxis*)

ஒலித்தற்கரிய மெய்களிடையே ஒலித்துணையாக உயிர் தோன்றும்.

சொல்+கிறு+ஆன் > சொல்லுகிறான்
வெல்+வ்+ஆன் > வெல்லுவான்

வடசொற்கள் சில இணைந்தியலும் மெய் பெற்றிருப்பன தமிழில் புகுங்கால், இகரம், உகரம் என்பனவற்றுள் ஒன்று பெறும்.[22]

| | | |
|---|---|---|
| வாக்யம் > வாக்கியம் | } | ய ர ல முன் இகரம் பெற்றன |
| வச்ரம் > வச்சிரம் | | |
| சுக்லம் > சுக்கிலம் | | |
| பத்மம் > பதுமம் | } | ம வ முன் உகரம் பெற்றன |
| பக்வம் > பக்குவம் | | |

21. தொல். எழுத்து. ௪௮௩

22. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமும் நகரக் ககரமும்
மிசைவரும்; ரவ்வழி உவ்வு மாம்பிற. (நன். எழு. 149)

## உயிர் கெடல் (*Syncope*)

இது மேலே கூறிய உயிர்தோன்றல் என்னும் முறைக்கு மாறானது; இடையே உள்ள உயிர் கெடுவதாகும்.

போகும் > போம்
போலும் > போல்ம் > போன்ம்
கலுழும் > கலுழ்ம்[23].

## மொழிமுதல் துணை (*Prothesis*)

ர ல முதலிய மெய்களை மொழிமுதலாக உடைய பிறமொழிச் சொற்கள் தமிழில் புகுங்காலத்து, அ, இ, உ என்னும் உயிர்களில் ஒன்று முன் நிற்கப் பெறும்.[24] ர ல முதலிய மெய்களை மொழிமுதலாக ஒலித்தல் அருமையாதலின், முயற்சியினை எளிதாக்கும்பொருட்டே இவை வரும்.

ரங்கம் > அரங்கம்
லாபம் > இலாபம்
லோகம் > உலோகம்

---

23. செய்யும் என்னும் பெயரெஞ்சு கிளவிக்கு
மெய்யொடுங் கெடுமே ஈற்றுமிசை உகரம்
அவ்விடன் அறிதல் என்மனார் புலவர். (தொ. சொ. ௨௫௮)

24. ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்(கு)
இய்யும் மொழிமுதல் ஆகிமுன் வருமே. (நன். எழு. 148)

## எ. ஒலியளவு முதலியன

### ஒலியளவு

ஓர் எழுத்துப் பிறந்து நின்று முடியும் கால அளவே அதன் ஒலியளவாகும். அதனைத் தமிழிலக் கணநூலார் மாத்திரை என்னும் பெயரால் ஓர் அளவு கொண்டு அளந்துள்ளனர். கண் இமைத்தல் அல்லது கைநொடித்தல் என்னும் தொழிற்கு உரிய கால அளவே ஒரு மாத்திரை எனப்படுவது.[1] "இயற்கை மகன் தன் குறிப்பின்றி இரண்டிமையும் ஒருகாற் கூடி நீங்கின காலக்கழிவும் அ எனப்பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும்" எனவும், "அது போலவே, நொடித்தற்றொழிலிற் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக்கழிவும் அ எனப் பிறந்த ஓசையது தோற்றக் கேட்டுக் காலக் கழிவும் ஒக்கும்" எனவும் நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளார். கண்ணிமை இயற்கையாக நிகழ்வதாலும், நொடித்தல் "உள்ளத்தான் நினைத்து நிகழ்"வதாலும், முன்னதே சிறப்புடையது என்பது அவர் கருத்து.

இவ்வாறு அளக்கப்படும் ஒலிகளைப் பொதுவாக நான்கு வகைப் படுத்தலாம்.

1. ஒரு மாத்திரை ஒலிகள்
2. இரு மாத்திரை ஒலிகள்
3. ஒரு மாத்திரைக்குக் குறைந்த ஒலிகள்
4. இரு மாத்திரைக்கு மிக்க ஒலிகள்

குற்றெழுத்துக்கள் முதல் வகையைச் சாரும்.[2] நெட்டெழுத்துக்கள் இரண்டாம் வகையைச் சாரும்.[3] குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் முதலியன மூன்றும் வகையைச் சாரும்.[4] உயிரளபெடை நான்காம் வகையைச் சாரும்.

மெய்யெழுத்துக்களின் ஒலியளவு அரை மாத்திரை ஆகும்.[5] அவ்வாறு அரை மாத்திரை பெறுவது உயிருடன் கூடாது தனி மெய்யாய் நிற்கும் போதே யாகும். உயிருடன் கூடி உயிர்மெய்யாய் நிற்கும்போது, அம்மெய்க்கு ஒலியளவில்லை; உயிரின் அளவே உயிர்மெய்யின் அளவாகும்.[6] தனித்து நிற்கும் மெய் அரை மாத்திரையில் குறுகுதலும் உண்டு. மகரம் அவ்வாறு குறுகும்போது மகரக் குறுக்கம் எனப் பெயர் பெறும்.[7] அரை மாத்திரைக்கு மேற்பட்டு ஒலிக்கும் மெய் ஒற்றளபெடை எனப்படும்.

---

2. அவற்றுள், அஇஉ
எஒ என்னும் அப்பால் ஐந்தும்
ஓரள பிசைக்குங் குற்றெழுத் தென்ப. (தொல். எழு—௩)

3. ஆஈஊ, ஏஐ
ஓஔ என்னும் அப்பால் ஏழும்
ஈரள பிசைக்கும் நெட்டெழுத் தென்ப. (ஷை—௪)

4. அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே. (ஷை—௧௨)

5. மெய்யின் அளவே அரையென மொழிப. (ஷை—௧௧)

6. மெய்யோ டியையினும் உயிரியல் திரியா. (ஷை—௧௦)

7. அரையளவு குறுகல் மகரம் உடைத்தே
இசையிடன் அருகும் தெரியுங் காலே. (ஷை—௧௩)

சந்தியக்கரம் எனப்படும் ஐ ஔ இரண்டும் நெட்டெழுத்தின் அளவு பெறுவன.[8] இஃது ஆங்கில ஒலி நூலார்க்கும் உடன்பாடே. ஆயின், தமிழில் உள்ள ஐ ஔ என்பன சந்தியக்கரம் எனக் கொள்ளத்தக்கன அல்லவாதலின், அய், அவ் என்னும் ஒலிகளின் அளவே பெரும்பாலும் பெறுகின்றன. அவ்வாறு ஒலியளவு குறைதல் உணர்ந்தே இலக்கண நூலார் ஐகாரக் குறுக்கம் ஔகாரக் குறுக்கம் எனக் கொண்டுள்ளனர்.[9]

ஆங்கில முதலிய மொழிகளில் குற்றுயிர்க்கும் நெட்டுயிர்க்கும் தனித்தனி எழுத்துக்கள் இல்லை. ஆதலின் அவற்றில், உயிரெழுத்துக்கள் ஓரிடத்தில் நெடிலாகவும் மற்றோரிடத்தில் குறிலாகவும் மாறி ஒலிக்கும்.[10] தமிழில் வெவ்வேறு எழுத்துக்கள் இருத்தலால், தெளிவான பொருள் வேறுபாடும் இருக்கக்

---

8. The dipthongs are of the same length as the "long" vowels. (D. Jones, An Outline of English Phonetics, p. 104).

9. தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
நையும் ; ஔவும் முதலற் றுகும். (நன்னூல். எழு. 95)

அளபெடை தனியிரண் டல்வழி ஐஔ
உளதாம் ஒன்றரை தனிமையு மாகும்.

(அவிநயனார், யாப்பருங்கலவிருத்தி, 2)

10. The custom of regarding certain vowels as long and certain others as short is, to say the least of it, unsatisfactory. The length of the long vowel is very variable, and depends on a variety of circumstances; the so-called short vowels on the other hand are sometimes quite long, and no definite rules can be laid down for the use of the long forms. (D. Jones, An Outline of English Phonetics, p. 109).

காண்கின்றோம். பல், பால், கல், கால் முதலான சொற்களில் உயிரின் ஒலியளவு மாறுதலும் பொருள் வேறுதலும் காண்க.

## ஒலியழுத்தம் (*Accent or Stress*)

ஆங்கிலம் போன்ற மொழிகளில் ஒரு சொல்லில் பல அசைகள் இருந்தால் அவற்றுள் ஒன்றை எடுத்தும், மற்றவற்றைப் படுத்தும் நலிந்தும் ஒலிப்பர். தமிழில் அத்தகைய வேறுபாடின்றி எல்லா அசைகளையும் ஒரேவகையாக ஒலிக்கின்றனர் என்பது சிலர் கருத்து. எடுத்தொலிக்க வேண்டிய இடங்களில் ஏகாரம் முதலிய இடைச்சொற்களைச் சேர்த்து வழங்குவதாகவும் அவர் கூறுவர். உண்மையை ஆராய்ந்தால், அவர் கருத்துப் பொருந்தாமை தெரியவரும்.

ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு அவ்வளவு மிகுதியாக ஒலியழுத்தம் (*stress*) திராவிட மொழிகளில் இல்லை என்று கூறலாம். ஆனால் திராவிட மொழிகளிலும் அஃது ஓரளவு அமைந்திருக்கின்றது. தமிழ் மொழியில் அஃது அமைந்திருத்தலை இலக்கண நூலாரும் உரையாசிரியரும் குறித்திருக்கின்றார்கள்.[11]

---

11. எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பின்
திரிபும் தத்தமில் சிறிதுள வாகும். (நன்னூல். எழு. 88)

'வந்தனன்' எனத் தெரிநிலை, தொழின்மை மேற்படத் தொழிலுடைப் பொருள் கீழ்ப்பட முற்றாய் நின்றுணர்த்தியவாறுபோல, 'உடையன்' எனக் குறிப்பு வினையும் உடைமை மேற்பட உடையான் கீழ்ப்பட முற்றாய் நின்றுணர்த்துதலுங் கொள்க. 'வந்தான்' 'உடையான்' எனப் பெயராய வழித் தொழிலுடைப் பொருளும் உடையானும் மேற்பட்டுத் தோன்றுமா றறிக. (சேனாவரையர், தொல். சொல். ௨௧௫)

எடுத்தல், படுத்தல், நலிதல் என்னும் வேறுபாடுகள்[12] மிக நுண்ணியமுறையில் இருத்தலால், அவற்றைப் பிறமொழியினர் உணர்தல் எளிதன்று. ஆயினும் கால்டுவெல் உணர்ந்து அதன் உண்மையை உடன்பட்டிருக்கின்றார். அவர் கருத்துப்படி, ஒரு சொல்லின் முதலசையை எடுத்தும், பிற அசைகளைப் படுத்தும் ஒலிக்கின்ற முறை தமிழ்முறையாகும். தொகைச்சொற்களில் நிலைமொழியின் முதலசையை மிக எடுத்தும், வருமொழியின் முதலசையை ஓரளவாக எடுத்தும் ஒலித்தல் மரபு. 'அடங்குகிறது' என்ற சொல்லில் 'அட' என்ற முதலசையில் எடுத்தலோசை அமைந்தமை காண்க. ஆனால் 'ஓடுவான்' என்ற சொல் வினைமுற்றாயிருக்கும்போது முதலசையில் எடுத்தலோசையும், அதுவே வினையாலணையும் பெயராக நிற்கும்போது ஈற்றசை பாலுணர்த்தும் சிறப்பால், அதன்கண் எடுத்தலோசையும் அமைந்திருத்தல் காண்க.

தமிழில் முதனிலைத் தொழிற்பெயரென்றும், முதனிலை திரிந்த தொழிற்பெயரென்றும் ஒரு வேறுபாடு காணப்படுகின்றது. பிடி, அடி முதலியன முதனிலைத் தொழிற்பெயர்களாம். ஊண், கேடு முதலியன முதனிலை திரிந்த தொழிற்பெயர்களாம். உண், கெடு என்னும் அடிச்சொற்களை எடுத்தொலித்த காரணத்தால் நாளடைவில் அவற்றின் உயிர் நீண்டு ஊண்,

12. There are many degrees of stress, but for practical purposes it is sufficient to recognize three at most, which we may call primary, secondary and weak. Weakly stressed syllables may be termed unstressed. (G. Noel-Armfield, General Phonetics, p. 54).

கேடு எனத் திரிந்தன எனலாம். பிடி, அடி முதலிய வற்றில் அவ்வாறு எடுத்தலோசை சிறவாமையால், அவை திரியாமல் நின்றன எனலாம். இவ்வாறு எடுத்தல் முதலிய வேறுபாடுகளால் சொற்களின் உருவமும் திரியக் காண்கின்றோம்.[13]

'போகிறான்' என்ற சொல்லைப் 'போறா°' என ஒலிக்கின்றனர். இங்கும் ஓசை வேறுபாட்டால் சொல்லுருவம் மாறுதலைக் காணலாம். 'போ' என்னும் பகுதியில் எடுத்தலோசை இருத்தலால் அது மாற வில்லை. 'கிறான்' என்ற மற்ற அசைகளில் எடுத்த லோசையின்றிப் படுத்தலோசையும் ஈற்றில் நலித லோசையும் அமைந்தமையால் 'றா' தெளிவாகக் கேட்க, இறுதி மெல்லின னகரம் மறைந்தது; ஆயி னும் அதன் அறிகுறியாக 'றா' என்பதில் உள்ள ஆகார உயிர் மூக்கின் உயிராக ஒலிக்கப்படுகின்றது. இவ்வாறே வினைமுற்றுக்கள் பலவற்றில் பகுதி யொழிந்த அசைகள் திரிந்தும் கெட்டும் இருத்தலைக் காணலாம். வினைமுற்றுக்களின் பகுதிமட்டும் திரி யாதும் கெடாதும் நிற்கும் காரணம், முற்கூறியவாறு எடுத்தலோசை அதனிடத்து நிற்றலேயாகும்.

செய்யுளில் மோனை எதுகை என்னும் தொடை யமைந்த சொற்களின் முதலசை மற்ற அசைகளை விட எடுத்தொலிக்கப்படுகின்றது. ஒவ்வோரடியி லும் பெரும்பான்மையும் முதற்சீரும் மூன்றாம் சீரும்

13. ஆங்கிலத்தில் கன்டக்ட் (conduct) என்னும் வினை, தொழிற்பெயராகும்போது ஒலியழுத்தம் பெறுவதால் கான்டக்ட் (conduct) எனத் திரிதல் காண்க. இதுபோன்ற சொற்கள் பல ஆங்கிலத்தில் உள்ளன.

மோனையாக அமைதலின் அவற்றின் முதலசைகள் எடுத்தொலிக்கப்பெறும். ஒவ்வொரு செய்யுளிலும் அடிதோறும் முதலசையில் எதுகை அமைதலின் அம் முதலசைகளும் எடுத்தலோசை பெற்றவையாகும்.

ஒரு சொல்லின் ஒலியழுத்தத்தில், சொல்லின் முதனிலை இறுதிநிலைகளை எடுத்தும் படுத்தும் ஒலித்தல் உண்டெனக் கண்டோம். ஒரு வாக்கியத்திலும் இவ்வாறே ஒலியழுத்தம் உண்டு.[14] வாக்கியத்தை ஒலிக்கும்போது, ஒரு சொல்லை எடுத்தும் ஒரு சொல்லைப் படுத்தும் ஒலித்துப் பொருள் வேறுபாடு உணர்த்தும் முறை தமிழில் உள்ளது. நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரை செய்யும்போது இவ்வாறு சொற்களை எடுத்தும் படுத்தும் ஒலித்துப் பொருள் காண்கின்றார்.[15] பேச்சுவழக்கில் இம்முறை இயல்பாக அமைந்துள்ளது. "நான் பூனையைப் பார்த்தேன்" என்னும் வாக்கியத்தில் உள்ள மூன்று சொற்களில் ஒன்றை எடுத்தும் ஏனையவற்றைப் படுத்தும் ஒலித்து மூன்று வேறு வேறு பொருள்களை உணர்த்தலாம்.

---

14. We do not utter all the words of a sentence, nor all the syllables of a word, nor indeed, all the sounds of a syllable at the same musical level or pitch. This rise and fall in musical pitch is called, in the language of phonetics, intonation. Intonation very often seems to modify the meaning of a word or of a sentence. (G. Noel-Armfield, General Phonetics, pp. 66, 69.)

15. முற்படக் கிளந்த என எடுத்தல் ஓசையாற் கூறவே, பிற் படக் கிளந்த எழுதிணை உளவாயிற்று.

(நச்சினார்க்கினியர், தொல். பொருள். க)

(1) 'நான்' என்னும் எழுவாயை எடுத்தொலித்தால், "நான்தான் பார்த்தேன்; வேறு யாரும் பார்க்கவில்லை" என்று பொருள்படும்.

(2) 'பூனையை' என்னும் செயப்படு பொருளை எடுத்தொலித்தால், "நான் வேறொன்றையும் பார்க்கவில்லை ; பூனையைமட்டும் பார்த்தேன்" என்று பொருள்படும்.

(3) பார்த்தேன் என்ற சொல்லை மட்டும் எடுத்தொலித்தால், "நான் வேறொன்றும் செய்யவில்லை; பூனையைப் பிடிக்கவில்லை; வாளா பார்த்தேன்" என்று பொருள்படும்.

இது வாக்கிய ஒலியழுத்தம் எனலாம்.

வாக்கியம் முழுவதனையும் ஒலித்திடும்போது எடுத்தல் படுத்தல் இல்லாமலும் ஒருவகை வேறுபாட்டை உண்டாக்கலாம். இதுவும் பேச்சுவழக்கில் இயல்பாக அமைந்தது. "நீ சொன்னது மெய்" என்னும் வாக்கியத்தை ஒலிக்கும் வகையால் (1) நீ சொன்னது உண்மைதான் என்ற எளிய பொருளையும் (2) நீ சொன்னது பொய் என்ற எதிர்மறைப் பொருளையும் உணர்த்தலாம். இவ்வாறே ஒவ்வொரு வாக்கியத்திற்கும் எதிர்மறைப் பொருளை உணர்த்தும் ஒலிவகை உள்ளது. இந்த எதிர்மறைப் பொருளை எள்ளுங் குறிப்போடு கலந்து உணர்த்துதலும் உள்ளது. "நீ எவ்வளவு பெரியவன்!" என்னும் வாக்கியத்தை அவ்வாறு ஒலித்துக் காணலாம்.

"அவன் இங்கே வந்தான்" என்னும் வாக்கியம் செப்பாக வழங்குவதே பெரும்பான்மை. ஆயின்,

அந்த வாக்கியத்தை ஒலிக்கும் வேறுபாட்டால், "அவன் இங்கே வந்தானா?" என்ற வினாவாகப் பொருள் பயக்கச் செய்யலாம். இவ்வாறே, ஆ ஓ என்ற வினா இடைச்சொல் இல்லாமல், "நீ வந்தாய்" முதலான வாக்கியங்களை வேறுபட ஒலித்து "நீ வந்தாயா" முதலான வினாப்பொருளை உணர்த்தலாம்.

இவ்வாக் கியங்களில் எதிர்மறைப் பொருளும், எள்ளல் பொருளும், வினாப் பொருளும் உணர்த்தும் இடைச் சொற்கள் இன்றியே அவ்வப்பொருள் உணர்த்தப்படல் காணலாம். இவ்வாறு அவ்வப் பொருளை உணர்த்துவது ஒலிவகையே (*intonation*) ஆகும்.

### ஒலியசை முறை (*Principles of Syllabation*)

எழுத்துக்கள் சில சேர்ந்து சொற்களாக அமை கின்றன. அவ்வாறு சொற்கள் அமையும் முறையில் எளிமையும் உண்டு, அருமையும் உண்டு. திராவிட மொழிகளில் எளிமையே காணப்படுகின்றது. ஒலித் தற்கரிய கூட்டொலிகளையும் ஒலியமைப்பிற்குக் கூடா ஒலிகளையும் திராவிட மொழிகள் ஒதுக்கி வந்திருக்கின்றன. உயிரும் மெய்யும் சேர்ந்து ஒலித்தற்கு எளியனவாக உள்ள அசைகளே சொற்களாக அமைந்துள்ளன. 'க்ஞ' முதலான கூட்டொலிகள் அக்ஞானம் முதலிய சொற்களில் உள்ளன. அத் தகைய வட சொற்கள் தெலுங்கு கன்னட மலையாள மொழிகளில் காணப்பட்டாலும், அவற்றை அந்த மொழிகளின் இயற்கையான ஒலிகளாகக் கருதலா காது. பிறமொழியின் சொற்களை அவ்வாறே ஏற்றுக்

கொள்ளுவதால், அக்கூட்டொலிகள் அம்மொழிகளில் காணப்படுகின்றன. பிறமொழிச் சொற்களை அவ்வாறே ஏற்றுக்கொள்ளாமல், திராவிட ஒலிமுறைக்கேற்ப அமைத்துக் கொள்ளும் மொழி தமிழே. தமிழ் மொழியில் பழைய திராவிட மொழியின் ஒலியமைப்பு இன்னும் இருந்துவரக் காரணம் அதுவே. அதனால் அக்ஞானம் என்னும் வடசொல் தமிழில் அஞ்ஞானம் ஆகும்.

சொல்லின் முதலில் உயிரேனும் மெய்யேனும் வருதல் உண்டு. தமிழ் மொழியில் உள்ள பன்னிரண்டு உயிரும் மொழி முதலாக வரும்.[16] மெய்யெழுத்துக்களில் 'க ச த ந ப ம வ ய ஞ என்பவை முதலில் வருவன.[17] ஏனைய மொழிமுதலில் வாராக் காரணம், அவை முதலில் ஒலித்தற்கு அரிய ஒலிகளாக இருத்தலே யாகும்.

இந்த மெய்யெழுத்துக்களும் மொழி முதலாக வரும்போது உயிருடன் கூடியே வருமெனத் தொல்காப்பியனார் கூறியுள்ளார்.[18] மற்றொரு மெய்யுடன்

---

16. பன்னீருயிரும் மொழிமுதலாகும். (தொல். எழுத்து. ருசு)

17. மொழிமுதல் எழுத்துக்களில் ஙகரம் ஒன்றெனத் தொல்காப்பியனார் விதிக்கவில்லை. ஆயின், பவணந்தியார்,

சுட்டியா எகர வினாவழி அவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே (நன்னூல். எழுத்து. 106)

என விதித்துள்ளார். ஙனம் என்பது ஒரு சொல் எனத் தவருகக் கொண்டமையால், அங்ஙனம் இங்ஙனம் முதலிய சொற்களைக் கருதி இவ்வாறு விதிக்கலானார். ஆங்கனம் ஈங்கனம் முதலிய சொற்களின் திரிபே அவை என்னும் உண்மை உணர்ந்திருப்பின் இவ்விதி பிறந்திருக்காது.

18. உயிர்மெய் அல்லன மொழிதல் ஆகா. (தொ. எழு. சு)

கூடி முதலில் நிற்றல் இல்லை. ஆங்கிலம் முதலான மொழிகளில் இரண்டு மெய்யும் மூன்று மெய்யும் மொழி முதலில் நிற்கக் காண்கின்றோம்.

state — இருமெய்
strong — மூன்றுமெய்

தமிழில் இவ்வாறு இருமெய் வாராமை கண்ட தொல்காப்பியனார், மெய் மொழிமுதலாகும் போது உயிருடன் கூடியே வருமென்று விதித்துள்ளனர். மெய்யெழுத்துக்கள் இரண்டனைச் சேர்த்து ஒலிக்குங் கால் மூச்சுத்தடை மிகுவதால், முயற்சி அரிதாகின்றது.[19] மொழி ஒரு கருவியே ஆதலின், அதனை எளிதாக்கிச் சிறந்த வகையில் பயன்படுத்த விரும்பும் மக்கள் இத்தகைய சீர்திருத்தம் செய்து கொள்ளுதல் இயற்கை. அதனால், ஒலித்தற்கரிய கூட்டொலிகளை ஆங்கில மொழியினர் ஒலிக்காமல் விட்டு வருகின்றனர். *knife*, *know*, *gnow* முதலான சொற்களில் உள்ள முதல் மெய் ஒலிக்கப்படாமைக்கு இதுவே காரணமாகும்.[20]

---

19. The difficulty is increased when we have to pronounce two or more consonants together.... Accurate pronunciation therefore requires great effort, and since, according to an observation of Locke, labour for labour's sake is against nature, the tendency always exists of making as little effort as is consistent with the necessity of making oneself understood. (R. G. Bhandarkar, Collected works, Vol. IV, p. 251.)

20. We know that it is not because, by any force inherent in the word itself, the fuller form grew into the simpler, but because the combination kn, as initial, was somewhat difficult for men's organs to utter...the corruption went on gaining in popularity, until it became the rule of

சொல்லின் முடிவிலும் இரண்டு மூன்று மெய் யெழுத்துக்கள் நிற்றல் இல்லை.[21] போன்ம் என்னும் சொல்லின் இறுதியில் னகரமும் மகரமும் ஈரொற் றாய் நிற்கும் என்றும், அவ்விடத்தும் மகரம் முற்றி லும் ஒலிக்காமல் குறுகி ஒலிக்கும் என்றும் தொல்காப்பியனார் கூறியுள்ளார்.

செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற் றாகும்.
னகாரை முன்னர் மகாரம் குறுகும்.[22]

தனி மெய்யாக நிற்குமிடத்தும், எல்லா மெய் களும் வரத்தக்கன அல்லன. இடையினமாகிய எல்லா மெய்களும் மொழியிறுதியில் நிற்பன. மூக்கினத்துள் ஙகரம் நிற்றல் இல்லை. அதனை ஈற்றில் ஒலித்தல் அருமையாகும். ஏனைய ஞ ண ந ம ன என்னும் ஐந்து மெய்களும் ஒலிக்கும்போது மூக்கின் வழியாக மூச்சு வெளிப்படுதலின் தடையைப் போக்கும் முயற்சி இல்லை. ஆயின், வல்லினமாகிய க ச ட த ப ற என்னும்

our speech to silence the mute before the nasal in all such words (as in knife, knit, gnat, gnaw, etc.) (W. D. Whitney, Language and the Study of Language, p. 42.)

21. வடமொழியிலும் இரண்டு மெய்யெழுத்துக்கள் இறுதியில் நிற்றல் இல்லை. கிரேக்க மொழியில் ந,ச,ர என்னும் மெய்யெழுத்துக்கள் மட்டுமே ஈற்றெழுத்தாவன. சீனமொழியில் மூக்கின மெய் மட்டுமே ஈற்றில் நிற்கும். இதாலிய மொழியிலும் பாலினேஷிய மொழியிலும் உயிரெழுத்தே இறுதியில் வரும். ஆங்கில மொழியில் மட்டுமே ஓர் உயிர் எழுத்தைச் சூழ்ந்து ஆறு ஏழு மெய்யெழுத்துக்கள் நின்று சொல்லமையும் முறை உளது, splints, strands, twelfths போல. (Whitney, Language and the Study of the Language, p. 95).

22. தொல். எழுத்து. ௫௧, ௫௨

ஆறு மெய்யும் ஈற்றில் நின்று ஒலித்தல் பெரு முயற்சி யாகும். வெடியினம் (*plosives*) என்று ஒலிநூலார் பெயரிட்டதற்கேற்ப, நா மற்றோர் உறுப்போடு உறப் பொருந்தித் திடீரெனப் பிரிந்தால் அவை பிறக்கும். இத்தகைய முயற்சி சொல்லின் முடிவில் இருத்தல் நன்றன்று. ஆதலின், இந்த மெய்கள் ஆறும் குற்றிய லுகரத்தின் துணை கொண்டு சொல்லின் இறுதியில் நிற்றல் உண்டென்று தொல்காப்பியனார் ஓதியுள் ளார்.[23]

ஆதலின், தமிழில் சொல்லின் இறுதியில் நிற்கும் மெய்யெழுத்துக்கள் ஞ ண ந ம ன ய ர லவ ழ ள என்னும் பதினொன்றே யாகும்.[24] உயிரெழுத் துக்கள் பன்னிரண்டும் இறுதியில் வரும். தெலுங்கு கன்னடம் துளு என்னும் திராவிட மொழிகளில் ஒவ் வொரு சொல்லும் உயிரீருகவே முடியும். மலையாளம் தமிழ் முறையைப் பின்பற்றிய போதிலும், எல்லாச் சொற்களையும் உயிரீருக முடிக்கவே பெரும்பாலும் முயல்கின்றது. ஒலியெளிமை கருதியே இப்போக்கு இம்மொழிகளில் காணப்படுகின்றது. மண், பொன், நெல் என்னும் மெய்யீற்றுச் சொற்களும் ஒலித்தற்குச் சிறிதளவு அருமையாக இருத்தல் பற்றி, தமிழ் மக்களின் பேச்சில், அவை மண்ணு, பொன்னு, நெல்லு என்று குற்றியலுகர ஈருக ஒலிக்கப் படுகின்றன.

---

23. நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி யீற்றும்
குற்றிய லுகரம் வல்லா றூர்ந்தே. (தொல். எழுத்து. ௩௬)

24. ஞணநமன யரல வழள என்னும்
அப்பதி னொன்றே புள்ளி யிறுதி. (ஷை—௭௮)

சொற்களின் இடையே உயிரெழுத்துக்கள் இரண்டு சேர்ந்து வருவதில்லை. அவை இரண்டு வரின், அவற்றை உடன்படுத்த வகரம் அல்லது யகரம் உடம்படு மெய்யாக வரும். மெய்யெழுத்துக்கள் பல வாறு மயங்கி வரும். தொல்காப்பியனார் கூறியுள்ள வாறு:

| | |
|---|---|
| கட்க, கட்சி, பெட்பு<br>விற்க, முயற்சி, கற்பு<br>வெல்க, வல்சி, வள்பு | ட ற ல ள முன்<br>க ச ப |
| கொல்யானை<br>நல் வழி<br>வெள் யாறு<br>கள்வர் | ல ள முன்<br>ய வ |
| எண்கு, பண்பு, வெண்மை<br>நன்கு, அன்பு, மென்மை | ண ன முன்<br>க ச ஞ ப ம ய வ |
| ஆய்க, ஆர்க, ஆழ்க<br>பாய்ச்சு, பார்த்தல், கீழ்மை<br>சாய்வு, சார்பு, வாழ்வு | ய ர ழ முன்<br>மொழி முதல் மெய்கள் |

தொல்காப்பியனார் காலத்து வழங்கிய சில அரிய ஒலிகள் இக்காலத்து இல்லாமற் போயின. காலஞ் செல்லச் செல்ல, இவ்வாறு சில ஒலிகள் குறைதல் இயல்பே. எடுத்துக்காட்டாக ஞ ந ம வ என்னும்

25. டறலள என்னும் புள்ளி முன்னர்க்
கசப என்னும் மூவெழுத் துரிய. (தொல். எழுத்து. உ௩)

26. அவற்றுள்,
லளஃகான் முன்னர் யவவும் தோன்றும். (ஷை—உ௪)

27. அவற்றுள், ணனஃகான் முன்னர்க்
கசஞப மயவவ் வேழும் உரிய. (ஷை—உ௫)

28. யரழ என்னும் புள்ளி முன்னர்
முதலா கெழுத்து ஙகரமொடு தோன்றும். (ஷை—உ௬)

மெய்யெழுத்துக்களை அடுத்து யகரம் நிற்றல் உண்டு எனத் தொல்காப்பியனார் கூறியுள்ளார். ஆயின், அவ்வாறு நிற்றலை விளக்கும் சொற்கள் இல்லாமை கண்ட நச்சினார்க்கினியர், "இங்ஙனம் ஆசிரியர் சூத்திரம் செய்தலின் அக்காலத்து ஒருமொழியாக வழங்கிய சொற்கள் உள என்பது பெற்றாம். அவை இக்காலத்து இறந்தன" என்றார்.[29] மகரத்தின் முன் வகரம் நிற்கும் என்று தொல்காப்பியனார் கூறியதற்கும் இவ்வாறே, "இதற்கும் உதாரணம் இக்காலத்து இறந்தன" என்றார்.[30] ஆதலின் காலப்போக்கில் ஒலியசை முறையில் மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டே வருகின்றன என அறியலாம்.

ங ஞ ண ந ம ன என்னும் மூக்கின மெய்களை அடுத்து அவற்றின் இனமாகிய கசடதபற நிற்றல் பெருவழக்காகும்.[31]

அங்கு, அஞ்சு, அண்டு, பந்து, கம்பு, கன்று.

இவையெல்லாம் ஒரு மெய்யின் முன் வேறு மெய் மயங்கும் வேற்றுநிலை மெய்ம்மயக்கமாகும். இவ்வாறு மயங்காத மெய் நான்கு க ச த ப என்பன. இவற்றின் முன் வேறு மெய் வருவதில்லை; அவ்வம் மெய்யே வரும்.

29. தொல். எழுத்து உஎ

30. ஷை—உஅ

31. ஙஞண நமன எனும் புள்ளி முன்னர்த்
தத்தம் இசைகள் ஒத்தன நிலையே (தொல். எழுத்து உரு)

32. கசதப ஒழித்த ஈரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகுமிவ் விருபால் மயக்கும் மொழியிடை
மேவும்; உயிர்மெய் மயக்கள வின்றே. (நன். எழு. 110)

விக்கல், அச்சம், அத்தன், செப்பம்

இவ்வாறு ஒரு மெய்யின் முன் அம்மெய்யே வந்து மயங்கும் மயக்கம் உடனிலை மெய்ம்மயக்கம் எனப் படும்.[32] அவ்வாறு மயங்காத மெய் இரண்டே: அவை ர ழ என்பன.[33]

இம்முறைக்கு வேறான ஒலியசைமுறை வடமொழி முதலான பிறமொழிகளில் அமைந்துள்ளது. ஆதலின், பிறமொழிச் சொற்கள் தமிழில் புகும் போது, மெய்களுக்கிடையே உயிர் புகுத்தியோ, மெய் களில் ஒன்றை மற்றொன்றாகத் திரித்தோ (*anaptyxis or assimilation*) ஒலித்தற்கு எளியன ஆக்குவர். ஏனைத் திராவிட மொழிகளில் வடசொற்கள் பல கலந்து அந்த ஒலிமுறை பழகிவிட்டமையால், இவ் விதிகள் போற்றப்படுவதில்லை.

தத்வ > தத்துவ — உயிர் புகுதல்
க்ருஷ்ண > கிருட்ண
> கிருட்டின — ,,
அக்ஞானம் > அஞ்ஞானம் — மெய் திரிதல்[34]
பக்தி > பத்தி ,,

---

33. மெய்ந்நிலை சுட்டின் எல்லா எழுத்தும்
தம்முன்தாம் வரூஉம் ரழ அலங் கடையே.
(தொல். எழுத்து. ௩௦)

34. ஆங்கிலத்திலும் பின்வரும் சொற்களில் இத்தகைய மாறுதல் காணலாம்:

dis - fuse > diffuse
in - possible > impossible
ad - pend > append
ad - firm > affirm
ad - sign > assign

ஆங்கிலச் சொற்கள் தமிழில் புகும்போதும் இவ்வாறு மாறுதலடைந்து தமிழின் ஒலி முறையைப் பெறுகின்றன.

இங்க்லாந்த் > இங்கிலாந்து — உயிர் புகல்
க்றைஸ்ட் > கிறிஸ்து
> கிறித்து — திரிதல்

தமிழில் இவ்விதிகள் போற்றப்படுமளவு ஏனைய திராவிட மொழிகளில் போற்றப்படவில்லை. ஆதலின், தெலுங்கு முதலியவற்றில் இவை திராவிட மொழிச் சொற்கள் என்றும், இவை பிறமொழிச் சொற்கள் என்றும் ஒலியமைப்பை நோக்கிப் பிரித்துவிடலாம். தமிழில் புகும் பிறமொழிச் சொற்கள் திரிந்தே புகுவதால், தமிழ்ச் சொற்கள் போன்றே அமைந்துள்ளன. தமிழ் மொழியின் ஒலியமைப்பு எவ்வாறு போற்றப்பட்டு வருகின்றதென்பது இதனால் அறியப்படும்.

ஆயினும், வடமொழியின் கலப்பால் நாளடைவில் மேற்கண்ட விதிகள் மெல்ல மெல்ல மாறத் தொடங்கியுள்ளன. இன்று பக்தி, யுக்தி, தத்வம் என்று பேசவும் எழுதவும் காண்கின்றோம். நெடுங் காலத்திற்கு முன்னரே பவணந்தி முனிவர் மொழி முதல் வரும் எழுத்துக்களைப்பற்றிய விதிகளை மாற்றத் தொடங்கினார். எடுத்துக்காட்டாக,

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔஎனும் மூன்றலங் கடையே[35]

எனத் தொல்காப்பியனார் கூறியிருக்க, இரண்டாயிரம் ஆண்டுகள் கழித்து வந்த பவணந்தியார் சகரம் எல்லா

35. தொல். எழுத்து. சூ ௨௯

உயிருடனும் மொழிமுதலில் வரும் எனக்கொண்டு, அவ்விதியை மாற்றத் தொடங்கினர். காரணம் என்னவெனில், தொல்காப்பியனார் காலத்தில் வழங்காத சங்கம், சகடம் முதலான வடசொற்கள் நன்னூலார் காலத்தில் பயின்று வந்தமையே ஆகும்.[36]

யகரமெய் இன்னவுயிரோடுகூடி மொழிமுதலில் வரும் என விதிக்கும் தொல்காப்பியனார்,

'ஆவோ டல்லது யகர முதலாது'[37]

என விதித்திருக்க, நன்னூலாரோ,

'அஆ உஊ ஓஔ யம்முதல்'[38]

என்றார். யவனர், யானை, யுகம், யூகி, யோகம், யௌவனம் என்பன உரையாசிரியர் காட்டும் உதாரணங்கள். யானை என்பதொன்று தவிர ஏனைய வடசொற்களே.

ஞகாரம் ஆஎஒ என்னும் மூன்றுயிரோடு மட்டும் மொழிமுதலாம் எனத் தொல்காப்பியனார்,

"ஆஎஒ
என்னும் மூவுயிர் ஞகாரத் துரிய"[39]

---

36. இனி முதலா மென்ற பத்துயிர் மெய்யுள் வகர முதலிய நான்கினையும் விதந்து கூறவே, ஒழிந்த ஆறு மெய்யும் பன்னிரண்டுயிரோடு முதலாமென்பது அருத்தாபத்தியாற் பெற்றாம்.

இனி, "சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே—அஐ ஔ எனும் மூன்றலங் கடையே" என்பது முதலாக இன்னோரன்ன சில எழுத்துக்களை மொழிக்கு முதலாகா என ஆசிரியர் தொல்காப்பியர் விலக்கினாராலோ எனின், இவ் வடமொழிகளும் திசைச் சொற்களும் அக்காலத்து இவ்வாறு தமிழின்கட் பயின்று வாராமைபற்றி யென்க. (நன்னூல், எழுத்து. 106—விருத்தியுரை.)

37. தொல். எழுத்து. சுரு

38. நன்னூல், எழுத்து. 104

என விதித்தார். ஆயின், ஞமலி முதலிய சொற்களின் வழக்காற்றைக் கண்ட பவணந்தியார்,

"அஆஎ ஒவ்வொ டாகுமஞ முதல்"[40]

என அகரமும் சேர்த்து விதித்தார். இவையெல்லாம் கால வழக்கினுனே, பிறமொழிச் சொற்கள் புகப்புக, ஒலிமுறைகளும் மாறும் என்னும் உண்மையைத் தெரிவிக்கின்றன.

தமிழில் இவ்வாறு கூட்டொலிகள் குறைவாக இருத்தலாலும், பொருந்தா ஒலிகள் கூடாமல் இருத்தலாலும், இவற்றிடையே ஒலியெளிமை கருதி உயிர்புக்கு நிற்றலாலும், சொற்கள் தம்மளவில் நீண்டு அமைந்து காணப்படுகின்றன. தமிழ் மொழி நீண்ட சொற்களாலாகியது என்று பிறர் கருதத்தக்கவாறு உள்ளது. வடமொழி முதலான இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் இத்தகைய நெடுஞ்சொற்கள் (பெருகுகின்றது, இருக்கின்றன முதலியன போல) இல்லை என்பர். ஆயினும், அம்மொழிகளில் இத்தகைய எளிய முறையில் அமைந்த ஒலியசைகள் இல்லை என்பது எவரும் மறுக்கமுடியாத உண்மையாகும். அவற்றின் சொற்கள் சுருக்கியும் குறுக்கியும் அமைக்கப்பெற்று அரிதின் ஒலிக்கவேண்டியிருக்கின்றன. தமிழ் மொழியின் சொற்கள் நீண்டு பெருகியிருப்பினும் எளிதின் ஒலிக்கப்படுவனவாக உள்ளன. இது தமிழொலி முறையின் சிறப்பியல்பாகும்.

---

39. தொல். எழுத்து. கூ௪

40. நன்னூல், எழுத்து. 105

## அ. அடிச்சொற்கள் (Roots)

திராவிட மொழிகளில் அடிச்சொற்கள் தெளிவாய்ப் பிரித்தறியும் நிலையில் உள்ளன; சொற்களின் அடிப்படையான கருத்துக்களை உணர்த்தி நிற்கின்றன. அவை பெரும்பாலும் ஓரசைச் சொற்களாகவே இருக்கின்றன.

சொல்லுகின்றான் — சொல் : அடிச்சொல்
வருகின்றான் — வர் : அடிச்சொல்
பழுத்தது — பழு : அடிச்சொல்
(உகரம் — ஒலிநயம் பற்றி வந்தது)

திராவிட மொழியில் முதன் முதலில் ஓரசைச் சொற்களே இருந்துவந்தன என்பது கால்டுவெல் கருத்து.[1] எல்லா மொழிகளிலும் தொடக்கத்தில் பல வசைச் சொற்கள் இருந்தன என்றும், படிப்படியே அவை மருவியும் திரிந்தும் ஓரசைச் சொற்களாக மாறுவதே மொழிகளின் இயல்பு என்றும், ஜெஸ்பெர்ஸன் கருதுகின்றார்.[2] இஃது இன்றும் மொழி வளர்ச்சியில் காணத்தக்க உண்மையாகும். ஆதலின்,

---

1. Caldwell, A Comparative Grammar of the Dr. Languages, p. 196.

2. Language proceeds from original polysyllabism towards monosyllabism, just as the history of religion does not pass from the belief in one god to the belief in many gods, but universally from polytheism towards monotheism. We have to imagine primitive language as consisting of very long words, full of difficult sounds, and sung rather than spoken. (Jespersen, Progress in Language, p. 18.)

பழைய திராவிடத் தாய்மொழியில் நீண்ட சொற்கள் இருந்துவந்தன என்றும், அவையே இன்று சிறு சிறு சொற்களாகக் கல் மண் முதலியனவாக நின்றுள்ளன என்றும் எண்ணவேண்டுவதாக உள்ளது.[3] இவ்வாறு பலவகைச் சொற்கள் ஓரசைச் சொற்களாக மாறுதற்குக் காரணமான மொழி வளர்ச்சியை அளந்து கூறல் இயலாது. அதற்கு நெடுங்காலம் சென்றிருக்கும். இடையிடையே ஒலித்திரிபுகளும் எத்தனை வகையாகவோ நிகழ்ந்திருக்கும். இறுதியில் பேசுவதற்கு எளியனவாகவும் தக்கனவாகவும் இப்போது வழங்கும் வடிவங்களைப் பெற்று நிற்கின்றன. கல், மண் முதலிய சொல் வடிவங்கள் பழந்தமிழ்ச் செய்யுட்களிலும் காணப்படுகின்றன. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பழைய செய்யுட்களிலும் காணப்படுதலால், இந்தச் சொற்களின் பழமை தெளிவாகின்றது; இவற்றின் பழமையால், மொழியின் தொன்மையும் விளங்குகின்றது. ஆயின், வடமொழி முதலான இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் அடிச்சொற்கள் பேச்சு மொழியில் என்றும் வழங்காதன என்று ஜெஸ்பெர்ஸன் கருதுகின்றார்.[4]

---

3. 'had' என்ற மூன்றெழுத்துடைய ஆங்கிலச் சொல் habaidedeime என்ற பன்னிரண்டு எழுத்துடைய சொல்லின் திரிபு என்பர். இது சொற்கள் நீண்டிருந்து பின்னர்க் குறுகியமைதலை விளக்கும் சான்றாகும். (Jespersen, Progress in Language, pp. 18)

4. We cannot imagine people expressing themselves by means of a language consisting exclusively of roots such as those given by Sanskrit scholars; the highly abstract significations assigned to them would in themselves be sufficient to preclude the idea of such a language existing as a practically useful means of communication—especially

இந்த அடிச்சொற்களுக்கும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் அடிச்சொற்களுக்கும் வேறுபாடு பெரிது. இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் அடிச்சொற்கள் என்று கூறப்படுகின்றவை இலக்கண நூலார் படைப்பே அல்லாமல், வழக்கில் உள்ள சொற்கள் அல்ல. ஆனால் திராவிட மொழியின் அடிச்சொற்கள் இலக்கண நூலார் படைப்பல்ல; நாள்தோறும் வழங்கும் சொற்கள்;[5] இலக்கியத்திலும் பண்டைக் கால முதல் இடம் பெற்று வாழும் சொற்கள்.

நடந்தான் என்னும் வினைமுற்றின் அடிச்சொல்லாக உள்ள நட என்பது இன்றும் பேச்சு வழக்கில் உள்ளதே. நட என்பது ஏவலொருமையாக வழங்குகின்றது. இவ்வாறே வினைச்சொற்களின் அடிச்சொல்லெல்லாம் ஏவலொருமையாக வழங்கக் காணலாம். பவணந்தி முனிவர் வினையடிகளை "ஏவல் வினைப் பகாப்பதம்" என்று குறித்தது பொருத்தமானதேயாகும்.[6] திராவிட மொழிகளின் பொது இயல்பாகிய இது, நெடுங்காலத்திற்கு முன்பே தனித்துப் பிரிந்து

---

between savage or worse than savage beings. No; of a certainty, roots never were spoken words. (Jespersen, Progress in Language, p. 113.)

5. In the Indo-European group, the root-words do not at all function in a sentence as in the Dravidian languages to this day. (K. Ramakrishnayya, Studies in Dravidian Philology, p. 106.)

6. நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வெளஉரிஞ் உண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கேள் அஃகென்
றெய்திய இருபான் மூன்றும் ஈற்றவும்
செய்யென் ஏவல் வினைப்பகாப் பதமே.

(நன்னூல். எழுத்து. 137)

பெலுஜிஸ்தானத்தில் வழங்கும் பிராஹுய் மொழியிலும் இன்றும் காணப்படுகின்றது.[7] இவ்வுண்மை உணராத வீரசோழிய ஆசிரியர் வடமொழியைப் பின்பற்றித் தமிழ் வினைச்சொற்களுக்குப் பகுதிகளைப் படைத்துக் கூறலானார்.[8]

அடிச்சொற்கள் தனித்தனியே நின்று சொற்றொடராகிப் பொருள் தருதல் உண்டு. 'நீ வா' 'கல் பார்' முதலான வாக்கியங்கள் அத்தகையன. சீன மொழியில் தொடர்கள் இவ்வாறு அமைந்தனவே. அம்மொழியில் அடிச்சொற்களே சொற்கள். அவற்றை விட வேறு சொற்கள் இல்லை.[9]

'கல்லைப் பார்த்தான்' என்ற தொடரில் கல், பார் என்னும் அடிச்சொற்கள் தனித்தனியே நிற்காமல் ஐ முதலான இடைச் சொற்கள் சேர்ந்து சொற்களாய் நின்று பொருள் தருகின்றன. இந்த முறையே திராவிட மொழிகளில் பெரும்பாலும் உள்ளது.

பொருள் வேறுபாடு புலப்படுத்த அடிச்சொல்லோடு சேர்க்கப்படும் பிற சொற்களை இடைச்சொற்கள் எனத் தமிழ் இலக்கணம் கூறும். அந்த இடைச்

7. Denys De. S. Bray, The Brahui Language, Part I, p. 117.

8. 'தமிழுக்கும் பண்ணிய தாதுக்களைப் படைத்துக் கொள்க' (வீரசோழியம், தாதுப்படலம்—1, கிரியாபதப் படலம்—9.)

தமிழ்ச் சொல்லிற்கு எல்லாம் வடநூலே தாயாகி நிகழ்கின்றமையின், அங்குள்ள வழக்கெல்லாம் தமிழுக்கும் பெறும்.

(ஷை—உரை)

9. Abel Hoveloque, The Science of Language, p. 125.

சொற்கள் பலவகைப்படுவன. அவைகளும் தொடக்கத்தில் தனித்தனிப் பொருள் உணர்த்தி அடிச்சொற்களாக இருந்தவையே. படிப்படியே அவை தமக்குரிய பொருள் இழந்து துணை உறுப்புகளாக நிற்கின்றன.

| அடிச்சொல் | | சொல் | | சேர்ந்த உறுப்பு |
|---|---|---|---|---|
| ஆ | — | ஆகு | } | கு |
| விழு | — | விழுங்கு | } | |
| பன் | — | பஞ்சு | — | சு |
| நீர் | — | நீந்து | — | து |
| கால் | — | காம்பு | — | பு |

இந்தோ-ஐரோப்பிய மொழிகளிலும் இவ்வாறு அடிச்சொல்லோடு பிற சொல் சேர்ந்து சொல்லாய் வழங்குதல் உண்டு. ஆனால் அம்மொழிகளில் அடிச்சொல்லும் சேர்ந்த சொல்லும் இவை எனத் தனித்தனியே பிரித்தறிதல் அரிது. அவை சிதைந்து கலந்து பிரிக்க முடியாதனவாக மாறியுள்ளன. திராவிட மொழிகளில் அவற்றைப் பிரித்தல் எளிது. இது பற்றியே இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் நிலையை உட்பிணைப்புநிலை (*Inflexional Stage*) என்றும், திராவிட மொழிகளின் நிலையை ஒட்டுநிலை (*Agglutinative Stage*) என்றும் குறிப்பர்.

திராவிட மொழிகள் ஒட்டுநிலையில் இருத்தலால், இருவகை இயல்பு அவற்றிடைக் காண்கின்றோம். ஒன்று, அடிச்சொல் தெளிவாக அறிய நிற்றல். மற்றொன்று, அடிச்சொல் சிதையாவாறு நிற்கவேண்டி, அதனுடன் சேரும் உறுப்புகள் தெளிவாக ஒட்டி நிற்றலால் பலவகைச் சொல்லாய் நீளல். கற்பிக்கின்றான்

என்ற சொல்லில், கல் என்னும் அடிச்சொல் தெளிவாக நிற்றல் காண்க. சேர்ந்த உறுப்புக்கள் சிதைந்து ஒன்றாகாமல் ஒட்டி வளர்ந்து நாலசைச் சொல்லாய் நீளலும் காண்க. திராவிட மொழிகளில் பலவசைச் சொற்கள் பெருகியிருத்தற்குக் காரணம் இதுவே. ஆசியாவிலும், ஐரோப்பாவிலும் உள்ள மொழிகளின் சொற்களைவிடத் திராவிட மொழிச் சொற்கள் நீண்டவை என்றும், அமெரிக்க மொழியின் பலவசைச் சொற்களுக்கு அடுத்தபடியாகக் கருதத்தக்கவை என்றும் கால்டுவெல் கூறுகின்றார்.[10]

மண் என்னும் அடிச்சொல்லோடு 'கு' என்னும் உருபைச் சேர்க்கும்போது மட்கு என்று ஒட்டுதல் பொருந்தும். ஆயின், அவ்வாறு ஒட்டுதல் அருகிய வழக்காகும். இந்தோ-ஐரோப்பிய மொழியாயின், அவை மட்கு என்றோ, மக்கு என்றோ, மனு என்றோ சேர்ந்து ம்னு (*mnu*) என்று சிதைந்து ஓரசையாய்த் திரிந்திருக்கும். ஆனால், தமிழில் மண்ணுக்கு என்று உகரச் சாரியை பெற்றோ, மண்ணிற்கு என்று இன் சாரியை பெற்றோ, மண்ணினுக்கு என்று இரு சாரியையும் பெற்றோ, பலவசைச் சொல்லாக வளர்ந்து நிற்கக் காண்கின்றோம்.

அனுப்பு, எழும்பு, நிரம்பு முதலான தமிழ் முதனிலைகளை ஆராய்ந்தால் பலவசைச் சொற்களாகக் காணப்படினும், அன், எழ், நிர் (அனு, எழு, நிர)

10. The majority of the words in every Dravidian sentence are longer than those of (perhaps) any other language in Asia or Europe, though inferior in length to the words of the polysynthetic languages of America.—Caldwell, A Comparative Grammar of the Dr. Languages, p. 196.

என்பவையே அடிச்சொல்லாகக் கருதத்தக்கவை. ஒலிநயம் பற்றி உகரமும் பொருள் வேறுபாடு கருதி 'பு' என்னும் துணைச்சொல்லும் பெற்று இவை நீண்ட முதனிலைகளாக அமைந்தன.

அடிச்சொற்கள் பொருளை உணர்த்தும் பெயர்களாக அமையும்போது, திணை பால் முதலியவற்றை உணர்த்தும் விகுதிகள் சேரும்; அவற்றோடு வேற்றுமை உணர்த்தும் உருபுகள் சேரும்.

| | | |
|---|---|---|
| ஊர் | ஊரான் | ஊரானை |
| கால் | காலன் | காலனுக்கு |

அடிச்சொற்கள் தொழிலை உணர்த்தும் வினைகளாக அமையும்போது, காலத்தை உணர்த்தும் இடைநிலை சேரும்; பிறவினைவிகுதி முதலியன சேரும்; திணை பால் உணர்த்தும் விகுதிகளும் சேரும்.

| | | | |
|---|---|---|---|
| பார் | பார்த்து | பார்த்தான் | |
| செய் | செய்வி | செய்வித்து | செய்வித்தான். |

இவ்வாறு எத்தகைய நீண்ட வினைச்சொல்லையும் பெயர்ச்சொல்லையும் ஆராய்ந்து ஓரசையாக உள்ள அடிச்சொல் இன்னதெனக் காணலாம்.

இந்த அடிச்சொற்களுள் பெயர்க்கு உரியவை என்றும், வினைக்கு உரியவை என்றும் தொடக்கத்தில் வேறுபாடு இருந்திருக்க முடியாது.[11] பேசிய மக்க

11. மொழிநூலார் சிலர் கருத்துப்படி, முதன்முதலில் வினைச் சொற்கள் இன்றியமையாதனவாக இருந்தன. பொருள்களைச் சுட்டியோ வேறு குறிப்பால் குறித்தோ உணர்த்த முடிந்திருக்கும் ஆதலின், பொருள்களை உணர்த்தும் பெயர்ச் சொற்கள் முதலில் தோன்றியன அல்ல என்பர். ஆனல் மாக்ஸ் முல்லர் முதலானோர் மாறுபடக் கருதுகின்றனர். அவர்தம் கருத்துப்படி,

ளின் கருத்தில் பெயர் வினை என்ற பாகுபாடு சிறிதும் இல்லாதிருந்த ஒரு நிலையே மொழியின் தொடக்க நிலையாகும். பல அடிச்சொற்களை ஆராய்ந்து காணின் இவ்வுண்மை புலனாகும்.

| | |
|---|---|
| பூ, பூக்கள், பூவை, பூவிற்கு | —பெயர் |
| பூ, பூத்து, பூத்தது | —வினை |
| காய், காய்கள், காய்களை | —பெயர் |
| காய், காய்த்து, காய்க்க, காய்த்தது | —வினை |
| சொல், சொற்கள், சொல்லன் | —பெயர் |
| சொல், சொல்லி, சொல்ல, சொல்லினான். | —வினை |

ஓரசையாகவுள்ள அடிச்சொற்கள் பல இவ்வாறு இருக்கக் காணலாம்.[12] ஈரசையாக உள்ளவற்றில் சில இவ்வாறு உள்ளன; பல, பெயர் வினை என்னும் வேறுபாடு உணர்த்தி நிற்கின்றன.

பெயர் வினை வேறுபாடு அற்றவை :—

| | |
|---|---|
| மலர், மலரான், மலரை | —பெயர் |
| மலர், மலர்ந்து, மலர்த்த, மலர்ந்தது | —வினை |
| அடி, அடியால், அடிகள் | —பெயர் |
| அடி, அடித்து, அடிக்க, அடித்தான் | —வினை |

---

வினையுணர்த்தும் செயல்களைச் சைகைகளால் உணர்த்த முடியுமாதலின், ஓநாய் முதலியவற்றைக் கண்டு அஞ்சிய மக்கள், "வருகிறது, வருகிறது" என்று, கத்தாமல் "ஓநாய், ஓநாய்" என்றே கூவியிருப்பராம். (F. Max Muller, The Science of Lauguage, p. 33.) ஆனால் உண்மை அதுவுமன்று; இதுவுமன்று.

12. பெருஞ்செய் ஆடவர் (புறநானூறு—199.5), அறிகொன்று (குறள்—638), கெடுவாக வையாது (குறள்—117) என்பவற்றில், செய், அறி, கெடு என்னும் அடிச்சொற்களே தொழிற்பெயராய் நிற்றல் காண்க.

பெயர் வினை வேறுபாடு பெற்றவை :—

| | |
|---|---|
| கடல், கடல்கள், கடலை, கடலுக்கு | —பெயர் |
| மரம், மரங்கள், மரத்தை, மரத்தால் | —பெயர் |
| நட, நடத்து, நடந்து, நடந்தான் | —வினை |
| திற, திறந்து, திறக்க, திறந்தான் | —வினை |

இந்த அடிச்சொற்களும் இவ்வடிவங்களை அடைதற்கு முன் பொதுவான ஓரசைச் சொற்களாக இருந்திருக்கும் எனக் கருதின், திராவிட மொழியின் அடிச்சொற்கள் பெயர் வினை இரண்டற்கும் பொதுவானவை என்று கொள்ள இடம் உண்டு.[13]

ஓரசையாக உள்ள அடிச்சொற்களை இரண்டு வகைப்படுத்தலாம் :—

(1) உயிரீருக உள்ள அடிச்சொற்கள். உயிர் பெரும்பாலும் நெடிலாக இருக்கும். வா, போ, தா, ஈ முதலியன.

(2) மெய்யீருக உள்ள அடிச்சொற்கள். இவற்றில் உயிர் பெரும்பாலும் குறிலாக இருக்கும். நில், சொல், கொள், எண், உண் முதலியன.

---

13. It would appear that originally there was no difference in any instance between the verbal and the nominal form of the root in any Dravidian dialect. Gradually, however, as the dialects become more cultivated, and as logical distinctness was felt to be desirable, a separation commenced to take place. The separation was effected by modifying the root by some formative addition when it was desired to restrict it to one purpose alone.—Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 193.

எஸ்கிமோக்கள் பேசும் மொழியில் இன்றும் பெயர்வினை வேறுபாடு இல்லாதிருத்தல் இங்குக் கருதத்தக்கது. (William Thalbitzer, in "The Absolutive and The Relative in Eskimo," Grammatical Miscellany to Otto Jespersen, p. 328.)

ஒலித்தற்கு அரிய மெய்கள் ஈற்றில் நிற்றல் திராவிட மொழிகளின் ஒலியியலுக்கு மாறுகலின், அவை உகரத்தைத் துணையாகக் கொண்டு நிற்கும். அவையும் இரண்டாம் வகையைச் சாரும். அவை நகு, எடு, அறு முதலியன.

வாழ், கேள், சாய், பார் முதலியன சிறுபான்மை நெடிலடுத்து மெய்யீருக வரும் அடிச்சொற்கள்.

வடமொழியில் ஒரு சில சொற்கள் தவிர, மற்றெல்லாச் சொற்களும் 'தாது' என்னும் வினையடியாகப் (*Verbal root*) பிறப்பவை என்றே கொள்ளப் படுகின்றன. ஆனால், திராவிட மொழிகளில் வினையடியாகப் பிறக்காத பெயர்ச் சொற்கள் பல உள்ளன. தலை, கால், வாய், செவி, நான், நீ, நீர், ஒளி, இருள் முதலியன அத்தகையன. ஆயினும், பெரும்பாலான பெயர்ச் சொற்களுக்கு வினையடி காணமுடியும்.

| பெயர் | | வினையடி | |
|---|---|---|---|
| விரல் | — | விரி | (விரிதல்) |
| கடல் | — | கட | (கடத்தல்) |
| பகல் | — | பகு | (பகுத்தல்) |
| குடல் | — | குடை | (குடைதல்) |
| மரம் | — | மர | (மரத்துப்போதல், உணர்ச்சியறுதல்) |

சில வினையடிகள் (*Verbal roots*) பெயராகும் போது அடையும் மாறுதல் மிகச் சிறிதே யாகும்.

| வினையடி | | பெயர் | மாறுதல் |
|---|---|---|---|
| காண் | — | கண் | உயிர் குறுகுதல் |
| நக்கு | — | நாக்கு | உயிர் நீளல் |
| மின் | — | மீன் | உயிர் நீளல் |

| | | |
|---|---|---|
| செய் | — கை | (ச > க. தெலுங்கில் செய் என்றால் கை என்றும் பொருள் தரும்.)[14] |
| முகர் | — மூக்கு | உயிர் நீளலும் பிறவும் |
| நில் | — நிலம் | அம் சேர்தல் |
| குதி | — குதிரை | ர்+ஐ சேர்தல் |

**அடிச்சொல்லோடு சேர்வன :**

அடிச்சொல் சிதையாவாறு ஒலித்துணையாகச் சேர்வன சில. அடிச்சொல்லின் பொதுவான பொருளைச் சிறப்பாக ஒன்றனுக்கு உரியதாக்கச் சேர்வன சில. திணை பால் இடம் வேற்றுமை காலம் முதலான வேறுபாடுகளை உணர்த்தச் சேர்வன சில. இவ்வாறு அடிச்சொல்லோடு சேரும் உறுப்புக்களை மூவகைப் படுத்தலாம்.[15]

1. ஒலித்துணையாவன : (*Enunciative Additions*)

2. பொருட் சிறப்புப் பயப்பன : (*Formative Additions or Paritcles of Specialisation*)

3. இலக்கண வேறுபாடு உணர்த்துவன (*Grammatical additions*)

---

14. கன்னடத்தில் கெய் (gey) என்பது செய் என்னும் வினைச்சொல்லின் பொருள் தருவது.

கையற்று (மணிமேகலை—3. 89) என்னும் தமிழ்த் தொடரில் கை என்னும் சொல் செயல் என்று பொருள்படல் காண்க. (கையற்று—செயலற்று.)

15. குயி மொழியில் எந்த அடிச்சொல்லும் தனியே நின்று சொல்லாவது இல்லையாம். அது பெயராகவோ வினையாகவோ அமையுமுன் ஓர் உறுப்புச் சேர்க்கப்படவேண்டுமாம். அவ்வாறு சேர்க்கப்படும் உறுப்புக்களை இந்த மூவகையாகவே பகுப்பர். (W. W. Winfield, A Grammar of the Kui Language, p. 8)

பவணந்தியார் பகுபத இலக்கணம் வகுத்தோதி உறுப்புக்களைப் பகுதி விகுதி இடைநிலை சாரியை சந்தி விகாரம் எனக் குறித்துள்ளார்.[16] பகுதி என்பது பெரும்பாலும் அடிச்சொல்லோடு ஒத்து வரும். சிறுபான்மை வேறுபடும். பெருகிற்று என்பதில் பெருகு பகுதி என்பர். ஆனால் பெர் அல்லது பெரு என்பதே அடிச்சொல்லாகும். உண்டான் என்பதில் உண் என்பதே பகுதியும் அடிச்சொல்லும் ஆகும். பகுதியை முதனிலை என்பர்.

விகுதி என்று இலக்கணம் கூறுவது திணை பால் முதலியன உணர்த்தும் இறுதியுறுப்பாகும். இதனை இறுதிநிலை என்பர்.

இடைநிலை என்பது பெயர்ச்சொல்லில் காலம் உணர்த்தாமல் நிற்கும் உறுப்பாகும். இது வினைச் சொல்லில் காலம் உணர்த்துவதாகும். காலம் உணர்த்தாத பெயரிடைநிலையைப் பொருட்சிறப்புப்பயப்பது எனலாம். காலம் உணர்த்தும் வினையிடைநிலையை இலக்கணவேறுபாடு உணர்த்துவது எனலாம்.

வலைஞன் —ஞ்—பெயரிடைநிலை
செய்தான்—த்—வினையிடைநிலை

சாரியை சந்தி விகாரம் என்பவற்றை ஒலித்துணையாய் அமைவன எனலாம்.

---

16. பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.
(நன்னூல்; எழுத்து. 133)

**1. ஒலித்துணையாவன:** *(Enunciative additions)*

இவை அடிச்சொற்களோடு சேர்ந்து அவற்றை ஒலித்தற்கு எளியனவாக மாற்றும். பொருளைச் சிறப்பித்தலோ வேறுபடுத்தலோ இவற்றால் இயலாது. பெரும்பாலும் உயிர்கள் இவ்வாறு ஒலித்துணையாகும். அவற்றுள்ளும் உகரமே பயின்று வருவது. மற்ற உறுப்புக்கள் வந்து சேரும்போது இது கெடுதலும் உண்டு.

ஆடு — உகரம் ஒலித்துணையானது.

ஆடு + ஐ — ஆட்டை — } உகரம் கெட்டது.
ஆடு + இன் + ஆன் — ஆடினன் }

எடு — உகரம் ஒலித்துணையானது

எடுத்தான் — உகரம் கெடவில்லை

எடு + ஐ — எடை — உகரம் கெட்டது.

கன்னடத்திலும் தெலுங்கிலும் உகரம் ஒலித்துணையாக வருதல் மிகுதி. மெய்யீற்றுத் தமிழ்ச் சொற்கள் பல இம்மொழிகளில் உகரம் பெற்று ஒலிக்கும். தமிழில் கண், மண் என்பன இம்மொழிகளில் கண்ணு மண்ணு எனப்படும். தமிழில் அகர ஈறாக உள்ள 'சில' என்னும் சொல் கன்னடத்தில் உகரம் பெற்று 'கெலவு' என நிற்கின்றது.

அ, அன், இன் முதலியன இவ்வாறு ஒலித்துணையாதல் பின்வரும் சொற்களில் காணலாம்.

நாம் + கு — நமக்கு — அ

அது + ஐ — அதனை — அன்

வீடு + கு — வீட்டிற்கு — இன்

**2: பொருட் சிறப்புப் பயப்பன:** (*Particles of Specialisation*)

சில அடிச்சொற்கள் பொதுவான கருத்தை உணர்த்தி நிற்க, அவற்றோடு சேரும் கு, பு முதலான உறுப்புக்கள் பொதுக்கருத்தை வெவ்வேறாக மாற்றிப் பல்வேறு பொருளுணர்த்தச் செய்கின்றன.

| | | |
|---|---|---|
| படு | > படகு | கு |
| கீழ் | > கிழங்கு | |
| கரு | > கருக்கு | |
| கொடு | > கொடுக்கு | |
| கால் | > காம்பு | பு |
| நிர | > நிரம்பு, நிரப்பு | |
| இரு | > இரும்பு | |
| பாய் | > பாம்பு | |

இவற்றுள் படு முதலியன பொதுக்கருத்து உணர்த்தும் அடிச்சொற்கள். கு முதலியன பொருட் சிறப்பு உணர்த்தச் சேர்ந்தவை.

இவ்வாறு சேர்க்கப்பெறும் கு பு முதலானவை இப்போது பொருளற்றுப் போயினும், தொடக்கத்தில் பொருளுணர்த்தும் தனிச் சொற்களாகவே இருந்திருக்கும். அவைகளும் அடிச்சொற்களாகவே இருந்தன என உணரலாம். படிப்படியே அவை பொருளிழந்து, இடைச்சொற்கள் போல் நின்றன. இன்று, முதனிலைகளாக உள்ள அடிச்சொற்களின் பொருளை ஒருவாறு வேறுபடுத்திச் சிறப்பிக்கும் ஆற்றலைமட்டும் பெற்றுள்ளன. ஆகு, நிரம்பு முதலான சொற்களில் முதனிலைகளோடு ஒன்றுபட்டுப் பிரிக்கமுடியாப் பாகன போல நிற்கின்றன.

'அட் (அடு)' என்பது ஓர் அடிச்சொல். அதன் பொதுக்கருத்து, சேர்தல், நெருங்குதல் என்பன போன்றது எனலாம். அச்சொல்லை வெவ்வேறான சிறப்புப் பொருளுக்குப் பயன்படுத்தப் பல்வகை உறுப்புக்கள் சேர்ந்துள்ளமை காண்க.

அட் (அடு) — பொதுவான அடிச்சொல்
அடங்கு — அ+கு — மூக்கொலி பெற்றுச் சேர்ந்தது
அடக்கு — அ+கு — வல்லொலியாய் இரட்டித்தது
அடை — ஐ சேர்ந்தது
அடர் — அர் ''
அடுக்கு — கு ''
அண்டு — இடையே மூக்கொலி சேர்ந்தது.

இவ்வாறே அண் என்னும் அடிச்சொல் வேறுபடுமாறு :—

அண் — பொதுச் சொல்
அணு — உ
அணுகு — உ+கு
அணி — இ

நட என்னும் பொதுக்கருத்து உணர்த்தும் அடிச்சொல் வேறுபடுமாறு :—

நட — பொது
நடை — ஐ
நடத்தல் — த்+அல்
நடத்தை — த்+ஐ

உடு என்னும் பொதுக்கருத்துடைய அடிச்சொல் வேறுபடுமாறு :—

உடு — பொது
உடை — ஐ
உடுத்தல் — த்+அல்

உறுப்பு — பு
உடுக்கை — க்+ஐ
உடல் — அல்
உடம்பு — அம்+பு

எல்லாத் திராவிட மொழிகளிலும் இத்தகைய அடிச்சொற்களும் அவற்றின் பல்வேறு வடிவங்களும் காணப்படினும், இலக்கிய வளமும் பண்பாடும் மிக்க தமிழ்மொழியில்தான், அவை இன்றும் கணக்கற்றவையாய்ப் பெருகி வழங்குகின்றன.

### 3. இலக்கண வேறுபாடு உணர்த்துவன :

பெயர்ச்சொற்களில் அன் ஆன் முதலியவை திணை பால் முதலியன உணர்த்தச் சேர்வன ஆகும். வினைச்சொற்களில் பிறவினை முதலிய வேறுபாடுகளும் காலமும் உணர்த்தச் சேர்வன. வினை முற்றுக்களில் திணை பால் உணர்த்தும் விகுதிகளும் சேரும்.

நல் — நல்லை—ஐ முன்னிலை ஒருமை உணர்த்திற்று
நல்லன் — அன் படர்க்கை உயர்திணை-ஆண்பால் உணர்த்திற்று
எழுப்பு — பு பிறவினை உணர்த்திற்று.

இவ்வாறு இலக்கண வேறுபாடு உணர்த்தும் உறுப்புக்கள் சேரும்போது அடிச்சொல் சிதையாமல் வேறுபடாமல் இருத்தலே திராவிட மொழியியல்பு ஆகும். ஆயின், சில சொற்களில் சிறிதளவு வேறுபடுதலும் உண்டு. அவ்வேறுபாடு உயிர் நீளல், அல்லது, குறுகல் என்னும் அவ்வளவே நிகழும்.

நாம் — நமன்
வே — வெந்து

நோ — நொந்து

காண் — கண்டு

இவ்வியல்புக்கு மாருகப் பெரிதும் வேறுபடும் அடிச்சொற்களும் சில உள. அவை ஏனைய மொழிகளில் உள்ளவற்றை நோக்க மிகமிகச் சிலவேயாகும்.

யான் — என்; யாம் — எம்
யகரமும் எகரமும் பிறப்பால் உறவுடையன.

நீ — நின், உன்

நீர் — நும், உம்

சா — செத்து - சகரம் மொழிமுதலாகா எழுத்து. ஒலித்தற்கு எளிமையாக்கவேண்டி அகரத்தை எகரமாக்கினர் எனலாம்.

வார், வர் - வந்து, வா என்னும் சொற்களில் ரகரம் கெடினும், வருக, வருவார், வருகின்றது, வருதல் என்னும் மற்ற இடங்களில் ரகரம் கெடவில்லை. தெலுங்கில் 'ரா' என்பதே ஏவல் ஒருமை. அது 'வ்ரா' என்று திரிந்த திரிபைக் காட்டுவது. கன்னடத்தில் 'பார்' என்பதே ஏவலொருமை. அது 'வார்' என்பதன் பழமையைக் காக்கின்றது.

தார், தர் - தந்து, தா முதலான சொற்களில் ரகரம் கெடினும், தரல், தருதல், தருக, தருவார், தரவு முதலான சொற்களில் கெடவில்லை.

## ௬. பெயர்ச்சொல்

**சொல்வகை.**

முதலில் திராவிட மொழியில் பெயர்ச்சொல் வினைச்சொல் என இருவகைச் சொல்லே இருந்தன. இஃது எல்லா மொழிகளிலும் இருந்த நிலையே யாகும்.[1] நாளடைவில், பொருள் வேறுபாடுகளைத் தெரிவிக்கவல்ல ஐ, ஆல், கு, இன், ஏ, ஓ, உம் முதலான சொற்களை யெல்லாம் தனியே வகுக்கவேண்டிய காரணத்தைத் தமிழிலக்கண நூலார் உணர்ந்தனர்; அவற்றை இடைசொல் எனத் தனியே வகுத்தனர்.[2] உரிச்சொல் என்ற நான்காம் வகையும் உண்டு. அது சொற்களின் முதனிலைகளைக் கூறுவதென்றும், பண்பு குறிப்பு இசை என்பவற்றைக் குறித்தது என்றும், செய்யுட்குரிய சொற்களைக் குறிப்பது என்றும் வேறு வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. பண்பு குறிப்பு இசை குறிக்கும் சொற்களே உரிச்சொல் எனும் கருத்துப் பொருந்துவது.[3] இவ்வாறு சொல் நான்கு;

1. Nouns and verbs represent the living elements of language in contradistinction to the grammatical devices—prepositions, conjunctions, articles, or pronouns. (J. Vendryes, Language, p. 133.

2. சில மொழியினர் பெயர் வினையோடு இடைச்சொற்களையும் கொண்டு வகைப்படுத்துவர். அரபி மொழியின் இலக்கணத்தைப் பின்பற்றி உருது மொழியின் இலக்கண நூலார் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல் என மூவகையாக்குவர். (John T. Platts, A Grammar of the Hindustani or Urdu Language, p. 21)

3. தொல். சொல். ௨௯௭

பெயர் வினை இடை உரி என்பர், இது பிற்கால வழக்கு. தொல்காப்பியனார்,

"சொல்லெனப் படுப பெயரே வினையென்(று)
ஆயிரண்(டு) என்ப அறிந்திசி னோரே"[4]

எனப் பெயரும் வினையுமே கூறிய பின்னர்,

"இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கின் தோன்றும் என்ப"[5]

என இடைச்சொல்லும் உரிச்சொல்லும் கூறினார்.

எனவே, எந்த மொழிக்கும் அடிப்படையாக உள்ள பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களுமே தமிழிலும் இருவகைச் சொற்களாகத் தொன்று தொட்டுப் போற்றப்பட்டு வருகின்றன என்பது உண்மை.

**பெயர்ச்சொல்.**

பெயர்ச்சொல், திராவிட மொழிகளில் திணை பால் எண் இடம் என்னும் இவற்றை உணர்த்தும். சொல்லின் பின் சேர்க்கப்படும் உருபு வேற்றுமையை உணர்த்தும். உருபு தொக்கு நின்றும் அவ்வேற்றுமையை உணர்த்தும்.

**திணை, பால் (*gender*)**

இந்தோ - ஐரோப்பிய மொழிகளில் ஆண்பால் பெண்பால் அலிப்பால் என முப்பால் உண்டு. அவ்வாறு பகுத்ததற்குக் காரணம் இன்னதென அறிதற்கில்லை; முன்னோர் வழங்கிய முறையே காரணமின்றிக்

கடைப்பிடிக்கப்படுகின்றது. திராவிடமொழிகளில் பொருள்களின் இயற்கையான தன்மை கண்டே பால் வகுக்கப்படுகின்றது. ஆனால் வடமொழி முதலான வற்றில், உயிரில் பொருள்களும் நுண் கருத்துக்களும் ஆண்பால் எனவும் பெண்பால் எனவும் பகுக்கப் படுகின்றன. ஆண் எனவும் பெண் எனவும் கூற முடியாத பொருள்களை உணர்த்தும் சொற்கள் ஆண்பாற் சொல் எனவும் பெண்பாற் சொல் எனவும் வழங்கப்பட்டு, ஆண்பால் உருபும் பெண்பால் உருபும் சேர்க்கப்படுதலும், அவன் அவள் எனச் சுட்ட இயைதலும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் காண்பன.[6] பழைய ஆங்கிலத்தில் 'பல்' ஆண்பாலாக வும், 'பாவம்' பெண் பாலாகவும், 'மனைவி' 'மங்கை' முதலியன அலிப்பாலெனவும் கருதப்பட்டு வந்தமை வியப்பாகவே உள்ளது.[7] ஆனால் இன்றுள்ள ஆங்கிலத் தில் அம்முறை அழிந்து இயற்கைத் திணைமுறை ஏற்பட்டுள்ளது. பிரெஞ்சு, ஜெர்மன் முதலியமொழிக ளில் பழைய முறைப்படியே காரணமற்ற பால்பாகு பாடு உள்ளது.[8] வடமொழியிலும் அஃது உள்ளது. இம் மொழிகளைக் கற்போர், காரணமற்ற பால்பாகுபாட்டு

6. பழைய ஆங்கிலத்தில், கொம்பு, முடிவு, நாள் முதலிய ஆண்பால் அல்லாத பலவற்றை அவன் என்ற ஆண்பாற் சுட் டால் சுட்டி வந்தனர்; இவ்வாறே துயரம் முதலியவற்றை அவள் என்ற பெண்பாற் சுட்டால் சுட்டி வந்தனர். (Jespersen, Growth and Structure of the English Language, p. 203)

7. Whitney, Language and the Study of Languages, p. 78.

8. இந்த மொழிகளில் திணைபால் பகுத்த முறைக்கு எந்தக் காரணமும் பொருந்துவதாக இல்லை. ஜெர்மன் மொழியில் சந்தி ரன் ஆண்பால் எனவும் சூரியன் பெண்பால் எனவும் வழங்கப் படுகின்றன. அரபி மொழியிலும் அவ்வாறே உள்ளன. (C. P

முறைப்படி சொற்களை நெட்டுருச்செய்து இடர்ப் படுதல் உண்டு.[9]

உயிரற்ற பொருள்களை உயிருள்ளன போலவும் பால்பாகுபாடற்றவைகளை ஆண்பால் பெண்பால் எனவும் கற்பிக்கும் கற்பனை இந்தோ - ஐரோப்பிய மொழிகளை முதலில் பேசிவந்த மக்களின் கற்பனை யாற்றலைக் காட்டுகின்றதெனை அறிஞர் சிலர் கூறுவர். எவ்வாறாயினும், இவற்றில் உள்ள பால்பாகுபாடு, இயற்கையில் காணப்படும் பால்வகுப்பிற்கு மாறானது என்பதுமட்டும் தெளிவு.[10] இத்தகைய செயற்கை

Brown, A Grammar of the Telugu Language, p. 49). மேசை, எண்ணம், பழம், இடி முதலியன ஒரு மொழியில் ஆண்பாலாக வும், மற்றொரு மொழியில் பெண்பாலாகவும் வழங்குகின்றன. (Jespersen, The Philosophy of Grammar, XVII)

ஜெர்மன் மொழியில் இளம் பெண்ணை உணர்த்தும்போது பால்பாகுபாடு இல்லை; ஆனால் ஒருவகைக் கிழங்கு பெண்பாலாக வழங்கும். அம்மொழியில் ஒருவரை நோக்கி 'அந்தக் கிழங்கு எங்கே?' என்று கேட்டால், 'அவள் சமையலறைக்குச் சென்றி ருக்கிறாள்' என்ற விடை வரும். அவரையே, 'அந்த இளம் பெண் எங்கே?' என்று வினவின், 'அது இசையரங்கிற்குப் போயிருக்கிறது' என்ற விடை வரும். (Breal's Semantics, Preface, p. 9)

9. We think it very inconvenient, and even hardly fair, that, in learning French and German, we are called upon to burden ourselves with arbitrary and unpractical distinctions of grammatical gender—Jespersen, The Philosophy of Grammar, XVII.

10. The ascription of gender to inanimate objects is worthy only of a savage and unreasoning age, and where the signs of gender have lost all reference to their original import, they become merely a relic and survival of barbarism. (Sayce, Introduction to the Science of Language, p. 375.)

முறையால் வளர்ந்த இலக்கண வேறுபாடுகள் காரணம் கூறமுடியாதவாறு நிற்கின்றன; ஆதலின் கற்பதற்கு இடரான பகுதிகளாகவும் நிற்கின்றன. செமிடிக் மொழிகளிலும் இதுபோன்ற செயற்கை முறையே காணப்படுகின்றது.[11]

ஆனல், மஞ்சு (*Manchu*) மங்கோலியன் (*Mangolian*), துருக்கி (*Turkish*) பின்னிஷ் (*Finnish*) முதலான மொழிகளில் மேற்கூறியவற்றிலிருந்து வேறுபட்ட பால்பாகுபாடே காணப்படுகின்றது. இவற்றில் எல்லாச் சொற்களும் அலிப்பாலெனக் கொள்ளப்படுகின்றன. கடவுள், மனிதன், மங்கை, மனைவி முதலிய சில சொற்களில் மட்டுமே ஆண்பால் பெண்பால் என்ற பகுப்பு உள்ளது. பொருளுக்கே பால் உண்டு, சொல்லுக்கு இல்லை என்ற கொள்கை அங்கு நிலவுகின்றதுபோலும்.

இவற்றையெல்லாம் நோக்கிப் பின்னர் திராவிட மொழியின் பால்பாகுபாட்டை ஆராய்ந்தால் திராவிட மொழிகளின் தனிச்சிறப்பும், அம்மொழிகளைப் பேசிய மக்களின் உளப்பண்பாட்டின் உயர்வும் புலனாகும். திராவிட மொழியில் திணை இருவகை. தமிழில் உயர்

---

The primitive Aryan had not yet distinguished the object thought of from the subject that thought of it; he was still in the stage of childhood, and just as he transferred the actions and attributes of inanimate objects to himself, so too he transferred to them the actions and attributes of himself and endowed them with a life similar to his own. (Ibid. 406.)

11. Jespersen, The Philosophy of Grammar, XVII.

திணை அஃறிணை எனக்குறிப்பர். தெலுங்கில் மஹாத், அமஹாத் எனக்குறிப்பர்.[12]

> " மக்கள் தேவர் நரகர் உயர்திணை
> மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை;[13]

என்பர் பவணந்தியார். அவரினும் நெடுங்காலம் முற்பட்ட தொல்காப்பியனார் கூறியதே உண்மையை விளக்கவல்லது.

> " உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே
> அஃறிணை என்மனார் அவரல பிறவே "[14]

பகுத்தறிவே காரணமாக மக்களெனச் சுட்டப்படுவோர் உயர்திணை என்பது தொல்காப்பியனார் கருத்து, எனவே மக்கட் பிறப்பின் உயர்வுக்குக் காரணமான பகுத்தறிவின் உண்மையும் இன்மையுமே திராவிட மொழிகளின் பால்பாகுபாட்டிற்கு அடிப்படை. ஏனைய மொழிகளில் உள்ளவாறு காரணமற்ற முறை இங்கு இல்லை. எளியதொரு காரணத்தால் அமைந்த

---

12. காகஸஸ் (Caucasus) நாட்டு துஷ் (Tush) மொழியில் உயர்திணை ஆண்பால், உயர்திணைப் பெண்பால், அஃறிணை (rational being of the male sex, rational being of the female sex, irrational being) என்ற மூன்று பிரிவுகள் உள்ளன. அந்தமான் (Andaman) மொழியில் உயிருடையன, உயிரில்லன (animate, inanimate) எனப் பகுத்தல் உள்ளது. மக்கள், மக்களல்லாதன என உயிருடையவற்றை இருவகைப்படுத்துவர். (Jespersen, The Philosophy of Grammar, XVII). புலு (Fulu) மொழியில் ஆண்பால், பெண்பால் என்ற வேறுபாடு இல்லை. ஆயின், மக்கள் ஒருவகை என்றும், மக்களல்லாத விலங்குகளும் பொருள்களும் இரண்டாம் வகை என்றும் கொள்ளப்படுகின்றது. (Abel Haveloque, The Science of Language, p. 64)

13. நன்னூல்—261

14. தொல். சொல். க

பாகுபாடும் இல்லை; உயர்ந்தவொரு காரணம் கொண்டே திணைபால் பகுக்கப்பட்டுள்ளன. உண்மையாக நோக்கின், இத்தகைய பாகுபாடே ஒரு மொழியை வழங்குவோர்க்கு வேண்டுவது என்பது விளங்கும். திராவிடமொழி பேசிய மக்கள் இலக்கணப் பாகுபாட்டிலும் அறிவுத் துறையிலும் எவ்வளவு முன்னேற்றம் உற்றிருந்தனர் என்பது உணர்ந்து வியத்தற்குரியதே.[15]

ஆயினும், அந்நிலைக்கு முன்னர், மிகப் பழங் காலத்தில் திராவிட மொழியிலும், சித்திய மொழியில் இருப்பதுபோல், எல்லாச் சொற்களும் ஒரே வகையாக—அஃறிணையாகக்—கருதப்பட்டுவந்த நிலை இருந்தது என்று கூறலாம்.

இறை, அரசு, வேந்து, இல் முதலான சொற்கள் மிகப் பழையவை. செய்யுள் வழக்கிற்கு உகந்தவை. அவை அஃறிணை வினைமுற்றுக்கொண்டே முடிந்துள்ளன. இறைவன், அரசன், வேந்தன், இல்லாள் முதலான சொற்கள் பிற்காலத்தில் அமைந்து, உரைநடையில் போற்றப்படலாயின.

> குடிமை ஆண்மை இளமை மூப்பே
> அடிமை வன்மை விருந்தே குழுவே
> பெண்மை அரசே மகவே குழவி..........
> அன்ன பிறவும் அவற்றொடு சிவணி
> முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம்
> உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்
> அஃறிணை மருங்கின் கிளந்தாங் கியலும்.[16]

என்று தொல்காப்பியனார் விதித்துள்ளார்.

---

15. Caldwell; A Comparative Grammar of the Dravidian Languages, p. 220.
16. தொல். சொல். ருசு

மலையாளத்தில் பையன் என்பதற்குப் பதிலாக பால்காட்டும் அன் விகுதியின்றிப் பைதல் என்றே (தமிழில் பையல், பயல் போல) இன்றும் வழங்குகின்றனர். ஆண், பெண் என வேறுபடுத்தல் வேண்டின் ஆண்பைதல் எனவும் பெண்பைதல் எனவும் கூறுவர்.

உயர்திணையில் ஒருவரை நோக்கி ஆண்பாலெனவும் பெண்பாலெனவும் பகுக்கும் பாகுபாடு இருக்கின்றது. ஆனால் பலரைநோக்கி அவ்வாறு பகுத்தல் இல்லை. ஆண்பன்மை (*masculine plural*) பெண்பன்மை (*feminine plural*) என்பன இல்லை. பலராக இருப்பின் ஆண் பெண் என்ற வேறுபாடின்றிப் பலர்பால் என வழங்குதல் உளது. மற்றொன்று: அஃறிணைப் பொருள்களுள் உயிருள்ள பொருள்களையும் ஆண்பால் பெண்பால் எனப் பகுத்தல் இல்லை. அவற்றை உயிரில்லாப் பொருள்களைப் போலவே ஒன்றன்பால், பலவின்பால் என வகுப்பர்.

தெலுங்கிலும் கோந்த் மொழியிலும் ஒரு வேறுபாடு காணப்படுகின்றது. அவற்றில் உயர்திணையில் பெண்பால் என்ற பகுப்பு இல்லை. பெண்கள் பலரைச் சுட்டும்போது பலர்பாலில் அடக்குதல் உண்டு; ஆனால் ஒருத்தியைக் குறிக்கும்போது உயர்திணையாகக் கொள்ளாமல் அஃறிணை ஒன்றன்பாலாகக் கூறுவர். 'அவள் வந்தாள்' என்ற தமிழ் வழக்கு, தெலுங்கில் 'அதி வச்சினதி' என்றாகும். அரசி ஆயினும் அணங்கே ஆயினும் ஒருத்தியாயின் அஃறிணையாக அடக்குதலே இம்மொழிகளில் உள்ள முறை.[17] 'அவன்' என்ற

17. குருக் மொழியில் இந்நிலையே உள்ளது. பெண்பால் ஒருமை இல்லை. பன்மையோ, ஆண்பால் பன்மையோடு ஒன்று

ஆண்பால்பெயர்க்கு ஈடாக 'அவள்' என்ற பெண் பால்பெயர் தமிழ் கன்னடம் மலையாளம் என்னும் மொழிகளில் உள்ளதுபோல், தெலுங்கிலும் கோந்தி லும் இல்லை. 'ஆமெ' என்ற பழைய தெலுங்குச் சொல் ஒரு பெண்ணைக் குறிப்பினும் அது வாடு என்னும் ஆண்பாலுக்கு ஈடான சொல் அன்று.

நீலகிரி மலையில் தூதர் கோடர் மொழிகளில் மிகப் பழையதொரு திராவிட முறை காணப்படுகின் றது. அஃதாவது, படர்க்கை இடப்பெயராக (*third person pronoun*) உள்ள சொல் அம்மொழிகளில் திணை பால் எண் என்னும் வேறுபாடற்றது. அதம், இதம் (*atham, itham*) என்னும் சொற்கள் அவன், அவள், அவர், அது, அவை என்றும், இவன், இவள், இவர், இது, இவை என்றும் தமிழில் வழங்குவன யாவற்றை யும் குறிப்பவை. ஆனால், அண்மையில், தமிழ், கன் னடம் ஆகிய மொழிகளின் கலப்பால், தூதர் பேச்சி லும் கோடர் பேச்சிலும் 'அவன்' 'அவள்' என்னும் பாலுணர்த்தும் இடப்பெயர்களும் புகுந்துள்ளனவாம்.

எனவே, திராவிட மொழியில் திணைப் பாகு பாடற்ற நிலையிலிருந்து இருதிணைப் பகுப்பும் ஐம்பால்

---

பட்டதாக உள்ளது. Thus, strictly speaking, there would be only two genders in Kurukh, viz, masculine and neuter, because each women taken singly is treated grammatically as a thing or a chattel, and only when in the plurality the Kurukh treats his woman like men. Yet, for this latter reason, and because there are in the pronoun special feminine forms and in the verb distinctly feminine inflectional forms, we deem it more appropriately to divide the Kurukh gender into masculine, feminine and neuter. (F. Hahn, Kurukh Grammar, p. 11.)

பகுப்பும் படிப்படியே வளர்ந்து அமைந்துள்ளன எனக் கோடல் பொருந்தும்.

**எண் (*Number*)**

திராவிட மொழிகளில் ஒருமை பன்மை என எண் இரண்டே. இருமை (*dual*) என்ற ஒன்று இல்லை. அது வடமொழியிலும் வடமொழியைச் சார்ந்த ஐரோப்பிய மொழிகளிலும் பெரு வழக்கினது.[18] வடமொழி இலக்கியமும் இலக்கணமும் திராவிட மொழிகளில் எவ்வளவோ கலந்தும் இருமை என்ற எண் நிலைபேறான இடம்பெற முடியவில்லை.

இம்மொழிகளில் திணைபால் பாகுபாடும் எண் பாகுபாடும் தனிப்பட்டு வேறு நிற்பன அல்ல. திணை பால் பாகுபாட்டிலேயே எண்ணும் கலந்து அமைகின்றது,

| | திணை | பால் | எண் |
|---|---|---|---|
| 1. | உயர்திணை[19] :— | ஆண்பால் } பெண்பால் } | — ஒருமை |
| | | பலர்பால் | — பன்மை |
| 2. | அஃறிணை[20] :— | ஒன்றன்பால் | — ஒருமை |
| | | பலவின்பால் | — பன்மை |

18. பாலினேஷிய மொழியில் ஒருமை இருமை மும்மை பன்மை என நான்கு வகை எண் முறை உள்ளது. (Whitney, Language and the Study of Language, p. 338)

19. ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்
பல்லோர் அறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் உயர்திணை யவ்வே.

(தொல். சொல். ௨)

20. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்(று)
ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே. (ஷை—௩)

உயர்திணையில் உள்ள பாகுபாட்டிற்கும் அஃறிணையில் உள்ள பாகுபாட்டிற்கும் வேறுபாடு உண்டு. உயர்திணை ஒருமையை ஆண் பெண் எனப் பிரித்தலும் அஃறிணை ஒருமையை அவ்வாறு பிரிக்காமையும் காண்க. பன்மையைப் பொறுத்தவரையிலும் அவ் வேறுபாடு இல்லை. ஆயினும் பால்காட்டும் விகுதிகளை நோக்கின், இருதிணைக்கும் அவை வேறு வேருக இருப்பதை உணரலாம். பால்காட்டும் விகுதிகளைத் தொல்காப்பியனுர் பாலறிகிளவி என்பர்.[21]

### (1) உயர்திணை ஆண்பால் (ஒருமை) விகுதிகள்

அன், ஆன், ஓன்

இம்மூன்றும் ஒன்றன் வடிவங்களே; ஒலி நயத்திற் கேற்பத் திரிபவையே. இவற்றிற்கும் படர்க்கை ஆண் பாற் சுட்டுப்பெயராகிய 'அவன்' என்பதற்கும் ஓர் ஒற்றுமை இருத்தல் எளிதில் புலனுகின்றது.

கன்னடத்தில் — அனு
பழங்கன்னடத்தில் — அம்
மலையாளத்தில் — தமிழில் உள்ளவையே
தெலுங்கில் — டு, உடு, அடு, ண்டு, உண்டு, அண்டு

தெலுங்கில் ண்டு, உண்டு, அண்டு என்னும் விகுதிகள் அன் என்பதன் திரிபுகளே. அன் > அன்ற் > அன்று > அண்டு > அடு என மாறுதல் இயற்கை. தெலுங்கில் றகரம் டகரமாதல் பல சொற்களில் காணப்படுவது (மாற்றம் > மாட). தமிழில் உள்ள '**மகன்**' தெலுங்கில் '**மகண்டு**' '**மகடு**' (கணவன்) என்ருதலும் ஒப்பிடத்தக்கது. தமிழிலும் '**பெண்**'

21. தொல். சொல். கக

என்னும் சொல் **பெண்டு, பேடு** என ஆதல் உண்டு. இவற்றில் உள்ள மெல்லினம் (மூக்கொலி 'ண') இன்னும் அடியோடு மறையவில்லை. 'வாடு' (அவன்) என்பதை அர்த்தாநுஸ்வார ஒலியுடன் சேர்த்து 'வாண்டு' என்பதைப்போல் இன்றும் பலர் ஒலிக்கின்றனர்.

**(2) உயர்திணைப் பெண்பால் (ஒருமை) விகுதிகள்**

அள், ஆள், இ

தெலுங்கிலும் கோந்த் மொழியிலும் இவற்றிற்கு ஈடாக அஃறிணை ஒன்றன்பால் விகுதியே வழங்குகின்றது. தெலுங்கில் சில இடங்களில் ஆளு என்ற சொல் (செய்யுளிலும் கொச்சை மொழியிலும்) வழங்குகின்றது.

மனமராளு — பேர்த்தி
[மனமா(ண்)டு — பேரன்]
கோடலு — மருமகள்

இகர விகுதி தமிழில் தலைவி, மனைவி, முதலிய சொற்களில் உள்ளது. வினைமுற்றுச் சொற்களில் அதற்கு இடமில்லை.

கன்னடம் — அரசிதி (அரசி)
தெலுங்கு — மாலதி (பறைச்சி), சின்னதி (சிறுமி)

**(3) அஃறிணை ஒன்றன்பால் விகுதி**

**து**

திராவிட மொழியில் பெயர்ச்சொல் ஒவ்வொன்றும் அஃறிணையாகவோ திணையற்றதாகவோ முதலில் இருந்து வந்துள்ளது. காலப்போக்கில் ஆண்பால் அல்லது பெண்பால் உணர்த்தும் விகுதி சேர்ந்த பின்னர் அஃது உயர்திணை உணர்த்துவதாயிற்று.

மக — மகவு — அஃறிணை ஒருமை
மக + அன் > மகன் — ஆண்பால்
மக + அள் > மகள் — பெண்பால்
தலை — அஃறிணை ஒருமை
தலை + அன் > தலைவன் — ஆண்பால்
தலை + இ > தலைவி — பெண்பால்

குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி..........
உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்[22]
அஃறிணை மருங்கின் கிளந்தாங் கியலும்

என்னும் தொல்காப்பியமும் இப்பண்டைய நிலைக்குச் சான்று பகர்வதே ஆகும்.

அஃறிணை உயிர்களாகிய பறவை, விலங்கு முதலியவற்றிற்குப் பால்பகுப்பு இருந்தும் இலக்கணத்தில் அவற்றை ஆண்பால் எனவோ பெண்பால் எனவோ குறிக்க இடமில்லை. எப்பாலாயினும் அவற்றை வேறுபாடின்றி ஒருமையாயின் ஒன்றன்பாலென்றும் பன்மையாயின் பலவின்பால் என்றும் குறித்தல் மரபு. ஆயினும், மொழி மக்கள் கருத்தை விளக்குதற்கே ஏற்பட்டது ஆகையால், பால்வேறுபாடு பற்றிய கருத்துக்களை அச்சொற்கள் விளக்கி நிற்கின்றன. விளக்கு முறை இருவகை எனலாம் :—

(1) விலங்கிற்கும் பறவைக்கும் ஆண்பாற்குத் தனிப்பெயரும் அவ்வாறே பெண்பாற்குத் தனிப்பெயரும் உண்டு.

களிறு — ஆண்பால்
பிடி — பெண்பால்

(2) பால் விளக்காத பொதுச்சொல்லாயின், அச்சொல்லின் முன்னர் ஆண், பெண் முதலான பால் விளக்கும் சொற்களைச் சேர்த்தல் உண்டு.

யானை — பொதுச்சொல்
ஆண் யானை
பெண்யானை } பால் விளக்க வந்தவை

இவ்வாறு பால்காட்டும் சொற்களை முன் சேர்க்கும் முறை பிற்காலத்து வழக்கேயாகும். முற்கூறிய முறையே பண்டைக்காலத்து இருந்தது.

ஆண்யானை பெண்யானை எனப் பிற்காலத்துப் பால் தெரிய வழங்கியபோதும், வினைமுற்றுச் சொற்கள் திரியாமல் நிற்கின்றன.

ஆண்யானை வந்தது
பெண்யானை வந்தது

முதன்முதலில் எல்லாப் பெயர்ச் சொற்களும் அஃறிணை ஒன்றன்பாலாகவே வழங்கிவந்தமையால், அப்பாலுக்கெனத் தனி விகுதிகள் வரையறுக்கப்படவில்லை.

யானை, களிறு, மகவு, கிளி, அரசு, கல், மரம்

எனினும் அப்பாலுக்கென வினைமுற்றுக்களில் வழங்கிய விகுதி 'து' என்பதாம். அஃது ஆக்கச்சொற்களாகிய பெயர்களில் இடம்பெறலாயிற்று.

நெடுங்கோட்டது, பருத்தது, நல்லது

**பன்மை உணர்த்தும் முறை**

இந்தோ-ஐரோப்பிய மொழிகளின் சொற்களில் ஒருமையும் பன்மையும் தெளிவாய் விளங்கிநிற்கின்றன. இப்போது ஆங்கிலத்தில் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாக உள்ள *sheep* போன்ற சொற்கள் பண்டைக் காலத்தில் இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் இல்லை. சித்திய இனமொழிகளில் இத்தகைய தெளிவு இல்லை. பெரும்பாலும் ஒருமை பன்மை என்ற வேறுபாடு சொற்களில் காணப்படுவதில்லை.[23] முன்னும் பின்னும் அடுத்துவரும் சொற்களாலோ அல்லது சொல்வோன் கருத்துவகையாலோ ஒருமை அல்லது பன்மை என்பது உணரப்படும்.

திராவிட மொழிகளின் அமைப்பு, சொற்களின் ஒருமை பன்மையைப் பொறுத்தவரையில் இந்தோ-ஐரோப்பிய மொழியமைப்புக்கு மாறாகவும் சித்திய மொழி யமைப்புக்கு ஒப்பாகவும் உள்ளது. அஃறிணைச் சொற்களைமட்டும் ஆராய்ந்தால் திராவிடமொழிகளுக்கும் சித்திய மொழிகளுக்கும் ஒரு வேறுபாடும் இல்லை எனலாம். எடுத்துக்காட்டாக, தமிழில் உள்ள அஃறிணைப் பெயர்ச் சொற்கள் எல்லாம் பன்மை உணர்த்தும் 'கள்' விகுதி இல்லாமல் வழங்குகின்றன.[24] 'கள்' விகுதி சேர்த்துக்கொள்ளும் இட

23. நாகரிகமற்ற மக்கள் பேசும் பல மொழிகளில் ஒருமை பன்மை வேறுபாடே காணப்படுவதில்லை. ஹிதாட்சா (Hidatsa) மொழியிலும் சொனோரியன் (Sonorian) மொழியிலும் ஒருமை பன்மை என்ற வேறுபாடு பெயர்ச்சொற்களில் இல்லை. ((Sayce, Introduction to the Science of Language, p. 410.)

24. குருக் மொழியில் அஃறிணைப் பன்மை இல்லை என்று கூறும் நிலை உள்ளது. (F. Hahn, Kurukh Grammar, p. 73)

மும் உண்டு என்று தொல்காப்பியனுர் விதித்தலால், பண்டைய முறை இன்னதெனத் தெளிவாகின்றதன்றே ?

கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி உடைய பலவறி சொற்கே.[25]

இன்னும் நாட்டுப்புற மக்கள் ‘கள்’ விகுதி இல்லாமலே அஃறிணைச் சொற்களை வழங்குவதாலும் இவ்வுண்மை புலனுகும். செய்யுட்களில் புலவர்களும் ‘கள்’விகுதியைப் புறக்கணித்தே வந்துள்ளனர். நாட்டுப்புற மக்களும் புலவர்களுமே ஒரு மொழியின் உண்மை நிலையை விளக்க வல்லவர்கள் என்பது மொழி நூலார் கண்ட உண்மையாகும். அத்தகைய அஃறிணைச் சொற்களைப் பால்பகா அஃறிணைப் பெயர் என்பர் இலக்கண நூலார். ஏனைய திராவிடமொழிகளைவிடத் தமிழிலேயே இந்நிலை இன்றும் மாருமல் விளங்குகின்றது. திராவிட முதல் மொழியின் இயல்பை விளக்கவல்லது தமிழ்மொழியே என்னும் கொள்கையை வலியுறுத்தும் சான்றுகளில் இதுவும் ஒன்ருகும்.

எருது வந்தது (ஒருமை)
எருது வந்தன (பன்மை)

பன்மையைத் தெளிவாக்கும் இரண்டு முதலிய எண்களை முன்னர்ச் சேர்த்துக் கூறும்போதும் அப்பெயர்ச்சொல் திரியாமல் நிற்றல் காண்க.

ஓர் எருது (ஒருமை)
பத்து எருது (பன்மை)

பத்து எருது' என வழங்குதலே மொழிவழக்கிற்கு உகந்ததாக அறிஞர் கருதுகின்றனர்.

பலவற்றில் வேறுபட்டு நிற்பதுபோலவே பன்மை யுணர்த்தும் இவ்வகையிலும் தெலுங்கு வேறுபடு கின்றது. தெலுங்குமொழியில் அஃறிணைச் சொற் களெல்லாம் பன்மையுணர்த்தும்போது திரிகின்றன.

பேச்சுத்தமிழில் அஃறிணைப் பெயர்ச்சொற்களைப் போலவே, அஃறிணை வினைச்சொற்களும் ஒருமை பன்மை உணர்த்தாமல் நிற்கின்றன. ஒருமை வினை முற்றே பன்மை உணர்த்தற்கும் பயன்படுகின்றது.

ஓர் எருது வந்தது, பத்து எருது வந்தது.

எதிர்கால வினைமுற்றுக்களைப் பொறுத்த வரை யில், இலக்கியத்திலும் வழங்குகிறது.

ஓர் எருது வரும், பத்து எருது வரும்.

எதிர்கால வினைமுற்றுக்களில் ஒருமை பன்மை உணர்த்தும் விகுதி இன்மையே இதற்குக் காரண மாகும்.

திராவிட மொழிகளின் மற்றொரு சிறப்பியல் பாவது:—உயர்திணைப் பன்மை உணர்த்தும் விகுதியும் அஃறிணைப் பன்மை உணர்த்தும் விகுதியும் வேறுபடு தலே ஆகும். ஒன்றற்குரியது, மற்றொன்றற்கு வழங் குவது இல்லை. சில இடங்களில் மாறி வழங்குவது உண்டு. அது வழாநிலையன்று; சிறுபான்மை வழு வமைதியாயும், பெரும்பான்மை வழுவாயும் கொள்ளப் படும்.

நரியார் — அஃறிணை (உயர்திணைப் பன்மை விகுதி யாகிய ஆர் பெற்றது.)
மக்கள் — உயர்திணை (அஃறிணைப் பன்மை விகுதி யாகிய கள் பெற்றது.)

இதன் காரணம் என்னை எனின், பன்மை உணர்த்தும் 'ஆர்', 'கள்' முதலிய விகுதிகள் திணை பால்களையும் உடன் உணர்த்தும் ஆற்றலே யாகும். 'கள்' விகுதி முதலில் அஃறிணையில் இடம்பெற்று, நாளடைவில் பெருவழக்காகி, இன்று உயர்திணையிலும் இடம்பெற்றுநிற்கின்றது. ஆதலின், மக்கள் அரசர்கள் முதலிய சொற்கள் வழாநிலைபோல வழங்கலாயின.

தமிழில் உள்ள 'மக்கள்' என்பதற்கு நேரான தெலுங்குமொழிப் பலர்பாற்சொல் மகரு (கணவன்மார்) என்பதாகும். அச்சொல்லில் அஃறிணைப் பன்மை விகுதி (தெலுங்கு 'லு') இடம்பெறவில்லை. உயர்திணைப் பலர்பால் விகுதி அர் (ரு) இடம்பெற்றுள்ளது. அதுவே திராவிட மொழியியல்பிற்கு ஒத்ததாகும்.

'அவர்' முதலான சொற்கள் தமிழில் உயர்திணை ஒருமையை உயர்சொற் கிளவியாக (*honorific singular*) உணர்த்தும் வழக்கு உளது.[26]

அவர் ஓர் அமைச்சர்
அமைச்சர் வந்தார்......

இவற்றினின்றும் பன்மையை வேறுபடுத்தும்பொருட்டுப் பிற்காலத்தில் 'அர்' விகுதியோடு 'கள்' விகுதி

---

26. மரியாதைப் பன்மை என்னும் இந்த உயர்சொற்கிளவி திராவிட மொழிகளில் தொடக்கத்தில் இருந்திருக்காது எனலாம். இதற்குப் பிராஹுய் (Brahui) மொழி சான்றுரும். அம் மொழியில் இதற்கு இடமேயில்லை. பிற மொழியாளரே அம் மொழியில் பேசும்போது இதனைக் கையாளுகின்றனர். (D. S. Bray, The Brahui Language, p. 77.)

யும் சேர்த்து வழங்கலாயினர். 'அவர்கள்' 'அரசர்கள்' முதலான சொற்கள் எழுந்ததன் காரணம் இதுவே ஆகும். எனவே, தமிழ்மொழியில் உயர்திணைப் பன்மைச் சொற்கள் இருவகை ஆயின :—

(i) பலர்பால் விகுதி 'அர்' என்பதுமட்டும் பெற்று நிற்பவை—பல இடங்களில் உயர்சொற்கிளவியாக வழங்குபவை.

அவர் தலைவர்

(ii) பலர்பால் விகுதி 'அர்' என்பதோடு அஃறிணைப் பலவின்பால் விகுதி 'கள்' என்பதும் சேர்ந்து பன்மையை உணர்த்துபவை—இவை சில இடங்களில் உயர்திணை ஒருமையை உயர்சொற்கிளவியாக உணர்த்துதல் உண்டு.

தலைவர் அவர்கள்

தற்காலத் தெலுங்கிலும் இவ்வாறு இருவகைப் பலர்பால்சொல் உள்ளன.

(i) வாரு
(ii) வாருலு

மலையாளத்தில், அவர் என்பது உயர்திணைப் பலர்பாலையும், அவர்கள் என்பது உயர்சொற்கிளவியாக உயர்திணை ஒருமையையும் உணர்த்துகின்றன,[27]

27. உயர்சொற்கிளவிகளை வேறு வகையாகப் பெருக்கி வழங்குவது ஜப்பானிய மொழி. அம் மொழியில் நீ, நீர், நீங்கள் என்பவற்றிற்கு நேராக முன்னிலைச் சொற்கள் தனித்தனியே உயர்வு குறித்து வழங்குவன உள்ளன. அவற்றோடு அமையாமல் தன்மையிலும் இவ்வாறு உயர்வு தாழ்வு உணர்த்தும் சொற்கள் உள்ளன. தமிழில் அரசர் முதலானோர் தம் உயர்வு தோன்ற 'நாம்' எனத் தம்மைச் சுட்டிக்கொள்ளல் உண்டு. ஜப்பானியக் குழந்தைகள் உடன் விளையாடும் குழந்தைகளைச் சுட்ட, போக்கு, கிமி முதலான சொற்களை வழங்கும். இவற்றிற்கு அடிமை, தலை

தமிழிலும் மலையாளத்திலும் தன்மை முன்னிலை இடப்பெயர்களிலும் 'கள்' விகுதி சேர்ந்து வழங்குகின்றது.

நாங்கள், நீங்கள்

நீங்கள்' என்பது இம்மொழிகளில் பன்மையையும் உயர்சொற் கிளவியான ஒருமையையும் உணர்த்துவது. இதற்கு நேரான கன்னடச் சொல் 'நீவு தெலுங்குச் சொல் 'மீரு'.

இவ்வாறு 'கள்' விகுதியின் வழக்குப் பெருகிவரினும், வழாநிலை என்று கொள்ளக்கூடியதன்று; திராவிட மொழிகளின் இயல்புக்குப் புறமானதே யாகும்; வழுவமைதி எனவே அமையும். இருவேறு திணைக்கு இருவேறு பன்மை விகுதிகள் இருத்தலே மொழியியல்பாகும்.

**(4) உயர்திணை பலர்பால் விகுதி**

| | |
|---|---|
| தமிழ்<br>மலையாளம் | } அர், ஆர், இர், ஈர், அ, மார் |
| கன்னடம்<br>தெலுங்கு | } அரு, ஆரெ, எரு, ரி, ரு |

---

வன் என்பனவே பழைய பொருள். பாஸ்க் மொழி, பர்மிய மொழி முதலியவற்றில் வினைச்சொற்களிலும் இவ்வேறுபாடு வளர்ந்துள்ளது. ஜாவாவின் பழங்குடி மக்கள் பேச்சை ஆராய்ந்தால், ஒருவகைக் கருத்தையே பலவகையாகப் புலப்படுத்தல் காணலாம். வேலையாட்களிடம் பேசும்போது மொழி ஒருவகையாகவும், உயர்ந்தோரிடம் மற்றொரு வகையாகவும் ஒத்தவரிடம் இன்னொரு வகையாகவும் மாறி விளங்கும். (Jespersen, Mankind Nation and Individual, p. 144.)

'மார்' விகுதி 'ஆர்' என்பதினின்றும் வேறான தன்று. 'அர்' விகுதியின் ஈறு கெட்டதே 'அ' விகுதி.

(5) **அஃறிணைப் பன்மை விகுதி** *(Neuter pluralising particle)*

(i) கள், கள் (*gal*), லு (தெலுங்கில்), க் (கோந்த்) க, க் (*ga*) (கூ மொழியில்)

(ii) பல, சில, வந்தன முதலியவற்றின் ஈற்றில் உள்ள அகரம் (அவை என்பதில் அகரமே ஐகாரமாகத் திரிந்தது.)

## ௧௦. வேற்றுமை

தமிழ் மொழியில் வேற்றுமை உணர்த்துவன உருபுகள் என்று கூறப்படும். முதன் முதலில் வேற்றுமைப் பொருளை உணர்த்த முழுச்சொற்கள் வழங்கி யிருக்கவேண்டும். நாளடைவில் அச்சொற்கள் மருவித் திரிந்து உருபுகள் என வழங்கும் நிலை எய்தியிருக்கின்றன. இப்போதும் சில வேற்றுமைப் பொருளில் முழுச்சொற்கள் பயன்படுதலைக் காணலாம்.

கல்லால் எறிந்தான்—கல் கொண்டு எறிந்தான்
அவனது பசு—அவனுடைய பசு

கொண்டு, உடைய என்பன வினைச்சொற்கள். அவை மூன்றும் வேற்றுமைப் பொருளிலும் ஆறும் வேற்றுமைப் பொருளிலும் முறையே வருகின்றன. இவ்வாறு உருபுக்கு ஈடாக வருதலால், அவற்றைச் சொல்லுருபுகள் என்பர். அவைபோலவே, ஐ ஆல் கு என்னும் உருபுகளும் ஒரு காலத்தில் பெயர்ச்சொல்லாகவோ வினைச்சொல்லாகவோ இருந்திருக்கும் எனக் கொள்ளலாம். எனவே, முழுச்சொற்கள் திரிந்தே உருபுகளாயின எனல் வேண்டும்.

### 1. எழுவாய் வேற்றுமை

தமிழில் வேற்றுமை எட்டு. அவற்றுள் முதல் வேற்றுமை எழுவாய் வேற்றுமை எனப்படும்.

சித்திய மொழிகளில் உள்ளதுபோலவே, திராவிட மொழிகளிலும் எழுவாய் வேற்றுமை திரிபு

இல்லாத பெயர்ச்சொல்லாகும்.[1] அதற்கென உருபு இல்லை. 'ஆனவன்' முதலியவற்றை உருபு என்பது பொருத்தமற்றதே.

வடமொழியில் பெயர்ச்சொல்லின் வடிவம்வேறு; அதன் எழுவாய் வேற்றுமை வடிவம் வேறு. அதனை ஒட்டித் திராவிடமொழிகளை ஆராயந்த சிலர், இம் மொழிகளிலும் முதல் வேற்றுமைக்கு உருபு உண்டு என்றனர். அவர் கருத்துப்படி, மரம் என்ற சொல்லில் உள்ள 'அம்' முதல் வேற்றுமை உருபு ஆகும். ஐ முதலிய உருபுகளை ஏற்கும்போது 'அம்' கெடுவதால் அந்த 'அம்' என்பதே எழுவாய் வேற்றுமை உருபு என அவர்கள் கருதலாயினர்.

மரம்—மரத்தை

மர+அம்—மர+த்+ஐ

ஆனால் இவர்கள் மற்றோர் உண்மையை மறந்துவிட்டனர்போலும்! ஒருமையில் இதனைக்கண்டு மகிழ்ந்த இவர்கள் பன்மையை ஆராய்ந்திருப்பரேல், தம் கொள்கை பொருந்தாதெனை அறிந்திருப்பர்.

மரங்கள் — முதல் வேற்றுமை

மரங்களை } மற்ற வேற்றுமைகள்

மரங்களால்... }

பன்மைச் சொல்லாக நின்று உருபேற்கும்போது அந்த 'அம்' என்ற உறுப்பு எங்கும் நீங்காது நிற்றல் அறியத்தக்கது.

---

1. எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே.

(தொல். சொல். சுரு)

எழுவா யுருபு திரிபில் பெயரே. (நன்னூல்—295)

மற்றுமொன்று; தெலுங்கில் 'அம்' என்பது ஒருமைச்சொல்லிலும் எல்லா வேற்றுமைகளிலும் நீங்காது நிற்பதாகும்.

ஆதலின், வடமொழியமைப்பு வேறு, திராவிட மொழி யமைப்பு வேறு; வடமொழியில் பெயர்ச்சொல்லிற்கும் அதன் முதல் வேற்றுமைக்கும் வேறு வேறு வடிவங்கள் உண்டு;[2] திராவிடமொழியில் அவ்வாறு இல்லாமல், பெயர்ச் சொல்லெல்லாம் முதல் வேற்றுமையாய் வரும் எனத் துணிதலே பொருந்துவதாகும்.

கன்னடத்தில் தன்மையிடப் பெயராக 'நானு' என்பதும் படர்க்கையிடப் பெயராகத் 'தானு' என்பதும் வழங்குகின்றன. ஆனால் முதல் வேற்றுமையில் அவை 'நா', 'தா' என்றாகின்றன. ஆயினும், 'னு' அல்லது 'ன்' என்பதை முதல் வேற்றுமை உருபாகக் கொள்ளலாகாது. ஏனெனில், 'னு' அல்லது 'ன்' என்பது கன்னடத்தில் மற்ற வேற்றுமைகளில் காணப் படுவதால் என்க. 'என்னை' 'தன்னை' என்பன அச்சொற்களின் இரண்டாம் வேற்றுமை வடிவங்களாதலும் கருதத்தக்கது.

திராவிடமொழிகளின் மூவிடப்பெயர்கள் வேற்றுமை ஏற்கும்போது காணும் திரிபு ஒன்று உள்ளது. அஃதாவது, எழுவாய் வேற்றுமையில் உயிர் நீண்டும், ஏனை வேற்றுமையில் உயிர் குறுகியும் காணப்படும்.

---

2. ஆங்கிலம், பிரெஞ்சு முதலான மொழிகளிலும் முதல் வேற்றுமைக்கு உருபுகள் இருந்துவந்தன. இப்போது அவை கெட்டு, பெயரளவாய் நிற்கின்றன. (Max Müller, The Science of Language, p. 129)

தமிழ்
- நான், யான், நாம் — என்னை, நம்மை
- நீ, நீர் — நின்னை, உன்னை, நும்மை, உம்மை
- தான், தாம் — தன்னை, தம்மை

கன்னடம்
- நானு — நன்ன
- நீனு — நின்ன
- தானு — தன்ன

தெலுங்கு மொழியில் இரண்டாம் வேற்றுமையில் மட்டுமே உயிர் குறுகியொலித்தல் உண்டு.

நெட்டெழுத்து முந்தியதா, குற்றெழுத்து முந்தியதா, வேர்ச்சொல்லிற்கு உரியது எது என்பது பற்றித் துணிந்து கூறுவதற்கில்லை.

**வேற்றுமை ஏற்கும் பெயர்ச்சொல் திரிதல்**

பெரும்பான்மையும் பெயர்ச் சொல் திரியாது நின்று வேற்றுமைப் பொருள் உணர்த்தும். வேற்றுமை உருபு ஏற்கும்போதும் பெயரும் உருபும் இயல்பாகப் புணர்ந்து நிற்கும்.

கடல் + ஐ = கடலை

ஆனால், மூவிடப்பெயர்களில் அவ்வாறு இன்றித் திரிபு உண்டு என்பதை முன்னர்க் கண்டோம். எழுவாய் வேற்றுமையில் உயிர்நெடிலாயும் ஐ வேற்றுமையில் குறிலாயும் நிற்றல் கண்டோம்.

சில பெயர்ச்சொற்களில் வேறு வகையான திரிப உண்டு.

காடு

காடு + ஐ = காட்டு + ஐ = காட்டை

தமிழிலக்கணநூலார் இத்தகைய திரிபையும் உருபு என உடன்படுவதில்லை. ஆனால் இவ்வாறு திரிந்தா

லன்றி இச்சொற்கள் உருபு ஏற்பதில்லை; உருபு இன்றி வரும் வேற்றுமைத் தொகைகளிலும் இவ்வாறு திரிந்தாலன்றி வேற்றுமைப்பொருள் உணர்த்துவதில்லை. எனவே, வேற்றுமைப் பொருளைத் தொகா நிலையாகவோ, தொகை நிலையாகவோ உணர்த்துவதற்கு இத்திரிபு இன்றியமையாததாக உள்ளது.

**உருபேற்கும்போது வரும் சாரியைகள்**

(1) இன் கையினால் — தமிழ்
னி தானிகி (அதற்கு) — தெலுங்கு
ன குருவனகு (குருவுக்கு) — ஷை

(2) அத்து மரம் > மரத்தை — தமிழ்
தி நுதல் (நெற்றி) > நுததி — தெலுங்கு
வாயு (வாய்) > வாதி — ஷை
சே (கை) > சேதி — ஷை
அது (adu) பொன் > பொன்னதை — தமிழ்
அத் (ad) மர (மரம்) > மரத (மரத்தின்) — கன்னடம்

(3) அன் அது > அதனை — தமிழ்
அற்று பல > பலவற்றை — தமிழ்
அர் இது > இதரல்லி (இதில்) — கன்னடம்

(4) இ - வாரு (அவர்) > வாரி (அவர்களின்) — தெலுங்கு

(5) அ - யான் > எனக்கு — தமிழ்

(6) உ - அவன் > அவனுக்கு — தமிழ்

**இரண்டாம் வேற்றுமை** அல்லது **செயப்படுபொருள் வேற்றுமை**

உருபு : ஐ (எ, அ, அம். அன்னு, னு, னி)

தமிழிலும் மலையாளத்திலும் பெரும்பாலும் இரண்டாம் வேற்றுமை உருபின்றித் தொகையாகவே வழங்குகின்றது. பேச்சு வழக்கில் இதுவே மிகுதியாகக் காணப்படுகின்றது.

மரம் வெட்டினான்

பழைய இலக்கியங்களிலும் தொகையே மிகுதி. தொகையாக எழுதுதல் உயர்ந்த நடையாகவும் உருபு விரிய எழுதுதல் அத்துணை உயர்வு இல்லாத நடையாகவும் கருதப்படுகின்றது. சில இடங்களில் உருபு விரிதல் தவறாகவும் தோன்றுகின்றது.[3]

நான் கடிதம் எழுதினேன்
நான் கடிதத்தை எழுதினேன்

ஆனால், பொருள் தெளிவில்லாத இடத்தில், தெளிவு தரும் பொருட்டு உருபு வேண்டப்படும்.

புலி கொன்ற யானை
புலியைக் கொன்ற யானை

பழங்கன்னடத்தில் 'அம்' என்பது இரண்டாம் வேற்றுமை உருபாகும். அவள்—அவளம் (அவளை) புதுக் கன்னடத்தில் அவள்—அவளன்னு என்றாகும்.

தமிழில் உள்ள ஐ உருபு மலையாளத்தில் எகரமாக உள்ளது. டாக்டர் குண்டர்ட் மலையாளத்தில்

3. பின்னிஷ் (Finnish) மொழியில் பதினைந்து வேற்றுமைகள் இருந்தும், இரண்டாம் வேற்றுமையாகிய செயப்படுபொருளுக்குரிய உருபு இல்லை. ஆங்கிலத்திலும் பிரெஞ்சு மொழியிலும் எழுவாயும் செயப்படுபொருளும் தமக்குரிய உருபுகளை இழந்து நிற்கின்றன. சொற்கள் அடுத்து நிற்கும் முறையால் இஃது எழுவாய் என்றும், இது செயப்படுபொருள் என்றும் உணர்தல் வேண்டும். சீனமொழியில் இதுவே இயற்கையாகும். (Max Muller, The Science of Language, pp. 129, 130.)

முதலில் அகரமே உருபாக இருந்ததாகக் கூறுகிறார். கன்னடத்தில் அகரம் அல்லது அன்னு என்பது உருபாகும். [கால்டுவெல் கருத்துப்படி 'அம்' என்பது 'அன்னு' எனத்திரியும்; பழங்கன்னடத்தின் 'அவம்' (அவன்) என்பது புதுக் கன்னடத்தில் 'அவனு' எனத் திரிவது போன்றது இது.][4]

தெலுங்கில் னு அல்லது னி உருபாகும். இகர வுயிரை அடுத்து வருங்கால் 'னி' என்னும் வடிவு வரும்.

இண்டினி (வீட்டை)

ஏனையுயிர்களை அடுத்து வருங்கால் 'னு' வரும்.

பிட்டனு (குழந்தையை)

இந்த னு, னி என்பவை தமிழில் 'இன்' போலச் சாரியையாகவும் வருகின்றன. னு, னி, அன்னு என்பன எல்லாம் அஃறிணைப் பெயர்களின் (மரம் முதலியவற்றின்) ஈற்றில் உள்ள 'அம்' என்பதன் திரிபே என்று கால்டுவெல் கருதுகிறார்.[5] ஆனால் இம் மூன்றனையும் சாரியை என்றலே பொருந்துவதாகத் தெரிகிறது.

**மூன்றும் வேற்றுமை**

கருவிப் பொருள்

உருபுகள்:- ஆன், ஆல், (அ, சேத), கொண்டு

(கல் >) கல்லான், கல்லால், கல்கொண்டு — தமிழ்
(ராயி >) ராத, ராயிசேத — தெலுங்கு

---

4. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 273.
5. ibid.

ஆன் உருபு பழைய தமிழிலக்கியங்களில் உள்ளது. அதன் பிற்காலத் திரிபே ஆல் என்பது. தொல்காப்பியர் ஆன் உருபே கூறினார். [6]

ஐந்தாம் வேற்றுமை உருபாகிய 'இன்' என்பதும் இக்கருவிப்பொருளில் வழங்கும். [7] ஆனால் இது பேச்சு மொழியில் இல்லை.

கல்லின் எறிந்தான்

என்னுமிடத்தில் இன் கருவிப் பொருளில் வந்தது.

தெலுங்கில் பயின்று வழங்கும் உருபு சேத அல்லது சே. இவை செயி (கை) என்பதினின்றும் வந்தவை.

நிப்பு சேத (நெருப்பால்)

பழங்கன்னடத்தில் மூன்றனுருபு 'இம்' என்பது. இது தமிழில் ஐந்தனுருபாக உள்ள 'இன்' என்பதைச் சார்ந்தது. புதுக்கன்னடத்தில் 'இந்த' என்பது உள்ளது. இதுவும் 'இன்' என்பதன் திரிபே போலும்!

தமிழில் உள்ள 'ஆல்' என்பது 'கால்'(வாய்க்கால்) என்பதன் திரிபு என்பது கால்டுவெல் கருத்து. [8] அது பொருந்தாது. அதன் பழைய வடிவமாகிய 'ஆன்' என்பதன் தொடர்பான ஒரு சொல்லே முதன்முதல் இருந்ததொரு சொல்லாகும். 'கொண்டு' என்னும் சொல்லுருபு 'கொள்' என்னும் வினைப் பகுதியினின்

6. தொல். சொல்—எச, கOஅ.

7. இப்பொருள் ஆனுருபிற்கும் இன்னுருபிற்கும் உரித்தென்பது விளக்கிய ஏது என்றது இன்னனேது என்றார்.
தொல், சொல் (சேனவரையர்,) எச.

8. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 276.

றும் பிறந்தது. இச் சொல்லுருபு மலையாளத்திலும் உள்ளது.

உடனிகழ்ச்சிப் பொருள்

உருபுகள்: ஒடு, ஓடு, உடன் (ஒடெ, ஒடனே). இந்தோ—ஐரோப்பிய மொழிகளில் இவ் வேற்றுமை இல்லை. ஆனால் சித்திய மொழிகளில உள்ளது.

ஒடு, ஓடு, ஒடெ என்பன 'ஒட்டு' என்னும் வினைப்பகுதியினின்றும் பிறந்தன என்பர் கால்டுவெல்.[9] அவர் மேலும், உடன், ஒடெ, ஒடனே என்பன 'ஒடு' என்பதினின்றும் திரிந்தன என்றும் கருதுகிறார். ஒடு என்பது, தொடு, தொடர் முதலான சொற்களோடு இயைபு உடையது என விளக்குகிறார்.

தெலுங்கில் உள்ள உருபு தோடு என்பது. அதன் திரிபாகிய 'தோ' என்பதும் உருபாக வரும். கன்னடத்தில் ஒடனே என்பது உருபு. தோடு, ஓடு, ஒடனே உடனே எல்லாம் ஒரு சொல்லினின்றும் பிறந்தனவே. ஆனால், தோடு என்பது தோழமை என்பதன் பகுதியாகக் கருதக்கூடிய தொழு (தொழுதி) என்பதினின்றும் பிறந்ததெனக் கால்டுவெல் கருதுகிறார்.

## நான்காம் வேற்றுமை

உருபுகள்:- கு, (கி, கெ, கெ [ge])

வட இந்திய மொழிகளில் இரண்டாம் வேற்றுமைக்கும் நான்காம் வேற்றுமைக்கும் வேறுவேறு உருபுகள் இல்லை, ஆனால் திராவிட மொழிகளில் தனித்தனி உருபுகள் உள்ளன.

---

9. ibid. p. 278.

திராவிடமொழி ஒவ்வொன்றுக்கும் நான்கனுருபு ஒவ்வொன்றே இருத்தல் வெளிப்படை. இவையும் ஆராய்ந்து பார்த்தால், ஓர் உருபின் திரிபுகளே என்பது விளங்கும். சித்திய மொழியியலை விளக்கும் பெஹிஸ்தன் பட்டயங்களிலும் இவற்றோடொத்த உருபே நான்கனுருபாக உள்ளது.

மலையாளத்தில் இன்னு, னு, உ என்பவை நான்காம் வேற்றுமையில் வழங்குகின்றன. இன் சாரியையும் கு உருபும் சேர்ந்த இன்கு என்பதே 'இன்னு' எனத் திரிந்திருக்க வேண்டும். அந்த 'இன்னு' என்பது ன்னு, னு, உ எனப் பிறகு திரிந்திருக்கவேண்டும்.

அவனுக்கு — தமிழ்
அவன்னு — மலையாளம்

வடக்கு, தெற்கு என்னும் சொற்களின் ஈறாகிய 'கு' என்பதற்கும் இவ்வுருபிற்கும் தொடர்பு இருத்தல் கூடும் என்றும், பெயர்த்தல் அல்லது மாறுதல் அதன் பொருளாதல் கூடுமென்றும் கால்டுவெல் கூறுகிறார்.[10]

**ஐந்தாம் வேற்றுமை**

உருபு—இன், இல் (இம்).

வேற்றுமைப் பொருள் வேறு; அப்பொருளை உணர்த்தவரும் உருபு வேறு. இந்த வேறுபாட்டை உணர்தல் இன்றியமையாதது. திராவிடமொழிகளில் கருவிப்பொருளை மூன்றும்வேற்றுமை என்றும் இடப்பொருளை ஏழாம் வேற்றுமை என்றும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. இடத்திலிருந்தலையே ஏழாம்

வேற்றுமை குறிக்கின்றது. இடத்திலிருந்து நீங்குதலை (நீங்கற் பொருளை) ஐந்தாம் வேற்றுமை குறிக்கின்றது; இதுவே இலக்கணநூலார் ஐந்தாம் வேற்றுமைக்கும் ஏழாம் வேற்றுமைக்கும் கூறும் வேறுபாடாகும். ஆனால், ஏழாம் வேற்றுமைக்குரிய 'இல்' உருபே இங்கும் வருகின்றது என்பதையும், நீங்கற் பொருளைக் குறிக்க வேறு வினைச் சொற்கள் வேண்டியிருக்கின்றன என்பதையும் மறுப்பார் இல்லை. எனவே, ஐந்தாம் வேற்றுமையில் நீக்கப் பொருளுக்கென ஓர் உருபு இல்லை என்பது வெளிப்படை. 'இல்' உருபேயன்றி மற்ற ஏழாம் வேற்றுமை உருபுகளையும் இவ்வாறு நீக்கப் பொருள்தரும் வினைச் சொற்களைச் சேர்த்து ஐந்தாம் வேற்றுமையாக்கலாம். எனவே இவ்விரு வேற்றுமைகளும் வேறுவேறு எனக்கொள்வது பயனற்றுப் போகின்றது.

மரத்தில் உள்ளது, மரத்தின்கண் உள்ளது
மரத்திலிருந்து வீழ்ந்தது, மரத்தின்கணின்று வீழ்ந்தது

இவற்றில் வினைச்சொற்களே நீக்கப் பொருள் தரவல்லன. இடப்பொருளை ஏழனுருபே தருகின்றது என்பது இவற்றால் விளங்கும்.

பழங்கன்னடத்தில் 'இம்' என்பது உருபு. இஃது 'இன்' என்பதின் வேறானதன்று.[11] தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் இன் உருபின் பழமையைத் தெளிவாக்கும்.

ஒப்புப்பொருளும், எல்லைப்பொருளும் இடப்பொருளோடு தொடர்பானவை.

இம்மூன்று பொருளல்லாத கருவிப்பொருள் மூன்றும் வேற்றுமையாதலின், ஐந்தாம் வேற்றுமை என உருபு வேறுபாடுபெற்றித் தனியே வகுத்தலும் பயனற்றது. இவற்றை ஆராய்வார்க்கு ஓர் உண்மை விளங்கும்.

அஃதாவது திராவிட மொழியில் வேற்றுமைகளை எட்டாகப் பாகுபாடு செய்தது, திராவிட மொழியியலுக்கு ஒத்ததன்று என்பதாகும். எனவே, வடமொழியில் வேற்றுமை எட்டாதல் கண்ட இலக்கணப் புலவர் தமிழிற்கும் அம்முறையை வகுத்துவிட்டனர் என்பர் கால்டுவெல்.[12]

## ஆறும் வேற்றுமை

உருபு: அது, ஆது, அ, (தி, டி, அதி, அத, அர, தெ, ரெ). உடைய (சொல்லுருபு).

உயிர் குறுகிய மூவிடப் பெயர்கள் தமிழில் உருபின்றியே ஆறும் வேற்றுமையின் கிழமைப்பொருளை உணர்த்தவல்லன.

என் வீடு
உன் மகன்
தன் கை

அது' என்னும் உருபு ஒன்றன்பால் குறிப்பு வினைமுற்றுக்களிலும், குறிப்பு வினையாலணையும் பெயர்களிலும் ஈறுதல் காணின், அதன் உண்மை ஒருவாறு விளங்கும். 'து' என்பது ஒன்றன்பால் விகுதியே. அதனலன்றே, 'அது' என்னும் உருபு ஆறும் வேற்றுமையில் அஃறிணை ஒருமைப் பெயர்களின்

கிழமையைக் குறிக்கவே வரும் என இலக்கண நூலாரும் வரையறுக்கப் புகுந்தனர்.[13]

எனது கைகள்
எனது மகன்

எனவருதல இலக்கண வழக்கன்று; பேச்சு வழக்கு மன்று. அஃறிணைப் பன்மைப் பெயர்களின் கிழமையை உணர்த்தப் பலவின்பால் விகுதியாகிய அகரம் உருபாக வரும்.[14]

என கைகள்

பொருள் உயர்திணையாயின் இவ்வுருபுகள் வருதல் இல்லை; தொகையாக வழங்கும் (என் மகன்)[15] அல்லது சொல்லுருபுவரும் (என்னுடைய மகன்.)

'இன்' சாரியை சேர்த்து உருபின்றி ஆறும் வேற்றுமையை உணர்த்தும் இடங்கள் பல.

மரத்தின் கொம்பு, பசுவின் கால்

இன் ' சாரியையுமின்றி வேற்றுமை உணர்த்தும் தொகையும் உண்டு.

மரக் கொம்பு, அவன் கால்

இன் ' சாரியைக்குப் பின் உருபு நிற்றலும் உண்டு.

---

13. ஆறன் ஒருமைக் கதுவும் ஆதுவும்
பன்மைக் கவ்வும் உருபாம். (நன்னூல், 300)

14. பிராஹுய் மொழியிலும் ஆறும் வேற்றுமையில் ஒருமைக்கும் பன்மைக்கும் வெவ்வேறு உருபுகள் உள்ளன. ஆறும் வேற்றுமை ஒருமைக்கு ஹ உருபாகும். பன்மைக்கு ஆ உருபாகும். (D. S. Bray, The Brahui Language, Introduction, p.10)

15. G. W. Wade, Elementary Chapters in Comparative Philology, p. 84.

மரத்தினது கொம்பு, பசுவினது கால்

தெலுங்கில் 'இன்' சாரியை ன், னி என்னும் வடிவங்களில் வரும்.

அகர வுருபு தமிழில் பெருவழக்கிற்றன்று. பேச்சு மொழியில் வழங்குதல் சிறிதுமில்லை. ஆயினும், பிற மொழிகளில் 'அ' என்னும் உருபே பெரும்பாலும் வழங்குகின்றது. கன்னடத்தில் அஃது ஒன்றே ஆறனுருபாகும். அது சில இடங்களில் 'ஆ' என நீளலும் உண்டு. 'அது' உருபின் நீண்ட வடிவம் தமிழிலக்கியங்களில் உண்டு (தனது தலை).

நன்ன (எனது) — கன்னடம்
நம்ம (நமது) — ௸

கன்னடத்தில் இவ்வுருபு ஒருமை பன்மை என்ற வேறுபாடின்றி வருகின்றது. துளு மொழியிலும் இஃது ஒன்றே ஆறனுருபு.

தெலுங்கில் அகரம் ஆறனுருபாகவும் பெயரெச்ச விகுதியாகவும் உள்ளது.

ஊர கவி

மலையாளத்தில் தெ, றெ, இந்தெ, இன்றெ என்பன உருபாகும். பின்னைய இரண்டும் இன் சாரியை சேர்ந்தமைந்தவையாகும். தகரம் றகரமாதல் திராவிட மொழியில் காண்பதே.

எந்து — கன்னடம்
என்று — தமிழ் (என்று சொல்லி)

எனவே மலையாளத்தில் தெ என்பதே ஆறனுருபு என்றும், அதன் திரிபே றெ என்றும் கொள்ளலாம். இந்த உருபும் தமிழில் உள்ள 'அது' என்பதுபோல, ஒரு

மையில் மட்டுமே வழங்குவது. பன்மையில் 'உடெ' என்பது உருபாக வழங்குகின்றது. அது தமிழில் உள்ள சொல்லுருபாகிய உடைய என்பதன் திரிபு என்று கொள்ளவேண்டும்.

தெலுங்கில் யொக்க அல்லது யோக என்பதும் உருபினிடமாக வருகின்றது.

நாயொக்க — எனது

இது மிக அருகியே வருகின்றது. இதுபோன்றதொரு சொல் வடிவம் பிற மொழிகளில் இப்பொருளில் இல்லை. ஆதலின், இது திராவிடமொழிக்குரியதன்று எனத் தோன்றுகின்றது.

**ஏழாம் வேற்றுமை**

இடப்பொருள் உணர்த்தும் எல்லாச் சொற்களும் ஏழனுருபே என்பர் இலக்கண நூலார். ஆயினும், சில இடப்பெயர்ச் சொற்கள் ஏழனுருபாகப் பயின்று வழங்கியிருத்தலின், அவற்றைமட்டும் உருபுகள் எனக் கொள்ளல் அமையும்.

கண், கால், இடம், இல், உள் என்பன உருபுகள. பழங்கன்னடத்தில் உள்ள 'ஒள்' என்பது 'உள்' என்பதன் திரிபே. தெலுங்கில் அது 'லோ' என்ற வடிவில் உள்ளது. புதுக்கன்னடத்தில் 'அல்லி', 'இல்லி' என்பவை உள்ளன. அவை தமிழில் உள்ள 'இல்' என்பதன் வடிவங்கள். தெலுங்கில் 'லோ' பெரு வழக்கிற்று; அஃதன்றி, 'அந்து' என்பதொன்றும் உருபாக உள்ளது.

**எட்டாம் வேற்றுமை**

இது படர்க்கையாரை முன்னிலைப்படுத்தி விளிக்கும் பொருளில் வருவதாகும்.

(1) ஏ என்னும் இடைச்சொல்லைச் சேர்த்தல் (அரசனே)

(2) ஈற்றயல் உயிரை நீட்டல் (மக்காள், அடிகாள்)

(3) ஈற்றயல் உயிர் திரிதல் (புலவீர்)

இவ்வாறும் பிறவகையாகவும் வரும். எனவே இவ் வேற்றுமைக்கென உருபு இல்லை என்ப.

**உருபு பல வரல்**

வீட்டுக்குள்—கு+உள். நான்கனுருபும் ஏழனுருபும்.

**ஆறன் தொகை**

இந்தோ–ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு போலவே, திராவிட மொழிகளில் ஆறன் தொகைகளில் மூவிடப்பெயர்கள் முன்னும் ஏனைப்பொருட் பெயர் பின்னுமாக வரும். (என் கை, உன் புகழ்) சித்திய மொழியில் இவ்வாறன்று; கை என், புகழ் உன் என்பனபோல வரும். இது சித்திய மொழிக்கும் திராவிட மொழிகட்கும் உள்ள பெரிய வேறுபாடாம்.

**வேற்றுமைப் பாகுபாடு**

வடமொழியில் வேற்றுமை எட்டு; லத்தீன் மொழியில் ஆறு, கிரேக்க மொழில் ஐந்து. சொல்லும் உருபும் சேர்ந்து வேற்றுமை உணர்த்தும் முறை பழையது என்றும், நாளடைவில் மொழிவளர்ச்சியில்

தனிச்சொற்களே வேற்றுமைப் பொருளைத் தோற்றுவிக்க வருகின்றன என்றும் ஜெஸ்பர்ஸன் கருதுகிறார். அவர் கொள்கைப்படி வேற்றுமை யுருபுகள் பலவாயிருத்தல் மொழியின் பழைய நிலை. மொழி வளர வளர, உருபுகளும் பிறமுறைகளும் குறைந்து எளிமை மிகும் என்பர் அவ்வாசிரியர்.

ஒருமொழியில் எத்தனை வேற்றுமைகள் உள்ளன என்பதை அந்த மொழியின் அக்கால நிலைமை உணர்ந்தே கூறவேண்டும். பிறமொழிகளை ஒத்திட்டுப் பார்த்து அவற்றில் உள்ள பாகுபாட்டைப் பின்பற்றல் தவறாகவே முடிகின்றது.[16]

தமிழ் வேற்றுமைகளை வடமொழி இலக்கணப்படி வகுத்தனர் என்று கால்டுவெல் கொண்ட கொள்கை ஆராய்தற்குரியதேயாகும். பொருள் நோக்கி வேற்றுமைகளை வகுத்தல், உருபுகள் நோக்கி வகுத்தல்—இவ்விரு வகையிலும் தமிழ் வேற்றுமைப் பாகுபாடு பொருந்தவில்லை. மூன்றாம் வேற்றுமை என்பதில் கருவி, உடனிகழ்ச்சி என்று வேறு வேறு பொருள்கள் உள்ளன. ஆன், ஓடு என்னும்

---

16. The number of cases to be recognized in a language (at one particular stage of its development) must be decided by the forms found in that language; case-distinctions are not national or logical, but exclusively grammatical categories. No purely logical analysis can lead to a distinction between nominative, accusative, dative, etc. Nor can a comparison with other languages and their case-distinctions be regarded as decisive, for that would lead to consequences which no grammarian would accept. (Jespersen, The System of Grammar, p. 25.)

வேறு உருபுகளும் உள்ளன. ஐந்தாம் வேற்றுமைக் குரிய இன் உருபு மூன்றும் வேற்றுமைக்குரிய கருவிப் பொருளில் வருகின்றது. இன்னும் ஆனும் ஏதுப் பொருளில் ஒத்து வருதல் கண்டே தொல்காப்பியனார் 'இன்னானேது' எனக் குறித்துள்ளதும் காண்க.[17]

மூன்றும் வேற்றுமையில் இரண்டு உருபுகளும் இரு வேறுபொருளும் கண்ட சேனாவரையர் நிகழ்த்தி யுள்ள ஆராய்ச்சியும் இங்குக் கருதத்தக்கது. "ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமை ஆகற்பால எனின்—அற்றன்று. வேற்றுமை மயக்கமாவது ஒருவேற்றுமை யது ஒரு பொருட் கண்ணாக, சில பொருட் கண்ணாக ஏனை வேற்றுமையுஞ் சேறலன்றே. அவ்வாறன்றிச் சிறிதொழித்து எல்லாப் பொருட்கண்ணும் இரண் டுருபும் சேறலானும், வடநூலுள் பொருள் வேற் றுமை யல்லது உருபு வேற்றுமையான் ஒரு வேற்று மையாக ஓதப்படாமையானும் ஈண்டெல்லா ஆசிரிய ரும் ஒரு வேற்றுமையாகவே ஓதினார் என்க. வட நூலொடு மாறுகொள்ளாமைக் கூறல் ஆசிரியர்க்கு மேற்கோளாயின், விளிவேற்றுமையை எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கற்பாலராவர், அவ்வாறு—அடக்கிலர் எனின்—அற்றன்று, விளிவேற்றுமை யை எழுவாய் வேற்றுமைக்கண் அடக்கல் ஆண்டெல் லார்க்கும் ஒப்ப முடிந்ததன்று;

> ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
> வேறெனை விளம்பான் பெயரது விகாரமென்
> றோதிய புலவனும் உளனொரு வகையான்
> இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன்.

என்பவாகலின், ஐந்திர நூலார் விளிவேற்றுமையை எட்டாம் வேற்றுமையாக நேர்ந்தார் என்பது பெறப் படும். ஆசிரியர் அவர் மதம் பற்றிக் கூறினாராகலின் அதனொடு மாறு கொள்ளாதென்பது."[18] இவ்வாறு சேனாவரையர் விளக்குமிடத்து, வடமொழியில் உள்ள வேற்றுமைப் பாகுபாட்டைத் தமிழிலக்கண நூலார் மேற்கொண்டதாகக் கூறியுள்ளார். வேற்று மைகள் மொழிக்கு மொழி வேறுபடும் அமைப்பு உடையன. ஆதலின், ஒரு மொழிக்கு உள்ள ஒரு வேற்றுமையைத் தனியாக எடுத்துக் கூறாமல் விடுத லும், இல்லாத மற்றொரு வேற்றுமையைப் புகுத்து வகுப்பதும் பொருந்தாதன ஆகும்.[19]

---

18. தொல். சொல்—எச

19. If we examine an English Grammar, whether it be as old as Ben Jonson's or as new a Sonnenschein's, we shall find the noun saddled with five cases. Not because English pronouns have five cases (they have only three); nor because the Old English nouns had five cases (which they had and more); but because Latin had six, and if human ingenuity could have found six in modern English they would have been found. But no trace of an ablative being discoverable, five was the utmost number to which the samples would stretch.

This cumbersome make-believe needs a deal of defending. One line of defence is that, we are concerned with "the soul of the sentence," not with its outward form—a line taken by a grammarian whose own definition of case runs like this. "A case of a noun or pronoun is a form of a word used in a particular way in the construction of a sentence." If it is the soul that really matters, and we should have regard to the number of cases which it would require to express itself adequately by this means, why stick at five? Sanskrit has eight cases, and the parent language of the Aryan family had nine. (P. B. Ballard. Thought and Language, pp. 112, 113.)

13

ஐந்தாம் வேற்றுமைக்குரிய இன் உருபு ஒரு பொருளை உணர்த்துவதன்று. "வடநூலுள் பொருள் வேற்றுமை அல்லது உருபு வேற்றுமையான் ஒரு வேற்றுமையாக ஓதப்படுதல் இல்லை" என்றார் சேனாவரையர்.[20] அவரே "ஐந்தாவது நான்கு பொருண்மை யுடைத்து; பொருவும் எல்லையும் நீக்கமும் ஏதுவும் என" என்று நால்வகைப் பொருளைக் கூறினார்.[21] அவற்றுள், நீக்கப் பொருள் ஏழாம் வேற்றுமைக் குரிய இடப்பொருளோடு இயைபு உடையது.

ஊரின் நீங்கினான், ஊரில் இருந்தான்
ஊரினின்று நீங்கினான், ஊர்க்கணின்று நீங்கினான்
மரத்தின் வீழ்ந்தது, மரத்தில் வீழ்ந்தது
மரத்தினின்று வீழ்ந்தது, மரத்தின்கணின்று வீழ்ந்தது

என்னும் வாக்கியங்களை ஒப்பிட்டு நோக்கின், இன் உருபு இடப்பொருளே தருவது என்பதும், ஏழனுருபிற்கும் அதற்கும் வேறுபாடு இல்லை என்பதும், நீக்கப் பொருளை உணர்த்துவன நீங்கினான், வீழ்ந்தது முதலிய வினைகளே என்பதும் தெளிவாகும்.

ஒரு மொழிக்கு இலக்கணம் வகுப்பவர் பிற மொழியின் அமைப்பைக் கொண்டு அதனை நோக்குதலால் இத்தகைய இடர்ப்பாடுகள் விளையும்.[22]

---

20. தொல். சொல். எச.

21. ஷை—எஎ

22. எஸ்தோனியன் (Esthonian) மொழியில் வேற்றுமைகளை ஆராய்ந்த ஒருவர் அம்மொழியில் உள்ள வேற்றுமைகள் பன்னிரண்டு என்றார். மற்றொருவர் இருபது என்றார். அந்த மொழியின் இயல்பு நோக்காது தாம் பேசும் மொழியின் இலக்கணத்தைக் கொண்டு ஆராய்வதன் விளைவாகும் இது. (Abel Haveloque, The Science of Language, p. 93)

ஆங்கில மொழிக்கு இலக்கணம் எழுதியவர்கள் முதலில் இத்தகைய தவறு செய்துவிட்டனர். அவர்கள் லத்தீன் இலக்கணத்தைப் பின்பற்றிப் பொருந்தா வகையில் வேற்றுமைகளை வகுத்தனர் என்பர்.[23]

தமிழ் தெலுங்கு முதலான மொழிகளில் உள்ள வேற்றுமைகள் எட்டுக்கு மேற்பட்டன, கணக்கற்றன என்பது கால்டுவெல் கருத்து.[24]

அவர் கொள்கைப்படி, திராவிட மொழிகளில் வேற்றுமைகள் மிகப் பலவாய் விரியும். பேசுவோன் கருத்தை விளக்கும் முறைகளும் கருத்து வகைகளும்

---

23. Latin was a language with a wealth of flexional forms, and in describing other languages the same categories as were found in Latin were applied as a matter of course, even where there was nothing in these other languages which really corresponded to what was found in Latin. In English and Danish grammars paradigms of noun declension were given with such cases as accusative, dative and ablative, in spite of the fact that no separate forms for these cases had existed for centuries. All languages were indiscriminately saddled with the elaborate Latin system of tenses and moods in the verbs, and by means of such Procrustean methods, the actual facts of many languages were distorted and misrepresented. Discriminations which had no foundation in reality were nevertheless insisted on, while discriminations which happened to be non-existent in Latin were apt to be overlooked. The mischief consequent on this unfortunate method of measuring all grammar after the pattern of Latin grammar has not even yet completely disappeared, and it is even now difficult to find a single grammar of any language that is not here and there influenced by the Latin bias. (Jespersen, Language, Its Nature, etc. p. 23.)

24. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, pp. 254, 255.

மிகப்பல ஆதலின், அவ்வாறு வேற்றுமைப் பொருள்கள் பல ஆதல் இயல்பே. ஆதலின், இவ்வுண்மையை நோக்குங்காலும், வடமொழியைப் பின்பற்றிய பாகுபாடு பொருந்தாது போகின்றது.

அன்றியும், வடமொழி முறையைப் பின்பற்றி வேற்றுமைகளுக்கு முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை என்பது முதலாகப் பெயரிட்டதும் பொருந்தாது என்கிறார் கால்டுவெல்.[25] அவர், எழுவாய் வேற்றுமை என்றது ஒரு வேற்றுமை அன்று என்றும், அஃது இயல்பான பெயர்ச்சொல்லாகக் கொள்ளத்தக்கது என்றும் கருதுகிறார்.

**உருபு ஏற்கும் முறை :**

இந்தோ ஐரோப்பிய மொழிகளில் பெயர் உருபேற்கும் முறைகள் (*declensions*) மிகப் பல. அவ்வாறே தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளிலும் இருத்தல்வேண்டுமென்று இலக்கணம் எழுதினர் ஆசிரியர் சிலர்.[26] ஆயின், அவர் தவறே இழைத்தனர். வடமொழி முதலான மொழிகளில் உருபேற்கும் முறைகள் பலவாயிருத்தல் உண்மையே. அம்மொழிகளில், பெயர்ச்சொற்களின் ஈற்றெழுத்து முதலிய வேறுபாடுகளுக் கேற்ப, உருபுகள் வேறுபடுதலால், முறைகள் பல என்றல் பொருத்தமே. ஆனல், திரா

25. Ibid.

26. இவ்வாறே உருபேற்கும் முறைகள் பலவாக வகுத்துத் தெலுங்கு மொழிக்கு பிரௌன் (C. P. Brown) என்பவர் இலக்கணம் எழுதியுள்ளார். (A Grammar of the Telugu Language, p. 51)

விட மொழிகளில் பெயரீற்றிற்கேற்ப உருபு மாறுவதில்லை. எல்லா ஈறுகளுடனும் ஓர் உருபு சேர்ந்து நிற்கும். வேறுபாடெல்லாம் இடையே புகும் அத்து, இன் முதலான சாரியைகளால் ஆவனவே அன்றி, வேற்றுமை உருபுகளால் ஆவன அல்ல. எனவே, திராவிட மொழிகளில் பெயர்ச்சொற்கள் உருபேற்கும் முறை (*declension*) ஒன்றேயாகும். சித்திய மொழிகளிலும் அவ்வாறே உள்ளது.

திராவிட மொழிகளில் (சித்திய மொழிகளில் உள்ளவாறுபோல) உருபுகள் பெயர்ச் சொற்களினின்று பிரித்துக்கொள்ளக் கூடியவைகளாக உள்ளன. இலக்கண நூலார் அவற்றையும் சொற்களாக மதித்து இடைச்சொல்லுள் அடக்கினர்.[27] ஆனால் இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் உருபுகள் பெயர்ச்சொற்களோடு கலந்து ஒன்றாகிப் பிரிக்கமுடியாதனவாக நின்றன. நாளடைவில் அம்மொழிகளில் வேற்றுமை புணர்த்தும் உருபுகள் வடிவிழக்கவே, அவ்வுருபுகளைப் புறக்கணித்து, அவற்றிற்கு ஈடாகப் புதிய உருபுகள் பெயர்ச்சொற்களுக்கு முன்னே வழங்கலாயின. செமிடிக் மொழியிலும் வேற்றுமை யுருபுகள் பெயர்ச் சொற்களின் முன்வருவனவாக (*Prepositions*) உள்ளன. கிரேக்க மொழியிலும் லத்தீன் மொழியிலும் இன்றும் அவ்வாறு வருதல் காணப்படும். திராவிட மொழிகளிலும் சித்திய மொழிகளிலும் பெயர்ச் சொற்களின் பின்னரே உருபுகள் சேர்க்கப்படுகின்றன; அன்றியும் அவை தனியே பிரிக்கக்கூடியன

---

27. "வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும்" இடைச்சொல் என்றார் தொல்காப்பியனார்—தொல் சொல். ௨௫௦

வாகவும் உள்ளன; சில உருபுகள் தனிப் பெயர்ச் சொற்களாகவும் வினைச்சொற்களாகவும் உள்ளன. (சொல்லுருபுகள்: கண், இடம், கொண்டு முதலி யன.) ஐ, கு முதலிய உருபுகளின் பிறப்பு இன்று இன்னதெனத் துணியமுடியாது; எனினும் அவையும் முதலில் பெயராகவும் வினையாகவும் வழங்கினவையே என்று கொள்ள இடமுண்டு.

திராவிட மொழிகளுக்கும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளுக்கும் உருபேற்கும் முறையில் மற்றொரு வேறுபாடும் உளது. இந்தோ-ஐரோப்பிய மொழி களில் ஒருமைக்கும் பன்மைக்கும் வேறு வேறு வேற் றுமை உருபுகள் உள்ளன; ஆதலால் வேற்றுமை யுருபுகளே ஒருமை பன்மையாகிய எண்வேறுபாடும் உணர்த்தவல்லனவாக உள்ளன; எனவே, பன்மை யுணர்த்தும் விகுதி சேர்க்கவேண்டுவதில்லை. ஆனால், திராவிட மொழிகளில் ஒருமைக்கும் பன்மைக்கும் ஒருவகை உருபே உண்டு; ஆதலின் அவ்வுருபு எண் வேறுபாட்டை உணர்த்துவதில்லை; பெயர்ச்சொல் லின் பன்மை யுணர்த்தவேண்டின், பெயர்ச்சொல் லோடு பன்மை விகுதி சேர்த்துப் பின்னரே வேற் றுமை யுருபைச் சேர்த்தல் மரபு.

கை+ஆல்—கையால்: ஒருமை
கை+கள்+ஆல்—கைகளால்: பன்மை

ஆறும் வேற்றுமை ஒன்றே இம்முறைக்கு விதி விலக்காக உள்ளது. ஆறும் வேற்றுமையில் தமிழில் அஃறிணை ஒருமைக்கு 'அது' என்பதும் பன்மைக்கு 'அ' என்பதும் உருபாவன. இவ்வமைப்புக்குக் கார

ணம், 'து' ஒன்றன்பால் விகுதியாகவும் 'அ' பலவின் பால் விகுதியாகவும் வழங்குவதே ஆகும்.

இவற்றால் திராவிட மொழிக்கும் இந்தோ-ஐரோப்பிய மொழிக்கும் வேற்றுமை யுருபேற்கும் முறையில் வேறுபாடு இருத்தலும், திராவிட மொழி சித்திய மொழியோடு இம்முறையில் ஒத்திருத்தலும் விளங்கும்.

## கக. எண்ணுப் பெயர்கள்

**அடிச் சொற்கள்:**

ஒன்று, இரண்டு, மூன்று முதலியவை எண்ணுப் பெயர்களாகும். ஒரு, ஓர், இரு, ஈர், மு, மூ என்பவை பெயரடைகளாக (*numerical adjectives*) வருவன. இரண்டாம், மூன்றும் என வரும் அடைகளும் உள்ளன. அவை பெயர்களோடு 'ஆம்' என்னும் பெயரெச்சம் சேர்ந்து அமைந்த அடைகளாகும்.

இரு, மூ முதலான பெயரடைகளுக்கும், இரண்டாம் மூன்றும் முதலான அடைகளுக்கும் பொருள் வேறுபாடு உண்டு.

இரு நாடு, மூ வகை
இரண்டாம் நாடு, மூன்றும் வகை

முன்வகையின எண்ணிக்கை அளவை உணர்த்துவன. மற்றவை எண்ணப்படும் முறையினை உணர்த்துவன. இப்பொருள் வேறுபாடு பிறமொழிகளிலும் உண்டு. ஆங்கிலத்தில் இவற்றை *Cardinals, Ordinals* எனக் குறிப்பர். தமிழில் எண்ணலளவை என்றும் எண்ணு முறை எனவும் குறிக்கப்படும்.

எண்ணுப்பெயர்களின் தோற்றத்தை அறிதற்குப் பெயர்கள் சிறந்தனவா, பெயரடைகள் சிறந்தனவா என்று ஆராய்தல் வேண்டும். திராவிடமொழிகள் எல்லாவற்றிலும் பெயர்களும் பெயரடைகளும் பயின்று வழங்குகின்றன. ஒன்று இரண்டு முதலான பெயர்களுக்கும் ஒரு, இரு முதலான பெயரடைகளுக்கும்

வேறுபாடு உள்ளது. பேச்சு மொழியில் பெயரடைகளை விடுத்துப் பெயர்களையே வழங்குதலும் உண்டு. எடுத்துக்காட்டாக, இரு பசு என்பதற்கு ஈடாக இரண்டு பசு என்பர். பெயர்களே பெயரடைகளாக வழங்குவது திராவிட மொழியியல்பு. ஆதலால் இவ் வழக்கும் பொருத்தமானதே.

ஆயினும், பெயரடைகள் உருவத்தில் சிறியனவாகவும், எளியனவாகவும் இருத்தலைப் புறக்கணித்தல் கூடாது. அச்சிறிய எளிய முதனிலைகளோடு 'து' முதலிய விகுதிகளும் சாரியைகளும் புணர்ந்து பெயர் வடிவங்கள் அமைந்திருத்தல் இயற்கையாகத் தோன்றுகின்றது. [இரு+அ(ன்)+து>இரண்டு, இரடு; மூ+ன்+து>மூன்று, மூடு முதலானவை.] மூன்று, நான்கு முதலியவற்றில் மு, ந என்பன அடிச்சொல்லாக இருத்தல் கூடும். அடிச்சொல்லில் உயிர் குறிலாக இருந்து பின்னர் நீண்டிருத்தல் கூடும். எனவே அடிச்சொற்களை ஆராயும் வகையில், பெயரடைகளே பெரிதும் துணைபுரிகின்றன. சிறப்பாக, பதினொன்று முதலாகப் பத்தொன்பது வரையுள்ள உம்மைத் தொகைகளும், இருபது முப்பது நாற்பது முதலான பண்புத்தொகைகளும் ஆராய்ச்சிக்குரிய பல உண்மைகளைத் தெளிவாக்குகின்றன. இவற்றில் உள்ள அடைகளே மிகப் பழைய வடிவங்களைத் தெரிவிக்கவல்லன எனத் துணியலாம்.

அன்றியும், இருவர் மூவர் முதலான பெயர்களிலும் இரு, மூ என்பன காணப்படுகின்றனவே அல்லாமல், இரண்டு மூன்று என்பன இல்லை. இவற்றாலும் பெயரடைகளின் பழமையே புலனாகின்றது.

ஒன்று < ஒரு, ஒக :

ஓர் என்பதைவிட ஒரு என்பது பழையதாகும். அதன் இறுதி உகரம் ஒலித்துணையாகிய குற்றியலுகரமே என்பர் கால்டுவெல்.[1] உயிரெழுத்தின் முன்னர் அது கெடுங்கால், அதற்கு ஈடுசெய்ய உயிர் நீண்டு, ஓர் என்னும் வடிவம் அமைகின்றது.

தெலுங்கில் 'ஒகட்டி' என்பது பெருவழக்கிற்றாயினும் ஒண்டு என்னும் சொல்லும் பெயராக உள்ளது.

ஒரு என்பதில் உள்ள மெய் வல்லினமா இடையினமா என்பதும் ஆராய்ச்சிக்கிடமாகின்றது. கன்னடத்தில் மூறு என்பது தமிழில் மூன்று எனக் காணப்படுகின்றது. இவ்வாறு மூக்கொலி புணர்தல் (*nasalisation*) திராவிட மொழிகளின் இயல்பேயாகும். கன்னடத்தில் கறு என்பது தமிழில் கன்று என உள்ளது. குறு என்னும் அடிச்சொல்லின் திரிபாகவே குன்று என்பது அமைந்திருத்தல் கூடும். அவ்வாறு கொள்ளின், ஒன்று என்னும் பெயரின் மற்றொரு வடிவம் ஒறு என ஆகும். அதில் வல்லின றகரமே அமைகின்றது.

இவ்வாறு வல்லின றகரம் இடையின ரகரம் இரண்டும் மயங்கும் சொற்கள் சில உள்ளன. கறுத்தான், கருத்தான் என்னும் இருசொற்களும் பொருளால் சிறிது வேறுபடினும் அடிச்சொல் ஒன்றாகவே இருத்தல் கூடும்.

---

1. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 322

ஒற்றை என்னும் பெயரடையிலும் வல்லினமே காணப்படுகின்றது. இலக்கண நூலார் ஒன்று+ஐ எனப் பிரிப்பர்.[2] ஒறு என்பதையே பெயரடையாகக் கொண்டு, அங்குள்ள றகரம் இரட்டித்ததாகக் கொள்வதில் இழுக்கொன்றும் இல்லை யென்பர் கால்டுவெல்.[3]

எனவே, ஒன்று என்னும் பெயர் ஒறு என்பதினின்றும் அமைந்ததாகும். அச்சொல் ஒன்றுதல், ஒன்றினார் எனத் தன்வினையாகவும் ஒற்று எனப் பிறவினையாகவும் வழங்குகின்றது.

மலையாளத்தில் ஒன்னு என்பது பெயராக உள்ளது. எனினும் 'னகரம்' பழமையுடையது அன்று. தமிழில் கன்று எனவும், கன்னடத்தில் கறு எனவும் உள்ள சொல் மலையாளத்தில் கன்னு என வழங்குவது போன்ற திரிபு இது. னகரம் மூக்கொலியாகத் தோன்றியதே ஆகும்.

எனவே ஒறு என்பதே பழைய வடிவு என்றும் அடிச்சொல் என்றும் கொள்ளல் அமையும்.

தெலுங்கில் ஒண்டு என்னும் பெயரும் ஒண்டி என்னும் பெயரடையும் உள்ளன. ஒகட்டி என்னும் மற்றொரு பெயரும் உண்டு. வடமொழியில் ஏக என்றும் பிரதம என்றும் இரு வேறு சொல் அமைந்திருந்த்

2. "ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே" என்னும் சூத்திரத்திற்கு (நன்னூல்: 185) "வருமொழிப் புணர்ச்சியானன்றி ஒற்றை இரட்டை வேட்டை என ஒருமொழியாய் நின்று ஐகாரம் பெறுதலும்......கொள்க" எனச் சங்கர நமச்சிவாயர் உரை எழுதல் காண்க.

3. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 324

தல்போல உள்ளது இது. ஒகடி என்பதன் ஒக என்பது ஏக என்பதன் திரிபோ என்று ஐயுறுவர் கால்டுவெல்.[4] ஒ(=ஒத்திரு) என்னும் வினைப்பகுதியிலிருந்து பிறந்ததாகக் கொள்ளலே பொருந்தும்.

ஒ என்பதைப் பகுதியாகக் கொண்டால் ஒன்று, ஒண்டு, ஒகட்டி என்னும் எல்லாச் சொற்களுக்கும் அதுவே அடிப்படையாக இருக்கும் எனலாம். முதல் எண்ணின் பெயர் எல்லா மொழியிலும் பெயரடியாகப் பிறந்ததெனவே துணியப்படுகின்றது; வினையடியாகப் பிறந்ததெனக் கொள்வதில்லை; ஆகவே, ஒ என்பது முதலில் பெயராகவே இருந்திருத்தல் வேண்டும் என்பர்.

ஆங்கிலத்தில் *a, an* என்னும் சொற்கள் (*indefinite articles*) வழங்குவதுபோல ஒரு ஒக என்பன ஒருமையைக் குறிக்க வழங்குதல் உண்டு.

இரண்டு : இரு

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | எரடு |
| தெலுங்கு | : | ரெண்டு (இரவு, இரா > ரே போல) |
| மலையாளம் | : | ரெண்டு |

உயிர் முதன்மொழி வருமிடத்து இரு என்னும் பெயரடையின் ஈற்றுயிர் கெட்டு முதலுயிர் நீளும். எனவே ஈர் என்பது அதன் மற்றொரு வடிவமாகும்.

இரு என்பதன் ரகரமெய் கெட்டு அடுத்துவரும் மெய் இரட்டித்தல் கன்னடத்திலும் தெலுங்கிலும் காணப்படுகின்றது.

இருவர் > இப்பரு — கன்னடம்
இத்தரு — தெலுங்கு
இருநூறு > இந்நூறு — கன்னடம், தெலுங்கு
இருபது> இப்பத்து — கன்னடம்

கன்னடத்தில் எரடு என்பது பெயராக நிற்பினும், எகரம் இகரத்தின் திரிபு எனவே கொள்ளல் வேண்டும். தொகைகளில் எகரம் மறைந்து இகரமே நிற்கின்றது (இந்நூறு, இப்பத்து என).

தெலுங்கில் இகர உயிர் இல்லை. ரகரமே பெயரின் முதலாக உள்ளது. எனினும் எல்லாத் திராவிட மொழிகளிலும் பெயரடையில் இகரவுயிர் நிற்றலால், இகரம் ஒலிநயம்பற்றித் தோன்றியது அன்று; அடிச் சொல்லின் இன்றியமையாத உறுப்பேயாகும்.

கன்னடத்தில் எரடு என்பது இரடு என்பதன் திரிபு. தமிழில் இரண்டு என்பது மூக்கொலி புணர்ந்த இரடு என்னும் சொல்லேயாகும். பிறவினையாக வரும் இரட்டு என்பது இதனோடு மிக்க உறவுடையதாகும்.

அடிச்சொல் இர் என்பதாகலாம். ஈர்தல் என்பது பிளத்தல், அறுத்தல், துண்டித்தல் என்னும் பொருளில் வழங்கியிருந்து, பிறகு ஒன்று இரண்டாக அறுபடுதல்பற்றி, இரண்டு பொருள்களைக் குறிக்க வழங்கியிருக்கலாம். இரண்டு என்பதற்குமேல் எண்ணத் தெரியாத மொழிகள் இன்றும் சில உள்ளன.[5]

---

5. விக்டோரியாவில் வாழும் பழங்குடி மக்களின் மொழியில் ஒன்று இரண்டு என்னும் எண்களே உள்ளன. அவற்றிற்கு மேல் எண்ணுதலை அம்மக்கள் அறியார். தென் அமெரிக்காவில் பூரிகள் எனப்படும் மக்கள் மூன்று என்பதைப் பல என்று

மூன்று : முறு

கன்னடம் : மூறு

தெலுங்கு : மூடு

மலையாளம் : மூன்னு (பெயரடை : மூ, மு)

கன்னடத்தில் உள்ளதே பழைய பெயர். மூறு என்பது மூக்கொலி புணர்ந்து மூன்று என்று தமிழில் வழங்கியது. ஏனைய அதன் திரிபுகளே.

தெலுங்கில் மூவரைக் குறிக்கும் சொல் முக்கரு. முப்பது என்பதற்கு நேரான சொல் முப்பை. ஆகவே மு என்பதே பழைய பெயரடை. அஃது உயிர்முதன் மொழி வரின் நீளும்.

மூறு என்பது தெலுங்கில் மூடு என உள்ளது. தமிழ் றகரம் தெலுங்கில் டகரமாதல் இயற்கை. (மாற்றம்>மாட்ட என்பது போல).

முறு என்பதே மிகப் பழைய வடிவாகும். அடிச் சொல்லிலே றகரம் சேர்ந்ததாகக் கொள்ளவேண்டும். இரு என்பதில் (இருநூறு இருபத்து முதலிய வற்றில்) ரகரமெய் கெட்டதுபோல, முந்நூறு என்ப தில் முறு என்பதன் றகரமெய் கெட்டிருக்கும்.

முறுக்கு, முறை என்பவற்றிலுள்ள அடிச்சொல் லாகிய முறு என்பதே இது. அடுத்த (இரண்டிற் கடுத்த) மாறுதலைக் குறிக்க முதலில் வழங்கியிருக்கும்.

---

உணர்த்துகின்றனர். நியூ ஹாலந்து மக்களும் இரண்டனுக்கு மேல் எண்ணும் எண்ணுப்பெயர் அறியார். (Sayce, Introduction to the Science of Language, p. 410)

**நான்கு : நல்**

கன்னடம் : நால்கு. தெலுங்கு : நாலுகு
மலையாளம் : நால், நாங்கு
பெயரடை — நால், தெலுங்கில் நல் (நலுவை, நன்னூறு)

லகரம் னகரமாதல் ஒலியியலுக்கு ஏற்றதே. கு என்னும் ஈறு ஒருவகை விகுதியாகவே கொள்ளல் வேண்டும் (கிழக்கு மேற்கு முதலியவற்றில் உள்ளது போல).

பல்குனி என்னும் வடசொல்லில் லகரம் ஙகரமாகப் (பங்குனி எனத்) திரிந்தது போன்றதே நால்கு என்பது நான்கு என்ருகி மலையாளத்தில் நாங்கு என நிற்பது. எனவே, நாங்கு என்பதைவிட நான்கு பழையது; அதனினும் பழமையானது நால்கு என்பது. இது சங்க இலக்கியத்துள் காணப்படுகின்றது.[6]

நல் என்ற ஒன்றே அடிச்சொல்லாதல் கூடும். அது நீளாமல் தெலுங்கில் வழங்கும்; ஏனையவற்றில் நால் என நீளும்.

நல் என்பது மிகுதி, பன்மை, வண்மை என்னும் பொருளைத் தருவதே. (நல்ல பணம் திரட்டினன், நல்குவான் என்பன காண்க). ஆதலின், மூன்றினும் மிகுந்த ஒன்றைக் குறிக்க வழங்கியிருக்கும்.

---

6. நல்நால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர் (அகநானூறு, 104)
வளைகண் டன்ன வாலுளைப் புரவி
துணைபுணர் தொழில நால்குடன் பூட்டி.
(பெரும்பாணாற்றுப்படை, 488—9)

ஐந்து : ஐ

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | ஐது, அய்து |
| தெலுங்கு | : | ஐது |
| தமிழ் | : | ஐந்து, அஞ்சு |
| மலையாளம் | : | அஞ்சு |

தெலுங்கு மொழியில் தொகைச்சொல்லில் ஐது என்பது ஏனு என வருகின்றது. பதிஹேனு என்பது பதினைந்தைக் குறிக்கும் சொல்லாகும். பெயரடையாக வரும்போது ஐ என்பதன்றி ஏ என்பது தெலுங்கில் உள்ளது.

தமிழ் : ஐம்பது
கன்னடம் : ஐவத்து } தெலுங்கில் : ஏபை (ebhai)

தமிழ், கன்னடம் : ஐந்நூறு. தெலுங்கில் : ஏனூறு

உயிர் முதன்மொழி வரும்போது, ஐம், ஐந், ஏன் என்றெல்லாம் வராமல் ஐ, ஏ என உயிர்மட்டும் வருவதால், மகரமோ னகரமோ அடிச்சொல்லிற்கு உரியதன்று; புணர்மொழியில் வந்து சேர்வதாகும்.

அஞ்சு என்பது ஐந்து என்பதன் திரிபே. வடமொழியில் உள்ள பஞ்சம் என்பதற்கும் அஞ்சு என்னும் சொல்லுக்கும் தொடர்பில்லை. தகர நகரங்கள் சகர ஞகரங்களாக மாறுதல் ஒலிநூலுக்கு இயைந்த ஒன்றே ஆதலின், ஐந்து என்பது அஞ்சு என்பதன் திரிபே ஆகும். ஐந்து என்பதே ஐன்னு ஏனு எனவும் திரிந்திருக்க வேண்டும் (தமிழ் : நடந்து > மலையாளம்: நடன்னுபோல).

ஐந்து என்பதன் மூக்கொலியைப் பிற்காலத்தது எனலாம். எனவே ஐது என்பதன் பகுதியான ஐ என்பதே அடிச்சொல்லாகும்.

ஐ என்பதன் பழம்பொருளென்ன? அது கை என்னும் சொல்லின் மற்ருெரு வடிவமா? முதலில் உள்ள மெய் நாளடைவில் மறைந்ததோ? இங்ஙனம் கொள்ளின், தோற்றத்தைப்பற்றிய சிறந்த உண்மை புலனுகின்றது. ‘ஒரு கை போடு’ என்னும் மக்கள் வழக்கில் கை என்பது ஐந்து என்று எண்ணைக் குறித்தல் இன்றும் காணப்படுகின்றது. எனவே, கையில் உள்ள விரல்களின் தொகையே ஐந்து என்பதன் பொருளாக அமைந்தது. நாம் பத்து என்பதை ஓர் எல்லையாகக் கொண்டு பதினென்று, பதினென்கு என வழங்கல்போல், சில மொழியினர் ஐந்தை ஓர் எல்லையாகக் கொண்டு, ஐந்தொன்று, ஐந்திரண்டு என வழங்குவர்.[7]

ஆறு : அறு

இவ் வெண்ணைப் பொறுத்தவரையில், எல்லாத் திராவிட மொழிகளிலும் பெயர்க்கும் பெயரடைக்கும் உள்ள வேற்றுமை மிகக் குறைவாகவே உள்ளது. எல்லா மொழிகளிலும் ஆறு என்பதே பெயர். பெயரடை, உயிருக்குமுன் ஆறு எனவும் மெய்க்குமுன் அறு எனவும் நிற்கின்றது. து டு என்னும் விகுதிகள் இவ்வெண்ணிற்கு இல்லை.

அறு என்பது புதுவழியறுத்தல், தனிப்பகுதி காணல் என்னும் கருத்துடன், ஒரு கையில் உள்ள

7. அமெரிக்காவின் பழங்குடி மக்கள் பேசும் அல்கோன்கின் (Algonquin) மொழியில் முதல் ஐந்து எண்களே அடிச்சொற்களாக இயல்பானவையாக அமைந்துள்ளன. பத்து என்பதை அவர்கள் “ஐந்து மிகுதி” என்று வழங்குவர். இதனை ஆராய்ந்தால், ஒரு கையின் விரல் தொகை கொண்டு, ஐந்தை எல்லையாகக் கொண்டமை தெரிகின்றது. (Abel Haveloque, The Science of Language, p. 134)

ஐந்து விரலையும் எண்ணி முடிந்தபின், மற்றொரு கையின் விரலை எண்ணும் வகையில் வழங்கியிருக்கலாம்.

ஏழு : எழு

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | ஏளு |
| தெலுங்கு | : | ஏடு |
| தமிழ், மலையாளம் | : | ஏழு |

இவ் வேறுபாடு இம்மொழிகளிடையே ழகரம் ளகரமாகவும் டகரமாகவும் மாறும் முறையோடு இயைந்ததே. (கோழி > கன்னடத்தில் கோளி, தெலுங்கில் கோடி).

பெயர்க்கும் பெயரடைக்கும் வேற்றுமை குறைவு. பெயரில் து, டு என்னும் விகுதிகளும் இல்லை.

எழுமை என்பது தமிழில் மிகுதியும் வழங்கும் சொல். எழு என்பதன் ழகரம் அடிச்சொல்லைச் சார்ந்ததே. ஆனால் அஃது இடையினத்துள் மிக நுண்ணியதாதலின், வருமெய்க்கு ஏற்பத் திரிதல் உண்டு, எப்பத்து என்பது கன்னடத்தில் எழுபதைக் குறிக்கும் சொல். அதில் ழகரம் இல்லை. தெலுங்கில் அத்தொகை டெப்பை என்பதாம். தெலுங்கில் உயிரொலி இடம் பெயர்தல் ஏனைச்சொற்களில் (வாரு, வீடு, தானி) காணப்படல்போலவே ஈண்டும் உள்ளது.

ஏடு என்னும் தெலுங்குப் பெயர்ச்சொல்லில் டகரம் இருப்பினும் ஏள்நூறு என்னும் தொகையில் ளகரமே காணப்படுகின்றது. எனவே ழகரமே ளகரமாகவும் டகரமாகவும் திரிந்தது என்பதில் ஐயமில்லை.

ஏழு என்பது புதியதொன்று புறப்படல், எழுதல் என்னும் பொருளில் இரண்டாம் கைவிரல் வரிசையில் புதிய எண்ணினைக் குறிக்க வழங்கியிருக்கலாம்.

எட்டு : எண்

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | எண்டு (entu) |
| தெலுங்கு | : | எனிமிதி, எம்மிதி (பெயரடை என) |
| தமிழ், மலையாளம் | : | எட்டு |

வடமொழியில் உள்ள அஷ்ட என்பதற்கும் இதற்கும் தொடர்பு இல்லை. அது வேறு; இது வேறு.

கன்னடத்தில் உள்ள வடிவம் ஆராய்ச்சிக்குப் பெருந்துணை செய்வதாகும். எண் என்பதனோடு 'டு' விகுதி சேர்ந்தே எண்டு என்றும், எட்டு என்றும் பெயர்கள் அமைந்தன. அந்த 'எண்' என்பதே பெயரடையாக எல்லா மொழிகளிலும் வழங்குகின்றது. கன்னடத்தில் எண்வரு என்னும் சொல் எண்மர் என்னும் தமிழ்ச் சொல்லுக்கு நேரானது. அதில் 'எண்' என்னும் அடிச்சொல் காணப்படுகின்றது. எனினும், எம்பத்து (எண்பது) என்பதில் ணகரமெய் இல்லை. அங்கு ணகரமெய் மகரமாகத் திரிந்ததெனக் கொள்ளல்வேண்டும்.

எண்ணூறு என்பது தமிழில் உள்ள தொகைச் சொல். கன்னடத்தில் அதற்கு நேரானது எண்டு நூறு என்பது. அதில் பெயரடையின்றிப் பெயரே அடையாக அமைந்துள்ளது.

தெலுங்கில் உள்ள எனிமிதி என்பதில் மிதி என்பது பதி என்பதன் திரிபாகும் (பதி=பத்து). அம்

மொழியில் எண்பதைக் குறிக்கும் தொகைச்சொல் எனபை, எனபது (*enabadi*) என்பன. அங்கெல்லாம் 'என' என்பது அடிச்சொல்லாக உள்ளது.

ஆயினும் தெலுங்கில் பெயர்ச்சொல்லில் டுவ் விகுதி சேராமல், மிதி என்னும் சொல் சேர்ந்ததேன்? ஒருகால் பத்தில் இரண்டு குறைவு என்பதை உணர்த்துதற்குப் போலும்! ஒன்பது என்னும் எண்ணைக் குறிக்கும் சொற்கள் திராவிட மொழிகளில் இவ்வாறு பத்தை நோக்கி எண்ணியனவாக அமைந்துள்ளன.

எட்டு, ஒன்பது என்னும் எண்களை உணர்த்த, பத்தில் இரண்டு ஒன்று குறைவு என்று உணர்த்தும் பெயர்கள் சித்திய மொழிகளிலும் காணப்படுவனவாம். திராவிட மொழிகளில் ஒன்பது இவ்வாறு அமைந்திருப்பது உண்மையே. ஆனால் தெலுங்கில் எட்டு என்பதும் அவ்வாறு அமைந்துள்ளது. அஃது, ஒன்பது என்னும் எண்ணை நோக்கி அமைந்ததாகும்.

ஏழுவரையில் எண்ணக்கற்ற பழந்திராவிடர்கள் அதனைவிட ஒன்று மிகுந்ததைக் குறிப்பதே எல்லையாகக் கொண்டு, 'எண்' என்ற சொல்லையே வழங்கினர் போலும்! அப்போது அதனையே உயர்ந்த எண்ணிக்கையாகக் கருதினர் போலும்!

**ஒன்பது**

| | | |
|---|---|---|
| கன்னடம் | : | ஒம்பத்து |
| தெலுங்கு | : | தொம்மிதி |
| மலையாளம் | : | ஒம்பது |
| தமிழ் | : | ஒன்பது, ஒன்பான், தொண்டு |

எல்லாத் திராவிட மொழிகளிலும் ஒன்பது என்னும் எண்ணுப் பெயரும் பெயரடையும் தொகைச் சொல்லாகவே உள்ளன. அவற்றின் பின்மொழி பத்து என்னும் எண்ணின் திரிபே என்பதும் தெளிவாக உள்ளது. ஆனால், தமிழில் மட்டும் தொண்டு என்னும் வேறொரு தனிச்சொல்லும் வழங்குகின்றது.

தமிழில் பத்து என்பதே பான் எனத் திரிந்து நிற்றல் உண்டு. கன்னடத்தில் ஹத்து எனத் திரிதல் உண்டு. ஆனால் மிகுதியான திரிபு தெலுங்கில் காணப்படுகின்றது. அம்மொழியில் அது பதி, மிதி, பை, வை என்றெல்லாம் திரியும்.

நிலைமொழியாய் உள்ள ஒம் என்பது, ஒன் என்பதன் திரிபே. தமிழில் ஒன் என்பதே நிலைமொழி. அஃது ஒன்று என்னும் எண்ணைக் குறிப்பதே. துளு மொழியில் ஓர்ம்பா எனவும், கோடா மொழியில் ஓர்ம்பது எனவும் வழங்குவனவற்றில் ஓர் என்னும் முதனிலையே காணப்படுகின்றது.

எனவே, ஒன்பது என்பதன் பொருள், பத்திலொன்று குறைவு; ஒன்று குறைந்த பத்து என்பதேயாகும். (பதினொன்று என்பதன் பொருள் இதற்கு மாறானது; பத்தும் ஒன்றும் என்னும் உம்மைத் தொகையாம் அது.)

ஆனால், ஆராய்ச்சியில் இடர்ப்பாடுகள் சில உள்ளன. ஓர் என்று நிற்காமல் ஒன் என்று நிற்பானேன்? அன்றியும், தொகைகளில் ஓர் என்பது மறைந்து தொள், தொண், தொம் என்பன வருவானேன்?

(தொண்ணூறு, தொளாயிரம், தொம்பை, தொம்பதி, தொம்மநூறு, தொம்பத்து, ஒம்பையிநூறு என்பன காண்க.)

இவற்றை ஆராயுங்கால் ஒன்று என்பதை முதனிலையாகக் கொள்வது பொருத்தமாகத் தெரியவில்லை. தொன்மை, தொல்லோர், தொன்று என்பவற்றின் பகுதியாகவும் பழமையை (அல்லது காலத்தால் முதன்மையைக்) குறிப்பதாகவும் உள்ள தொல் என்பதே நிலைமொழி எனக்கொள்ள இடந்தருகின்றது. லகரம் ளகரமாகத் திரிந்து தொளாயிரம் என்பதில் காணப்படுகின்றது. (ஆயிரத்திற்கு முந்தியது என்பது பொருளாம்.) லகரம் னகரமாகத் திரிதல் ஒலியியலுக்கு இயைந்ததே. அந்த னகரம் ணகரமாகவும் மகரமாகவும் திரிந்து தொண்ணூறு, தொம்மநூறு என்பவற்றில் காணப்படுகின்றது. தொல் என்பதில் லகரம் னகரமாகத் திரிந்து, முதலில் உள்ள மெய் கெட்டு, ஒன் எனவும் ஒம் எனவும் நிற்றலை ஒன்பது, ஒம்பது என்னும் பெயர்ச்சொற்கள் தெரிவிக்கின்றன. அவ்வாறாயின் ஒம்பது என்பது பத்திற்கு முந்தியது என்னும் பொருள் தருவதாகும்.

தொல் என்பதற்கு இப்பொருள் உண்டு என்பதைத் தமிழினும் தெளிவாகத் தெரிவிக்கவல்லது தெலுங்கே. தொலி வாரமு=வாரத்தில் முதல் நாள். தொலி நாடு=முந்திய நாள். எனவே பத்திற்கு முந்தியது ஒன்பது; நூற்றுக்கு முந்தியது தொண்ணூறு; ஆயிரத்திற்கு முந்தியது தொளாயிரம். இவ்வாறு தமிழில் உள்ள முறை மிகப் பொருத்தமாக உள்ளது

ஆனால், தெலுங்கு முதலிய மொழிகளிலுள்ள சொற்கள் இம்முறை பிறழ்ந்துள்ளன.

கன்னடம்— 90 : தொம்பத்து
900 : ஒம்பையிநூறு
தெலுங்கு— 90 : தொம்பை
900 : தொம்மநூறு

இத்தொகைகளில் உள்ள தொம் என்பது ஒன்பது என்னும் பொருளைக் குறித்தால் இடர்ப்பாடு இல்லை. ஆனால் அதற்கு அப்பொருள் இல்லை. கன்னடத்தில் உள்ள ஒம்பையிநூறு என்பது அப்பொருத்தம் பெற்றது.

தொல் என்பதனோடு பத்து என்பது தொக்க தொகையே ஒன்பது எனக் கொள்வது இவ்வளவு எளிதாயிருக்க, இலக்கண நூலார் இயைபின்றி எதிலிருந்தோ, எதனையோ திரித்து, எவ்வாறோ காரணங்காட்டி இடர்ப்படுகின்றனர். தொல்காப்பியரும் பவணந்தியாரும் கூறும் விதிகள் வியப்பை விளைவிக்கின்றன.[8]

பத்து

கன்னடம் : பத்து, ஹத்து
தெலுங்கு : பதி (மிதி, பை, வை)
தமிழ் : பத்து, பது, பான்

பதினொன்று முதலான தொகைச் சொற்களின் முன்மொழி பத்து என்பதன் திரிபு ஆதலால், அவை இச்சொல்லின் உண்மையைத் தெரிவிக்க வல்லன.

8. தொல். எழுத்து. ௪௪௫, ௪௬௩.
நன்னூல், 194.

பன்னிரண்டு என்பதில் பன் என்பதும் பத்தின் ஒரு வடிவமே. அது பதின் என்பதன் மரூஉவோ? பான் என்பதன் குறுக்கமோ? மலையாளத்தில் பண்டி ரெண்டு, பண்ட்ரெண்டு என்பன வழங்குகின்றன. அவற்றில் பண்ட், பண்டு என்ற திரிபு உள்ளது.

தெலுங்கில் ஈறு இகரமாக உள்ளது (பதி). அது முதலான சுட்டுப்பெயர்களும் அம்மொழியில் இகர ஈறு பெற்று அதி முதலியனவாக நிற்றல் இயல்பு.

பன்னெண்டு (பன்னிரண்டு)
பன்னித்தரு (பன்னிருவர்)
பங்தொம்மிதி (பத்தொன்பது)

இவற்றில் பன் எனத் திரிதல் காணப்படினும் ஏனையவற்றில் பதி, பத, பத், பை, வை என்ற திரிபுகள் உள்ளன.

கன்னடத்தில் பன்னெண்டு, பன்னெரடு என்பவற்றில் பன் என்பதும், பயிஞயிரம் என்பதில் பயின் என்பதும், ஏனையவற்றில் பதின், வத்து என்பனவும் உள்ளன.

வடசொல்லாகிய பந்தி (*pankti*=விருந்தினர் வரிசை) என்னும் சொல்லிலிருந்து, பந்து, பது, பதி என்பன பிறந்திருக்கக்கூடும் என்று கருதுவார் உளர். நூறு, வை (ஆயிரம்) என்பவற்றை எண்ணத்தெரிந்த மக்களுக்குப் பத்து என்னும் எண் தெரியாது எனக் கொள்ளல் பொருந்தாது. தவிர வடசொல்லைக் கொள்வதாயின், அவ்வெண்ணைக் குறிக்கப் பெருவழக்காயுள்ள தசம் என்ற சொல்லையே கடன் வாங்கி

யிருக்க வேண்டும். அவ்வாறு கொள்ளாமையின் அது வடசொல்லன்று.

பன், பது என்னும் இரண்டிலொன்று அடிச் சொல்லாதல் வேண்டும். மலையாளத்தில் உள்ள பண்டிரெண்டு, தெலுங்கிலுள்ள பந்தொம்மிதி என்னும் சொற்களை ஆராய்ந்தால், பன், பத்து எனத் திரிந்திருக்கும் என அறியலாம்.

பன் என்பதன் வேறுவடிவமாகப் பல் என்னும் சொல்லைக் கொள்ளின், பத்தின் பழம் பொருள் விளங்குகின்றது. எட்டு வரையில் எண்ணக்கற்ற மக்கள் மிகுதியானவற்றைப் பல என்றும் பன்மை என்றும் கருதியிருக்கலாம். பன் என்பது அப்பொருளது ஆகலாம். பல்+து, பஃது, பத்து என ஆகியிருக்கலாம்.

அன்றி, பத்து என்பதே பன் எனத் திரிந்தது எனக் கொள்ளின், வேறு சொல் அதன் பழம் பொருளைத் தெரிவிப்பதாகல் வேண்டும். பகுதி என்பது பஃதி, பஃது எனத் திரிதல் இயல்பு. பஃது என்பது தமிழிலக்கியத்துள் பயின்றது. பகு என்னும் முதனிலை, வகையை—வகுத்தலை—பாகுபாட்டை உணர்த்துவதாகும். இரண்டு கையளவு தொகையை ஒரு பகுதியாக முன்னோர் வழங்கியிருக்கலாம்.[9] பகுதி

9. பாஸ்க் (Basque) மொழியில் இருபது இருபதாக எண்ணும் முறையே (Vigesimal system) உள்ளது. முப்பத்தொன்பதை நாம் மூன்று பத்தும் ஒன்பதும் (முப்பது+ஒன்பது) என்று வழங்குகின்றோம். அம்முறைப்படி அதனை இருபதும் பத்தொன்பதும் என்பர். அவ்வாறே அறுவதைப் பத்தால் அளந்து ஆறு பத்து அல்லது அறுபது என்கிறோம். பாஸ்க் மொழியில் இருபதால் அளந்து மூன்று இருபது என்பர்.
(Abel Haveloque, The Science of Language, p. 118)

என்பது பாதி எனத் திரிந்து வழங்குவதால், பஃது என்பது பான் எனத் திரிந்திருக்கலாம். அன்றி, பகு >பகல்>பால் எனத் திரிந்து, பால்>பான் என லகர ஈறு னகர ஈறாகியிருக்கலாம். பால் எனினும் பகுதி எனினும் ஒக்கும்.

நூறு

தெலுங்கில் இச்சொல்லும் உள்ளது. வந்த (*vanda*) என்னும் வேறு பெயர்ச்சொல்லும் உள்ளது.

நூறு எனினும், நீறு எனினும் பொடி, துகள் என்பவற்றைக் குறித்தல் மரபு. மலையாளத்திலும் தெலுங்கிலும் அப்பொருளில் நூறு என்பது வழங்கும்; தமிழில் நீறு என்பதும் அப்பொருளில் வழங்கும். (புல், பில் எனப் பேச்சில் உகரம் இகரமாய்த் திரிதல் காண்க). தொடக்கத்தில் எண்ணிக்கையுள் அடங்காத பெருந்தொகையைக் குறிக்கப் 'பொடி போல் பல' எனக் குறித்திருத்தல் இயற்கையாகவே தோன்றுகின்றது. "வாழிய.....மணலினும் பலவே" என்று பல ஆண்டுகளைக் குறிக்கையில் மணலைக் கூறுதல் தமிழ் மரபு என்பதும் ஈண்டுக் கருதத்தக்கது.

ஆயிரம்

கன்னடம் : சாவுர, சவர
தெலுங்கு : வேலு, வேயி
தமிழ், மலையாளம் : ஆயிரம்

வடசொல்லாகிய 'ஸஹஸ்ர' என்பது ஸஹஸ்ரம்>ஸஹஸிரம்>அஇரம்>ஆயிரம் எனத் திரிந்

தது.[10] தெலுங்கில் உள்ள 'வேயி' தூய திராவிடச் சொல்லே. வெயி, வெய்யி, வே என்பவற்றின் பன்மையே வேலு என்பதாகும். வெப்பமான நிலை, மிகுதியான நிலை, சூரியன் கிரணங்கள் போன்ற பொருளை உணர்த்தும் சொல் படிப்படியே இப்பொருளில் வழங்கி இப்பெருந் தொகையைக் குறித்திருக்கலாம்.

**எண்முறைப் பெயர்** (*Ordinal numbers*)

ஆம் என்னும் பெயரெச்சம் சேர்த்து எண்ணுப் பெயர்களை முறை குறிக்க வழங்குவர்; இரண்டாம் ஆண்டு, மூன்றாம் வகுப்பு எனல் காண்க.

ஆனால் ஒன்று என்னும் பெயரை இவ்வாறு பயன்படுத்துதல் இல்லை. முதல் என்னும் வேறு சொல்லை வழங்குவர். (முதல் ஆண்டு, முதல் வகுப்பு என). முன், முந்து என்னும் சொற்களில் உள்ள மு என்னும் அடிச்சொல தல் விகுதியோடு சேர்ந்து அமைந்ததாகும் இது.

தெலுங்கில் மொதட்டி என்பது வழங்குகின்றது. ஆம் என்பதற்கு நேராக அவ என்பது எண்ணுப் பெயர்களோடு வழங்குகின்றது. (மூடவ=மூன்றாம்). கன்னடத்தில் (மூறனே என) அனே வழங்குகின்றது.

ஆம் என்பதற்குப் பதிலாகத் தமிழில் ஆவது என்பதும் சேர்த்து வழங்கப்படும்.

---

10. இந்தோ - ஐரோப்பிய இனம் பிரிந்து வேறு வேறு வாழ்க்கை தொடங்குவதற்கு முன்பு ஆயிரம் என்ற எண்ணிக்கை அறியாமல் அதற்குரிய சொல் இல்லாமல் இருந்தது என்பர் விட்னே.
(Language and the Study of Language, p. 419)

## கஉ. மூவிடப் பெயர் (Pronouns)

மொழிகளின் உறவையும் மொழியினங்களின் தொடர்பையும் விளக்கும் வகையில் மூவிடப்பெயர்கள் சிறந்து நிற்கின்றன. மொழிகளில் பொதுவாகச் சொற்களும் சொற்றொடர்களும் மாறும் இயல்பின. ஆனால் மூவிடப்பெயர்கள் அத்தகையன அல்ல. அவற்றுள் தன்மைப் பெயர்களும் முன்னிலைப் பெயர்களும் என்றும் மாறா இயல்பினபோல விளங்குகின்றன; ஏனைய சொற்களோடு ஒப்பிட்டு நோக்குங்கால் இவ்வுண்மை புலனாகின்றது; ஆனால் காலப் போக்கில் இவையும் ஒரு சிறிது மாறுகின்றன எனலாம். ஆனால், அம்மாறுதலோ மிக மிகச் சிறிதே; அதற்கும் நெடுங்காலம் வேண்டியுள்ளது. எண்ணுப் பெயர்கள், வேற்றுமை யுருபுகள், வினை விகுதிகள் இவையும் எளிதில் மாறாத மொழிக்கூறுகளே. ஆயினும், அவற்றினும் நிலைபேறானவை மூவிடப்பெயர்கள் என்று கூறல் பொருந்தும். மூவிடப்பெயர்கள் காலப்போக்கில் மாறுதலுக்கு இடந்தரினும், அடியோடு மாறுவது என்றும் இல்லை. ஆதலால் பழைய சொல்லுக்கும் புதிய சொல்லுக்கும் உள்ள தொடர்பு ஒரு சிறிதும் மங்காமல் தெளிவாய் அறியக் கிடக்கின்றது. சில மொழிகள் எல்லாத் துறையிலும் முற்றிலும் வேறுபட்டனவாக மாறிப்போவதும் உண்டன்றோ? அத்தகைய மொழிகளிலும், மூவிடப்பெயர்கள் தொடர்புடையனவாய் நின்று, மொழிகளின் உறவை விளக்கும் ஒரு தனிக்கருவியாய் அமைகின்றன. முன்

னிலைப் பெயர்களைவிட, இவ்வகையில் தன்மைப் பெயர்களுக்கு நிலைபேறு மிகுதி எனக் கூறலாம்.

சப்பானிய மொழியில் மூவிடப்பெயர்களே இல்லை. எவ்விடம் குறிக்கப்பெற்றுள்ளது என்பதை வழக்கு நோக்கியே உணர்தல் வேண்டும். தமிழ் முதலான திராவிட மொழிகளில் படர்க்கையிடப் பெயர் இல்லை என்று கருதவேண்டியுள்ளது. தான், தாம் என்பவை படர்க்கையிடப் பெயர்களல்ல; ஆயினும் அப்பொருளில் வழங்குவன (*reflexive pronouns*). அவன், இவன், அவள், இவள் முதலியன படர்க்கைச் சுட்டுப் பெயர்கள். அவற்றில் உள்ள அன் விகுதி அல்லது ஆன் விகுதி முதலியவை பண்டைக் காலத்தில் இருந்து மறைந்த படர்க்கையிடப் பெயரைக் குறிப்பன எனலாம்.

**தன்மை ஒருமை இடப்பெயர்**

திராவிட முதல்மொழியில் இதன் வடிவம் யாதாக இருந்திருத்தல்கூடும் என ஆராய்தல் வேண்டும். தமிழ் முதலான பல மொழிகளிலும் உள்ள சொற்களை ஒப்பிட்டுப் பார்ப்பதால் உண்மை ஒருவாறு விளங்கக்கூடும். அவ்வாறு ஒப்பிடும்போது, உருபேலாத பெயர்ச்சொற்களை மட்டுமே அல்லாமல், உருபேற்குமுன் திரிந்த வடிவங்களையும் ஒப்பிடல் வேண்டும். ஏனெனில், பழைய சொல்லின் உண்மை வடிவம் யாது என இப்போது அறுதியிட்டுக் கூறமுடியாதன்றோ? தொல்காப்பியனார் முன்னிலைப் பன்மையில் நும் என்பது பழைய வடிவமென்றும் நீர் என்பது அதன் திரிபு என்றும் கருதுகின்றார். ('நும்மின்

திரிபெயர்'). அதுபோலவே, 'யான்' என்பது பழைய வடிவமோ, வேற்றுமைப் பொருளில் திரிந்த 'என்' என்பது பழைய வடிவமோ என்பதும் ஐயுறத்தக்கதே. ஆதலின் யாவற்றையும் ஒப்பிடுதல் வேண்டும். அன்றியும், ஒருமைப் பெயரை ஆராயுங்கால், பன்மைப் பெயரையும் உடன்வைத்து ஆராய்தலும் வேண்டும். வினைமுற்று விகுதிகளையும் ஆராய்தல் இன்றியமையாதது.

தமிழ் :

| | |
|---|---|
| யான், நான் | உருபேலாப் பெயர் |
| என் | உருபேற்கத் திரிந்த பெயர் |
| ஏன் | பால் காட்டும் விகுதி (பேச்சில்) |
| ஏன், என், அன் | ஷை (இலக்கியத்தில்) |
| நாம், நாங்கள், யாம் | பன்மைப் பெயர் |
| நம், எங்கள், எம் | ஷை - திரிந்த வடிவம் |
| ஓம், எம், ஏம், அம், ஆம் | ஷை - விகுதிகள் |

மலையாளம் :

ஞான், யான் (பழைய மலையாளம்) பெயர்
என் திரிபு
பால் காட்டும் விகுதி இன்று இல்லை
செய்யுளில் 'என்' விகுதி ஒருமையில்
ஷை 'ஓம்' விகுதி பன்மையில்
பெயர்ச் சொற்களில் அன், ஏன், விகுதிகள்
பன்மை—நாம் ; சில இடங்களில் 'நோம்'
(ஓம் என்பதோடு தொடர்பு)

கன்னடம் :

நானு—பெயர் (நா என்பதும் உண்டு)
பழைய இலக்கியத்தில் 'ஆன்'
நன்—திரிபு

எனு, ஏனு, ஏனெ, என் — விகுதிகள்
நாவு, ஆம், ஆவு — பன்மை
நம், எம் — பன்மைத் திரிபு

தெலுங்கு :

நேனு நே — பெயர்
பழைய இலக்கியத்தில் ஏனு
நா — திரிபு
நு, நி, வு, வி, ண்டு — விகுதிகள்
மேமு, மனமு — பன்மை
ஏ, மு — பழைய இலக்கியத்தில்
(விகுதிகளில் பெயர்ச் சொல்லின் சிறந்த முற்பகுதியை விட்டுச் சிறவாத பிற்பகுதியைக் கொள்ளல் காண்க).

ஆராய்ச்சி :

(1) உயிரெழுத்து அகரமாகவும் எகரமாகவும் ஊசலாடுதல் காணப்படுகின்றது. (யாவர் > எவர் போல).

(2) யகரம் நிலைபெறுமல் நீங்குகின்றது. இது திராவிட மொழிகளில் இயல்பே.

யான் > ஆன் (யார், ஆர், யாண்டு > ஆண்டு, யாறு > ஆறு) யான் பழைய வடிவாதல் வேண்டும்.

(3) நகரம் யகரம் இரண்டும் ஒன்று மற்றொன் றாய் மாறி வரலும் திராவிட மொழியியல்பே. இது தமிழிலும் மலையாளத்திலும் மிகுதியும் காணப்படு கின்றது.

(4) நகரம், ஞகரம், யகரம் மூன்றும் தொடர் புடையன ; மெய் நீங்குதலும் உண்டு.

நண்டு > ஞண்டு (மலையாளத்திலும் ஞண்டு; தெலுங்கு கன்னடத்தில் எண்ட்ரி)
நீந்து > தெலுங்கில் ஈது, கன்னடத்தில் ஈஜு
நீங்கு > தெலுங்கு கன்னடத்தில், ஈகு
நமன் > யமன் > எமன் (யகரம் எகரமாதலும் காண்க.)

(5) யகரமே பழையது; அது நகரம் அல்லது ஞகரமாக மாறுதலும், நில்லாது கெடுதலும் உண்டு என்பது விளங்குகின்றது. அதனை வலியுறுத்தும் சான்று:— 'என்' என்பதே தெலுங்கிலும் கன்னடத்திலும் பெயர்த்திரிபாக உள்ளது. அது யான் என்பதன் திரிபாகுமேயன்றி நான் என்பதன் திரிபாகாது. தொல்காப்பியனுர் யான் என்னும் ஒன்றனையே கூறியுள்ளார். நன்னூலார் நான் யான் இரண்டினையும் கூறினர். ஆதலின் யகரமே பழையது.[1]

யாங்கு > எங்கு    யந்திரம் > எந்திரம்
யஜமான > எஜமானன்—வடசொல் தமிழாகுங்கால் யகரம் எகரமாதல்
தெலுங்கில் நேனு என எகரவுயிர் பெயரில் இருத்தல் காண்க.

(6) ஞகரமோ நகரமோ விகுதிகளில் இல்லை; ஆதலின் பழைய வடிவத்தில் இவை இருந்திருத்தல் இயலாது.

(7) நகரம் மிகப்புதியது என்று கூறவொண்ணாது. பெயர்த் திரிபுகளில் பண்டு தொட்டே இலக்

1. யான் யாம் நாமென வரூஉம் பெயரும் (தொல். சொல். கசூஉ)
தன்மை யான் நான் யாம் நாம்...(நன்னூல், 285)

கியங்களில் 'நம்' என்பது வழங்கி வருகின்றது. நம்பி எம்பி என்ற சொற்களும் உள்ளன. ஒருமையில் 'நான்' என்பது கூறாத தொல்காப்பியனார் பன்மையில் 'நாம்' என்பது கூறியுள்ளார்.[2] ஒருமையிலும் தெலுங்கில் 'என்' என்பதற்கீடான பெயர்த்திரிபு நா, நன் என நகரம் பெற்றுள்ளது. ஆயினும் யகரத்திற்குப் பிந்தியது எனக் கூறலாம்.

(8) உயிர் ஆகாரமா? ஏகாரமா? (ஓ என்பதன்று; ஆகாரம் அவ்வாறு திரிதல் இயல்பு.) மலையாளத்தில் உள்ள இகரம், எகரத்தின் வேறன்று. என் என்பது எல்லா மொழிகளிலும் பெயர்த்திரிபாகவும் விகுதியாகவும் பெரும்பாலும் வருகின்றது. தெலுங்கு இலக்கியத்திலும் 'ஏனு' என்பது பெயராக வழங்கியுள்ளது. ஆதலின், ஏகாரமே பழையது எனத் துணியலாம். (அகரமும் எகரமும் ஒன்று மற்றொன்றாகத் திரிதல் இம்மொழிகளின் இயல்பாக உள்ளது. தமிழில் ஆண்டு, ஆறு என்பவை தெலுங்கில் ஏண்டு, ஏறு என்று உள்ளன. வடமொழியில் ஜபம் என்பது தமிழில் செபம் என்றாகின்றது. பலம் > பெலம், சா > செத்தான் என்பனவும் காண்க.)[3]

(9) ஈற்றுமெய் னகரம், அது வேர்ச்சொல்லைச் சார்ந்ததா? பன்மையில் அஃது இல்லை; அதன்

---

2. தொல். சொல். கசுஉ

3. தன்மை ஒருமைப் பெயரில் உள்ள உயிர் ஆகாரமும் அன்று, ஏகாரமும் அன்று; ஆகார ஏகாரங்களுக்கு இடைப்பட்ட ஒலியாகும் என்று கே. வி. சுப்பையா எழுதியுள்ளார். (Dravidic Studies, No. II, p. 15).

இடத்தில் மகரம் வருகின்றது. ஆதலின் னகரம் ஒருமையையும் மகரம் பன்மையையும் குறிப்பன எனக் கொள்ளின், ஏ என்பதே தன்மையைக் குறிப்பது ஆகும்.

இந்த னகரம் அவன் என்பதில் உள்ளது போல் பால் குறிக்காது; எண் மட்டும் குறிப்பது.

(10) தன்மையில் நா, யா, ஆ, என்பனவும் முன்னிலையில் நீ, யீ, ஈ, என்பனவும் உள்ளன.

உயிரால்தான் வேறுபாடு உள்ளது. முதன் மெய் யாதாயினும் வேறுபாடில்லை. இவ்வாறு ஏகாரம் அல்லது ஆகாரம் தன்மையிலும்,[4] ஈகாரம் முன்னிலையிலும் உறுதியாய் நிற்றலின் அடிப்படையாகச் சிறந்ததொரு காரணம் இருத்தல் வேண்டும். இவற்றை அகர இகரச் சுட்டுக்களோடு தொடர்பு படுத்தின் சேய்மை அண்மை என்ற முறைக்கு மாறுபாடாக உள்ளது. அகர ஒலி முதன்மையானது, இயற்கையானது; அதனைத் தன்மையைக் குறிக்கவும், அதற்கடுத்த இகர ஒலியை அடுத்த முன்னிலை

4. இதன் கண் உள்ள உயிர் ஏகாரமே என்பது திரு. வே. வேங்கடராஜலு ரெட்டியார் அவர்கள் கருத்து. "தன்மை யொருமைப் பெயர், தெலுங்கு மொழியில் பழைய செய்யுட்களில் ஏன் என்று வழங்குதலானும் உருபேற்ற வழித் தமிழ் பழங்கன்னடம் மலையாளம் துளு துத கோத இம்மொழிகளில் என் என்று காண்டலானும், இம்மொழிகளில் வினை விகுதிகளாய் என் அல்லது ஏன் என்பதுவே இருத்தலானும், குயி மொழியில் இன் என்றும் தெலுங்கு மொழியில் நின் என்றும் காணப்படும் விகுதியும் என் என்பதன் திரிபாகும் எனல் அமையுமாகலானும், ஏன் என்பதுவே பெயராதல் அறியப்படும்" என்று அவர் எழுதியது காண்க. (திராவிட மொழியின் மூவிடப் பெயர், பக்கம் 19).

யைக் குறிக்கவும் முன்னோர் வழங்கினர் என்பர் கால்டுவெல்.[5] முதலெழுத்து முதலிடத்தையும் (தன்மையையும்), இரண்டாம் எழுத்து இரண்டாமிடமாகிய (*second person*) முன்னிலையையும் குறித்தது என்பர். சரித்திர ஆராய்ச்சிக்கு எட்டாத பழங்காலத்தில் மக்கள் பேச்சின் இயல்பு இன்னதாயிருக்கலாம் என்று இது சுட்டுகின்றது. சீன மொழி இதற்குச் சான்றாக உள்ளது. அம்மொழியில் தன்மையிடப் பெயரின் பழைய சொல் அகரவுயிரும், முன்னிலையிடப் பெயரின் பழைய சொல் இகரவுயிருமாம்.

கால்டுவெல் இவ்வாறு விளக்குவதெல்லாம் தன்மைப் பெயரின் உயிர் ஆகாரம் என்று கொண்டதன் விளைவே யாகும். அவ்வாறு கொண்டதால், சேய்மையைக் குறிக்கும் அகரம் தன்மையைக் குறிக்க வழங்குதல் இயல்பாகாமையும் புறக்கணிக்கப்பட்டது. அவ்வுயிர் ஆகாரமன்று, ஏகாரமென்று எனக் கொண்ட திரு. வேங்கடராஜலு ரெட்டியார் அவர்கள் அதன் தோற்றத்தைக் குறித்து விளக்குவது பொருந்துவதாக உள்ளது: "அகரம் சேய்மை யிடத்தையும், இகரம் அண்மையிடத்தையும் உகரம் இவ்விரண்டற்கும் இடைப்பட்ட நடுவிடத்தையும் குறிப்பனவாகலின், முதன் முதலில் அகரத்தைப் படர்க்கைப்பொருட்கும், இகரத்தை முன்னிலைப் பொருட்கும் உகரத்தை அவ்விடைப்பட்ட விடத்துப் பொருட்கும் வழங்கி, தன்மைப்பொருட்கு (நான்கா முயிராகிய) எகரத்தை

5. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 373

வழங்கியிருப்பர். நாளடைவில், சேய்மை யண்மை கட்கு இடைப்பட்ட இடத்தின் வழக்கு ஒழிந்து போதல் கூடும். சுட்டுப் பெயர்களுள் உகரச் சுட்டுப் பெயர் நெடுங்காலத்திற்கு முன்னரே திராவிட மொழி கள் எல்லாவற்றிலும் வழக்காறற்றுப் போயினமை ஈண்டு எண்ணத்தகும். இவற்றால், ஆகாரத்தினை யுடைய தான் தாம் என்னும் படர்க்கைப் பெயர்களும், ஈகாரத்தினையுடைய நீன் நீம் என்னும் முன்னிலைப் பெயர்களும், ஏகாரத்தினையுடைய ஏன் ஏம் என்னும் தன்மைப் பெயர்களும் நிலைத்திருப்ப, ஊகாரத்தினை யுடைய பெயர்கள் பண்டே வழக்காறற்றிருக்கும் என்று கொள்ளுதல் கூடும்.''[6]

## முன்னிலை ஒருமை இடப்பெயர்

**தமிழ்:**

நீ (நீய், நீன்)
நின், நுன், உன் (னகர ஈறு இன்றியமையாதது)
ஆய், அய் (ஐ), இ
நீர், நீயிர், நீவிர், நீங்கள் (நீம்)[7]
நும், உம், நுங்கள், உங்கள்
உம், ஈர், இர், மின்

**மலையாளம்:**

நீ
நின்
நிங்ஙள், நீம்
நிங்ஙள், நிம்

6. திராவிட மொழியின் மூவிடப் பெயர், ப. 20.
7. சீவகசிந்தாமணி, விமலை. 44.

கன்னடம் :

நீன்
நின்
ஈயெ, எ, அய்
நீவு, நீம்
நிம் ; இரி, ஈரி, இர்

தெலுங்கு :

நீவு
நின், நீ
வு, வி
மீரு, மீரலு
மீ
ரு, ரி

ஆராய்ச்சி :

(1) நீன் என்று தமிழில் ஒரு காலத்தில் வழங்கியிருக்கலாம். வேற்றுமையில் னகர ஈறுகவே வருதல் காண்க.[8]

(2) யான் நான் என்பவற்றிற்கு நேரான முன்னிலைப் பெயராக நீன் என்பதனைக் கொள்ளவேண்டும்.

(3) விகுதிகள் யகரமும் இகரமும் ஈறுகக் கொண்டிருத்தலின் நீய் என்றும் பெயரிருந்திருக்கலாம்.

(4) நின், உன் என்பவற்றில் உள்ள இகரமோ உகரமோ உயிராதல் வேண்டும். விகுதிகளையும் பெயர்களையும் நோக்கின், இகரமே முதலில் இருந்திருக்கும் எனலாம். உகரம் இகரமாதல் (புலி>பிலி, புல்>பில்

8. நீ என்பதே நின் என்றுயிற்று என்பர் தொல்காப்பியனர்.
நீஎன் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயின் னகரம் ஒற்று கும்மே (தொல். எழு. கஎகூ)

முன் > மின்) வழக்கில் உண்டு எனினும் இங்கு உகரத்தினும் முந்தியது இகரமே. நுன், நும், உன், உம் என்பவை பின்னர்த் தோன்றியவை.[9]

(5) நீன் என்பதன் முதலில் உள்ள நகரம் இன்றியமையாததோ? தன்மைப் பெயரான யான் என்பதற்கு நேரான யீன் இங்கில்லை. மூக்கொலியான ஈறு பற்றி முதலிலும் ஒரு நகரம் தோன்றியிருக்கலாம். ஈற்று னகரம் ஒருமை யுணர்த்தலின் இன்றியமையாதது. எனவே ஈன் என்பதே பழைய வடிவம்.

விகுதிகளில் னகர ஈறு இன்மையால் ஈ என்பதே அதனினும் பழைய வடிவம்.

சீன மொழியில் நி என்பதே முன்னிலை ஒருமை. பன்மை நிமென் என்பது.

**படர்க்கையிடப் பெயர் : தான், தாம்**

படர்க்கையிடப்பெயர்கள் இம்மொழியில் இல்லை. அவற்றிற்கு ஈடாகச் சுட்டுப் பெயர்களே[10] உள்

---

9. தொல்காப்பியனார் நீயிர் என்பது நும்மின் திரிபெயர் (தொல். சொல். கசங) எனக் கொண்டுள்ளார்.

அல்லதன் மருங்கிற் சொல்லுங் காலை
உக்கெட நின்ற மெய்வயின் ஈவர
இஇடை நிலைஇ ஈறுகெட ரகரம்
நிற்றல் வேண்டும் புள்ளியொடு புணர்ந்தே.
(தொல். எழுத்து. ௩உசு)

10. இந்துஸ்தானி அல்லது உருது மொழியிலும் இவ்வாறே உள்ளது. தன்மையில் மைன் என்றும் முன்னிலையில் து, தைன் என்றும் வழங்குவனபோல் படர்க்கையில் இடப்பெயர் இல்லை. அதற்கு ஈடாக வழங்குவது சுட்டுப்பெயரே ஆகும். (John T. Platts, A Grammar of the Hindustani or Urdu Language p. 113)

ளன. தான் தாம் என்பன அப்பொருளில் வழங்கு கின்றன; இவை எழுவாயாக வரும் வாக்கியங்களில் படர்க்கை வினைமுற்றுக்களே பயனிலையாக வரு கின்றன.

தமிழ் :

தான்
தன்
தாம், தாங்கள்
தம், தங்கள்

மலையாளம் :

தான்
தன்
தாம், தாங்ஙள்
தம், தங்ஙள்

கன்னடம் :

தான்
தன்
தாம், தாவு, தாங்கள்
தம், தங்கள்

தெலுங்கு :

தானு
தன்
தாமு, தாரு

இவற்றிலும் னகர ஈறு ஒருமையினையும் மகர ஈறு பன்மையினையும் குறிக்கின்றன.

இவை படர்க்கையிலே அன்றி மற்ற இடங்களி லும் தேற்றப் பொருளில் மற்றப் பெயர்களோடு

சேர்த்து வழங்கப்படும். ஒருமைக்குத் 'தான்' என்பதும் பன்மைக்குத் 'தாம்' என்பதும் சேரும். தத்தம் என்பது அவரவர் என்று நிரலே குறிக்கும்போது வருவது.

தாம், தாங்கள் என்பன முன்னிலையில் நீ, நீர், நீங்கள் என்பவற்றிற்கு ஈடாக உயர்சொற் கிளவியாக வழங்கும். அப்போது பிற பெயர்களோடு சேராது தனித்து நிற்கும். 'தாங்கள் சொன்னீர்கள்' என வரும்.

முறைப்பெயர்கள் பலவற்றில் தம் அல்லது தன் என்பது சேர்க்கப்பட்டுள்ள உண்மையைத் தமிழ்ச் சொற்கள் பல காட்டும். அவ்வாறே தன்மை முன்னிலைப்பெயர்களும் சேர்ந்துள்ளன.

எம்பி, நம்பி, நும்பி, உம்பி, தம்பி, எந்தை, உந்தை, தந்தை
எம்பிரான், தம்பிரான், என்னை, தன்னை, தமையன்

பண்புப் பெயராக வழங்கும் தன்மை என்பதிலும் தன் என்பது இப்பெயரே எனலாம்.

**இடப்பெயர்களின் பன்மை**

பன்மைச் சொற்களைப் பொதுவாக நோக்குங்கால், மகரஈறு பெற்றுப் பன்மை உணர்த்தல் விளங்கும். வேறு வகையாக உள்ள நீர் முதலியன சிறுபான்மையவே.

பேச்சுத் தமிழில் மகர ஈற்றின் பின்னர் கள் விகுதி சேர்ந்து வழங்கும் பெயர்கள் உள்ளன. தொல்காப்பியனார் கள் விகுதி அஃறிணைக்கே என வரை

யறுத்துக் கூறியிருப்பினும், இக்காலத்தில் அவ்விகுதி உயர்திணையிலும் வழங்குகின்றது.[11]

இவ்வாறு கள் விகுதியில்லாத பன்மையும், கள் விகுதி சேர்ந்த பன்மையும் ஆக இருவகைப் பன்மைச் சொற்கள் மொழியில் இருக்கவே, மக்கள் முன்னதை உயர்சொற் கிளவியான ஒருமையாக வழங்கத் தலைப் பட்டனர். நாளடைவில் பின்னதையும் அவ்வாறு வழங்கலாயினர்.[12] தெலுங்கிலும் இவ்வாறு உள்ளது. மீரு - மீரலு (நீர் - நீங்கள்); வாரு - வாரலு (அவர் - அவர்கள்) என இருவகைப் பன்மை காண்க. மலையாளத்திலும் இவ்வாறு உள்ளது.

கன்னடத்தில் பன்மையுணர்த்தும் மகரத்திற்குப் பதிலாக 'வு' வருகின்றது. மகரம் வகரமாதல் ஒலி நூலார்க்கு உடன்பாடே.

---

11. தொல். சொல். கசுசு

12. ஆங்கில மொழியில் முன்னிலையைக் குறிக்க ஒரு சொல்லே உள்ளது. அது you என்பது. அஃது ஒருமைக்கும் பன்மைக்கும் பொது. முதலில் அது பன்மையை உணர்த்த thou என்பது ஒருமையை உணர்த்திவந்தது. மக்களினத்தில் இருந்துவந்த உயர்வு தாழ்வு வேறுபாடே மரியாதைப் பன்மை தோன்றக் காரணமாக இருந்தது. ரோமன் மன்னர்கள் மற்ற மக்களைவிடத் தங்களை உயர்வாகக் கருதினர்; அவ்வாறே சுட்டப் படவேண்டும் என விரும்பினர்; ஒரு மனிதனைவிட ஒரு மன்னன் உயர்ந்தவன் என்று 'நீர்' 'நீங்கள்' என்னும் பொருளில் 'you' என்று அவனை மக்கள் வழங்கினர். குவேக்கர்கள் சமத்துவ நாட்டம் உடையவர்களாதலின், அந்த வழக்கத்தைக் கடிந்து 'நீ' என்றே வழங்கினர். அவர்கள் நோக்கம் எதிர்பாராத வேறு வகையில் நிறைவேறிற்று எனலாம். மன்னனைக் குறிக்க 'நீர்' என்று வழங்கிய சொல்லே தாழ்ந்த மனிதனைக் குறித்தும் வழங்க லாயிற்று. இழிவாகக் கருதப்பட்ட 'நீ' thou என்ற ஒருமைச் சொல் அழிந்தது. (Jespersen, Growth and Structure of the English Language, p. 236)

முன்னிலைப் பன்மையில் மட்டும் மகர ஈறு சிறு பான்மையதே; ரகர ஈறே பெரும்பான்மையதாக உள்ளது. விகுதிகளிலும் அவ்வாறே உள்ளது. (தமிழில் நீம் என்பது வழங்காமல், நீர் என்பதே வழங்குகின்றது).

தெலுங்கில் பன்மை உணர்த்தும் மகர ஈறு (மீரு என்பதில்) மொழி முதலிற் செல்ல, ஈற்றில் ரகரம் நிற்கின்றது. ஆயினும் நகரமே மொழிமுதல் எழுத்து என்பதில் ஐயமில்லை. ஒருமையில் 'நீ' என நிற்றல் காண்க. எனவே, மீரு, மேமு என வருவன தெலுங்கிற்கு இயல்பாகவுள்ள ஒலிநயம்பற்றிய மாறுதல்களேயாம்.

எனவே, திராவிட முதல் மொழியில் மகரமே பன்மையுணர்த்தும் ஈறாக இருந்து வந்ததெனத் துணியலாம்.

ரகரத்தின் தோற்றத்தைப்பற்றி ஆராயும் கால்டுவெல், (இரண்டு என்னும் பொருளில்) இருமை உணர்த்தும் இர் என்பது சேர்ந்து நாளடைவில் இகரவுயிர் கெட்டு, ரகர மெய் மட்டும் நின்றிருக்கும் என்கிறார்.[13]

நீம் + இர் > நீமிர் > நீவிர் > நீயிர் > நீர்

அவ்வாறே அவர் மகர ஈற்றின் தோற்றத்தை ஆராய்ந்து, சேர்த்தெண்ணும் உம்மைப் பொருளை உணர்த்த முதலில் 'உம்' சேர்ந்து உயிர்கெட்டு மெய் நின்றிருக்கும் என்கிறார்.[14]

---

13. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 407
14. ibid.

## உளப்பாட்டுத் தன்மைப் பன்மை

தன்மைப் பன்மையில் இருவகைச் சொற்கள் உள்ளன. இது திராவிட மொழிகளின் சிறப்பியல்பு. ஒருவகைச் சொல், கேட்போரை நீக்கித் தன்னைச் சார்ந்தோரை மட்டும் உணர்த்துவது; மற்றொரு வகைச் சொல், கேட்போரை உள்ப்படுத்திக் கூறுவது; இரண்டாம் வகைப் பன்மைக்கு உளப்பாட்டுத் தன்மைப் பன்மை என்பது பெயர்.[15]

ஐரோப்பிய மொழிகளில் இவ்வகை இல்லை; சித்திய மொழிகளில் உண்டு.

| உளப்படுத்தாதது (Exclusive) | உளப்படுத்துவது (Inclusive) |
|---|---|
| யாம், நாங்கள் | நாம் - தமிழ்[16] |
| மேமு | மனமு - தெலுங்கு |

15. பாலினேஷிய மொழிகளிலும் தன்மைப் பன்மை உணர்த்தும். சொற்கள் இரண்டு உள்ளன. அவற்றுள் ஒன்று முன்னிலையாரை உளப்படுத்தும்; மற்றொன்று உளப்படுத்தாது. (Whitney, Language and the Study of the Language p. 338)

16. தன்மைப் பன்மை வினைமுற்று விகுதிகளிலும் இத்தகைய வேறுபாடு கண்டார் பவணந்தி முனிவர்.

> அம்ஆம் என்பன முன்னிலை யாரையும்
> எம்ஏம் ஓம்இவை படர்க்கை யாரையும்
> உம்ஊர் கடதற இருபா லாரையும்
> தன்னொடு படுக்கும் தன்மைப் பன்மை. (நன்னூல், 333)

இவ்வாறு பவணந்தியார் வரையறுத்தபோதிலும், இலக்கியத்தில் இவை மயங்கியே வருகின்றன. பேச்சு வழக்கில் இவ்வேறுபாட்டிற்கு இடமே இல்லை. பேச்சில், ஓம் என்னும் விகுதியே தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள் பலவற்றிற்கும் பொதுவாக வழங்குகின்றது.

**இணைப்பு இடப்பெயர்** *(Relative pronoun)*

ஆங்கிலம் முதலிய பல ஐரோப்பிய மொழிகளில் உள்ள (*who, which, where* முதலான) இணைப்பு இடப்பெயர்கள் தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் இல்லை. ஆயின், அவற்றிற்கு ஈடாகத் திராவிட மொழிகள் வினையாலணையும் பெயர்களையாவது பெயரெச்சங்களையாவது வழங்குகின்றன. இஃது இம்மொழிகளின் சிறப்பியல்பாகும்.

**I saw the man who came**

வந்த மனிதனைப் பார்த்தேன் (பெயரெச்சம்)

**I saw him who came**

வந்தவனைப் பார்த்தேன் (வினையாலணையும் பெயர்)

## கரு. வினைச்சொல்

மொழிக்கு இன்றியமையாத உறுப்பு வினைச் சொல்லாகும். வினைச்சொல்லே ஒரு வாக்கியத்தை அமைக்கும் ஆற்றல் வாய்ந்ததாக உள்ளது.[1] வா, போ என்னும் ஏவலொருமை வினைகள் முற்றுக்களாய் நின்று தனித்தனியே வாக்கியங்களாக அமைய வல்லன வாகவும் உள்ளன. அன்றியும், வாக்கியத்தில் எழு வாய், செயப்படுபொருள் முதலிய பலவும் வாக்கியத் தின் வினைச்சொல்லைச் சார்ந்து அதற்குத் துணையாக வருவனவாகவே உள்ளன.

செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே[2]

என்னும் வினையிலக்கணம் வினைச்சொல்லின் சிறப் பினை உணர்த்துவதாக உள்ளது. திராவிட மொழி களிலே அல்லாமல், மற்ற மொழிகளிலும் வினைச் சொல்லே பெரிதும் ஆராயப்பட்டுப் போற்றப்படுகின் றது.[3] தமிழ் முதலிய மொழிகளை ஆராய்வோர் வினைச்

1. Jespersen, A Modern English Grammar, p. 67
2. நன்னூல், 320
3. The verb is the grammarian's idol. It is to him the light and life of the sentence. It ushers in the predicate, which is the only intresting and informative part of the sentence. Indeed it is the predicate. All the rest is mere appendage. If the rest includes an object, it is an object of the verb; if the rest includes other things besides the object, they are complements of the predicate (that is of the verb) or extensions of the predicate. (P. B. Ballard, Thought and Language, p. 86)

சொற்களின் பல்வேறு அமைப்புக்களையும் பொருள் வேறுபாடுகளையும் கற்கும் அளவிற்குத் தேர்ச்சி பெறுவர். ஆதலின், வினைச்சொற்கள் எவ்வெவ்வாறு அமைந்து திணைபால் காலம் முதலியவற்றை உணர்த்துகின்றன என்பதை நன்கு தெளிதல்வேண்டும்.

**வினைச்சொல் அமைப்பு:**

(1) திராவிட மொழிகளில் அடிச்சொற்கள் பல பெயராகவும் வினையாகவும் வழங்குகின்றன (அடி, பூ). வேற்றுமை யுருபு ஏற்பதால் பெயரெனவும், கால இடைநிலை ஏற்பதால் வினையெனவும் பகுத்தறியக் கிடக்கின்றன.

(2) அடிச்சொல்லோடு கு, து, வு முதலான உறுப்புக்கள் சேர்வதால் வினைச்சொற்கள் அமைகின்றன (பெரு-பெருகு). அவ்வாறு அமைந்த வினைச்சொற்கள் பகுதியாய் நிற்க, அவற்றோடு கால இடைநிலை முதலியன சேர்கின்றன.

(3) திராவிட வினைச்சொற்கள் ஒட்டு நிலை (*agglutinative*) ஆக அமைந்தவை. காலம், இடம் முதலியவற்றை உணர்த்தும் உறுப்புக்கள் அடிச்சொல்லோடு ஒழுங்கான முறையில் புணர்க்கப் பெற்றுள்ளன. அவ்வாறு அவை புணரும்போது, ஏற்படும் திரிபோ மிகச் சிறிதே. பெரும்பாலும் திரிபின்றியே அமைதல் உண்டு.

(4) முன்னிலை ஒருமை ஏவல் வினையோடு காலம் இடம் உணர்த்தும் உறுப்புக்கள் சேர்தல் இல்லை. அடிச்சொல்லே பெரும்பாலும் ஏவலொருமையாக வழங்குகின்றது (நட, வா....). ஆதலின், இலக்கண நூலார் ஏவலொருமை வடிவே வினைப்பகுதியின் வடிவெனக் கூறுவர்.

(5) பெயர்ச்சொற்கள் வேற்றுமை ஏற்கும் முறை (*declension*) ஒன்றாயிருத்தல் போலவே, வினைச்சொற்கள் திணைபால் முதலியன உணர்த்தும் முறையும் (*conjugation*) ஒன்றாகவே உள்ளது. சிற்சில வேறுபாடுகள் சில சொற்களில் காணப்படினும் முறை வேறுபட்டதன்று. ஐரோப்பிய மொழியிலிருப்பதுபோலப் பலவகை முறை இங்கு இல்லை.

(6) திராவிட வினைச்சொற்களின் அமைப்பின் எளிமை போற்றத்தக்கதாக உள்ளது. முற்று, எச்சம் என இருவகைப் பகுப்பும், இறப்பு நிகழ்வு எதிர்வு என மூவகைக் காலமும், ஏனைக்காலங்களை உணர்த்தத் துணைவினைகளைப் (*auxiliary verbs*) பயன்படுத்தும் முறையும், வியங்கோள் முதலியவற்றின் ஒழுங்கும் இம் மொழிகளுக்கே சிறப்பாக உரியவை. இவற்றிலெல்லாம் இம்மொழிகள் சித்திய மொழிகளைப் போன்ற அமைப்பினவாய் உள்ளன.

மலையாள மொழி தவிர ஏனைய மொழிகளில் வினைமுற்றுக்கள் காலத்தோடு திணைபாலிடமும் உணர்த்துகின்றன. திணைபாலிடம் உணர்த்தும் விகுதிகள் பாலறிகிளவிகள் எனப்படும். மலையாளத்தில் மட்டும்

அவை இல்லை; பழைய மலையாளச் செய்யுள்களில் காணப்படுகின்றன. வரவர அவை வீழ்ந்தன போலும்!

கோந்த் முதலான மொழிகளில் பாலறிகிளவிகள் சேர்வதில் ஒழுங்கின்மையும் சிக்கலும் காணப்பட, தமிழில் ஒரு வகை ஒழுங்கும் தெளிவும் காணப்படுதலால், இலக்கியப் பண்பாட்டால் வினைச்சொற்கள் திருந்திய அமைப்புப்பெற்றன என்றும், இவ்வமைப்பு மிக்க தொன்மை வாய்ந்தது என்றும் கருதலாம். மிகப் பழங் காலத்திலேயே தமிழ்மக்கள் வினைச் சொற்களின் வடிவத்தைத் தெளிவாக்கி அமைத்து எழுதி நிலை பெறுத்தி விட்டதால், திரிபுகள் பெருக இடமில்லாமற் போயிற்று. ஆனால் கோந்த் முதலான திருந்தா மொழிகளில் இத்தகைய வாய்ப்பு இன்மையால், சொற்கள் திரிந்து திரிந்து உருவிழந்து பல்வகையாயின; வடமொழி முதலான மொழிகளிற் போல் வினைத்திரிபு முறை (*conjugation*) பலவோ என ஐயுறக் கிடக்கின்றன. இன்று அவ்வாறு திரிந்த சொற்களின் பகுதி விகுதி முதலியன பிரித்துணரவும் இயலவில்லை. தமிழ் முதலான திருந்திய மொழிகளில் ஒட்டு நிலை (*agglutination*) தெளிவைத் தருகின்றது.

(7) ஐரோப்பிய மொழிகளில் வழங்குமாறு போல், திராவிட மொழிகளிலும் பெயர்ச்சொல்லோடு வினைச் சொல்லைச் சேர்த்து ஒரு சொல் போல வழங்குதல் உண்டு (பண்படு-பண்பட்டது, கண்ணுறு-கண்ணுற்றான்). ஆனால் இடைச்சொல்லோடு வினைச்சொல்லைச் சேர்த்து ஒரு சொல் போல வழங்குதல் இல்லை. (*overtake, overrule*) என்பன ஆங்கிலத்தில் இருத்

தல் காண்க. மேற்கொள், கீழ்ப்படி எனத் தமிழில் வழங்குவனவற்றுள்ளும், மேல் கீழ் என்பன பெயராகக் கொள்ளப்படும்).

(8) முற்சேர்க்கையால் (*prepositions*) வினைச் சொற்களின் பொருளைச்சிறப்பித்தல் திராவிட மொழிகளில் இல்லை. அம்முறை ஐரோப்பிய மொழிகளில் உள்ளது. ஆனால் துணைவினைகளாலும் (*auxiliary verbs*) எச்சமாக அடுக்கும் வினைகளாலும் (*participles and infinitives*) பொருளைச் சிறப்பித்தல் திராவிட வினைகளின் இயல்பு.

**திணைபால் காலம் உணர்த்தும் முறை:**

(1) பால்காட்டும் விகுதிகள் வினைமுற்றுக்களின் பின் சேர்க்கப்படுவன. மலையாள வினைமுற்றுக்களில் இவ்விகுதிகள் இல்லை; ஆனால் காலங்காட்டும் இடைநிலைகள்மட்டும் சேர்க்கப்படுகின்றன. பழைய மலையாளச்செய்யுளில் பால்காட்டும் விகுதிகளும் உள்ளன. அடித்தேன், அடித்தாய், அடித்தான் என்ற வினைமுற்றுக்கள் இன்று மலையாளத்தில் இல்லை.

என்ற வழக்கே அவற்றிற்கு நேராக இன்று காணப்படுவது. அடிச்சு என்பதில் பால்காட்டும் விகுதிகள் இல்லை. இறந்தகால இடைநிலை மட்டும் உள்ளது. தமிழில் அடித்து என்னும் வினையெச்சத்திற்கு நேரான சொல்லாகும் அது.

(2) ஐரோப்பிய மொழிகளில் பால் காட்டும் விகுதிகள் நேரே வினைப்பகுதியோடு சேர்கின்றன. ஆனால் திராவிட மொழிகளில் அவை கால இடை நிலைக்குப் பின் சேர்கின்றன. ஐரோப்பிய மொழிகளில் விகுதியே பாலையும் காலத்தையும் ஒருங்கே உணர்த்தும். எடுத்துக் காட்டாக வடமொழியிலக்கணமும், அதை ஒட்டித் தமிழிற்கு இலக்கணம் எழுதிய வீரசோழியமும் காணலாம்.

செய்தான் என்பதைச் செய்+த்+ஆன் எனப் பிரித்தல் முறை. வீரசோழியம் செய்+தான் எனப் பிரிக்கும்.[4]

(3) தமிழிலும் கன்னடத்திலும் சில பழைய வினைமுற்றுக்களின் உருவங்கள் காணப்படுகின்றன. அவற்றில் பால்காட்டும் விகுதிகள் இல்லை. செய்து, செய்கு, செய்தும், செய்கும் என்பன தன்மையில் வழங்கினும் அதற்குரிய விகுதி இல்லை.[5] கன்னடத்தில் கும் விகுதி தன்மையிலே அன்றி ஏனையிடங்களிலும் பால்களிலும் வழங்கும் (அவர் மாடுகும்—அவர் செய்வார்). திராவிட மொழிகளின் வினைமுற்றுக்களில் மிகப் பழங் காலத்தில் பால்காட்டும் விகுதிகள் இல்லை என்று எண்ண இஃது இடந்தருகின்றது.

(4) திராவிட வினைமுற்றுக்களுள் படர்க்கை வினைமுற்றுக்களே திணைபால் உணர்த்துவன. தன்மை

முன்னிலை முற்றுக்கள் ஒருமை பன்மை மட்டுமே உணர்த்தும்.[6] படர்க்கை வினைமுற்று எல்லாவற்றையும் ஒருங்கே தெளிவாக உணர்த்தும் சிறப்புடையது. ஆதலின், வருகின்றான் என்பதில் வருதல் தொழிலும், நிகழ்காலமும், படர்க்கையிடமும், உயர்திணையும், ஆண்பாலும் (ஒருமையும்) தெளிவாகப் பெறப் பட்டன,

**காலங்காட்டும் முறை :**

வினைமுற்றுக்களே அல்லாமல் எச்சங்களும் காலம் உணர்த்துவன. வினையெச்சங்களே பலவகைப் பாகுபாடும் வேறுபாடும் உடையன. பெயரெச்சங் கள் சில; அவையும் வினையெச்சங்களின் அடியாகப் பிறந்தன. ஆதலின், வினைச்சொற்கள் காலங்காட் டும் முறையை உணர்தற்கு வினையெச்ச வகைகளை உணர்தல் இன்றியமையாதது.

செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி[7]

என்பது தொல்காப்பியனார் பாகுபாடு.

**நிகழ் காலம் :**

நிகழ்கால வினையெச்சச் சொல்லோடு பாலு ணர்த்தும் விகுதி சேர்ந்தால் நிகழ்கால வினைமுற்று

6. படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படும் திணைபால் அனைத்தும்; ஏனை
இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே. (நன்னூல், 265)

7. தொல். சொல். உஉஅ

ஆகும். தெலுங்கிலும் கன்னடத்திலுமே நிகழ்கால வினையெச்சங்கள் உண்டு. அம்மொழிகளில் இம்முறைப்படி வினைமுற்றுக்கள் அமையும். (தமிழில் உள்ள செய என்பது நிகழ்காலத்தை உணர்த்தும் இடைநிலையோடு கூடிய வினையெச்சம் அன்று; மலையாளத்திலும் அப்படியே. இம்மொழிகளில் நிகழ்கால வினையெச்சம் இருந்து இறந்திருக்கவேண்டும் என்பது அறிஞர் கால்டுவெல் கருத்து.[8] (செய்யா நின்று முதலியவற்றைத் தமிழில் நிகழ்கால வினையெச்சம் எனக் கொள்வது பொருந்தாது; ஏனெனில், அவை இருசொல் தொடர்ந்த வினைகளே; தனி வினையெச்சம் ஆகா; அன்றியும் அவை அருகிய வழக்கின.)

தமிழிலும் மலையாளத்திலும் நிகழ்கால வினையெச்சம் இல்லை எனினும், நிகழ்கால இடைநிலை உண்டு. அவற்றால் நிகழ்கால வினைமுற்றுக்கள் அமைகின்றன. காலம் உணர்த்தும் இடைநிலைகளைக் 'காலக்கிளவி' என்றார் தொல்காப்பியனார்.[9]

**நிகழ்கால இடைநிலை :**

**கன்னடம் :** உத்

மாடுத்த (செய்தல்)

உது (**utu**)—உகரம் ஒலிநயம் குறிப்பது. (இது உது என்னும் சுட்டுப் போலும்; நிகழ்காலம் குறித்த இடை நிலையாக அமைந்தது).

---

8. Caldwell, A Comparative Grammar, p. 489
9. தொல். சொல். ௨௦௭

கன்னட இலக்கியத்தில் பழங்கன்னடத்தில் உது' இல்லை. 'தப்' என்பது உள்ளது.

பாளுத்தேனு (baluttenu) (வாழ்கிறேன்) - புதுக்கன்னடம்
பாள்தபென் - baldapen - பழங் கன்னடம்

தப = த் + அப (ஆப - ஆக)
த் — இறந்தகாலம்
ஆப, ப — எதிர்காலம்

இரண்டு காலமும் கூடி நிகழ்காலம் அமைதலும் இயல்பே.

தெலுங்கு :

சு (chu - ஒலித்தல் : tsu)
து - பேச்சுத் தெலுங்கில் உண்டு.
சுன்னு, துன்னு - < சு + உன்னு, து + உன்னு
உன்னு < உண்டு - துணைவினை

தமிழ் :

கின்று (கு + இன்று)
கின்று < கிறு
ஆநின்று : ஆ < ஆகு - நின்று < நில் + த் + உ

கின்று, கிறு இவற்றின் ககரம் இரட்டிக்கும் இடத்தில் வல்லொலி ; ஏனையிடத்து மெல்லொலி.

மலையாளம் :

உன்னு, க்குன்னு - இவை ' இன்று ' என்பதன் திரிபே.
இன்னு - பழைய மலையாளத்தில்; அதுவும் அத்திரிபே.
(மூன்று > மூன்னு, ஒன்று > ஒன்னு போல)
கின்று > இன்னு: ககர ஒலி கெடுதல்
(போகிறேன் > போறேன் போல)
கு + இன்று > கின்று > கின்று > இன்னு > உன்னு

கு - எதிர்காலம்; இன்று - நிகழ்வு குறிக்கும்; கு எதிர்காலத்தில் வழங்குதலை இலக்கியம் தெரிவிக்கின்றது செய்கு.

கின்று என்னும் நிகழ்கால இடைநிலை பழந்தமிழில் (எட்டுத் தொகை, பத்துப் பாட்டில்) இல்லை. பேச்சுத் தமிழிலும் தெளிவாக முழுமையாக ஒலிக்கப் படுவதில்லை. வேகுகிறது என்பதனை வேகுது என்பது பேச்சுத் தமிழ்.

**இறந்த காலம்:**

செய்து என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சத்தோடு பாலுணர்த்தும் விகுதிகள் சேர்வதால் இறந்தகால வினைமுற்றுக்கள் அமைகின்றன.

செய்து என்னும் வாய்பாட்டு எச்சமோ பின் வருமாறு அமையும்:—

வினைப் பகுதியோடு த் (ட் அல்லது ற்) அல்லது இன் என்னும் இடைநிலை சேர்ந்து அமைதல்.

தமிழிலக்கண நூலார் இவற்றைப் பகுதி இரட்டித்தன என்பர்.[10] கால்டுவெலும் அவரை ஒட்டியே கூறுவர்.[11] ஆனால் கன்னட இலக்கண

10. தொட்டான், விட்டான், உற்றான், பெற்றான், மிக்கான், புக்கான் என்பவற்றுள், இடைநிலையின்றி முதனிலை விகாரமாய் இறந்தகாலம் காட்டின. (சங்கரநமச்சிவாயர், நன்னூல், 337)

11. Caldwell, A Comparative Grammar, p. 497

நூலாரும் மலையாள இலக்கண நூலாரும் அங்ஙனம் கூறுவதில்லை. இவையும் இடை நிலையோடு புணர்ந்தன என்பர். அவர் கொள்கைப்படி

புக் + த் (+ உ) > புக்கு
விட் + த் (+ உ) > விட்டு
அற் + த் (+ உ) > அற்று

என்றாகும். இக்கொள்கையே பொருந்துவதாகும.

ஒரே வினைப்பகுதி இருவகையாகவும் அமைதல் உண்டு.

விடு - விடுத்தேன், விட்டேன்.
புகு - புகுந்தேன், புக்கேன்
நகு - நகைத்தான், நக்கனன்
கொடு - கொடுத்தான், கொட்டனு (கன்னடம்)

**இறந்தகால இடைநிலை :**

**கன்னடம் :**

**த்**
இளிது (இழிந்து, இறங்கி)

(**d, t, tt** என மென்மையும் வன்மையும் வன்மையிரட்டித்தலுமாய் ஒலித்தல் திராவிட மொழியியல்பே).

**இ**
மாடி (மாடு பகுதி ; மாடி = செய்து)

**தெலுங்கு :**

**இ**

ஏனை மொழிகளில் தகர இடைநிலை பெறும் பகுதிகளும் தெலுங்கில் இகரமே பெறும்.

கொள் + த் + உ > கொண்டு — தமிழ்
கொள் + இ > கொனி — தெலுங்கு
காண் + த் + உ > கண்டு — தமிழ்
காண் + இ > கனி — தெலுங்கு

ஆனால் உயர்வழக்கில் உள்ள சில சொற்களில் தகர மெய்யும் இகரத்துடன் சேர்ந்து ஒலிக்கின்றது.

ஆடிதினி
சேஸிதினி

செய்தால் என்னும் தமிழ்ச் சொல்லுக்கு நேரான தெலுங்குச் சொல் (சேஸ்தே) தகர இடைநிலையே பெற்றுள்ளது.

மலையாளம் :

மலையாளத்து வினை முற்றுக்களில் உள்ள இடைநிலை தமிழில் உள்ளனவே. சில மாறுதல்கள் காணப்படினும் அவை ஒலியமைப்பிற்கேற்பத் திரிந்தவையே.

நடந்து - தமிழ் நடந்நு - மலையாளம்

தமிழ் :

த் அல்லது இ

ட், ற் என்பவை இலக்கண நூல்களில் வேறு கூறப்படினும் அவையிரண்டும் தகரத்தின் திரிபு என்பதில் சிறிதும் ஐயமின்று.[12] இன் இடைநிலை என்பர் இலக்கணநூலார். ஏனைமொழிகளில் இகரமே

12. தடறஒற் றின்னே ஐம்பால் மூவிடத்து
இறந்த காலம் தருந்தொழில் இடைநிலை. (நன்னூல், 17.)
வீரசோழியத்தில் டற கூறப்படவில்லை.
தாதுவின் பின்பு தனய இறப்பின்(தாதுப்படலம், 24.)

இடைநிலையாகக் கூறப்படுகின்றது. அன்றியும், தமிழிலும் ஆடி, பாடி, கூறி, பேசி முதலான வினையெச்சங்களில் 'இன்' இல்லை. இகரமே இடைநிலையாக உள்ளது. ஆதலின் னகரமெய் ஒலிநயம் பற்றிய சாரியை என்னும் கால்டுவெல் கொள்கை பொருந்துவதே.[13]

## துளு

துளு முதலான திராவிட மொழிகளை ஆராய்ந்தாலும் த் அல்லது இ என்னும் இடை நிலையே இறந்த காலம் உணர்த்த வருதல் காணப்படுகின்றது.

## இகரம்

இதன் தோற்றம் அறிதற்கரியது. கால்டுவெல் கருதுவதாவது: தகர இடைநிலை வினைப்பகுதியோடு சேரும்போது இடையே இகரவுயிர் வந்து சேர்ந்திருக்கும். நாளடைவில் ஒலித்தற்கு எளிதாகிய இகரவுயிர் நிற்க, அரிய ஒலியாகிய தகரமெய் மறைந்திருக்கும். அவ்வாறு தகரமெய் கெட்ட சொற்களில் இகர வுயிரே இடைநிலை எனக் கொள்ளப்பட்டிருக்கலாம் என்பர்.[14] அவர் அதற்கு எடுத்துக்காட்டாக, தெலுங்கில் 'வு' என்பது முன்னிலை ஒருமை விகுதியாக வழங்குவதைக் குறிப்பர். 'வு' என்பது 'நீ என்னும் முன்னிலைப் பெயரைச் சார்ந்து வந்ததாகும் (நீவு). நாளடைவில் முன்னிலை ஒருமை விகுதியில் பெயர் கெட அதனைச் சார்ந்த ஒலிமட்டுமே நின்று விகுதி

---

13. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 503

14. ibid. 508

யாகக் கொள்ளப்பட்டது. அதுபோல இகரம் தோன்றி வளர்ந்திருக்கலாம் என்பர்.

ஆயினும் மற்றோர் எளிய வழி உளது. அஃதாவது பிறவினைப் பொருளில் வழங்கும் இகரம் போலவே, இதுவும் கொடுத்தற் பொருளில் (ஈ=கொடு) வழங்கியிருக்கலாம்.[15] பிறவினையில் ஓரிடத்திருந்து பிறவிடத்திற்கு வினை மாறுகின்றது. இங்கே இகரம் குறிக்கும் மாறுதல் இடம் பற்றியது அன்று; அஃது இங்குக் காலம் பற்றியது. அஃதாவது கொடுத்தாய்விட்ட—கழிந்த—இறந்த காலத்தை உணர்த்துவது எனலாம்.

**தகரம் :**

கால்டுவெல் கருத்து:—அது என்னும் சுட்டுச் சேர்ந்து இக்காலத்தை உணர்த்தியிருக்கலாம். உது (இது) என்னும் அண்மைப் பொருள் தரும் சுட்டுச் சொல் கன்னடத்தில் நிகழ்காலம் குறித்தலும் ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. 'அது' என்னும் சேய்மைச் சுட்டு இறந்த காலம் உணர்த்தல் பொருத்தமேயன்றோ? உது நிகழ்காலமும் அது இறந்தகாலமும் குறிக்க, நாளடைவில் அது என்பதன் அகரம் கெட்டிருக்கலாம்.[16]

கால்டுவெல் இவ்வாறு கருதிய போதினும் வேறு நல்ல காரணமும் காணக்கிடக்கின்றது. தா என்பதும் ஈதல் பொருள் உணர்த்துவதே. ஈதலையுணர்த்தும்

15. K. Ramakrishnayya, Studies in Dravidian Phiology, p. 66

16. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 511

இகரவுயிர் இறந்தகாலம் உணர்த்தினாற்போல, தா என்பதன் மெய்யும் அக்காலம் உணர்த்தியது எனக் கொள்ளலாம்.

எதிர்கால வினையெச்சத்திலிருந்து வினைமுற்று அமைவதில்லை. வினைப் பகுதியோடு எதிர்கால இடைநிலை சேர்ந்து வினைமுற்றுக்கள் அமைகின்றன. பொதுவாகத் திராவிட மொழிகளில் எதிர்கால வினையெச்சம் என்பது இல்லையென்றே கூறிவிடலாம். இலக்கியத் தமிழிலும் மலையாளத்திலுமே உண்டு.

திராவிட மொழிகளில் எதிர்காலம் ஒன்றுதான் தெளிவற்றதாகக் காணப்படுகின்றது. நிகழ்காலத்தை எதிர்காலமாக வழங்குதல் பேச்சு வழக்கில் காணப்படுகின்றது (நான் மாலையில் வருவேன் என்னுமல் நான் மாலையில் வருகிறேன் எனல்). முக்காலத்திற்கும் பொதுவாக நிகழும் செயல்களையும் இருவகையாகவும் கூறுவர். ஆதலால், இடம் நோக்கியே எதிர்காலம் துணியப்படுவதாக உள்ளது.

செய்கு, செய்கும் என்பன எதிர்காலத்தில் வழங்கியதை ஆராய்ந்து, கு என்பது தொழிற் பெயர் விகுதியாக வருதலை உணர்ந்து, செய்கு முதலியவை தொழிற்பெயர் என்பர் கால்டுவெல்.[17] தொழிற் பெயராக இருந்தவை காலமுணர்த்தாத சொல்லாக இருந்து பின்னர் முக்காலத்திற்கும் பொதுவினையாக

மாறி, நாளடைவில் எதிர்கால வினையாக அமைந் திருக்கும் என்பது அவர் கொள்கை.

கு என்பது போலவே, வு, பு என்பனவும் தொழிற் பெயர் விகுதிகள்; ஆதலின் அவையும் அவ்வாறே எதிர்காலம் உணர்த்தத் தொடங்கின என்பர் (பாடுவேன், படிப்பேன்).

எதிர்கால இடைநிலையாக உள்ள பகரம் சில இடங்களில் மகரமாகத் திரியும் என்பர் (என்பர்— என்மர்).

கடுகு, அறிவு, சார்பு என்பவற்றில் முறையே கு, வு, பு என்பன தொழிற் பெயர் விகுதிகள் ஆகும்.

இவைகளே அல்லாமல், எதிர்காலத்தில் உம் என்பதும் இடைநிலையாக வருகின்றது. அவ்வாறு வரும் வினைமுற்றுக்களில் பாலுணர்த்தும் ஈறு சேர்வ தில்லை.

அது செய்யும்
அவை செய்யும்

இவை மலையாளத்தில் ஞான் எழுதும், நீ எழுதும் முதலான தொடர்களைப்போல் அமைந்துள்ளன. தொல்காப்பியர் காலத்தில் செய்யும் என்பது, அவன் செய்யும், அவள் செய்யும் என உயர்திணை ஒருமை யிலும் வழங்கி வந்திருக்கின்றது.

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்துச்
செய்யும் என்னும் கிளவியொடு கொள்ளா.[18]

18. தொல். சொல். உஉஎ

இந்தச் செய்யும் என்னும் வினைமுற்று பாலுணர்த்தும் ஈறு பெருது; எனினும் வினையெச்சமாக வழங்குவதில்லை. பெயரெச்சமாகப் பெரு வழக்குப் பெற்றுள்ளது.

செய்யும் வேலை, செய்யும் மக்கள்

இந்த 'உம்' விகுதியைப் பற்றிக் கால்டுவெல் கருத்து வருமாறு[19] :—உம் என்னும் எண்ணிடைச் சொல்லினின்றும் வேறுபடாதது இவ்விகுதி. தெலுங்கில் 'னு' என்பது வழங்குகின்றது. தெலுங்கில் படர்க்கையில் இருதிணையிலும் ஒருமை பன்மைக்கு உரியதாக வழங்குகின்றது. அந்த 'னு' என்பதில் னகரம் சாரியை. உகரம்தான் விகுதி. அவ்வுகரமே தமிழில் 'உம்' என்று வருவது. எண்ணிடைச் சொல் பல பெயர்களை ஒன்று சேர்ப்பதுபோல், இங்கு 'உம்' என்பது இறந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் தொடரும் எதிர்காலத்தைக் குறித்தது என்பர். டாக்டர் குண்டர்ட் கூறுமாறு[20], உ என்பது (உம்பர், உம்மை என்ற சொற்களில் உள்ளவாறு) உயர்வு, மேல், இனிமேல் என்னும் பொருளைக் குறித்தலால், எதிர்காலம் உணர்த்தலாயிற்று என்பது பொருந்தும்.

தொல்காப்பியனுர் இதனை "நிகழுங்காலத்துச் செய்யுமென் கிளவி" என நிகழ்காலத்திற்கு உரித்தாக்கிக் கூறினுர்;[21] எனினும் அந் நிகழ்வுடன்

தொடர்ந்த எதிர் காலத்தையே இது குறிக்கின்றது.[22]

**எதிர்கால வினையெச்சம்:**

இலக்கியத் தமிழிலும் மலையாளத்திலும் வான் பான் ஈற்று வினையெச்சங்கள் உள்ளன. தமிழில் பாக்கு என்பதோர் ஈறும் உள்ளது. இவற்றின் முதல் மெய் பகரம் அல்லது வகரம். இம்மெய்களே எதிர் காலம் உணர்த்துவன என்பதை மேலே கண்டோம். இவற்றோடு கூடிய ஆன் ஈறு, உயர்திணை ஆண்பால் விகுதியாகிய ஆன் (வந்தான், சென்றான்) என்பதினின்று வேறுபட்டதன்று என்பர் சிலர். ஆனால் அஃது உண்மையன்று. இருபது, இருபான் என்பவற்றில் அது என்னும் ஈறு ஆன் என்று திரிந்தாற்போன்று, தொழிற் பெயர் விகுதி (அ)து என்பது ஆன் என்றாயிற்று என்பர் கால்டுவெல்.[23]

கன்னடத்தில் எதிர்கால இடைநிலையாகப் பெரிதும் வழங்குவது வகரமெய். அது பகரமாகத் திரிதல் அரிது. தமிழில் உம் ஈறு வருமிடங்களிலும் கன்னடத்தில் வகர இடைநிலை வருகிறது.

இருக்கும்—தமிழ். இருவது—கன்னடம்.

**கால வேறுபாடுகள்:**

இறப்பு, நிகழ்வு, எதிர்வு என முக்காலமே பொதுவாக உள்ளவை. அவற்றிலிருந்து பல வேறுபாடு

களுடன் தோன்றிய காலங்களை உணர்த்துவதிலும் திராவிட மொழிகள் முன்னேறியுள்ளன.[24] அவ்வகைப் பட்ட காலங்களை உணர்த்தும்போது திராவிட மொழி கள் இடை நிலைகளைப் பெருக்கவில்லை; ஆனால் துணை வினைகளைச் (*Auxiliary verbs*) சேர்த்துப் பயன் படுத்திக்கொண்டன. அத்தகைத் துணைவினைகளாவன கொள், இரு, இடு, நில் முதலியன.

| | |
|---|---|
| செய்தான் | — இறப்பு |
| செய்திட்டான் | — இறப்பில் இறப்பு |
| செய்திருக்கின்றான் | — இறப்பில் நிகழ்வு |
| செய்திருப்பான் | — இறப்பில் எதிர்வு |
| செய்கிறான் | — நிகழ்வு |
| செய்துகொண்டிருந்தான்<br>செய்யாநின்றான் | நிகழ்வில் இறப்பு |
| செய்துகொண்டிருக்கிறான்<br>செய்யாநிற்கிறான் | நிகழ்வில் நிகழ்வு |
| செய்துகொண்டிருப்பான்<br>செய்யாநிற்பான் | நிகழ்வில் எதிர்வு |
| செய்வான் | — எதிர்வு |

**பெயரெச்சம்** (*Relative participle or adjectival participle*):

இணைப்புப் பெயராக (*Relative pronouns*) ஐரோப்பிய மொழிகளில் வழங்கிவருவன (*who*

24. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் இறந்தகாலத்தையும் நிகழ்காலத்தையும் மும்மூன்றாகப் பகுப்பர்:—

இறந்தகாலம்— i இறப்பிலிறப்பு—செய்திருந்தான்
ii இறப்பில் நிகழ்வு—செய்திருக்கிறான்
iii இறப்பிலெதிர்வு—செய்திருப்பான்

நிகழ்காலம் — i நிகழ்விலிறப்பு—செய்யாநின்றான்
ii நிகழ்வில் நிகழ்வு—செய்யாநிற்கிறான்
iii நிகழ்விலெதிர்வு—செய்யாநிற்பான்

(தமிழ் மொழியின் வரலாறு, ப. 62)

**which, what, where)** போன்றவை திராவிட மொழிகளில் இல்லை.

**I saw the man who came**
வந்த மனிதனைக் கண்டேன்

இந்த வாக்கியங்களில் ஐரோப்பிய மொழியின் இயல்பும் திராவிட மொழியின் இயல்பும் தெளிவாகும். இணைப்புப் பெயர்க்கு ஈடாகத் திராவிட மொழிகளில் பெயரெச்சமே வழங்குகின்றது. பெயரெச்சம் என்ற பெயரே, அந்த வினைச்சொல் பெயரைக் கொண்டு முடிவது என்பதைத் தெரிவிக்கின்றது. (பெயர் + எச்சம், பெயரெஞ்சு கிளவி என்பர் தொல்காப்பியனார்).[25]

இறந்தகால வினையெச்சத்தோடு அகர விகுதி சேர்ந்து இறந்தகாலப் பெயரெச்சம் அமைகின்றது. செய்து + அ > செய்த.

நிகழ்காலத்தில், வினைப்பகுதியோடு நிகழ்கால இடைநிலையும் அகர விகுதியும் சேர்ந்து பெயரெச்சம் அமைகின்றது. (செய் + கின்று + அ > செய்கின்ற).

எதிர்காலத்தில் பகர வகர இடைநிலைகள் வராமல், வினைப்பகுதியோடு உம் என்பது சேர்ந்து பெயரெச்சம் அமைகின்றது (செய்யும் வேலை). இந்த உம் என்பதே செய்யும் என்னும் வினைமுற்றிலும் ஈறாக வருவது. மலையாளமும் தமிழைப்போலவே

உள்ளது. ஆனால் எதிர்காலத்திலும் எதிர்மறை வாய்பாட்டால் கூறும்போது, அகர விகுதியே வருகின்றது (செய்யாத).

எனவே, பெயரெச்ச விகுதி என்று கூறத்தகும் சிறப்புடையது அகரமே எனலாம்.

பெயரடைகளாக வரும் நல்ல, தய, பழைய, புதிய, பெரிய முதலான சொற்களிலும் அகரவிகுதியே உள்ளது. இச்சொற்களை இலக்கண நூலார் குறிப்புப் பெயரெச்சம் என்பர்.

நன்மை, தீமை, பழமை, பெருமை என்னும் பண்புப் பெயர்கள் அகரவிகுதி பெற்று நல்ல, தீய, பழைய, பெரிய என்னும் குறிப்புப் பெயரெச்சங்களாயின. பண்புப் பெயர்களே அல்லாமல் வினைப் பெயர்களும் அகரவிகுதி பெற்று இவ்வாறுதல் உண்டு. இலக்கியங்களில் இவ்வழக்கு மிகுதி; பேச்சுத் தமிழில் இல்லை.

பாலைய சுரன் கால குருகு

குறிப்புப் பெயரெச்சங்களின் வழக்கு மிகுதியால், வினைச்சொற்களாகிய (தெரிநிலைப்) பெயரெச்சங்களுள் சில நாளடைவில் பெயரடையாகப் பண்பு மாத்திரம் உணர்த்தும் நிலையுற்றன. உயர்ந்த வேலை, தாழ்ந்த நிலை என்னும் தொடர்களில் உயர்ந்த, தாழ்ந்த என்னும் பெயரெச்சங்களில் கால இடைநிலை இருந்தும் அவை காலம் உணர்த்தாமை காண்க.

செய்யும் என்னும் பெயரெச்சத்தின் செல்வாக்கால், ஒற்றுமைப்போலியாக (*analogy*) உம் ஈறு பெற்று, 'பெரும்' 'வெறும்' என்னும் சொற்கள் தோன்றி இன்று பேச்சுத் தமிழில் பெயரடைகளாக வழங்குகின்றன.

அவ்வாறே, அகர விகுதியை அகரச் சுட்டோடு தொடர்பு படுத்தல் பொருந்தும். (கால்டுவெல், சுட்டோடன்றி, ஆறனுருபோடும் தொடர்புபடுத்திடெர்ப்படுவர்).[26]

## கச. வினை வகை

**தன்வினை, பிறவினை** (*causals*)

இவை திராவிட மொழிகளில் சிறப்பாக வழங்கும் வகையாகும். வினைச்சொல்லால் உணர்த்தப் படும் வினையைத் தான் செய்தலும் பிறரைச் செய்வித்தலுமே இவற்றின் வேறுபாடுகள்.

தன்வினைகள் எல்லாம் பிறவினைகள் ஆகும். திணைபாலிடங்களையும் காலத்தையும் உணர்த்தும் உறுப்புக்களைச் சேர்ப்பதில் இவை வேறுபடுவதில்லை.

தன்வினை பிறவினையாகும் முறை :—

(i) தமிழில் இ, தெலுங்கில் இசு அல்லது இஞ்சு (*ichu or inchu*)[1], கன்னடத்தில் இசு (*isu*)[2] என்னும் விகுதிகள் வினைப்பகுதியோடு சேர்வதால் பிறவினை ஆகும். தமிழில் வி, பி என்பவற்றைப் பவணந்தியார் பிறவினை விகுதிகள் என்பர்.[3] ஆனால் வகர பகர மெய்யெழுத்துக்கள் ஒலித்துணையாக வந்து தோன்றினவே யன்றிப் பிறவினைப் பொருள அல்ல; இகர உயிர் ஒன்றே பிறவினைப் பொருளைத் தருவதாகும்.

---

1. C. P. Brown, A Grammar of the Telugu Language, p. 155.
2. Kittel, A Grammar of the Kannada Language.
3. செய்யென் வினைவழி விப்பி தனிவரின், செய்வியென் ஏவல் இணையின் ஈரேவல். (நன்னூல், 138)

சேயிஞ்ச (cheyincha) - தெலுங்கு - செய்விக்க
பிலிபிஞ்ச (pilipincha) - ,, - அழைப்பிக்க
மறச (maracha) - ,, - மறக்க
மாடிசு (madisu) - கன்னடம் - செய்வி
ஓடிசு (odisu) - ,, - ஓட்டு

போ - போக்கு - தமிழ்
போ - போனீ - தெலுங்கு

நெட்டெழுத்தாகிய 'ஈ' என்பதும் பிறவினைப் பொருளில் வழங்குகின்றது.

கன்னடம் :— மாடு - செய், மாடுகொடு - செய்வி
தமிழ் :— கல், கற்றுக்கொடு - கற்பி

கொடு என்னும் சொல் இப் பொருளில் வழங்குதல் காண்க.

(ii) செய், பண்ணு என்னும் சொற்கள் வினையுடன் சேர்ந்து பிறவினைப் பொருள் தருகின்ற வழக்கு இக் காலத்தில் பெருகி வருகின்றது.

உண்பி - உண்ணச்செய்
உறங்கு - உறங்கப்பண்ணு

(iii) பகுதியின் ஈற்றில் உள்ள வல்லினம் இரட்டித்துப் பிறவினை அமைகின்றது.

பெருகு - பெருக்கு வாடு - வாட்டு
ஆகு - ஆக்கு ஆறு - ஆற்று

(iv) பகுதியில் உள்ள மென்றொடர் வன்றொடராக மாறிப் பிறவினை அமையும்.

திருந்து - திருத்து
அடங்கு - அடக்கு

(v) கு சு டு து பு று என்னும் ஆறனுள் ஒன்று பகுதியுடன் சேர்வதால் பிறவினை அமையும்.

போ - போக்கு - கு
பாய் - பாய்ச்சு - சு
உருள் - உருட்டு - டு
நட - நடத்து - து
பயில் - பயிற்று - று
எழு - எழுப்பு - பு

(vi) பகுதியில் ஒரு மாறுதலும் இன்றி, பகுதியும் இடை நிலையும் புணருமிடத்து, வல்லினம் மிகுந்தால் பிறவினையாகும் சொற்கள் உள்ளன. வல்லினம் மிகா வழி அவை தன் வினையாகவே நிற்கும். மூக்கினமாகிய ந முதலியன வல்லினம் ஆதலும் உண்டு. அவை வல்லினமாயின் பிறவினை ; அல்லாதபோது தன்வினை.

சேர்கிறேன் - சேர்க்கிறேன்
அடைவேன் - அடைப்பேன்
சேர்வேன் - சேர்ப்பேன்
சேர்ந்தேன் - சேர்த்தேன்

**பிறவினை விகுதிகள் :**

மேற்கூறிய பலவகையினையும் ஆராய்ந்து நோக்கின், தகரம் இகரம் என்னும் இரண்டே பிறவினை யாக வருதல் காணப்படும். இசு, இஞ்சு, ஈ, வி, பி என்பவற்றிலெல்லாம் இகரமே காணப்படுகின்றது.[4] பிராஹுய் மொழியிலும் இகரமே பிறவினை விகுதி யாக உள்ளது. (இப் ίf என்பது அம் மொழியின் விகுதியாகக் கொள்ளப்படுவது). நச்சினார்க்கினியர்

வி, பி எனக் கொள்ளாமல் இகர உயிரே கொள்கின்றார்.[5] வல்லினம் இரட்டித்தலிலும் மென்றொடர் வன்றொடராக மாறுவதிலும் தகரமே பிறவினை விகுதி என்பதை ஆராய்ந்து காணலாம்.

பெருக் (உ) + த் (உ) > பெருக்கு
வாட் (உ) + த் (உ) > வாட்டு
திருந்த் (உ) + த் (உ) > திருத்து
அடங்க் (உ) + த் (உ) > அடக்கு

வருமொழி முதல் மெய்யாகிய தகரத்தின் செல்வாக்கால் இவ்வாறு ஒலித்திரிபுகள் ஆயின.

கு சு டு து பு று என்று ஆறாகக் கொண்ட விகுதிகளும் ஒலிநூல் துணைகொண்டு நோக்குவார்க்கு து என்னும் ஒரு விகுதியாகவே விளங்கும். இங்கும் தகரமாகிய வருமொழி முதல்மெய்யின் செல்வாக்கே காரணமாகத் திரிந்த திரிபுகள் காணப்படும்,

போகு = போக் + (உ)
போக் (உ) + த் (உ) > போக்கு
பாய் (உ) + த் (உ) > பாய்த்து
  > பாய்ச்சு

(பல்வினம் இவ்வாறு திரிதல் இயல்பு, உயர்த்தி உயர்ச்சி என்றாதல் போல).

உருள் + த் (உ) > உருட்டு
நட + த் (உ) > நடத்து
பயில் + த் (உ) > பயிற்று
எழும்ப் (உ) + த் > எழுப்பு

ஆதலின் பிறவினைப் பொருள் தருவன இகரமும் தகரமுமாகிய இரண்டுமே என்பது தெளியப்படும். இவ் விரண்டும் இறந்தகாலப் பொருள் தருதல் போலவே பிறவினைப் பொருளும் தரலாயின. இறந்த காலம் உணர்த்தும்போது, காலம் கழிந்துவிட்டது, ஈதல் - தருதல் காலத்தளவில் நிகழ்ந்தது என உணர்த்தின. இங்கு, ஒருவன் தான் செய்யும் தொழிலைப் பிறனுக்கு ஈந்தான் - தந்தான் என உணர்த்தி நின்றன;[6] ஒரு வினை மற்றொருவனுக்கு உரியதானதை ஈதல் - தருதல் உணர்த்துதல் இயல்பே. இவ்வாறு இகரமும் தகரமும் பிறவினை உறுப்புக்களாய் அமைந்தன. கற்றுக்கொடு என்னும் இக்காலப் பேச்சு மொழியில் கொடு என்பதும் ஈதற்பொருள் உணர்த்தும் இகரம் போல் பிறவினைப் பொருள் உணர்த்துகின்றது.

பிறவினை சித்திய மொழிகளில் உள்ளது என்பர் கால்டுவெல். ஐரோப்பிய மொழிகளில் பிறவினைப் பொருளை உணர்த்த வேண்டின், இரண்டும் பலவுமான சொற்கள் தொடர்ந்து நின்றே உணர்த்தும். திராவிட மொழிகளிலோ, சொல்லினுள் சிறு மாற்றத்தாலேயே பிறவினைப் பொருளை உணர்த்த முடிகின்றது. இஃது ஒரு சிறப்பியல்பாகும்.

**இரட்டைக் கிளவி வினை** (*Iterative or Frequentative Verbs*) :

திராவிட மொழிகளில் இவ்வகை வினைகள் பல உள்ளன. (மினு மினுத்தது, கல கலத்தது.) கால

இடைநிலைகளும் பாலுணர்த்தும் விகுதிகளும் சேர்வதில் யாதொரு வேறுபாடும் இல்லை. ஏனைய வினைகளிற் போலவே ஒழுங்கான முறை உண்டு.

இவற்றில் இரு முறை வரும் சொற்களைப் பிரித்தால் பொருள் கெடும். இரட்டிப்பாலேயே பொருள் சிறந்து நிற்கின்றது.

**வினைக்குறிப்பு** (*Appellative verbs or conjugated nouns*):

திராவிட மொழிகளில் எந்தப் பெயர்ச்சொல்லையும் வினைக்குறிப்பாக மாற்றலாம். இது பழைய இலக்கியங்களில் பயின்ற வழக்காக இருப்பினும், இக்காலத்துப் பேச்சு மொழிகளிலும் அருகிக் காணப்படுகின்றது. எல்லாத் திணைபாலிடங்களுக்கும் அவ்வவற்றின் விகுதிகளைப் புணர்த்தலால் இத்தகைய வினைக்குறிப்புகள் அமையும்.

அவன் நாடன், அது கரியது, நீ நல்லை, யான் அடியேன் - இவற்றில் காலமுணர்த்தும் இடைநிலைகள் இல்லை. ஆதலின் இவை காலத்தினைக் குறிப்பால் உணர்த்துமென்பர் இலக்கண நூலார்.[7] உண்மையாக நோக்கின், இவை காலம் உணர்த்துவதில்லை என்றும், நிகழ்காலத்திற்கு உரியவாகக் கொள்ளலமையும் என்றும் கூறுவர் கால்டுவெல்.[8]

---

7. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்று
அம்முக் காலமும் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை உடைய தோன்ற லாறே.
(தொல்.சொல்.௨௦௦)

8. Caldwell, A Comparative grammar of the Dravidian Languages, p. 478.



தெலுங்கு - கவி : பெயர்ச்சொல்

கவினி (நான் கவி)
கவினி (நீ கவிவி) } வினைக்குறிப்பு

தன்மை முன்னிலைகளில் தவிர, படர்க்கையில் பெயர்ச்சொல்லுக்கும் வினைக்குறிப்பிற்கும் பெரும் பான்மையும் வேறுபாடே இல்லை. 'பொன்னன்,' 'நல்லது' முதலான சொற்கள் இருவகையாகவும் வரும்.

பண்புப் பெயர்கள் வினைக்குறிப்பாக வரும் போது, அடிச்சொல்லுடன் மட்டுமே விகுதிகள் இயையும்.

பண்புப் பெயர் - கொடுமை, தீமை, வலிமை
பண்பு அடிச்சொல் - கொடு, தீ, வலி
வினைக்குறிப்பு - கொடியன், தீயன், வலியன்
கொடியது, கொடிது
தீது, தீயது
வலியது, வலிது

வினைக்குறிப்பாக இருந்து பின்னர்ப் பெயராக வருவனவற்றைக் குறிப்பு வினையாலணையும் பெயர் என்பர் இலக்கண நூலார். மொழியியலின்படி அவற்றிற்கும் பெயர்ச்சொல்லிற்கும் வேறுபாடு இல்லை.

பெரியது, பெரிது, வலியது, வலிது என அகரச் சாரியை பெறுதலும் உண்டு; பெருமையும் உண்டு.

**செயப்பாட்டு வினை** (*The passive voice*) :

திராவிட மொழிகளில் செயப்பாட்டு வினை இல்லை ; மிகப் பழங்காலத்திலும் இருந்ததில்லை ;[9] அன்றியும் ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு செயப்பாட்டு வினைக்குரிய பொருட் சிறப்பும் இல்லை. ஆயினும் செயப்பாட்டு வினைப் பொருளை உணர்த்தும் முறைகள் பல உள்ளன.

(i) 'நான் அதை உடைத்தேன்' என்னும் செய்வினையைச் செயப்பாட்டு வினைப்பொருளில் கூறும் போது 'அது என்னால் உடைந்தது' என்பர். அது என்னால் உடைக்கப்பட்டது என்று வழங்கும் ஐரோப்பிய மொழிமரபு இங்கு இல்லை. செய்வினைப் பொருளில் வரும் எழுவாயை மட்டும் மாற்றுவதால் செயப்பாட்டு வினைப்பொருள் பயக்கும்.

---

9. It (passive) has been used also in the modern written dialect...but it is rare in modern literature, and in colloquial language it is avoided, and if used, is generally not understood by the populace. (Kittel, A Grammar of the Kannada Language p. 325).

All modes of expressing, somehow, the force of the passive go to show that the Kannada language is destitute of a passive which as to form and idea, corresponds to the Samskrita and English one. (ibid. 330).

Tamil has no passive voice, but a compound verb may be formed, which in many respects supplies its place. This form, which is foreign to the idiom of the language, must be very sparingly used. It is made by adding படு, suffer, in all its inflexions to the infinitive mood of the verb. (G. U. Pope, A Handbook of the Ordinary Dialect of the Tamil Language, p. 74).

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே[10]

என்பர் தொல்காப்பியனார். இவ்வாறு வினைச்சொல் மாறாமல் நிற்றலால், செய்யப்பட்டது செய்தது என்ற வேறுபாடு தெளிவாகாமல் கிடப்பினும், ஓர் இடர்ப்பாடும் இன்றிப் பொருள் விளங்குகின்றது. இது மொழியின் ஆற்றலாகும்.

(ii) மேற்கூறிய பொருள் தெளிவுபடாமல் கிடக்கும்போதோ, சிறப்பிக்க வேண்டும்போதோ (ஆ, போ முதலான வினைகளாகிய) ஆயிற்று, போயிற்று முதலான சொற்களைச் செய்வினைகளோடு சேர்ப்பர்.

அது உடைந்து போயிற்று
அது உடைந்தாயிற்று

(iii) வினையாலணையும் பெயர்களில் செய்வினையே செயப்பாட்டு வினைப்பொருளில் வழங்கப்படும். வழக்கின் ஆற்றலால் பொருள் இடர்ப்பாடு இல்லை.

சொன்னது போதும் (சொல்லப்பட்டது போதும்)
நக்கீரர் என்பவர் (நக்கீரர் எனப்பட்டவர்)

(iv) படு என்னும் துணைவினையைச் சேர்த்துச் செயப்பாட்டு வினைப்பொருள் உணர்த்தப்படும்.

10. தொல். சொல். உசசு

உடைந்தது - உடைக்கப்பட்டது, உடைபட்டது
கொன்றது - கொல்லப்பட்டது

ஆயினும், கொல்லப்பட்டது முதலானவற்றைச் செயப்பாட்டு வினைகளாகக் கொள்ளல் தவறு. படுதல் என்பது இங்கு அனுபவித்தல் என்னும் பொருளது. (ஆங்கிலத்திலும் செயப்பாட்டு வினையின் எழுவாயை *the suffer* எனக் குறிப்பர்.)[11] எனவே, இங்குக் கொல்லப்பட்டது என்பதற்குக் கொலையை அனுபவித்தது என்பதே பொருளாகும். ஆதலின் இரு சொல்லாகக்கொண்டே முதலில் இப் பொருள் உணர்த்தப்பட்டது. முதல்சொல் எச்சமாகவோ தொழிற்பெயராகவோ நிற்க, பின்னர், படு என்னும் வினை காலமும் பாலும் உணர்த்திப் புணர்ந்து நிற்றல் காண்க. நாளடைவில் 'படு' என்பது அப் பொருளை இழந்தது; இரு சொல்லும் ஒரு தொடராய் ஒரு சொல்போல வழங்கலாயின.

(v) 'படு' என்பதைப்போலவே 'உண்' முதலான சொற்களையும் சேர்த்தல் உண்டு. ஆயினும் அது மிக அருகிய வழக்கே. எச்சத்துடன் 'உண்' முதலியவற்றைச் சேர்த்தல் இல்லை; தொழிற் பெயருடன் சேர்ப்பர்.

கொலையுண்டான், கொலையுண்டது

படு, உண் முதலானவற்றை உரை நடையிலும் சிறுபான்மை செய்யுளிலும் காணினும், நாட்டுப்புற மக்கள் பேச்சில் இன்னும் காண்பதரிதாக உள்ளது.

11. H. R. Stokoe, The Understanding of Syntax, p. 88.

ஆதலின், செயப்பாட்டு வினை திராவிடமொழிகளுக்கு இல்லை என்பதும் புதியதாய்ப் புகுந்த பின்னரும் செல்வாக்குப் பெறவில்லை என்பதும் தெளிவு.[12]

செயப்பாட்டு வினை வழங்கும் இடங்களை ஆராய்ந்து ஐந்து காரணங்களைக் குறிக்கின்றார் ஜெஸ்பர்ஸன்.[13]

1. செய்தவன் (கருத்தா) தெரியா நிலை.
2. செய்தவன் சொல்லாமலே தெரியும் நிலை.
3. செய்தவனைக் கூறாமல் விடுதல் நாகரிகமாகவோ நன்மையாகவோ விளங்கும் நிலை.
4. செயப்படுபொருளை எழுவாயாக்கிக் கூறுமாறு அதற்கு அமையும் சிறப்பு நிலை.
5. முன்னும் பின்னும் உள்ள வாக்கியங்களின் தொடர்பு நோக்கிச் செயப்படுபொருள் முன் நிற்கும் நிலை.

இந்த ஐந்து காரணங்களால் செயப்பாட்டு வினை மொழியில் இடம் பெறுகின்றது என்பது ஜெஸ்பர்ஸன் கொள்கை. இத்தகைய இடங்களிலும் தமிழில் செயப்படுபொருள் இடம் பெறாமல், 'நெய் விற்கிறது' முதலான வாக்கியங்களே வழங்குகின்றன,

12. Did the difference between 'I strike' and 'I am struck' lie only in the grammatical relations of the two persons involved, it would be unnecessary to pay further attention to it. (Vendryes, Language, p. 103.)

13. The System of Grammar, p. 21.

இதனால்தான் இதனை 'வழக்கியன் மரபு' என்று தொல்காப்பியனார்[14] எடுத்துரைக்கலானார்.

**எதிர்மறை வினை** (*The Negative Voice*):

எல்லா வினைச்சொற்களும் உடன்பாட்டு வினைகளே. ஆனால் எதிர்மறை யுணர்த்தும் இடைநிலைகளைப் பெறுவதால் அவை எதிர்மறை வினைகளாகின்றன.[15] இதுவே திராவிட மொழியியல்பு. ஆனால் எல்லா ஐரோப்பிய மொழிகளிலும் எதிர்மறை யுணர்த்தும் சொல் வினைச்சொல்லின் உறுப்பாகாமல் தனித்து நிற்கின்றது. திராவிட மொழிகளிலோ பகுதிக்கும் விகுதிக்கும் இடையே எதிர்மறை யிடைநிலை புணர்ந்து வினைச்சொல் அமைகின்றது.

எதிர்மறைவினை முக்காலத்திற்கும் பொது என்பா இலக்கண நூலார்.[16] கால இடை நிலை பெறாமல் எதிர்மறை யிடைநிலை பெற்ற வினைகளையே அவ்வாறு குறிப்பர்.

வார் + ஆ + ஆன் > வாரான்
செய் + ஆ + ஏன் > செய்யேன்

14. தொல். சொல். உ௪௬.

15. புத்தமித்திரனார் இதனைத் தடைப்பொருள் என்பர். (வீரசோழியம், தாதுப் படலம், 11)

16. ஆகாரம் எதிர்மறை வினையாய் மூன்று காலத்திற்கும் உரித்தாயினும் எதிர்காலத்துப் பயின்று வரும். (சேனாவரையர், தொல். சொல். உ௪௬)

மூன்று காலமும் அவை பற்றிப் புடைபெயரும் வினையும் இல்லனவற்றை எதிர்மறைவினை மூன்று காலமும் ஏற்கும் என்று கூறுதல் இலக்கணை (சங்கர நமச்சிவாயர், நன்னூல், 145).

கால இடைநிலை இல்லாக் காரணத்தால் முக்காலத்திற்கும் பொது எனக் குறிப்பினும், இவை எதிர்காலத்திற்கு உரியவாய் வழங்குகின்றன. ஏனைய இறந்தகால நிகழ்காலங்களுக்கு உரிய எதிர்மறை வினைகளில் கால இடைநிலைகளும் எதிர்மறை இடைநிலைகளும் ஒருங்கே உள்ளன.

செய் + த் + இல் + அன் > செய்திலன்
உண் + கின்று + இல் + அன் > உண்கின்றிலன்

எதிர்கால வினைச்சொற்களில் மட்டும் இவ்வாறு இருவகை இடைநிலையும் உடன் நிற்றல் இல்லை. எனவே, வாரான், செய்யேன் முதலியன எதிர்காலத்தைக் குறிக்க வழங்கலாயின. மலையாளத்தில் முக்காலத்திற்கும் உரிய எதிர்மறை வினைகள் உள்ளன.

இந்த எதிர்மறை வினைகளில் பகுதியும் விகுதியும் ஒரு சிறிதும் மாறாமல் உடன்பாட்டு வினைகளிற் போலவே இருத்தல் காணத்தக்கது. சில வினைச் சொற்களில், எதிர்மறையிடை நிலையாகிய ஆகாரமும் விகுதியின் உயிரும் ஒன்றி ஒருயிராய் நிற்றல் உண்டு. ஆண்டும் எதிர்மறை யிடைநிலை உண்டெனவே கொள்ளல் வேண்டும். இன்றேல் எதிர்மறைப் பொருள் தருமாறு இல்லை.

கொள் + ஆ + அன்/ஆன் > கொள்ளான்
கொள் + ஆ + இர்/ஈர் > கொள்ளீர்

கொள் + ஆ + $\frac{\text{எம்}}{\text{ஏம்}}$ > கொள்ளேம்

வாழ் + ஆ + து > வாழாது
வாழ் + ஆ + து > வாழா

இவற்றில் அஃறிணை வினைகளை ஆராயின், அவற்றில் எதிர்மறை இடைநிலை இருத்தல் தெளிவாகும். அன்றியும், தெலுங்கு எதிர்மறை வினைகளில் எதிர்மறை இடைநிலை அகரம் இருத்தல் ஐயமறக் கிடக்கின்றது. ஏனெனின், தெலுங்கில் விகுதிகள் மெய் முதலாவன (னு, ரு, மு என்பன). ஆதலின், அம் மெய்க்கு முன்னுள்ள அகரத்தை எதிர்மறை இடைநிலை என்றே துணியவேண்டும்.

சேயனு (செய்யேன்)
சேயவு (செய்யாய்)
சேயமு (செய்யோம்)
சேயரு (செய்யீர்)

கன்னடத்திலும் அகரம் எதிர்மறை இடைநிலையாகும்.

பாளது (வாழாது)

தமிழில் ஆகாரம் மறை உணர்த்துவதாகும். தமிழ் வினைமுற்றுக்களிலன்றி, எச்சங்களில் எதிர்மறை வடிவங்களை ஆராயின் ஆகாரம் இடைநிலை என்பது ஐயமின்றிப் புலப்படும்.

வாழ் + ஆ + மல் > வாழாமல்
உண் + ஆ + த் + அ > உண்ணாத

இவற்றிலுள்ள ஆகாரமும் விகுதிகளும் தெளிவாக நிற்றல் காண்க.

அ, ஆ, என்பனவே யன்றி அல், இல் என்பனவும் எதிர்மறை இடைநிலைகளாம்.

வாழ்க - வாழற்க - அல்
உண்டான் - உண்டிலன் - இல்

இவை யெல்லாம் இலக்கியத் தமிழைச் - செந்தமிழைச் சேர்ந்தன. இன்று பேச்சுத் தமிழில் எதிர்மறையை உணர்த்தும் முறை மாறியுள்ளது.[17]

வந்திலன் - வரவில்லை
வருகின்றிலன் - வரவில்லை
வாரான் - வரமாட்டான்

ஒரு சொல்லாக இருந்த வினை இரு சொல்லாகப் பிரிந்து அப் பொருளை உணர்த்தும் முறை இங்குக் காணப்படுவது. இதுபோன்றவற்றை மொழி நூலார் பிரிநிலை வளர்ச்சி (*analytic growth*) என்று குறிப்பர்.

**காரண வினை**

ஐரோப்பிய மொழிகளில், காரண வினை (*sujunctive or conditional mood*), செயவெனெச்சம் (*infinitive mood*), ஏவல் வினை (*imperative mood*) என்னும், வினை வகைகள் உண்டு. திராவிட மொழிகளில் உண்மையாக ஆராய்ந்தால் காரண வினை முதலிய சில பிரிவுக்கு இடமில்லை என்று

17. கன்னடத்திலும் இத்தகைய மாறுதல் நிகழ்ந்துள்ளது. அம்மொழியிலும் பழைய எதிர்மறை வினைகள் வழங்குதல் ஒழிந்து, புதிய முறையாக இத்தகைய தொடர்கள் பேச்சு வழக்கில் இடம் பெற்றுள்ளன. F. Kittel, A Grammar of the Kannada language p. 159.

கூறல் வேண்டும். வினைச்சொற்கள் இப்பொருள் வேறுபாட்டை உணர்த்துதல் ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு திராவிட மொழிகளிலும் உண்டு. ஆனால் சொல்லளவில் அவற்றிற்கான வேறுபாடுகள் இல்லை எனல் வேண்டும். எனினும் அப் பொருள்களைப் பல் வேறு வகையாகத் திராவிட வினைகள் உணர்த்த வல்லனவாக உள்ளன.

'ஆல்', 'இன்' முதலான விகுதிகளையோ, அன்றி, 'ஆனால்', 'என்றால்' முதலான சொற்களையோ, வினைச்சொல்லுடன் சேர்த்தால் காரணவினை அமையும்.

ஆல், இன், இல் - வந்தால், வரின், வரில்
எனின், } வந்தாரெனின்,
ஆனால், என்றால் } வந்தாரானால், வந்தாரென்றால்,
ஆகில், ஆயின் } வந்தாராகில், வந்தாராயின்

திராவிட மொழி ஒவ்வொன்றிலும் வேறுபட்ட விகுதிகளும் சொற்களும் இப் பொருளைத் தருகின்றன.

ஆல், இன், இல் என்னும் விகுதிகளை வேற்றுமையுருபுகளென்று கருத இடம் உளது.[18] ஆல் மூன்றாம் வேற்றுமையில் காரணப் பொருளிலும், இன்னும் அதன் திரிபான இல்லும் ஐந்தாம் வேற்றுமையில் காரணப் பொருளிலும் வருதல் காண்க. ஆனால், என்றால், ஆயின், எனின், ஆகில் என்பனவும், 'ஆ' 'என்' என்னும் பகுதிகளோடு ஆல், இன், இல் என்னும் விகுதிகள் சேர்ந்த சொற்களே யாகும்.

18. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 529.

அவையே யல்லாமல், ஏழாம் வேற்றுமை இடப் பொருளில் வரும் கால், கடை முதலான உருபுகளைச் சேர்த்தும் காரண வினை அமையும்.

செய்தக்கால், செய்தக்கடை, (செய்தக்கால் என்பது பேச்சு வழக்கில் செய்தாக்க என இன்னும் வழங்குகின்றது)

'ஆல்' என்பது செய்து முதலான எச்சங்களோடு சேர்தல் காணப்படுகிறது. அன்றியும் செய்தார் முதலான முற்றுக்களோடு சேர்ந்து வழங்குதலும் உண்டு. அப்போது அஃது 'ஏல்' எனத் தெரியும்.

செய்து + ஆல் > செய்தால்
செய்தார் + ஏல் > செய்தாரேல்

இவ்வாறன்றி, ஏல் என்பது (ஆல் என்பதன் திரிபெனக் கொள்ளாமல்) எனில் என்பதன் திரிபெனக் கொள்ளினும் அமையும்.

தெலுங்கில் ஏல் என்பதன் ஈறுகெட்டு ஏ என்பது விகுதியாக வழங்குகின்றது. (சேஸ்தே—செய்தால்).

**செயவெனெச்சம்** (*infinitive mood*)

ஐரோப்பிய மொழிகளில் உள்ளவாறு செயவெனெச்சத்தைத் தனிவகையாகக் கொள்ளல் திராவிட மொழிகளில் இல்லை. இதனை வினையெச்சங்களுள் ஒன்றாகக் கூறுதலே மரபு.

வர வேண்டும்
புகழ விரும்பினான்
பாடத் தொடங்கினான்

இவற்றில் உள்ள வர, புகழ, பாட முதலிய எச்சங்கள் செய என்னும் வாய்பாடாக நிற்றல் காண்க. இவ்வெச்சங்கள் வரல், புகழல், பாடல் முதலிய தொழிற் பெயர்கள் ஈற்று மெய் கெட்டு நின்றவையே. பொருளால் வேறுபாடு இல்லாமை வழக்கு நோக்கி உணரப்படுகின்றது. (பிராஹீய் குருக் மொழிகளிலும் வேறுபாடின்றி வழங்குகின்றது.[19] ஐரோப்பிய மொழிகளிலும் இத்தகைய வளர்ச்சி உள்ளது).[20]

வரல் வேண்டும்
புகழல் விரும்பினான்
பாடல் தொடங்கினான்

பாடற்குத் தொடங்கினான் என்பது போலத் தொழிற் பெயரோடு நான்கனுருபு சேர்ந்தும் அப்பொருளில் வருதல் உண்டு.

செய என்னும் வாய்பாட்டுச் சொற்கள் வேறு பொருளிலும் வழங்குகின்றன.[21]

நீ, வாழ, ஓங்க

---

19. The infinitive is a verbal noun declinable throughout the singular (Bray, The Brahui Language, p. 184). The infinitive of the verb stands for the abstract noun (F. Hahn, Kurukh Grammar, p. 92). The infinitive in Bengali appears to be the verbal noun put in the locative (S. K. Chatterjee, The Origin and Development of the Bengali Language. p. 1014).

20. F.M. Purdie, Syntax in Six Languages, pp. 54-58.

21. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, p. 346.

இவற்றின் ஈற்று லகரம் கெடாமல் நின்று அப் பொருள் தரலும் உண்டு.

நீ வாழல், ஓங்கல்,

ஆதலின், க, அ, அல் முதலியன வியங்கோள் விகுதிகள் என வகுத்தனர் இலக்கண நூலார்.[22]

தமிழில் எச்சங்களாக உள்ள வடிவங்கள் கன்னடம் முதலான ஏனைத் திராவிட மொழிகளில் தொழிற் பெயர்களாக இருத்தலும் ஈண்டு ஆராய்ந்துணரத் தக்கதாகும்.

| | |
|---|---|
| அலேதல்—அலெத (aleta) | கன்னடம் |
| முறிதல்—முறத (murata) | ,, |
| மேய்தல்—மேத (meta) | தெலுங்கு |
| நடத்தல்—நடத்த (nadata) | ,, |

**செயவெனெச்சப் பொருள்கள்** பின்வருமாறு பலவகைப் படும் :

**(i)** **விழத்** தள்ளினான் என்பதிற் போல காரியப் பொருளில் எதிர்கால வினையெச்சமாக வழங்கும்.

**(ii)** **வரக்** காண்கின்றேன் என்பதிற் போல உடனிகழ்ச்சிப் பொருளில் நிகழ்கால வினையெச்சமாக வரும்.

---

22. பிரெஞ்சு, ஸ்பானியம், இதாலி மொழிகளில் 'செய' என்பது (infinitive) திரியாமல் நின்று ஏவுதற்பொருளிலும் வழங்குகின்றது. F. M. Purdie, Syntax in Six Languages, pp. 60, 61). ஆயின், கிரேக்க மொழியில் தமிழில் உள்ளதுபோல், செய என்னும் எச்சத்திற்கும் ஏவலுக்கும் வேறுபாடு உள்ளது (A. F. Semenov, The Greek Language in its Evolution, p. 191).

**(iii)** மழை **பெய்ய** நெல் விளைந்தது என்பதிற் போல இறந்த கால வினையெச்சமாகக் காரணப்பொருளில் வரும்,

**(iv)** வினையடையாக (*adverbs*) வருமாறு பண்புப் பெயர்களுடன் 'ஆக' சேர்ந்து வழங்கும். (நன்றாகப் பேசினான்).

**(v)** இரட்டித்து நின்று மிகுதிப் பொருள் தரும் (மழை பெய்யப் பெய்யக் குளம் நிரம்பும்).

**(vi)** பல செயல்களை ஒரு காலத்தில் நிகழ்ந்தனவாகக் கூறும்போது பல வினைகள் இவ்வாய்பாட்டால் அடுக்கி வரும்.

முகில் எழ, வான் இருள, இடி இடிக்க.........

**ஏவல் வினை** (*Imperative mood*)

முன்னிலை ஒருமை ஏவலாக வரும் வினைச்சொல்லில் கால இடைநிலையும் விகுதியும் இல்லை. ஆதலின் வினைப்பகுதியே ஏவலொருமையாக வழங்குவது திராவிடமொழி யியல்பு.

வாழ் - நீ வாழ் ; செய் - நீ செய்

முன்னிலை ஒருமை உணர்த்த ஆய் விகுதி புணர்தல் வேண்டும் என்றும், மேற்கூறியவற்றில் அவ் விகுதி புணர்ந்து கெட்டது என்றும் இலக்கண நூலார் கூறுவர்.[23] வினையடிச் சொல் தனித்து நின்று ஏவற்பொரு

23. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே.
(தொல் சொல். ௪௫௦).

ஞுணர்த்தல் மொழியியல்பு ஆதலின், அது பொருந் தாது.[24]

முன்னிலை பன்மை ஏவல் வினைகளில் விகுதி இன்றியமையாதது. மின் என்பது இலக்கியங்களில் காணும் விகுதி. உம், உங்கள் என்பன பேச்சு வழக்கில் உள்ளன.

வாழ்மின், வாழும், வாழுங்கள்
செய்ம்மின், செய்யும், செய்யுங்கள்

உம் விகுதியை உம்மையிடைச் சொல்லாகக் கருதுவர் கால்டுவெல். ஆயின், முன்னிலையில் வழங்கும் நும் என்பதன் திரிபாகிய உம் என்பதே ஈண்டு விகுதியாய் வருவதெனக் கொள்ளல் ஏற்புடைத்து.

மின் விகுதி, உம் என்பதும் இன் என்பதும் சேர்ந்து அமைந்ததாகும்.

செய் + என் — செய்யென் — ஒருமை ஏவல் (பேச்சு வழக்கு)

செய்யும் + என் — செய்யுமென் — பன்மை ஏவல் (பேச்சு வழக்கு)

செய்யும் + இன் — செய்யுமின் — ஏவற்பன்மை
(என் > இன் எனத் திரிதல் ஒலியியலுக்கு ஒத்ததே)

செய்யுமின் > செய்மின் — உகரம் கெடல்
(உண்ணும் > உண்ம்; போலும் > போன்ம் என்பன போல).

வா, போ என்னும் சொற்களில் உள்ள ஏவுங் கடுமை நீங்கி, வேண்டுகோளாக ஏவும் முறை அமைந்

24. இந்நூலில் 'அடிச் சொற்கள்' என்ற பகுதியில் காண்க.

தவற்றை வியங்கோள் என்பர். வருக, போக என்பன அவ்வகையின. வாழ்க, ஒழிக முதலாக வாழ்த்தல் வைதல் பொருளுடைய சொற்களும் வியங்கோள் எனப்படும். ஏவுதற்குக் குறுகிய வினைச் சொற்களும் வேண்டுதற்கு நீண்ட சொற்களும் அமைந்த மக்யார் (*Magyar*) மொழிகளை ஈண்டு ஒப்பிடலாம்.[25]

வியங்கோள் தன்மை முன்னிலை ஆகிய ஈரிடத்தும் வரலாகாதெனத் தொல்காப்பியனார் விலக்கினார்.[26] ஆயினும் இலக்கிய வழக்கு அவ்வாறு விலக்கவில்லை.[27] ஆதலின் பிற்காலத்தார் வியங்கோள் எல்லா இடங்களுக்கும் திணைபாலுக்கும் பொதுவானது என்று கொண்டனர்.[28] இதனால், திணைபாலிடம் உணர்த்தும் விகுதி வியங்கோளில் இல்லை என்பது தெளிவு. ஏவலில் ஒருமை பன்மை உளது. அதுவும் வியங்கோளில் இல்லை. ஏவற்பன்மையில் வரும் மின் உம் விகுதிகளில் முன்னிலைப் பன்மை யுணர்த்தும் இடப் பெயரின் திரிபு உள்ளது என மேலே கண்டோம். வியங்கோளில் உள்ள விகுதியோ திணைபாலிடங்களுக்குப் பொதுவான தொழிற் பெயர் விகுதியாகவே உள்ளது.

தொழிற்பெயர் விகுதியாகிய அல் என்பது மெய் கெட்டும் கெடாதும், கை விகுதி திரிந்தும் வியங்கோளில் அமைகின்றது.

---

25. Jespersen, Language, Its origin etc, p. 403.
26. முன்னிலை தன்மை ஆயீ ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி. (தொல். சொல். உஉசு)
27. நான் இவளினும் பிரிக (புறம். 71-6).
நீ மன்னிய, மன்னுக (புறம். 6-29).
28. கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப. (நன்னூல், 338).

வாழல்—வாழ
ஓங்கல்—ஓங்க
செய்கை—செய்க
வருகை—வருக

திராவிட மொழிகளில் குருக் மொழியில் ஒரு வேறுபாடு காணப்படுகின்றது. பர (வர) என்பது ஏவலாகவும், பர்கே (வருக) என்பது வியங்கோளாகவும் வழங்குகின்றது. ஈரிடத்தும் தொழிற்பெயரே காணப்படுகின்றது.[29]

## தொழிற்பெயர் (*Verbal noun*)

தொழில் நிகழ்தலை உணர்த்தாது, தொழிலையே இன்னதென்று உணர்த்துவது தொழிற்பெயர்.[30] இஃது இருவகை :—1. காலம் உணர்த்தாத் தொழிற் பெயர்; 2. காலம் உணர்த்தும் தொழிற் பெயர்.

முன்னது, வினைப் பகுதியோடு தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, வு, சி, து, உள், மை, முதலான விகுதிகளில் ஒன்று சேர்ந்து அமைவது. நடத்தல், ஆடல், ஓட்டம், விடை, கிடக்கை முதலியன இவ்வகையைச் சாரும்.

---

29. The form ke is employed when a more familiar or milder sort of imperative is intended or when the fulfilment of the action commanded is not expected to be accomplished at once. Illustration: Bara, come! i.e. at once; bar ke, come (if you please). ke remains unaltered in all genders and both numbers. (F. Hahn, Kurukh Grammar, p. 43).

30. தொழில் மாத்திரம் உணர்த்துவன எல்லாம் தொழிற் பெயர் என்பது ஆசிரியர் கருத்து என்ப. (சேனாவரையர், தொல். சொல். சகரு).

பின்னது, கால இடைநிலையோடு கூடி, 'து' விகுதி பெற்று வருவது: நடந்தது, நடக்கிறது, நடப்பது, ஆடியது, ஆடுகிறது, ஆடுவது முதலாயின.

**வினையாலணையும் பெயர்** (*Participial noun*)

வினைமுற்றுக்கள் திரிந்தும் திரியாமலும் வினையாலணையும் பெயராய் அமையும். இவை தொழிலை உணர்த்தாமல் தொழில் செய்வானை உணர்த்துவன.

செய்தானைக் கண்டேன்—திரிபில்லாதது
தாழ்ந்தார் இல்லை— ,,
செய்தவனைக் கண்டேன்—திரிபுடையது
தாழ்ந்தவர் இல்லை— ,,

படர்க்கை ஒன்றன்பால் வினைமுற்றுக்கள் வினையாலணையும் பெயர்களாக நிற்றலே யன்றித் தொழிற் பெயர்களாகவும் நிற்கும். இவ்வாறு செய்தது முதலான சொற்கள் மூவகைப் பொருள் உணர்த்தல் காண்க.

(i) என் கை செய்தது (வினைமுற்று).

(ii) இதைச் செய்தது என் கை தான் (வினையாலணையும் பெயர்).

(iii) செய்தது நல்லதே (தொழிற்பெயர்).

**வினையடியாகப் பிறக்கும் பெயர்கள்** (*Derivative nouns*)

வினைப் பகுதியோடு விகுதிகள் சேர்வதால் சில பெயர்கள் பிறக்கின்றன. சில பெயர்கள், விகுதிகள் அற்றவை. (அவற்றை இலக்கண நூலார் முதனிலைத் தொழிற்பெயர் என்பர்).

**பெயர்களாம் முறைகள்**

(1) விகுதிகள் பெறாமல் வினைப்பகுதியே பெயராக வருதல் (முதனிலைத் தொழிற் பெயர்):

கட்டு, அடி, பிடி

(2) வினைப்பகுதியின் ஈற்று வல்லினம் இரட்டித்துப் பெயராதல்:

எழுது > எழுத்து
பாடு > பாட்டு
ஆடு > ஆட்டு

இரட்டிக்காத நிலையில் மெல்லொலியுடைய ஈறு இரட்டித்து வல்லொலி பெறுதல் காண்க.

இவ்வாறு மெல்லொலி வல்லொலி பெறு மிடங்களில பொருள் மாறுதலும் ஏற்படுகின்றது. அத்தகைய மாறுதல்களாவன:—

(i) பெயர் பெயரடையாதல்:
காடு > காட்டு (ப் புலி)

(ii) தன்வினை பிறவினையாதல் (துவ்விகுதி சேர்ந்தால் திரிவது):

ஓடு > ஓட்டு
ஆகு > ஆக்கு

(iii) வினைப்பகுதி இறந்த காலம் உணர்த்தல் (த் இடைநிலை சேர்ந்ததால் திரிதல்):

அறு > அற்று
விடு > விட்டு

**(iv)** வினை பெயராதல்:

பாடு > பாட்டு

எழுது > எழுத்து

நான்காவது வகையே இங்குக் கொள்ளப் படுவது. [ஏனைய அவ்வவ்விடங்களில் விளக்கப் பட்டன].

(3) வினைப்பகுதியின் முதலுயிர் நீண்டு பெயரா யமைதல்:

படு > பாடு மின் > மீன்

நக்கு > நாக்கு

(4) வினைப்பகுதியின் முதலுயிர் குறுகிப் பெய ராதல் :

காண் > கண்

(5) மை விகுதி சேர்ந்து பெயராதல் (மை விகுதி பண்புப் பெயர்க்கே பெரும் பான்மையும் ஏற்கும்; சிறு பான்மை தொழிற்பெயர்க்குமாம்) :

ஆடினமை, வந்தமை

(6) அம் விகுதி சேர்ந்து பெயராதல் (அப்போது மென்றொடர் வன்றொடராதலும் உண்டு);

தூங்கு > தூக்கம் திருந்து > திருத்தம்

ஆடு > ஆட்டம் தோண்டு > தோட்டம்

உயர் > உயரம் ஆழ் > ஆழம்

(7) கை, தி, சி, பு, முதலான விகுதிகளில் ஒன்று சேர்தல் :

காய் > காங்கை
கெடு > கெடுதி
புகழ் > புகழ்ச்சி
தின் > தின்றி, திற்றி (தெலுங்கு : திண்டி)
வேய் > வேம்பு
பாய் > பாம்பு

(8) கண், பாடு, மானம் முதலான சில பெயர்களே விகுதிகள் போல் சேர்ந்து பெயராதல்:

இடுக்கண், உறுகண்
கட்டுப்பாடு, சேர்மானம், கட்டுமானம்

இவ்வாறே பிற சொற்களையும் ஆய்ந்தறிந்து கொள்ளல் வேண்டும்.

சேரி > சேர்
விழா > வீழ் (விரும்பு)[31]
பிறை > பிற (பிறத்தல்)
பாசி > பா (பரவு)
பொலிசை > பொலி (மிகு)

---

31. கால்டுவெல் விழி என்பதினின்று விழா என்பது அமைந்தது என்பர். (A Comparative Grammar of the Dr. Languages, p. 548). கண் விழித்தலால் அமைந்த பெயர் என்னும் காரணம் பொருந்துவதன்று. எல்லாரும் விரும்பிச் செய்வதால், வீழ்தல் - விரும்புதல் என்னும் காரணம் பற்றி அமைந்ததெனல் பொருந்தும்.

இழுதை (பொய்) > இழு (இழுக்கு
கடன், கடமை > கட (கடத்தல்)
குழாய் > குழி
சுடர் > சுடு
புகார் > புகு
உகிர் > உகு
குதிரை > குதி
உடல் > உடு (உடுத்தல்)
வயல் > வை (வைத்தல்)
தொட்டில் > தொடு
விட்டில் > வெட்டு
பருத்தி > பரு (பெருகு)
அருள் > அரு (அருமையாய் இருத்தல்)
பொருள் > பொரு (பொருந்து):

**வினைமுதற் பெயர்கள்** *(nouns of agency)*

தமிழில் உள்ள வினையாலணையும் பெயர்கள் வினைமுதலை உணர்த்தும். இவையே அன்றித் தமிழில் மிகுதியாக வழங்கும் வேறு பெயர்களும் உண்டு. அவற்றில் காணப்படும் விகுதி இ. அவ்விகுதி வடமொழி இகர விகுதியினின்று வேறானது; காரணம்:—

(1) வடமொழி இகர விகுதி பாலுணர்த்துவது: இது பாலுணர்த்தாதது. (2) வடமொழி கலந்த தமிழ் இலக்கியப் பகுதியிலே அன்றிக் குடியானவர் பேச்சில் மிக்கு வழங்குகின்றது. பல செடிகொடிகளின் பெயர்களும் இகர விகுதி பெற்று அமைந்திருத்தலால் வடமொழி விகுதி என்று கொள்ளப்படாது. நகைக்குறிப்பு மொழிகளிலும், பழமொழிகளிலும், தொடர் மொழிகளிலும் உயர்

வழக்காயினும், இழி வழக்காயினும் வரையறை யின்றிப் பயில்கின்றது.

கொள்ளி, உண்ணி, கொல்லி, மீன்கொத்தி
தொட்டாற்சுருங்கி, திண்ணைத்தூங்கி

இவ்வாறு வினைச்சொல் திராவிட மொழிகளில் பல்வேறு வகையில் பயன் பட்டு வருதலை நோக்கு மிடத்து, அதன் சிறப்புப் புலனாகும். திராவிட மொழி களின் உயிர், வினைச்சொல்லில் உள்ளது எனலாம். வினைமுற்றாய், திணைபால் இடம் காலங்களால் வகைப் படுதலே அன்றி, வினைச்சொல், வினையடையாயும் (*adverbs*), பெயரடையாயும் (*adjectives*), பெயரே யாகியும் (*derivative nouns*), பல்வேறு பொருட்டாகி யும் (*moods, voice, etc.*) பல்கி வருதலால், திராவிட மொழிகளின் சொற்கோவை (*vocabulary*) பெரும்பாலும் வினைச்சொல்லே கொண்டிருத்தலை உணரலாம். வினைச் சொல்லை எடுத்தாளப் பயின்றவர் மொழி முழுதும் பயின்றவராக ஆகுமாறு திராவிட மொழிகள் அமைந்துள்ளன.

# கரு. சுட்டு முதலியன

**சுட்டு வினாப் பெயர்கள்**

திராவிட மொழிகளில் படர்க்கையிடப் பெயர்கள் (*Third person pronouns*) இல்லை. அவற்றினிடத்தில் சுட்டுப் பெயர்களே வழங்குகின்றன.

அகரம் சேய்மையில் உள்ள பொருளைச் சுட்டும்; இகரம் அண்மையில் உள்ளதைச் சுட்டும்; உகரம் நடுவணதையும் பின்னதையும் சுட்டும். உகரம் வழக்கிறந்தது. அகரமும் இகரமும் பலவாறு பயின்று வழங்குகின்றன. (உகரம் தமிழிலக்கியத்திலும் கன்னட இலக்கியத்திலும் அருகிக் காணப்படுகின்றது).

இச் சுட்டுப் பெயர்களைப் போலவே, இருதிணை ஐம்பால் விகுதிகளையுடைய வினாப்பெயர்கள் உண்டு. எகரவினா எல்லாத் திராவிட மொழிகளிலும் காணப்படுவது.

அ, இ, உ, எ, என்னும் இந்நான்கு உயிர்களும் இவ்வாறு திராவிட மொழிகளில் சுட்டு வினாப் பொருளில் தொன்றுதொட்டு வழங்கி வருவது பெருஞ் சிறப்பினதாகும். உலகில் உள்ள வேறு எம் மொழிகளிலும் இத்தகைய பண்பட்ட ஒழுங்குமுறை இல்லை. அழகும், உண்மைப் பெருமையும் வாய்ந்த இத்தகைய

ஒழுங்கு திராவிட மொழிகளின் சிறப்பை விளக்க வல்லது.[1]

யா என்பதும் வினாப் பொருள் தருவது; ஐம்பால் விகுதிகளுடன் கூடி வருவது. இது கன்னடத்திலும் வழங்கி வருகின்றது. யா என்பதற்கும் எகரவுயிர்க்கும் தொடர்புண்டு. இரண்டனுள் யா பழையது எனக் கருத இடமுண்டு. யம > எமன் எனப் பல வட சொற்கள் தமிழாகும் முறை ஈண்டுக் கருதத் தக்கது. முதலில் யா என்பது ஏகாரமாக (நெடிலாக)த் திரிந்து வழங்கியிருக்கும். இன்னும் மலையாளத்தில் எவன், எவள் என்னும் தமிழ்ச் சொற்களுக்கு நேராக ஏவன், ஏவள் என்பன உள்ளன. மலையாளம், தமிழ் இரண்டிலும் 'ஏது' என்னும் சொல்லும் உள்ளது. தெலுங்கில் 'ஏதி' என்றுள்ளது. ('யா' ஏகாரமாதலைத் தெலுங்கில் யாண்டு > ஏடு என ஆனமை தெரிவிக்கும்.)

1. I need not call attention to the beautiful and philosophical regularity of this quadruple set of remote, proximate, and intermediate demonstratives and interrogatives. In no other language or family or languages in the world shall we find its equal, or even its second. In addition to which, the circumstance that the demonstrative vowels are not only used in these languages with an invariable and exact discrimination of meaning which is not found in the Indo-European tongues (with the solitary and partial exception of the New Persian), but are also associated with a corresponding interrogative vowel of which the Indo-European tongues are totally ignorant-tends to confirm the supposition which I have already expressed, that the Dravidian family has retained some pre-Sanskrit elements of immense antiquity.—Caldwell, A Comparative Grammar of the Dr. Languages, p. 422.

19

யாவர் என்பதன் திரிபாகிய யார் என்பது ஒருமையிலும் வழங்குகின்றது. அஃது 'ஆர்' என்றும் மருவியுள்ளது. 'எவன்' என்னும் வினா இலக்கியத்தில் 'ஏன்' எனும் பொருளில் வந்துள்ளது.

தெலுங்கு மொழியில் வாடு, வீடு, வாரு, வீரு, தா, தீ என்பன அவன், இவன், அவர், இவர், அது, இது என்னும் தமிழ்ச் சொற்களுக்கு நேரானவையாகும். வாடு முதலியவற்றில் முதலில் வகரமெய் அல்லது தகரமெய் காணப்படினும், அவை சுட்டு அல்ல. மொழி முதலில் இருந்த அகரவுயிரும் இகரவுயிரும் இடம் பெயர்தலால் ஆகிய திரிபுகளே இவை.[2] ஆதலால் வாடு, வீடு, தா, தீ முதலிய தெலுங்குச் சொற்களிலும் அ, இ என்னும் சுட்டுக்களே உள்ளன.

தமிழில் அகரம் முதலான சுட்டு வினாக்களடியாகப் பிறந்த பண்புப் பெயர்கள் பல மிக ஒழுங்காக அமைந்து மொழிக்கு அழகு தருகின்றன. அம்மை, இம்மை, உம்மை, எம்மை, இம்பர், உம்பர் முதலியன பல உள்ளன.

திராவிட மொழிகள் ஒவ்வொன்றிலும் எ, அல்லது ஏ முதலிலும், ன் அல்லது ம் ஈற்றிலும் பெற்ற வினா காணப்படுகின்றது. அவை என், ஏன், ஏம் என்பனவாகும்.

என் > என்ன, என்னது—தமிழ்.
ஏன்—தமிழ், மலையாளம்
ஏனு—கன்னடம்
ஏமி—தெலுங்கு (ஏமோ என்பதுமாம்.)

---

2. இந்நூலில் 'உயிரெழுத்துக்கள்' என்னும் பகுதியில் காண்க.

அந்த, இந்த, எந்த என்பனவும், அன்று இன்று என்று என்பனவும் இவை போல்வனவும் இவ்வாறே சுட்டு வினுக்களினின்றும் பிறந்தவை.

அம், இம், உம், அன், இன், அல், இல், என்னும் இவை முதலில் சுட்டுப் பெயராய் இடப் பொருளையே உணர்த்தி யிருக்கவேண்டும். பின்னர்ப் படிப்படியாக மாறித் தொழிற் பெயர் விகுதிகளாகவும் பிற விகுதிகளாகவும் அமைந்தன என்றுகொள்ளலாம்.

ஆ ஈ ஏ என்பவை சுட்டு வினுப் பொருளில் தமிழிலக்கியத்திலும் பிறமொழிப்பேச்சிலும் இலக்கியத்திலும் வழங்கி வருவதால், நெட்டெழுத்துக்களாகிய அவையே பழையன என்றும், குற்றெழுத்துக்களாகிய அ, இ, எ என்பன பின்னர் அமைந்தன என்றும் கூறுவர். இவற்றுலாகிய சொற்களிலும், ஆங்கு, அங்கு; ஈங்கு, இங்கு, யாங்கு, எங்கு என இருவடிவங்கள் இருத்தல் இதற்குச் சான்ருகும்.

## பெயரடையாக வரும் சுட்டு வினுக்கள். (*Demonstrative and Interrogative adjectives.*)

சுட்டு வினுக்களின் அடிச் சொற்களாகிய அ, இ, எ அல்லது ஆ, ஈ, ஏ என்பன பெயர்ச் சொற்களுக்கு முன் பெயரடைகளாக நிற்க வல்லன. அங்ஙனம் வருங்கால், சுட்டு வினுக்கள் குறிலாயின் வகர உடம்படு மெய் பெற்றும், வருமொழி முதல் இரட்டித்தும் வரும்.

அ + ஊர் > அவ்வூர் அ + யானை > அவ்யானை
அ + கடல் > அக்கடல் எ + மண் > எம்மண்

மலையாளத்திலும் கன்னடத்திலும் சுட்டு வினுக்கள் நெடிலாய் வருதலே பெரும்பான்மை. அவை நெடிலாய் வருங்கால், மேற்கண்ட விதியில்லை; மற்ற உயிரெழுத்துக்களைப் போல் புணர்ச்சி பெறும். இவற்றை உயிராகக் கொள்ளாமல், அவ் இவ், எவ் என வகர மெய்யீற்றனவாகக் கொள்வதற்கும் இடம் உண்டு.[3]

இவையே அல்லாமல், தமிழில் அந்த, இந்த, எந்த என்னும் சுட்டு வினுக்கள் உள்ளன. இவை பிறமொழிகளில் இல்லை; மலையாளத்திலும் இல்லை; மலையாளம் தமிழிலிருந்து பிரிந்த பின்னரே இவை தமிழில் பயின்றிருக்க வேண்டும். தமிழ்ச் செய்யுட்களிலும் இவை தக்க இடம் பெறவில்லை.

இவை போன்ற சொற்கள் தெலுங்கிலும் கன்னடத்திலும் உள்ளன. ஆனால் அவை பொருளால் வேறுபடுகின்றன.

அந்த (anta), இந்த (inta) எந்த (enta)
(அது போன்ற அல்லது அவ்வளவான...)

இப் பொருளில் தமிழிலும் மலையாளத்திலும் உள்ள சொற்கள், அன்ன, இன்ன, என்ன என்பன. இவற்றின் ஈற்றில் உள்ள அகரம் பெயரெச்ச ஈறாகக் கொள்ளல் பொருந்துவதாம்.

3. Thus the loss of 'v' in the initial lengthening of the demonstrative base in poetry, the use of the forms in literature and in the rules and in the commentaries on grammar, and the surviva of 'v' in mixed sandhi strongly indicate that the old demonstrative bases were av, iv and uv. (C.P. Venkatarama Ayyar, Dravidic Studies No. I, p. 9.)

தெலுங்கில் அட்டி, இட்டி, எட்டி (அதுபோல், இது போல், எது போல்) என்னும் சொற்களும் சுட்டு வினாச் சொற்களே. கன்னடத்தில் அனிது, இனிது, எனிது (*anitu, initu, enitu*) என்னும் சொற்கள், தமிழிலக்கியத்தில் வழங்கும் அனைத்து, இனைத்து, எனைத்து என்பவற்றிற்கு நேரானவையாம்.

தெலுங்கில் அந்தரு, இந்தரு, எந்தரு என்பன மக்கள் தொகையினையும், அன்னி, இன்னி, என்னி என்பன அஃறிணைப் பொருள்களின் தொகையினையும் சுட்டியும் வினவியும் வழங்குவன.

தமிழில் உள்ள அந்த இந்த எந்த என்பவை அது இது எது என்பவற்றிலிருந்து பிறந்திருக்கலாம். ஈறு, பெயரெச்ச விகுதியாகிய அகரம் எனலாம். அத, இத, எத என்பவை மூக்கொலி பெற்று அந்த, இந்த, எந்த எனத் திரிந்திருக்கலாம். அது பொழுது, அது போழ்து என்று இலக்கியத்திலும், அந்தப்பொழுது என்று பேச்சு மொழியிலும் வழங்குவதைக் காண்க.

## வினையடையாக வரும் சுட்டுவினாக்கள் : (*Demonstrative and Interrogative Adverbs*)

வினையடையாக வரும் சொற்களைத் (**adverbs**) தனியே சொல்வகையுள் (**parts of speech**) ஒரு வகையாகப் பிரித்தல் தமிழிலும் பிற திராவிட மொழிகளிலும் இல்லை. ஆனால், பெயர்ச் சொற்களும் வினைச் சொற்களும் வினையடையாக வருகின்றன. தமிழில் உள்ள இடைச்சொற்களும் உரிச்சொற்களும் அவ்வாறு வருகின்றன. சில பெயர்ச் சொற்களுடன் ஆக

ஆகி, ஆய் முதலான சொற்கள் சேர்ந்து வினையடை யாகின்றன.

நன்றாக, நன்றாய்ப் பேசினான்...........

சுட்டு வினாக்கள் பற்றிய வினையடைகளும் அவ்வாறே தனியினமாக இலக்கண நூலுள் கூறப்படவில்லை. ஆயினும் அத்தகைய சொற்கள் பல உள்ளன.

(1) சுட்டு, வினா + கு, ங்கு—அங்கு, இங்கு, எங்கு
(2) ஷை + சு, ஞ்சு—துளு மொழியில் அஞ்சு
(3) ஷை + டு, ண்டு,—ஆண்டு, ஈண்டு, யாண்டு
(4) ஷை + று, ன்று—அன்று, இன்று, என்று
அற்றை, இற்றை
(5) ஷை + ம்பு + அர்—இம்பர், உம்பர் (தமிழ்ச் செய்யுளில்)
(6) ஷை + ல், ள்—கன்னடம் இல்லி, அல்லி, எல்லி
(இங்கு, அங்கு, எங்கு,)

தெலுங்கு இலு—இல்லு (வீடு) இவ்வாறு தோன்றியது போலும்.
ஏல (எவ்வாறு)

தமிழில் எல்லாம் என்பதும் எல் + ஆ + உம் என வினாவிலிருந்து பிறந்த தென்பர் கால்டுவெல்.[4]

### ஆ, ஓ—வினாக்கள் :

இவை பெயர்ச் சொல்லின் முன் சேர்க்கப் பெறும் எ, ஏ, யா என்னும் வினாக்களின் வேறுபட்டன. (ஏ என்பது தமிழ்ச் செய்யுளில் பெயர் வினைகளின் பின் சேர்க்கப்பெற்றும் வழங்குகின்றது.)

ஆ, ஓ என்னும் வினாக்கள் பெயர் வினைகளின் பின் சேர்க்கப் பெறுவன.

உண்டே? உண்டா? உண்டோ?

செப்பாக உள்ள ஒரு வாக்கியத்தின் இறுதியில் ஆ அல்லது ஓ விஞவைச் சேர்ப்பின், அவ்வாக்கியம் விஞ வாக்கியமாக மாறும். இவ்வாறு விஞ வாக்கியங்கள் எளிதில் அமைதல் திராவிட மொழிகளின் சிறப்பியல் பாகும்.

அவன் வருவான்—செப்பு
அவன் வருவானு—விஞ

ஓகாரம் மலையாளத்தில் பெரிதும் வழங்குகின்றது. இது தமிழில் ஐயப் பொருளில் வரும் போது பிற விஞச் சொற்களில் ஈற்றிலும் சேர்க்கப்படுகின்றது.

எவன்—எவஞே
எது —எதுவோ

**சுட்டுவிஞ அடிச்சொல் :**

சுட்டுப் பெயர்களின் அடிச் சொற்கள் அ, இ, உ என்னும் தனிக் குற்றெழுத்துக்களா, அல்லது, அவ் இவ் உவ் என்னும் வகர மெய்யை அடுத்த குற்றெழுத் துக்களா என்பது ஆராயத்தக்கது.

1. அ. இ. உ என்னும் தனிக்குற்றெழுத்துக்கள் அடிச் சொற்களாயின்,

இ + அன் — இயன்
இ + அள் — இயள்
இ + அர் — இயர்

என்பன சொற்களாக வழங்கியிருக்க வேண்டும். எங்கும் யகரம் உடம்படுமெய்யாகத் தோன்ருமல், வகரமே காணப்படுகின்றது. ஆதலின், இக்குற் றெழுத்துக்களை அடிச்சொற்கள் என்று கருதத் தடை நேர்கின்றது.

குற்றெழுத்தாய் நிற்குமிடத்து, 'இயன்' என யகர உடம்படுமெய் பெறாமல் முறை பிறழ்ந்து 'இவன்' என வகர மெய் பெற்று அமைந்தது போலவே, நெட்டெழுத்தாய் நிற்குமிடத்து, 'ஆவிடை' என வகர உடம்படுமெய் பெறாமல், முறை பிறழ்ந்து 'ஆயிடை' என யகரமெய் பெற்று நிற்றலும் வியப்பாகவே உள்ளது.

2. சுட்டுப் பெயர்களில் இவ்வாறு உடம்படு மெய் பிறழ்ந்து வருவதற்கு ஒற்றுமை நயம் (*analogy*) முதலாய காரணமும், கோவில் கோயில் முதலாய எடுத்துக்காட்டுக்களும் காட்டலாம். ஆயின், தொடர்களில் முறைபிறழ்வதற்குக் காரணம் காட்ட இயலவில்லை :—

இ + அணி—இய்யணி

இ + இடம் — இய்யிடம்

இ + உலகம் — இய்யுலகம்

இ + யானை — இய்யானை

எனத் தொடர்கள் புணராமல், இவ்வணி இவ்விடம் இவ்வுலகம் இவ்யானை என்றே புணர்ந்து அமைகின்றன. ஆதலின், அடிச்சொல் இகரவுயிராகக் கொள்ள இடமில்லாமல்,

இவ் + அணி — இவ்வணி

இவ் + இடம் — இவ்விடம்

இவ் + உலகம் — இவ்வுலகம்

இவ் + யானை — இவ்யானை

எனக் கொண்டு, இகரவுயிரும் வகர மெய்யும் சேர்ந்ததாகவே கொள்ள வேண்டியுள்ளது.

**3.** இவற்றிலும் வகரம் உடம்படு மெய்யே எனக் கூறி முறை பிறழ்ந்தமைக்குக் காரணம் காட்ட முயலலாம். ஆயினும், அந்த வகரம் உடம்படுமெய் ஆயின்,

இ + வ் + அணி — இவணி
இ + வ் + இடம் — இவிடம்
இ + வ் + உலகம் — இவுலகம்

எனப் புணர்ந்து நிற்கவேண்டுமே அன்றி, வகரம் இரட்டுதற்குக் காரணம் இல்லை.

நல் + அணி — நல்லணி
தம் + இடம் — தம்மிடம்
மண் + உலகம் — மண்ணுலகம

என்பன போல, தனிக்குறில் அடுத்த மெய்யாக நின்ற காரணத்தால்தான் வகரம் இரட்டித்து அமைகின்றது. ஆதலின், அவ் இவ் உவ் என்பவற்றை அடிச்சொற்க ளாகக் கொள்ளலே பொருந்துகின்றது.

4. அன்றியும், வகரம் உடம்படுமெய்யே ஆயின், தெலுங்கு மொழியில் உள்ள வாரு, வீரு, வாடு, வீடு முதலான சுட்டுப் பெயர்களில் (உயிர் இடம் பெயர்தல் என்ற விதிப்படி) முதலெழுத்தாய் நிற்கும் அளவிற்கு அதற்குச் சிறப்புத்தோன்ற இடமில்லை. வகரமெய் இத்தகைய சிறப்பிடம் பெற்று நிற்றலால் அஃது அடிச்சொல்லில் அமைந்ததே எனக் கருதவேண்டி யுள்ளது.

**5.** வகர மெய் அடிச்சொல்லில் அமைந்ததே என்ற கருத்தை மறுப்பவர், அது என்ற சுட்டுப் பெயரைக் காட்டி அச் சொல்லில் வகரம் இல்லையே

எனக் குறை கூறலாம். அவன், அவள், அவர், அவை, இவன், இவள், இவர், இவை என்னும் சொற்களில் வகரம் இருத்தலும், அது, இது என்னும் சொற்களில் வகரம் இல்லாமையும் வெளிப்படை. அதற்குக் காரணம் இன்னதென ஆராயும்போது, மற்றொரு சான்றும் உடன் கிடைக்கின்றது.

அடு, இடு, புது முதலான சொற்கள் எங்கும் அஃடு, இஃடு, புஃது முதலான வடிவங்களைப் பெறுதலே இல்லை. ஆயின், அது இது என்பவை வருமொழி முதலாக உயிர் வருமிடத்து அஃது இஃது என்று ஆகின்றன. இவற்றில உள்ள ஆய்தம் மற்றொரு மெய்யின் திரிபாகக் கொள்ளல் பொருந்தும்.

பல்து — பஃது (பத்து)
கல் தீது — கஃறீது
முள் தீது — முஃடீது

என்பவற்றில் லகர ளகரமாகிய இடையின மெய்கள் ஆய்தமாகத் திரிந்தமை போலவே,

அவ் + து — அஃது

என ஆயிற்று என்று கொள்ள வேண்டும். பிற்காலத்தில் ஒலித்திரிபுகள் பல ஏற்பட ஏற்பட, நுண்ணிய ஆய்தம் மெய்ம் முதல் மொழி வருமிடத்து மறைவதாயிற்று. உயிர் முதல் மொழி வருமிடத்து மட்டும் மறையாமல் நிற்பதாயிற்று.

அது மரம்
அஃது ஆறு

என்னும் வழக்குக்களின் காரணம் இதுவே ஆகும். ஆகவே, அவன் அவள் அவர் அவை என்னும்

சொற்களில் வகர மெய் இருத்தல் போலவே, அஃறிணை ஒருமைச் சுட்டுப் பெயரிலும் 'அவ்து' என இருந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் 'அஃது' 'அது' என்ற திரிபுகள் ஏற்பட்டன எனக் கொள்ளலாம். இந்த உண்மையை விளக்கும் சான்று தமிழ்மொழியில் அமைந்திருக்கின்றது.

6. திராவிட மொழிகளில் பல ஆ ஈ என்னும் நெடில்களையே சுட்டுக்களாய் வழங்குகின்றன. தெலுங்கில் பெரும்பான்மை ஆ ஈ என்பனவும் சிறுபான்மை அவ் இவ் என்பனவும் உள்ளன. மலையாளமும் கன்னடமும் அவ்வாறு வழங்குகின்றன. தமிழில் ஆ ஈ என்பன அருகி வழங்கியிருக்க, அவ் இவ் என்பனவே பயின்று வழங்கியிருக்கின்றன.

இவற்றையெல்லாம் ஆராயின், ஆ ஈ என்பவை அவ் இவ் என்பவற்றின் வேறல்ல என்பது விளங்கும். குறிலும் மெய்யுமாய் நின்ற சொற்களே நீண்டு ஒலித்த போது, தனிநெடிலாய் நின்றிருக்கும். நீண்டு ஒலித்தபோது, மெய்யின் ஒலியளவு மிகையாதல் பற்றி அது கெட்டிருக்கும். ஆதலின், அவ் இவ் என்பன பழைய வடிவங்கள் எனவும், ஆ ஈ என்பன அவற்றின் திரிபுகள் எனவும் கொள்ளலாம். திராவிட மொழிகளுள் பழமைச் சிறப்பு உடையதாய், பழைய சொல் வடிவங்களையும் மொழிப் பண்புகளையும் காத்து வருவதாய் விளங்கும் தமிழ்மொழி சுட்டுக்களை விளக்குமிடத்திலும் பெருந்துணையாக உதவுகின்றது. தமிழ்மொழியில்தான், அவ் இவ் முதலாய சுட்டுக்கள் இன்னும் வாழ்ந்து வருகின்றன.

இந்த ஆராய்ச்சி வினா அடிச்சொல்லிற்கும் பொருந்துவதாகும். எவ் என்பதே வினாவின் அடிச் சொல்லாக இருந்து, ஏ என்றும் யா என்றும் நீண்டு வழங்கி யிருக்கவேண்டும், எவன் எவள் முதலான வினாப் பெயர்கள் அமைந்திருக்கவேண்டும்.

**பெயரடையும் வினையடையும்** (*adjectives and adverbs*)

பெயரடை என்றும் வினையடை என்றும் தனி யினங்களாகத் திராவிட மொழிகளில் வழங்குஞ் சொற்கள் மிகமிகச் சிலவே. பெயரும் வினையுமாகிய சொற்களே உருவம் திரிந்தும் திரியாமலும் இவ்வாறு வழங்குகின்றன.

**பெயரடைகள்** (*Adjectives*)

(1) பெயரடைகள் பெயருக்கு முன் *preceding* நிற்கும் சொல்நிலையால் அடையாகும் தன்மை பெறு கின்றன. அவ்வாறு வரும்போது அவை ஐரோப்பிய மொழிகளிற் போல் திணைபால் வேறுபாடு உணர்த்தும் திரிபு பெறுவதில்லை. எல்லாத் திணைபால்களுக்கும் பொதுவாகவே நிற்கின்றன.

நல்ல மரம், மரங்கள், பையன், மகள், மாந்தர்.

(2) சில பெயர்ச் சொற்கள் சிறிதும் திரியாது பெயரடையாக நிற்க வல்லன.

பொன் வளையல்

(3) வினைச் சொல் பெயரடையாக வரும்போது, அடிச் சொல் மட்டும் நிற்றலும் உண்டு.

கொல் யானை, உண் கலம்

(4) வினைப்பகுதி கால இடைநிலை ஏற்று அ (அல்லது உம்) விகுதி பெற்றுப் பெயரடையாதலே பெரும்பாலும் காணப்படுவது. அதனை இலக்கண நூலார் பெயரெஞ்சு கிளவி அல்லது பெயரெச்சம் (*relative participle or adjectival participle*) என்பர்.[5]

கொன்ற யானை, உண்ணும் கலம்

(5) எண்ணுப் பெயர்கள் பெயரடைகளாக வரும்போது திரிதல் இயல்பு.[6]

ஒன்று > ஒரு

**வினையடைகள் (*Adverbs*)**

(1) பெயர்ச் சொற்கள் வினைக்கு முன் நின்று வினையடையாதல் உண்டு.

நன்று கூறினாய், பெரிது புகழ்ந்தாய்
நன்கு செய்தாய்

(2) ஆக, ஆய், ஆகி முதலான வினைச்சொற்கள் பெயர்ச் சொற்களோடு சேர்ந்து வினையடையாம்.

செம்மையாக, பசுமையாய், நேராகி

இவை இரு சொல் தொடர்ந்த தொடரே யாகும் எனினும் ஒரு சொல்போல் வினையடையாய் நிற்கின்றன.

(3) வினைச்சொல் கால இடைநிலை ஏற்று, செய்து, செய்பு முதலான வாய்பாடுகளாய் நின்று வினையடையாம். இவற்றை வினையெஞ்சு கிளவி அல்லது வினையெச்சம் (*verbal participle or adverbial participle*) என்பர்.[7]

வந்து சென்றான்.

**உரிச் சொல்**

தமிழிலக்கண நூல்களுள் கூறப்படும் நால்வகைச் சொல்லுள் உரிச்சொல் என்பதொன்று. அது பெயரடையாகவும் வினையடையாகவும் வரும்; அவ்வவ்விடங்களுக் கேற்ற திரிபு பெறும். உரிச்சொற்களுள் பெரும்பாலன பண்பு உணர்த்துவன. ஏனைய இசையும் குறிப்பும் உணர்த்துவன.[8]

சாலப் புகழ்ந்தான்—வினையடை
உறு புகழ்—பெயரடை

**இடைச் சொல்**

தமிழிலக்கண நூலார் வகுத்த சொல்வகை நான்கனுள் மூன்ருவது இடைச்சொல். தனித் தியங்கும் ஆற்றலின்றிப் பெயரையும் வினையையும் சார்ந்து வருதலே இச்சொல்லியல்பு.[9]

இவை முதலில் பெயர்ச் சொல்லாகவோ வினைச் சொல்லாகவோ இருந்து, பொருள்வேறுபாடு உணர்த்தப் பயின்று, நாளடைவில் தம் இயல்பான பொருள் மறைந்து இலக்கண வேறுபாடு உணர்த்தும் துணைச் சொற்களாக நின்றவை. கால இடைநிலை, சாரியைகள், விகுதிகள், வேற்றுமை உருபுகள், உவம உருபு

8. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி......
(தொல். சொல். உகூகூ)

9. இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே. (ஷை உசகூ)

கள், அசை நிலை, இசை நிறை, உம், ஏ, ஓ, என, என்று, ஆக முதலியன இடைச் சொல் ஆகும்.

என, என்று, மன்ற முதலியவை வினையடைகள். போன்ற, மற்ற முதலானவை பெயரடைகள், இவ்வாறே எல்லாவற்றையும் வேறுபடுத்தி உணரல் வேண்டும்.

## ௧௧. சொற்றொகுதி (Vocabulary)

### பாகுபாடு

தமிழ் மொழியில் இலக்கண முறைப்படி (*Morphological classification*) சொற்களைப் பெயர்ச்சொல், வினைச் சொல், இடைச் சொல், உரிச் சொல் என நான்கு வகையாகப் பிரித்தலே யன்றி, சொற்கோவையில் வேறுவகையாகவும் வகைப்படுத்தல் காணப்படுகின்றது (*Etymological classification*).

> "அவற்றுள்
> இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்று
> அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே[1]"

என்னும் தொல்காப்பியம் இதனை விளக்குவதாம்.

இயற்சொல் மக்கள் பேச்சு வழக்கிலுள்ள தமிழ்ச் சொற்கள் என்றும், திரிசொல் பேச்சு வழக்கிறந்து செய்யுளளவில் நின்ற தமிழ்ச் சொற்கள் என்றும், வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்தன வட சொல் என்றும், பிறமொழிச் சொற்கள் திசைச் சொற்கள் என்றும் வகைப்படுத்தலே ஈண்டு நோக்கமாகும்.[2]

---

1. தொல். சொல். ௩௯௭

2. This classification would group all foreign words together, Arabic, Persian, Telugu, Malayalam, Tulu. Kanarese, etc. This classification was ofcourse unscientific. When a certain word that was not found in Tamil literature or used by the Tamil-speaking people, happened to be employed by an auothor perhaps owing to his contact with, say, the Telugu people, it was set down as a Telugu word and a ticaiccol. One cannot deny that there were people at various times conversant with more than one of the Dravidian languages. Still it was not before Dr. Gundert,

" இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்குஞ் சொல்லே "[3]

என்பது தொல்காப்பியனார் இயற் சொல்லைப் பற்றிக் கொண்ட கருத்தைத் தெளிவாக்குகின்றது. ஆயினும் செந்தமிழ் நிலம் என்பதனை 'வடவேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்' என்று கொள்ளாமல், பாண்டிய நாடு என்று சிலரும் சோழ நாடு என்று வேறு சிலரும் மாறுபட்டு இடர்ப்படுவா ராயினர்.

திருவாசகத்தில் அச்சன்[4] அதெந்து[5] என வரும் சொற்கள் திசைச் சொற்களுக்கு எடுத்துக்காட்டுக ளாகும்.

திராவிட மொழிகள் பலவற்றிற்கும் தனித் தனியே நிகண்டு முதலியவை உள்ளன. தமிழ் தெலுங்கு முதலியவை ஓரின மொழிகளே ஆயினும், இவற்றிற்குப் பொதுவான ஒரு சொற்றொகுதி இன்று இருத்தல் முடியாது. பல சொற்களின் அடிச்சொற் கள் பொதுவாகவே அமைந்திருப்பினும் கால வேறு பாட்டாலும் மொழி வேறுபாட்டாலும் சொற்கள் உருவம் திரிந்துள்ளன.

---

Dr. Caldwell and other European scholars pointed it out that it was recognized that Tamil, Telugu, Kanarese and Malayalam were sister-languages and that they all belonged to the same stock that may be termed Dravidian. (Anavaratavinayakam Pillai, Sanskrit Elements in the Vocabularies of the Dravidian Languages, pp. 1, 2).

3. தொல். சொல். ௩௯௮
4. திருவாசகம், திருச்சதகம், 29.
5. திருவாசகம், அருட்பத்து, ஈற்றடி.

**சொற் பெருக்கம்**

இம் மொழிகளுள் தமிழ் மொழியே மிகப்பழங் காலம் முதற்கொண்டே பல நூறாயிரம் சொற்களை உடையதாக விளங்குகின்றது. தமிழ் மொழிக்கே சிறப்பாக உரிய சில சொற்களோடு, தெலுங்கு கன்னடம் முதலிய பிற மொழிகளில் பயிலும் சொற்களும் தமிழகராதிகளில் காணப்படுகின்றன. ஆதலின், திராவிட மூல மொழியிலிருந்த அத்துணைச் சொற்களும் ஏறக்குறையத் தமிழில் அமைந்துள்ளன எனலாம். (வீடு—தமிழ், இல்லு—தெலுங்கு, மனெ—கன்னடம்; வீடு, இல், மனை மூன்றும் தமிழில் உள்ளனவே).

இலக்கியத்தால் பரப்பும் சிறப்பும் பழமையும் உடைய மொழியும் தமிழே. ஆதலால், தோன்றுதொட்டே திராவிடச் சொற்களை அழிந்து போகாமல் இலக்கியத்துள் வாழ வைத்து இன்று வரையில் காத்து வரும் பெருமையும் தமிழுக்கே உரியதாகும். சங்க இலக்கியம் எனப்படும் பத்துப் பாட்டிலும் எட்டுத் தொகையிலும் மிகப்பழைய வடிவங்களில் திராவிடச் சொற்கள் காணப்படுகின்றன. அவை பெரும்பாலும் ஓரசை ஈரசைச் சொற்களாகவே உள்ளன. ஒவ்வோர் அடிச் சொல்லும் பெயராகவோ வினையாகவோ திணை பால் எண் இடம் காலங்கட்கேற்பப் பல வடிவு உடையனவாய்ப் பலநூறு சொற்களாய்ப் பெருகுதல் திராவிட மொழியியல்பு. பழைய தமிழ் இலக்கியத்துள் காணப்படும் எல்லாச் சொற்களும் பல வடிவு உடையனவாய்ப் பெருகும் ஆற்றல் பெற்றவை. எனவே ஈராயிரம் ஆண்டுகளா

கவே தமிழ் மொழியின் சொற் கோவை மிக்க விரிவாக இருந்தது எனலாம்.

பிற்காலத்தே மெல்ல மெல்லத் துணைவினைகள் சேர்ந்து சொற்கள் பெருகத் தொடங்கின; பிறவினை விகுதிகள் முதலியன புணர்ந்து வினைச் சொற்கள் பல அமைந்தன. அடிச்சொற்கள் சிறிது திரிந்து பொருள் வேறுபா டுணர்த்தி வேறு சொற்கள் போன்று சொற்றொகையை மிகுத்தன. அன்றியும் இவற்றோடு நூற்றுக்கு ஒன்றிரண்டாய்க் கலந்து வந்த வட மொழிச் சொற்கள் பலவாய்ப் புகுந்து நிகண்டுகளைப் பெருக்கத் தொடங்கின. தெலுங்கு, கன்னடம், மலையாளம் என்னும் மொழிகளில் இன்று நூற்றுக்கு முப்பது சொற்கள் வடசொற்க ளாகவே அமைந்துள்ளன. ஆதலின், அம்மொழிகளெல்லாம் வடமொழியினின்றே பிறந்தன என மயங்கிக் கருதற்கும் இடமுண்டாயிற்று.[6] தமிழ் மொழியில் அத்துணைக் கலப்பு இல்லை எனினும், காலப் போக்கில் கலப்புப் பெருகியே வந்தது எனலாம்.

**வட சொற் கலப்பு**

சங்க காலத்தில் நூற்றுக்கு இரண்டு என்னும் அளவில் இருந்த வட சொற்கள், பதினெண் கீழ்க்

6. The Sanskritic element in the vocabularies of the Dravidian languages is so large that it has often been urged with much show of reason by orthodox pandits that, Dravidian languages can claim no originality independent of Sanskrit, that, in other words, Sanskrit is the mother of the South Indian languages. This is only the popular view shared by illiterate people along with the orthodox pandits whose learning knows no analysis nor comparison. (Anavaratavinayakam Pillai, Sanskrit Element in the Vocabularies of the Dravidian Languages, p. 1).

கணக்கிலும் சிலப்பதிகாரம் மணிமேகலையிலும் நூற்றுக்கு நான்கு ஐந்தாகப் பெருகி யுள்ளன. ஆழ்வார் நாயன்மார் காலத்தில் நூற்றுக்குப் பத்துப் பதினைந்தளவும் மிகுந்தன. பிறகு நெடுங்காலம் அந்நிலையே நீடித்தது. மணிப்பிரவாளம் செல்வாக்குப் பெற்ற காலத்திலேயே வடமொழிக் கலப்பு அளவின்றிப் பெருகியது. ஆயினும், நூலாசிரியர்களும் உரையாசிரியர்களும் தமிழிலக்கியம் என்ற நினைவுடன் எழுதப் புகுந்த போதெல்லாம் வடசொற் கலப்பு மிகக் குறைந்தே வந்தது. இன்றும் நாட்டுப் புறங்களில் பேச்சுத் தமிழில் வடசொல் குறைவு. நகரங்களில்தான் நூற்றுக்குப் பத்து அளவில் வடசொல் கலந்து பேசப் படுகின்றது. பத்திரிகைகளில் எழுதப் படும் தமிழிலும் பல சொல் கலப்பு உண்டு. எனினும் தெலுங்கு மலையாள மொழிகளில் உள்ளது போல் கலப்பு அளவின்றி மிகுதற்கு வழியில்லை.

இவ்வாறு கலந்த வட சொற்களைத் தற்சமம் என்றும் தற்பவம் என்றும் இருவகைப் படுத்துவர் பிற்காலத்து இலக்கண நூலார். தமிழ்க்கும் வடமொழிக்கும் பொதுவெழுத்துக்களால் ஆகிய வடசொற்கள் தமிழில் புகின், அவை தற்சமம் எனப்படும் (காரணம், அமலம் முதலியவை). தமிழில் இல்லாத வடமொழிக்கே உரிய எழுத்துக்களை யுடைய வடசொற்கள் தமிழில் வந்து வழங்குவன தற்பவம் எனப் படும் (இடபம், அத்திரம், பத்தி முதலியன). தொல்காப்பியனார் கூறிய விதிப்படி வட சொற்கள் தமிழொலிக் கேற்பத் திரிந்து தமிழில் வழங்குவனவாம்.

"வட சொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே." [7]
"சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்." [8]

இங்ஙனம் புகுந்த வடசொற்கள் வேறு பல வகைப் படுவன. அவையாவன :—(i) பிராகிருதம் பேசும் வடநாட்டு மக்களுடன் நேரே பேசிப் பழகிய தமிழ் மக்கள் கடன் வாங்கின சொற்கள்; (ii) வட மொழி கற்ற வடநாட்டறிஞர்களால் தமிழ் நூல்களில் புகுந்த வடசொற்கள்; (iii) வட மொழி கற்ற தமிழறிஞர் தமிழ் நூல்களிற் புகுத்திய வட சொற்கள்; (iv) இரண்டு மொழிகளும் கலந்து புது மொழியாக—மணிப்பிரவாளம் என்னும் மொழியாக ஆதல்வேண்டுமென்னும் ஆர்வத்தால் வலிந்து புகுத்தின வட சொற்கள்.

**பிற மொழிச் சொற்கள்**

ஒரு மொழியில் பிற மொழியின் சொற்கள் புகுதற்குக் காரணம் என்ன? அவ் வம் மொழிக்குரிய மக்கள் கூட்டுறவே ஆகும். மக்கள் கலப்பு எங்கெங்கு எவ்வெத் துறையில் காணப்படுகின்றதோ அங்கங்கு அவ்வத் துறையில் மொழிக் கலப்பும் காணப்படும்.[9]

7. தொல். சொல். ௪0௧
8. தொல். சொல். ௪0௨
9. Loan-words have been called the milestones of philology, because in a great many instances they permit us to fix approximately the dates of linguistic changes. But they might with just as much right be termed some of the milestones of general history, because they show us the course of civilisation and the wanderings of inventions and institutions, and in many cases give us valuable information as to the inner life of nations when dry annals tell us nothing but the dates of the deaths of kings and bishops. (Jespersen, Growth and Structure of the English Language, p. 29).

வாணிகம் காரணமாகக் கலந்த மக்கள் பேசும் மொழி களில் வாணிகத் தொடர்பான பொருட் பெயர், அள வுப் பெயர் முதலியன பிற மொழிச் சொற்களாய்க் கலக்கும். அவ்வாறே அரசியல் கலப்பால் அரசியல் சொற்களும், சமயத் துறையில் நேரும் கலப்பால் சமய நூற் சொற்களும் கலத்தல் இயல்பு. தமிழில் கலந்த வட சொற்களில் பெரும்பாலன சமய நூற் சொற்களே ஆகும். தமிழ் மக்கள் பிற நாட்டு மக்க ளுடனும் பல வேறு துறைகளில் பழகிய காரணத் தால், தமிழில் பிறமொழிச் சொற்களும் கலந்துள்ளன.

எடுத்துக்காட்டாக, முகம்மதியர் ஆட்சிக் காரணத்தாலும் ஆங்கிலேய ஆட்சிக் காரணத்தாலும் தமிழில் புகுந்த சொற்கள் பல. சலாம், சபாஷ் முதலிய சில சொற்கள் இலக்கியத்திலும் (திருப்புகழிலும் குமர குருபரர் பாட்டிலும்) புகுந்தன.

சன்னல், சாவி, கிராம்பு, அலமாரி, பாதிரி முதலியன **போர்த்துக் கீசியச்** சொற்கள்.

ஜமீன், சிபாரிசு, சிப்பந்தி, சிபாய், சுமார், பக்கிரி, மேஜை முதலியன] **பாரசீகச்** சொற்கள்.

ஆசாமி, இலாகா, கஜானா, நகல், நாசூக், மாமூல், முன்சீப், வசூல் முதலியன **அரேபியச்** சொற்கள்.

அசல், அந்தஸ்து, அமீன், உஷார், கிச்சடி, குமஸ்தா, குல்லா, சமக்காளம், ஜோடு, தபால், தர்பார், பஞ்சாயத்து, பங்களா, மாகாணம், தொப்பி, மாகூல், மசாலை முதலியன **இந்துஸ்தானி**.

இவை யெல்லாம் பிற மொழியிலிருந்து தமிழில் வந்து வழங்கும் சொற்கள். மொழிகளின் கலப்பால்

இவ்வாறு பிற சொற்கள் புகுதல் இயல்பே. இரு மொழி கலத்தலால் இவை போன்றவைகளே அல்லாமல் வேறு வகைச் சொற்கள் அமைதலும் உண்டு. அவ்வகைச் சொற்களில் பகுதி ஒரு மொழியினதாகவும் மற்ற உறுப்பு மற்றொரு மொழியினதாகவும் இருக்கக் காணலாம். வீட்டுக்காரன் என்னும் சொல்லில் 'கிரு' என்னும் வட சொல்லின் திரிபு ஆன் விகுதி பெற்றுக் 'காரன்' என வருதல் காண்க. பெரும்பாலும் பெயர்ச் சொற்களே பிற மொழியினின்றும் கடன் வாங்கப்படுதல் இயல்பு. வினைச் சொற்களைக் கடன் வாங்கின், இடைநிலை, விகுதி முதலியன தமிழிற்கே உரியவாக விளங்கும்.[10] சபித்தான், துதித்தான் முதலான சொற்களைக் காண்க. தனவந்தர் என்னும் சொல்லின் ஒற்றுமைப்போலியால் (*analogy*) செல்வந்தர் என்ற சொல் தவறாக அமைந்ததும் இங்குக் கருதத் தக்கதே. இவைபோல்வன கலவையினம் (*hybrids*) எனப்படும்.

இங்ஙனம் சொற் கோவையிலும் சொல்லமைப்பிலும் பிற மொழிகளால் நேரும் மாறுதல்கள் பல

---

10. There are degrees of kind as well as of extent in the process of borrowing. What is most easily taken out of the stores of one language to be added to those of another is the names and epithets of things, nouns and adjectives; verbs, much less easily; particles, hardly at all; apparatus of derivation, prefixes and suffixes, very sparingly; and apparatus of inflexion, endings of declension and conjugation, least of all. Even English is nearly unmixed in its grammar; its articulating parts, the elements that bind ideas together and show their relations that make sentences, are almost exclusively of Anglo-Saxon origin. (Whitney, The Life and Growth of Language, p. 119.)

உண்டு. அவற்ருல் ஒரு மொழிக்கு ஆக்கமும் உண்டு; கேடும் உண்டு. கருத்து வளர்ச்சி ஒன்றையே நாடுவார் மொழிக் கலப்பால் ஆக்கமே உண்டென்பர். மொழித் தூய்மை ஒன்றையே நாடுவார் கேடே உண்டென்பர். ஒரு மொழிக்குக் கருத்து வளர்ச்சியும் தூய்மையும் — இரண்டும் இன்றியமையாதன. பிற மொழிச் சொற்களை அளவின்றிப் புகுத்தல் தவறு. இயற்கைக் காரணங்களால் வந்து இயல்பாகப் புகுவனவற்றை மட்டும் கொள்ளலாம். அளவின்றிப் புகுத்திஞல், மொழியின் உருவமே மாறிப் போம். பிற மொழி என்று கருதத் தக்கவாறு ஒரு மொழியை மாற்றி விடுதல் நாகரிகமாகாது. ஆதலின் இன்றியமையாச் சொற்களை மட்டும் ஏற்றுக்கொள்ளலாம்.

பிற மொழிச் சொற்கள் அளவின்றிப் புகின், ஒரு மொழியின் உருவம் திரியுமென்று மேலே கண்டோம். உருவம் திரியுமே அன்றி மொழியின் அடிப்படை மாற்றமுருது. ஒரு மொழியின் அடிப்படை — உயிர் — சொல்லமைப்பிலும் (*morphology*) தொடரமைப்பிலும் (*syntax*) உள்ளதே யன்றிச் சொற் கோவையில் இல்லை. சொற்கோவை ஒரு மொழியின் உடல் எனலாம். சொல்தொடர் அமைப்பே அதன் உயிர். ஒருவன் ஆடை மாற்றுதல் போல், ஒரு மொழி தன் சொற்களை மாற்றிக்கொண் டிருக்கலாம்.[11] ஆயினும்

11. நடு அமெரிக்காவில் ஒரு கூட்டத்தார் பேசும் சொற்களை ஆராய்ந்து குறித்துக் கொண்ட அறிஞர் பத்து ஆண்டுகள் கழித்துச் சென்றபோது அதே கூட்டத்தாரின் சொற்கள் உருவம் திரிந்து வேறு மொழிபோல் மாறியிருக்கக் கண்டாராம். (**Max Muller, The Science of Language, p. 59**). நாகரிகம் குறைந்த மக்கள் பேசும் மொழிகள் அடிக்கடி மாறுதற்குக் காரணம் சொற் கோவையின் திரிபே யாகும்; சொல்லமைப்பும் தொடரமைப்பும் திரியும் திரிபன்று.

அதன் அடிப்படை மாறுதல் அரிது. வட நாட்டில் வழங்கும் இந்துஸ்தானி மொழியில் சமஸ்கிருதச் சொற்களும் பாரசீகச் சொற்களுமே காணப்படினும், அதன் அமைப்பு இந்திய நாட்டு மொழியமைப்பே என்று வெண்ட்ரீஸ் (*Vendryes*) முதலான மொழி நூலார் கருதுவர். மலையாளம் இன்றுள்ளவாறு வட சொற்களையே மிகுத்து மிகுதியாக ஏற்று மாறினும், திராவிட அமைப்பே உடையதாக விளங்குதல் இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.

**வடமொழியில் திராவிடச் சொற்கள்.**

தமிழ்ச் சொற்களாக உள்ள சில சொற்களையும் வடசொற்கள் எனக் கூறுவதில் இந் நாட்டறிஞர்க்குப் பெரியதோர் ஆர்வம் இருந்து வந்தது. ஆயினும், அவர்களிடையே சிலர் அவ்வப்போது அவற்றைத் தமிழ்ச் சொற்கள் என்றே உறுதிப்படுத்தி வந்துள்ளனர். எடுத்துக்காட்டாகக் கூறத்தக்கவர் நச்சினார்க்கினியர். அவர், உலகம், காலம் என்னும் சொற்களைப் பிறர் வடசொல்லெனக் கூறினும், தொல்காப்பியனார் கூறியிருத்தலின் அவை தமிழ்ச் சொற்களே என விளக்கினார்.[12]

சென்ற நூற்றாண்டில் முதன் முதலாக டாக்டர் குண்டர்ட் என்பவர் "வட மொழியில் திராவிடக் கூறுகள்" (*Dravidian Elements in Sanskrit*) என்ற ஆராய்ச்சிக் கட்டுரையை கி. பி. 1869-ல் ஜெர்மன் கீழ்நாட்டுக் கலைக்கழகத்தின் பத்திரிகையில் (*The Journal of the German Oriental Society*) வெளியிட்

12. தொல். சொல். ௫ள

டார். பின்னர், டாக்டர் கிட்டல் கி. பி. 1872-ல் "வடமொழி அகராதிகளில் திராவிடச் சொற்கள்" என்ற கட்டுரை வரைந்தார். அவர் தாம் எழுதிய கன்னட அகராதியில் வடமொழி கடன் வாங்கின சொற்கள் என நானூற்றிருபது சொற்களை எடுத்து வெளியிட்டார்.[13] அவருக்குப் பின்னர், அவ்வாராய்ச்சியில் ஈடுபட்டவர், ஒப்பிலக்கணம் எழுதிய டாக்டர் கால்டுவெலே ஆவார்.[14]

கால்டுவெல் கருத்துப்படி, ஆங்கில மொழியில் எவ்வளவு பிரிட்டிஷ் சொற்கள் உள்ளனவோ, அவ்வளவு திராவிடச் சொற்கள் வடமொழியில் உள்ளன. ஆனால், திராவிட மொழிகட்கும் வடமொழிக்கும் பொதுவாகத் தோன்றும் எச்சொல்லையும் வடமொழிக்கே உரியது எனவும், பிறமொழிகள் கடன் வாங்கின எனவும் கருதுவது மரபாகி விட்டது. வட சொற்கள் பல திராவிட மொழிகளில் கலந்து பயின்றுள்ளன என்பது உண்மையே. அவற்றைத் தமிழ்ச் சொற்கள் என்று தமிழிலக்கண நூலாரோ நிகண்டு நூலாரோ கூறுவதில்லை; தெலுங்கு மொழியினரும் பிறரும் அவ்வாறு கூறுவது மில்லை. திராவிட மொழியினர் அவற்றை வடசொற்கள் என்றே வகுத்துத் தற்சமம் தற்பவம் என்ற பாகுபாடும் செய்து விளக்குவர். சில சொற்கள் வட மொழிக்கு உரியனவா

13. கிரையர்சனும் திராவிட மொழிச் சொற்கள் பல வட மொழியில் புகுந்துள்ளன என்பர். (Grierson, Linguistic, Survey, Vol. IV. pp, 278, 279.)

14. Caldwell, A Comparative Grammar of the Dravidian Languages, pp. 565, 567,

தென்மொழிக்கு உரியனவா என்பதில் கருத்து வேறுபாடும் உண்டு. எனினும், வட மொழியிலிருந்து கடன் வாங்கின சொற்களை வட சொற்கள் என்றே இலக்கணம் வகுத்துக் கடன் வாங்கின உண்மையை உடன்பட்டுரைக்கும் வழக்கம் திராவிட மொழியினரிடம் காணப்படுகின்றது. இவ்வழக்கம் வடநூலாரிடம் இல்லை. எச் சொல்லையும் வட மொழி இலக்கிய இலக்கணங்களில் காணப்படுகின்ற ஒரு காரணமே கொண்டு வட மொழிக்கே உரியதென வற்புறுத்துதலே அவர்கள் கொள்கை. அக்கொள்கை பொருந்தாது. அதற்கு மாறாக, திராவிட மொழிகளிட மிருந்து வடமொழி கடன் பெற்ற சொற்கள் பல உண்டு;[15] இக்கொள்கையை வலியுறுத்தக் கால்டுவெல் கூறும் காரணங்கள் வருமாறு:—

(1) வடமொழியில் ஒரு சொல் பகுதியுமின்றி, உடன் பிறந்த இனச் சொற்களு மின்றித் தனித்துக் காணப்படுவதாயின், அதே சொல் திராவிட மொழிகளில் பல வடிவங்களாகவும் இனச் சொற்களோடு கூடியதாகவும் தெளிந்த பகுதியுடையதாகவும் காணப்படின், அது வடமொழி கடன் வாங்கின சொல்லென்றே துணிதல் வேண்டும்.

(2) ஒரு சொல் வட மொழியில் அதே பொருளுணர்த்தும் பல சொற்களுக்கிடையே தானும் ஒன்றாய்க்

15. ஆரியர் இந்தியாவில் புகுவதன் முன்பே இரான் நாட்டில் திராவிடர்களைக் கண்ட காலத்திலேயே அவர்களுடன் பழகலாயினர். ஆதலின், ஆரிய மொழிகளில் திராவிடக் கூறுகள் மிகப் பழங்காலத்திலேயே புகுந்துள்ளன என்பர் (K. Ramakrishnayya, Studies in Dravidian Philology, p. 24.)

கிடக்க, திராவிட மொழிகளில் அப்பொருள் உணர்த்த வேறு சொல் இன்றித் தான் ஒன்றேயாய்க் காணப் படின், அதுவும் திராவிட மொழிக்குரிய சொல் லென்றே துணியத்தகும்.

(3) ஒரு சொல் திராவிட மொழிகளில் ஒவ் வொன்றிலும் காணப்பட்டு, இந்தோ-ஐரோப்பிய மொழிகளில் வட மொழி தவிர மற்ற மொழிகளில் இல்லாததாயின், அது வடமொழிக்குரிய சொல் லென்று கூறல் பொருந்தாது.

(4) ஒரு சொல்லின் பகுதிபற்றி வட மொழி யாளர் கூறும் பொருளும் இயல்பும் பொருந்தாமலும் வேடிக்கையாகவும் இருக்க, அதன் பிறப்பும் ஏனைச் சொற்களுடன் உள்ள தொடர்பும் விளக்கும் வகையில் தெளிந்த அடிச்சொல் திராவிட மொழிகளில் காணப் படின், அதுவும் வடமொழிக் குரிய தென்று கொள்ளு தல் கூடாது.

(5) திராவிட மொழிகளில் ஒரு சொல் உணர்த் தும் பொருள் நேரிதாகவும் ஆகுபெய ரல்லாததாகவும் அணியில்லாததாகவும் நிற்க, வடமொழியில் அச் சொல் உருவகமாகவும் நேர்பொருளில்லாததாகவும் நின்றால், அதுவும் திராவிடச் சொல்லே எனக் கொள்ளல் வேண்டும்

(6) வடமொழியை மிகச் சிறப்பாகப் போற்றும் தமிழறிஞரும் தெலுங்கறிஞருமே ஒரு சொல்லைத் தமி ழென்றோ தெலுங்கென்றோ குறிப்பராயின், அதனை யும் திராவிடச் சொல்லென்றே கொள்ளல் வேண்டும் என்பர்.

இக்காரணங்களுள் ஒன்றோ பலவோ இருப்பின், எச்சொல்லாயினும் திராவிட மொழிகளிட மிருந்து வடமொழியிற் கலந்த சொல்லென்று துணிதல் தகும்.

**எடுத்துக்காட்டான சொற்கள்:**

**அடவி:** பொருள் 'காடு' என்பது. வடநூலார் 'அட்' என்பது பகுதி என்றும், அதன் பொருள் 'திரி' என்பது என்றும், மக்களும் விலங்குகளும் திரிதற் குரியதாகலின், அது காட்டை உணர்த்திற்று என்றும் கூறுவர். திராவிடமொழிகளில் 'அடு' என்னும் பகுதி நெருங்கு, சேர் என்னும் பொருள் தந்து அடர், அடர்த்தி முதலான சொற்களில் உள்ள பொருளோடு இயைந்து, மரங்கள் அடர்ந்த காட்டை 'அடவி' என்று உணர்த்தல் பொருந்துகின்றது. 'வி' என்னும் விகுதியும் திராவிட மொழிக்கு இயல்பானது என்பர் கால்டுவெல்.

**அணி, ஆணி**– இச்சொற்கள் வடமொழியில் வண்டியின் அச்சாணியைக் குறிக்கும். வடமொழி யறிஞர்கள் அண் என்பதனைப் பகுதி என்பர். அப்பகு திக்கு ஒலித்தல் என்பது பொருளாகும். திராவிட மொழிகளில் அண் என்பது, சேர், தொடு, கட்டு, அருகே, மேல், அணிந்துகொள் (அணை, அணி, அணுகு, அணவு) என்னும் பொருளில் வழங்குகின் றது. எனவே ஆணியைத் திராவிடச் சொல்லாகக் கொள்வர் கால்டுவெல்.

**கடு, கடுகு:**– வடமொழியில் காரத்தையும் கொடு மையையும் குறிப்பனவாம். அங்குக் 'கட்' என்னும் பகுதி 'போ' என்னும் பொருளது. தமிழில் கடு என் பது மிகுதி முதலான பலபொருள் உடையது. வட

மொழி அறிஞர் சிலர் 'கிரிட்' பகுதி என்றும் 'வெட்டு' என்பது பொருள் என்றும் கருதுவர். எனினும் அதுவும் பொருந்தாததே. திராவிடமொழிகளில் 'கடு' என்னும் பகுதியிலிருந்து பிறந்த சொற்கள் மிகப்பலவாகவும் நேரிய பொருளுடையன வாகவும் இருத்தலாலும், வடமொழியில் இதற்கு இனச்சொல் இன்மையாலும் இதனைத் திராவிடச் சொல்லென்றே கொள்ளலாம். (கடுகு, கடி, கடுகடுத்தல், கடம், கடறு என்னும் தமிழ்ச் சொற்களையும் நோக்குக).

**குடி:**— வடமொழியில் வீடு என்னும் பொருள் தருகின்றது. குடிர, குடீர, குடேர, குடும்ப என்பவை இனச் சொற்கள். 'குட்' என்பது கோணியிருத்தல் என்னும் பொருள் தரும் பகுதியாம். இப்பகுதியிலிருந்தே குடம் என்னும் வடசொல்லும் பிறந்ததாம். தமிழில் குடி என்பது ஒன்றாய்வாழ்தல், வீட்டில் வாழ்தல், ஒன்றாய் வாழும் மக்கள் என்னும் பொருள் தருகின்றது. கூடு என்பதன் அடிச்சொல் 'குடு' என்று கொள்ளின் இப்பொருள் இயல்பாகின்றது. குடில், குடிசை என்பன அதிலிருந்து பிறந்தவை. தெலுங்கிலும் கன்னடத்திலும் 'குடி' (*gudi*) கோயிலைக் குறிக்கும். கன்னடத்தில் 'குடசலு' குடிசையைக்குறிக்கும். பின்னிஷ் முதலான சித்திய மொழிகளிலும் இப்பகுதி இப்பொருளில் உள்ளது. ஆதலின் இது திராவிடச் சொல்லேயாம்.

**நீர்:**— வடமொழியில் நீரைக் குறிப்பது. வழிகாட்டு என்னும் பொருளுடைய 'நீ' என்பது பகுதியாம். நாரா என்பது பகுதி என்றும், அது 'ஸ்நா' (குளி) என்பதிலிருந்து எழுந்த தென்றும் கூறுவாரும்

உளர். இச்சொல் வடமொழியில் அருகி வழங்குவதே யாம். ஜல என்பதே பயின்று வழங்கும் சொல். அதுவும் வடமொழிக்கு முன் வட நாட்டில் வழங்கியிருந்த பழைய மொழியிலிருந்து புகுந்தது என்பர். ஆனால் நீர் என்பது தமிழ் முதலான திராவிட மொழிகளில் பயின்று வழங்கும் சொல்லாகும். அப்பொருளில் வேறு சொல் பயின்று வழங்குதல் இல்லை. (தெலுங்கு: நீரு > நீர்லு. கோண்டு: ஏர் > நீர். பிராகுவி: தீர் > நீர். மலையாளம்: வெள்ளம் - ஆகு பெயர்; மலையாளத்தில் 'நீர்' என்பதும் உண்டு, தமிழில் பேச்சு மொழியில் தண்ணி < தண் + நீர். 'தண்' பொருளிழந்தது. நீந்து என்பதும் நீர் என்னும் சொல்லினடியாகப் பிறந்ததே.) ஆதலின் இதுவும் திராவிடச் சொல்லே.

மீன்:— வடமொழியில் மீனைக் குறிப்பது. மீ (துன்புறுத்து) என்னும் அடிச்சொல் உடையது. திராவிட மொழிகளில் மீன் என்பது அப்பொருளில் வழங்கும் ஒரே சொல்லாகவும் தமிழ் முதலான எல்லா மொழிகளிலும் வழங்குவதாகவும் உள்ளது. ராஜமஹால் மொழியிலும் மீன் உள்ளது. கோந்து மொழியில் 'மீந்த்' என உள்ளது தவிர, வடமொழியில் கூறப்படும் அடிச்சொல் பொருந்தாததாய்த் தோன்ற, திராவிட அடிச்சொல்லோ மிக்க பொருத்தமுடையதாய் விளங்குகின்றது. 'மின்' என்னும் திராவிட அடிச்சொல் முதல் நீண்டு மீன் என்றாயிற்று. இதே அடிச்சொல் 'விண்மீன்' என்ற தொடரில் நட்சத்திரத்தைக் குறித்தலும் காணத்தகும். மின்மினி என்ற உயிர்வகையும் உள்ளது. நீர்நிலைகளில் அலைகளுக்கிடையிடையே மின்னி ஒளிரும் உயிர்களை இப்பெயரால் குறித்தலினும் இயற்கையானது வேறென்ன உளது?

## கஎ. சொல்லும் பொருளும்

ஒரு சொல்லின் பொருள் தொடக்கத்தில் ஒன்றாக இருந்திருக்கும்; இன்று ஒரு வகையாக இருக்கும். ஒரு சொல்லுக்குத் தொடக்கத்தில் அமைந்த பொருளே இன்று வரை வழங்க வேண்டும் என்னும் நிலை எந்த மொழியிலும் இல்லை. 'பொன்' என்ற சொல் தொடக்கத்தில் உலோகம் என்னும் பொருளைக் குறிப்பதாக இருந்தது; இரும்பு, செம்பு, வெள்ளி முதலான எந்த உலோகத்தையும் பொன் என்று குறிக்கும் வழக்கம் இருந்தது, ஆனால் இன்று அந்தச் சொல் உலோகங்களுக்குள் உயர்ந்த ஒன்றை மட்டும் குறிக்கின்றது. 'நெய்' என்ற சொல்லும் இவ்வாறே தொடக்கத்தில் நீர்ப் பொருளுமல்லாமல் கடினப் பொருளுமல்லாமல் பசையானவற்றைக் குறிக்க வழங்கியது. இன்று அது பாலிலிருந்து எடுபடும் நெய்யை மட்டும் குறிக்க வழங்குகின்றது; ஆதலின், சொல் முதல் முதலில் உணர்த்திய பொருள் வேறாகவும் இன்று உணர்த்தும் பொருள் வேறாகவும் இருத்தல் இயல்பே.

ஒவ்வொரு சொல்லும் தொடக்கத்தில் என்ன பொருள் உணர்த்தியது என்பதை ஆராய்ந்து அறிதல் எளிதன்று; சில சொற்களின் தொடக்கப் பொருள் விளங்காமலே நிற்கும். இல், முன், வழி, தலை முதலிய சொற்களின் தொடக்கப் பொருள்கள் அறிய முடியாதனவாக உள்ளன. மற்றச் சொற்களின் தொடக்கப் பொருள்கள் இன்ன என்று ஒருவாறு அறியலாம். இதுதான் சொற்பிறப்பு ஆராய்ச்சி (*Etymology*) எனப்படுவது.

சொற்பிறப்புப் பற்றிய ஆராய்ச்சி எல்லா நாடுகளிலும் சென்ற நூற்றாண்டின் இறுதியிலும் இந் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பெருகியிருந்தது. வர வர அந்த ஆராய்ச்சியால் பயனில்லை என்பதை மொழிநூலார் உணர்ந்துவிட்டனர். இன்று இத் துறை அறிஞரால் போற்றப்படுவதில்லை. சொல் இன்று உணர்த்தும் பொருள் என்ன என்பதையும் அவ்வாறு உணர்த்தும் முறையில் ஏற்படும் மாறுதல்கள் என்ன என்பதையும் அறிஞருலகம் ஆராய்ந்து வருகின்றது. இது சொற் பொருள் ஆராய்ச்சி (*Semantics*) எனப்படுவதாகும்.

சொற்பிறப்பு ஆராய்ச்சி, பொருள்களைப் பற்றிய உண்மைகளையும் அறிவிப்பதில்லை; இன்று உணர்த்தும் பொருளையும் தெளிவாக்குவதில்லை; அது சொல்லின் இன்றைய உண்மை நிலையை விளக்குவதில்லை: சொல் தொடக்கத்தில் இவ்வாறு இருந்திருக்கக் கூடும் என்பதையே அறிவிக்கின்றது என அறிஞர் ஜெஸ்பெர்சன் குறைகூறுகின்றார்.[1] சில தலைப்புக்களைப் பற்றிக் கட்டுரை எழுதவோ சொற்பொழிவு ஆற்றவோ தொடங்குபவர், அந்தத் தலைப்புச் சொல்லைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டு மயங்குவதையும் அவர் கடிகின்றார்.[2]

---

1 What is the object of etymological science? "To determine the true signification of a word," answers one of the masters of etymological research...But surely in most cases that can be achieved without the help of etymology. Jespersen, Language,p. 316.

சொல்லைப் பற்றி அறிதலை விட அஃது உணர்த்தும் பொருளைப் பற்றி அறிதலே சிறந்தது; பயனுள்ளது. அவ்வறிவின் துணை இல்லாதபோது சொற்பிறப்பு ஆராய்ச்சி (Etymology) தவறான வழியில் செலுத்தும் என அறிஞர் பிரீல் அறிவுறுத்துகின்றார்.[3] இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டவர் ஊக்கமும் இன்பமும் பெறுவாராயினும், மொழியின் உண்மைப் பயனை அடைதற்கு உதவாது என்றும், இதன்கண் ஆழ்ந்து விடின், அப்பயனை அடைதற்குத் தடையாய் முடியும் என்றும் விட்னே விளக்குகின்றார்.[4]

இவ்வாராய்ச்சி ஒரு வகைத் தந்திரமான வித்தை என்றும், உண்மையான மொழியியல் ஆராய்ச்சி இதற்கு நேர் மாறானது என்றும், இது வெளித் தோற்றத்தைக் கண்டும் பொய்யாக உணர்ந்தும் தெளிவற்ற முறையில் எண்ணியும் கூறப்படுவது என்றும் அபெல் ஹாவெலக் என்னும் அறிஞர் கடிகின்றார்.[5]

சொற்பிறப்பை ஆராய்வதால், பொருள்களும் தொழில்களும் எவ்வெவ்வாறு சொற்களால் குறிக்கப் பட்டன என்ற தொடக்க நிலையை அறியலாம். ஆயின் அவ்வாறு சொற்களைக் குறியீடுகளாக வழங்கிய முறை எவ்வளவு குறைபாடு உடையது என்பதே அதனால்

---

3. Etymology might in such a case become the most misleading of guide, were not knowledge of things added to knowledge of words.—Breal, Semantics, p. 150.

4. Whitney, Language and the Study of Language, p 132.

5. Abel Hovelacque, The Science of Language, p.13.

விளக்கமாகும். ஒரு சொல் தொடக்கத்தில் உணர்த்திய பொருளுணர்ச்சிக்கும் உணர்த்தப் பட்ட பொருளுக்கும் இயைபு என்ன? 'நாய்' என்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். அது 'நா' (நாக்கு) என்பதன் அடியாகப் பிறந்தது. நாக்குப் பெற்ற காரணத்தால் நாய் எனப் பெயர் பெற்றது எனல் வேண்டும். எனின் நாக்குப் பெற்றுள்ள மற்ற விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் அப்பெயர் வழங்கவில்லையே! ஓடி அலையும் போது நாக்கைத் தொங்கவிட்டிருத்தலின், அப்பெயர் பெற்றது எனலாம். அவ்வாறாயின், 'நாய் என்னும் சொல்லில் இந்த நிலை குறிக்கப் படவில்லை என்ற தடை உள்ளது. ஆதலின், முற்ற உணர்த்தாமை பொருந்த உணர்த்தாமை என்ற இருவகைக் குறைபாடுகள் இருக்கக் காண்கின்றோம்.[6] 'பாம்பு' என்ற சொல் "பா" என்பதன் அடியாகப் பிறந்தது என்பார். உடல் சுருங்கி யிருந்து பரத்தலை உடைய மற்றவற்றை உணர்த்தாமையும், பாம்பின் மற்றத் தன்மைகளை உணர்த்தாமையும் ஆகிய குறைபாடுகள் உள்ளன. ஆதலின், 'மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா' என்றார் தொல்காப்பியனாரும்.[7]

சொல் தொடக்கத்தில் பொருளுணர்த்திய காரணத்தை இவ்வாறே ஆராய்ந்துகொண்டு செல்பவர் உணரக் கூடிய உண்மை ஒன்றே. அஃதாவது, சொல் ஓர் அறிகுறி; அது பொருளின் இயல்பை முற்றவும் உணர்த்தாது; பொருந்தவும் உணர்த்தாது; வழக்கு என்னும் ஒன்று நோக்கியே சொல் உணர்த்தும்

6. Breal, Semantics, p.171.

7. தொல். சொல். ௩௯௪

பொருள் வரையறுக்கப் படும்; ஆகவே பொருளுணர்ச்சியை ஆராய்வோர், சொல்லின் பிறப்பை நாட வேண்டுவதில்லை; சொல் வழங்கும் வழக்கையே நாடவேண்டும் என்பதாகும்.

இதனால் சொல் தொடக்கத்தில் தன் பொருளை உணர்த்தும் ஆற்றலின்றி இருந்தது என்று கொள்ளலாகாது. பொருளை முற்றவும் பொருந்தவும் உணர்த்தவில்லை என்பதே அன்றி, பொருளைச் சிறிதளவும் உணர்த்தவில்லை என்பது கருத்தன்று. முதல் முதலில் நாயைக் கண்ட ஒருவனது மனத்தை அதன் நாக்கு மட்டுமே கவர்ந்திருக்கும். அந்த நாக்கைத் தொங்க விட்டு அலையும் நிலையே அதன் சிறப்பியல்பாக அவன் உணர்ந்து அதற்கு 'நாய்' என்று குறியிட்டிருப்பான். பாம்பைக் கண்டு குறியிட்டவன் மனத்திலும் அதன் சிறப்பியல்பாகப் பரத்தல்தன்மை பதிந்திருக்கும். ஆதலின், அந்தந்தச் சிறப்பியல்பு மட்டுமே நினைவில் கொண்டு பெயர் கொடுத்திருக்கக் கூடும். இவ்வாறு அந்தக் காரணங்களை ஒருவாறு அறிதலே சொற்பிறப்பு ஆராய்ச்சியின் பயன்.[8] அவற்றை அறிவதால், சொல்லை ஆளுந்திறனோ, மொழியின் உண்மை இயல்போ தெளிவாவதில்லை. அதுபற்றியே, இந்த ஆராய்ச்சி சிறப்புடையதன்று என்று அறிஞர் எடுத்துரைப்பாராயினர்.

அதற்கு மாறாக, சொல்லின் பிறப்பிற்கும் இன்றுள்ள பொருளுணர்ச்சிக்கும் தொடர்பு குறையக் குறைய, அச்சொல மிக்க பயனுள்ளதாக மாறுகின்றது என்பர் அறிஞர் பிரீல். சொல் வடிவு திரிதலால்,

அதன் தொடக்கப் பொருள் மறக்கப்படுகின்றது என்றும், அதனால் மொழிவளர்ச்சிக்கு உள்ள தடை நீங்கி நன்மையே விளைகின்றது என்றும் அவர் கூறுகின்றார்.[9]

ஆதலின், சொற்பிறப்பு ஆராய்ச்சி (*Etymology*) மொழியியலுக்குத் துணைபுரியாது என்றும், சொற்பொருள் ஆராய்ச்சியே (*Semantics*) துணையாவது என்றும் அறியலாம். சொற்பொருளை ஆராயும் போது, சொல் உணர்த்தும் பொருள் எவ்வெவ்வாறு வேறுபட்டுச் செல்கின்றது என்று காணல் வேண்டும்.

சொற்கள் குறிக்கும் பொருளுணர்ச்சி என்றும் ஒரே நிலையாக இராமல், காலப்போக்கில் மாறுவதற்குக் காரணங்கள் என்ன? 'பொன்'னும் 'நெய்'யும் நாற்றமும் பிறசொற்களும் அன்று ஒரு பொருளும் இன்று ஒரு பொருளும் உணர்த்தக் காரணம் என்ன? பின்வரும் காரணங்களை டக்கர் என்னும் அறிஞர் தொகுத்துக் கூறுகின்றார்:—[10]

1. ஒரு சொல் உணர்த்தும் பொருள் விரிவானதாகவும் பலவற்றைத் தன்னுட் கொண்டதாகவும் இருத்தல்; அதனால் அது மெல்ல நெகிழ்ந்து பொருள் வேறுபட இடந்தரல்.

2. ஒரு சொல்லால் உணர்த்தப்படும் பொருளின் பல பண்புகளில், அல்லது, பல பகுதிகளில் ஒன்று சிறந்து விளங்குவதாக இருத்தல்; அதனால், அச்சொல் மெல்ல மெல்ல அந்தச் சிறப்புப் பண்பையோ பகுதியையோ உணர்த்தத் தொடங்கல்.

3, ஒரு சொல் உணர்த்தும் பொருளுக்கு அடுத்த நிலையில் மற்றொரு பொருளும் மறைந்திருத்தல்; அதனால் இரண்டாம் பொருளைச் சுட்டும் வகையிலோ அல்லது இரண்டு பொருளையும் தழுவும் வகையிலோ சொல் இடந்தரல்.

4. ஒரு பொருளை வற்புறுத்திக் கூறும் பொருட்டாவது தெளிவுறுத்திக் கூறும் பொருட்டாவது உருவகப்படுத்தி அதற்கேற்ற சொல்லை ஆளுதல்; அதனால் உருவகச் சொல்லின் பொருள் திரிதல்.

5, உணர்ச்சி மிகுதியாகக் கூறும்போது ஒரு சொல்லின் பொருளை வற்புறுத்தல்; அதனால் உண்மைப் பொருள் மறைந்து அதனினும் விரிவான அல்லது குறுகிய மற்றொரு பொருள் உணர்த்தப்படல்.

6. எள்ளல் முதலிய குறிப்புக்கள் காரணமாகவோ, இடக்கரடக்கல் மங்கலம் முதலிய வழக்குக் காரணமாகவோ ஒரு சொல்லின் இடத்தில் வேறு சொல் புகுதல்; அதனால் அச்சொல் தன் பொருளிழந்து மாறுதல்.

7. அறியாமை காரணமாகவோ தெளியாமை காரணமாகவோ ஒரு சொல்லைத் தவறான பொருளில் வழங்குதல்; அதனால் அச்சொல் தன் உண்மைப் பொருளை உணர்த்தத் தவறல்.

இவற்றோடு சேர்த்துத் தொகுக்கத் தக்க காரணம் வேறு ஒன்று உள்ளது. அஃதாவது:—

8. மக்களின் வாழ்க்கையில் புதியன புகுதலால் மாறுதல் ஏற்பட ஏற்பட, புதிய கருத்துக்கள் புகப்

புக, புதிய கருவிகள் பரவப்பரவ, அவற்றினைக் குறிக்கப் புதிய சொற்கள் அம்மொழியிலேயே ஏற்படுதல்; அதனால், பழைய சொல்லுலகத்தில் மாறுதல் ஏற்படல்.[11]

இவ்வாறு புதியனவாக அமைந்த சொற்கள் பிறமொழிச் சொற்களாயின், பழஞ் சொற்கள் மாறுதலடையாமல் நிற்கும். சைகில், மோட்டார் முதலான பிறமொழிச் சொற்களால் தமிழ்ச் சொற்கள் மாறாமை காண்க. ஆயின், புதிய பொருள்களுக்குத் தமிழிலேயே பெயரிடும்போது, மாறுதல் ஏற்படுகின்றது. 'மிளகு' என்பது பழைய பொருளைக் குறிக்க, 'மிளகாய்' என்பது வேறொரு புதிய பொருளைக் குறிக்கலாயிற்று. 'புகையிலை' 'புகைவண்டி' 'மண்ணெண்ணெய்' முதலான சொற்களும் இவ்வாறு புதியனவாய் அமைந்தனவே ஆகும்.

சொல் பொருளுணர்த்தும் முறையை (*Semantics*) ஆராய்வதால் விளங்கும் உண்மைகள் பல. அவை உலகிலுள்ள எல்லா மொழிகளுக்கும் பொதுவாக விளங்குகின்றன. பொருளுணரும் மக்கள் மனம் பொதுத்தன்மை பெற்றிருத்தலே இவ்வுண்மைகள் பொதுவாக இருத்தற்குக் காரணமாகும்.[12]

---

11. Whitney, Language and Study of Language, p. 121.

12. To pass now from the outer form of words to their inner meaning, there is again so much that it is common to all mankind in mental basis, in psychological structure, that we cannot be surprised to find a number of correspondencies between languages widely apart...There are universal laws of thought which are reflected in the laws of change of meaning (Semantic laws) even if the Science of Meaning

1. ஒரு சொல்லுக்கு ஒரு பொருள்

பேச்சுமொழியில் ஒரு சொல் ஒரு பொருளே உணர்த்தும். இருபொருளுணர்த்திவரின் அவற்றுள் ஒன்று நிற்க, மற்றொன்று அழியும்; இன்றேல் அச் சொல் திரிபுற்று, அல்லது, அடையடுத்து இரண்டாம் பொருளை உணர்த்தும்.

கவலை ' என்ற சொல் இரண்டாகப் பிரியும் வழியிடத்தையும் மனக்கவலையையும் உணர்த்தி வந்தது. இன்று, மனக்கவலையை மட்டும் உணர்த்துகின்றது. மற்றொரு பொருள் அழிந்தது.

'போர்' என்ற சொல் வைக்கோல்போரையும் படைவகுத்து நிகழ்த்தும் போரையும் உணர்த்துவது. பண்டைக்காலத்தில் முன்னதை உணர்த்துவதின் 'போர்வு' என்று சிறிது வேறுபட்ட சொல் வழங்கியது. இக்காலத்தில், 'வைக்கோல்' என்ற அடையடுத்து அப்பொருள் உணர்த்தப்படுகின்றது.

2. ஒரு பொருளுக்கு ஒரு சொல்

ஒரு பொருளை உணர்த்த ஒரு சொல்லே வழங்கும். இருசொல் வழங்கின், ஒன்று நிற்க, மற்றொன்று அழியும்; அல்லது வேறு பொருளுணர்த்தத் தொடங்கும்.[13]

---

has not yet made much advance towards discovering them. —Jespersen, Mankind, Nation and Individual, p. 212.

13. Feeling strongly that language is intended to serve for the exchange of ideas, for the expression of feelings, for the discussion of interests, it refuses to believe in a synonymy that would be both useless and dangerous. Now as the people is at once the depository and author of language, the fact that it denies the existence of synonyms actually

'வீடு,' 'இல்,' 'மனை' என்பன ஒரு பொருளே உணர்த்தும் சொற்களாகும். இன்று பேச்சு வழக்கில் 'வீடு' என்ற சொல்லே அப்பொருள் உணர்த்துவதாக நின்றுள்ளது. 'இல்' என்பது இலக்கிய வழக்கோடு நின்றுவிட்டது; பேச்சுவழக்கில் அஃது அழிந்தது எனலாம். 'மனை' என்பதோ பேச்சு வழக்கிலும் வாழ்கின்றது ; ஆனால் 'வீடு கட்டுதற்குரிய நிலப் பகுதி' என்று சிறிது வேறுபட்ட பொருளைக் குறிக்கின்றது.

'குணக்கு', 'கிழக்கு' என்னும் இருசொல்லும் ஒரே பொருளை உணர்த்துவன. அவற்றுள் 'குணக்கு' இன்று பேச்சு வழக்கில் இடமிழந்துள்ளது. அவ்வாறே 'குடக்கு', மேற்கு' என்பவற்றில் 'குடக்கு' மறைந்தது. ஆயின், ஒவ்வொரு சொல்லாகவே வழங்கிய 'வடக்கு' 'தெற்கு' என்பன இன்றும் வாழ்கின்றன.

நடை, நடத்தல், நடக்கை, நடப்பு என்பன முதலில் ஒரு பொருளனவாக வழங்கியிருக்கக் கூடும். இன்று இவை ஒவ்வொன்றும் வெவ்வேறு பொருளில் வழங்குகின்றன. அதனால் தான் எல்லாம் வாழ்கின்றன.

**3. உயர்பொருட் பேறு**:—முன்பு இழிந்த பொருளைக் குறித்து வந்த சொல் இப்போது உயர்ந்த பொருளில் வழங்குதல். [14]

---

brings about their speedy disappearance. Either they are differentiated, or else one of the two terms ceases to exist. Breal, Semantics, p. 28.

14. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார், தமிழ்மொழி வரலாறு, ப. எச.

'களிப்பு', 'மகிழ்ச்சி' என்பன முன்பு கள்ளுண்டு மயங்குதலைக் குறித்தன. ஆயின் இப்போது மனம் உவந்திருத்தல் என்னும் உயர்ந்த பொருளைத் தருகின்றன.

4. **இழிபொருட் பேறு:**—முன்பு உயர்ந்த பொருளில் வழங்கிவந்த சொல் இப்போது இழிந்த பொருளைக் குறித்தல்.[15]

'நாற்றம்' என்ற சொல் முன்பு பொதுவாக மணம் என்னும் பொருளில் வழங்கியிருக்க, இன்று கெட்டதையே குறித்திடுதல் காண்க.

5. **சிறப்புப் பொருட் பேறு:**—முன்பு பலவற்றிற்கும் பொதுவாக இருந்த ஒரு சொல் இப்போது அவற்றுள் ஒன்றையே உணர்த்தல்.

'பொன்' என்பது முன்பு தங்கம், செம்பு, வெள்ளி, இரும்பு முதலான உலோகங்கள் பலவற்றிற்கும் பொதுவான பெயர்; இப்போது அஃது ஒருவகை உலோகத்தையே உணர்த்துகின்றது.

'நெய்' என்பதும் அவ்வாறே முன்பு பாலின் நெய், எள்ளின் நெய் முதலிய பலவற்றிற்கும் பொதுவாக இருந்தது; இப்போது அது பாலின் நெய் ஒன்றையே குறிக்கின்றது.

'பழையது' என்னும் சொல் பழமையுற்ற பலவற்றையும் குறிப்பது, இன்று தனியே நின்று பழஞ்சோற்றைக் குறித்தல் காண்க.

15. வி. கோ. சூரியநாராயண சாத்திரியார், தமிழ்மொழி வரலாறு, ப. எசு.

**6. பொதுப் பொருட் பேறு:**—முன்பு ஒருவகைப் பொருளுக்கே உரியதாக வழங்கிய பெயர், பிறகு அதனோடு ஒத்த பலவற்றிற்கும் பொதுப் பெயராக வழங்குதல்.

'மரக்கால்' என்பது முன்பு மரத்தால் இயன்ற முகத்தலளவைக் கருவியையே உணர்த்தி வந்தது; இப்போது இரும்பு, பித்தளை முதலியவற்றாலாகிய கருவிகளையும் குறிக்கின்றது.

'குட்டி' என்பது மூங்கா, வெருகு, எலி, அணில், நாய், பன்றி, புலி, முயல், நரி, குரங்கு என்பவற்றின் இளமைப் பெயராக வழங்கி வந்தது.[16] இன்று விலங்குகள் பலவற்றிற்கும் இளமைப் பெயராக அது வழங்கிவருகின்றது.

'மரம்' என்ற சொல் முன்பு அகக்காழ் உடையவற்றிற்கே பெயராக வழங்கியது.[17] இன்று தென்னை பனை முதலிய புறக்காழ் உடையவற்றையும், குறித்துப் பொதுப் பெயராக வழங்குகின்றது.

**7. நுண் பொருட் பேறு:**—சொல் முதலில் பருப் பொருளை உணர்த்தி வந்து பிறகு அது போன்ற நுண் பொருளை உணர்த்துதலாகும்.

'சூழ்ச்சி' என்பது முதலில் சூழ்ந்து நிற்றலையும் சுழலுதலையும் உணர்த்தி, இப்போது, ஒரு கருத்திற்குச் சார்பான பல எண்ணங்கள் எழுதலை உணர்த்துகின்றது; 'பலவாறு நுட்பமாக எண்ணுதல்' என்ற பொருளைத் தருகின்றது.

---

16. தொல். பொருள். ௫௪௯, ௫௫௩, ௫௫௬.
17. ஷை. ௬௩௧.

'படு' 'உண்' என்னும் வினைகள் செயப்பாட்டு வினைப் பொருளில் அமையுமிடத்து (காணப் பட்டான், அடியுண்டான்) அவ்வாறு நுண்பொருள் தருதல் காண்க. வேற்றுமையுருபுகளும் மற்ற இடைச் சொற்கள் பலவும் இவ்வாறு அமைந்தனவே.

'செம்மை' என்னும் சொல் நிறத்தையும் வடிவத் தையும் உணர்த்தி, நடுவுநிலைமை என்னும் மனப் பண்பை உணர்த்தலும் காண்க.

'என் கருத்தைத் தழுவிப் பேசினான்' என்பதில் 'தழுவல்' என்பது, மெய்யுற அணைத்தலை உணர்த் தாது, நுண் பொருளை உணர்த்தலும் காண்க.

8. **பருப் பொருட் பேறு**:—முதலில் நுண்மையான பொருளை உணர்த்திவந்த சொல் பிறகு அது போன்ற பருப்பொருளை உணர்த்தல்.

'விருந்து' என்பது புதுமை என்னும் பண்பை உணர்த்தி வந்து, வீட்டிற்குப் புதியராக வந்தவரை உணர்த்தல் காண்க.

9. **மங்கல வழக்கு**:—மங்கலம் அல்லாதவற்றைக் கூற நேர்ந்த போது, மங்கலமான வேறுசொற்களால் மறைத்துக் கூறல்; அதனால், அச்சொற்களின் பொருள் வேறுபடுதல்.

'துஞ்சினார்' 'மறைந்தார்' என்ற சொற்கள் இவ் வாறே 'செத்தார்' என்றபொருளுணர்த்துவன ஆயின.

10. **இடக்கரடக்கல்**:—நாகரிக மல்லாத சொற் களை மறைத்து அவற்றின் பொருளை நாகரிகமான பிற

சொற்களால் புலப்படுத்தல்; அதனால் அச்சொற்களின் பொருள் வேறுபடுதல்.[18]

'வாய்பூசல்' 'கால் கழுவல்' முதலாயின பல இவ்வாறு வழங்குவன.

**11. குழூஉக்குறி:**—நாகரிக மற்ற கூட்டத்தார், வியாபாரிகள் முதலானோர் தங்களுக்குள் ஒரு சொல்லை மறைத்து அதன் பொருளை வேறொரு சொல்லால் உணர்த்துதல். பிறர் அறியின் தீங்கு அல்லது தடை நேரும் என்ற அச்சமும் தந்திரமுமே இதற்குக் காரணமாகும்.[19]

குடிகாரர் 'கள்' முதலியவற்றைத் 'தண்ணீர்' என்ற சொல்லால் குறித்தல் இதன்பாற்படும்.

---

18. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல். (தொல். சொல். ௪௪௨.)

The so-called pejorative tendency is the result of a very human disposition which prompts us to veil, to attenuate, to disguise ideas which are disagreeable, wounding or repulsive. There is nothing in it all save a feeling of consideration, a precaution against unnecessary shocks, a precaution which whether sincere or feigned is not long efficient, since the hearer seeks out the thing behind the word, and at once identifies them.—Breal, Semantics, pp. 100, 101.

19. In both expressions one may assuredly see an outcome of the fear of the naked word, an after-echo of the view held by savage tribes that a name is something with a real existence outside humanity, something possessing power so that the way to escape evil consequences is not to use the plain word for anything bad or dangerous.—Jespersen, Mankind, Nation and Individual, p. 169.

12. **ஆகு பெயர்**:—ஒரு பொருளின் பெயர் அதனோடு தொடர்புடைய மற்றொரு பொருளைக் குறித்தல்.[20]

'வெற்றிலை' என்பது சினைக்குப் பெயர்; 'வெற்றிலை நட்டான்' என்பதில் முதலுக்குப் பெயராகின்றது.

'உலகம்' என்பது இடத்தின் பெயர்; 'உலகம் பொல்லாதது' என்பதில் உலகமக்களை உணர்த்துகின்றது.

இவ்வாறே காலம், பண்பு, தொழில் முதலிய பலவற்றின் பெயர்கள் அவற்றோடு தொடர்பு உடையவற்றை உணர்த்துதல் உண்டு.

13. **உருவகம்**: ஒரு பொருளை அதற்கு உரிய சொல்லால் உணர்த்தாமல், தெளிவுறுத்த விரும்பி உருவகப் படுத்தி அந்த உருவகச் சொல்லால் உணர்த்தல்.

'பழுத்த கிழவர்' என்பதில் பழுத்தல் என்பது அவ்வாறு பொருளுணர்த்தல் காண்க.

---

20. முதலிற் கூறும் சினைஅறி கிளவியும்
சினையிற் கூறும் முதல்அறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனையமர பினவே ஆகுபெயர்க் கிளவி.

(தொல், சொல், ககச).

## கஅ. சொல்லின் திரிபு

முன்னோர் வழங்கியவாறே நாம் இன்று சொற்களை வழங்குவதில்லை. சொற்கள் பலவகை மாறுதலை அடைந்தே இன்று வழங்கும் நிலைக்கு வந்திருக்கின்றன. இக்காலத்திலேயே கற்றவர் வழங்கும் சொற்களுக்கும் கல்லாதவர் வழங்கும் சொற்களுக்கும் வேறுபாடு உள்ளது. 'இருக்கின்றது' என்ற சொல் 'இருக்குது' என்றும் 'கீது' என்றும் 'இருக்கு' என்றும் பல்வேறு வகையாக வழங்கப்படுகின்றது. கற்றவர் ஒருவர் அதேசொல்லை வெவ்வேறிடத்தில் வெவ்வேறு வகையாக வழங்குகின்றார். மேடையில் நின்று சொற்பொழிவாற்றும் போது 'இருக்கின்றது' அல்லது 'இருக்கிறது' என்று ஒலிக்கும் அவரே, நண்பர்களோடு அளவளாவும் போது 'இருக்குது' என்று வழங்கி, தம் குழந்தையோடு கொஞ்சும் போது 'இக்குது' என்கின்றார்.

'சிதல்' என்னும் பழஞ்சொல் பிற்காலத்தில் 'செல்' ஆயிற்று. பண்டைக்காலத்தில் யாறு, யாடு, யானை என்று வழங்கிய சொற்கள் பலவும் இன்று ஆறு, ஆடு, ஆனை என வழங்கி வருகின்றன. அவ்வாறு வழங்குவனவற்றிற்கு இலக்கணமும் இடந்தரலாயிற்று. தனிச்சொற்களே அல்லாமல் சோழநாடு, மலைநாடு முதலான தொடர்களும் சோணாடு, மலாடு என வழங்குதற்கு இலக்கணம் இடம் வகுத்து, மரூஉ எனக் குறித்தது.

இவ்வாறு சொற்கள் திரியும் திரிபுகளை ஆராய்ந்தால், அவற்றின் வடிவம் வரவரக்குறுகி வருதல்

காணப்படும்.[1] இவ்வாறு குறுகிக் குறுகியே இறுதியில் ஓரசை ஈரசைச் சொற்களாக நின்றன. தமிழில் மிகப் பழங்காலச் சொற்களெனச் சங்க இலக்கியங்களில் காணப்படும் பலவும் ஓரசை ஈரசைச் சொற்களாகவே உள்ளன. சீன மொழியிலும் ஆங்கில மொழியிலும் இன்றும் இத்தகைய சிறு சொற்களே பலவாக உள்ளன. ஆயின், தமிழில் எழுத்து முறையால் பழங் காலத்திலேயே ஏற்பட்ட சொற்களைக் குறுக்கும் பழக் கத்திற்குப் பெருந்தடை ஏற்பட்டது என்று கூறலாம். இஃது பல மொழிகளுக்குப் பொருந்திய உண்மையே ஆகும்.[2] பேச்சுமொழி சொற்களைக் குறுக்குதலே கடமையாகக் கொண்டிருக்க, எழுத்துமொழி சொற் களின் வடிவம் சிதையாவாறு காத்தலே கடமையாகக் கொண்டு விளங்குகின்றது.[3] ஆயினும், இந்தக் கட்டுப் பாட்டையும் மீறியே சில சொற்கள் குறுகி அமைந்து விடுகின்றன. 'ஆச்சு' 'போச்சு' முதலான சொற்கள் இவ்வாறு தப்பித்தவறி இடம் பெறுவன எனலாம்.

ஆங்கிலம் முதலான பல மொழிகளில் ஒன்று இரண்டு மூன்று முதலான எண்ணுப்பெயர்கள் (*one*,

---

1. The general tendency of all languages is towards shorter and shorter forms.—Jespersen, Language, p. 330.

2. The Natural condition of language is diversity and change, and it is only under the artificial influences of civilisation and culture that a language becomes uniform and stationary.—A. H. Sayce, Introduction to the Science of Language, p. 200.

3. A literary dialect is naturally less subject to the inroads of decay than an unwritten one. The spelling of words reacts upon their pronunciation and preserves it from extensive alteration.—ibid. 199.

*two, three* என) ஓரசைச் சொற்களாகவே உள்ளன. ஆனால் இவை குறுகி அமைந்த வடிவங்கள் என்றே கூறல் வேண்டும். தமிழில் ஒன்று முதல் பத்து ஈறாக உள்ள எண்ணுப் பெயர்களைப் பேச்சு மொழிக்கே விட்டுவிட்டிருந்தால், அவையும் அவ்வாறு மாறி அமைந்திருத்தல் கூடும். ஆனால் எழுத்து மொழியின் ஆணை தவறாமையால்,[4] 'இரண்டு' 'ஒன்பது,' என்னும் நீண்ட சொற்கள் இன்னும் சிதையாமல் காக்கப்பட்டுள்ளன. இவை தவிர்ந்த மற்ற எட்டுப் பெயர்களும் (இறுதியில் உள்ள குற்றியலுகரத்தை ஒலித்துணை என நீக்கி ஆராயும்போது) ஓரசைச் சொற்களாகவே உள்ளன. 'இரண்டு' 'ஒன்பது' என்னும் இரண்டு நீண்ட எண்ணுப் பெயர்களும் பிற சொற்களோடு சேர்ந்து தொகையாகும்போது குறுகியே வழங்குகின்றன. 'இருவகை' 'ஈருயிர்' என்பவற்றில் 'இரு' என்றும் 'ஈர்' என்றும் குறுகிய வடிவம் காணப்படுகின்றது. 'தொண்ணூறு' முதலான தொடர்களில் 'ஒன்பது' இடம் பெறாமல் குறுகிய வடிவம் உடைய மற்றொரு சொல்லே இடம் பெற்று வாழ்கின்றது. ஆகையால், ஓரசைச் சொற்களே எவ்வாறேனும் அழியாவாழ்வு பெற முயல்கின்றன என்பது தெளிவு.

இன்று ஓரசையாக வழங்கும் சொற்கள் தொடக்கத்தில் பலவசைச் சொற்களாக நீண்டு வழங்கியிருந்திருக்க வேண்டும் என்பதும் மறுக்க முடியாத உண்மையே ஆகும்: 'ஆச்சு' எனக் (குற்றியலுகரம் ஒலித்

4. Education is an agency which arrests the progress of decay. The tendency to corruption is greatly diminished when a language comes to have a literature—Bhandarkar, Collected works, Vol. IV, p. 252.

துணையாதலின்) ஓரசையாக வழங்கும் சொல்லின் முன்னைய வடிவம் 'ஆச்சுது' எனின், அஃது 'ஆய்விட்டது' என்பதன் திரிபாகல் வேண்டும். ஆங்கிலத்தில் இன்று '*had*' என வழங்கும் ஓரசைச் சொல்லின் பழைய வடிவம் '*habaidedeima*' என ஆராய்ச்சியாளர்கள் கூறுவதும் இங்குக் கருதத் தக்கது.[5] *lord*' என்ற சொல்லும் *hlaford*' என்பதன் திரிபாம்.

இவ்வாறு சொற்கள் குறுகுதலுக்குக் காரணம் என்ன எனப் பலர் பலவாறு ஆராய்ந்து கூறியுள்ளனர். முயற்சிச்சுருக்கம் கருதியும், சோம்பலாலும் இவ்வாறு மக்கள் குறுகி ஒலிக்கின்றனர் என்பது ஒரு கொள்கை. சோம்பல் ஒன்றே காரணம் என்பது மற்றொரு கொள்கை. முயற்சிச் சுருக்கமே காரணம், சோம்பலன்று என்பது இன்னொரு கொள்கை.

சாய்ஸ் என்னும் மொழிநூலறிஞர் ஒற்றுமைப் போலி, தெளிவுறுத்தல், சோம்பல் என மூன்று காரணம் கூறுகிறார்:[6] ஆயினும், முன்னைய இரண்டனையும் சோம்பலில் அடக்கியும் விளக்குகிறார். ஒன்றுபோல் மற்றொன்றை ஒலித்தல் எளிதாக இருத்தலால் அதற்கும் சோம்பலே காரணம் என்கிறார். தெளிவுறக் கூறாவிடின், கேட்போர் மீண்டும் கேட்க, அவர்க்காக இரண்டாம் முறை தெரிவிக்கும் முயற்சி நேர்தலால், அதைத் தடுக்கவே தெளிவுறுத்தல் நேர்கின்றது; ஆதலின் அதற்கும் சோம்பலே காரணம் என்கிறார். ஒற்றுமைப் போலி, தெளிவுறுத்தல் என்ற இந்த

5. Jespersen, Progress in Language, pp. 18, 344.

6. Sayce, Introduction to the Science of Language, p. 167.

இரண்டும் மக்களுக்கும் அவர்கள் வழங்கும் மொழிக்கும் சிறப்பைத் தருவனவே அல்லாமல் குறைவுபடுத்துவன அல்ல. விலங்கு முதலியவற்றிற்கு இல்லாமல், மக்களுக்கே இயற்கையாக அமைந்த ஆற்றல் 'போலச் செய்தல்' (*Imitation*) என்பது. ஒருவரைப் பார்த்து அவரைப்போல் ஒலிக்கக் கற்பதும் ஒரு தொழில் செய்யக் கற்பதும் குழந்தையிடமும் காணப்படுவன. இந்த ஆற்றலின் அடிப்படையாகவே நாகரிகம் வளர்ந்தமைந்துள்ளது. குழந்தை முதல் கலைஞன் வரையில் எல்லோருடைய வளர்ச்சிக்கும் இதுவே காரணமாக அமைந்துள்ளது. இதைப் போலவே, தெளிவுறுத்தல் என்பதும் மக்கள் மொழியின் சிறப்பியல்பாகும். ஆதலின், இந்த இரண்டனையும் சோம்பலில் அடக்கிக் கூறல் பொருந்தாது.

சோம்பல்தான் காரணம் என்று கூறுவது பொருந்தாதென டக்கர், ஜெஸ்பெர்ஸன் முதலான மொழிநூலறிஞர் விளக்கியுள்ளனர்.[7] சோம்பல் என்பது செய்யும் வேலையில் ஊக்கமின்மை, வேலையில் இன்பமின்மை, வேலையைக் குறைத்துக்கொள்ளும் வேட்கை இவற்றின் விளைவே ஆகும். ஆனால், மக்களின் வாழ்க்கையில் சோம்பல் மிகுந்தவர்களே பேச்சு மிகுந்தவர்களாக இருக்கக் காண்கின்றோம். பேச்சு ஒரு வேலையாக எண்ணப்படுவதும் இல்லை. பேச்சில் ஊக்கமில்லை என்றும் இன்பமில்லை என்றும் உணர்வோர் மிகச்சிலர். பேச்சைக் குறைத்துக் கொள்ள விரும்புவோர் மிகச்சிலர், ஆதலின், பெரும்பான்மை

7. Tucker, Introduction to the Natural History of Languages, p. 350.

யோரால் திரிபடையும் சொற்களின் குறுக்கத்திற்கு அவர்களைக் காரணம் என்று கூறல் பொருந்தாது. கூறினும், அவர்கள் சோம்பேறிகள் என்று கருதுதல் தவறான கருத்தாகும். பேச்சில் ஊக்கமும் இன்பமும் இழந்து அதைக் குறைத்துக்கொள்ள நாடுவோர், கலைத்துறையிலோ எண்ணக் கடலிலோ ஓய்வின்றி உழைக்கும் சிறந்த அறிஞரே அல்லாமல், சோம்பேறிகள் அல்லர்.

மற்றொரு தடையும் ஆராயத்தக்கது. சோம்பலின் விளைவு தீமையே; சோம்பலால் இழத்தல் நேருமே அன்றி ஈட்டல் நேராது. ஆயின் சொற்களைக் குறுக்கி வழங்குதலால், பேசும் மக்களுக்கு யாதொரு தீமையும் விளைவதில்லை; இழத்தல் ஒன்றும் இல்லை. பேசும் முயற்சியும் குறைந்து பேசும்காலமும் சுருங்குவதால் நன்மையே விளைகின்றது எனலாம்.[8] ஆதலின் இதனைச் சோம்பலின் விளைவு என்று கூற முடியாது. சொற்களின் வடிவம் சிதைந்தது இழப்பு அன்றோ என வினவலாம். இழப்பு மிகுதியா, ஈட்டல் மிகுதியா என்று சீர்தூக்கல் வேண்டும். இழப்பு மிகுதியாயின் சோம்பல் என்று கூறுவது பொருந்தும். ஈட்டல் மிகுதியாயின் அதனைச் சிக்கனம் என்று கூறல் வேண்டுமன்றோ?[9]

8. What we call a word is really and primarily the combined action of human muscles to produce an audible effect; and we see that the shortening of a form means a diminution of effort and a saving of time in the communication of our thoughts.—Jespersen, Language, p. 331.

9. Whitney, Language and the Study of Language, p. 70.

தவிர, ஒருவர் இருவர் சோம்பலால் செய்த மாறுதல்களைப் பரந்த உலகம் கண்மூடி ஏற்றுக் கொள்ளல் இயலுமா? மொழியில் புகும் ஒவ்வொரு புதுமையும் மாறுதலும் முதலில் ஒருவரால் புகுவனவே ஆகும். ஒருவர் முதலில் பேச, அதனைக் கேட்பவர் அதனை ஏற்கலாம்; அல்லது ஏற்காமலும் விடலாம். இவ்வாறே ஒருவர் வாயிலாகப் புகுந்த மாறுதல் உலகத்தாரால் உடனே ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. மக்கள் ஆளும் அரசியலில் ஒருவர் கொள்கை மெல்ல மெல்லப் பரவி எதிர்ப்பைக் குறைத்துச் செல்வாக்கைப் பெருக்கிய பிறகே சட்டமாகின்றது அன்றோ? மொழித்துறையிலும் இவ்வாறே ஒவ்வொரு சீர்திருத்தமும் ஒருவரிடமிருந்து வெளிப்பட்டுப் பலரிடமும் பரவி நிலைக்க வேண்டுவதாயுள்ளது. ஆகவே, சீர்திருத்தம் செய்வோர்க்கும், அதனை ஏற்போர்க்கும் இடையே போராட்டமே உள்ளது என்று கூறலாம்.[10] ஆதலின், பயனற்ற புதுமையோ, நன்மையுற்ற மாறுதலோ கண்மூடி ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. சோம்பல் காரணமாகப் பிறந்த மாறுதல் ஒருநாளும் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை. அதற்கு மாறாக, சிக்கனம் என்னும் பெரும்பயன் விளைக்கும் மாறுதல்களே தடையும் எதிர்ப்பும் இன்றி ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. சொற்களைக் குறுக்கும் மொழிவழக்கு இத்தகையதே ஆகும்.

இவ்வாறு சொற்களைக் குறுக்கி ஒலிக்கும் மக்கள், வேண்டுமென்றே செய்வதும் இல்லை; அறிந்து செய்வதும் இல்லை. தங்களை அறியாமல் இயல்பாகவே

செய்கின்ற மாறுதல்கள் என்றே இவற்றைக் கருத வேண்டும்.[11] 'ஆதன் தந்தை'யை 'ஆந்தை' என்று ஒலிக்கவேண்டும் என்று எவரும் பழங்காலத்தில் எண்ணியிருக்க மாட்டார். 'வந்துவிட்டது' என்பதை வந்துடுசி, வந்துசி, வந்த்சி என்றெல்லாம் மாற்ற வேண்டும் என்று இந்தக் காலத்திலும் எவரும் எண்ணித் துணிந்து ஒலிப்பதில்லை. ஆனால் ஒலி மாறிக்கொண்டிருக்கின்றது; அதனால் சொற்களும் குறுகிக்கொண்டிருக்கின்றன. இதுதான் மொழி யின் இயல்பான மாறுதல்; பிறர் புதியதெனைப் புகுத்த லும், பழையதெனக் கழித்தலுமாகிய செயற்கை முறை இங்கு ஒன்றும் இல்லை. செயற்கைமுறையாக ஒருவர் எண்ணி மாறுதல் செய்யத் தொடங்கின், அம்மாறுதல் எதிர்க்கப்படும்; ஏற்கப்படாது. மொழி யைப் பொறுத்த வரையில் தனிமனிதன் ஆட்சி இல்லை; மக்கள் பலரும் உடன்பட்டு நடத்தும் குடி யாட்சி முறையே உள்ளது.[12]

மக்களின் வாழ்க்கைக்கு அரசு ஒரு கருவியாக இருப்பது போலவே மொழியும் ஒரு கருவியாகும். மொழியை வளர்த்துக் காப்பது அவர்களின் முதல்

11. Phonetic change is the spontaneous working out of tendencies which the individual does not acknowledge to himself, in their effects upon organs of whose structure and working he is almost or wholly ignorant.—Whitney, Language and the Study of Language, p. 51.

12. The speakers of a language thus constitute a republic, or rather, a democracy, in which authority is conferred only by general suffrage and for due cause, and is exercised under constant supervision and control.—Whitney, Language and the Study of Language, p. 38.

Jespersen, Language, p. 320.

நோக்கம் அன்று. ஆனால், மொழியை வளர்த்துக் காப்பதன் வாயிலாகத் தங்கள் வாழ்வைக் காத்துக் கொள்வதே முதல் நோக்கமாகும். ஆதலின், தங்கள் வாழ்க்கைக்கு ஏற்றவாறு மொழியை மாற்றியமைத்துக் கொள்கின்றனர்; அரிய ஒலிகளை எளிய ஒலிகளாக மாற்றியமைத்துக் கொள்கின்றனர்; வேண்டிய ஒலிகளை விடாமல் காத்து, வேண்டாத ஒலிகளைப் புறக்கணித்து விடுகின்றனர்; பலஅசைச் சொற்களுள், இன்றியமையாத அசைகளை ஒலித்து ஏனையவற்றை மறந்து விடுகின்றனர்.. இவ்வாறு செய்வதால் சொற்கள் குறுகி விடுகின்றன,

ஆதலின், இதனைக் குறைபாடு என்று கருதுதல் எவ்வாறு பொருந்தும்? டாக்டர் ஜான்ஸன் என்னும் ஆங்கில நாட்டுப் பெரும்புலவர் தாம் எழுதிய ஆங்கில அகராதியில் இதனைப் பிற்போக்கானதொரு குறை என்றே குறித்துள்ளார்.[13] ஆயின், பழைய உலகம் நல்ல உலகம் என்றும், இன்று வாழும் உலகம் பொல்லாத உலகம் என்றும் கருதும் தவறான மனப்பான்மையே இதற்குக் காரணம் என்று ஜெஸ்பெர்ஸன் கருதுகின்றார். இவ்வாறு சொற்கள் மாற இடங்கொடுத்தலாகாது என்று அறிஞர் பலர் செய்த முயற்சியே இன்று ஆங்கிலத்தில் சொற்கள் எழுதும்போது ஒருவகையாகவும் ஒலிக்கும்போது மற்றொருவகையாகவும் இருத்தற்குக் காரணமாகும்.[14] ஆங்கிலத்தைப்

---

13. Tongues, like governments, have a natural tendency to degeneration—Dr. Johnson, Preface to his Dictionary.

14. English spelling, under the guidance of the printers, has become a mere system of marks and symbols,

பேசும் மக்கள் பெரும்பாலோர்; எழுதும் மக்கள் சிறு பான்மையோர். பேசும் மக்கள் சொற்களை மாற்றி ஒலித்துப் பழகிவிட்டனர். ஆனால் எழுதும் மக்கள் அதற்கு ஏற்றவாறு எழுத்துக்களை மாற்ற மனமில்லாமல், பழைய எழுத்துக்களை விடாமல் காத்துவருகின்றனர். அதனால் எழுதப்படும் சொல்லுக்கும் ஒலிக்கப்படும் சொல்லுக்கும் வேற்றுமை பெருகிவிட்டது. இந்தத்துறையில் சீர்திருத்தம் மிக இன்றியமையாதது என்று உணர்ந்து பேரறிஞர் பெர்னார்ட் ஷா தம் செல்வத்தையே அத்தொண்டுக்காக எழுதிவைக்கும் நிலையும் நேர்ந்து விட்டது. ஆனால், இதாலிய மொழியிலோ ஜெர்மன் மொழியிலோ இவ்வாறு இல்லை; அம்மொழிகளில் எழுத்துலகம் ஒலியுலகம் என்னும் இரண்டு உலகங்களிலும் சொற்கள் ஒத்த உரிமையோடு வாழ்கின்றன; ஒன்றில் பழையவேடமும் மற்றொன்றில் புதிய கோலமும் புனைவதில்லை; இரண்டு இடத்திலும் இயற்கையாகவே வாழ்கின்றன.

ஆயின், இவ்வாறு சொல் வடிவு குறுகி மாறுவதால் அந்தச் சொல்லின் பிறப்பும் வளர்ச்சியும் அழகும் புலனாகாமல் மறைகின்றன; இது பெரிய குறை என்றே கொள்ளல் வேண்டும். எழிலுற அமைந்த சிற்பம் ஒன்று ஆற்று வெள்ளத்தில் அகப்பட்டுப் புரண்டு புரண்டு அதன் அழகிய உறுப்புக்கள் கை கால் செவி கண் முதலியன தோன்றாதவாறு ஒடிந்தும் அழிந்தும்

---

arranged upon no principle, selected with no rational purpose, each of which by a separate effort of the memory is associated with some sound or word.—Sayce, Introduction to the Science of Language, p. 328.

தேய்ந்து காணப்படின், அதனை எவ்வாறு போற்ற முடியும்? அவ்வாறுதான் இக்காலத்துத் திரிந்து குறுகிய சொற்கள் சிதைந்து அழகிழந்து தோன்றுகின்றன எனலாம். அழகிய சிற்பம் எங்கே? ஆற்று வெள்ளம் புரட்டிப் புரட்டித் தேய்த்து மழுப்பிய கல்லுருளை எங்கே? உண்மைதான். ஆனால், இங்குத்தான் அறிஞர் ஜெஸ்பெர்ஸன் மொழியின் இயல்புணர்ந்து கூறும் கருத்துக்களை உணர்தல் வேண்டும். அவர் கூறுவன: "மொழி ஒரு கருவி; அந்தக் கருவிகொண்டு கருத்துக்களைப் புலப்படுத்தி மக்கள் வாழ்தல் வேண்டும். மக்கள் வாழும் வகையில், கருத்துக்கள் புலனாயின் அஃது ஒன்றே அமையும். கருத்துக்கள் புலனாகுமாறு சொற்கள் பொருள் தரின் அமையும். அந்தச் சொற்களின் பிறப்பும் வளர்ச்சியும் பற்றிய வரலாறு மக்களுக்கு வேண்டுவதில்லை. சொல் எதனைக் குறித்திடும் என்ற அளவில் பொருளுணர்ச்சி மட்டும் இருந்தால் அமையும். தேய்வுபடாத சொல், வெள்ளத்தில் புரண்டு அழியாத அழகிய சிலை போன்றதே. ஆனால், மொழியைப் போற்றும் மக்கள், சொற்களைச் சிற்பங்களாக வைத்துக்கொண்டு அழகு காக்க விரும்பவில்லை. அஃது அறிஞர் சிலர் சில வேளைகளில் விரும்பும் விருப்பமாக இருக்கலாம். ஆயின், மக்கள் மொழியைப் பற்றி விரும்புவதெல்லாம், வாழ்க்கைப் பாதையைச் செம்மைப்படுத்துவதற்கான சொற்கள் அந்த மொழியில் இருக்க வேண்டும் என்பதே. வாழ்க்கைப் பாதையைச் செம்மைப்படுத்தத் தேய்ந்து மழுங்கிய கல்லுருளைகள் வேண்டுமே அன்றி, உருண்டு பாதையைச் சமப்படுத்த முடியாத சிலைகள் வேண்டா என்பதே. ஆதலின், சிலைகளுக்கு உரிய கலைமண்டபம் வேறு; மக்கள்

வாழ்க்கைக்கு உதவும் மொழி வேறு; மக்கள் வாழ்க்கைக்குக் கருவியாக உள்ள மொழித்துறையில், பலகாலும் உருண்டு உருண்டு பலருடைய வாயிலும் பயிலும் சிறு சிறு சொற்களே தேவை" என்பர் அவர்.[15]

சொல்லின் திரிபால் பொருளுணர்ச்சி குன்றுமாயின், அல்லது மயங்குமாயின், அத்தகைய திரிபு மக்களால் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை, மொழி வழக்கில் இடம் பெறுவதும் இல்லை. 'மலைநாடு' என்பதை 'மலாடு' எனத் திரித்து வழங்குவதில் இவ்வுண்மை காணலாம். அநாடு, அலாடு, மநாடு எனப் பலவாறு திரிந்து வழங்காமல், 'மலாடு' எனத் திரியக் காரணம் என்ன? அதன் பொருளுணர்ச்சிக்கு மலை என்ற முதற் சொல் இன்றியமையாததாக உள்ளது. ஆதலின் அதனை எவரும் ஒலிக்காமல் விடவில்லை. விடின், பொருளுணர்த்தப்படாது போகும். அநாடு, அலாடு,

15. In noting the change from the old to the modern form he used strong language and spoke of degeneration, corruption, depravation, decline, phonetic decay, etc., or even adapted for himself Schleicher's noble simile: "our words, as contrasted with Gothic words, are like a statue that has been rolling for a long time in the bed of river till its beautiful limbs have been worn off, so that now scarcely anything remains but a polished stone cylinder with faint indications of what once it was." Suppose, however, that it would be quite out of the question to place the statue on a pedestal to be admired; what if, on the one hand, it was not ornamental enough as a work of art, and if on the other, human well-being was at the stake if it was not serviceable in a rolling-mill; which would then be the better,—a rugged and unwieldy statue, making difficulties at every rotation, or an even, smooth, easy-going and well-oiled roller?—Jespersen, Progress in Language, p. 11.

மநாடு என்று திரியின், மலை என்ற பொருட்சிறப்புப் போய், சொல் பயனற்றுவிடுகின்றது. அது போலவே, ஆச்சு, போச்சு என்னும் கொச்சைத் திரிபுகளிலும், பால்காட்டும் விகுதி (பாலறி கிளவி) முதலியன அவ்வளவு இன்றியமையாதன அல்ல; காலம் உணர்த்தும் இடைநிலையின் இயல்பான வடிவமும் சிறந்ததன்று; ஆயின் தொழில் (வினை) இன்னது என்று உணர்த்தும் பகுதியே பொருட்சிறப்பு உடையது. ஆதலின் ஆ, போ என்னும் பகுதிகள் சிதையாமல் வழங்குகின்றன. எடுத்தல் படுத்தல் நலிதல் என்னும் ஒலிமாறுதல்களும் பொருட்சிறப்புப் பற்றி அமைகின்றன அல்லவா? ஆதலின், பொருட்பயனின்றி நலிந்து ஒலிக்கப்படும் அசைகளே சிதைகின்றன; பொருட் சிறப்பின்றிப் படுத்து ஒலிக்கப்படும் அசைகளே திரிபடைகின்றன; பொருட் சிறப்புடையனவாய்ப் பயன் பட்டு எடுத்து ஒலிக்கப்படும் அசைகள் சிறிதும் மாறுமல் நிலைபெறுகின்றன.

## 19. சொற்றொடர்

சொற்கள் காலப்போக்கில் உருவம் வேறுபடும் என்பது கண்டோம். சொற்பொருளும் மெல்ல மெல்ல மாறக் கண்டோம். இலக்கியவளம் பெற்ற மொழிகளில் சொல்வடிவம் மாறப் பல நூற்றாண்டுகள் ஆகும். ஆயின், எழுத்து வழக்கில்லாத காட்டுமிராண்டிகளின் மொழியில் அம் மாறுதல் சில ஆண்டுகளில் நிகழும். தமிழில் 'சிதல்' என்னும் பழஞ்சொல் 'செல்' என்று மாறிவழங்குகின்றது. இதற்குப் பல நூற்றாண்டுகள் ஆயின. 'பொன்', 'நெய்' முதலான சொற்களின் பொருளும் இவ்வாறே மாறியுள்ளன. ஆயின் இத்தகைய மாறுதல்கள் நாகரிகமற்ற மக்களின் மொழியில் சில ஆண்டுகளில் நிகழ்ந்துவிடும். நடு அமெரிக்காவின் பழங்குடிமக்களிடையே தொண்டு ஆற்றி வந்த கிறிஸ்துவப்பாதிரிகள் சிலர் பத்து ஆண்டுகள் தம் நாட்டிற்குச் சென்று ஓய்வு பெற்றிருந்து மீண்டு சென்ற போது, அந்தப் பழங்குடிமக்களின் மொழி அதற்குள் முற்றிலும் வேறுபட்ட புது மொழியாக மாறியிருக்கக் கண்டனராம். முன்பு தாம் தொகுத்து எழுதிய அகராதி முழுதும் பயனற்றுப் போயிருக்கக் கண்டனராம்.[1]

இத்தகைய மாறுதலைச் சொல் வடிவிலும் சொற்பொருளிலும் காணக்கூடுமே அல்லாமல், சொற்றொடரமைப்பில் காணல் இயலாது. சொற்றொடரமைப்பு என்பது நாகரிகமக்களாயினும் நாகரிகமற்ற மக்களா

1. Max Muller, The Science of Language, pp. 58, 59.

யினும் பேசுவோர் உள்ளத்தில் எண்ணங்கள் அமையும் அமைப்பாகும். அந்த அமைப்பு மாறின் பேசப்படும் ஒலிகளுக்கும் உணர்த்தப்படும் பொருள்களுக்கும் தொடர்பில்லாமற் போகும். ஆதலின், எந்த மொழியிலும் சொற்றொடரமைப்பில் மாறுதல் நிகழ்வதில்லை எனலாம்; ஒருகால் நிகழினும், அவை அம்மொழியின் அடிப்படையான இயல்புக்கு மாறாகாத சிறிதளவே ஆகும்; அத்தகைய மாறுதல் நிகழவும் பல நூற்றாண்டுகள் ஆகும். ஆதலின், சொற்றொடரமைப்பு ஒன்றே மொழிகளின் சிறப்பியல்புகளை எடுத்துக்காட்ட வல்லதாகும்.

சொற்கள் பல தொடர்ந்து அமையும் முறையே சொற்றொடரமைப்பு என்பதாகும். எளியநிலையில் இரு சொற்கள் தொடர்ந்து அமையும் வாக்கியமாகத் தோன்றி, நாகரிகம் வளர வளரப் பல சொற்கள் தொடர்ந்து அமையும் அமைப்பு ஏற்படுகின்றது.

ஒரு சொல்லே வாக்கியமாக அமைதலும் உண்டு. 'நட' என்பது ஒரு வாக்கியம். இலக்கணப்படி 'நீ நடவாய்' என்று அமைய வேண்டும். ஆதலின், 'நட' என்னும் ஏவலொருமை வினைமுற்றில் 'ஆய்' விகுதி கெட்டது என்று இலக்கணம் கூறும். மற்ற வினைமுற்றுக்களில் பாலறிகிளவி சேர்ந்தே இருத்தலால், ஏவல் ஒருமை வினைமுற்றிலும் பாலறிகிளவி இருக்க வேண்டும் என்னும் பொதுவிதி பற்றியே இலக்கணம் இவ்வாறு கூறுகின்றது. மக்களின் மொழி இவ்வாறு விதிகளை அடிப்படையாகக் கொண்டு அமைந்தது அன்று; தேவைகளுக்கு ஏற்ப அமைந்ததாகும். ஆதலின், பேச்சு வழக்கில் 'நடவாய்' என்ற வடிவமே

இல்லை. எழுத்திலும் அதற்கு இடம் இல்லை என்றே கூறலாம்; ஒரு சில செய்யுட்களில் அருகிவழங்கும் வழக்காகவே அஃது உள்ளது.[2]

எனவே, ‘நீ நட’ என்பதே வாக்கிய வடிவம் எனலாம். இஃது ஒருவன் தன் முன்னிலையாக நிற்கும் மற்றொருவனுக்குக் கூறும் சொற்றொடர் அன்றோ? முன்னின்றானுக்கு ஏவலை உணர்த்தும் போது ‘நீ’ என்று குறித்துக் கூறுவது மிகை அன்றோ? ஆதலின் ‘நட’ என்ற சொல்மட்டும் நின்று வாக்கியமாக வழங்குகின்றது. குறிக்கப்படும் பொருள் தொலைவில் உள்ளதாக நேரும்போதுதான் அதனைப்பற்றிப் பலவும் அறிவித்தல் இன்றியமையாததாக உள்ளது. அதுபற்றியே, படர்க்கை வினைமுற்றில் திணைபால் எல்லாம் விளக்கமாக உணருமாறு பாலறிகிளவிகள் அமைந்துள்ளன.[3] ‘நட’ என்னும் ஏவல் வினைமுற்றில், பேச்சைக் கேட்போனே குறிக்கப்படும் பொருளாகவும் இருத்தலின், திணைபால் விளக்கமும் காலமுணர்த்தலும் வேண்டுவன அல்ல. பகுதியாகிய ‘நட’ என்பது தனித்து நின்று

---

2. உண்மை இவ்வாறிருக்க,
‘செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே’
என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்குச் (சொல். ௪௫௦) “செய்யாய் என்னும் வாய்பாட்டதாகிய முன்னிலை முற்றுச் சொல் ஆய் என்னும் ஈறுகெடச் செய் என்னும் சொல்லாய் நிற்றலுமுடைத்து’, என்று உரை எழுதியதோடமையாமல், “ஆகிடனுடைத்து என்றதனால் செய்யாயென ஈறுகெடாது நிற்றலே பெரும்பான்மை என்பதாம்” எனச் சேனாவரையர் விளக்குவது வியப்பாகவே உள்ளது.

3. படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படும் திணைபால் அனைத்தும்; ஏனை
இடத்தவற் றொருமை பன்மைப் பாலே,
(நன்னூல், சொல், 6.)

வாக்கியமாக அமைகின்றது.[4] ஆதலின், 'நீ நடவாய்' என்பது இலக்கணத்தின் படைப்பாகவும், 'நட' என்பது உண்மைமொழியாகவும் இருக்கக் காண்கின்றோம்.[5]

இதற்கு அடுத்த நிலையில் வளர்ந்து அமைந்த வாக்கியம் எழுவாயும் பயனிலையுமாக இரண்டு சொற்கள் தொடர்ந்த எளிய வாக்கியம் ஆகும்.[6] பல சொற்கள் தொடரும் வாக்கியங்களை ஆராயின், அங்கும் எழுவாயும் பயனிலையுமாகிய இரு சொற்களே வாக்கிய அமைப்பிற்கு இன்றியமையாதனவாக விளங்கும். மற்றச் சொற்கள் எழுவாய்க்கோ, பயனிலைக்கோ இரண்டற்குமோ அடையாக நிற்பன.

தமிழ்மொழியில் சொற்கள் தொடரும் முறையில் அடிப்படையாக உணரத்தக்கவை சில உள. அவையாவன :—

1. தமிழ் வாக்கியத்தில் எழுவாய் எங்கேனும் அமையும். அது பெயராகவே இருக்கும். (தொழிற்

---

4. Jespersen, A Modern English Grammar, p. 67.

5. We cannot say that 'come' is an elliptical form of 'come thou'; 'come thou' is rather an extended or redundant form of 'come,' for as the pronoun is really superfluous—commands being generally addressed to some one person—'come' is the normal form of expression"—A. E. H. Swaen, Grammatical Miscellany to Otto Jespersen, p. 275.

6. As the psychological subject is that idea or group of ideas which first comes to the speaker's mind, and as there is no predicate without an underlying subject, the natural order of words in the simple sentence is: first subject, then predicate—Kellner, Historical Outlines of English Syntax, p. 286.

பெயரும் வினையாலணையும் பெயரும் பெயராய் அடங்கும்).[7]

2. பயனிலை பெரும்பாலும் இறுதியில் நிற்கும்.[8] விரைவு முதலான குறிப்பைப் புலப்படுத்த நேரும் போது முதலிலும் இடையிலும் நிற்றல் உண்டு. பயனிலை பெரும்பாலும் வினைமுற்றாக இருத்தல் இயல்பு. சிறுபான்மை பெயராக இருக்கும்.

| | | |
|---|---|---|
| நக்கீரர் வந்தார் | — | பயனிலையாக வினைமுற்று இறுதியில் வரல் |
| வந்தார் நக்கீரர் | — | முதலில் வரல் |
| அது பூனை | — | பெயர் பயனிலையாதல் |

பெயர் பயனிலையாக அமையும் வாக்கியத்தில் வினைச்சொல் இல்லாமை காணப்படும். இஃது ஆங்கில முதலான பல மொழிகளுக்கு வேறுபட்ட வழக்காகும். ஆங்கில முதலான மொழிகளில் 'இருக்கின்றது' என்னும் பொருளுடைய வினை ஒன்று இடையே சேர்க்கப்படும். அந்த வினை ஒரு தொழிலையும் உணர்த்தாது பொருளின்றி வரும்; அதன் பயன் வாக்கிய இலக்கணம் நிரம்புதலே ஆகும்.[9] அதனைக் 'கோபுலா' (*copula*) எனக் குறிப்பர்.[10]

---

7. A verbal noun is a noun because it is a word that is used as a name.—H. R. Strokoe, The Understanding of Syntax, p. 156.

8. கூ முதலான மற்றத் திராவிட மொழிகளிலும் இவ்வியல்பு மாறவில்லை.—Winfield, A Grammar of the Kui Language, p. 158.

9. It is quite consistent with the psychological facts, as well as with the science of language, that the simple juxtaposition of subject and predicate is anterior to the connection by means of a copula. The original state is still kept in proverbs and similar expressions: "first come first served" etc.—Kellner, Historical Outlines of English Syntax, p. 44.

10. Copula is the term applied to a verb so used that it serves as a link joining a noun or a pronoun or an adjec-

It a cat
அது பூனை

என்னும் வழக்கு அங்கு இல்லை.

It is a cat

என்பதே அங்கு வழங்குவது. இவ்வுண்மையை அறியாத சிலர், தமிழின் சொற்றொடரமைப்பை ஆராயாத சிலர், தமிழில் மொழிபெயர்க்கும்போது இது போன்ற அமைப்பைப் புகுத்தித் தவறுவர்.

அது பூனையாக இருக்கின்றது

என்பதுபோல் அப்படியே பெயர்த்து எழுதுவர்.

பயனிலையாகிய வினைமுற்று வாக்கியத்தின் இறுதியில் நிற்கும் தமிழ் அமைப்பு முறை உளநூலுக்கு (*psychology*) இயைந்த முறையாகவே உள்ளது. ஊமைகளின் மொழியில் வினைச்சொல்லை உணர்த்தும் இடம் எங்கே என்று ஆராய்ந்தால், அதற்கு முன்னே எழுவாய், செயப்படு பொருள், இடம், காலம் முதலான எல்லாவற்றையும் உணர்த்திவிட்டு இறுதியில் தான் வினையை உணர்த்துகின்றனர் என்பது விளங்குகின்றது.[11] ஆகவே, அது பேசுவோர் உள்ளத்தில்

---

tive to the subject in such a way that the noun, pronoun or adjective may be said to agree with the subject.—Stokoe, The Understanding of Syntax, p. 189.

11. Indeed, the verb seems to fix itself at the end of the sentence almost naturally, since the deaf-mute when taught to communicate with others invariably sets the verb in this position, the subject and object to which his thought is chiefly directed being the first to occur to his mind.—Sayce, Introduction to the Science of Language, p. 102.

எழும் எண்ணங்களின் இயற்கையான அமைப்பு என்பது தெளிவு.

3. எழுவாயும் பயனிலையும் திணை பால் இடம் என்பவற்றால் ஒத்திருத்தல் திராவிட மொழிகளின் இயல்பு.[12] ஐரோப்பிய மொழிகளில் எழுவாய் பய னிலைகளே அல்லாமல் பெயரடையாக வரும் சொற் களும் அவ்வப் பெயர்களோடு திணை பால் ஒத்திருத்தல் வேண்டும். ஆங்கிலத்திலும் அவ்வாறு இருந்த காலம் உண்டு. இப்போது '*good*' முதலான பெயரடைகள் எல்லாப் பெயர்களுக்கும் பொதுவாக உரியனவாய்த் திணை பால் வேறுபாடு உணர்த்தாதனவாய் வழங்கு கின்றன.[13] ஆங்கிலம் அந்த நிலைமையும் கடந்து வளர்ந்துவிட்டது. பயனிலையாகிய வினைமுற்று ஆங் கிலத்தில் திணை பால் உணர்த்துவதில்லை. இறந்தகால எதிர்கால வினைகளான '*went*' '*will go*' முத லானவை எல்லாத் திணைபாலிடங்களுக்கும் பொது வானவை. நிகழ்கால வினைகள்மட்டும் படர்க்கையில் ஒருமை பன்மை உணர்த்துகின்றன (*go, goes; come, comes*). திராவிட மொழிகளுள் மலையாள மொழி ஒன்றே ஆங்கிலத்தையும் கடந்து வளர்ந்துவிட்டது. மலையாளத்தில் எல்லா வினைமுற்றுக்களும் இருதிணை

---

12. வினையின் தோன்றும் பாலறி கிளவியும், பெயரின் தோன்றும் பாலறி கிளவியும், மயங்கல் கூடா தம்மரபினவே. (தொல் சொல். கக.)

13. Every adjective and adjective-pronoun was declined in the three genders, and made to agree with its noun in gender as well as in number and case, just as if it were Latin or Greek. This completely passed from our memory and our conception, leaving not a trace behind.—Whitney, Language and the Study of Language, p. 78.

ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவானவை. தமிழில் அவ்வாறு இல்லை.

நண்பன் வந்தான்

என்னும் தமிழ் வாக்கியத்தில் இரு சொல்லும் படர்க்கை உயர்திணை ஆண்பாலாக ஒத்து அமைந்து வாக்கியமாயின.

நண்பன் உண்டு
நண்பன் இல்லை

என்ற வாக்கியங்களில் நண்பன் என்பதற்கேற்ப ஆண்பாலுணர்த்தும் பயனிலை இல்லை எனினும், இரு திணை ஐம்பால் மூவிடங்களுக்கும் பொதுவாக வழங்கும் சொற்கள் பொருந்தும்.

4. பெயரடை எல்லாம் பெயர்க்கு முன்னும், வினையடை எலலாம் வினைக்கு முன்னும் அமைகின்றன.

நல்ல நண்பன் — பெயரடை
விரைந்து சென்றான் —வினையடை

**5.** ஆறும் வேற்றுமை உருபும், எல்லைப்பொருளை உணர்த்தும் ஐந்தாம் வேற்றுமை உருபும் பெயர் கொண்டு முடிவன. மற்ற வேற்றுமையுருபுகள் வினை கொண்டு முடிவன.[14] நான்காம் வேற்றுமையில் சில இடங்களில் 'கு' உருபு பெயர் கொண்டு முடியும்,

எனது கை — ஆறும் வேற்றுமை
சென்னையின் மேற்கு சேத்துப்பட்டு — ஐந்தாவது எல்லை 'இன்'
அவனுக்குப் பகை — நான்காம் வேற்றுமை

---

14. எல்லை இன்னும் அதுவும் பெயர் கொளும், அல்ல வினை கொளும் (நன்னூல், பெயரியல்.)

| | |
|---|---|
| தலைவனைக் கண்டேன்<br>மண்ணால் செய்த குடம்<br>உனக்குத் தந்தேன் | மற்றவை:<br>செயப்படு பொருள்,<br>கருவி முதலியன. |

6. செப்பாக வரும் வாக்கியங்களுக்கும் வினாவாக வரும் வாக்கியங்களுக்கும் வேறுபாடு இல்லை எனலாம். செப்பு வாக்கியத்தின் ஈற்றில் ஆ ஓ முதலாயின வினா இடைச்சொற்களாக சேர்க்கப்படும். அல்லது, செப்பு வாக்கியத்தில் சுட்டுப் பெயர் நிற்குமிடத்தில் வினாப் பெயர் அமைக்கப்படும்.

இளங்கோ வந்தான் — செப்பு
இளங்கோ வந்தானா? — வினா
அங்கே கண்டான் — செப்பு
எங்கே கண்டான் ? — வினா

7. இணைத்தற்கு வரும் உம்மை இடைச்சொல் (ஆங்கிலத்தில் '*and*' வருவதுபோல்) ஓரிடத்தில் வருதல் அமையாது; இணைக்கப்படும் பல சொற்களோடும் சேரும்.

சேரனும் சோழனும் பாண்டியனும் வந்தனர்.

(The Chera, The Chola, and the Pandiya came.)

8. இவ்வளவு என்று வரையறுத் துணரப்பட்டவற்றின் பெயரைத்தொடர்ந்து வினை வரும்போது, அத்தொகுதிப் பெயருக்கு உம்மை கொடுத்துக் கூறல் வேண்டும்.[15]

---

15. இனைத்தென் றறிந்த சினைமுதற் கிளவிக்கு, வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும். (தொல் சொல். ௩௩.)

ஐந்து விரலும் சிவந்தன.
மூவேந்தரும் போற்றினர்.

எல்லாம் என்ற சொல்லும் இவ்வாறு தொகுதிப் பொருளுணர்த்துவதால், வாக்கியமாக அமையும் போது தொகுதிப் பெயரைச் சார்ந்து உம்மை வரும்.

எல்லா நாடுகளுக்கும் சென்றனர்.

வேற்றுமையுருபுகள் பெயர்க்குப் பின் தொடர்தலையும், இவ்வாறே பிற இடைச்சொற்கள் பெயர் வினைகளைத் தொடர்தலையும் முன்பு கண்டோம். இவையே தமிழ்ச் சொற்றொடரின் அமைப்பு முறை முறைகளாகும்.

இவ்வாறு அமைந்த சொற்றொடர் முறை பலவற்றிற்கும் காரணங்கள் இன்ன இன்ன எனத் தருக்க முறையால் ஆராய்ந்து கூறல் இயலாது. மொழியைப் பேசும் மக்கள் காரணங்களை ஆராய்ந்தே சொற்களையும் சொற்றொடர்களையும் அமைத்துப் பேசுகின்றனர் என்று சொல்வதற்கில்லை. காரணங்களை ஆராய்ந்து அமைக்கும் முறையும் உண்டு. ஆனால் அதனினும் சிறப்பாக அவர்கள் உள்ளத்தில் உள்ளது ஒன்று; அஃதாவது ஒருவரைப் போல் ஒருவர் பேசுதல், ஒருவர் முறையை ஒருவர் பின்பற்றல் என்று சொல்லத் தக்க ('போலச் செய்தல்' (*imitation*) என்னும்) இயற்கை ஆற்றலே ஆகும். இது விலங்குகளிடத்தும் பறவைகளிடத்தும் வளர்ச்சி பெறாமல் மக்களிடத்து மட்டுமே சிறந்து விளங்குவது. மொழியின் தோற்றத்திற்கும் பெருக்கத்திற்கும் இதுவே காரணம் என்பது முன்பு கண்டோம். மொழியின் வளர்ச்சிக்கும்

சிறப்புக்கும் அமைப்புக்கும் இதுவே காரணம். இதுவே ஒற்றுமைப்போலி (*analogy*) என மொழி நூலார் விளக்குவதாகும்.[16] இதனாலேயே சொற்றொடரமைப்புமுறை தொன்றுதொட்டுச் சில வாய்பாடுகளாக நிலைத்துவருகின்றது.

ஆதலின், செயப்படு பொருளை முன்னும் வினையைப் பின்னும் அமைக்கும் தமிழ் முறைக்கும், வினைக்குப் பின் செயப்படுபொருளை அமைக்கும் ஆங்கில முறைக்கும் காரணங்கள் இவை எனத் துணிவதற்கில்லை. தருக்க முறையான இலக்கண ஆராய்ச்சி இங்குச் செல்லாது. அவ்வாறே வேற்றுமையுருபுகளைப் பெயர்க்குப் பின் சேர்க்கும் தமிழ் முறைக்கும், அவற்றைப் பெயர்க்கு முன் சேர்க்கும் மற்ற மொழி

16. There have been attempts to find a sort of logical framework behind the rules of grammar, but language is too rich and not sufficiently rectilinear to lend itself to this presentment. It overflows the bounds of logic on every side. Moreover, its categories do not coincide with those of reasoning; having a method of procedure peculiar to itself, it at times constitutes grammatical groups which are not reducible to any abstract conception.

This logic rests entirely on Analogy, Analogy being the method of reasoning of children and the multitude. An expression is given; they form another somewhat like it. This one in its turn produces a third, slightly different, which again provokes imitations, the first and the second not having in the meantime ceased to be the productive. Language can go far in this way....What we must do is to retrace the road over which language has travelled, striving to recognise the turnings, and never forgetting that language being the work of the people, we must, to understand it, put off the logician and become one with the people ourselves.—Breal, Semantics, pp. 220, 227, 228.

களின் முறைக்கும் காரணம் காணல் இயலாது. அந்தந்த மொழிகளைப் பேசிய பண்டைக்காலத்து மக்கள் அமைத்த முறையே—அவர்கள் கையாண்ட வாய்பாடுகளே பிற்காலத்தாரால் பின்பற்றப்பட்டது எனலாம். இன்னும், தமிழ் பேசும் தாய் ஒருத்தி அவ் வாய்பாடுகளால் (எழுவாய் — செயப்படுபொருள் — வினைமுற்று எனவும், பெயர் + வேற்றுமையுருபு எனவும்) பேசித் தன் குழந்தை தன்னைப் பின்பற்றுமாறு செய்து பண்டை முறையைக் காத்துப் பரப்புகின்றாள். அவ்வாறே ஆங்கிலம் பேசும் தாயும் ஆங்கில அமைப்பு முறைப்படி பேசித் தன் குழந்தைக்குக் கற்பித்து அந்த முறையைப் பரப்புகின்றாள். ஆகையால் வேறுபட்ட சொற்றொடரமைப்பு உடைய மொழிகள் இன்றுவரை அவ்வாறே வேறுபட்டு வழங்கிவருகின்றன.

ஒரு மொழியினர் மற்றொருவகை மொழியினரோடு கலந்து நெடுங்காலம் பழகிய பின்பும் சொற்றொடரமைப்பில் கலப்புக் காணப்படுதல் அரிதாகவே உள்ளது. முதலில் கலப்பன பெயர்ச் சொற்களே; அவற்றிற்கு அடுத்தநிலையில் எளிதில் கலப்பன பெயரடைகள்; பிறகே வினையடைகள் கலக்கும்; வினைச் சொற்கள் அரிதில் கலப்பன; சொற்களைப் பிணைத்துச் சொற்றொடர் அமைக்க உதவும் இடைச்சொற்களோ கலத்தலே இல்லை எனலாம்.[17] ஆயின், கலப்பனவும் மாறுவனவுமாகிய ஒலியியல் (*Phonetis*), சொற்பிறப்பு (*Etymology*), சொற்பொருள் (*Sematology*), சொல்லமைப்பு (*Morphology*) என்பவற்றை ஆராயச் செய்

17. Whitney, The Life and Growth of Language, p. 119.

யப்படும் அவ்வளவு முயற்சி, கலப்பும் மாறுதலும் இல்லாத சொற்றொடரமைப்பு (*Syntax*) பற்றிச் செய்யப் படுவதில்லை.

ஒவ்வொருவரும் ஓயாமல் இரவும் பகலும் மூச்சு வாங்கி விட்டுக்கொண்டே இருக்கின்றனர். ஆயின், அவ்வாறு மூச்சு வாங்கிவிடும் தொழில் எவ்வாறு நடைபெறுகின்றது என்பதை ஆராய்வோர் ஒரு சிலரே, அதுபோலவே எல்லோரும் மொழியைப் பேசியும் எழுதியும் ஆளுகின்றனர். ஆனால், எவ்வாறு சொற்கள் தொடர்ந்து அமைகின்றன என்பதை ஆராய்வோர் ஒரு சிலரே. ஒருவனுக்குத் தன் காலும் தெரியும்; காலால் நடக்கும் வழியும் தெரியும்; ஆனால் இரண்டு கால்களும் மாறி மாறி அடி எடுத்து வைத்து நடக்கும் முறையை அவன் எண்ணிப் பார்ப்பதில்லை. மொழியை வழங்குவோனும் அந் நிலையிலேயே உள்ளான். அவனுக்கு ஒலிகள் தெரியும்; சொற்கள் தெரியும்; அவைகொண்டு உணர்த்தும் பொருளும் தெரியும்; ஆனால் அந்தச் சொற்கள் அந்தப் பொருளை உணர்த்துவதற்காக, ஒன்றை ஒன்று தொடர்ந்து அமையும் அமைப்புத் தெரிவதில்லை. ஒலியும் சொல்லும் பொருளும் அறிந்தவன் சொற்றொடரமைப்பை அறிவதில்லை; அறிய முயல்வதும் இல்லை. இதுதான் சொற்றொடர் அமைப்பு (வாக்கிய அமைப்பு) என்னும் மொழியியற் பகுதி தக்கவாறு விளக்கப்படாமல் இருத்தற்குக் காரணமாகும.

ஒருவன் தன் மூச்சின் இயக்கத்தை ஆராயத் தொடங்கின், மூச்சுத் தடைப்படுவதும் உண்டு. தன்

கால்களின் இயக்கத்தை ஆராயத் தலைப்பட்டால், நடை தடைப்படுவதும உண்டு. ஆதலின், சொற்றொடரமைப்பினை உணர்வதால், மொழியின் இயல்பான போக்கிற்குத் தடை நேருமோ என்ற அச்சம் சிலர்க்கு உண்டு. எவ்வாறாயினும் ஆகுக, மொழியின் இயல்பை உள்ளவாறு உணர விரும்புவார்க்குச் சொற்றொடர் ஆராய்ச்சி இன்றியமையாததாக உள்ளது. ஒலியையும் சொல்லையும் சொற்பொருளையும் ஆராய்ந்தவர் மொழியியல் தெளிந்தவர் ஆகார். அவர் மொழியின் ஆடையும் அணியும் உடலும் பற்றி ஆராய்ந்தவரே அன்றி, மொழியின் வாழ்வைத் தெளிந்தவர் அல்லர். சொற்றொடரின் அமைப்பே ஒரு மொழியின் உயிர் எனலாம். அதனை ஆராய்ந்து அறிந்தவரே, மொழியின் உயிர்வாழ்வை அறிந்தவர் ஆவர்.

ஆடையும் அணியும் மாறுவதுபோல ஒரு மொழியின் ஒலியும் சொல்வடிவும் அடிக்கடி மாறக் காண்கின்றோம். வளர்ச்சியின் காரணமாக உடல் மாறுவது போலவே, சொற்பொருளும் அடிக்கடி மாறக் காண்கின்றோம். ஆதலின், நிலையின்றி மாறிவரும் இவற்றை அடிப்படையாகக் கொண்டு நிகழ்த்தும் மொழியாராய்ச்சியும் பயனற்றுப் போகும். தமிழ்மொழி வடமொழியிலிருந்து பிறந்ததென்றும், சித்திய இனத்தைச் சார்ந்தது என்றும், இன்னும் பலவாறும் பலர் ஆராய்ந்த ஆராய்ச்சிகளெல்லாம் இத்தகைய ஆராய்ச்சிகளே ஆதலின், பயனற்றுப்போயின. வடநாட்டில் வழங்கும் மொழிகளெல்லாம் ஐரோப்பிய மொழிகளென்று வகுத்து முன்பு இடர்ப்பட்டவர்களும், இந்தோ-ஐரோப்பிய மொழிகள் என வகுத்து இன்று

மயங்குகின்றவர்களும் உண்மை காணுமைக்கும் இதுவே காரணமாகும். இவர்களுள் பலரும் சொற்ருெடரமைப்பை ஆராயத் தவறினர்; சிலரே அம் முயற்சியில் தலைப்பட்டனர்; அவரும் போதிய அளவு உழைக்கவில்லை. சொற்ருெடரமைப்பும் ஆராய்தற்கு எளிய துறையாக இல்லை; மிக மிக அரிதாகவும் நுண்ணிதாகவும் உள்ளது.

அரியதே ஆயினும் அந்த ஆராய்ச்சி இன்றியமையாததாகும். மொழி என்பது கருத்தைப் புலப்படுத்தும் கருவி. அந்தக் கருத்திற்கு—எண்ணத்திற்கு ஒலி வடிவான சொல்லும் அச்சொல் உணர்த்தும் பொருளும் உடையாகவும் உடலாகவும் அமைந்து உதவுகின்றன. ஆனுல், அவற்ருல் எண்ணம் அமைந்து வளர்ந்த முறையை — எண்ணத்தின் போக்கை உணரமுடியாது. எண்ணத்தின் போக்கை நேரே உணர்த்துவது சொற்ருெடரமைப்பே ஆகும்.[18] ஆதலின், தாய் மொழியைத் தெளிய விரும்புவோராயினும், பிறமொழியைக் கற்க விரும்புவோராயினும், யாவர்க்கும் இந்த ஆராய்ச்சி வேண்டும்.

18. Phonetics deal for the most part with the physical and physiological side of human speech; they show how sounds, the primitive elements of every language, are from time to time modified by various causes. Accidence and syntax have but little to do with physical facts-only so far as changes of sounds exercise influence on them. The proper department of accidence and syntax is to study the psychical process as they reveal themselves in the structure of human speech.—Kellner, Historical Outlines of English Syntax, p. 3.

ஆங்கிலேயர் தமிழைக் கற்கும்போது ஒலியும் சொல்லும் கற்ற பிறகும், தமிழைப் பேச முடியாமல் இடர்ப்படுவது உண்டு. இவ் விடர்ப்பாட்டையும் கடந்து தமிழில் தேர்ந்தவர் ஒரு சிலரே. அவருள் டாக்டர் ஜி. யு. போப் தலையானவர். அவரும், தம் அனுபவத்தின் பயனாக, தமிழரைப் போல் எண்ணவும் உணரவும் முடிந்தாலன்றி, தமிழரைப் போல் பேச முடியாதெனத் தெளிவுறுத்தியுள்ளார். வேறு இனத்தைச் சார்ந்த ஒரு மொழியைக் கற்கும்போது, சொற்றொடரமைப்பைக் கற்றாலன்றிப் பயன் விளையாது. சொற்றொடரமைப்பைக் கற்பது என்றால். அம்மக்களின் எண்ணப்போக்கைக் கற்பது ஆகும். ஆதலின், தமிழரைப் போல் எண்ணத் தெரிந்தாலன்றி அவர்களைப் போல் பேச இயலாது என்ற உண்மையை அறிஞர் போப் வலியுறுத்தியுள்ளார்.[19]

ஆங்கிலேயன் எண்ணுவதும் தமிழன் எண்ணுவதும் ஒரே கருத்தாக இருக்கலாம். ஆனால் ஆங்கிலேயன் உள்ளத்தில் அந்தக் கருத்து வளர்ந்தமைந்த முறைக்கும் தமிழன் நெஞ்சத்தில் அது வளர்ந்தமைந்த முறைக்கும் வேறுபாடு உள்ளது. இரண்டு வாக்கியங்களை எடுத்துக்காட்டாகக் காண்போம்.

I went to his house

நான் போனேன் - கு - அவனுடைய வீடு

இஃது ஆங்கிலேயன் எண்ணப்போக்கை விளக்குவதாகும். எழுவாயை முன்னே எண்ணி, பிறகு செயலை

19. G. U. Pope, A Handbook of the Ordinary Dialect of the Tamil Language, p. 193.

எண்ணுகின்றான். பிறகுதான் அந்தச் செயலிற்கு உரிய இடமும் அந்த இடத்திற்கு உரியவனைப் பற்றிய உரிமைக் குறிப்பும் அமைகின்றன. செயலிற்கும் இடத்திற்கும் இடையே வேற்றுமைக் குறிப்பு ('கு' உருபு) அமைகின்றது. இது பல தலைமுறைகளாக ஆங்கிலேயர் கூட்டத்தில் எண்ணங்கள் வளர்ந்தமைந்து பண்பட்ட முறையாகும். ஆதலால், இன்று அவர்களுக்கு இதில் புதுமை ஒன்றும் இருப்பதில்லை. இன்று சைகில் செலுத்தும் இளைஞன், அந்தச் சைகிலை என்னும் ஊர்தியின் வரலாற்றைப் பற்றிக் கவலைப்படுகின்றானா? முதலில் அது மூன்று சக்கரம் உடையதாய்த் தோன்றியதையும், ஒரு சக்கரம் உடைந்தபோது அதைச்செலுத்தியவன் எஞ்சிய இரு சக்கரங்களைக்கொண்டு இடர்ப்பட்டதையும், விடாமுயற்சியின் பயனாக அந்த இரு சக்கரங்களைக் கொண்டே செலுத்தும் முறையில் வெற்றி கண்டதையும், காலப்போக்கில் அதன் உருவம் எவ்வெவ்வாறு படிப்படியாக மாறிவந்தது என்பதையும் இன்று அந்த இளைஞன் எண்ணிப் பார்ப்பதில்லை. அதுபோலவே ஆங்கிலேயனுக்குத் தன் தாய்மொழி வாக்கியத்தில் புதுமை ஒன்றும் தோன்றுவதில்லை. ஆயின், அவனே பிற மொழியின் வாக்கியம் ஒன்றைப் படிக்கும்போது, அதில் எழுவாயும் பயனிலையும் இடமும் உருபும் பிறவும் எங்கெங்கே அமைந்துள்ளன என்பதைக் காணும்போது, வேறுபாடுகளைக் கண்டு மருள்கின்றான். அவ்வாறே நாமும் ஆங்கிலம் முதலான பிறமொழிகளின் சொற்றொடரமைப்பைக் காணும்போதுதான், வேறுபாடு உணர்கின்றோம்.

நான் அவனுடைய வீட்டுக்குப் போனேன்

என்னும் தமிழ் வாக்கியம்,

I his house to went

என்று ஆங்கிலத்தில் சொற்பெயர்க்கப் பட்டபோது (மொழி பெயர்ப்பு அன்று, சொற்பெயர்ப்பு மட்டுமே) வேறுபாடு தெளிவாகும். இவ்வேறுபாடு பற்றியே ஆங்கில மொழி வேறு இனம், தமிழ் வேறு இனம், என்று கூறல் வேண்டும்.

அன்றி, ஒலியாலாகிய சொல் பற்றியோ சொல்லா லுணரும் பொருள்பற்றியோ மொழிகளை ஆராயத் தலைப்பட்டால், உண்மை புலனாகாது. ஆயிரம் ஆண்டு களுக்கு முற்பட்ட மக்கள் வழங்கிய தமிழும் இன் றுள்ள மக்கள் வழங்கும் தமிழும் அந்த ஆராய்ச்சியின் படி வெவ்வேறு இனத்தைச்சார்ந்த மொழிகளாகி விடும். சொல்வடிவும் சொற்பொருளும் கொண்டு நிகழ்த்தும் ஆராய்ச்சியின்படி, சங்ககாலத் தமிழும் இன்று பேசும் தமிழும் உறவற்ற மொழிகளாகத் தோன்றும்; தமிழும் தெலுங்கு கன்னடம் மலையாளம் முதலான மற்றத் திராவிட மொழிகளும் வெவ்வேறு இனங்களைச் சார்ந்த மொழிகள் எனக் கூறித் தடுமாற நேரும்.

நான் அவனுடைய வீட்டுக்குப் போனேன்

என்பது இன்றுள்ள தமிழர் பேசும் வாக்கியம். பல நூற்றாண்டுகளுக்கு முன்பு

யான் அவன் இல்லம் சென்றேன்

என்றுவது

யான் அவன் இற்கு எகினேன்

என்றுவது, வேறு வடிவிலாவது வழங்கியிருக்கும். இது பல நூற்றுண்டுகளுக்கு முன் இருந்த தமிழர் பேச்சு பேசி வந்த பேச்சு எனலாம். இந்த மக்களின் மூதாதையரே பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பு வட இந்தியாவில் கங்கைக் கரையில் வாழ்ந்தவர்கள். அந்த மக்களும் இக் கருத்தை

யான் ஆன் இற்குச் சென்று

என்பது போலக் கற்பனையளவில் கருதக்கூடிய ஒரு வாக்கியத்தைப் பேசியிருக்கக்கூடும். ஆரியர் வந்து கலந்த பிறகு அவர்தம் மொழியிலிருந்த பல சொற்களை நாகரிகமானவை எனக் கருதி, இதே சொற்றெடரமைப்பில் புகுத்தினர். இன்னும் பல நூற்றுண்டுகளுக்குப் பிறகு முகம்மதியர் வந்து கலந்த பிறகு அரேபிய பாரசீகச் சொற்களும் நாகரிகமாகக் கருதப்பட்டு, அதே சொற்றெடரமைப்பில் இடம் பெறலாயின. இவ்வாறு, ஒலியும் சொல்லும் மட்டும் மாறி அந்த வாக்கியம் அதே அமைப்பில் இன்றும் நிலவுகின்றது. அந்தப் பழங்கால மக்களின் வழி வந்தவர்களாக இன்று கங்கைக் கரையில் வாழும் மக்கள் அந்த வாக்கியத்தை எவ்வாறு பேசுகின்றனர் ?

மை உன்கா கர்க்கு ஜாயா
நான் அவனுடைய வீட்டுக்குப் போனேன்

அந்தப் பழைய திராவிட மொழியின் வாக்கிய அமைப்பே இன்று கங்கைக் கரையில் வழங்கும் இந்தி வாக்கிய அமைப்பாக உள்ளது. இதன் காரணம்

என்ன ? ஒலிகள் மாறின, சொற்கள் மாறின, சொற்பொருளும் மாறின ; ஆனால் மக்களின் எண்ணப் போக்கு மாறவில்லை ; அதனால் சொற்றொடரமைப்பு மாறவில்லை ; எழுவாய் முதலிலும், வினைமுற்று இறுதியிலும், இடம் அதன் முன்னரும், வேற்றுமையுருபு பெயரின் பின்னரும் அமைகின்ற அமைப்பு முறை மாறவில்லை.[20] இந்த அமைப்பு முறை, கங்கைக் கரையில் பழங்காலத்தில் வாழ்ந்த மக்களின் மொழியில்—திராவிட மொழியில் இருந்ததே அல்லாமல், அங்கு வந்து குடியேறிய ஆரியர் மொழியிலும் இருந்ததில்லை ; இன்றும் அந்த மொழிக்கு உறவாக உள்ள லத்தீன், கிரீக், பிரஞ்சு, ஜெர்மன் முதலான மொழிகளிலும் இல்லை. பிற்காலத்தில் வந்து குடியேறிய அரேபியர் மொழியிலும் இல்லை, பாரசீகர் மொழியிலும் இல்லை. அந்தந்த மொழிச் சொற்கள் வந்தன ; கலந்தன ; வாழ்ந்தன. ஆனால் அவையெல்லாம், ஆடையணிகளின் மாற்றமே அன்றி மொழியின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றமன்று ; மொழியின் உயிராகிய சொற்றொடரமைப்பு ஒரு சிறிதும் மாறவில்லை. கங்கைக் கரையில் இன்று வாழும் மக்களின் எண்ணப்போக்கும், கோதாவரியின் கரையில் வாழும் தெலுங்கரின் எண்ணப்போக்கும், பொருநையாற்றங் கரையில் வாழும் தமிழரின் எண்ணப்போக்கும் ஒரே தன்மையவாக இருக்கின்றன. ஆயினும், மொழிநூலில் முதலிடம் பெற்று ஆராய்தற்கு உரியதாக உள்ள இது புறக்கணிக்கப்படுகின்றது. ஆதலின், வெறுஞ் சொல்

லாராய்ச்சியும் ஒலியாராய்ச்சியும் செய்யப்பட்டு, வடநாட்டு மொழிகள் எல்லாம் ஐரோப்பிய இனம் எனக் கொள்ளும் கொள்கை வாழ்ந்துவருகின்றது.

அன்று கங்கைக் கரையில் பழஞ் சொற்களைக் கைவிட்டு நாகரிகம் என மயங்கிப் புதுச் சொற்களைப் பேசிய மக்களைப் போலவே, இன்றும் காவிரிக் கரையில் தமிழ்ச் சொற்களைக் கைவிட்டு பிறமொழி மோகமுற்று ஆங்கிலச் சொற்களைப் பேசுவோர் உள்ளனர்.

நான் அர்ஜண்டாய் ஸ்டார்ட் பண்றேன்
(நான் urgent ஆய் start பண்ணுகிறேன்)
[நான் விரைவாய்ப் புறப்படுகிறேன்)

என்று ஆங்கிலச் சொற்கள் இடம் பெற்ற ஒரு மொழியை ஆங்கிலத்தின் இனம என்று மொழியாராய்ச்சியாளர் கொள்வாரோ?[21] ஒருகாலும் கொள்ளார். ஆயின், இன்று வட இந்தியாவில் வழங்கும் மொழிகளைப்பற்றிய வரையில் ஆடையணிகளான ஒலி முதலியவைகளைக் கண்டு அவற்றையெல்லாம் ஐரோப்பிய இன மொழிகள் என்று வகுக்கும் முறை வியப்பாகவே உள்ளது.

21. In comparing languages we have first to compare their grammars, not their vocabularies. The reason of this is obvious. It is in the sentence, not in the isolated word, that languages agree or differ, and grammar deals with the relations that the several parts of the sentence bear to one another.—Sayce, Introduction to the Science of language. p.48.

# மொழிபெயர்ப்பு

நண்பர் ஒருவர் ஆறு பக்கங்கள் நிரம்ப எழுதிக் கொண்டு வந்து, "இவற்றைப் பார்த்துத் தருக" என்றார். இரண்டு நாள் கழித்து அவரைக் கண்டு, "கட்டுரை மிக நன்று; பாட்டு ஒன்று இனிது அமைந்துள்ளது. மற்றொன்றில் பாட்டின்பமே காணேன்" என்றேன். மற்றொன்று எது?" என்றார். சுட்டிக் காட்டினேன். "என்ன ஐய! அதைத்தானே நண்பர் சிலர் வியந்து பாராட்டினர். உம் கருத்து மாறாக இருக்கின்றதே! அது டென்னிசன் எழுதிய பாட்டின் (In Memoriam என்பதன்) மொழி பெயர்ப்பு ஆயிற்றே!" என்றார். உடனே அந்தப் பாட்டை ஆங்கிலத்தில் படித்துணரல்வேண்டும் என்ற வேட்கை என் உள்ளத்தே எழுந்தது.

இருவாரம் கழித்து ஒருநாள் ஓய்வு வாய்த்தது. டென்னிசன் பாட்டைப் படித்தேன். ஆங்கிலத்தில் அழகிய நடையில் உணர்வு கலந்து பாடிய சிறந்த பாட்டு அது. பாடி முடித்தபின் நண்பர் மொழிபெயர்த்த பாட்டில் உணர்வு ஒரு துளியும் இல்லையே; என்ன காரணம் என்று மேன்மேலும் எண்ணினேன்; எண்ணினேன் எண்பது கோடி. 'மொழிபெயர்ப்பு' என்ற தொடரைப் பற்றிய ஆராய்ச்சி வந்துற்றது.

சென்ற நூற்றாண்டில் ஆங்கிலத்திலிருந்து தமிழிற்கும், தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கும் கருத்துக்களைப் பெயர்த்தல் ஒரு கலையாக வளர்ந்துவந்தது. ட்ரான்ஸ்லேஷன் (Translation) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நேராகத் தமிழ்காணத் தலைப்பட்டவர் எவரோ, அறியேன். அதற்கு உரிய சொல் அவர்க்கு எளிதில் வந்தது. 'மொழி பெயர்ப்பு' என்பது அவர் கண்ட சொல்.

அவர் அந்தச் சொல்லை ஆக்கினார் என்பது தவறு: போற்றினார் என்பதே பொருந்துவது. ஏன்? அது பழந்தமிழில் காணும் சொல்லே ஆகும்.

மொழி பெயர்ப்பு என்ற சொல்லைக் கேட்டதும், பலர்க்கும் பலவகை நினைவு தோன்றல்கூடும். பரீட்சை வினாத்தாள்களும், அவற்றில் நீண்டமைந்த ஆங்கில வாக்கியங்களும் இடையிடையே புதிய அரிய ஆங்கிலச் சொற்களும் ஒருவகை மயக்கமும் சிலர் நினைவிற்கு வரும். ஒரு பெரிய மேடையில் தலைவர் அமர்ந்திருக்க, வலப்புறத்தில் ஒருவரும் இடப்புறத்தில் மற்றொருவருமாக நிற்க, ஒருவர் ஆங்கிலத்தில் முழுநீளம் பேசி வியர்க்க, மற்றொருவர் அதைச் சாணளவிற்குக் குறைத்து உப்பின்றி உரைக்கக் கண்ட காட்சி சிலர் நினைவில் எழலாம். (அவ்விருவரும் தமிழராகவே இருத்தலும், அவருள் ஒருவர் "எனக்கு டமிள் பேச வராது. இங்லீஷில் பேசுவதற்காக மன்னிக்க வேணும்" என்று முன்னுரை கூறலும் இயற்கை.) 'துப்பு இங்கே', 'அத்துமீறி நடக்கிறவர்கள் தண்டிக்கப்படுவார்கள்' என்பன போன்றவைகளையும் சிலர் நினைத்தல் கூடும். வேதாரணியம் (மறைக்காடு), விருத்தாசலம் (முதுகுன்றம்) முதலான ஊர்களும் சிலர் நினைவிற்கு வரும். இங்ஙனம் நினைப்புக்கள் பல ஆகலாம். ஆனால் சங்கத்தமிழைச் சுவைத்த மனத்திற்கு மொழிபெயர்ப்பு என்றால் இவை வாரா. மற்று, எவை நினைவிற்கு வரும்? பண்டைத்தமிழர் இல்வாழ்க்கை, பொருள் வேட்கை, செல்வம் தேடிய சிறப்பு, பரபரப்பான கால்கள், சுறுசுறுப்பான மனம், காடு மேடு பாலை என்று தயங்காமல் ஏறுபோல் நடந்த பீடு நடை, பிறநாடுகளுக்குச் சென்று அந்நாட்டு மக்களுடன் பழகித் தமிழொலி பரப்பி மீண்ட வெற்றி—இவை யாவும் சங்கத்தமிழ்ச்சுவை அறிந்தவர் மறக்க முடியாதன. அகநானூறு என்னும் அருமணிப் பேழையுள் சில இடங்கள் மொழி பெயர்தலை அறிவிக்கும்.

இக்காலத்துப் பலர், செல்வம் என்றால் குசராத்தியரும் பிறரும் வைத்துள்ள கடைகளையும் அக்கடைகளில் நாட்டுச்செல்வும் சென்று குவிதலையும் எண்ணுவர். அக்காலத்து மக்களோ,

செல்வம் என்றால், வேங்கடமலை கடந்து வடநாடுகளுக்குச் சென்று உண்மையுடனும் ஊக்கத்துடனும் வீரத்துடனும் வாணிகம் செய்து உழைத்த உழைப்பின் பயனாய்த் திரண்டு தமிழ்வீடு நோக்கி வந்த அந்தச் செல்வத்தையே எண்ணினர். அன்று அவ்வாறு நாடு கடந்து சென்று செல்வம் சேர்க்க விரும்பிப் பிரிந்த குடும்பத் தலைவனைப் பற்றிய பாடல்கள் மேற்குறித்த அருமணிப்பேழையுள் உள்ளன. சில அடிகள் வருமாறு,—

சென்றார் என்பிலர் தோழி............
தமிழ்கெழு மூவர் காக்கும்
மொழிபெயர் தேஎத்த பன்மலை இறந்தே. (அகநா. 31)
கல்லா மழவர் வில்லிடந் தழீஇ
வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை
மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்
பழிதீர் காதலர் சென்ற நாட்டே. (ஷை 127)
கல்பிறங்கு ஆரிடை விலங்கிய
சொல்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே, (ஷை 205)
பனிபடு சோலை வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேஎத்தர் ஆயினும் நல்குவர். (ஷை 211)
எவனாய்ந் தனர்கொல் தோழி............
சொல்பெயர் தேஎத்த சுரனிறந் தோரே. (ஷை 349)

இவ்வாறு தமிழர் வாழ்ந்த நல்வாழ்வை நினைவூட்டுகின்றது மொழி பெயர்ப்பு என்ற சொல். மொழிபெயர்ப்பு என்று அமைக்காமல் சொற்பெயர்ப்பு என்றோ எழுத்துப் பெயர்ப்பு என்றோ அமைத்திருப்பின் தொல்லையாக முடிந்திருக்கும் போலும்!

ஒருநாள் தபாலில் அழைப்பிதழ் இரண்டு வந்தன. ஒன்று தமிழ்; மற்றொன்று ஆங்கிலம். தமிழை முதலில் படித்தேன். ஒரு சங்கத்தின் ஆண்டு விழாக் கூட்டத்திற்கு வருமாறு அழைத்த அழைப்பு அது. அதில் இருந்த ஒரு வாக்கியம்: "இந்தக் கூட்டத்திற்கு வருமாறு நீங்கள் வேண்டிக்கொள்ளப்படுகிறீர்கள்." இந்தத் தமிழ் எனக்கு எட்டிக் கசப்பாக இருந்தது. ஆனால் அனுப்பின சங்கத்தாரோ தமிழ்ப்பற்று மிகுந்தவர்கள்.

அவர்கள் செய்யும் தமிழ்த்தொண்டோ மிகப்பெரிது. அத் தமிழ்ப் பற்றையும் தமிழ்த்தொண்டையும் நினைந்தேன். இனிய நினைப்பு ஆதலின் கசப்பு ஒருவாறு மாறியது. பிறகு ஆங்கிலத்தில் உள்ள அழைப்பிதழைப் படித்தேன். "You are requested to attend the meeting" என்று எழுதியிருந்தது. மொழிபெயர்க்கும் முயற்சியால் விளைந்த தீமை என்று உடனே உணர்ந்தேன். அந்த ஆங்கில வாக்கியத்திலுள்ள எல்லாச் சொற்களையும் அப்படியே தமிழாக்கி எழுதினது பிழையாகும். அதுதான் **சொற் பெயர்ப்பு** என்பது. இஃது ஒரு சிறிய உதாரணம். எவ்வளவோ நூல்கள் தமிழில் அவ்வாறு எழுதப்பட்டுள்ளன. அவற்றைப் படிக்கும்போதே சொற்பெயர்ப்பு என்பதன் தீங்கினை உணரலாம். தபால் விதிகளும் ரயில் விதிகளும் இவை போன்றவைகளும் தமிழில் உள்ளவை இந்த இனத்தில் சேரும். ஒரு மொழியின் உயிர், எழுத்திலும் சொல்லிலுமே இருப்பதாகாது. அது வாக்கிய அமைப்பிலேயே வாழ்வதாகும். இந்த உண்மையை மறந்தவர்கள் எழுதும் தமிழ் இப்படித்தான் நெளியும்.

ஆங்கிலம், இங்கிலாந்து, ஐரோப்பா, கிறித்து முதலான சொற்கள் தமிழ் வடிவாக அமைந்துள்ள அழகு போற்றத் தகுந்தது. ஆனால், இக்காலத்துப் பத்திரிகை ஆசிரியர்கள் சிலர் நூற்றாண்டுகளுக்குமுன் பிறந்திருந்தால், இங்கிலீஷ், இங்கிலாண்ட், யூரப், கிரைஸ்ட் என்றே எழுதல்வேண்டும் என்று ஓர் இயக்கம் தொடங்கியிருப்பார்கள். நல்ல காலமாக அந்தச் சொற்கள் தப்பிப் பிழைத்தன. பிறமொழி எழுத்துக்களையும் அப்படியே பெயர்த்து எழுதவேண்டும் என்று இக்காலத்தினர் சிலர் விரும்புகின்றனர். அதைத்தான் **எழுத்துப் பெயர்ப்பு** எனல் வேண்டும். சீன மக்களிடம் சென்று 'கிரைஸ்ட்' என்று சொல்லுமாறு வற்புறுத்தினால் அவர்கள் நகைப்பார்கள். 'கிலிசெது' என்று ஒலிக்கக் கேட்பதிலன்றோ சீனத் தலைவர் சியாங் கே ஷேக் என்பாரும் ஆங்கிலம் அறிந்த அவர் துணைவியாரும் மகிழ்வார்கள்? சப்பானியரும் 'க்ரைஸ்ட்' என்பதில்லை; 'கிரிசெது' என்பார்கள். எழுத்துப் பெயர்ப்பிற்கு அவர்கள் மனம் பெயர

வில்லை. ஆங்கிலேயர் 'திருநெல்வேலி' என்னாமல் 'டின்னவெலி' என்று தம் ஒலியியலுக்கு ஏற்பக் கூறுவர். எழுத்துப் பெயர்ப்பிலும் சொற்பெயர்ப்பிலும் நோக்கம் செலுத்தித் தாய்மொழியினை மறப்பவர் அவர்கள் அல்லர். தாயை வருத்திப் பேயும் பூதமும் களிக்க விருந்திடுவோர் அவர்கள் அல்லர்.

ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை

என்று திருவள்ளுவர் வகுத்த பேதையர் இனத்துள் சேர்வோர் அவர்கள் அல்லர்.

நண்பர் கொணர்ந்த பாட்டில் எழுத்துப்பெயர்ப்போ, சொற்பெயர்ப்போ இல்லை. ஆயினும் பாட்டின்பம் பெருமைக்குக் காரணம் என்ன? மொழிபெயர்ப்பு என்று எவற்றையும் மொழிபெயர்த்திடல் முடியாது. திருவாசகத்தைப் பல ஆண்டுகள் பாடிப் படித்து உருகி உணர்ந்த அறிஞர் போப் என்பவரின் பேருழைப்பின் பயனாக வெளிவந்துள்ள ஆங்கில மொழிபெயர்ப்பான திருவாசகத்தை நோக்கினால் உண்மை விளங்கும். உயிரின் உணர்வு இன்றி மூளையின் உழைப்பு மட்டும் கொண்டு வெளிவந்த நூல்களை மொழிபெயர்த்திடலாம். வரலாறுகள், கலைநூல் முதலியன, அவைபற்றிய ஆராய்ச்சிகள், அரசியல் சட்டங்கள், சங்கவிதிகள், உலக நிகழ்ச்சிகள் முதலானவற்றை மொழிபெயர்த்தல் கூடும். உணர்வு மிகுதியாகக் கலந்த சிறந்த பாடல்களையும் நாடகங்களையும் கட்டுரைகளையும் மொழிபெயர்த்தல் எளிதன்று. இவற்றை அருளியுதவும் இயற்கையறிவு வாய்ந்த புலவர் எல்லாவற்றையும் வெளிப்பட உரைப்பாரல்லர். சிலவற்றை வெளிப்பட உரைப்பர்; சிலவற்றைக் குறிப்பால் புலப்படுத்துவர்; சிலவற்றைக் கூறாது விடுத்து ஒழியிசை யாக்குவர். வெளிப்பட உரைப்பனவே மொழிபெயர்ப்புக்கு இயையும். மற்றவை இயையா. குறிப்பிலும் ஒழியிசையிலுமே புலவர் உணர்வு கலந்து வாழும். ஆதலின், நண்பர் மொழிபெயர்த்த பாட்டில் உணர்வு இல்லா வறுமை கண்டேன். அது போன்ற பாட்டுக்களை உயிரில்லாப் பாட்டுக்கள் எனலாம். இயற்கையறிவு வாய்ந்தவர் இத்தகைய மொழிபெயர்ப்பில்

காலம் கழித்தல் ஆகாது. மொழிபெயர்ப்பில் மூழ்ந்தால் இயற்கையறிவினை இழந்து விடுவர். இதனை நண்பருக்கு மற்றொரு நாள் சுட்டிக் காட்டினேன்.

தமிழ்மாணவர் எனப் புகழ்பெற விரும்பிய அறிஞர் போப் போன்றவர் மேற்கொண்ட முயற்சியைக் குறைகூறுதல் தக்கது அன்று. மொழிபெயர்ப்பின் குறையே அன்றி மொழி பெயர்ப்போர் குறை அன்று எனலாம். அறிஞர் போப் முயற்சியால்தான், இன்று ஆங்கிலம் அறிந்த பிறநாட்டினரும், தமிழ் அறியாத் தமிழ் நாட்டினரும் திருவாசகம், திருக்குறள், நாலடியார் என்பன என்ன என்று அறியமுடிகின்றது. அது போலவே, டென்னிசன் மொழிபெயர்ப்புப் பாட்டும் உணர்வு ஊட்டாவிடினும் இன்னது என்று அறிவிக்கும். கீதாஞ்சலி ஆசிரியர் தாகூர் அதனை வங்காளி மொழியில் பாடினார். அவரே அதனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்; நோபெல் பரிசும் பெற்றார்; உலகப் புகழும் உற்றார். ஆனால் ஆங்கிலேயருள் அறிஞர் சிலர் மொழிபெயர்ப்பைப் படித்த அளவில் அமையாமல், வங்காளி மொழியினைக் கற்று, அம்மொழியில் அந்நூலைப் பாடி இன்புற்றனர். எனினும் அவர்கள் பெற்ற இன்பம், வங்காளியைத் தாய்மொழியாகக் கொண்ட அறிஞர் ஒருவர் பெறும் இன்பத்தில் ஒரு பகுதியே ஆகும்.

பிறநாட்டுக் கலைகளின் இயல்பை அறிவதற்காக மொழி பெயர்ப்பு நூல்களின் துணை வேண்டும். ஆனால் பாட்டின்பத்திற்காக மொழிபெயர்ப்பை நாடுவதில் பயனில்லை. தமிழில் பாட்டுக்குப் பஞ்சம் இல்லை. புலமைக்குத் தமிழ்நாடு பேர்பெற்றது. திருவள்ளுவர், இளங்கோவடிகள், மாணிக்கவாசகர், ஆண்டாள், குமரகுருபரர் முதலானோர் பிறந்த நாட்டில் பிறந்து, அவர்கள் பேசிய மொழி பேசி, அவர்கள் வளர்த்த நாகரிகத்திலும் ஒருவாறு வளர்ந்து, அவர்கள் பாடிய பாட்டுக்களை அந்தத் தாய் மொழியிலேயே பாடி இன்புறும் பேறு பெற்றதை நினைக்க நினைக்க மனம் இறுமாப்பு உறுகின்றது. அத்தகைய தாய்மொழியைத் தக்கமுறையில் போற்றுவோரும் போற்றுவோர்க்குத் துணை ஆற்றுவோரும் பெருகவில்லையே என்று ஏக்கமும் உறுகின்றது.

# பெண் அஃறிணையா?

"'அம்மா சமையல் செய்கிறாள்', 'அத்தை பணம் தருவாள்,' அக்கா கடிதம் எழுதினாள்', 'தங்கை பள்ளிக்கூடம் போயிருக்கிறாள்' என்று சிலர் பேசுகின்றனர். 'செவி கைப்பச் சொற்பொறுத்தல்' என்பது இச்சொற்றொடர்களைக் கேட்டுப் பொறுத்தலே" என்றார் ஒருவர்.

"இச்சொற்றொடர்களில் எழுவாய் பயனிலை பிழை ஒன்றும் இல்லையே. அம்மை, அத்தை, தமக்கை, தங்கை என்பவை உயர்திணைப் பெண்பாற் பெயர்கள். செய்கிறாள், தருவாள், எழுதினாள், போயிருக்கிறாள் என்பவை அத்திணையும் பாலும் குறிக்கும் வினைமுற்றுக்கள். ஆதலால் இவை தவறுதல் இல்லையே!!" என்றார் மற்றொருவர்.

"ஐயா! இலக்கணப் பிழைபற்றி இங்குப் பேச்சு வேண்டா. பொருளைக் காண்க. திணையோ பாலோ வேண்டா. அவள் என்றும், இவள் என்றும், வந்தாள் என்றும், செய்கிறாள் என்றும் பேசுதல் நாகரிகமா?" என்றார் முன்னவர்.

"ஓ! அப்படியானால், 'அம்மா சமையல் செய்கிறார்' 'செய்கிறார்கள் (செய்கிறாங்க) முதலான சொற்றொடர்களால் பேசுதல் வேண்டும் போலும். அர் ஆர் என்னும் விகுதிகளும், கள் என்னும் விகுதிமேல் விகுதியும் சேர்ந்தாலேதான் நாகரிகமும் மதிப்பும் உண்டு என்று கருதுகின்றீரே! வெறுஞ்சொற்களால்—சில விகுதிகளால் மதிக்கும் மதிப்புத்தானா சிறந்தது? இதுதானா தமிழர் நாகரிகம்?" என்று மற்றவர் கூறினார்.

முன்னவர் அமைதி இழந்தார். தம்மை மறந்து பேசத் தொடங்கினார். "நன்று, நன்று; சொற்களால் மதிக்கும் மதிப்புத் தங்களுக்கு வேண்டா போலும்! பெண்ணை மதிக்கும் மதிப்புத் தங்களுக்கு வேண்டாபோலும்! பெண்ணைக் குறிக்கும்

போதுமட்டும் இவ்வாறு பேசுகின்றீரே! ஆணைக்குறித்து உமது. கருத்து என்ன? 'அப்பா ஊருக்குப் போகிறன்' 'மாமன் பணம் தருவான்' என்று நீர் பேசுகின்றீரா? இல்லையே. 'அப்பா ஊருக்குப் போகிறார்' அல்லது 'போகிறார்கள்', 'மாமா பணம் தருவார்' அல்லது 'தருவார்கள்' என்று பேசுகின்றீர். 'பாதர் (Father) வந்தார்' என்று மதிப்புடன் சொல்லும் வாயால் 'மதர் (Mother) வந்தாள்' என்று சொல்லுகின்றீர். 'பிரதர் (Brother) சொன்னார்' என்ற ஆங்கில வாயால் 'சிஸ்டர் (Sister) சொன்னாள்' என்கின்றீர். இந்த வேறுபாடு ஏன்? விகுதிகளால் மதிக்கும் மதிப்பு உம்மிடம் இல்லையோ?" என்றார்.

உடனே, மற்றவர் பரபரப்புடன் சில கருத்துக்களைக்கூறத் தொடங்கினார். "அப்படியா? 'தமக்கை வந்தாள்' என்று சொல்லுகின்ற முறை ஒரு வகையில் ஏற்புடையதே ஆகும். ஆங்கில மொழியை ஆராய்க. ஒருவனையோ ஒருத்தியையோ அவர் என்று கூறும் வழக்கு அம்மொழியில் இல்லை. ஆணை 'ஹி (He)' என்றே வழங்குவர்; பெண்ணை 'ஷி (She)' என்றே வழங்குவர். அந்த முறை பகுத்தறிவுக்கு இயைந்தது. எனவே, 'தமக்கை வந்தாள்', 'தங்கை போனாள்' என்று பேசுதல் குற்றமாகாதே! ஆனால், 'தமக்கை வந்தது' தங்கை போனது' என்று நீர் பேசுகின்றீரே! அது நாகரிகந்தானா? உம்முடைய கண்ணுக்குப் பெண் உயர்திணையாகத் தெரிவதில்லையோ? 'நாய் போனது' 'பூனை வந்தது' என்பது போல, பெண் ஒருத்தியைக் குறிக்கும்போது 'போனது, வந்தது' என்று பேசுதல் தகுமோ? அன்றி, பெண் உயிரில்லாத பொருளோ? மரம், கல் முதலியவற்றிற்கு ஒப்பாகக் கருதுகின்றீரோ? அது போனதாம், இது வந்ததாம்—நல்ல பேச்சு ஐயா! தமக்கையையும், தங்கையையும் சுட்டிப் பேசும் போது என்ன சொல்லுகின்றீர்? அது சொன்னது, இது கேட்டது என்கிறீர். தமக்கையும் தங்கையும் அதுவும் இதுவுமா? எண்ணிப்பார்த்தால் குறை தெரியும் ஐயா? 'ஏதிலார் குற்றம் போல் தம் குற்றம்' காணல் வேண்டாவோ?" என்று பேசிக்கொண்டே போனார்.

அவர்தம் பேச்சு முடிவுபெறவில்லை. அப்பேச்சு விளக்குவது என்ன? பிற்காலத் தமிழில் பெண் உற்ற சிறுமையை விளக்குகின்றது என்னலாம். ஆணை மதித்து உயர்வாகக் கூறியவர் பெண்ணை உயர்த்தாது விட்டது தவறன்றோ?

சொற்பொருளமைதியிற் சிறந்தது தமிழ்மொழி. அத்துறையில் உலகில் வேறொரு மொழி இதற்கு இணையெனக் கூறல் இயலாது. இது மொழியியல் ஆராய்ச்சியாளர் அனைவரும் அறிந்த உண்மையாகும். பெண்ணுரிமையைப் போற்றும் அகப்பொருள் நுட்பங்களை இலக்கண நூல்களாகவும் இன்சுவைப் பாட்டுக்களாகவும் எடுத்தோதும் சிறப்புடையது இச்சீரிய மொழியே. இத்தகைய மொழியில் பேச்சு வழக்கில் நுழைந்து இடம் பெற்ற குறை எத்தகையது? 'பழையன கழிதலும் புதியனபுகுதலும்வழுவல' என்பது உண்மையே ஆயின் ஒரு நாட்டு மக்களின் உயர்ந்த நாகரிகத்துக்கு இழிவைத் தருவதொன்று புதியதாய்ப் புகுதலும், சிறப்பைத் தருவதொன்று பழையதாய்க் கழிதலும் அழகோ?

ஆணை உயர்த்தப் புகுந்த மக்கள் பெண்ணை உயர்த்தாது விட்டனர்; அவ்வளவில் நிற்காமல், பெண்ணைத் தாழ்த்தவும் தொடங்கினரே! உயர்திணையில் பெண்பாலாக இருந்த ஒருத்தி அஃறிணையில் ஒன்றன் பாலாக ஆயினளே! அவளும் இவளும் 'அது' 'இது' ஆதல், 'வந்தது' 'சொன்னது' எனல்—ஆகிய இவை அறிவிப்பது என்ன? பகுத்தறிவில்லாத ஒன்றையன்றோ அஃறிணை என்று இலக்கணம் கூறுகின்றது? பெண்ணுக்குப் பகுத்தறிவு இல்லையோ?

தமிழில் இக்குறை பேச்சு வழக்கில்மட்டும் உள்ளது என்னலாம். இலக்கணமாக எழுதுகையில் இதற்கு இடமில்லை. ஆனால், தெலுங்கு, கோண்டு (Gond) இருமொழிகளிலும் ஒருத்தியை உணர்த்தும் பெண்பால் இல்லை. ஒருத்தியைக் குறிக்க அஃறிணை ஒன்றன்பாலை யன்றோ வழங்குகின்றனர்? ஒருத்தியைக் குறிக்கும் சுட்டுப் பெயர்களையும் வினைமுற்றுக்களையும் அஃறிணையாகவே அமைத்துள்ளனர். அரசியைக் குறிக்கும்

போதும் 'அதி' 'இதி' (அது, இது) என்பர்; திருமகள் கலைமகள் முதலான பெண்தெய்வங்களைக் குறிக்கும் போதும் 'அதி' 'இதி' என்று சுட்டுதல் உண்டு. எத்துணை உயர்வு பெற்ற பெண்ணை யும் அஃறிணை ஒருமையாகச் சுட்டுகின்றனர். தெலுங்கில் பெண்பாலைக் குறிக்கும் சில பழஞ்சொற்கள் உள்ளன. ஆனால் அவை அருகி வழங்குகின்றன.

ஆணை அவனு என்றும், அவன் வந்தான் என்றும் கூறும் இலக்கணம் பெண்ணை அது என்றும், அது வந் தது என்றும் கூறுதல் வியப்பன்றோ? **பெண்பாற் பெயர் களை அஃறிணைப் பெயர்கள் (அமறுத்) என்றே தெலுங்கு மொழியின் இலக்கணம் கூறுகின்றது.** தெலுங்கு பேசும் மக்கள் இருநூறுயிரவர்க்கு மேற்பட்டவர் அனைவரும் இவ்வாறே பேசுகின்றனர்; 'அவள்' என்று தமிழில் உள்ளதுபோலத் தெலுங்கில் ஒரு சொல் இல்லையே; ஆயினும், பெண்டிர் பலரைக் குறிக்கும்போது அவைகள் என்று சொல் லாமல், அவர்கள் என்றே வழங்குகின்றனர்.

துதவரும் (Tudas) கோடரும் (Kotas) ஆணாயினும் பெண் ணினும் விலங்காயினும் கல்லாயினும் அது என்று திணைப் பாகு பாடு இன்றியே கூறுவர். அவர்தம் சுட்டுக்களில் ஆண் பெண் வேறுபாடும் இல்லையாதலின், ஈண்டு ஆராய்தல் வேண்டா.

தமிழில் அமைந்துள்ள மொழியியற் சிறப்புக்களுள் திணைப் பாகுபாடும் ஒன்று. அதனைக்குறித்துக் கால்டுவெல் என்னும் அறிஞர் கூறும் மொழிகள் போற்றற்குரியன;—

"திராவிட மொழிகளின் திணைப்பாகுபாடு இந்தோ ஐரோப் பிய மொழிகளிலும் செமிடிக் மொழிகளிலும் உள்ள பாகுபாடு போன்று கற்பனையால் ஆகியது அன்று; சிறந்த தத்துவ உணர் வால் ஆகியது என்பது தெளிவு. **பகுத்தறிவு உடை யவை, பகுத்தறிவு இல்லாதவை என்ற பிரிவு சிறப்பும் இன்றியமையாமையும் உடையதன்றோ?"**

"உயிருள்ளனவற்றின் பெயர்களுக்கு ஒரு பன்மை விகுதியும் உயிரில்லனவற்றின் பெயர்களுக்கு மற்றொரு பன்மை விகுதியும் சேர்த்து வழங்குவது பாரசீகமொழி ஒன்றே. அந்த மொழி ஒன்றே திராவிடமொழிகளோடு இவ்வகையில் ஒருபுடை ஒப்புமை உடையதாகும். ஆனால் அந்த ஒப்புமை மிகச்சிறிதே. எனவே, திராவிட மொழிகளின் திணையிலக்கணம் தனிச் சிறப்புடைய தொன்றாகும். இஃது அறிவும் இலக்கணமும் வளர்ந்து மேம்பட்டதன் பயனே ஆகும்."

இவ்விழுமிய கருத்துக்கள் திராவிடமொழிகளின் திணையிலக்கணத்தைப் போற்றுகின்றன. இது திராவிடமொழிகள் எல்லாவற்றிற்கும் உரியதொன்றே. ஆயினும், பிறமொழிக்கலப்பால் கன்னடம், மலையாளம் முதலியன திணையிலக்கணம் இழந்தன. தமிழும் தெலுங்குமே இவ்விலக்கணம் உடையனவாக விளங்குகின்றன. இவற்றுள்ளும், தெலுங்கு, பெண்ணை உயர்திணை எனக் கூறல் மறந்து அஃறிணையாக்கி விட்டது; இலக்கணமும் எழுதிவிட்டது. தமிழோ பேச்சு வழக்கில் அந்நோய்க்கு இடந்தந்துள்ளது.

# 'இந்தி'யின் தாய்

எல்லா மொழிகளும் வடமொழியினின்றும் பிறந்தன என்றே இந்நாட்டுப் புலவருள் பெரும்பான்மையோர் கருதிவந்தனர். இந்நூற்றாண்டின் தொடக்கத்திலும், வடமொழியின் சொற்கள் எல்லா மொழிகளிலும் கலந்திருத்தலால், அம்மொழியே பிறமொழிகளெல்லாவற்றிற்கும் தாய் என்று புலவர் சிலர் தத்தம் நூல்களில் எழுதியுள்ளனர். முதனிலை இன்னது என்று அறியப்படாத பகுபதம் எதனையும் அது வடசொல்லாயிருத்தல் கூடும் என்று மாணவர்க்கு அறிவிப்பதே தமிழாசிரியர் சிலர்க்கு எளியதொரு வழியாக இருந்துவந்தது. வடமொழி சிறிது கற்றவர், வடநூற் சூத்திரங்களை எடுத்துக் கூறி, எல்லாச் சொற்களுக்கும் முதனிலை வடமொழியில் இருப்பதாக நாட்ட முயன்று வந்தனர். "கண் என்பது தமிழ்ச் சொல் அன்று; கன்னு என்று தெலுங்கில் வழங்குதலால், அது வடமொழியாயிருத்தல் வேண்டும்" என்று ஒருசமயம் ஆசிரியர் ஒருவர் கூறியது நினைவிற்கு வருகின்றது. 'செப்பு முதலிய சொற்கள் தெலுங்கில் வழங்குதலால் அவை தமிழ்ச்சொற்கள் அல்ல' என்பார் சிலர் இன்றும் உள்ளனர்.

இவையெல்லாம் நிற்க; தமிழ் உயர்தனிச் செம்மொழி; வடமொழியின் துணைவேண்டாது வாழவல்ல தனிமொழி என்னும் உண்மையை உணர்ந்தும் வாய்விட்டுக் கூறுதற்கு அறிஞர் அஞ்சி வாழ்ந்த காலம் உண்டு. மொழிநூலாராய்ச்சியில் தலைசிறந்த அறிஞர் கால்டுவெல், 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற தம் நூலில் பலவகையானும் திறம்பட ஆராய்ந்து இவ்வுண்மையை எழுதியுள்ளார். உண்மையை எழுதிய குற்றத்தால், "அந்நூல் தவறான கொள்கைகளைக் கூறுவது; பயனற்றது; ஆராய்ச்சிக்கு உதவாதது; இந்திய மொழிகளின் இயல்பு அறியாத ஒருவர் இயற்றியது" என்று பலரும் ஒதுக்கிவந்தனர். தமிழறிஞர் வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் போன்றார்,

அவ்வுண்மையினையே எடுத்தெடுத்துக் கூறி வற்புறுத்தி நூல்கள் எழுதி மறைந்த பின்னரும், இன்னும் அறிஞர்கால்டுவெல்லைப் போற்ற மனங்கொள்ளாது வெறுத்து வேறுபட்டு ஒதுக்கும் சிலர் உள்ளனர்.

தமிழ் மொழிக்குள்ள ஆற்றலைப் பயன்படுத்த விழைந்த அறிஞர் எழுதிய தமிழ் நடையைக் கண்டு மனம் வெதும்பி வந்தனர் சிலர்; மணிப் பிரவாள நடையே மாண்புடையது என்று நிலைநாட்டத் தாம் முயன்ற முயற்சிகள் வீணானமை குறித்து அவர் மனங் கவன்றனர்; நல்ல தமிழ் நடையில் எழுதுவோரைக் கண்டபோதெல்லாம் விழித்து விழித்துப் பார்த்துப் பலவகையாலும் ஐயுற்றனர்.

ஆயினும் மாறுதல் தொடங்கிவிட்டது; உண்மைகள் பல விளங்கிவிட்டன. வடமொழியிலிருந்து தமிழ் பல சொற்களைக் கடன் வாங்கிக்கொண்டது; அது மொழிகளின் இயற்கை. வட மொழியும் திராவிட மொழியிலிருந்து சில சொற்களைக் கடன் வாங்கியுள்ளது. சொற்களையே அல்லாமல் எழுத்துக்களையும் கடன் வாங்கியுள்ளது. சொற்றொடரமைப்பிலும் வடமொழி அடைந்த சில மாறுதல்களுக்குத் திராவிட மொழியே காரணம். இந்தி, குசராத்தி, வங்காளி முதலிய வடநாட்டு மொழிகளில் திராவிட ஒலிகளும் சொற்களும் பல உள்ளன. இந்தி முதலிய மொழிகளின் இலக்கண அமைப்புத் திராவிட மொழியின் கூட்டுறவால் ஏற்பட்டதே என்றும், அக்காரணத்தால், அவற்றைத் திராவிட மொழியின் சிதைவு என்பது பொருந்துவதே என்றும் இன்று அறிஞர்கள் எடுத்துக்காட்டுகின்றனர். தமிழ் வட மொழியினின்றும் தோன்றியதன்று என்ற கூற அஞ்சிய நிலை போய், இந்தி முதலிய வடநாட்டு மொழிகளும் திராவிட அடிப்படை உடையனவே என அறிஞர் நிறுவும் காலம் இக்காலம். எனவே, உண்மையைக் கூற இனி அஞ்சுதல் வேண்டா. தமிழ், தெலுங்கு முதலிய திராவிட மொழிகள் நேற்று வந்த ஆங்கிலத்திலிருந்து பிறந்தன என்பது எத்துணை உண்மையோ, அத்துணை உண்மையே அவை வடமொழியிலிருந்து பிறந்தன என்பார் கூற்றும் எனலாம்.

ஆந்திர சப்த சிந்தாமணி, ஆந்திரா பாஷா பூஷணமு, பால வியாகரணமு முதலான தெலுங்கு இலக்கண நூல்களில் தெலுங்கு மொழியானது விக்ருதிகளுள் (சம்ஸ்கிருத பிராகிருதங்களிலிருந்து பிறந்த மொழிகளுள்) ஒன்று என்பது கூறப்பட்டுள்ளது. ஆனால், இன்று, தெலுங்கு மொழிப்பற்றும் ஆராய்ச்சியும் வல்லார் எவரும் அஃது உண்மை என்று உடன்படுகின்றாரல்லர். மொழிகளின் பாகுபாடு (On the Classification of Languages) என்ற நூலாசிரியர் குஸ்தவ ஆப்பெர்ட் (Gustave oppert) என்பார், மொழியியல் இன்னதென விளக்குகையில், பின்வருமாறு கூறுகின்றார்:—"ஒரு மொழி பிறிதொரு மொழியினின்றும் எவ்வளவு சொற்கள் வேண்டுமாயினும் கடன் வாங்கலாம்; தன் ஒலிமுறைக்கேற்ப அவற்றை அமைத்துக்கொண்டு வழங்கலாம். ஆனால் அக்காரணத்தால் அதன் இயல் வேறுபடாது. அது தன் இலக்கண அமைப்பினை—சொற்றொடர் யாப்பு முதலியவற்றை—மாற்றல் இயலாது; மாற்றத் தொடங்கினால் அதன் இயல் வேறுபடாதிராது. ஏன் எனின், எண்ணங்கள் உள்ளத்தில் தோன்றி வளரும் முறையினையே இலக்கண அமைப்புக் காட்டுகின்றபடியால், அந்த அமைப்பினை மாற்ற வல்ல ஆற்றல் எவரிடமும் இல்லை என்க."

எனவே, ஒரு மொழி எதினின்றும் பிறந்தது, எவ்வினத்தைச் சார்ந்தது என ஆராய்வதற்கு முன்னர், ஆராய்ச்சியாளர்க்கு இன்றியமையாக் கடமை என்ன? அஃது எம்மொழியினின்றும் சொற்களைக் கொண்டது என்ற ஆராய்ச்சி போதாது; வேண்டாததுமாம். அம்மொழியின் இலக்கண அமைப்பு எதனால் ஏற்பட்டது, அம்மொழி இலக்கண அமைப்பால் எதனை ஒத்திருக்கின்றது என்பனவே ஆராயத்தக்கனவாகும். அத்தகைய ஆராய்ச்சியில் தேர்ந்த தெலுங்கு மொழிப் புலவர், இன்று, "தெலுங்கு விக்ருதிகளுள் ஒன்று அன்று" எனக் கூறும் கூற்றே உண்மையானதன்றோ? வடமொழியோடு தொன்றுதொட்ட தொடர்பும் நெருங்கிய கலப்பும் தெலுங்கு மொழிக்கு உள்ளதுபோலத் தென்னிந்திய மொழிகள் பிறவற்றிற்கு இல்லை. வடசொற்களும் ஒலிகளும் தெலுங்கு மொழியில்

மிகப் பலவாய் உள்ளமையும், வடமொழிப் புலவர்களே தெலுங்கு மொழியில் இலக்கிய இலக்கண நூல்கள் பல எழுதிய போக்கும் நோக்க, தெலுங்கு திராவிட மொழியினத்தைச் சேர்ந்ததோ என்ற ஐயம் எழுதல் இயல்பு. அத்தகைய மொழியைப் பற்றிய உண்மையும் இன்று தெற்றெனவிளங்கலாயிற்றன்றோ? தமிழ் முதலிய பிற திராவிட மொழிகளைக் குறித்துக் கூற வேண்டுவதே யில்லை.

இவ்வாறு மொழியியல் உண்மைகள் விளங்கும் இக் காலத்தே, இந்தி முதலான வட நாட்டு மொழிகளைப்பற்றி அறிஞர் கூறுவன என்ன எனக் காண்போம். அம்மொழிகளில் உள்ளசொற்களை ஆராயின், வடமொழியில் இல்லாத சொற்கள் பல இருத்தல் காணப்படும். அச்சொற்கள் எம்மொழியைச் சார்ந்தவை, அவை இம்மொழிகளில் புகுந்த காரணங்கள் என்ன என்பன அறியாத இலக்கண ஆசிரியர்கள் அவற்றைத் தேசீயச் சொற்கள் என்ற பகுப்பில் அடக்குகின்றனர். ஆனால், அவை திராவிட மொழியின் சொற்கள் என்பதே உண்மையாகும். திராவிட மொழியின் சொற்கள் இந்தியிலும் பிறவற்றிலும் காணப்படல் வியக்கத்தக்கது அன்று. வடமொழியில் தொன்மைக்குப் பெயர்போன இருக்குவேதத்திலும் திராவிட மொழியின் சொற்கள் பல உள்ளன எனக் கூறி, வங்காளி மொழியின் தோற்றமும் வளர்ச்சியும் (TheOrigin and Development of the Benagli Language) என்ற நூலாசிரியர் சுனிதி குமார் சட்டர்ஜி என்பவர் பின்வரும் சொற்களை எடுத்துக் காட்டாகக் குறிக்கின்றார்: அணு, அரணி, கபி (குரங்கு) கர்மார (கருமான், கம்மான்), கால (காலம்), குட (குடில்), நீல (நீலம்), புஷ்ப (பூ), பூஜை (பூசை), பல (பழம்), பீஜ (பித்து, வித்து), மயூர (மயில்), ராத்திரி (இரா, இரவு), ரூப (உருவம்) முதலியன. பின்னர்த் தோன்றிய வடநூல்களில் மேன்மேலும் பற்பல சொற்கள் புகலாயின.

இந்தியிலுள்ள எழுத்துக்களுள், ட (t), ட (d), ண, ள என்பவை திராவிட மொழிக்கு உரியனவே. அவை வடமொழியிலும் உள்ளன எனினும், வடமொழிக்கு உரியன அல்ல. அம்

மொழியினர் திராவிட மொழியினரிடமிருந்து அவ்வொலிகளைக் கற்றனர்; தம் நூல்களிலும் புகுத்தினர்; நாளடைவில் பழகப் பழக, அவற்றைத் தம் மொழிக்கு உரியனவாகவே கொண்டனர். இதுவே உண்மை. அவை வட மொழிக்கு உரியவை எனின், லத்தீன், கிரீக்கு முதலிய இனமொழிகளிலும் இருத்தல் வேண்டுமன்றோ? அவ்வாறு இன்மையின், அவை இந்நாட்டுத் திராவிட மொழிகளுக்கே உரியவை என்பது தேற்றம்.

வீடு என்ற சொல்லுடன் 'கு' என்ற உருபைச் சேர்த்து வீட்டுக்கு என வழங்குதல் திராவிடமுறை. குவீடு என உருபை முன்னர்ச் சேர்த்து வழங்கல் இல்லை. ஐரோப்பிய மொழியமைப் பின்படி, அவ்வாறு உருபை முன்னர்ச்சேர்த்து வழங்கல் வேண்டும். டு தி ஹவுஸ் (to the house) என ஆங்கிலத்தில் உருபை முன்னர்ச் சேர்க்கும் முறை காண்க. இந்தியின் அமைப்பு எத்தகையது? கர் (வீடு) + கு (உருபு) — கர்க்கு எனத் தமிழிலுள்ளது போலவே உருபைப் பின்னுற் சேர்த்தல் இந்தியின் அமைப்பு. வட நாட்டு மொழிகள் எல்லாவற்றிலும் காணப்படுவது இத் திராவிட மொழியியலே; ஐரோப்பிய மொழியியல் அன்று. இங்ஙனமே, (வினைச் சொல்லாக்கம்) முதலான இலக்கணங்களிலும் இந்தி முதலிய மொழிகள் திராவிட மொழியைப் பின்பற்றி அமைந்துள்ளன.

வாக்கிய அமைப்பில் வடநாட்டு மொழிகள் எல்லாம் திராவிட மொழியினின்றும் வேறுபடவில்லை. "நான் தமிழ் கற்கிறேன்" என்பது தமிழ் வாக்கியம். "மை தமிள் பாட்தாஹும்" என்பது இந்தியில் அப்பொருள் அமைந்த வாக்கியம். 'ஐ ஆம் ஸ்டடியிங் டமிள்' என்பது ஆங்கிலம். பயனிலை வாக்கிய முடிவிலும், செய்யப்படுபொருள் அதனை அடுத்தும், எழுவாய் முதலியன ஏற்ற இடங்களிலும் தமிழில் அமைந்துள்ளவாறே, இந்தியிலும் வங்காளி முதலியவற்றிலும் அமைந்துள்ளன. தமிழ் வாக்கியங்களிலுள்ள அவ்வச் சொற்களுக்கும் உருபுகளுக்கும் பதிலாக வடநாட்டு மொழியின் சொற்களையும் உருபுகளையும் முறையே அமைத்தால் நல்ல மொழிபெயர்ப்பு ஆகிவிடும். ஆங்கில முதலிய ஐரோப்பிய மொழிகளில் உள்ள அமைப்பு முற்றும் வேறுபட்டதொன்றாகும்.

இவை சில கூறுகள். இவைபோன்ற எல்லாவற்றையும் மொழியியற் கண்கொண்டு ஆராய்ந்தால், இந்தி முதலிய மொழிகள் வடசொற் பெருக்கம் உடையனவேனும், அவற்றின் அமைப்புக்குக் காரணமான தாய்மொழி திராவிட மொழியா, ஐரோப்பிய மொழியா என்பது நன்கு விளங்கும்.

உண்மை இவ்வாறாக நிற்க, சில நூற்றாண்டுகளுக்குமுன் வட நாட்டுப் பிராகிருத இலக்கண ஆசிரியர்கள் "தென்னிந்திய மொழிகள் எல்லாம் விக்ருதிகளே" (சம்ஸ்கிருதத்தினின்றும் பிறந்தவைகளே) என எழுதிப் போந்ததன் காரணம் என்ன? அக்காலத்திற் கேற்ப அவர்கள் கொண்ட மொழிப்பற்றே அதற்குக் காரணமாயிற்று. ஆனால், இன்று இந்தி முதலிய மொழிகளெல்லாம் திராவிட மொழியினையே அடிப்படையாகக் கொண்டு அமைந்தன என அறிஞர் கூறுவதன் காரணம் அத்தகைய பற்று அன்று; மொழியியல் ஆராய்ச்சியேயாகும்.

# தலைச் சோறு

திராவிட மொழிகளுள் உயர்தனிச் செம்மொழியாகிய தமிழ் மொழியுடன் நெருங்கிய தொடர்புடையது மலையாளமே; அம்மொழியைத் தமிழிலிருந்து கிளைத்த மொழியாகக் கூறுதலும் பொருந்தும் என்று அறிஞர் **கால்டுவெல்** தமது அரிய ஆராய்ச்சி நூலில் விளக்கியுள்ளார். தமிழன்னையின் மணி வயிற்றில் உதித்தெழுந்த மொழிகளுள் மலையாளமும் ஒன்று என்பது **மனோன்மணீய நூலாசிரியர்** சுந்தரம் பிள்ளை என்னும் அறிஞரின் கருத்தாகும். நடுநிலை வாய்ந்த ஆராய்ச்சியாளர் அனைவரும் தமிழின் தொன்மையையும் மலையாளத்தின் தோற்றத்தையும் நன்கு அறிவர்.

**மலையாளம்** என்னும் பெயர் **மலை** என்னும் சொல்லினடியாகப் பிறந்தது; மலை—ஆள்—அம் எனப் பிரிக்கப்படும். வேளாளன், வில்லாளன் முதலியவற்றிற்போல, ஆள் என்னும் உறுப்பு ஈண்டும் உரிமைப் பொருளை உணர்த்துகின்றது. ஆதலின், அச்சொல் மலையுடைய நாடு என்னும் பொருள்படும். வட ஆற்காடு சில்லாவில் ஏலகிரி, சவ்வாது மலைகளின்மேல் உள்ள சிற்றூர்களைப் பொதுவாக மலையாளம் என்றும், அங்குக் வாழ்வோரை மலையாளிகள் என்றும் மக்கள் வழங்குதலிலும் இப்பொருள் உண்மை காணப்படும்.

**கேரம், கேரளம்** என்பன மலையாள நாட்டிற்குப் பெயராகப் பிறமொழிகளிலும் மலையாளத்திலும் காணப்படுகின்றன. அவை திரிந்த பெயர்களே ஆகும். மலையாளத்தில் **சேரலம், சேரம்** என்னும் பெயர்களும் பழைய நூல்களில் வழங்குகின்றனவாம். எனவே, 'சே' என்னும் எழுத்தே 'கே' என வடிவில் திரிந்து மாறி, **கேரம் கேரளம்**, என்னும் பெயர்களுக்கு இடந்தந்ததெனக் கொள்ளலாம். **சேரநாடு, சேரன், சேரல், சேரலன்** என்னும் சொற்கள் தமிழ்நூல்களில் வழங்குதலும் காண்க.

மொழியின் பெயரும் நாட்டின் பெயரும் ஆகிய இச் சொற்கள் தமிழ்ச் சொற்களா யிருத்தல் இங்ஙனம் விளங்குகின்றது. அன்றியும், கிழக்கு என்றும் மேற்கு என்றும் தமிழில் திசைகளைக் குறிக்க வழங்குஞ் சொற்கள் மலையாளத்திலும் அவ்வாறே உள்ளன. தமிழ் நாட்டில் வாழ்ந்த மக்கள் அப்பெயர்களை வழங்கினமை பொருத்தமேயாம். ஆனால் அவை பழஞ் சொற்கள் அல்ல. கிழக்கைக் குறிக்கும் பழஞ்சொல் குணக்கு என்பது. மேற்கைக் குறிக்கும் பழஞ்சொல் குடக்கு என்பது. குண திசையும் குடதிசையும் இடமாகக் கொண்டவைகளே கொண்டல், கோடை என்பவை. கிழக்கு, மேற்கு என்னும் சொற்கள் பரந்து வழங்கலாயின பிறகு இந்தப் பழஞ் சொற்கள் வழக்கு வீழ்ந்தன. எக்காரணம் பற்றிக் கிழக்கு என்றும் மேற்கு என்றும் கூறப்பட்டன? செல்லச் செல்லத் தாழ்ந்து விளங்கும் நிலப்பகுதியைக் கீழ் - கிழக்கு என்றும், உயர்ந்து உயர்ந்து குன்றுகளாகவும் மலைகளாகவும் விளங்கும் நிலப்பகுதியை மேல்—மேற்கு என்றும் அத்தமிழர் முதலில் குறித்திருப்பார்.

பின்னர், அச்சொற்களால் அவ்வத்திசைகளையும் வழங்கத் தொடங்கியிருப்பர். ஆனால் இச்சொற்களை மலையாள நாட்டு மக்கள் வழங்குவதில் பொருந்திய பொருள் காணோம். அவர்கள் கிழக்கு என்று வழங்கும் திசையில் குன்றும் மலையுஞ் செறிந்து நிலப்பகுதி மேலுயர்ந்து நிற்கின்றது. மேற்கு என்று வழங்கும் திசையில் நிலப்பகுதி மேற்பட்டு உயராமல் தாழ்ந்து செல்கிறது. ஆதலின், தமிழ் நாட்டிலிருந்து மக்கள் பலர் அங்குக் குடியேறினார்கள் என்பதும் அம்மக்கள் கிழக்கு மேற்கு என்னும் சொற்களை அவ்வாறே அங்கும் வழங்கினர் என்பதும் விளங்குகின்றன. அன்றியும் **படிந்நாறு படிந்நாயிறு** என்று மலையாள மொழியில் மேற்குத் திசையைக் குறிக்கப் பெரிதும் வழங்குகின்றனர். அவ்வழக்கும் ஆராயற்பாலதே. படுஞாயிறு என்னும் சொற்றொடர் தமிழில் கதிரவன் மறைவைக் குறிக்கும். பகலவன் மறைவுக்குரிய அத்திசையை அப்பெயரால் வழங்குதல் பொருந்துமன்றோ? ஆதலின் படுஞாயிறு என்னும் தொடர் படுநாயிறு - படிந்நாயிறு. - படிந்நாறு எனப் பலவாறு திரிபுற்றிருத்தல் வேண்டும்.

இவற்றை மலையாள மொழிப் பற்றுடையோரிடம் கூறின் அவர் உடன்படுதல் இல்லை. அன்னாரிடம் மொழிப்பற்று மிகுந்துள்ளவாறே ஆராய்ச்சியும் மிகுமாயின், உண்மை விளக்கம் ஏற்படும். இவ்வுண்மையை விளக்கும் நோக்கத்துடன் மலையாள நண்பர் ஒருவருடன் யான் உரையாடிக் கொண்டிருந்தேன். அவர் ஒருவாறு இசைந்தும் ஒருவாறு உடன்பட மறுத்தும் மறுமொழி கூறிக்கொண்டு வந்து இறுதியில் வாளா இருந்தார். அந்நிலையில் என்னுடைய நண்பராகிய மருத்துவர் (டாக்டர்) ஒருவர் இடையே புகுந்தார்; எங்கள் பேச்சிலுங் கலந்தார். வாளா இருந்த நண்பரை நோக்கி "ஐய! மலையாள மொழி தமிழுக்கு நிரம்பக் கடன்பட்டது. மலையாளத்தில் மூளையைக் குறிக்கும் சொல் கூறும்" என்றார். அவர் "உமக்குத்தெரியும் போல் இருக்கிறதே! **தலைச்சோறு**தானே? அதுவும் தமிழ் என்று சொல்லுகிறீர்" என்றார்.

யான் வியந்தேன். என்ன அழகிய சொல்! சோறு என்னும் இனிய செந்தமிழ்ச் சொல்லை இக்காலத்தே நாகரிகம் (போலி...!) உடையோர் தம் நாவால் கூறவும் கூசுகின்றனர்; பிறர் அச்சொல்லை வழங்கின், அவரைப் பட்டிக்காட்டார் என இகழும் குறிப்புடன் நோக்குகின்றனர். சிற்சில வேளைகளில் 'சாதம்' எனக் கூறித் திருத்தவும் முற்படுகின்றனர். ஆனால் அது தமிழொலி சான்ற இனிய சொல் அன்றோ? "உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலை" என்ற மொழியும் **திருவாய் மொழி** அன்றோ? சொல் என்னும் பெயருடைய நெல்லின் அரிசியால் சமைத்த உணவுக்கே **சோறு** (சொல் அது) என வழங்குதலே அன்றி, நாட்டுப்புறங்களில் வேறு சில சத்துப் பொருள்கட்கும் அச்சொல் வழங்குதல் உண்டு. பனஞ்சோறு, தென்னஞ்சோறு, ஈச்சஞ்சோறு என்பன, பனை, தென்னை, ஈந்து இவற்றின் தலையில் உள்ள செழும் பொருள் ஆகும். இவற்றின் குருத்தை அறுத்துக் குருத்தின் கீழ் உள்ள அச்செழும் பொருளை மக்கள் விரும்பி உண்டு மகிழ்தல் வழக்கம். மக்கள் தலையில் உள்ள **செழும் பொருளுக்கு—மூளைக்குத்—தலைச்சோறு** என்னும் அப்பெயர் அத்துணைப் பொருளமைதியுடன் முன்னோர்களால் வழக்கப்பட்டது!

இவ்வாறெல்லாம் எண்ணி மகிழ்ந்த நான் அந்த நண்பரை நோக்கினேன். "ஐய! நன்று, நன்று. வடமொழிக்கு வாயில்லை என்றார் தமிழ்ப் புலமை சான்ற **சூரிய நாராயண சாஸ்திரியார்**. அஃதே போன்று மலையாளத்திற்கு மூளையில்லை என்று கூறுதல் வேண்டா. அங்ஙனம் கூறின், நம்முடைய நண்பர் வருந்துவார். மலையாளத்திற்குத் தமிழ்மொழியே மூளை என்று கூறும்; அஃது அவர்க்கு வருத்தம் விளைக்காது" என்றேன். என்றதும் என் மனம் மாறியது. நண்பரை நோக்கினேன். "ஐய, மன்னிக்க. யான் கூறுவன எல்லாம் பழங்கதை. இன்று முன்னேற்றம் உங்களுடையதாகவே இருக்கின்றது. தமிழர்தாம் தாழ்நிலையுற்றுத் திகைக்கின்றார்கள். யான் பேசிய பழம் பெருமையால் பயன் இல்லை. இன்று தமிழர் செவிடர்களாய்க் குருடர்களாய் வாழ்கின்றார்கள். ஊமையர் அல்லர்; தமிழர் வாயாடிகளே; என்றாலும் பயன் இல்லை. தமிழர்க்குத் தலைச்சோறு போய்விட்டது போலும்!" என்றேன். நண்பர் ஒரு பெருமூச்சுவிட்டார்; "இரவு உண்டேல், பகலும் உண்டு; தமிழ்ப்பகல் வரும்" என்றார்; உண்மையே.

# “நிற்பது கூடாது”

யான் ஆறும் வகுப்பில் கற்றபோது எனக்குத் தமிழ் இலக்கணம் கற்பித்தவர் கணக்கு ஆசிரியர். அவர் தமிழ் கற்றுத் தேர்ந்தவர் அல்லர்; வடமொழியைப் பாடமாகக் கொண்டு தேர்ந்து கணக்கு ஆசிரியராக வந்தவர்; ஆயினும், தமிழ் வகுப்பு அவரைத் தமிழ் கற்கத் தூண்டியது. அவர் நடத்திய வகுப்பில் இலக்கணப்பகுதி வரும்போதெல்லாம் மாணவர்க்குப் பேரச்சம். ‘இலக்கணக் கேள்விகளுக்கு நன்ருக விடை எழுதுவோர்க்கு நல்ல மார்க்குத் தருவேன். அப்படித்தான் இவன் என்னிடம் 60, 65 என மார்க்கு வாங்குகிருன்’ என்று மற்ற மாணவரிடம் கூறுவார். ஆனல் யான் தவறு செய்யும் போதெல்லாம் தண்டனையும் இரட்டிப்பாகத் தருவது அவர் வழக்கம்.

ஒருநாள்‘இலக்கண வகுப்பில்’ வாக்கியங்கள் பலவற்றிற்கு எழுவாய் பயனிலை கூறிவந்தனர் மாணவர். எனக்கு முன் நான்காம் வரிசையில் உள்ள மாணவனுக்கு முறை வந்தது. ‘அவனல் மணலைக் கயிருகத் திரிக்க முடியாது’ என்பது அவனுக்குக் கொடுத்த வாக்கியம். ‘அவனல்—எழுவாய்’ என்ருன் அவன். ‘மணலை—எழுவாய்’ என்ருன் அடுத்தவன். ‘கயிருக’ என்ருன் மற்றொருவன். ‘திரிக்க—எழுவாய்’ என்றேன் யான் எல்லோருக்கும் பிரம்பால் ஒவ்வோர் அடி கிடைத்தது. எனக்கு மட்டும் அன்று மூன்று அடி. ‘கண்ணை மூடிக்கொண்டு அந்த வாக்கியத்தில் உள்ள ஒவ்வொரு சொல்லையும் எழுவாய் எழுவாய் என்கிறீர்களா?’ என்று சினந்தார் ஆசிரியர். ‘நீயும் அவர்களைப்போல ஆகிவிட்டாய்’ என்று வெகுண்டார் என்னை. ‘அவன் என்பது தோன்ருஎழுவாய்’ என்று அவரே விடை கூறினர்.

யான் கண்ணை மூடிக்கொண்டு சொல்லவில்லை. ஆசிரியர் கற்பித்த முறையே சென்றுதான் எழுவாய் கண்டேன். முதலில் பயனிலை காணவேண்டும் என்றும், அது பெற்ற பிறகு, எவர்,

எது முதலிய கேள்விகளை எழுப்பி விடையாக வருவது எழுவா யாகக் கொள்ளவேண்டும் என்றும் அந்த ஆசிரியரே, எனக்குக் கற்பித்திருந்தார்.

'முடியாது' பயனிலை என்று கண்டேன். எது முடியாது என்று கேட்டேன். திரிக்க முடியாது என்று விடை வந்தது. திரிக்க—எழுவாய் என்று கூறினேன்; மூன்று அடி பெற் றேன். ஆசிரியர்பால் எனக்குச் சிறிதும் வெறுப்பு இல்லை. அவர் 60, 65 என உயர்ந்த மார்க்கும், தவறியபோது இரட்டிப் புத் தண்டனையும் கொடுத்த கொடையே என்னை இன்று தமிழ்க் கடலுள் திளைக்கச் செய்துள்ளது என நினைந்து நன்றியுடையே னாகும்போது என் உள்ளம் குளிர்கின்றது.

அவன்—எழுவாய் என ஆசிரியர் சொன்ன விடை என் உள்ளத்தில் பதியவில்லை.

பதின்மூன்றாண்டுகள் கழிந்த பின்னர் அதே உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியர் தொழில் பெற்றேன். பத்தாம் வகுப்பு வரை தமிழ் கற்பிக்கும் உரிமை பெற்றேன். எனக்கு எழுவாய் பயனிலை கற்பித்த ஆசிரியரோ, அன்றும் அந்நிலையிலே இருக்கக் கண்டேன். என் ஆசிரியர் என்னை நண்பனாகக் கொண்டார். யான் அன்றும் இன்றும் ஆசிரியராகவே அவரை மதித்து வரு கின்றேன்.

எழுவாய் பயனிலை கற்பிக்கும் வாய்ப்பு எனக்கு ஒருநாள் வாய்த்தது. 'அவருடைய புகழை எவராலும் சொல்ல முடி யாது' என்பது வாக்கியம். மாணவரைக் கேட்டேன். வெவ் வேறு வகையான விடைகள் வந்தன. எல்லாம் தவறே. 'முடி யாது—எது' என்று கேள்வி கேட்குமாறு வழிகாட்டினேன். அப்போதும் பலரும் திகைத்தனர். ஒருவன் எழுந்து 'சொல்லு வது—எழுவாய்' என்றான். 'வாக்கியத்தில் இல்லையே' என் றேன். மற்றொருவன் தோன்றா எழுவாய் என்றான். 'தோன்றா எழுவாயினைச் சேர்த்துப்படித்தால் வாக்கியம் நிரம்பவேண்டும்; இது மிகையாகின்றது. ஆகையால் தோன்றா எழுவாய் ஆகாது. சொல்ல என்பதை எழுவாயாகக் கொள்ள வேண்டும்' என்று கற்பித்தேன். இன்னொரு மாணவன் எழுந்தான்.

'நேற்று' சொல்ல—வினையெச்சம் என்று சொல்லிக் கொடுத்தீர்கள்' என்றான். மற்றொருவன் எழுந்து ஏதோ கேட்க முயன்று வாளா அமர்ந்தான். இன்னொருவன், 'பெயர்ச்சொல் தானே எழுவாயாக வரும்; வினையெச்சம் எழுவாயாகுமா?' என்று கேட்டான்.

மாணவர் மூளையை எண்ணி வியந்தேன். இதுபோன்ற வாக்கியம் என் ஆறும் வகுப்புக் கல்வி முதற்கொண்டே, என் உள்ளத்தைக் கலக்கித் தெளிவித்திருப்பதால், அன்று மாணவர் உள்ளம் கொள்ளுமாறு விளக்க முடிந்தது.

என் உயர்நிலைப்பள்ளிக் கல்வி முடிந்த பின்பு, திரு. வி. கலியாணசுந்தரனர் உரைநடை கற்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. "தீண்டாமைப் பேய் இந்நாட்டினின்றும் ஒழிதல் வேண்டும்; சாதிவேற்றுமை என்னும் தொத்துநோய் தொலைதல் வேண்டும்; பெண்ணடிமை ஒழிந்து பண்டைத் தமிழ் நாட்டிற்போல் பெண்ணுரிமை ஓங்கல் வேண்டும்" என்பன போன்ற வாக்கியங்கள் என் நினைவில் பதிந்தன. ஒழிய வேண்டும், தொலைய வேண்டும், ஓங்க வேண்டும் என்று பிறர் எழுதும் இடங்களில் ஒழிதல் வேண்டும், தொலைதல் வேண்டும், ஓங்கல் வேண்டும் என்று திரு. வி. க. எழுதுவதைக் கூர்ந்து ஆய்ந்தேன். வினையெச்சம் என்று யான் கருதியவற்றை அவர் தொழிற்பெயராக்கி எழுதியிருத்தல் கண்டேன். பின்னர் மறைமலையடிகளார் எழுதிய நூல்களைக் கற்றேன்; உண்மை மேலும் விளங்கிற்று. திருக்குறள் — பரிமேலழகர் உரை கற்றேன்; உண்மை தெளிவாயிற்று. பரிமேலழகர் உரை நடையினைத் துருவித்துருவி ஆராய்ந்தேன். சங்க இலக்கியங்களைக் கற்கும் வாய்ப்பு, பின்னர் வித்துவான் தேர்வுக்குரிய கல்வியால் ஏற்பட்டது. ஐயங்கள் அனைத்தும் பறந்தொழிந்தன.

ஆதலின், மாணவரிடம் 'சொல்ல' என்பது தொழிற்பெயர் என்றும் 'சொல்லல்' என்பதன் ஈறு சிதைந்தது என்றும், பாண்டியநாடு என்பது பாண்டிநாடு என்றானதுபோல் சொல்லல் வேண்டும் என்பது சொல்லவேண்டும் என்றாதல் மரூஉ எனக் கொள்ளவேண்டும் என்றும் விளக்கினேன்.

இஃது எவ்வாறோ உடனுள்ள ஆசிரியர் மற்றொருவர் செவிக்கு எட்டியது. மறுநாள் காலையில் பள்ளியுள் நுழையும் போது, சொற்பொழிவு ஒன்று கேட்டது. "இந்தக் காலத்தில் இலக்கணம் என்றால் என்ன என்று நினைத்துக்கொண்டிருக் கிறார்களோ, தெரியவில்லை. ஒரு விதியை மாற்றுவார்களானால் தமிழ் அடியோடு போயிற்று என்பதை உணரவில்லை. மனம் போன போக்கெல்லாம் இலக்கணமாம். 'சொல்ல' என்பது ஒரு வாக்கியத்துக்கு எழுவாயாம். இவர்கள் எல்லாம் வித்துவான் களாம் வித்துவான் பட்டம் வந்த அன்றைக்கே, கெட்டது தமிழ். இந்தப் பல்கலைக் கழகத்தார்தாம் வித்துவான் பரீட்சை ஏற்படுத் தித் தமிழைக் குட்டிச்சுவர் ஆக்கிவிட்டார்கள்" என்று சொற் பொழிவு நீண்டுகொண்டே யிருந்தது. என் தலை கண்டதும் சொற்பொழிவு குறுகிவிட்டது. அந்த ஆசிரியர் என் நண்பரே. ஆயினும் தமிழின்மேல் கொண்டுள்ள பற்றே அவரை அந்தச் சொற்பொழிவு ஆற்றத் தூண்டியது.

நண்பருடன் உள்ளம் கலந்து பேசமுடிந்தது. ஆனால் உண் மையை விளக்க முடியவில்லை, என் குறைபோலும். அவர் என் கருத்து வேறுபாட்டிற்கு இடந்தர மறுத்துவிட்டார்.

மொழியியல் (Philology) என்பது மேனாட்டவர் சென்ற நூற்றாண்டில் வளர்க்கத் தலைப்பட்டதோர் உயர்ந்த அறிவியல் துறை. அத் துறையில் யான் முதன்முதலாகக் கேட்டுக் கண்டு கற்றநூல் கால்டுவெல் பெரியார் எழுதிய ஒப்பிலக்கணமாகும். அது மேலும் பல நூல்களைக் கற்கத் தூண்டியது. அவற்றுள், 'ஆறு மொழிகளில் சொற்றொடரிலக்கணம்'. (Syntax in Six Languages - By F. M. Purdie, M. A.) என்பதொன்று. அத னுள், தொழிற்பெயர் நிலையில் உள்ள சொல் எச்ச வடிவிற்கு மாறுவதைப்பற்றிய ஆராய்ச்சி உள்ளது. தொழிற்பெயர் அவ் வாறு எச்சமாக மாறுதல் லத்தீன் மொழியில் காணப்படுகின் றது என்றும், செர்மனி மொழியிலும் அஃது உள்ளது என்றும், பிரஞ்சு மொழியில் அது வினையெச்சமாக மாறிய பின்னும் எழு வாயாகவும் செயப்படுபொருளாகவும் அமைதல் உண்டு என் றும், ஆங்கிலத்தில் அந்தப் பெயர்ச்சொல் ஈறு கெட்டு உருபு ஏற்கின்றது என்றும் ஆராய்ந்து எழுதியுள்ளார்.

தமிழிலும் ஆங்கிலத்திற் போல, அந்தச் சொல் உருபேற்றல் உண்டு.

மணலைக் கயிருகத் திரிக்க முடியாது
மணலைக் கயிருகத் திரிக்கிறதற்கு முடியாது

என்னும் இரண்டும் பேச்சு வழக்கில் உண்டு. திரித்தல் திரிக்கல் திரிக்கிறது என்னும் மூன்றும் தொழிற்பெயர். முதல் சொல் எழுத்து வழக்கில் உள்ளது. இரண்டாம் சொல் மேற் கூறிய வாறு சிதைந்து பேச்சு வழக்கில் உள்ளது. மூன்றும் சொல் காலங் காட்டும் தொழிற்பெயர். அது நான்கனுருபு ஏற்று மேற் கூறியவாறு வழங்குகின்றது. இந்த மூன்றனுக்கும் உள்ள தொடர்பை உன்னின், எழுவாய்—பயனிலை வகுப்பில் வந்த மயக்கம் தெளியுமன்றோ ?

'திரிக்கிறதற்கு முடியாது' என்பதில் தொழிற்பெயர் நிகழ் காலம் காட்டுவது. 'திரிப்பதற்கு முடியாது' என்பதில் தொழிற் பெயர் எதிர்காலம் காட்டுவது ; ஆயினும் காலம் குறியாது பொதுவாக வழங்குவது.

ஒருநாள் சென்னை டிராம் வண்டி ஒன்றில், சுற்றிலும் எழுதப்பட்டுள்ளவற்றைப் பார்த்து வந்தேன். 'நிற்பது கூடாது' என்ற தொடர் தெரிந்தது. மற்ற எழுத்துக்கள் நெடியார் ஒருவர் தலையால் மறைந்திருந்தன. அவர் திரும்பி அசைந்தார். பிரயாணிகள் டிரைவர் பிளாட்பாரத்தில் நிற்பது கூடாது என்று முழுமையும் தெரிந்தது. சிறிது தயங்கினேன். Passengers are forbidden to stand on the driver's platform என்று ஆங்கில வாக்கியம் உடனிருந்ததைக் கண்டேன் ; தெளிந்தேன். மேற் கூறிய இலக்கண நினைவுகள் எல்லாம் வந்தன.

மொழிபெயர்ப்பு அழகியதே. சுருங்கச்சொல்லல் என்பதே அந்த அழகு. அன்றியும், 'Spit here' என்பதற்குத் 'துப்பு இங்கே' என்று எழுதியது போன்ற சொற்பெயர்ப்பு இராமல் மொழிபெயர்ப்பாகவே அமைந்துள்ளது அறிந்து மகிழ்ந்தேன். You are requested to attend the meeting என்பதற்குக் 'கூட்டத்திற்கு வருமாறு நீங்கள் வேண்டிக்கொள்ளப்படுகின்றீர்கள்

என்று மொழிபெயர்க்கும் நண்பர், டிராம்வே கம்பெனியார்க்குக் கிடைத்திருந்தால் வேறுவகைப் புதுமை காணக் கிடைத்திருக்கும்.

'நிற்கக்கூடாது' என்று பேச்சு வழக்கில் உள்ள ஒன்றை 'நிற்பது கூடாது' என்று தொழிற்பெயர் வாய்பாட்டால் எழுதியவர் போற்றத் தக்கவரே. முன்னது எளியது என்பதும், பின்னது அரியது என்பதும் உண்மையே. ஆயினும், 'நிற்க என்னும் பேச்சுச் சொல்லை 'நிற்பது' என்று திருத்திய அவர் நோக்கம்தான் யாதோ? யாதாயினும் ஆகுக. அவர் 'வினையெச்சம் எழுவாயாகுமா' என்றும், 'தொழிற்பெயர் இவ்வாறு சிதைந்ததோ' என்றும் ஐயுறும் இலக்கணக்கல்வி பெற்றிலராயினும் ஆகுக. இவ்வாறு எழுதிய அவர் மூளை தமிழ் வடிவினது; அவர் தாய்மொழி தமிழ் என்று துணிந்து கூறலாம்.

# தமிழ் எழுத்துக்கள்

சென்ற ஆண்டில் என் மகனுக்கு ஆங்கிலம் கற்பிக்கத் தொடங்கினேன். தப்போ ஒப்போ எனக்குத் தெரிந்தொரு முறையினைக் கையாண்டு முதலில் இருபத்தாறு எழுத்துக்களையும் கற்பித்தேன். அவற்றை அவன் கற்ற பிறகு, பூனைப் படத்தைக் காட்டி அதனைக் ‘ கேட் ’ என்றேன். எலிப்படத்தை ‘ரேட்’ என்றேன். விசிறிப்படத்தை ‘பேன்’ என்றேன். மனிதன் படத்தை ‘மேன்’ என்றேன். அவற்றின் கீழ் உள்ள CAT, RAT, FAN, MAN என்ற சொற்களின் எழுத்துக்களைப் பிரித்துக் கற்பிக்கவில்லை. மறுநாள் காலையில் புத்தகத்துடன் வந்து, “இந்த நாலும் வரும்” என்று சொல்லிப் படித்தான். அவன் படித்த முறை வருமாறு:—

சி - ஏ - டி — சியேடி — பூனை
ஆர் - ஏ - டி — ஆரேடி — எலி
எப் - ஏ - என் — எபேன் — விசிறி
எம் - ஏ - என் — எமேன் — மனிதன்

அப்போது எனக்கு வந்த சிரிப்பை அடக்கியும் பயனில்லை. சிறுவனே சிரிப்பின் காரணம் அறியாது திகைத்தான். ‘ நான் படித்தது தப்பா, அப்பா? என்ன தப்பு அப்பா?’ என்று பல முறை விடாமல் கேட்டான். என்ன சொல்வது என்பது விளங்காமல் சிரிப்பு நின்றது. ‘வேலையாக இருக்கிறேன் ; பிறகு சொல்லுகிறேன் ’ என்று கூறியும் அவன் விடவில்லை. பிறகு. வேறு வழியின்றி ‘படத்தை மட்டும் படி, எழுத்தை இப்போது படிக்காதே. எழுத்தைப் பார்க்கவும் பார்க்காதே’ என்று கண் மூடி வித்தையைக் கருவியாகக் கொண்டு விடுதலை பெற்றேன்.

அவனுக்கு எழுத்துக்களைக் கற்பிக்காமல் கேட், ரேட், பேன், மேன் என்று கற்பித்திருந்தால் பயன்பட்டிருக்குமோ என எண்ணலானேன். எழுத்துக்களை முதலில் எழுதப் பழக்குதல் எனக்குப் பிடிக்காத முறைதான். ஆனால் எழுத்துக்களின் பெயர்களை முதலில் கற்பிக்காது சொற்களைக் கற்பித்தலில் எனக்கு நம்பிக்கை இல்லை. உடனே ,சிறுவன் படித்த புதுமைக்குரிய காரணத்தை ஆராய்ந்து, ஆங்கில எழுத்துக்களைப் பெயரிட்டாளும் முறையின் குறைபாட்டை எண்ணத் தொடங்கினேன். அஃது ஐரோப்பிய முதல் மொழிகளின் வழக்கிலிருந்து வந்தது என்று அறிந்திருந்தும், குறை குறையே எனத்

தோன்றியது. எழுத்துக்கள் எந்த எந்த ஒலிக்கு வரிவடிவாக அமைந்துள்ளனவோ, அந்த அந்த ஒலியாலேயே பெயர் பெறுதல் சிறப்பு ; அல்லது, சாரியை கொடுத்து வழங்குவதா யிருப்பின், ஏ, பே, சே, டே என்று ஏகாரமே சாரியையாகக் கொடுத்து இருபத்தாறு எழுத்துக்களையும் ஆளலாம். ஏ என் பதும், பி. என்பதும், பிறகு சி என்பதும்,...எப் என்பதும்,... எல் என்பதும்...ஆர் என்பதும்,...டபிள்யூ என்பதும், முதலில் அமைந்த காரணம் அறியாமல் எண்ணுவார்க்குக் கோளாறு எனவே தோன்றும்.

தமிழில் சாரியைகள் பல உள்ளன. அகரம், ககரம் என்பது முதலாக அ ஆனா கஆனா என்று திண்ணைப் பள்ளிக் கூடங்களில் வழங்குது வரை உள்ளன எல்லாம் காண்க. இவை ஆங்கிலம் போலக் குறையுடையன அல்ல. எல்லாவற் றினும் நல்லதொன்றாக, சாரியை கொடாமல், அ, ஆ, இ,...க் ங் ச் என வழங்கும் முறையினை இக்காலத்துப் பள்ளிக்கூடங் களில் கையாளுதல் மனமகிழ்ச்சியே தருகின்றது.

உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் பிரிக்காது குழப்பும் ஆங்கிலம்போல் அல்லாமல், உயிர் பன்னிரண்டு என்றும்,மெய் பதினெட்டு என்றும் தமிழில்தனித்தனியேபிரித்து எழுதி வழங்கும் நலமும் போற்றத்தக்கதே.

இவ்வளவு திருந்திய முறையில் அமைந்தும், தமிழ் எழுத் துக்களில் குறைபாடு இல்லாமற் போகவில்லை. க, ச, ட, த, ப என்னும் ஐந்தெழுத்திற்கும் வல்லொலியும் மெல்லொலியும் அமைந்திருத்தல் (கண், அகம், சக்கரம், அஞ்சல், ஓட்டம், ஓடம், தப்பு, கதவு, பங்கு, நம்பன்)—அஃதாவது இரண் டொலிக்கு ஓரெழுத்தாக அமைந்திருத்தல்—யாவரும் அறிந் ததே. இரண்டொலிக்கு இரண்டெழுத்து வேண்டும் எனல் இயல்பே; வேண்டா எனக் கருத்து வேறுபடுவாரும் உள்ளனர். இவற்றுடன் ஹகர ஒலி கலந்த எழுத்துக்கள் பத்தும் வட மொழியில் இருப்பதால் தமிழிலும் வேண்டும் என்று எண்ணு வாரும் உள்ளனர். அவை வடமொழியில் உள்ளன என்பது உண்மையே. ஆயினும் வடமொழியோடு ஓரினத்தனவாகிய ஐரோப்பிய மொழிகளில் பல அவற்றைத் தள்ளிவிட்டன ; சில படிப்படியே தள்ளிவருகின்றன என்பதைத் தமிழுலகம் மறத் தல் கூடாது.

உலகிலுள்ள ஒலிகளுக்கெல்லாம் ஒவ்வொரு மொழியிலும் எழுத்துக்கள் இருத்தல் வேண்டும் என்று கொண்டால், எந்த மொழியிலும் ஐந்நூற்றுக்குக் குறையாத எழுத்துக்கள் இருக்க

நேரும். ஐந்நூறு எழுத்துக்களைப் பெற்று அல்லல்படுவதை விட ஐம்பது எழுத்துக்களைக்கொண்டு குறையுறுவதே சாலவும் நன்றன்றோ? ஒரு மொழியில் இயற்கையாக அமைந்த ஒலிகள் எவையோ அவற்றிற்கு மட்டும் எழுத்துக்கள் இருத்தல் போதும். தமிழிற்கும் அங்ஙனமே அமைதல் மொழிநலம் பயக்கும். உலக மெல்லாம் சுற்றித் திரிந்து பறந்துவரும் ஆங்கில மொழியிலும் எல்லா ஒலிக்கும் எழுத்துக்கள் உண்டென்று எண்ணுவது அறியாமை. ஆங்கிலத்தில் உள்ள உயிரெழுத்துக்கள் ஐந்தே (a, e, i, o, u).இந்த எழுத்துக்களுள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோ ரொலியே என்று கொள்ளல் பெருந் தவறாகும். ஓர் எழுத்துக்கு மூன்று முதல் ஒன்பதுவரை வகைப்பட்ட ஒலிகள் உண்டு. அஃதாவது, ஆங்கிலத்தில் ஐந்து உயிரெழுத்துக்கள் ஏறக்குறைய முப்பது உயிரொலிகளைக் குறித்து நிற்கின்றன. மெய்யெழுத் துக்களிலும்இத்தகையன உண்டு. ஆங்கில ஒலி பற்றிய குழப்பம் மிகப் பெரிது என்றும், சீர்திருத்த முயற்சி மிகச் சிறிது என்றும் எண்ணியே, அறிஞர் பெர்னாட் ஷா என்பவர் ‘பிக்மாலியன்’ (Benard Shaw's *Pygmalion*) என்று ஒரு நாடகம் எழுதி, அதன் முகவுரையில் ‘ஓர் ஆங்கிலேயன் வாயைத் திறந்து பேசினால் மற்றோர் ஆங்கிலேயன் அப் பேச்சைக் கேட்டு வெறுப்படையாமல் இருக்க முடியாது......ஆங்கிலம் ஆங்கிலேயருக்கே கற்க வராத மொழியாக உள்ளது. இங்கிலாந் திற்கு இன்று இன்றியமையாது வேண்டியுள்ள சீர்திருத்தக் காரர் ஊக்கம் மிகுந்த ஒலியியல் அறிஞர் ஒருவரே’ என்று குறித்துள்ளார்.

எதிர்காலம் என்ன சீர்திருத்தம் செய்யும் என்பது, மக்கள் மொழியியலில் செலுத்தும் ஊக்கத்தையும் உழைப்பையும் பொறுத்து நிற்கின்றது. இக்காலத்துப்போல, அரசியலிலும் பிறவற்றிலுமே ஊக்கத்துடன் உழைத்து, மொழியியலை எட்டிப் பார்த்து மறையும் இயல்பினராயின், எதிர்காலத்தினரை நம்பு வதில் பயனில்லை.

இதுபோன்ற சீர்திருத்தத் துறைகள் பல உள. அவற்றை இங்கு விரித்தல் நோக்கம் அன்று.

ஆங்கிலம் கற்பித்தபோது கண்ட புதுமைபோல, தமிழ் கற்பித்தபோதும் ஒரு புதுமை கண்டதுண்டு. உயிரெழுத்து முடிந்து, மெய்யெழுத்து முடிந்து, உயிர்மெய் யெழுத்தும் ஊகார வரிசை வரைக்கும் முடிந்தது.